# ஐரோப்பிய வரலாறு

**(கி.பி. 1453 முதல் 1815 வரை)**

**[ பட்டப்படிப்புக்குரியது ]**

**(திருத்தப்பட்ட பாடத் திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)**

**டி. என். வாசுதேவ ராவ்**



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—304

# ஐரோப்பிய வரலாறு

## (கி.பி. 1453 முதல் 1815 வரை)

[பட்டப்படிப்புக்குரியது]

(திருத்தப்பட்ட பாடத் திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்
**டி. என். வாசுதேவ ராவ்,** எம்.ஏ., எம்.லிட்.,
பேராசிரியர், வரலாற்றுத்துறை,
உலகநாத நாராயணசாமி அரசினர் கலைக்கல்லூரி,
பொன்னேரி.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—March, 1972
Revised Edition—March, 1975

T.N.T.B.S. (C.P.) No. 304



HISTORY OF EUROPE From 1453-1815 A.D.

T. N. VASUDEVA RAO

Price Rs. 8-05

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
BHAGAT PRINTERS
407, M. K. N. Road,
Alandur, Madras-600 016.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத் தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். நாடு முழுதும் பரந் துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறை களிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், மெய்ப்பொருளியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய பல துறைகளில் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஐரோப்பிய வரலாறு (கி.பி. 1453 முதல் 1815 வரை)' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் சார்பில் வெளியான 304ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்டவர் களின் நல்லூக்கத்தினாலும், இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின் இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது. இந்நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங்களை யும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங் களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களை யும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# படங்கள்

# 1. பின்னணி—இடைக்கால இறுதியில் ஐரோப்பா

ஐரோப்பிய வரலாற்றிலும் பண்டைக்காலம், இடைக்காலம், தற்காலம் என்னும் மூன்று பகுதிகள் உள்ளன என்பது வரலாற்றாசிரியர்கள் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு கருத்தாகும். நாம் இந் நூலில் மூன்ருவது பகுதியான தற்கால ஐரோப்பாவின் வரலாற்றை ஆராயப்போகிருேம். நவீன கால ஐரோப்பிய வரலாற்றின் நிகழ்ச்சிகளையும், போக்குகளையும் நன்கு புரிந்துகொள்ள இடைக்கால ஐரோப்பிய வரலாற்றின் சிறப்பியல்புகளைப்பற்றி அறிந்துகொள்வது இன்றியமையாததாகும். இந்த இடைக்கால வரலாற்றுப் பின்னணியை இங்குச் சிறிது ஆராய்வோம்.

ஐரோப்பிய வரலாற்றில் இடைக்காலம் என்பது கி.பி. 476-ல் மேற்கத்திய ரோமானியப் பேரரசின் வீழ்ச்சி ஏற்பட்டது முதல் ஏறக்குறையப் பத்து நூற்ருண்டுகள் நீடித்ததாக வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். கி.பி. 1453-ல் கான்ஸ்டான்டிநோபிள் நகரம் துருக்கியர்களால் கைப்பற்றப்பட்ட நிகழ்ச்சியும், 15ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் ஐரோப்பாவில் தீவிரமாக வளர்ச்சியுற்ற மறுமலர்ச்சி இயக்கமும் இடைக்காலம் முடிவுற்று நவீனகாலம் தொடங்கியதன் அறிகுறி என்றும் கொள்ளலாம். நவீன காலத்தின் தொடக்கத்தை அறிவிக்கும் ‘மறுமலர்ச்சி’ (Renaissance) ஒரு குறிப்பிட்ட ஆண்டில் நடந்த ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி அன்று. தொடர்ச்சியாகப் பல ஆண்டுகள் நிலவிவந்த நிகழ்முறை என்ற காரணத்தினுல், நவீன காலத்தின் தொடக்கத்தைப் பொதுப்படையாக நாம் கி.பி. 1500 என்று கொள்வது பொருந்தும்.

ஸ்கிப்பீயோ (Scipio), மரையஸ் (Marius), சுல்லா (Sulla), பாம்ப்பே (Pompey), ஜூலியஸ் சீசர் (Julius Cæsar), அகஸ்டஸ் சீசர் (Augustus Cæsar), டிராஜன் (Trajan) போன்றவர்களால்

உருவாக்கப்பட்ட ரோமானியப் பேரரசு கி.பி. நான்கு ஐந்தாம் நூற்றுண்டுகளில் 'ஃபிராங்குகள்' (Franks), 'கோத்துகள்' (Goths), 'வாண்டல்கள்' (Vandals) போன்ற நாகரிகமற்ற புறத்தார்கள் படையெடுப்பினுல் வீழ்ச்சியுற்றது. மத்திய மேற்கு ஐரோப்பாவெங்கிலும், இவர்கள் சிறு அரசுகளை ஏற்படுத்தினர். இவர்கள் ஆட்சியில் ரோமானியர்களால் போற்றி வளர்க்கப்பட்டு வந்த கிரேக்க-ரோமானியப் பண்பாடு அழிவுற்றது. ரோமானியப் பேரரசர்களால் போற்றிப் பாதுகாக்கப்பட்டுவந்த கலைப் படைப்புகளும், அறிவுக் கருவூலங்களும் அழிக்கப்பட்டன. ரோமானியப் பேரரசில் வளர்ச்சிபெற்றிருந்த கைத்தொழில் களும், வாணிபமும் ஆதரவின்றிப் புறக்கணிக்கப்பட்டன. ரோமானியப் பண்பாட்டின் சின்னங்களாகவும், அவர்களின் ஆடம்பர வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாகவும் விளங்கிய நெடுஞ் சாலைகள், பாலங்கள், கலை அரங்குகள் யாவும் அழிவுற்றன. எனினும், இந்தப் புராதனக் கிரேக்க-ரோமானியப் பண்பாடு முற்றிலும் மறைந்துவிடவில்லை. ஏனெனில், ரோமானியப் பேரரசின்மீது படையெடுத்துவந்த புறத்தார்களில் ஓர் இனத் தவரான ஜெர்மானியர்கள், தங்களால் வெல்லப்பட்ட ரோமானியப் பண்பாட்டின் சிறந்த கூறுகளை ஏற்றுக்கொள்ளத் தயங்கவில்லை. இவ்வாறு படையெடுத்துவந்த ஜெர்மானிய மக்களுக்கும், அவர்களால் வெல்லப்பட்ட ரோமானியப் பேரரசின் குடிமக்களுக்கும் இடையே ஏற்பட்ட தொடர்பு, கருத்துப் பரிமாற்றம் கலாசார இணைப்பிற்கு வழிகோலியது. இவ்வாறு தோன்றிய கலாசாரந்தான் ஐரோப்பிய வரலாற்றில் இடைக் காலக் கலாசாரம் என்று வரலாற்றறிஞர்களால் வழங்கப்படு கிறது. இவ்வாறு இந்த மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு கருத்து கிறிஸ்துவ சமயம் ஆகும்.

இடைக்கால ஐரோப்பிய வரலாற்றின் சிறப்பியல்புகளில் ஒன்று மத்திய, மேற்கு ஐரோப்பா முழுவதும் ஒரு தனி உலகமாக இயங்கியது. ஐரோப்பா முழுவதற்கும் ஒரே திருச்சபை, ஒரே பேரரசு (A Universal Church and a Universal Empire) என்ற கோட்பாடு நிலவியது. பேரரசரும், போப்பாண்டவரும் ஐரோப்பிய உலகத்தின் தலைமையை ஏற்றுக்கொண்டு இணைந்து செயல்பட்டனர் (Dual Leadership of the Pope and the Emperor). ஐரோப்பிய மக்கள் யாவரும் கிறிஸ்துவர்கள் ஆகை யால், சமயத்தைப் பொறுத்தவரையில் போப்பாண்டவரைத் தங்கள் தலைவராகவும், ஏனைய உலகியல் விஷயங்களில் பேரரசரைத் தலைவராகவும் ஏற்றுக்கொண்டனர். மக்களின் எண்ணங்கள், செயல்கள் யாவும் திருச்சபையின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தன.

திருச்சபையின் செல்வாக்கு ஓங்கியிருந்த காலம் இடைக்காலம். இடைக்கால ஐரோப்பாவில் பல சிற்றரசுகள் அமைந்து, அவற்றுக் கிடையில் பூசல்களும் குழப்பங்களும் நிகழ்ந்துவந்தபோதும், போப்பாண்டவர்—பேரரசர் இவர்களின் இணைந்த தலைமையில் இயங்கிவரும் ஒரே கிறிஸ்துவ உலகம்தான் ஐரோப்பா என்ற கருத்து மேலோங்கியிருந்தது. ஐரோப்பாவின் ஒரே மொழியாக இலத்தீன் (Latin) விளங்கியது. இந்நிலையில் ஐரோப்பாவில் வாழ்ந்த பல இன மக்களிடையே தேசிய உணர்ச்சி தோன்று வதற்குச் சாதகமான சூழ்நிலை அமையவில்லை. மக்களிடையே தாங்கள் கிறிஸ்துவர்கள் என்ற அடிப்படையில் ஒற்றுமை யுணர்வும், போப், பேரரசர் இவர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட மக்கள் என்ற உணர்வும் இருந்ததேயன்றி, தாங்கள் குறிப்பிட்ட ஒரு நாட்டு மக்கள், ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள் என்ற அடிப்படையில் ஒற்றுமையுணர்வு ஏற்படவில்லை. இதைத் தான் நாம் ‘தேசியம்’ என்று கூறுகின்றோம். இந்தத் தேசிய உணர்ச்சியின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் நாம் இடைக் காலத்தின் இறுதியில் காணலாம். தேசிய நாடுகள் பல உருவானதையும் காணலாம். தேசிய நாடுகளின் தோற்றம்தான் நவீனகாலத் தொடக்கத்தின் அறிகுறியாகும்.

இடைக்கால ஐரோப்பாவின் மற்றொரு சிறப்பியல்பு புனித ரோமானியப் பேரரசு (Holy Roman Empire) ஏற்படுத்தப்பட்ட தாகும். ஐரோப்பிய அரசுகளில் மிகவும் பெரியதாக விளங் கியது புனித ரோமானியப் பேரரசு. இந்தப் பேரரசு தோன்று வதற்குக் காரணமாக இருந்தவர்கள் பண்டைய ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்த ஃபிராங்குகள். இவர்கள் ஜெர்மனி நாட்டில் தங்கள் ஆதிக்கத்தை முதன் முதலில் ஏற்படுத்திக்கொண்டு, அங்கிருந்து ஃபிரான்ஸ் போன்ற பகுதிகளில் தங்கள் செல்வாக்கைப் பரப்பினர். ஃபிராங்குகளின் மன்னர்களில் புகழ் வாய்ந்தவர் சார்லஸ் மார்ட்டல் (Charles Martel) என்பவர். அவருடைய பேரரான சார்லமேன் (Charlemagne) ஒரு சிறந்த போர் வீரர். இவர் மேற்கு மத்திய ஐரோப்பாவின் பெரும்பகுதியைத் தம் ஆட்சிக்குள் கொணர்ந்து, கிறிஸ்துவ சமயத்தை ஆதரித்து, அதன் செல்வாக்கைப் பெருக்கினர். கி.பி. 800-ல் கிறிஸ்துமஸ் நாளன்று போப்பாண்டவரான மூன்றும் லியோ (Leo III) இவரை ரோம் நகரில் பேரரசராக முடி சூட்டினர். அழிந்துபட்ட ரோமானியப் பேரரசின் வாரிசாகக் கருதப்பட்ட சார்லமேனின் பேரரசுதான் புனித ரோமானியப் பேரரசின் முன்னோடியாக விளங்கியது. இவருடைய மரணத் திற்குப் பிறகு இந்தப் பேரரசு சிதைவுற்ற போதிலும்,

நூற்றைம்பது ஆண்டுகளுக்குப்பிறகு மீண்டும் கி.பி. 962-ல் முதலாம் ஆட்டோ (Otto I, 936—975) என்னும் அரசர் இப் பேரரசிற்குப் புத்துயிர் அளித்தார். அந்த ஆண்டில் போப் பாண்டவராக இருந்த பன்னிரண்டாம் ஜான் (John XII) ஆட்டோவைப் புனித ரோமானியப் பேரரசராக முடிசூட்டினர். இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட அரசுதான் புனித ரோமானியப் பேரரசு என்று ஐரோப்பிய வரலாற்றில் வழங்கப்படுகிறது. கி.பி. 962-ல் தோன்றிய இந்த அமைப்பு, ஐரோப்பிய வரலாற்றில் 1806 வரை தொடர்ந்து இடம் பெற்றது. கி.பி. 1806-ல் நெப்போலியன் போனபார்ட்டினல் இது அழிக்கப்பட்டது. தொடக்கத்தில் ஃபிரான்சு, இத்தாலி, ஜெர்மனி, ஹாலந்து போன்ற பகுதிகளைக் கொண்ட புனித ரோமானியப் பேரரசின் எல்லைகள் நாளடைவில் குறுகி, ஜெர்மனியை மட்டும் உட்கொண்டதாக மாறின. 350-க்கும் அதிகமான சிற்றரசுகளைக் கொண்ட இந்த அரசின் தலைவரான பேரரசரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை ஏழு சிற்றரசர்களுக்கு மட்டுமே வழங்கப்பட்டு இருந்தது. இந்த உரிமையைப் பெற்றிருந்ததால் இவர்கள் தேர்வாளர்கள் (Electors) என்று அழைக்கப்பட்டனர். இவர்களால் ஆளப்பட்ட பகுதிகள் 'தேர் வாளர் அரசு' (Electorates) என்று வழங்கப்பட்டன. பிற்கால ஐரோப்பிய வரலாற்றில் இப் பேரரசின் செல்வாக்கு மங்கி மறைந்து, பெயரளவில்தான் இது ஒரு பேரரசாக இருந்தது. இந் நிலைதான் ஃபிரெஞ்சு அறிஞரான வால்டேரின் (Voltaire) 'The Holy Roman Empire was neither Holy, nor Roman nor Empire' என்ற ஏளனக் கூற்றுக்குக் காரணமாக அமைந்தது.

இடைக்கால ஐரோப்பாவில் நாம் காணும் மற்றோர் அமைப்பு நிலமானிய முறை (Feudalism). ஐரோப்பாவின் அரசியல், சமூக, பொருளாதார வாழ்க்கை இந்த நிலமானிய முறையின் அடிப்படையில்தான் அமைந்திருந்தது. ரோமானியப் பேரரசை அழித்த மக்கள் கூட்டத்தினர் அழிவு வேலைகளைச் செய்தார் களேயன்றி, ஆக்கவேலை செய்வதற்கான ஆற்றல் அவர்களிடம் இல்லை. அழிந்துபட்ட ரோமானிய நிர்வாக முறைக்கு ஈடாக அவர்களால் ஓர் அமைப்பையும் ஏற்படுத்த முடியவில்லை. மத்திய, மேற்கு ஐரோப்பா முழுவதும் நிலையான அரசு, நேர்மையான நிர்வாகம், ஒழுங்கு, சட்டம், அமைதி இவை யாவும் அழிந்து, ஒரு குழப்பமான நிலைமை ஏற்பட்டது. இக் குழப்ப நிலையிலிருந்து ஐரோப்பாவைக் காப்பாற்றி ஓரளவுக்கு அமைதியையும் ஒழுங் கையும் நிலைநாட்டுவதற்குக் காரணமாக இருந்தது நிலமானிய முறை அமைப்பு. தங்களைக் காப்பாற்றிக்கொள்ளமுடியாத

வலிமையற்ற குடிமக்கள், வலிமை வாய்ந்த, செல்வம் மிக்க நிலப் பிரபுக்கள், சிற்றரசர்கள் ஆகியோரின் உதவியை நாடி அவர்களிடம் சரணடைந்தனர். நிலப்பிரபுக்கள் தங்களுடைய நிலங்களை இவர்களுக்குப் பிரித்தளித்தனர். இவர்கள் மானியதார்கள் (Tenants) என்று அழைக்கப்பட்டனர். மானியதார்கள் நிலத்தைப் பயிரிடுவதுமட்டுமின்றிப் பிரபுக்களுக்கு ஆபத்து வரும்பொழுது தங்களுடைய படைகளுடன் சென்று அவர்களுக்கு உதவவேண்டும். எனவே, இது 'படைமானிய' முறை என்றும் வழங்கப்பட்டது. நாளடைவில் நிலமானியப் பிரபுக்களின் ஆதிக்கமும், செல்வாக்கும் அரசர்களின் அதிகாரத்திற்கே ஊறு விளைவிக்கும் அளவிற்கு வளர்ந்துவிட்டன. வலிமையற்ற மன்னர்களின்மீதே போர் தொடுக்கும் அளவிற்கு இவர்கள் துணிவு பெற்றனர். இவ்வாறு இடைக்காலத்தில் சிறுகச் சிறுக நிலப் பிரபுக்களின் அதிகாரம் ஓங்கி, மன்னர்களின் அதிகாரம் குறைந்தது. ஐரோப்பிய நாடுகள் அனைத்திலும் மத்திய அரசு வலிமையின்றிச் செயலற்று விளங்கியது. பிரபுக்களின் ஆதிக்கம் மேலோங்கிநின்றது. ஆனால், இடைக்காலத்தின் இறுதியில் நிலமானிய முறை வீழ்ச்சியுற்று மன்னர்களின் அதிகாரம் வளரத் தொடங்கியது. தேசிய அரசுகள் (Nation States) தோன்றின. இதுவே ஐரோப்பிய வரலாற்றில் நவீன காலத்தின் தொடக்கம்.

இடைக்காலத்தின் இறுதியில் நகரங்கள் தோன்றி (Rise of Medieval Cities) ஐரோப்பாவின் அரசியல் பொருளாதார வாழ்க்கையில் மிக்க செல்வாக்குப் பெறுவதைக் காண்கிறோம். நிலமானிய முறை அமைப்பையும், திருச்சபையின் ஆதிக்கத்தையும் இந்நகரங்களின் வளர்ச்சி மிகவும் பாதித்தது. வியாபாரம், தொழில் இவற்றின் வளர்ச்சியின் விளைவாகத் தோன்றிய நகரங்கள், விவசாயத்தையும், நிலத்தையுமே செல்வமாகப் பெற்றிருந்த பிரபுக்களின் ஆதிக்கத்தை எதிர்த்துச் செயல்படலாயின. ஐரோப்பாவில் விவசாயத்தின் அடிப்படையில் அமைந்திருந்த பொருளாதாரம் மாறி, தொழில், வியாபாரம் இவற்றின் அடிப்படையில் அமைந்த புதிய பொருளாதாரம் தோன்றியது. நிலப் பிரபுக்களைவிட அதிகச் செல்வமும், படைபலமும், மேலான பண்பாடும் பெற்றிருந்த நகர மக்களுக்கும் நிலப்பிரபுக்களுக்குமிடையே போட்டி ஏற்பட்டது. இறுதியில் நிலப்பிரபுக்களின் ஆதிக்கம் அழிந்தது. நகரங்களின் தோற்றத்தினால் இதர பல நல்ல விளைவுகள் ஏற்பட்டன. அரசியல்துறையில் இவற்றின் தோற்றம் சுய ஆட்சிக் கொள்கை வளருவதற்கு உதவியது. வலிமைமிக்க மத்திய அரசு ஏற்பட்டு, வலிமையுள்ள முடியாட்சி தோன்றுவதற்கு நகர மக்கள் காரணமாக இருந்தனர். இடைக்காலத்தில்

தோன்றிய நகரங்கள்தாம் கலாசார வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்தன. தேசிய உணர்ச்சி வலுப்பெற்று வளர்வதற்குக் காரணமாக இருந்ததும் நகரங்களே. எனவே, நகரங்களின் தோற்றமும் வளர்ச்சியும் ஐரோப்பிய வரலாற்றில் பல முக்கிய மான மாறுதல்களை ஏற்படுத்தியதன் மூலம், பழைய ஐரோப்பா மறைந்து, புது ஐரோப்பா உருவாவதற்குக் காரணமாக இருந்தன வென்றால் அது மிகையாகாது.

## இடைக்காலம் ஓர் இருண்ட காலம்

கி.பி. ஐந்தாம் நூற்றூண்டு முதல் கி பி. பத்தாம் நூற்றூண்டு வரை ஏறக்குறைய ஐந்து நூற்றூண்டுகள், ஐரோப்பிய வரலாற்றில் இருண்ட காலமாகக் கருதப்படுகின்றன. ரோமானியப் பேரரசு வீழ்ச்சியுற்று நாகரிகமற்ற கூட்டத்தினரின் ஆட்சி ஏற்பட்ட காரணத்தினால் கிரேக்க-ரோமானியப் பண்பாடு சிதைவுற்றது. கலை, கல்வி, மொழி வளர்ச்சியில் இவ் வரசுகள் ஈடு பாடு காட்ட வில்லை. திருச்சபையின் ஆதிக்கம் மேலோங்கி இருந்தமையால் மக்கள் தம் எண்ணம்போல் சுதந்தரமாகச் செயல்பட இயலவில்லை. இதனால் அறிவு வளர்ச்சி தடைப்பட்டது. கடவுள் கொள்கை மக்களின் மனத்தைத் திறம்பட ஆட்கொண்டிருந்தது. மக்கள் உலகியல் நிகழ்ச்சிகளைப்பற்றி அதிகம் சிந்திக்காமல் மறு உலகைப் பற்றியும் கடவுளைப் பற்றியுமே சிந்திக்கத் தொடங்கினர். இதனால் அறிவு பெருகுவதற்கான வாய்ப்புகள் இடைக்காலத்தில் இருக்கவில்லை. ஆகையால், ஐரோப்பிய வரலாற்றில் இடைக் காலம் இருண்ட காலமாகக் கருதப்படுகின்றது.

இக் கருத்து முற்றிலும் ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று. ஏனெனில், இடைக்காலத்தில் அறிவு வளர்ச்சி இல்லை என்று கூறுவது பொருந்தாது. இக் காலத்தில்தான் அறிவு வளர்ச்சியின் சின்னமாகக் கருதப்படும் ரோஜர் பேகன் (Roger Bacon), தாமஸ் அக்வினாஸ் (Thomas Aquinas), ஏராஸ்மஸ் (Erasmus), தாந்தே (Dante) போன்ற அறிஞர்கள் வாழ்ந்திருந்தனர். இவர்கள் திறனாய்வு நோக்குடன் எல்லாப் பிரச்சினைகளையும் அணுகி, விருப்பு வெறுப்பின்றி உண்மையை அறியவேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள். இக் கண்ணோட்டத்தின் அடிப்படையில்தான் மறுமலர்ச்சி இயக்கமே ஏற்பட்டது என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

இடைக்கால ஐரோப்பாவின் அரசியல் நிலையை ஆராயும் பொழுதும், அக் காலத்தை இருண்ட காலம் என்று கூறுவது பொருந்தாது. பிரதிநிதித்துவ அரசியல் கொள்கையை அவர்கள்

அறிந்திருந்தனர். பதின்மூன்று, பதினான்காம் நூற்றாண்டுகளிலேயே ஃபிரான்சு, ஜெர்மனி, இங்கிலாந்து போன்ற நாடுகளின் பாராளுமன்றங்களில் மக்கள் பிரதிநிதிகள் அங்கம் வகித்தனர். மேலும், ஐரோப்பா முழுவதும் ஒரே நாடு என்ற அகில உலக மனப்பான்மை இடைக்கால மக்களிடையே நிலவியது. பிற்காலத்தில் தேசியத்தின் அடிப்படையில் ஐரோப்பிய மக்களிடையே தோன்றிய குறுகிய மனப்பான்மையுடன், இடைக்கால மக்களின் பரந்த நோக்கை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, இடைக்கால மக்கள் எந்த அளவுக்கு முற்போக்குக் கருத்துகளை ஆதரித்தனர் என்பது விளங்கும்.

ஸ்பெயின், ஃபிரான்சு, இத்தாலி ஆகிய நாடுகளில் பல்கலைக் கழகங்கள் தோன்றி, கலை வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும் ஆக்கம் அளித்தன. பல்கலைக்கழகங்கள் உயர் கல்வியின் இருப்பிடமாகத் திகழ்ந்தன. ஐரோப்பாவில் நேப்பிள்ஸ் (Naples), பிராக் (Prague), ஹிடல்பர்க் (Hidelburg) போன்ற பல்கலைக்கழகங்கள் 13, 14ஆம் நூற்றாண்டுகளில் ஏற்படுத்தப்பட்டவை. ஆக்ஸ்ஃபோர்டு (Oxford), கேம்பிரிட்ஜ் (Cambridge) பல்கலைக்கழகங்களும் இடைக்காலத்தில் தோன்றியவைதாம். பிரபுக்களும், திருச்சபையும் அறிவு வளர்ச்சிக்காக இப் பல்கலைக் கழகங்களுக்கு ஆதரவு அளித்தனர். லத்தீன் மொழி பல்கலைக்கழகங்களின் பயிற்சி மொழியாக இருந்தது. பீட் (Bede) என்பவரால் எழுதப்பெற்ற 'சமய வரலாறு', கிரகரி (Gregory) என்பவரால் எழுதப்பட்ட 'ஃபிராங்குகளின் வரலாறு' போன்ற நூல்கள் இடைக்காலத்தில் எழுதப்பட்டவைதாம். இடைக்காலத்தில்தான் வாணிகத் துறையில் ஐரோப்பா பெருமளவு வளர்ச்சியுற்றது. கடல்கடந்து வாணிகம் செய்து வெனிஸ் (Venice) போன்ற நகரங்கள் செல்வத்தில் திளைத்தன. திருச்சபையின் ஆதரவில் கட்டடக் கலையும் இக் காலத்தில் பெருமளவிற்கு வளர்ந்திருந்தது. கோத்திக் கட்டடக்கலை (Gothic Architecture) இடைக்கால ஐரோப்பாவில் வளர்ச்சியுற்றதற்குக் காரணமாக இருந்தது திருச்சபை. எனவே, ஐரோப்பிய வரலாற்றில் இடைக்காலத்தை ஓர் 'இருண்ட காலம்' எனக் கூறுவது பொருந்தாது.

# 2. தேசிய நாடுகளின் தோற்றம்

## I. ஸ்பெயின், II. ஃபிரான்சு, III. இங்கிலாந்து

நவீன ஐரோப்பா பிறந்தது என்பதற்கு அடையாளம், ஐரோப்பாவில் தேசிய நாடுகளின் தோற்றம். இடைக்காலத்தில் ஐரோப்பா முழுவதும் ஒரு கிருஸ்துவ உலகமாக, போப்-புனித ரோமப் பேரரசர் இவர்களின் இணைந்த தலைமையில் இயங்கி வந்தது. தாங்கள் கிறிஸ்துவர்கள், ரோமப் பேரரசின் குடிமக்கள் என்ற அடிப்படையில் ஒற்றுமையுணர்வு இருந்ததேயன்றி, இனம், மொழிகளின் அடிப்படையில் ஐரோப்பிய மக்களிடையே ஒற்றுமை யுணர்வு இருக்கவில்லை. நாம் 'தேசியம்' என்று வழங்கும் இந்த ஒற்றுமையுணர்வுதான் நவீன காலத்தின் தொடக்கத்தில் தோன்றியது. புனித ரோமப்பேரரசின் அதிகாரம் எல்லோராலும் ஏற்கப்படவில்லை. போப்பின் ஆதிக்கத்தைச் சில மன்னர்கள் எதிர்த்தார்கள். நிலமானியப் பிரபுக்களின் அதிகாரம் ஒரு மத்திய அரசின் கட்டுப்பாட்டின்கீழ் கொண்டுவரப்பட்டது. இவற்றின் விளைவாகத் தேசிய நாடுகள் உருப்பெற்றன.

இடைக்காலத்திலேயே நிலமானியப் பிரபுக்களின் அதிகாரத்தை நகரங்கள் ஓரளவு கட்டுப்படுத்தி வந்தன. இருப்பினும், பொதுவாக நோக்குமிடத்து பிரபுக்களின் செல்வாக்கும் அதிகாரமும் இன்னமும் குறையவில்லை. மன்னனின் அதிகாரத்திற்கு நிலமானியப் பிரபுக்கள் ஓர் ஆபத்தாக இருந்த தால் மன்னனும் அவர்களின் அதிகாரத்தை அடக்க எண்ணினான். இவ்வாறு நகரங்களும் அரசர்களும் நிலமானியப் பிரபுக்களைத் தங்கள் பொது எதிரியாகக் கருதி அவர்களை ஒழிக்கும் முயற்சியில் ஈடுபட்டு, ஒருவருக்கொருவர் உதவி செய்ய முன்வந்தனர். இந்தப் போக்கின் விளைவாகத்தான் தற்கால ஐரோப்பாவின் தொடக் கத்தில் வலிமைமிக்க மன்னர்களின் ஆட்சி தோன்றியதைக் காண்கிறோம். ஆனால், இந்தச் சூழ்நிலை ஐரோப்பாவெங்கும்

உருவாகியது என்று கூறமுடியாது. இங்கிலாந்து, ஃபிரான்ஸ், ஸ்பெயின் நாடுகளில் இப் போக்கை நாம் காண்கிறோம். ஆனால், ஜெர்மனியில் நிலம்படைத்த பிரபுக்களின் ஆதிக்கம் மேலோங்கியிருந்தாலும், இத்தாலியில் போப்பாண்டவரின் அதிகாரமும், நகரங்களின் செல்வாக்கும் பெருகியிருந்தாலும், மற்ற நாடுகளைப்போல இங்கு வலிமைமிக்க தேசிய முடியாட்சிகள் தோன்றுவதற்குச் சாதகமான சூழ்நிலை உருவாகவில்லை.

நகர மக்களுக்கும் அரசனுக்குமிடையே ஏற்பட்ட இந்த உறவு தேசியத்தினால் மேலும் வலுவடைந்தது. ஒரு நாடு அந்நியர்களின் படையெடுப்புக்கு உள்ளாகி, இதனால் மக்களனைவரும் பாதிக்கப்படும் சூழ்நிலையில்தான் தேசியம் உருவாகிறது. ஐரோப்பிய வரலாற்றில 'மூர்கள்' என்னும் முகமதியர்களின் படையெடுப்பினால் ஸ்பானிய தேசியமும், நூறாண்டு போரில் இங்கிலாந்தின் படையெடுப்பின் விளைவாக ஃபிரஞ்சுத் தேசியமும், இதே நூறாண்டுப் போரின் விளைவாக இங்கிலாந்தில் தேசியமும் தோன்றியதை நாம் இங்குக் குறிப்பிடலாம் இந்தத் தேசிய உணர்வின் அடிப்படையில் ஏற்பட்ட ஒற்றுமை அரசனின் வலிமையையும், செல்வாக்கையும் பெருக்க உதவியாக இருந்தது. இவ்வாறு ஒற்றுமையடைந்த இங்கிலாந்து, ஃபிரான்சு, ஸ்பெயின் போன்ற நாடுகள் ஐரோப்பிய வரலாற்றில் முக்கிய பங்குபெற முடிந்தது. ஒற்றுமை ஏற்படாத ஜெர்மனி, இத்தாலி போன்ற நாடுகள் பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை ஐரோப்பிய வரலாற்றில் எந்த ஒரு பங்கையும் வகிக்க முடியவில்லை.

பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஐரோப்பாவில் தேசிய முடியாட்சிகள் வலுப்பெறுவதைக் காண்கிறோம். இந்த ஆட்சியில் வாழும் மக்கள் ஓர் இனத்தைச் சேர்ந்தவர்களாகவும், மொழி, இலக்கியம் இவற்றின் அடிப்படையில் ஒற்றுமையுணர்வு பெற்றவர்களாகவும் விளங்கினார்கள். இவர்களை ஆளும் மன்னர்கள் வரம்புகடந்த அதிகாரத்தைப் பெற்று, பிரிவினைச் சக்திகளை ஒடுக்கி நிலையான ஆட்சியை ஏற்படுத்தினார்கள். இதுபோன்ற வலிமைமிக்க தேசிய முடியாட்சிகள் ஐரோப்பாவில் தோன்றப் பல காரணங்கள் இருந்தன. சிலுவைப் போர்களின் விளைவாக ஐரோப்பிய மன்னர்கள், கிழக்கு நாடுகளுடன் தொடர்புகொள்ள வாய்ப்புகள் ஏற்பட்டபொழுது இந்த வரம்புகடந்த முடியாட்சி முறையைப்பற்றி அறிந்துகொண்டனர். இந்த ஆட்சிமுறையைத் தங்கள் நாடுகளிலும் பின்பற்றினர்.

மேலும், சிலுவைப் போர்கள் நடுத்தர வகுப்பினர் என்னும் ஒரு பிரிவினரை உருவாக்கியது. இவர்கள் செல்வமும்,

செல்வாக்கும் பெற்று, தங்கள் வர்த்தக உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள வலிமைமிக்க, நிலையான ஆட்சியின் தேவையை உணர்ந்தனர். எனவே, வலிமைமிக்க முடிமன்னர்கள் தோன்றுவதை இவர்கள் வரவேற்றனர். அவர்களுக்கு ஆதரவும் அளித்தனர்.

வலிமையுள்ள முடியாட்சி தோன்றுவதற்கு நிலமானியப் பிரபுக்கள் தடையாக இருந்தனர். திருச்சபையும் தடையாக இருந்தது. சிலுவைப் போர்களில் இவர்கள் ஈடுபட்டதால் ஐரோப்பிய அரசுகளின் விவகாரங்களில் இவர்களால் தலையிட முடியவில்லை. ஐரோப்பிய மன்னர்கள் தங்கள் அதிகாரத்தைப் பெருக்கிக்கொள்ள இப்பொழுது தடையேதும் இல்லை.

இடைக்காலத்தில் முடியாட்சியின் அதிகாரத்தையும், செல்வாக்கையும் ஒடுக்குவதற்குரிய முக்கிய காரணமாக இருந்த நிலமானியப் பிரபுக்கள், இப்பொழுது தங்கள் தலைமையையும், செல்வாக்கையும் இழந்து காணப்பட்டனர். நிலமானிய முறையே மறைந்துவிட்டது. இந்த நிலையில் வலிமைமிக்க முடியாட்சி தோன்றுவது எளிதாயிற்று.

இடைக்காலத்தில் திருச்சபை வலிமையுள்ள முடியாட்சி தோன்றுவதை விரும்பவில்லை என்றாலும், நிலமானிய முறையால் சமுதாயத்தில் ஏற்பட்ட குழப்பநிலை, நிலையற்ற அரசாங்கம்—ஆகிய இந்த நிலையையும் அது வரவேற்கவில்லை. இறுதியில் இந் நிலையினால் ஏற்பட்ட இடையூறுகளை அகற்ற மன்னனுக்கு அதிகாரம் அளிப்பதுதான் வழி என்பதைத் திருச்சபையே உணரத் தொடங்கியது.

## ஸ்பெயின், இங்கிலாந்து, ஃபிரான்சு ஆகிய நாடுகளில் எழுந்த தேசிய முடியாட்சிகள்

### ஸ்பெயின்

இடைக்காலத்தில் ஸ்பெயினின் தென்பகுதியை மூர்கள் என்னும் முகமதியர்களும், வடபகுதியைக் கிறிஸ்துவ அரசர்களும் ஆண்டுவந்தனர். 'கிரானடா' (Granada) மூர்களின் ஆட்சியின் மையமாக விளங்கியது. போர்ச்சுகல், அரகான் (Aragon), காஸ்டில் (Castile), நவாரே (Navarre), லியான் (Leon) என்பவை முக்கியமான கிறிஸ்துவ அரசுகள். ஃபெர்டினண்டு (Ferdinand), இசபெல்லா (Isabella) ஆகியவர்களுடைய ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு ஐரோப்பிய வரலாற்றில் ஸ்பெயின் எந்தப் பங்கும் பெறவில்லை.

கி.பி. 1469-ல் 'அரகான்' அரசின் வாரிசும், இரண்டாம் ஜானின் மகனுமாகிய ஃபெர்டினண்டுக்கும், 'காஸ்டில்' அரசின் வாரிசும், நான்காம் ஹென்றியின் தங்கையுமான இசபெல்லா வுக்கும் திருமணம் நடந்தது. இது ஸ்பெயின் வரலாற்றில் மிக முக்கியமானவொரு நிகழ்ச்சி. இதன்பிறகு இவ்விரு அரசுகளும் ஒன்றுபட்டு ஸ்பெயினின் செல்வாக்குப் பெருக ஆரம்பித்தது. ஃபெர்டினண்டு-இசபெல்லாவின் கூட்டு ஆட்சியில் (1474—1504) ஸ்பெயினின் புகழ் ஓங்க ஆரம்பித்தது. ஸ்பெயினை ஒன்றுபடுத்தி வலிமை பொருந்திய—நிலையான ஆட்சியை இவர்கள் ஏற்படுத்தி னார்கள். புது நாடுகள் கண்டுபிடிக்கும் முயற்சியிலும், குடியேற் றங்களை அமைக்கும் முயற்சியிலும் ஸ்பெயின் முதன்முதலில் ஈடுபட்டது இவர்கள் ஆட்சியில்தாம். ஸ்பெயினில் முசுமதியர் களின் ஆட்சியை இறுதியாக ஒழித்த பெருமை இவர்களையே சாரும். இக் காலம் முதல் ஸ்பெயின் உலக அரசியலில் முக்கிய அங்கம் வகிக்கத் தொடங்கியது. ஸ்பெயினில் மூர்களின் ஆதிக் கத்தை ஒழிப்பது. அங்கு இருந்த பல அரசுகளை இணைத்து, வலிமை பொருந்திய ஸ்பானிய அரசை ஏற்படுத்துவது, பிரபுக் களின் அதிகாரத்தை நசுக்குவதன்மூலம் முடியாட்சியை மேலும் வலுப்படுத்துவது, கத்தோலிக்கச் சமயத்திற்கு எதிராக இயங்கும் சக்திகளை அழிப்பது, திருமணங்கள் மூலமாகவும், போர்கள் மூலமாகவும், ஸ்பெயினை ஐரோப்பிய வல்லரசுகளில் ஒன்றாக உயர்த்துவது ஆகிய இவையே ஃபெர்டினண்டு-இசபெல்லாவின் நோக்கங்கள்.[1] காஸ்டில் அரசில் பிரபுக்களும், குருமார்களும் சிறப்புரிமைகள் பெற்றிருந்தனர். அவர்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டிருந்தது. அவர்களைக் கைதுசெய்ய முடியாது. அரசனுக்கு எதிராகப் பிரபுக்கள் போர்செய்யும் உரிமை பெற் றிருந்தனர். அவர்கள் ஸ்தல ஆட்சிகளைத் தங்கள் ஆதிக்கத்திற்குட் படுத்தி இருந்தனர். 'அரகான்' அரசியல் மன்னனின் அதிகாரம் 'ஜஸ்டிசா' (Justiza) என்னும் நீதித்துறை அதிகாரியின் கட்டுப் பாட்டிற்குள் இருந்தது. இரண்டு அரசுகளிலும் 'கார்டஸ்' (Cortez) என்னும் பிரதிநிதித்துவ மன்றங்கள் இருந்தன. வேலன்சியா (Valencia), கடலோனியா (Catalonia) போன்ற மாநிலங்கள் இந்த அரசுகளுடன் முற்றிலும் இணைக்கப்படவில்லை. ஃபெர்டினண்டு-இசபெல்லா இவர்கள் ஆட்சி தொடங்கியவுடன் பல இன்னல்களை எதிர்நோக்கவேண்டியிருந்தது. வலிமையும், செல்வமுமிக்க பிரபுக்கள் அரசனுக்குக் கீழ்ப்படியவில்லை. தங்களுக்கென்று தனிப்படையினை வைத்துக்கொண்டிருந்தனர். சமய குருமார்களின் செல்வாக்கும், சிறப்புரிமைகளும், அரசிற்கு

[1] A Text book of Modern History, 1453-1661, G.W. Southgate, p. 29

ஊறு விளைவிக்கும் வகையில் இருந்தன. இப்பிரச்சினைகளைத் தீர்க்கும் பணியினை அரசனும், அரசியும் மேற்கொண்டனர். 1480-ல் அரசனின் ஆலோசனைக்குழு திருத்தியமைக்கப்பட்டது. அதில் பிரபுக்கள் பெற்றிருந்த அதிகாரம் குறைக்கப்பட்டது. பிரபுக்களுக்குப் பதிலாகச் சாதாரணக் குடும்பங்களைச் சேர்ந்த, சட்டப் பயிற்சி பெற்றவர்கள் இதன் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டனர். மக்களுக்கு மானியமாக அளிக்கப்பட்டிருந்த நிலங்கள் மீண்டும் மன்னனால் எடுத்துக்கொள்ளப்பட்டன. இதன் விளைவாக அரசின் நிதிநிலைமை சீர்படுத்தப்பட்டது. அரசனுக்கென்று வலிமை பொருந்திய படையொன்றும் ஏற்படுத்தப்பட்டது. போப்பினுடைய அதிகாரம் குறைக்கப்பெற்று, திருச்சபை, அரசனின் அதிகாரத்திற்குட்படுத்தப்பட்டது. பிரபுக்களின் அரசியல் செல்வாக்கை ஒழிக்க நடுத்தர வகுப்பினரின் ஒத்துழைப்பை நாடினர். கார்டஸ் (Cortez) என்னும் பாராளுமன்றம் தவறாமல் கூட்டப்பட்டாலும் உண்மையான அதிகாரம் அரசன் கையிலும், அரசாங்க உயர் அதிகாரிகளின் கையிலும் இருந்தது.

1478-ல் காஸ்டில் அரசிலும், 1483-ல் அரகான் அரசிலும் 'இன்குயுசிஷன்' மன்றங்கள் (Inquisition) ஏற்படுத்தப்பட்டன. இவர்கள் காலத்தில் கத்தோலிக்கச் சமயவெறி ஸ்பெயினில் தாண்டவமாடியது. யூதர்களையும், மூர்களையும் கத்தோலிக்கச் சமயத்தைத் தழுவும்படி கட்டாயப்படுத்தவும், மறுத்தால் அவர்களைத் தண்டிக்கவும் ஏற்படுத்தப்பட்டதுதான் இந்த மன்றம். இவ்வமைப்பு ஒரு மத்திய நிர்வாகக் குழுவைக் கொண்டது. இதன் கிளைகள் ஸ்பானிய மாநிலங்கள் அனைத்திலும் இயங்கிவந்தன. சமயச்சார்புள்ள அமைப்பானபோதிலும், இது அரசியல் நோக்கங்களுக்கும் பயன்படுத்தப்பட்டது. இது அரசனின் அதிகாரத்திற்குட்படுத்தப்பட்டு, அதை வலுப்படுத்தும் வகையில் பயன்படுத்தப்பட்டது. சமய விரோதிகள் மட்டுமின்றி, முடியாட்சியின் எதிரிகளும் இதன் அதிகார வரம்பிற்குட்படுத்தப்பட்டனர். எனவே, இது முடியாட்சிக்கு அரண் செய்யும்வகையில் அமைந்தது. இந்த மன்றத்தின் தலைமை அதிகாரி கிராண்டு இன்குயுசிட்டர் (Grand Inquisitor) என அழைக்கப்பட்டார். இந்தப் பதவியை முதன்முதலில் வகித்தவர் தாமஸ்-டி-தார்குமாடா (Thomas de Torquemada) என்பவர். இவருடைய பதவிக் காலத்தில் (1483-1498) 2000 பேர் மரண தண்டனை விதிக்கப்பட்டனர். பல்லாயிரக்கணக்கானவர்கள் சிறையிலிடப்பட்டனர். இதன் கொடுமையைத் தாங்க முடியாமல் பல யூதர்களும், மூர்களும் நாட்டைவிட்டு வெளியேறினர். இம் மன்றத்தின் கொடுமையினால் பொருளாதார, அறிவுத்துறையில் ஸ்பெயினுக்கு ஏற்பட்ட

இழப்பை நாம் எளிதில் கணக்கிட முடியாது. ஸ்பெயினின் வளர்ச்சிக்கு முக்கிய காரணமாக இருந்த இந்த இரண்டு இன மக்களைக் கொடுமைக்குள்ளாக்கி நாட்டிலிருந்து வெளியேற்றியதன்மூலம், இம் மன்றம் ஸ்பானிய மக்களுக்கு அளவிட முடியாத இன்னலை ஆற்றியதென்பதை நாம் மறுக்க முடியாது.

ஸ்பானிய வரலாற்றிற்கே இது ஓர் இழுக்கைத் தேடித் தந்துள்ளது. இதன் செல்வாக்கின் காரணமாகத்தான் பிற்கால வரலாற்றில் ஸ்பெயின் பிற்போக்குச் சக்திகளுக்கு உறைவிடமாகவும், முற்போக்குக் கருத்துகளுக்கு ஆதரவு அளிக்க விரும்பாத நாடாகவும் விளங்கியதுபோலும். இந்த இன்குயுசிஷன் மன்றங்களின் உதவியால் கத்தோலிக்க மதத்தை எதிர்த்தவர்கள் மட்டுமன்றி அரசின் ஆணைகளுக்கும், சட்டங்களுக்கும் கட்டுப்படாதவர்களும் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். 1489-முதல் 1492-வரை மூர்களுடன் போர் நடந்து, அவர்களின் தலைநகரமாகிய கிரானடா (Granada) முற்றுகையிடப்பட்டு இறுதியில் அந் நகரம் கைப்பற்றப்பட்டது (1492). முகமதியர்கள் ஆட்சி ஒழிக்கப்பட்டது. அதே ஆண்டில்தான் கொலம்பஸ் தம் கடல்பயணத்தை வெற்றிகரமாக முடித்துப் புதிய உலகமான அமெரிக்கா கண்டுபிடிக்கப்படுவதற்குக் காரணமாக இருந்தார். இந்த இரண்டு நிகழ்ச்சிகளாலும் ஸ்பெயினின் புகழ் ஓங்கியது.

ஃபிரான்சின் ஆதிக்கம் வளருவதை ஃபெர்டினண்டு விரும்பவில்லை. நேபிள்ஸ், சிசிலி, சார்டினியா ஆகிய நாடுகள்மீது ஃபெர்டினண்டின் ஆதிக்கத்தை ஃபிரான்ஸ் ஏற்றுக்கொண்டது. திருமணங்கள்மூலம் ஃபெர்டினண்டும் இசபெல்லாவும் தங்கள் ஆட்சியை வலுப்படுத்திக்கொண்டனர். இவர்களின் மகள் காதரைன் (Catherine) இங்கிலாந்து மன்னன் எட்டாம் ஹென்றியை மணந்தார். மற்றொரு மகள் ஜோன்னு (Joanna) ஹாப்ஸ்பர்க் (Hapsburg) இளவரசனை பிலிப்பை (Prince Philip of Austria) மணந்தார். மகன் ஜான் புனித ரோமானியப் பேரரசர் முதலாம் மாக்ஸிமிலியனின் (Maximilian I) மகளான ஆஸ்திரிய இளவரசி மார்கரெட்டை மணந்தார். இந்தத் திருமணங்கள் யாவும் ஆதிக்கப் போட்டியில் ஃபிரான்சின் வலிமையைக் குறைக்கும் நோக்கத்துடன் முடிக்கப்பட்டவை. இத் திருமணங்கள்மூலம் ஐரோப்பாவின் முக்கியமான அரச குடும்பங்களுடன் ஸ்பெயின் தொடர்புகொண்டது.

1504-ல் இசபெல்லா இறந்தார். 1516-வரை ஃபெர்டினண்டுடைய ஆட்சி தொடர்ந்தது. 1512-ல் நவாரே (Navare) அரசையும் ஃபெர்டினண்டு கைப்பற்றினர். நவாரே அரசின் ஒரு

சிறு பகுதி (ஃபிரான்சை ஒட்டியிருந்த பகுதி) மட்டுமே நவாரே மன்னன் இரண்டாம் ஹென்றியிடம் இருந்தது. இவருடைய வாரிசான மூன்றும் ஹென்றிதான் 1589-ல் ஃபிரான்ஸ் மன்னனுகப் பட்டம் எய்திய நான்காம் ஹென்றி என்பவர். ஃபெர்டினண்டின் வெளிநாட்டுக் கொள்கை ஃபிரான்சுக்கு எதிராக அமைந்திருந்தது. ஃபிரான்சின் ஆதிக்கம் வளர்வதை இவர் தடுத்தார். இத்தாலியப் போர்களில் பங்குகொண்டு, இவர் நேபிள்ஸ் அரசை அரகான் (Aragon) அரசிற்கு வாங்கிக் கொடுத்தார். வட ஆப்பிரிக்காவி லுள்ள ஓரான் (Oran), அல்ஜியர்ஸ், டிரிபோலி நகரங்களையும் ஸ்பெயின் பெற்றது.

ஃபெர்டினண்டு-இசபெல்லாவின் கூட்டாட்சி பிரபுக்களின் அதிகாரத்தை ஒடுக்கியது. நாட்டில் அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டியது. ஐபீரியத் தீபகற்பம் முழுவதிலும் மன்னன் அதிகாரத்தை நிலைநாட்டியது. கிரானடா கைப்பற்றப்பட்டு, முகமதியர் ஆட்சி ஒழிக்கப்பட்டது. நேபிள்ஸ், ஆப்பிரிக்காவின் சில பகுதிகள், புது உலகத்தின் ஒரு பகுதி இவையெல்லாம் ஸ்பெயினுக்குக் கிடைத்தன. ஸ்பெயினின் படை வலிமை பெருகியது. இந்தச் சாதனைகள் ஒருபுறமிருக்க, இவர்கள் ஆட்சியின் குறைபாடுகளை நாம் மறந்துவிடக்கூடாது. அரகான், காஸ்டில் அரசுகளுக்கிடையே ஏற்பட்ட ஒற்றுமை, அரசியல்முறை அடிப்படையில் ஏற்பட்ட ஒற்றுமையன்று. யூதர்களும், மூர்களும் துரத்தப்பட்டதால் நாடு அவர்களுடைய நற்பணியை இழந்தது. இன்குயுசிஷன் (Inquisition) மன்றங்கள் மக்களின் உரிமைகளைப் பறித்தன. புது உலகத்திலிருந்து ஸ்பெயின் பெற்ற செல்வத்தின் விளைவாகப் பல பொருளாதாரச் சிக்கல்கள் தோன்றின. உள்நாட்டு வியாபாரம் புறக்கணிக்கப்பட்டது.

ஃபெர்டினண்டு அரசியல் தந்திரத்தில் கைதேர்ந்தவர். சிறந்த நிர்வாகத் திறமை படைத்தவர். ஒற்றுமை இழந்த, செல்வமற்ற, பிரபுக்களின் ஆதிக்கத்தின் கீழிருந்த ஓர் அரசின் தலைமையை ஏற்ற இவர், இறக்கும்பொழுது. அதை வலிமையுள்ள, செல்வம் மிக்க அரசாக மாற்றித் தன் பேரரான ஐந்தாம் சார்லஸுக்குக் கொடுத்தார். ஐந்தாம் சார்லஸ் மன்னன் காலத்தில்தான் ஸ்பெயின் ஐரோப்பிய வல்லரசுகளில் ஒன்றுக வளர்ந்தது.

### ஃபிரான்ஸ்

இடைக்கால ஃபிரெஞ்சு வரலாற்றில் கரோலிஞ்சியக் குடும்பத்தின் ஆட்சியும் (Carolingians), ஹ்யூ காபட் (Hugh Capet) என்பவரால் ஏற்படுத்தப்பட்ட 'கபேசியன்' (Capetian)

குடும்பத்தின் ஆட்சியும் குறிப்பிடத் தக்கவை. கி.பி. 987-ல் தொடங்கிய காபட் குடும்பத்து ஆட்சி சுமார் ஐந்து நூற்றாண்டுகள் நீடித்திருந்தது. ஆறும் லூயி (1108—1137), ஏழாம் லூயி (1137—1180), இரண்டாம் பிலிப் (1180—1223), ஒன்பதாம் லூயி (1226—1270), நான்காம் பிலிப் (1285—1314) போன்றவர்கள் ஃபிரான்சை ஆண்ட முக்கிய அரசர்கள். பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுவரை ஃபிரான்சில் பிரபுக்களின் ஆதிக்கம் மேலோங்கியிருந்தது. மன்னனுடைய அதிகாரம் பாரிஸ் நகரைச் சுற்றியுள்ள ஃபிரான்சின் மையப் பகுதியில் மட்டும் அமலிலிருந்தது. பர்கண்டி (Burgundy), பிரிட்டனி (Brittany), பூர்போன் (Bourbon), ஆர்லியன்ஸ் (Orleans) போன்ற நிலமானியப் பிரபுக்களுக்குச் சொந்தமான பகுதிகள் அவரவர்களின் ஆட்சியின்கீழ் சுயேச்சையாக இயங்கிவந்தன. இப் பிரபுக்கள் மன்னனுடைய அதிகாரத்தைச் சிறிதும் மதிக்காமல் பெரிய படைகளை வைத்துக் கொண்டு தாங்களும் மன்னர்கள்போலவே ஆண்டுவந்தனர்.

நார்மண்டிப் பிரபு (Duke of Normandy) வில்லியம் இங்கிலாந்து சென்றுவிட்டதாலும், சிலுவைப் போர்களில் ஈடுபட்ட பல பிரபுக்கள் இறந்துவிட்டதாலும், இவர்களின் ஆதிக்கம் சிறிது சிறிதாகக் குறையத் தலைப்பட்டது. இரண்டாம் பிலிப், ஒன்பதாம் லூயி, நான்காம் பிலிப் போன்ற அரசர்கள் இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்கி, தங்கள் அதிகாரத்தை அதிகப்படுத்திக்கொண்டனர். இரண்டாம் பிலிப், ஃபிரான்சில் ஆங்கிலேயர் கைப்பற்றியிருந்த பகுதிகளை மீட்டார். பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்கினார். இவர் ஆங்கிலேயர்கள்மீது பெற்ற வெற்றி ஃபிரெஞ்சு மக்களுக்கு உற்சாகத்தை அளித்தது. முதன் முதலாக ஃபிரெஞ்சு மக்களிடையே தேசிய உணர்வும் தோன்றியது. முதன் முறையாக அரசர் பிரபுக்களைவிட வலிமை மிக்கவராக ஆகின்றார். ஒன்பதாம் லூயி, பர்கண்டி, பிரிட்டனி, பிளாண்டர்ஸ் பிரபுக்களோடு போரிட்டு அவர்களின் அதிகாரத்தை ஒடுக்கினார். நான்காம் பிலிப் காலத்தில் ஃபிரெஞ்சு மன்னரின் செல்வாக்கும், பெருமையும் மேலும் உயர்ந்தது. இவர் போப்பாண்டவரான எட்டாம் போனிபேஸ் (Boniface VIII) என்பவரைப் போரில் புறங்கண்டு 'அவினன்' (Avignon) என்னுமிடத்தில் அவரைச் சிறைப்படுத்தி வைத்திருந்தார். மன்னரது நிலை இவ்வாறு வலுவடைந்தாலும் ஃபிரான்ஸ் இன்னும் ஒற்றுமையடையவில்லை.

இந்த நிலையில்தான் ஃபிரெஞ்சு வரலாற்றில் மிக முக்கிய நிகழ்ச்சியான நூறாண்டுப் போர் நிகழ்ந்தது. இங்கிலாந்தின் மன்னரான மூன்றும் எட்வர்டு ஃபிரெஞ்சு அரியணைமீது உரிமை

கொண்டாடினர். இதைக் கைப்பற்ற ஃபிரான்ஸ்மீது போர் தொடுத்தார். மேலும் இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்கும் பொருளாதார வர்த்தகத்துறையில் பலத்த போட்டி ஏற்பட்டது. இதுவும் இந்தப் போர் ஏற்பட ஒரு முக்கிய காரணமாக இருந்தது. 1338-முதல் 1453-வரை நூறுண்டுகளுக்கு இப்போர் நடந்தது. கிரேஸி (Crecy) பாய்டியர்ஸ் (Poitiers) போன்ற பல போர்க்களங்களில் ஃபிரான்ஸ் படுதோல்வி அடைந்தது. 1360-ல் ஏற்பட்ட பிரிட்டேன் உடன்படிக்கையோடு இப் போரின் ஒரு கட்டம் முடிவடைந்தது இத்தோல்விகளின் உடனடி விளைவு ஃபிரான்சில் மன்னனின் செல்வாக்கு மீண்டும் மங்கத் தொடங்கியது. பிரபுக்களின் செல்வாக்கு அதிகரிக்கத் தொடங்கியது. சுயநலங்கொண்ட பிரபுக்கள் நாட்டுக்குத் துரோகம்செய்து இங்கிலாந்துக்கு உதவி செய்தனர். பர்கண்டி பிரபுக்களின் கையில் நாடு சிக்கியது. 1415-ல் மீண்டும் இங்கிலாந்து அரசர் ஐந்தாம் ஹென்றி ஃபிரான்ஸ் மீது படையெடுத்தார். பர்கண்டி, ஆர்லியன்ஸ் பிரபுக்களுக்கிடையே இருந்த பூசல்களைப் பயன்படுத்திக்கொண்டு, 'அகின் கோர்ட்' (Agincourt) போரில் ஃபிரெஞ்சுப் படைகளை முறியடித்தார். ஆர்லியன்ஸ் நகரம் முற்றுகையிடப்பட்டது. இந்தப் பரிதாப நிலையில்தான் சாதாரணக் குடியானவப் பெண்ணுன ஜோன் ஆப் ஆர்க் (Joan of Arc) ஃபிரெஞ்சு மக்களின் சார்பாகப் போரில் தலைமைதாங்கி வீரத்துடனும், திறமையுடனும் ஆங்கிலேயர்களுடன் போர் செய்து ஆர்லியன்ஸ் நகரத்தைக் கைப்பற்றினாள். இந்த வெற்றிக்குப் பிறகு பட்டத்து இளவரசன் சார்லஸை ஃபிரான்சின் பழைய தலைநகரான ரீம்ஸ் (Reims) நகருக்கு அழைத்துச் சென்று ஏழாம் சார்லஸ் என அவருக்கு முடிசூட்டினாள். இந்த வீராங்கனையின் தீரச் செயல்களும், நாட்டுப் பற்றும், போர்த் திறமையும் ஃபிரெஞ்சு மக்களையும், போர் வீரர்களையும் வெகுவாகக் கவர்ந்தன. இவளுடைய வீரச் செயல்கள் ஃபிரெஞ்சுப் படைகள் மேலும் பல வெற்றிகள் பெற உதவின. ஆனால், 1431-ல் ஜோன் ஆங்கிலேயர்களால் சிறைப்பிடிக்கப்பட்டு, கிறிஸ்துவ சமயத்தின் விரோதி என்றும், சூனியக்காரி என்றும் குற்றம் சாட்டப்பட்டுத் தீயில்வைத்து எரிக்கப்பட்டாள். நூறுண்டுப் போரும், ஜோனின் வெற்றிகளும், அவளுடைய தியாகமும் ஃபிரான்ஸ் மக்களிடையே ஒற்றுமை உணர்வை வலுப்படுத்தி ஃபிரெஞ்சு தேசியம் தோன்றக் காரணமாக இருந்தது. இந்தத் தேசிய எழுச்சியின் விளைவாகத் தொடர்ந்து நடந்த நூறுண்டுப் போரில் ஃபிரெஞ்சு மக்கள் ஆங்கிலேயர்மீது வெற்றிமேல் வெற்றிபெற்றனர். ஃபிரான்சில் காலே (Calais) நகரத்தைத் தவிர மற்ற எல்லாப் பகுதிகளையும் ஆங்கிலேயர் இழந்தனர். நூறுண்டுப் போர் நடந்துகொண்

டிருந்த காலத்தில்தான் ஃபிரெஞ்சுப் பிரதிநிதித்துவ சபை, இங்கிலாந்தில் பாராளுமன்றத்தைப்போல உருவாகியது. நிலமானியமுறை அடிப்படையில் குருமார்கள், பிரபுக்களின் பிரதிநிதிகளைக்கொண்ட ஒரு அவையாகத் துவங்கிய ஸ்டேட்ஸ்-ஜெனரல் (States General) என்னும் பாராளுமன்றம், பதினுன்காம் நூற்றுண்டில் பொதுமக்கள் பிரதிநிதிகளேயும் கொண்டதாக அமைந்தது. ஆனால், இங்கிலாந்து பாராளுமன்றத்தைப்போல அதிகாரமும், செல்வாக்கும் பெற்று விளங்கும்வகையில் ஃபிரெஞ்சுப் பாராளுமன்றம் வளரவில்லை. ஃபிரெஞ்சு அரசர்கள் இந்த அவைக்கு நிர்வாகத்தில் பங்கு அளிக்கவில்லை. இந்நிலையை ஏற்றுக் கொண்டது ஃபிரெஞ்சுப் பாராளுமன்றத்தின் பலவீனத்தைக் காட்டுகின்றது.

ஏழாம் சார்லஸுக்குப் பிறகு அரியணை ஏறிய பதினொன்றும் லூயியின் (Louis XI, (1461-1483) ஆட்சி ஃபிரெஞ்சு வரலாற்றில் சிறப்பிடத்தைப் பெறுகின்றது. ஏனெனில் இவர் ஆட்சியில் தான் வலிமைமிக்க பர்கண்டி, ஆர்லியன்ஸ் பிரபுக்களின் அதிகாரம் ஒடுக்கப்பட்டு மன்னனின் அதிகாரம் மீண்டும் வலிமை பெற்றது. ஃபிரான்ஸ் ஒரு தேசிய நாடு என்ற நிலையை அடைந்தது. பட்டத்து இளவரசனுக இருந்தபொழுது பதினொன்றும் லூயி பிரபுக்களுக்கு ஆதரவு அளித்தபோதிலும் அரசனுக அரியணை ஏறியவுடன் இந்த நிலை மாறியது. பிரபுக்களின் ஆதிக்கத்தை ஒடுக்கும் பணியில் ஈடுபட்டார். பூர்போன் பிரபுவிடமிருந்து அவருக்குச் சொந்தமான பகுதிகள் பறிக்கப்பட்டன.

இவர் காலத்தில்தான் ஃபிரான்சில் தேசியம் வளர்ந்தது. இவர் பர்கண்டிப் பிரபுவுடன் நட்புறவை வளர்த்துக்கொண்டார். எனினும் அவர் பொதுவாகப் பிரபுக்களின் ஆதிக்கத்தை விரும்பவில்லை. தம் வலிமையால் அவர்களை அடக்கினர். இதனுல் பிரபுக்கள் அவரை விரும்பவில்லை. பூர்போன் பிரபு, பிரிட்டனி பிரபு போன்றவர்களுக்கும், அரசனுக்குமிடையே மனக்கசப்பு ஏற்பட்டது. இவர்கள் எல்லோரும்சேர்ந்து அரசனுக்கு எதிராக ஒரு எதிர்ப்பு அணி நிறுவினர்கள் (1465). இதற்குப் பொதுநலச் சங்கம் (The League of the Public Weal) என்று பெயர். இதன் தலைவர் பர்கண்டிப் பிரபுவான சார்லஸ் (Charles the Bold). இதில் பூர்போன், பிரிட்டனி, சார்லாய், பெர்ரி (Berry) போன்ற பிரபுக்கள் சேர்ந்தனர். இவர்கள் எல்லோரும்சேர்ந்து லூயி மன்னனின் ஆட்சி, நாட்டிற்கு உகந்தது அன்று என்று ஓர் அறிக்கை வெளியிட்டனர். அரசனுடைய படைகள், எண்ணிக்கையில் பிரபுக்கள் படையைவிடக் குறைந்திருந்தாலும், தரத்திலும், தளவாடங்கள் போன்ற தேவைகளிலும் வலிமை

பெற்றிருந்தன. அரசனுக்குச் சாதகமான மற்றொரு சூழ்நிலை என்னவென்றால், இந்தப் பிரபுக்களிடையே இருந்த போட்டியும், பொறாமை மனப்பான்மையும், ஒற்றுமையின்மையும் ஆகும். லூயிக்கும், இந்தப் பிரபுக்களின் கூட்டணிக்கும் மாண்டில்ஹேரி (Montlheri) என்ற இடத்தில் போர் நடந்தது. இறுதியில் இவ்விரு தரப்பினருக்கும் இடையே 'கான்பிளான் ஒப்பந்தம்' (Treaty of Conflans) என்ற சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது. 'சோம்மே' (Somme) என்றழைக்கப்படும் பகுதிகள் பர்கண்டிப் பிரபுவுக்குக் கொடுக்கப்பட்டன. நார்மண்டியின் ஆட்சி பெர்ரி பிரபுவுக்கு அளிக்கப்பட்டது. பிரிட்டனி பிரபுவும் மன்னிக்கப்பட்டார். இவ்வாறு லூயியின் ஆட்சிக் காலத்தில் பிரபுக்கள் அடக்கப்பட்டனர்.

ஆனால் இந் நிலையில் லூயி, பிரபுக்களின் வேண்டுகோள்களை பெரிதும் ஏற்றுக் கொண்டார். நாட்டின் நன்மைக்காகவும், தேசியம் வளரவும் சமாதானம் தேவைப்பட்டது. அதற்குத் தம்முடைய தற்பெருமை தடையாகாவண்ணம் லூயி நடந்து கொண்டது அவரது கூரிய அரசியல் அறிவைக் காட்டுகிறது. பர்கண்டிப் பிரபுவுடன் போரைத் தொடர்ந்திருந்தால் ஆங்கிலேயர்கள் அவருடைய உதவிக்கு வந்திருப்பார்கள். இது மற்றொரு நூறாண்டுப் போருக்கு வழி வகுத்திருக்கும்.

1472-73-ல் பர்கண்டிப் பிரபு ஃபிரெஞ்சு அரசையே கைப்பற்றத் திட்டமிட்டார். இங்கிலாந்து அரசனை நான்காம் எட்வர்டுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு அரியணையைக் கைப்பற்ற முயன்றார். ஆனால், இறுதியில் 1477-ல் தோற்கடிக்கப்பட்டு, பர்கண்டி அரசு ஃபிரான்சுடன் இணைக்கப்பட்டது. பர்கண்டிப் பிரபுவின் ஆதிக்கத்தை அழித்தது பதினொன்றாம் லூயியின் தலைசிறந்த சாதனைகளுள் ஒன்று. 'ஆஞ்சு', 'மெயின்' (Anjou, Maine) ஆகிய இரண்டு மாநிலங்களும் ஃபிரான்சுடன் இணைக்கப்பட்டன. 1483-ல் பதினொன்றாம் லூயி இறக்கும்பொழுது பிரிட்டனியைத் தவிர, மற்ற பிரபுக்கள் அனைவரும் அடக்கப்பட்டு, அவர்களுடைய அரசுகள் ஃபிரெஞ்சு அரசனின் நேரடி ஆட்சியில் கொண்டுவரப்பட்டன. 1483-ல் பிரிட்டனி பிரபு இறக்கவே, அவருடைய மகள் 'ஆன்' (Anne) என்பவளை எட்டாம் சார்லஸ் (1483-1498) மணந்துகொண்டு பிரிட்டனியையும் ஃபிரான்சுடன் இணைத்தார். இவ்வாறு ஃபிரான்சு ஐக்கியமானது. ஒற்றுமையும், அதனால் வலிமையும் பெற்ற ஃபிரான்ஸ் ஸ்பெயினுடன் ஆதிக்கப் போட்டியில் இறங்கி, இத்தாலிய விவகாரங்களில் தலையிடத் தொடங்கியது. ஸ்பெயினுக்கும், ஃபிரான்சுக்குமிடையே இத்தாலியப் போர்கள் நடந்தன. இப்போர்களைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் காண்போம்.

இங்கிலாந்து

ஜூலியஸ் சீசரால் கி.மு. 55-ல் வெல்லப்பட்ட இங்கிலாந்து, கி.பி. 410 வரை ரோமானியப் பேரரசின் ஒரு மாநிலமாக இருந்தது. ரோமானியர்கள் இங்கிலாந்திலிருந்து வெளியேறிய வுடன், 'ஆங்கில்கள்' (Angles), 'சாக்சன்கள்' (Saxons) போன்ற ஜெர்மானிய இனத்தைச் சேர்ந்த மக்கள் இங்கிலாந்தின்மீது படையெடுத்துப் பல சிறிய அரசுகளை ஏற்படுத்தினர். இறுதியில் இங்கிலாந்து முழுவதும் மேற்கு சாக்சன்களின் ஆட்சிக்குள் கொண்டுவரப்பட்டது. இவர்கள் ஆட்சியில்தான் ஃபிரான்சின் ஒரு பகுதியான நார்மண்டியைச் சேர்ந்த வில்லியம், இங்கிலாந்துமீது படையெடுத்து அந்நாட்டைக் கைப்பற்றினர் (1066). நிலமானிய முறை இங்கிலாந்தில் வளர்வதைத் தடுத்து, வலிமை பொருந்திய முடியாட்சியை அவர் ஏற்படுத்தினர். இரண்டாம் ஹென்றி (1154—1189) நிர்வாக, நிதி சீர்திருத்தங்களைச் செயல்படுத்தி நிலமானியப் பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்கி அரசனின் அதிகாரம் மேலோங்கச் செய்தார். மூன்றும் ஹென்றி, முதலாம் எட்வர்டு ஆகிய மன்னர்கள் காலத்தில்தான் இங்கிலாந்தில் பாராளுமன்றம் தோன்றியது. 1295-ல் முதலாம் எட்வர்டு, பிரபுக்கள், குருமார்கள், பொதுமக்கள் ஆகியவர்களின் பிரதி நிதிகள் கொண்ட பாராளுமன்றம் (மாதிரி பாராளுமன்றம்) ஒன்றை முதன்முதலில் கூட்டினர். இதுதான் நாளடைவில் பல மாறுதல்களுக்குள்ளாகி, இன்று நாம் காணும் பாராளுமன்ற மாக வளர்ச்சி பெற்றது. மூன்றும் எட்வர்டு ஆட்சியில் ஃபிரான் சுடன் போர் தொடங்கியது. இதுதான் நூறுண்டுப் போர் (1337—1453). நாட்டுப்பற்று, தேசிய உணர்வு, ஒற்றுமை உணர்ச்சி ஆகியவற்றின் காரணமாக இப்போரில் இங்கிலாந்து பல வெற்றிகளை அடைந்தது. ஃபிரான்சுக்கு எதிராக இங்கிலாந்து பெற்ற பல வெற்றிகள் இங்கிலாந்தில் தேசியம் மேலும் வலுப் பெறுவதற்கு உதவி செய்தது. மன்னனின் அதிகாரங்கள் பெருகி, வலிமையுள்ள முடியாட்சி ஏற்படவும் இவை உதவின. ஆனல், இறுதியில் நூறுண்டுப் போரில் இங்கிலாந்து தோற்கடிக் கப்பட்டு ஃபிரான்சிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று.

இதன் விளைவாக, இங்கிலாந்து ஓர் உள்நாட்டுப் போரில் ஆழ்ந்தது. லங்காஸ்டர் குடும்பம் (Lancastrians), யார்க் குடும்பம் (Yorkists), என்ற இரண்டு பிரபுக்கள் குடும்பங்களுக்கிடையே இங்கிலாந்தின் அரியணைக்கு ஏற்பட்ட போட்டிதான் 'ரோசாப்பூப் போர்' (Wars of the Roses) என்றழைக்கப்படும் உள்நாட்டுப் போர். ஒருவகையில் இப் போர் இங்கிலாந்திற்கு நன்மையையே விளைவித்தது என்று கூறலாம். ஏனெனில், இந்தப் போரில் பல

பிரபுக்கள் குடும்பங்கள் அழிந்ததால், அரசன், அவர்களுடைய சொத்துகளைக் கைப்பற்ற முடிந்தது. இதனுல், அவர்களுடைய செல்வாக்கு குறைந்து மன்னனுடைய அதிகாரம் மீண்டும் ஏற்பட உதவியாக இருந்தது. இந்தப் போர் நீண்டகாலம் நடந்ததாலும் (1455—1485), மக்களுக்குப் பல இன்னல்களை விளைவித்ததாலும் போர் விரைவில் முடிந்து, மீண்டும் அமைதி ஏற்பட வேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே ஏற்பட்டது. பிரபுக்கள் செல்வாக்கு ஒடுக்கப்பட்டு, வலிமையுள்ள முடியாட்சி நிறுவப் பட்டால்தான் அமைதி, ஒழுங்கு ஏற்படுத்துவது சாத்தியம் என்றும் மக்கள் நம்பினர். இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு லங்காஸ்டர் குடும்பத்தைச் (Lancaster) சேர்ந்த ஹென்றி டியூடர் என்பவர் 1485-ல் பாஸ்வொர்த் போரில் வெற்றி பெற்று, ரோசாப்பூப் போரை முடித்து ஏழாம் ஹென்றி என்ற பட்டத் துடன் இங்கிலாந்தின் அரியணை ஏறினர் (1485—1509). இவ்வாறு இங்கிலாந்தில் டியூடர் வமிசத்தின் ஆட்சி தொடங்கியது. இங்கி லாந்தின் வரலாற்றில் ஒரு புது அத்தியாயம் பிறந்தது. இங்கி லாந்தில் வலிமையுள்ள முடியாட்சி தோன்றுவதற்கு இவர் காரணமாக இருந்தார்.

தம் தாய் வழியாக லங்காஸ்டர் குடும்பத்துடன் நெருங்கிய உறவுகொண்ட இவர், யார்க் குடும்பத்து இளவரசியை மணம் செய்துகொண்டதன்மூலம் அந்தக் குடும்பத்துடனும் உறவு கொண்டிருந்தார். இந்த அரச குடும்பங்களுக்கிடையே இருந்த சச்சரவு தீர்ந்து, நட்புறவை வளர்ப்பதற்கு இந்த நிலை பேருதவி யாக இருந்தது. பிரபுக்கள் குடும்பங்கள் பல அழிந்துபட்டதால் மன்னன் தன் எதேச்சாதிகார ஆட்சியை ஏற்படுத்த முடிந்தது. இடைக்காலத்தில் மன்னன் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் வகையிலும், நிர்வாகத்தில் ஒரு முக்கிய பங்கை ஏற்றும் இயங்கிக் கொண்டிருந்த பாராளுமன்றம், இப்பொழுது தன் வலிமையை இழந்து, மன்னனின் கைப்பொம்மையாக மன்னன் விருப்பத்திற் கிணங்கச் செயல்பட்டது. அமைச்சர்கள், மற்ற உயர் அதிகாரிகள் போன்ற பதவிகளுக்கு நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்களை நியமித்துக் கொண்டதன்மூலம் பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்கினர். மேலும், பிரபுக்கள் படைகள் வைத்திருக்கக் கூடாது என்று ஒரு சட்டம் பிறப்பித்தார். பெருத்த அதிகாரம் படைத்த குடிமக்கள் என்றழைக்கப்பட்ட பிரபுக்களை ஒடுக்கவும், அவர்கள் தொடர்புள்ள வழக்குகளை விசாரிக்கவும், நட்சத்திர நீதிமன்றம் (Star Chamber Court) என்னும் சிறப்பு அதிகாரங்கள் கொண்ட நீதிமன்றத்தை நிறுவினர்.

அரசனின் அதிகாரத்தைப் பெருக்கிப் பாராளுமன்றத்தின் அதிகாரத்தைக் குறைக்க வேண்டும் என்பதுதான் ஏழாம் ஹென்றியின் உண்மையான நோக்கம். ஆனால், இதை நிறைவேற்றுவதில் ஹென்றி பாராளுமன்றத்துடன் வெளிப்படையாகவோ, நேரடியாகவோ போரில் ஈடுபடவில்லை. பெயரளவிற்குப் பாராளுமன்றத்திற்கு அதிகாரத்தையும், நிர்வாகத்தில் பங்கையும் கொடுக்க அரசன் தயங்கவில்லை. ஆனால், உண்மையில் அதிகாரம் முழுவதும் அரசன் கைகளிலேயே குவிக்கப்பட்டிருந்தது. நாட்டின் நிதிக் கொள்கைகளில் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதன் மூலமும், போர்களற்ற அயல்நாட்டுக் கொள்கையைப் பின்பற்றுவதன் மூலமும் செலவினங்களைக் குறைத்தார். அரசனுக்குச் சொந்தமான நிலங்களை நல்லமுறையில் சாகுபடி செய்வதன் மூலமும், ஏற்றுமதி, இறக்குமதி வரிகள், படைமானியக் கட்டணங்கள் (feudal dues), அபராதத் தொகைகள், கட்டாயக் கடன்கள் போன்றவற்றைக் கண்டிப்பான முறையில் வசூல் செய்வதன் மூலமும், நாட்டின் நிதிநிலையைச் சீர்படுத்திக் கொண்டார். இதன் விளைவாக, அரசன் தன்னுடைய பணத் தேவைகளுக்குப் பாராளுமன்றத்தின் உதவியை நாடி, அதை அடிக்கடி கூட்டவேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. இவருடைய இருபத்தி ஐந்தாண்டு ஆட்சியில் ஐந்தே முறைதாம் பாராளுமன்றம் கூடியது என்பதும், கூடியபோதெல்லாம், அரசனின் விருப்பத்திற்கிணங்க அவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்தது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

அயல்நாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரையில் ஏழாம் ஹென்றி பொதுவாகப் போர்களில் ஈடுபடுவதைத் தவிர்த்தார். ஃபிரான்சுக்கும், இங்கிலாந்துக்குமிடையே நெடுநாளையப் பகைமை இருந்த போதிலும் ஃபிரான்சுடன் போர் மூளுவதைத் தவிர்த்தார். ஸ்பெயினுடன் நட்புறவை ஏற்படுத்திக் கொண்டார். தன்னுடைய மூத்த மகனை ஆர்தருக்கு ஸ்பெயின் நாட்டு, பெர்டினண்டு-இசபெல்லாவின் மகளான காதரைன் இளவரசியை மணமுடித்தார். திருமணம் முடிந்த சில மாதங்களில் ஆர்தர் இறக்கவே, காதரைன், அரசனின் இளைய மகனை எட்டாம் ஹென்றியை மணந்தாள். ஏழாம் ஹென்றி தனது மகள் மார்கரெட்டை, ஸ்காட்லாந்து அரசன் நான்காம் ஜேம்ஸுக்கு மணம் செய்வித்தார். இது, இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் பிற்காலத்தில் இணைவதற்கு வழிகோலியது. இவ்வாறு அரச தந்திர அடிப்படையில் திருமண ஏற்பாடு செய்துகொண்டதன் மூலம் தம் செல்வாக்கையும், நாட்டின் மதிப்பையும் உயர்த்தினார். இவ்வாறு ஏழாம் ஹென்றியின் ஆட்சி மக்களால் விரும்பப்பட்ட, மக்களின் முழு ஆதரவு பெற்ற, வலிமை மிகுந்த ஒரு தேசிய

முடியாட்சியாக விளங்கியது. உள்நாட்டுப் போர்களை நிறுத்தி, அமைதியை நிலைநாட்டி, தொழில் வர்த்தகத் துறைகளில் வளர்ச்சிக்கு வாய்ப்புகளை ஏற்படுத்தியதால் ஏழாம் ஹென்றியின் ஆட்சி எல்லோராலும் வரவேற்கப்பட்டது. இவருடைய சந்ததியார்களான எட்டாம் ஹென்றி, எலிசபெத் ஆகியவர்கள் காலத்தில் இங்கிலாந்தின் புகழ் மேலும் உயர்ந்தது. எட்டாம் ஹென்றி, திருச்சபையை அரசன் கட்டுப்பாட்டிற்குள்ளாக்கி, போப்பின் ஆதிக்கத்தை ஒழித்தார். எலிசபெத் அரசி காலத்தில் இங்கிலாந்து எல்லாத் துறைகளிலும் வளர்ச்சி பெற்றதால், அக்காலம் இங்கிலாந்தின் பொற்காலமாகத் திகழ்ந்தது.

# 3. மறுமலர்ச்சி இயக்கம்

## (Renaissance)

இடைக்காலம் முடிந்து, நவீனகாலம் தொடங்கியது எந்த ஒரு குறிப்பிட்ட ஆண்டில் என்று அறுதியிட்டுக் கூறுவது இயலாது. ஏனெனில், இந்த மாற்றம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் நடந்த நிகழ்ச்சி அன்று. பல ஆண்டுகள் தொடர்ச்சியாக நிகழ்ந்து வந்த நிகழ்முறை. பதினைரும் நூற்ருண்டின் தொடக்கத்தில் ஐரோப்பாவின் நிலை இடைக்காலத்தினின்றும் முற்றிலும் மாறி, புதிய உருவத்தைப் பெறுவதைக் காண்கின்றோம். மேற்கு ஐரோப்பிய மக்களின் கண்ணேக்கு, புதிய முறையில் அமைந்திருப்பதையும், கலை, இலக்கியம் ஆகியவற்றில் புதிய உணர்வையும் காண்கின்றோம். திருச்சபையின் ஆதிக்கம் குன்றி, உலகியலில் மக்கள் ஈடுபாடு கொள்கின்றனர். உலகியலுக்கு ஒவ்வாத சமய போதனைகளுக்கும், திருச்சபைக்கும் எதிராக ஒரு புரட்சியை உருவாக்கும் நிலை இன்னும் ஏற்படவில்லை என்றாலும், திருச்சபையின் செல்வாக்கு மங்கி மறைவதைக் காண முடிகின்றது. இந்த உலகைப்பற்றியும், அதன் பலவகைப்பட்ட பிரச்னைகளைப் பற்றியும், வாழ்க்கையின் இன்பங்களைப் பற்றியுமே மக்கள் சிந்திக்கத் தொடங்குகிறார்கள். இந்தப் போக்கை ஊக்கி வளர்த்தவர்கள் நகரவாழ் மக்கள். இந்த மாற்றங்களுக்கெல்லாம் அடிப்படைக் காரணமாக அமைவது நகரங்களின் வளர்ச்சி. எனவே மறுமலர்ச்சி இயக்கத்தை ஒரு நகர இயக்கம்[1] (Urban Movement) என்று கூறுவது பொருந்தும். நிலமானிய முறை மறைந்து நிலப்பிரபுக்கள் ஆதிக்கம் ஒடுக்கப்பட்டு, தேசிய அரசுகளும் வலிமை மிக்க முடியாட்சிகளும் தோன்றுகின்றன. இந்த மாற்றங்களைத்தான் ஐரோப்பிய வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் தோன்றுவதின் அறிகுறி என்று நாம் கருதலாம்.

[1] 'The Renaissance was an essentially urban movement'.......Ferdinand Schevill—A History of Europe. page 27.

நவீனகால ஐரோப்பாவை இடைக்கால ஐரோப்பாவுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது கீழ்க்கண்ட வேறுபாடுகள் நன்கு புலனாகும்.

1. புனித ரோமானியப் பேரரசின் வீழ்ச்சி, இங்கிலாந்து, ஃபிரான்சு, ஸ்பெயின் ஆகிய நாடுகளில் தேசிய முடியாட்சிகளின் எழுச்சி,—இவற்றின் விளைவாக இடைக்காலத்தில் ஆதிக்கம் பெற்றிருந்த அனைத்து ஐரோப்பிய அரசு; அனைத்து ஐரோப்பிய அரசன் (Universal Empire) என்ற கொள்கைக்கு மாறாக, தேசிய அரசுகள் (National State), தேசிய முடியாட்சி என்னும் கொள்கை நவீனகால ஐரோப்பாவில் தோன்றுகின்றது.

2. நிலமானிய முறை மறைந்து, விவசாய அடிப்படையில் அமைந்திருந்த பொருளாதார வாழ்க்கை மாறி, தொழில் வர்த்தக அடிப்படையில் அமைந்த ஒரு புதிய பொருளாதார முறை தோன்றுகின்றது. தொழில், வர்த்தக வளர்ச்சியின் விளைவாக நகரங்கள் தோன்றி, அரசியல், பொருளாதார வாழ்க்கையில் அவை முக்கியத்துவம் பெறுகின்றன. நிலப் பிரபுக்களின் செல்வாக்கு மறைந்து பெரிய பெரிய வர்த்தகக் குடும்பங்கள் தோன்றுகின்றன. இதற்கு எடுத்துக் காட்டாக இத்தாலியில் தோன்றிய மெடிச்சி (Medici) குடும்பத்தைக் கூறலாம்.

3. தேசிய உணர்வின் வளர்ச்சியின் காரணமாகப் போப்பின் ஆதிக்கம் வெறுக்கப்பட்டது. ஐரோப்பா முழுமைக்கும் ஒரு திருச்சபை (Universal Church) என்ற நிலை மாறி ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு சுதந்திரமாக இயங்கும் திருச்சபை (National Church) என்ற நிலை ஏற்பட்டது.

4. இடைக்காலத்தில் மக்கள் எண்ணங்களும், செயல்களும் திருச்சபையின் கட்டுப்பாட்டில் இருந்தன. இடைக்காலத்தில் மக்கள், போப்பின் ஆணைகள், விவிலிய நூல் ஆகியவற்றில் அசையாத நம்பிக்கை கொண்டு (Age of Faith and Belief) அவற்றின்படியே நடந்து வந்தனர். ஆனால், நவீனகால ஐரோப்பாவில் மக்கள் சிந்திக்கத் தொடங்கிவிட்டனர். பகுத்தறிவு வளர ஆரம்பித்தது. பகுத்தறிவுக்கு ஒவ்வாத எதனையும் அவர்கள் ஏற்க மறுத்தனர். எனவே, நவீன காலத்தைப் பகுத்தறிவு வளர்ந்த காலம் (Age of Reason) என்று கூறுவது பொருந்தும். பகுத்தறிவு வலுப்பெற்ற காரணத்தினால்தான் ஐரோப்பாவில் சமயப் புரட்சியே தோன்றியது. திருச்சபையின் ஊழல்களையும், போப்பின் ஆதிக்கத்தையும் கண்டித்து எதிர்க்கும் அளவிற்கு மக்கள் துணிவு பெற்றனர்.

5. நிலமானிய முறையில் நிலப் பிரபுக்களின் ஆதிக்கம் பெருகி, மன்னர்களின் அதிகாரம் பெரிதும் பாதிக்கப்பட்டது. நவீன காலத்தில் இந் நிலை மாறி நிலப்பிரபுக்களின் அதிகாரம் ஒடுக்கப்பட்டு, வலிமையுள்ள முடியரசுகள் ஐரோப்பிய நாடுகளில் தோன்றின.' இம் மாறுதல்களை நாம் இங்கிலாந்து, ஃபிரான்சு, ஸ்பெயின் போன்ற நாடுகளில் காணலாம்.

6. இடைக்காலத்தில் பொருளாதாரத் துறையில் தொழில், வர்த்தக அலுவல்களைச் சங்கங்கள் (Guilds) ஏற்று நடத்தி வந்தன. இந் நிலை மாறி, நவீன காலத்தில் தொழில், வர்த்தக அலுவல்கள் தனியார்களால் கட்டுப்பாடுகள் ஏதுமின்றி நடத்தப் பட்டன. இது முதலாளித்துவம் (Capitalism) என்னும் கோட் பாடு வளருவதற்குக் காரணமாக அமைந்தது.

## மறுமலர்ச்சி

இடைக்காலத்தின் முடிவையும், நவீனகாலத் தொடக் கத்தையும் குறிக்கும் மறுமலர்ச்சி இயக்கத்தைப்பற்றி (Renais-sance) இங்கு ஆராய்வோம். பதினைந்து, பதினாறும் நூற்றாண்டு களில் மேற்கு ஐரோப்பிய மக்களின் கண்ணோக்கில் ஏற்பட்ட மாறுதல்களைக் குறிப்பதுதான் இந்த மறுமலர்ச்சி இயக்கம். இதன் விளைவாக ஐரோப்பிய மக்களின் வாழ்க்கை முறையிலும், அவர்களுடைய சிந்தனைகளிலும், செயல்களிலும் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. இதன் காரணமாகத்தான் வரலாற் றறிஞர்கள் இந்த மறுமலர்ச்சி இயக்கத்தின் அடிப்படையில் புதிய ஐரோப்பா உருவாகியது என்று கூறுகின்றனர்.

'Renaissance' என்ற ஆங்கிலச் சொல்லின் பொருள் 'மறு பிறப்பு'. இந்த மறுமலர்ச்சி இயக்கத்தை ஐரோப்பாவின் மறு பிறப்பு என்று வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர். ஏன் இதை 'மறுபிறப்பு', 'மறுமலர்ச்சி' என்ற சொற்களால் குறிக்கின்றார்கள்? கிறிஸ்துவுக்கு-முற்பட்ட காலத்திலிருந்தே கிரேக்க, இத்தாலிய நாடுகள் அறிவிலும், கலாசாரத்திலும் மேம்பாடடைந்திருந்தன. பிளேட்டோ (Plato), அரிஸ்டாடில்' (Aristotle) போன்ற தத்துவ மேதைகளும், ஹொராஸ் (Horace), வெர்ஜில் (Virgil) போன்ற இலக்கிய மேதைகளும் வாழ்ந்து, இலக்கியப் படைப்புகளை உலகிற்கு அளித்த காலம் அது. கிரேக்க, லத்தீன் மொழிகள், நல்ல வளர்ச்சி பெற்றிருந்தன. அறிவுக் கருவூலமாகவும், இலக்கியக் கலை வளர்ச்சியின் பிறப்பிடமாகவும் இருந்த கிரேக்க-ரோமானியக் கலாசாரம் இடைக்காலத்தில் புறக்கணிக்கப்

பட்டது. கிரேக்க, லத்தீன் மொழி இலக்கியங்களை மக்கள் கற்க வில்லை. ஆனால், நவீனகாலத்தில் ஐரோப்பிய மக்களிடையே இவ்விலக்கியங்களைக் கற்பதில் தனி ஆர்வமும், பண்டைய பண் பாட்டில் ஈடுபாடும் மீண்டும் ஏற்படுவதைக் காண்கின்றோம். பண்டைய கிரேக்க—ரோமானியப் பண்பாட்டின் உயர்வையும், பெருமையையும் மீண்டும் மக்கள் உணர ஆரம்பித்தனர். இதன் காரணமாகத்தான் இவ்வியக்கத்தை 'மறுமலர்ச்சி இயக்கம்' என்று வழங்குகின்றனர். கிரேக்க-ரோமானியப் பண்பாடு மீண்டும் புத்துயிர் பெறுகின்றது.

ஒரு குறுகிய கண்ணோக்கில் பார்க்கும்பொழுது மறுமலர்ச்சி இயக்கம் என்பது கிரேக்க, லத்தீன் மொழியிலிருந்த பண்டைய இலக்கியங்களை மீண்டும் கற்பதில் ஏற்பட்ட ஆர்வத்தைக் குறிக்கும் இக் கருத்தை ஏற்றுக்கொள்வது இந்த இயக்கத்தின் ஓர் அம்சத்திற்குமட்டும் முக்கியத்துவம் அளிப்பதாக ஆகும். இந்த இயக்கத்தின் முக்கிய அம்சம் கிரேக்க—ரோமானிய இலக் கியம், கலை, அறிவு ஆகியவற்றிற்குப் புத்துயிர் அளிப்பது என்பதை மறுக்க முடியாது. ஆனால், இந்த நூல்களைக் கற்றதன் விளைவாக இவ்வியக்கம் தோன்றியது என்பது பொருந்தாது. மாறாக, இவ் வியக்கம் தோன்றி மக்கள் புது உணர்வைப் பெற்றதன் விளைவாக இவ்விலக்கியங்களைப் பயில ஆரம்பித்தனர் என்று கூறலாம். பண்டைய கிரேக்க-ரோமானிய இலக்கியங்களைப் படித்ததால் மக்கள் விழிப்படைந்தார்கள் என்று கூறுவதற்குப் பதிலாக, மக்கள் தம் விழிப்புணர்வால் இந்த இலக்கியங்களைக் கற்க ஆர்வம் கொண்டார்கள் எனக் கருதுவது பொருந்தும். இந்த இயக்கத்தின் மற்ற கூறுகளையும் நாம் மறந்துவிடக்கூடாது.

இடைக்காலத்தில் மனிதனின் அறிவின்மீதும், சிந்தனைமீதும், சமயத்தின் பெயரால் சுமத்தப்பட்ட கட்டுப்பாடுகள், நவீன காலத்தில் தகர்த்தெறியப்பட்டன. இதன் விளைவாக மக்கள் பழைய கருத்துக்களையும் கொள்கைகளையும், பழக்க வழக்கங் களையும் கண்மூடித்தனமாக ஏற்றுக்கொண்டு வந்த நிலை மாறி எல்லாப் பிரச்சினைகளையும் திறனாய்வு நோக்கோடு ஆராய்ந்து அறியும் நிலை ஏற்பட்டது. மக்களுடைய எண்ணங்களிலும், செயல்களிலும் சுதந்திர உணர்வு ஏற்படுவதைக் காண்கிறோம். எதையுமே திறனாய்வுக் கண்ணோட்டத்தோடு ஆராய்ந்து, பகுத் தறிவுக்குப் பொருந்தாத கருத்துகளை மறுக்கும் துணிவை இடைக் கால மக்கள் பெற்றனர். இந்த உணர்வுதான் நவீனகால ஐரோப்பிய மக்களின் கண்ணோட்டம் மாறுவதற்கும், மனித வாழ்க்கையில் பல துறைகளிலும் ஏற்பட்ட பல மாறுதல்களுக்கும்

அடிப்படைக் காரணமாக அமைந்தது. இத் திறனாய்வு நோக்கு, உண்மையை உணரவேண்டும் என்ற ஆர்வம் ஆகியவற்றின் விளைவாகத்தான் இலக்கியத்துறையில் மட்டுமன்றி, விஞ்ஞானத்துறை, சமயத்துறைகளிலும் பெரிய பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. சமயத்துறையில் மாபெரும் புரட்சி ஏற்படுவதற்கே இந்த உணர்வு காரணமாக இருந்தது.

இதுகாறும் கூறியவற்றிலிருந்து இடைக்கால ஐரோப்பாவில் அறிவியல் வாழ்வு மங்கியிருந்தது என்று நாம் எண்ணத் தோன்றுகின்றது. இது உண்மை அன்று. ஏனெனில், இடைக்காலத்திலேயே பல அறிஞர்கள் கிரேக்க—லத்தீன் இலக்கியங்களைப் படித்து வந்தனர். எடுத்துக் காட்டாகப் பதின்மூன்றும் நூற்றாண்டில் வாழ்ந்த தாமஸ் அக்வினஸ் (Thomas Aquinas), கிரேக்க அறிஞர்களான அரிஸ்டாடில் (Aristotle), ஹோமர் (Homer) ஆகியவர்களுடைய நூல்களை நன்கு கற்றறிந்தவர். எனினும் திருச்சபையில் அசையாத நம்பிக்கை கொண்டிருந்த இடைக்கால அறிஞர்கள், கிரேக்க இலக்கியங்களில் பொதிந்து கிடக்கும் கருத்துகள், சமயச்சார்புள்ள இலக்கியங்களில் காணப்படும் கருத்துகளைவிடத் தரத்தில் குறைந்தவை என்றே கருதினார்கள். இடைக்கால அறிஞர் குழாத்தைச் சேர்ந்த மற்றோர் அறிஞர் தாந்தே (Dante) கிரேக்க இலக்கியங்களை நன்கு கற்றறிந்தவர். கிரேக்கர்கள் அறிவியலில் மேம்பட்டவர்கள் என்ற கருத்துடையவர் அவர். ஏதன்ஸ் (Athens) நகரம்தான் எல்லா அறிவிற்கும் பிறப்பிடம் என்று அவர் கருதியவர். பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த பெட்ரார்க் (Petrarch) என்ற அறிஞரும் லத்தீன், கிரேக்க இலக்கியங்களில் ஈடுபாடு காட்டி ஐரோப்பாவில் அவற்றை மக்கள் கற்பதற்கான சூழ்நிலையை உருவாக்கினார். வெர்ஜில் (Virgil), ஹொராஸ் (Horace), லிவி (Livy), சிசரோ (Cicero) போன்றவர்களின் அழியாப் புகழ் பெற்ற நூல்களையும், கிரேக்க மேதைகளின் அறிவுக் கருவூலங்களையும் இடைக்கால ஐரோப்பிய மக்கள் அறிந்து கொள்ளும் வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்தவர் பெட்ரார்க் (Petrarch) என்றால் அது மிகையாகாது. இவரைப் பண்டைய இலக்கிய மறுமலர்ச்சியின் தந்தை என்று கூறுவது சாலப் பொருந்தும். (Father of ancient classical learning). இவருடைய மாணவர் தாம் பொக்காஷியோ (Boccacio). கிரேக்க இலக்கியத்தில் ஆர்வம் ஏற்படுவதற்கு முக்கிய காரணமாக இருந்தவர் பொக்காஷியோ. இந்த அறிஞர்களின் முயற்சியின் விளைவாகப் பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் இத்தாலியப் பல்கலைக் கழகங்கள் பலவற்றிலும் கிரேக்க இலக்கியங்கள் கற்பிக்கப்பட்டன. பின்னர்

மேற்கு ஐரோப்பாவிலும் இந்த ஆர்வம் பரவியது. எனவே, பண்டைய கிரேக்க—லத்தீன் இலக்கியங்களின் செல்வாக்கை இடைக்கால ஐரோப்பாவிலேயே நாம் காணமுடிகின்றது. பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட இலக்கிய மறு மலர்ச்சியை இடைக்காலத்தில் ஏற்பட்ட இலக்கிய வளர்ச்சியின் தொடர்ச்சியே எனக் கருதலாம்.

இடைக்காலத்தில் திருச்சபையின் ஆதிக்கம் மேலோங்கி இருந்தது. மக்கள் எண்ணங்களும் செயல்களும் சமயத்தால் வரையறுக்கப்பட்டிருந்தன. ஆகவே, இலக்கியமும், கலைகளும். சமயநோக்கு உடையனவாக இருந்தன. மக்கள் இவ்வுலகையும், மானிட வாழ்க்கையைப் பற்றியும், மனிதனின் அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளைப் பற்றியும் சிந்திக்கவில்லை. கடவுளைப் பற்றியும், மறு உலகைப் பற்றியுமே அவர்கள் சிந்தனை இருந்தது. இடைக்கால இலக்கியப் படைப்புகளிலும், கலைப் படைப்பு களிலும், இந்தப் போக்கை நாம் எளிதில் காணமுடிகின்றது. இடைக்காலத்தின் இறுதியில் திருச்சபையின் செல்வாக்கு மறையத் தொடங்கியவுடன், இந்தச் சமயநோக்கும் மறைந்தது. தற்காலத் தொடக்கத்தில் தோன்றிய இலக்கியப் படைப்புகள், உலகியலின் அடிப்படையில் எழுதப்பட்டவை. மனிதனைப் பற்றியும், அவனுடைய அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளைப் பற்றியும் கூறுவனவாக அவை அமைந்தன. இலக்கியத் துறையில் ஏற்பட்ட இந்த மாறுதலைத்தான் வரலாற்றறிஞர்கள் மனிதாபிமான இயக்கம் (Humanism) என்றும், இக் கருத்துகளை ஒட்டி எழுதப் பட்ட நூல்களை உலகியலை ஒட்டிய நூல்கள் (Humane literature) என்றும் குறிப்பிடுகின்றனர்கள். பண்டைய கிரேக்க-லத்தீன் மொழி இலக்கியங்கள் உலகியலை ஒட்டி இருந்ததால், அவற்றைக் கற்பதிலும், அவற்றில் பொதிந்து கிடக்கும் கருத்துகளை மக்களிடையே பரப்புவதிலும் ஒரு தனி ஆர்வம் ஏற்பட்டதுடன், பண்டைய இலக்கியங்களுக்குத் தனி மதிப்பும் ஏற்பட்டது. இந்தப் புது அறிவைப் (New Learning) பரப்பும் பணியைப் பல பிரபுக்களும், சிற்றரசர்களும் ஆதரித்தார்கள். பல அறிஞர்கள் இந்தப் பணியில் ஈடுபட்டார்கள். ஐந்தாம் நிக்கோலஸ் (Nicholas V, 1447–1455), பத்தாம் லியோ (Leo X, 1513–1521) போன்ற போப்புகள் கூட இந்தப் புது அறிவைப் பரப்புவதில் ஈடுபாடு கொண்டார்கள். இடைக்காலத்திலிருந்து நவீன காலத்திற்கு மாற்றம் ஏற்பட்டபொழுது பண்டைய கிரேக்க-ரோமானியக் கலாசாரம் ஐரோப்பியர்களைப் பல வகையிலும் ஊக்குவித்தது. பண்டைய இலக்கிய, கலை, தத்துவ அறிவை மேற்கு ஐரோப்பிய மக்கள் பெற்றிருந்த போதிலும், அது சமய

உணர்வால் பாதிக்கப்பட்டிருந்தது. கிரேக்க — ரோமானிய அறிஞர்கள் அறநெறி உண்மைகளைப் போதித்ததால், அவர்கள் பெரிதும் போற்றப்பட்டார்கள். அரிஸ்டாட்டிலின் அளவை இயல், சமயத் தத்துவங்களையும் சமயக் கோட்பாடுகளையும் வலுப் படுத்திக்கொள்ளப் பயன்படுத்தப்பட்டது. கிரேக்க-ரோமானியர் களின் நூல்களில் தங்கள் கருத்துகளை உறுதிப்படுத்தும் வகையில் அமைந்த பல விஞ்ஞான ஊகங்களை இடைக்கால அறிஞர்கள் கண்டார்கள். ஆனால், பதினைம் நூற்றாண்டில் கிறிஸ்துவ உலகத் தவர்கள், சமய அறநெறிச் சிறப்பு மிக்கவை என்ற காரணத் திற்காக அல்லாமல், இனிமையானவையாகவும், சிந்தனையைத் தூண்டும் வகையிலும் அமைந்திருந்தன என்பதற்காகவும் பண்டைய இலக்கியங்களை ஆர்வத்தோடு கற்க ஆரம்பித்தார்கள். இதைத்தான் ஐரோப்பிய வரலாற்றறிஞர்கள் பண்டைய கலா சாரங்கள் புத்துயிர் பெறுதல் என்றும், பண்டைய இலக்கியங் களின் மறுமலர்ச்சி என்றும் பலவாறாகக் கூறுகின்றனர்[1]. இந்த உலகியலை ஒட்டிய அறிவு வளர்ச்சியினால் சில தீமைகளும் ஏற்பட்டன. மனிதனின் சிந்தனைமீது இதுகாறும் விதிக்கப் பட்டிருந்த கட்டுப்பாடுகள் தகர்த்தெறியப்பட்டதன் விளைவாக அறநெறிக் கோட்பாடுகள் புறக்கணிக்கப்பட்டன. வன்முறைச் செயல்கள் பெரிதும் போற்றப்பட்டன. இப்போக்கின் பிரதி பலிப்பை நாம் மாக்கியவெல்லி (Machiavelli) போன்ற அறிஞர் களின் நூல்களில் காண்கின்றோம்.

மறுமலர்ச்சி இயக்கத்தின் பிறப்பிடமே இத்தாலி என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். இத்தாலியைப் புதிய ஐரோப் பாவின் அறிவுக்கூடம் என்று அறிஞர்கள் கருதுகின்றார்கள் (School of New Europe). பண்டைய இலக்கியங்களை மீண்டும் கற்கும் ஆர்வம் முதன்முதல் இங்குதான் தோன்றியது. பதினைம் நூற்றாண்டின் முற்பகுதியில் பண்டைய இலக்கிய ஆர்வம் உச்ச நிலையை அடைந்தது. இத்தாலியில் தோன்றிய மறுமலர்ச்சி பாமரமக்கள் இயக்கமாக இல்லாமல் சமூகத்தில் வரப்பிரசாதமும், ஆக்க சக்தியும் பெற்ற ஒரு சிறு பிரிவினரின் சாதனையாக அமைந்தது என்று ஃபிஷர் (H.A.L. Fisher) என்னும் ஆசிரியர் கருதுகின்றார்.[2] இந்த இயக்கம், குறிப்பாக இலக்கிய மறுமலர்ச்சி, ஏன் இத்தாலியில் தோன்றியது என்பதை நாம் ஆராயவேண்டும். முதலாவதாக, பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே கான்ஸ்டான்டிநோபிள் நகரத்தில் வாழ்ந்த கிரேக்க அறிஞர்கள்

[1] Europe to 1870—Carlton. J. H. Hayes. page 97

[2] History of Europe-H.A.L. Fisher. page 455

பலர் இத்தாலியை வந்தடைந்தனர். இத்தாலிய வணிகர்கள் கிழக்கத்திய ரோமானியப் பேரரசுடன் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தனர். இந்த வணிகர்களைத் தொடர்ந்து கிரேக்க அறிஞர்களும் இத்தாலியை அடைந்தனர். கி.பி. 1453-ல் கான்ஸ்டான்டிநோபிள் நகரம் ஆட்டமான் துருக்கியர்களால் (Ottomon Turks) கைப்பற்றப்பட்டவுடன், துருக்கியர்களின் ஆட்சியில் தங்களுக்கு ஆதரவு கிடைக்காது என்று அச்சம் கொண்டு, மேலும் பல கிரேக்க அறிஞர்கள் மேற்கு நோக்கிவந்து இத்தாலியில் சரண் புகுந்தனர். இந்த அறிஞர்கள்தாம் பண்டைக் கிரேக்க-ரோமானிய அறிவு ஐரோப்பாவில் பரவுவதற்குக் காரண மாக இருந்தனர் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது.

இரண்டாவதாக, இத்தாலியில் அப்பொழுது மிலான் (Milan), வெனிஸ் (Venice), ஜினேவா (Genoa), போன்ற நகரங் களில் செல்வம் மிக்க நகர அரசுகள் திகழ்ந்து வந்தன. இவற்றை ஆண்ட மெடிச்சி போன்ற வல்லரசர் குடும்பங்கள் இலக்கிய, கலை வளர்ச்சியில் மிகவும் ஈடுபாடு கொண்டு ஆதரவு அளித்தனர். கிழக்கத்திய ரோமானியப் பேரரசிலிருந்து வந்த கிரேக்க அறிஞர்களை இவர்கள் வரவேற்று ஆதரவு அளித்தனர். இவர்கள் ஆதரவில் கிரேக்க இலக்கியம், கலை ஆகியவை வளர்ச்சியுற்றன. இந்த நகர அரசுகளில்தான் இலக்கிய, கலை வளர்ச்சிக்குச் சாதக மான சூழ்நிலை நிலவியது. செல்வத்தில் திளைத்திருந்த அரசர் களுக்கும், பிரபுக்களுக்கும் கலாசார வளர்ச்சியைப் போற்ற வேண்டுமென்ற எண்ணமும் ஆர்வமும் இருந்தது. இதன் காரண மாகத்தான் இலக்கிய, கலை வளர்ச்சியில் மற்ற ஐரோப்பிய நாடு களுக்கு இத்தாலி எடுத்துக்காட்டாக விளங்கியது.

மூன்றாவதாக, இத்தாலி பண்டைய மொழியான லத்தீன் மொழியின் தாயகம். மேலும் பண்டைய கிரேக்க-ரோமானியக் கலாசாரத்தைப் போற்றி வளர்த்ததும் ரோமானியப் பேரரசு தான். எனவே, மற்ற ஐரோப்பிய நாடுகளைவிட இத்தாலியில் தான் இந்த மறுமலர்ச்சி இயக்கம் ஆக்கம் பெறுவதற்குச் சாதக மான சூழ்நிலை அமைந்திருந்தது. இத்தாலி, மத்தியதரைக் கடல் பகுதியின் மையத்தில் அமைந்திருந்த நிலையும், இடைக்கால உலகின் மையமாக அமைந்திருந்த நிலையும் இந்த இயக்கம் இங்குத் தோன்றுவதற்கு உதவியாக இருந்தது.

நான்காவதாக, இத்தாலியில் திருச்சபையின் ஆதிக்கம் குறையத் தலைபட்டது. சமயநெறியிலும், அறநெறியிலும் வீழ்ச்சி ஏற்பட்டது. இத்தாலியில் தோன்றிய தத்துவ அறிஞர்கள் சமயக் கோட்பாடுகளை மறுத்தனர். இந்த இயக்கத்தைத் திருச்

சபை கண்டித்து ஒடுக்கியிருக்குமானால் இது வெற்றி அடைந்திருக்க முடியாது. மாறாக, திருச்சபை இதை அசட்டை செய்தது. இந்த இயக்கத்தின் தந்தைகள் எனக் கருதப்படும் பெட்ரார்க் (Petrarch), பொக்காஷியோ (Boccacio), மாக்கியவெல்லி (Machiavelli) போன்றவர்கள் கிறிஸ்துவ சமய நெறிகளையும், கோட்பாடுகளையும் கண்டித்த போதிலும் கிறிஸ்துவ சமயத்தை நேரடியாகத் தாக்கவில்லை. ஆகவே, திருச்சபை இவர்களை ஒன்றும் செய்ய முடியவில்லை.

மறுமலர்ச்சி இயக்கம் இத்தாலியில் அறிவு, கலை வளர்ச்சியோடு மட்டும் நின்றுவிட்டது. ஜெர்மெனியில் கலை வளர்ச்சியைக் காட்டிலும் அறிவு வளர்ச்சி அதிகம் ஏற்பட்டது. இந்த அறிவு வளர்ச்சிதான் சமயச் சீர்திருத்த இயக்கம் அங்குத் தோன்றக் காரணமாக இருந்தது. ஃபிரான்சில் இலக்கியத் துறையிலும், இங்கிலாந்தில் இலக்கிய, சமயத் துறைகளிலும் மறுமலர்ச்சி ஏற்பட்டது.

\இந்த மறுமலர்ச்சி இயக்கம் மக்களிடையே ஒரு விழிப்பை ஏற்படுத்தி, எல்லாப் பிரச்னைகளையும் விருப்பு வெறுப்பின்றித் திறனாய்வு நோக்குடனும், உண்மையை அறியவேண்டும் என்னும் நோக்குடனும் ஆராயவேண்டும்\ என்ற புது உணர்வை ஏற்படுத்தியது என்பதை முன்பு கூறியுள்ளோம். இந்தப் புதிய மறுமலர்சி உணர்வு (Renaissance Spirit) வாழ்க்கையின் வெவ்வேறு துறைகளில் எவ்வாறு செயல்பட்டது என்பதை இப் பகுதியில் ஆராய்வோம்.

1. இலக்கியத்துறை

இலக்கிய மறுமலர்ச்சிக்குப் பிறப்பிடமாக இருந்தது இத்தாலி. இடைக்காலத்தில் சமயத்தின் செல்வாக்கு காரணமாக மனிதனின் எண்ணங்களெல்லாம் மறு உலகத்தைப் பற்றியனவாக அமைந்திருந்தன. இதன் பிரதிபலிப்பைச் சமயச்சார்புள்ள அக் கால இலக்கியங்களில் காணமுடிகின்றது. ஆனால், பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் தோன்றிய நூல்கள் உலகியல் சார்புள்ளவையாகவும், மனிதனைப்பற்றியும், இந்த உலகத்தைப் பற்றியும் கூறும் நூல்களாகவும் அமைந்தன. புற உலகின் அழகையும், இனிமையையும், கண்டுணர்ந்த ஐரோப்பியர்களில் முதலாவதாகத் திகழ்பவர்கள் இத்தாலியர்களே. ஆண், பெண்களின் புற அழகை வருணிப்பதிலும், கிராம, நகர வாழ்க்கையின் அன்றாட நிகழ்ச்சிகளை வருணிப்பதிலும் இக் கால எழுத்தாளர்கள் காட்டிய ஆர்வம், இவ்வியக்கம் மனிதனுக்கும், புற உலகிற்கும்

எவ்வளவு முக்கியத்துவம் அளித்தது என்பதை நன்கு புலப்படுத்தும். ஹோமர் (Homer), ஸெனோபன் (Xenophon), பிளேட்டோ (Plato) போன்ற கிரேக்க அறிஞர்களின் நூல்களும், சீசர் (Cæsar), சிசரோ (Cicero), வெர்ஜில் (Virgil), லிவி (Livy), டேஸிடஸ் (Tacitus) போன்ற அறிஞர்களால் எழுதப்பட்ட லத்தீன் மொழி நூல்களும் ஐரோப்பாவெங்கும் ஆர்வத்தோடு படிக்கப்பட்டன. கிரேக்க—லத்தீன் மொழிகளில் ஈடுபாடு ஏற்பட்டபோதிலும், நாட்டு மொழிகள் (Vernaculars) நசித்து விடவில்லை. அவை ஆக்கம் பெற்று வளரலாயின. இவ் வளர்ச்சியில் நகரமக்கள் அக்கறை காட்டினர். இதன் விளைவாக ஃபிரெஞ்சு, இத்தாலி, ஸ்பானிஷ், ஆங்கிலம், ஜெர்மன் ஆகிய பிராந்திய மொழிகள் பெரிதும் வளர்ச்சி பெற்றன. லத்தீன் மொழியின் மீது இருந்த மோகம் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. வெவ்வேறு மொழிகளில் பல அறிஞர்களால் அரிய பல நூல்கள் எழுதப்பட்டன. இந்த இலக்கிய மேதைகளின் இலக்கியப் படைப்புகளுக்கு எடுத்துக் காட்டாக இங்குச் சில வற்றைக் கூறலாம்.

இத்தாலியில் ஃபிளாரன்ஸ் நகரம் (Florence) இலக்கிய மறுமலர்ச்சியை வளர்ப்பதில் முன்னணியில் நின்றது. அறிஞர்கள் பலர் ஒன்றுகூடி வாழ்ந்த நகரம் அது. ஐரோப்பாவின் அறிவு, கலை வளர்ச்சிக்கு மையமாக அது விளங்கியது. பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த தாந்தே (Dante), பெட்ரார்க் (Petrarch), பொக்காஷியோ (Boccacio), மானுவல் கிரிசோலோரஸ் (Manual Chrysolorus) போன்ற அறிஞர்களை இந்த மறுமலர்ச்சியின் முன்னோடிகள் என்று கூறலாம். இவர்கள் கிரேக்க, லத்தீன் மொழிகளில் மக்களுக்கு அதிக ஆர்வத்தைத் தூண்டிவிட்டனர். இவர்களின் பெரு முயற்சியால் ஐரோப்பாவில் இம் மொழிகள் மிக்க செல்வாக்கு பெற்றன. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த லியானார்டோ புருனி (Leonardo Bruni), போக்கியோ பிராசியோலினி (Poggio Bracciolini) போன்ற அறிஞர்கள் உலகியல் சார்ந்த பல நூல்களை எழுதினர். மொழியியல், வரலாறு போன்ற துறைகளிலும், பல நூல்களை எழுதினர். மனிதாபிமான வாதிகளான விட்டோரினோ (Vittorino), குவாரினோ (Guarino) போன்றவர்கள் உலகியல் அறிவை மக்களுக்குக் கற்பிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர். 'லொரன்சோ வால்டா' (Lorenzo Valda) என்பவர் இதே நூற்றாண்டில் இத்தாலியில் தோன்றிய வரலாற்றறிஞர். அடுத்த நூற்றாண்டில் பிளாரன்ஸ் நகரில் வாழ்ந்த இரு தலைசிறந்த வரலாற்றறிஞர்கள் 'குய்சியார்டினி' (Guicciardini), 'மாக்கியவெல்லி' (Machiavili) என்பவர்களாவர். 'இத்தாலியின்

வரலாறு' என்ற நூலை எழுதியவர் முன்னவர். 'ஃபிளாரன்சின் வரலாறு' என்ற நூலையும், 'இளவரசர்' (The Prince) என்ற நூலையும் மாக்கியவெல்லி ஆக்கினார். வரலாற்றை விருப்பு வெறுப்பின்றி விஞ்ஞானக் கண்ணோக்கோடு, உண்மையின் அடிப் படையில் எழுதவேண்டும் என்ற போக்கை ஏற்படுத்தி அதற்கு ஊக்கம் அளித்தவர்கள் இந்த ஃபிளாரன்ஸ் நகரத்து வரலாற்றறி ஞர்கள். ஃபிளாரன்ஸ் நகரில் போப்பாண்டவரின் தூதுவராகப் பணியாற்றிய கார்டினல் 'ஜான் பெசாரியன்' (John Bessarian) பண்டைய கிரேக்க நூல்களின் பிரதிகளைச் சேகரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். 'ஐந்தாம் நிக்கோலஸ்' (Nicholas V) என்னும் போப், வாடிகன் நூல் நிலையத்தை நிறுவினார். ஃபிளாரன்ஸ் நகரில் பிளேட்டோவின் (Plato) தத்துவ ஆராய்ச்சியை ஊக்கு விப்பதற்காக 'Platonic Academy' என்ற ஆராய்ச்சிக்கூடம் 'காசிமோ-டி-மெடிச்சி' (Cosimo-de-Medicci) என்ற பிரபுவால் நிறுவப்பட்டது. இத்துறையில் ஈடுபட்டிருந்த மற்றொரு அறிஞர் ஃபில்லெல்ஃபோ (Fillelfo). இதேபோன்று லத்தீன் மொழி இலக்கியங்களை உயிர்ப்பித்து மீண்டும் அவற்றை ஐரோப்பாவில் பரப்பும் பணியில் ஈடுபட்டன, ரோம் நகரிலும், நேப்பிள்ஸிலும் நிறுவப்பட்ட 'Roman Academy' 'Neopolitan Academy' ஆகிய ஆராய்ச்சிக்கூடங்கள்.

கிரேக்க இலக்கியங்கள் மீண்டும் படிக்கப்பட்டதால் ஒப்புமை, திறனாய்வு, ஆராய்ச்சி மனப்பான்மை ஆகியவை மக்க ளிடையே வளர்ந்தன. இலக்கியத்திலும், கலையிலும் பொதிந்து கிடக்கும் வனப்பை மக்களுக்கு மீண்டும் உணர்த்தியதோடு மட்டுமின்றி, விஞ்ஞானம் வளர்வதற்கும் இவை உதவின. அரிஸ்டாடில் போன்ற அறிஞர்களின் நூல்களுக்கு ஆதார பூர்வ மான மொழிபெயர்ப்புகள் எழுதப்பட்டன. கிரேக்க நூல்கள் பல அச்சிடப்பட்டதன் விளைவாக கிரேக்க அறிவு வேகமாகப் பரவுவது சாத்தியமாயிற்று. இதேபோன்று லத்தீன் மொழியும் புத்துயிர் பெற்றது. சிசரோ போன்ற அறிஞர்களின் பாணியில் புது நூல்கள் எழுதப்பட்டன. 'லியானார்டோ புருனி' (Leonordo Bruni), 'கார்லோ மார்சுப்பினி' (Carlo Marsuppini), 'போக்கியோ' (Poggio) ஆகியவர்கள் லத்தீன் மொழியில் தேர்ச்சி பெற்றவர்கள். லத்தீன் மட்டுமன்றி மற்றப் பிராந்திய மொழி களும் இத்தாலியில் ஆக்கம் பெற்றன. இத்தாலிய அறிஞரான 'தாந்தே' (Dante) இதற்கு வழிகாட்டியாக இருந்தார். 'பொக்காஷியோ' (Boccacio), 'பாலிடியன்' (Politian), 'லொரன்சோ' (Lorenzo), 'அரியஸ்டோ' (Ariosto), 'டாஸோ' (Tasso) போன்ற அறிஞர்கள் இத்தாலிய மொழிகளில் நவீனங்கள்,

நாடக, உரைநடை நூல்களை எழுதினார்கள். 'தாந்தே'யின் 'Divine Comedy', பொக்காஷியோவின் 'டெக்காமரான்' (Decameron), 'மாக்கியாவெலி'யின் 'The Prince' போன்ற நூல்களை இங்கு குறிப்பிடலாம். இந்தச் சூழ்நிலையில் அறிஞர்கள் மக்களின் கவனத்தைக் கவர ஆரம்பித்தனர். அரசர்களையும், படை வீரர்களையும், அவர்கள் சாதனைகளையும் பற்றியே வியந்து கொண்டிருந்த உலகம், இப்பொழுது கலாசார வளர்ச்சிக்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கும் அறிஞர்களின் பக்கம் தன் பார்வையைத் திருப்பியது. அவர்களுடைய பணிகளையும் சாதனைகளையும் அறிந்துகொள்ள ஆர்வம் காட்டியது.

இந்தக் காலத்தில் ஐரோப்பாவின் மற்ற நாடுகளில் ஏற்பட்ட இலக்கிய மறுமலர்ச்சியை இங்கு சுருக்கமாக ஆராயலாம். ஜெர்மனியில் இலக்கிய மறுமலர்ச்சிக்குக் காரணமாக இருந்தவர் ஜான் ரூஷ்லின் (John Reuchlin) என்னும் அறிஞர், ஹீப்ரு மொழியை நன்கு கற்றறிந்தவர். இவர்தான் முதன்முதலில் விவிலியத்தை விமர்சித்துத் திறனாயும் பணியில் ஈடுபட்டவர். மனிதாபிமான இயக்கத்தின் ஆதரவாளர். பெல்ஜியம் நாட்டைச் சேர்ந்த 'எராஸ்மஸ்' (Erasmus) (ராட்டர்டாம் நகரில் பிறந்தவர்) என்ற அறிஞர் 'கேம்பிரிட்ஜி பல்கலைக்கழகத்தில்' (Cambridge University) சமயத்துறைப் பேராசிரியராகப் பணியாற்றினார். 'பொய்ம்மைப் புகழ்ச்சி' (The Praise of Folly) என்னும் நூலில் அக்காலச் சமுதாயத்தில் காணப்பட்ட குறைகளைச் சாடுகிறார். சமயத் துறவிகளும், போப்பாண்டவர்களும் வாழ்ந்த ஆடம்பர வாழ்க்கையையும், திருச்சபையின் ஊழல்களையும் வெளிப்படுத்தி வெகுவாகக் கண்டித்தார். கிரேக்க மொழியிலிருந்த 'புதிய ஏற்பாட்டைத்' (New Testament) திருத்தி வெளியிட்டார். இவரும் 'புதிய ஏற்பாட்டைத்' திறனாயும் பணியில் ஈடுபட்டார். ஜெர்மனியில் இப்புதிய அறிவு பரவுவதற்குக் காரணமாக இருந்த மற்றோர் அறிஞரான 'மெலங்க்தன்' (Melanchthon) என்பவர் கிரேக்க—லத்தீன் மொழிகளில் பல நூல்களை எழுதினார்.

ஜெர்மனியில், மறுமலர்ச்சி தொடக்கம் முதற்கொண்டே சமயத்தைச் சார்ந்ததாக இருந்துவந்தது. இத்தாலியில் இருந்தது போன்று இலக்கிய வளர்ச்சிக்கு ஜெர்மனியில் அவ்வளவு முக்கியத்துவம் இருக்கவில்லை. பழைய ஏற்பாடுகளையும், பழைய அமைப்புகளையும், திருச்சபையையும், மக்களால் நீண்டகாலமாக ஒத்துக்கொள்ளப்பட்ட உண்மைகளையும் ஜெர்மானிய அறிஞர்கள் மறுக்க ஆரம்பித்தனர். இலக்கிய, தத்துவத் துறைகளைவிட சமயத்துறையைச் சார்ந்து இருந்ததாலும், விவிலியத்திற்கு

விளக்கம் கொடுக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் இருந்ததாலும் ஜெர்மனியில் மறுமலர்ச்சி இயக்கம் சமயச் சீர்திருத்தத்திற்கு வழிகோலியது.

பதினைந்தாம் நூற்றுண்டில் ஃபிரான்ஸ் நூறுண்டுப் போரில் ஈடுபட்டிருந்ததாலும், உள்நாட்டுப் போர்களால் பிளவு பட்டிருந்ததாலும், இத்தாலி, ஜெர்மன் நாடுகளைப்போன்று இங்கு மறுமலர்ச்சி இயக்கம் ஆக்கம் பெறுவதற்கான வாய்ப்புகள் அவ்வளவாக இருக்கவில்லை. ஆகவே, மறுமலர்ச்சி இயக்கத்தின் செல்வாக்கை ஃபிரான்சில் ஓரளவுக்குத்தான் நாம் காண முடிகிறது. இலக்கியத்துறையில் இத்தாலி, ஜெர்மன் நாடுகளைப் போல இங்கு பெரிய சாதனைகள் ஒன்றும் இல்லை. பாரிஸ் பல்கலைக்கழகம் மறுமலர்ச்சி இயக்கம் தோன்ற ஓரளவுக்கு உதவியாக இருந்தது. ஃபிரெஞ்சு எழுத்தாளர்களான 'ஃபிராங்கா ராபலே' (Francois Rabelais) என்பவரும் மான்டெய்ன் (Montaigne) என்பவரும், ஃபிரான்சில் மறுமலர்ச்சி இலக்கியத்தின் பிரதிநிதிகள். 'ராபலே' (Rabelais) என்பவர் தன்னுடைய 'Chronicles of Gargantua' என்ற நூலில் அக்காலத்து மூட நம்பிக்கைகளையும், மக்களின் ஆடம்பர வாழ்க்கையையும் நையாண்டி செய்கிறார். 'மான்டெய்ன்' (Montaigne) என்பவர் கட்டுரைகள்மூலம் சமயப் பொறையைப் போதித்தார். 'ரோன்சார்டு' (Ronsard), 'ஃபிராங்கா வில்லோ' (Francois Villon), 'ஆர்லியன் நகரத்து சார்லஸ்' (Charles of Orleans) என்ற கவிஞர்களும், 'பிலிப்-தெ-கம்மின்ஸ்' (Phillip-de-Commines) என்ற உரைநடை ஆசிரியரும் இக்காலத்தில் வாழ்ந்த மற்ற அறிஞர்கள். பதினாறு, பதினேழாம் நூற்றுண்டுகளில் வாழ்ந்த 'தெ-கார்த்தஸ்' (Des-Cartes) என்ற தத்துவ அறிஞர் எதையுமே நிரூபணத்திற்குப் பிறகுதான் உண்மை என்று ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற மறுமலர்ச்சி இயக்க அடிப்படைக் கருத்தை 'Meditations' என்ற தன்னுடைய நூலில் கூறுகின்றார்.

இங்கிலாந்திலும் இந்த இலக்கிய மறுமலர்ச்சி பதினைந்து, பதினாறும் நூற்றுண்டுகளில் ஏற்பட்டது. ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்

[1] "The German Renaissance won its way by conflict with old institutions and old modes of thought; by opposition to the church and to long accepted dogmas; It was more theological and less philosophic than the Italian; Its main task was the elucidation of the Bible and it had a strong moral purpose. There was therefore a strong connection between German Renaissance and the Reformation."

William Edwards—Notes on European History, Vol. II, page 107.

கழகத்தில் (Oxford University) மாணவராக இருக்கும்போதே 'சர் தாமஸ் மூர்' (Sir Thomas More) மறுமலர்ச்சி இயக்கத்தின் செல்வாக்குக்குள்ளானுர். ஏராஸ்மசுடைய (Erasmus) நெருங்கிய நண்பரான இவர் 'யுடோபியா' (Utopia) என்னும் நூலை லத்தீன் மொழியில் இயற்றினுர். ஓர் இலட்சிய சமூகம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை அவர் இந்நூலில் மிக அழகாகச் சித்தரித்துக் காட்டியிருக்கின்ருர். 'ஆங்கில இலக்கியத்தின் பொற்காலம்' என்று கருதப்படும் முதலாம் எலிசபெத் அரசியின் (Queen Elizabeth I, 1558–1603) காலத்தில்தான் ஆங்கில மொழியில் பல நூல்கள் எழுதப்பட்டன. 'ஷேக்ஸ்பியர்' (Shakespeare), 'மார்லோ' (Marlow), 'வெப்ஸ்டர்' (Webster) போன்ற நாடக ஆசிரியர்களும், 'ஸ்பென்சர்' (Spencer), 'மில்டன்' (Milton), 'சிட்னி' (Sidney), 'பென் ஜான்ஸன்' (Ben Johnson) போன்ற சிறந்த கவிஞர்களும் வாழ்ந்த காலம் அது. இவர்களுடைய ஆர்வம் காரணமாக இலக்கிய மறுமலர்ச்சி இங்கிலாந்தில் வெகுவிரைவாக வளர்ந்தது. 'ரோஜா மலர்ப் போரில்' (Wars of the Roses) நிலமானியப் பிரபுக்கள் அழிக்கப்பட்டு, வலிமைமிக்க முடியாட்சி 'டியூடர்கள்' (Tudors) காலத்தில் ஏற்படுத்தப்பட்டது அறிவு வளர்ச்சிக்குச் சாதகமான சூழ்நிலையை உறுவாக்கியது.

ஸ்பெயின் நாட்டிலும் இதுபோன்ற புதுமை எழுத்தாளர்கள் தோன்றினுர்கள். 'டான் குவிக்சாட்' (Don Quixote) என்னும் நூலை எழுதிய 'செர்வான்டிஸ்' (Cervantes) என்பவரும் லோப்-தெ-வெகெ' (Lope-de-Vege, 1562-1635) என்பவரும் அக் காலத்தில் வாழ்ந்த அறிஞர்கள்.

'மார்டின் லூதர்' (Martin Luther, 1483–1546) விவிலிய நூலை மிகவும் இனிய முறையில் ஜெர்மன் மொழியில் மொழிபெயர்த் தார். சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்றியபோது பல நாடு களிலும் சீர்திருத்தவாதிகள் தத்தம் நாட்டு மொழியிலேயே பல நூல்களை எழுதினர். இவ்வாறு 15, 16, 17ஆம் நூற்ருண்டுகளில் ஐரோப்பிய மொழிகள் மிகவும் செழிப்பாக வளர்ந்தன.

இந்த நூற்ருண்டுகளின் இலக்கியப் படைப்புகளில் பொதிந்து கிடந்த புது அறிவு வேகமாகப் பரவுவதற்கு அச்சுப்பொறி கண்டு பிடிக்கப்பட்டது பேருதவியாக இருந்தது. இருப்பினும், மறு மலர்ச்சி பாமர இயக்கமாக உருவெடுக்கவில்லை. பிரபுக்களும், செல்வந்தர்களும் மட்டுமே அதன் இன்பங்களைத் துய்க்கும் நிலைதான் இருந்தது.

## 2. நுண்கலைத் துறை

மறுமலர்ச்சி இயக்கத்தால் ஐரோப்பியக் கலைத்துறையும் பாதிக்கப்பட்டது. நுண்கலையின் பல பிரிவுகளான கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியவையெல்லாம் இப்பொழுது புது வடிவம்பெற்றுப் புதிய பொலிவுடன் விளங்குவதைக் காண்கிறோம். இடைக்காலத்துக் கலைப்படைப்புகள் சமயச் சார்புடையனவாக இருந்தன. கலைஞர்கள் எடுத்துக் கொண்ட கருப்பொருள்கள் சமயக் கோட்பாடுகளுக்கு உட்பட்டு இருந்தன. கலைஞர்கள், திருச்சபை சமயக் குருமார்கள் ஆகியவர்களின் ஆதரவில் வாழ்ந் தார்கள். பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளின் இலக்கியத்தைப் போலவே கலைத்துறையிலும் கலை வடிவங்கள் மனிதனையும், மானிட வாழ்க்கையை ஒட்டியதாகவும் அமைந்தன. இடைக் காலத்து கிறிஸ்துவக் கலை வடிவங்களும் பண்டைய கிரேக்க ரோமானியக் கலை வடிவங்களும் ஒன்றுடன் ஒன்று இணைந்து புதிய பாணி உருவாகியது. இதுதான் மறுமலர்ச்சிக் கலை.

கட்டடக் கலை : கட்டடக் கலையில் இடைக்காலத்துக் 'கோதிக் பாணி' (Gothic Style) மறைந்து 'டோரிக்', 'அயோனிக்', 'கரிந்தியன்' (Doric, Ionic, Corinthian) பாணியில் அமைக்கப் பட்ட கிரேக்க தூண்கள், ரோமரது வளைவுகள் இவற்றைக் கொண்ட மாபெரும் கட்டடங்கள் தோன்ற ஆரம்பித்தன. இந்தப் புதிய கட்டடக் கலையின் தந்தை 'புருனல்ஷி' (Brunellschi, 1377-1446) என்ற இத்தாலியர். கட்டடக்கலைத் துறையில் புகழ் பெற்ற மற்றக் கலைஞர்கள் 'லியோன் பத்திஸ்தா ஆல்பெர்ட்டி' (Leon Battista Alberti), 'மைக்கேலோசா' (Michelozzo), 'பெனதத்தோ-டா-மஜானோ' (Benedetto-da-Majano) போன்ற வர்கள் ஃபிளாரன்ஸ் போன்ற நகரங்களில் பல அரண்மனைகளைக் கட்டினர். இத்தகைய கட்டடங்கள் மறுமலர்ச்சிக் கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும். இக் கட்டடங்களிளெல் லாம் 'அளவிற்கு' (size) முக்கியத்துவம் அளிக்கப்பட்டதேயன்றிச் சிறந்த அலங்கார வேலைப்பாடுகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப் படவில்லை. ரோமாபுரியில் உள்ள 'செயின்ட் பீட்டர் ஆலயம்' (St. Peter's Church) கட்டுவதில் பெரும்பங்கு கொண்டவர் 'பிரமாந்தி' (Bramanti, 1455-1514) என்னும் மற்றொரு கட்டடக் கலைஞர். அப்பொழுது போப்பாண்டவராக இருந்த 'இரண்டாம் ஜூலியஸ் (Julius II) பிரமாந்தியிடம் இந்த ஆலயம் கட்டும் பணியை ஒப்படைத்தார். அவர் இறந்தவுடன் 'ரபேல்' (Raphael, 1483-1520) என்ற மற்றொரு கலைஞர் இந்தப் பொறுப்பை மேற்கொண்டார்.

'மைக்கேல் ஆஞ்சலோ' (Michael Angelo, 1475-1564), 'பல்லாடியோ' (Palladio) போன்ற சிற்பிகளும் இந்த ஆலயம் முழு உருவம் பெறக் காரணமாக இருந்தவர்கள். இத்தாலியில் தோன்றிய கட்டடக்கலை முறை ஃபிரான்சின் அரசரான 'முதலாம் ஃபிரான்சிசால்' (Francis I) ஃபிரான்சில் புகுத்தப்பட்டது. ஸ்பெயின் நாட்டு மன்னர் 'இரண்டாம் பிலிப்பும்' (Phillip II) இக் கலைக்கு ஆதரவு அளித்தார்.

சிற்பக் கலை: 15ஆம் நூற்றாண்டில் சிற்பக் கலையும் பெரு வளர்ச்சியடைந்தது. கிரேக்க—ரோமானிய சிற்ப வடிவங்களைப் பின்பற்றி அழியாத்தன்மை பெற்ற பல அரிய சிற்பப் படைப்புகளை உலகிற்கு அளித்த சிற்பிகள் இக் காலத்தில் வாழ்ந்தார்கள். இவர்கள் 'மெடிச்சி' (Medici) குடும்பத்துப் பிரபுக்களாலும், போப் பாண்டவர்களாலும் ஆதரவு அளிக்கப்பட்டனர். மறுமலர்ச்சி சிற்பக் கலையின் வழிகாட்டியாக விளங்கியவர் 'லொரன்சோ கிபர்ட்டி' (Lorenzo Ghiberti, 1378-1455) என்பவர். ஃபிளாரன்ஸ் நகரின் 'ஞானஸ்நான ஆலயத்தின்' (Baptist Church) வெண்கலக் கதவுகள் இவரால் உருவாக்கப்பட்டவை. இவற்றின் அழகைக் கண்டு வியந்த 'மைக்கேல் ஆஞ்சலோ' (Michael Angelo) "இவை சுவர்க்கத்தின் வாயிற் கதவுகளாக இருக்கத் தகுதியுடையவை" என்று போற்றினாராம்.[1] 'டொனடெல்லோ' (Donetello) என்ற மற்றொரு சிற்பி (1386-1466) ஃபிளாரன்ஸ் நகரில் 'செயின்ட் ஜார்ஜ்' (St. George), 'செயின்ட் டேவிட்' (St. David) ஆகியவர்களின் சிலைகளைச் செதுக்கியவர். "இவருடைய சிற்பப் படைப்புகள் பண்டைய கிரேக்க—ரோமானியச் சிற்பங்களை அப்படியே பின்பற்றாமல் இயற்கையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. குழந்தைகளின் உருவங்களையும், தன் சம காலத்துப் புகழ்பெற்ற மனிதர்களின் உருவங்களையும் செதுக்குவதில் அவர் ஆர்வம் காட்டினார். சிற்பக்கலை சமயச் சார்புடையதாக இருந்த நிலையை மாற்றி, அது மனித வாழ்க்கையின் சார்புடையதாக ஆக்கிய பெருமை இவரையே சாரும்"[2] 'வெராச்சியோ', (Verachio), 'பெர்னடோ ரோசுல்லினோ' (Bernardo Rosellino), மைக்கேல் ஆஞ்சலோ, 'பெனவந்தோ செல்லினி' (Benevento Cellini) ஆகியவர்களும் இக்காலத்துத் தலை சிறந்த சிற்பிகள். இந்தச் சிற்பிகளின் புகழ் உலகெங்கும் பரவி, இங்கிலாந்து, ஃபிரான்சு, ஸ்பெயின் ஆகிய நாடுகளிலிருந்தெல்லாம் இவர்களுக்கு அழைப்பு வந்தது. ரோமாபுரி செயின்ட் பீட்டர்

[1] Notes on European History Vol. I—William Edwards, page 411.

[2] A History of Europe—Ferdinand Schevill, page 41.

ஆலயத்திலுள்ள 'மோசஸின்' (Moses) பிரம்மாண்டமான உருவமும், ஃபிளாரன்ஸ் நகரில் காணப்படும் 'இரவு—காலை' ஆகியவற்றைச் சித்தரிக்கும் சிற்பங்களும் மைக்கேல் ஆஞ்சலோ வின் சிற்பத் திறமைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

ஓவியக் கலை: *14, 15, 16*ஆம் நூற்றாண்டுகளில் ஓவியக் கலையும் பெரு வளர்ச்சியடைந்தது. இந்தக் காலத்து நுண் கலைகளுள் இக் கலைதான் சிறந்து விளங்கியது. ஓவியக் கலையின் உறைவிடமாக இருந்தது இத்தாலிதான். ஃபிளாரன்ஸ், வெனிஸ், மிலான், ஜினோவா போன்ற நகரங்களில் வெவ்வேறு ஓவியப் பாணிகள் வளர்ச்சியுற்றன. இடைக்காலத்தில் ஓவியக்கலை சமய நோக்கங்களை நிறைவேற்றுவதற்காகவென்றே அமைந்திருந்தது. அப்பொழுது மேலோங்கியிருந்த சமய உணர்வுடன் ஒத்ததாகவும் இருந்தது. ஆனால், மறுமலர்ச்சி ஓவியம் இவற்றினின்று மாறு பட்டிருந்தது. இயற்கையைச் சித்தரித்தல், மனித உடலமைப்பை அப்படியே வரைதல், ஓவியங்களைக் கான்வாஸ் துணியிலும் மரப் பலகையிலும் வரைதல், எண்ணெய் வண்ணங்களை உபயோகித்தல் ஆகியவையே ஓவியக்கலையின் சிறப்பியல்புகள். கலை, இயற்கை யாகவும், தன்னைச் சுற்றியுள்ள பொருள்களைப் பற்றியதாகவும், இருக்கவேண்டும் என்று விரும்பியவர்கள் இக்காலத்துக் கலைஞர்கள். இதைத்தான் ஆங்கிலத்தில் 'Naturalism in Art' என்று குறிப்பிடுகிறார்கள். இவையெல்லாவற்றையும்விட ஓவியக் கலையின் சிறப்பியல்பு என்னவெனில், கலைஞன் தன் விருப்பப்படி, தன் உணர்ச்சிகளுக்கு வடிவம் கொடுக்கும் சுதந்திரம் பெற்றான். இடைக்காலத்தில் கலைஞனுக்கு இந்தச் சுதந்திரம் இல்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஃபிளாரன்ஸ் நகரத்து 'கியாட்டோ' (Giotto, 1266–1336) என்பவர் தலைசிறந்த ஓவியராயினும், அவர் இடைக்காலத்து மரபுகளையே பின்பற்றினார். ஃபிளாரன்ஸ் நகரத்து ஆலயத்தில் இருக்கும் 'செயின்ட் ஃபிரான்சிஸின் மரணப்படுக்கை' என்ற ஓவியமும், 'பாடுவா' (Padua) நகரத்து ஆலயத்தில் காணப்படும் சுவரோவியங்களும் அவருடைய தலைசிறந்த ஓவியப்படைப்புகள் அவருடைய பாணியிலேயே தொடர்ந்து ஓவியக்கலையைப் போற்றி வந்த மற்ற ஓவியர்கள் 'டேடியோ காடி' (Taddeo Gaddi), 'ஸ்பினல்லோ ஆம்புரோஸியோ' (Spinello Ambrosio), 'லொரன் சத்தி' (Lorenzetti) போன்றவர்கள். மறுமலர்ச்சி ஓவியக் கலைக்கு ஆக்கம் அளித்த மற்ற கலைஞர்கள் 'மசாகியோ' (Masaccio 1401–1428), 'பாத்திசல்லி' (Botticelli, 1444–1510) போன்றவர்கள் ஃபிளாரன்ஸ் நகர ஓவியப்பாணியில் புகழ்பெற்றவர் 'ரபேல்' (Raphael). ஃபிளாரன்ஸ் நகரில் சில ஆண்டுகள் வாழ்ந்த அவர்

(1504-1508), 1508-ல் 'போப் இரண்டாம் ஜூலியஸின்' (Pope Julius II) அழைப்பிற்கிணங்க ரோம் நகரை அடைந்தார். 'வாடிகன் அரண்மனையில்' (Vatican) காணப்படும் சுவரோவியங்கள், 'சிஸ்டைன் மொடோனா' (Sistine Madonna), Transjgeration ஆகியவை அவருடைய புகழ் பெற்ற ஓவியப் படைப்புகள். 'வெராச்சியோ' (Verachio) என்பவரின் மாணவ ரான லியனார்டோடாவின்சி, (1452-1519) பொறியியல் வல்லுநர், சிறந்த சிற்பி, ஓவியர், இசைமேதை, தத்துவஞானி, கவிஞர். 1482-ல் ஃபிளாரன்ஸ் நகரைவிட்டு மிலான் நகரை அடைந்து மிலான் கோமகனின் ஆதரவில் வாழ்ந்தார் அவர். அங்குதான் அவருடைய தலைசிறந்த ஓவியங்களுள் ஒன்றான 'இறுதி விருந்து' (The Last Supper) என்னும் ஓவியம் வரையப்பட்டது. மனிதனின் உடலமைப்பை அவர் கூர்மையாக ஆராய்ந் தறிந்தார். எனவே, அவர் தன் ஓவியங்களைத் தத்ரூபமாக வரைய முடிந்தது. இப்பொழுது பாரீஸ் நகரத்தில் வைக்கப்பட்டிருக்கும் 'மோனாலிஸ்ஸா' (Monalisa) என்பது அவருடைய மற்றொரு தலைசிறந்த படைப்பு (1504). நவீனகாலக் கண்டுபிடிப்புகளான ஆகாய விமானம், நீர்மூழ்கிக் கப்பல் போன்றவற்றை அவர் 15ஆம் நூற்றாண்டிலேயே நிர்மாணித்தார்.

மைக்கேல் ஆஞ்சலோ (1475-1564) என்பவர் ஓர் ஓவியர் என்பதைவிட, சிறந்த சிற்பி என்று கூறுவதுதான் பொருந்தும். எனினும், ஓவியக் கலையிலும் திறமை பெற்றவர். ஃபிளாரன்ஸ் நகரத்துக் கோமகனான 'லொரன்சோ-டி-மெடிச்சி' (Lorenzo-de-Medici) அவரைத் தன் கலைப்பள்ளியில் பணிபுரியுமாறு அழைத் தார். அப் பிரபுவின் இறப்பிற்குப் பிறகு போப் இரண்டாம் ஜூலியஸின் அழைப்பிற்கிணங்கி 1506-ல் ரோமாபுரிக்குச் சென்றார். அவருடைய தலைசிறந்த ஓவியங்கள் வாடிக்கன் அரண்மனையிலுள்ள 'சிஸ்டைன் சேப்பல்' என்னும் ஆலயத்தின் கூரையில் வரையப்பட்டுள்ளன. 'பழைய ஏற்பாட்டில்' (Old Testament) கூறப்பட்டிருக்கும் விவிலியக் காட்சிகள் இங்கு ஓவியமாக வரையப்பட்டுள்ளன. நான்கு ஆண்டுகளுக்குமேல் பல இன்னல்களுக்கிடையேயும், ஊதியத்தைத் தாமதமாகப் பெற்றும், உடல்நிலை சீர்கெட்டும், இந்த ஓவியம் வரையும் வேலையில் அவர் முழு மூச்சுடன் நின்று முடித்தார். 'இறுதித் தீர்ப்பு' (Last Judgment) என்னும் அவருடைய சுவரோவியம் உலகிலேயே சிறந்த ஓவியம் என்று இன்றும் கருதப்படுகிறது.

'திதியன்' (Titian, 1477-1576) என்பவர் மற்றொரு ஓவியக் கலைஞர். அவர் வெனிஸ் நகரில் பணிபுரிந்தார். வண்ணங்களைக் கவர்ச்சிகரமாகப் பயன்படுத்துவதில் கைதேர்ந்தவர். பேரரசர்

ஐந்தாம் சார்லஸ்' (Emperor Charles V) அவருடைய ஓவியங்களைக் கண்டு வியந்து பலவற்றை ஸ்பெயினுக்கு எடுத்துச் சென்றதாகக் கூறப்படுகிறது. அவர் ஸ்பெயினில் ஐந்தாம் சார்லஸ், போப்பாண்டவர், 'மூன்றும் பால்' (Paul III) ஆகியவர்களின் உருவங்களை ஓவியமாகத் தீட்டியிருக்கின்றார். இத்தாலியச் சிற்பிகளைப் போலவே இத்தாலிய ஓவியர்களின் பெருமையும் ஐரோப்பாவெங்கும் பரவியது. ஃபிரான்சு மன்னர் 'முதலாம் ஃபிரான்சிஸ்' (Francis I), ஸ்பெயின் அரசர் 'இரண்டாம் பிலிப்' (Phillip II) போன்ற மன்னர்கள் இந்த ஓவியக் கலைஞர்களுக்குப் பெரும் ஆதரவு அளித்தார்கள்.

விஞ்ஞானத் துறை: இடைக்காலத்தில் திருச்சபையின் ஆதிக்கம் காரணமாக எல்லாக் கருத்துகளும் ஆராய்ச்சி, பரிசோதனையின்றி அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டன. இந்தச் சூழ்நிலையில், அறிவு வளர்ச்சி ஓரளவு தடைப்பட்டது விஞ்ஞானத் துறையில் வளர்ச்சி ஏற்படவில்லை. மறுமலர்ச்சி இயக்கம் தோன்றியவுடன், மற்ற துறைகளைப் போலவே, விஞ்ஞானத் துறையும் இந்தப் புதிய மறுமலர்ச்சி உணர்வினல் பாதிக்கப்பட்டு ஆராய்ச்சிப் பரிசோதனைகள் ஆகியவற்றின் விளைவாக அறிவு வளர்ச்சி அடைந்தது. அதன் விளைவாகப் பல புரட்சிகரமான விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் தோன்றின.

இடைக்காலத்திலேயே 'ரோஜர் பேகன்' (Roger Bacon, 1214–1294) போன்ற அறிஞர்கள் விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார்கள். 'தொலைநோக்கி' (Telescope) எப்படி இயங்குகின்றது என்ற தத்துவத்தை அவர் ஆராய்ந்து வெளியிட்டார். நீராவிக் கப்பல், ஆகாயவிமானம் ஆகியவை பற்றியும் ஆராய்ச்சிகள் செய்து, அவற்றை நிர்ணயிப்பது சாத்தியமே என்று கூறினர். அவர் வெளியிட்ட கருத்துகள் வைதீகக் கொள்கைகளுக்கு முரண்பட்டவையாக இருந்ததால் அவர் சமயவிரோதி என்று கருதப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டார். இச் சமயத்தில் தான் இப் புதிய உணர்வு தோன்றி மக்களின் எண்ணங்களும், சிந்தனைகளும் சமயத்தின் பிடியிலிருந்து விடுபட்டன. ஆராய்ச்சியின் விளைவாக, விஞ்ஞானத் துறையில் புதுப்புது உண்மைகள் மலர ஆரம்பித்தன. மாலுமியின், திசைகாட்டும் கருவி, (Mariner's Compass) கண்டுபிடிக்கப்பட்டது. 'மார்க்கோ போலோ' (Marco Polo) என்பவர் சுமார் 1260-ல் சீனவிலிருந்து இக் கருவியைப் பற்றி அறிந்துவந்தார். இதன் உதவியால் மாலுமிகள் அச்சமின்றி வெகுதூரம் கடல் பயணம் செய்வது

சாத்தியமாயிற்று. இந்தக் கண்டுபிடிப்பின் விளைவாக நிலவியல் துறையில் மக்கள் அறிவு பெருவளர்ச்சி அடைந்து, புதிய நாடுகளும், புதிய கடல் வழிகளும் கண்டுபிடிக்கப்பட்டன.

பதினான்காம் நூற்றாண்டில்தான் வெடிமருந்து முதன் முதல் ஐரோப்பாவில் கண்டுபிடிக்கப்பட்டது. சீனர்கள் இதைப்பற்றி முன்பே அறிந்திருந்தார்கள். இந்தக் கண்டுபிடிப்பினால் போர் முறையில் பல பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. இடைக் காலத்து இரும்புக்கவசம் அணிந்த போர்வீரனும், வில், அம்பு கொண்டு நடத்தப்பட்ட போர் முறையும் மறைந்து, துப்பாக்கியையும், வெடிகுண்டையும் பயன்படுத்திச் செய்யும் போர் முறை தோன்றியது. இடைக்காலத்தில் செல்வாக்கு பெற்றிருந்த நிலமானியப் பிரபுக்களின் ஆதிக்கம் இக் கண்டுபிடிப்பினால் வெகுவாகப் பாதிக்கப்பட்டது. அழிக்க முடியாத கோட்டை, கொத்தளங்கள், அரண்கள் ஆகியவற்றின் பாதுகாப்பில் வாழ்ந்து வந்த நிலமானியப் பிரபுக்களின் படைவலிமை இதனால் அழிக்கப் பட்டது.

இதைவிட முக்கியமானதும், மனித இனத்தின் வரலாற்றிலேயே சிறப்பு வாய்ந்ததுமான மற்றொரு கண்டுபிடிப்பு அச்சுப் பொறி. இடைக்காலத்திய நூல்கள் கையால் எழுதப்பட்டவை. கிறிஸ்துவ மடாலயங்களில் வாழ்ந்து வந்த துறவிகள் இதுபோன்ற கையெழுத்துப் பிரதிகளைத் தயார் செய்தனர். எழுதுவதற்குப் பதனிட்ட ஆட்டுத் தோலைப் பயன்படுத்தினர். இம் முறையினால் நூல்களை அதிக அளவில் எழுதமுடியவில்லை. நூல்கள், விலை அதிகமாக இருந்ததால், செல்வந்தர்கள், சமயத்துறவிகள், பிரபுக்கள் மட்டுமே அவற்றை வாங்கமுடிந்தது. இதனால் அறிவு வளர்ச்சியும் தடைப்பட்டது. கி.மு. முதல் நூற்றாண்டிலேயே சீனர்கள் அச்சுக்கலையை அறிந்திருந்தனர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே சுந்தல் துணியினால் காகிதம் செய்யும் முறையையும் அவர்கள் அறிந்திருந்தனர். இந்த முறைகள் அராபியர்கள் மூலமாக ஐரோப்பாவிற்குக் கொண்டு வரப்பட்டன. ஒரு பலகையில் ஒரு பக்கத்திற்கு வேண்டிய எழுத்துகளைச் செதுக்கி அதன்மீது மை பூசி வேண்டிய பிரதிகளை அச்சிட்டுக்கொண்டனர். ஒவ்வோர் எழுத்தையும் தனி அச்சாகச் செய்யும் பழக்கம் வழக்கிலில்லை. இந்த முறையை முதல் முதலில் ஐரோப்பாவில் கையாண்டவர் நெதர்லாந்து நாட்டைச் சேர்ந்த 'லாரன்சு கோஸ்தர்' (Lawrance Kostar) என்பவர். 1440-ல் மரத்தினாலான அச்சுகளைக் கொண்டு அவர் அச்சிடும் முறையைப் புகுத்தினார். கி.பி. 1454-ல் ஒருவகை நாரினால் செய்யப்பட்ட காகிதத்தில் உலோகத்தினாலான அச்சுகளைக் கொண்டு முதன்முதல்

அச்சிட்டவர் ஜெர்மெனியில் 'மெயின்ஸ்' (Maenz) நகரைச் சேர்ந்த 'ஜான் குட்டன்பர்க்' (John Guttenburg) என்பவர். அவரால் அச்சிடப்பட்ட முதல் நூல் லத்தீன்மொழி விவிலியம். இதைத்தொடர்ந்து ஐரோப்பாவெங்கினும் அச்சுக்கூடங்கள் தோன்றின. கி.பி. 1476ல் இங்கிலாந்தின் முதல் அச்சுக்கூடம் லண்டன் நகரில் 'வில்லியம் காக்ஸ்டன்' (William Caxton) என்பவரால் நிறுவப்பட்டது. 'அல்டஸ் மனுஷஸ்' (Aldus Manuteus) என்பவர் 1490-ல் வெனிஸ் நகரில் அச்சுக்கூடத்தை ஏற்படுத்தினர்.

அச்சுப்பொறி கண்டுபிடிப்பு மானிட வாழ்க்கையில் ஒரு புரட்சிகரமான மாறுதலை ஏற்படுத்தியது. மறுமலர்ச்சி இயக்கக் கருத்துகளும், 'புது அறிவும்' பாமர மக்களிடையே பரவுவதற்கு இது பேருதவியாக இருந்தது. அச்சுக்கலை கண்டுபிடிக்கப்பட்டதால்தான் நூல்களின் ஏராளமான பிரதிகளை விரைவிலும், குறைந்த விலையிலும், அச்சடிக்க முடிந்தது. இதுவரை, நூல்களை வாங்கிப் படிக்கும் பழக்கம் செல்வந்தர்கள், பிரபுக்கள் ஆகியோர்களின் ஏகபோக உரிமையாக 'இருந்த நிலை மாறி, இப்பொழுது பாமர மக்களுக்கும் கிடைக்கும் நிலை ஏற்பட்டது. புது அறிவு வேகமாக வளர்ச்சி அடைய இது பேருதவி புரிந்தது. லத்தீன் மொழி மட்டுமின்றி ஐரோப்பிய மொழிகள் பலவும் இதன்மூலம் ஆக்கம் பெற்றன. மாலுமி திசைகாட்டும் கருவி, வர்த்தக, நிலவியல் துறைகளிலும், வெடிமருந்து, படைத்துறை, போர் முறையிலும் புரட்சியை உண்டாக்கியதுபோல, அச்சுப்பொறி கண்டுபிடிப்பு அறிவுத்துறையில் ஒரு மாபெரும் புரட்சியைத் தோற்றுவித்தது.

விஞ்ஞானத் துறையில் வளர்ச்சி ஏற்பட்ட மற்றொரு துறை வானசாஸ்திரம். பூமியின் வடிவம், பிரபஞ்சத்தில் பூமியின் இடம் ஆகியவற்றைப் பற்றியக் கருத்துகள் ஊகத்தின் அடிப்படையில் அமைந்தனவேயன்றி, ஆராய்ச்சிப் பரிசோதனைகளின் அடிப்படையில் அமையவில்லை. கிரேக்க வான நூலறிஞரான 'டாலமி' (Ptolemy, கி.பி. இரண்டாம் நூற்றாண்டு) என்பவர் பிரபஞ்சத்தின் மையத்தில் பூமி நிலையாக இருப்பதாயும், பூமியைச்சுற்றி மற்ற கோளங்கள் எல்லாம் சுழல்கின்றன என்ற கருத்தையும் வெளியிட்டிருந்தார் (Geo-Centric Theory). இதையே உண்மையென்று திருச்சபை ஒப்புக்கொண்டது. இடைக் காலத்தில் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்த, சூரியன் தான் பிரபஞ்சத்தின் 'மையம்' (Heliocentric) என்று கிரேக்க அறிஞரான 'பித்தாகரஸ்' (Pythagorus) என்பவரால் வெளி

யிடப்பட்ட மற்றொரு கருத்தும் இருந்தது. 'கோபர்னிகஸ்' (Copernicus, 1473-1543) என்னும் போலந்து நாட்டு வான நூல் அறிஞர் ஆராய்ச்சிகள் மூலம் டாலமியின் கருத்து தவறு என்று நிரூபித்தார். ஆராய்ச்சி, பரிசோதனை ஆகியவற்றின் அடிப் படையில் பிரபஞ்சத்தின் மையத்தில் சூரியன் இருப்பதையும், அதைச் சுற்றி பூமி, மற்ற கோளங்கள் எல்லாம் சுழல்கின்றன என்ற உண்மையையும் 1543-ல் 'Concerning the Revolutions of the Celestial Bodies'—என்ற நூலில் வெளியிட்டார். கோபர்னிகஸ் வெளியிட்ட இந்தக் கருத்துக்கள்தாம் இன்றைய வான சாஸ்திரத் திற்கு அடிப்படையாக அமைந்துள்ளன. ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த 'ஜான் கெப்ளர்' (John Kepler, 1571-1630) என்ற விஞ்ஞானியும், இத்தாலியைச் சேர்ந்த 'கலீலியோ' (Galelio, 1564-1642) என்பவரும் ஆராய்ச்சிகள் மூலம் கோபர்னிகஸின் கருத்துகள்தான் உண்மையானவை என்று உறுதிப்படுத்தினர். பூமி முதலிய எல்லாக் கோளங்களும் சூரியனைச்சுற்றி 'நீள்வட்டப் பாதையில்' (Elliptical Orbits) சுழல்கின்றன என்ற உண்மையைக் 'கெப்ளர்' (Kepler) கண்டுபிடித்தார். கலீலியோ பௌதிக சாஸ்திரத்தில் வல்லுநர். கி.பி. 1609-ல் தொலைநோக்கி ஒன்றைக் குறைகளின்றி உருவாக்கி, அதன்மூலம் கோள்களின் இயக்கத்தைக் கண்டு, கோபர்னிகஸின் கருத்தை உறுதிப்படுத் தினர். திருச்சபையும் இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ள வைக்க வேண்டுமென்ற முயற்சியில் ஈடுபட்டதால், அவர் திருச்சபையின் எதிர்ப்புக்கு ஆளானர். அவர் வெளியிட்ட கருத்துகள் கிறிஸ்து வர்களின் புனித நூல்களில் காணப்படும் கருத்துகளுக்கு முரண் பட்டு இருப்பதாகவும், ஆகவே, அவர் கிறிஸ்துவ சமயத்தின் எதிரி என்றும் அவரை 'இன்குசிசன்' (Inquisition) என்ற சமய நீதிமன்றம் சிறையிலிட்டது. 'ஃபிரான்சிஸ் பேகன்' (Francis Bacon, 1551-1626) என்னும் அறிஞர் ஆராய்ச்சியின் அடிப் படையில் அமைந்த 'தொகுப்பு வழிமுறையே' (Inductive Method) சரியானதென்றும், அரிஸ்டாடிலின் உய்த்துணரும் முறை தவறென்றும் சுட்டிக்காட்டினர். ஆனல், இறுதியில் திருச் சபையும் இப் புதுக் கருத்துகளை ஏற்றுக்கொள்ளவேண்டிய நிலை ஏற்பட்டது. இப் புதியக் கருத்துகளுக்கு ஏற்றவகையில் கி.பி. 1582-ல் 'பதின்மூன்றும் கிரிகரி' (Gregory XIII) என்னும் போப் பாண்டவர், ரோமப் பேரரசு காலந்தொட்டு நடைமுறையில் இருந்துவந்த 'ஜூலியன்' (Julian) காலண்டர் முறையை மாற்றி, புதிய காலண்டரை உருவாக்கினர். இதுதான் 'கிரிகோரியன் காலண்டர்' (Gregorian Calendar) என்று வழங்கப்படுகிறது.

விஞ்ஞானத்தின் வேறு பல துறைகளிலும் வளர்ச்சி ஏற்பட்டது. விஞ்ஞான வளர்ச்சிக்கு உதவும் வகையில் கணிதத்

துறையின் வளர்ச்சி அமைந்தது. இடைக்கால ஐரோப்பிய மக்கள், கிரேக்க, ரோமானியக் கணித சாஸ்திரத்தையும், முகம் மதியர்களுடைய 'அல்ஜீப்ரா' (Algebra) எண்ணிக்கை முறைகளையும், அறிந்திருந்தனர். பதினாறும் நூற்றாண்டில் இதனடிப்படையில் மேலும் வளர்ச்சி ஏற்பட்டது. இத்துறையின் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தவர்கள் இத்தாலி நாட்டு 'தார்தாகிலியா கார்டன்' (Tartaglia Cardon), நெதர்லாந்து நாட்டு 'ஸ்டெவினஸ்' (Stevinus) போன்ற கணித மேதைகள், பௌதிகத் துறையில் இத்தாலிநாட்டு 'போர்டா' (Porta), கலீலியோ, நெதர்லாந்தைச் சேர்ந்த 'ஜேன்ஸன்' (Jansen), இங்கிலாந்தைச் சேர்ந்த 'வில்லியம் கில்பர்ட்' (William Gilbert) போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

மருத்துவத் துறையிலும் வியக்கத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. இத்தாலி நாட்டு 'எஸ்டாச்சியோ' (Eustachio), 'ஃபல்லாப்பியோ' (Fellopio) என்ற அறிஞர்கள் உடலியல் பற்றிய அறிவு வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தனர். ஸ்பெயின் நாட்டு 'செர்விடஸ்' (Servetus) என்பவர் மனித உடலில் இரத்தஓட்டம் பற்றிய புதுக் கருத்துகளை வெளியிட்டார். 'பாராசெல்லஸ்' (Paracellus) என்ற ஜெர்மன் நாட்டு அறிஞரும், நெதர்லாந்துநாட்டு 'வெசாலியஸ்' (Vesalius) என்பவரும், இங்கிலாந்தைச் சேர்ந்த 'வில்லியம் ஹார்வி' (William Harvey) என்பவரும் மருத்துவத்துறையில் குறிப்பிடத்தக்கவர்கள்.

விளைவுகள்: இவ்வாறு விஞ்ஞானத்தின் பல துறைகளும், பழைய மூடநம்பிக்கைகள் பிடியிலிருந்து விடுபட்டு, ஆராய்ச்சி, பரிசோதனை இவற்றின் அடிப்படையில் வளர ஆரம்பித்தன. நீண்ட உறக்கத்தில் மூழ்கியிருந்த ஐரோப்பா விழிப்படைந்தது. தேக்கநிலை மாறி முன்னேற்றம் ஏற்படத் தொடங்கியது. எதையுமே ஆராயாமல் ஒப்புக்கொள்ளும் நிலை மாறி, ஆராய்ச்சி மனப்பான்மை, திறனாயும் உணர்வு வளர்ந்தது. இந்த உணர்வு, உண்மையை அறியவேண்டும் என்ற ஆர்வம், மனிதன் இந்த உலகத்தின் எல்லைக்கே சென்று உலகத்தைப்பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடத்தூண்டியது. இடைக்காலத்தில் பெரிதும் மதிக்கப்பட்ட திருச்சபையின் அதிகாரத்தையே எதிர்க்கத் தூண்டியது. இதன் விளைவாக ஏற்பட்டதுதான் புதிய ஐரோப்பாவின் மிக முக்கிய நிகழ்ச்சியான சமயச் சீர்திருத்த இயக்கம்.[1]

[1] A Text book of Modern European History, 1453-1661—G. W. Southgate, Introduction, page XX.

# 4. புதிய நாடுகள், கடல்வழிகள் கண்டுபிடிப்பு

மறுமலர்ச்சி உணர்வால் உந்தப்பட்டு ஐரோப்பிய மக்கள் 15ஆம் நூற்றாண்டில் நிலவியல் துறையில் பல புரட்சிகரமான மாறுதல்களுக்குக் காரணமாக இருந்தார்கள். இடைக்கால மக்கள் ஐரோப்பா, தென்மேற்கு ஆசியா, வடஆப்பிரிக்கா ஆகிய பகுதிகளை மட்டுமே அறிந்திருந்தார்கள். ஆசியாக் கண்டத்தையும் ஆப்பிரிக்காக் கண்டத்தையும் அவர்கள் முழுவதும் அறிந்திருக்க வில்லை. கி.பி. பதினைன்காம் நூற்றாண்டுவரை ஒரு கண்டத்தி லிருந்து மற்றொரு கண்டத்திற்குப் போக்குவரத்து மிகவும் குறைவாகவே இருந்தது. எகிப்தியர்கள், கிரேக்கர்கள், ரோமானியர்கள், இந்தியர்கள், சீனர்கள் ஆகியோர் ஒருவரோ டொருவர் தொடர்பு கொண்டிருந்தாலும், இந்தத் தொடர்பு அங்குமிங்குமாக மிகக்குறைந்த அளவில்தான் இருந்தது. இடைக் காலத்தில் நடந்த சிலுவைப் போர்கள் ஆசியாவைப்பற்றி அறிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வத்தை ஐரோப்பிய மக்களிடையே தூண்டிவிட்டன. சிலுவைப்போர்கள் ஆசியாவிற்கும் ஐரோப்பா விற்குமிடையே வாணிகத் தொடர்பு ஏற்பட உதவின. மேற்கு ஆசிய நாடுகளிலிருந்து திரும்பிய ஐரோப்பியர்கள், பட்டு, முத்து, வாசனைத் திரவியங்கள் போன்ற விலையுயர்ந்த பல பொருள்களை எடுத்துச் சென்றனர். இந்தப் பொருள்களுக்கு ஐரோப்பாவில் கிராக்கி ஏற்பட்டது. மாமிசம் பல நாட்கள் கெடாமலிருப்பதற்கு 'நறுமணப் பொருள்கள்' (Spices) பயன்பட்டன. குறிப்பாக இப்பொருள்கள் ஐரோப்பிய மக்களுக்கு மிகவும் தேவைப்பட்டன. இடைக்காலத்தின் பிற்பகுதியில் இத்தாலிய நகரங்களான ஜினோவா, வெனிஸ், மிலான் ஆகியவை வியாபாரத்தின் மூலம் பெரும் பொருள் ஈட்டின. ரஷியாவிலிருந்தும், மத்திய ஆசியாவி லிருந்தும் பொருள்கள் கான்ஸ்டான்டிநோபிளை வந்தடைந்தன. ஜினோவா நகரத்து வியாபாரிகள் அங்கிருந்து பொருள்களை வாங்கி ஐரோப்பா முழுவதும் வியாபாரம் செய்தனர். வெனிஸ் நகரம்

இந்திய வியாபாரத்தை ஏகபோக உரிமையாக நடத்திக் கொண்டிருந்தது. வெனீஷிய வியாபாரிகள் சிரியாநாட்டுப் பாலைவனத்தைக் கடந்து பாரசீக வளைகுடா வந்து, இந்தியாவின் மேற்குக்கரைப் பகுதிகளை வந்தடைந்தனர். அவர்களுக்கு மற்றொரு வழியும் இருந்தது. எகிப்து வழியாகச் செங்கடலைக் (Red Sea) கடந்து அங்கிருந்து இந்தியாவை அடைந்தனர். மெல்லிய ஆடைகள், சாயப்பொருள்கள், தந்தம், விலையுயர்ந்த வைரங்கள், நறுமணப் பொருள்கள் ஆகிய இவற்றை மலிவான விலைக்கு வாங்கி அதிக விலைக்கு ஐரோப்பாவில் விற்றுப் பெரும் இலாபத்தைச் சம்பாதித்தனர். இந்தியாவிற்குச் செல்லும் வழிகள் வெனீஷிய வியாபாரிகளின் ஏகபோக உரிமையாக இருந்ததால் வேறு எவரும் அந்த வியாபாரத்தில் ஈடுபட முடியவில்லை. இந்த ஏகபோக உரிமையை ஒழிக்க வேண்டுமானால் இந்தியாவை அடைய வேறு புது வழிகள் கண்டுபிடிக்கப்படவேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. கிழக்கத்திய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள புது வழிகள் கண்டுபிடிக்கவேண்டும் என்ற ஆர்வம்தான் பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் மனிதனின் நிலவியல் அறிவு வளர்வதற்கு முக்கிய காரணமாக அமைந்தது.

இந்தப் பூகோளக் கண்டுபிடிப்புகளுக்குக் காரணமாக இருந்தவர்கள் ஐரோப்பியர்கள்தான். ஏன் ஐரோப்பியர்கள் இதற்குக் காரணமாக இருந்தார்கள்? இதற்கு எளிதாக ஒரு காரணத்தைக் கூறமுடியும். வளம் பொருந்திய, செல்வம் மிக்க உலகத்தின் ஏனைய பகுதிகளிலிருந்து ஐரோப்பாதான் பல பொருள்களை எதிர் பார்த்தது. இந்தியா, சீனு போன்ற ஆசிய நாடுகள் தன்னிறைவு பெற்றிருந்தன. ஐரோப்பிய நாடுகளின் உதவியை நாடி நிற்கும் நிலையில் அவை இல்லை. எனவே, கிழக்கத்திய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகொள்ள புது வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதற்கு மற்றொரு காரணம் ஐரோப்பியர்களின் சமய ஆர்வம். கிறிஸ்துவ சமயத்தை உலகின் மற்ற பகுதிகளில் பரப்பவேண்டும் என்ற ஆர்வத்தால் உந்தப்பட்ட சமயகுருமார்கள், மாலுமிகளுடனும், வியாபாரிகளுடனும் நெடுந்தூரக் கடல்பயணம் செய்யவும், புதிய நாடுகளை அடையவும் தயாராக இருந்தனர். தீரச்செயல்கள் புரிய வேண்டும் (Spirit of Adventure) என்ற ஆர்வத்தால் உந்தப்பட்ட சிலரும் இதுபோன்ற கடல்பயணத்தை மேற்கொள்ளத் தயாராக இருந்தனர்.

ஆனால், இந்த கடற்பயணங்களை மேற்கொள்ள ஐரோப்பியர்களுக்கு என்ன தகுதியிருந்தது என்ற கேள்வியும் எழுகின்றது. இடைக்காலத்திலேயே கிழக்கத்திய நாடுகளைப்பற்றிய பூகோள

அறிவை ஐரோப்பியர் பெற்றிருந்தனர். 1260-ல் வெனிஸ் நகரத்து 'நிக்கோலோ போலோ' (Nicolo Polo), 'மாஃபியோ போலோ' (Maffeo Polo) என்ற இரு சகோதரர்கள் சீனுவை அடைந்து, மங்கோலியப் பேரரசனை 'குப்ளாய் கானின்' (Kublai Khan) ஆதரவைப் பெற்றனர். அவர்கள் இரண்டாவது முறையாகச் சீனு சென்றபொழுது அவர்களுடன், நிக்கோலோ போலோவின் மகன் 'மார்க்கோ போலோவும்' (Marco Polo) சென்றுன். அவனும் குப்ளாய் கானின் ஆதரவைப்பெற்று ஆசியாவின் பல பகுதிகளை நேரில் கண்டான். ஆசியா முழுவதும் பயணம் செய்த முதல் ஐரோப்பியன் என்று இவனைக் கூறலாம். 1295-ல் வெனிஸ் நகரை மீண்டும் அடைந்த அவன் தன்னுடைய பயணக் குறிப்புகளை ஒரு நூல்வடிவில் வெளியிட்டான். இந்தியா போன்ற நாடுகளைப்பற்றி மேலும் அறியவேண்டும், கிழக்கத்திய நாடுகளின் செல்வத்தைப் பெறவேண்டும் என்ற ஆவல் ஐரோப்பியர்களிடையே மேலும் அதிகமாயிற்று.

இந்தப்பணியில் முதன்முதலில் ஈடுபட்டவர்கள் போர்ச்சுகல் நாட்டு மக்களேயாவர். ஐரோப்பாவின் தென்மேற்குப் பகுதியில் இருந்த காரணத்தினுல், அவர்கள் ஆப்பிரிக்கக் கரையோரப் பகுதிகளை முன்பே நன்கறிந்திருந்தனர். ஆப்பிரிக்கக் கடற் கரையைச் சுற்றிவந்து இந்தியாவை அடையவேண்டும் என்ற முயற்சியில் அவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். இதுபோன்ற கடல் பயணங்களை ஊக்குவித்து, உற்சாகத்துடன் செயல்பட்டவர் போர்ச்சுகல் நாட்டு 'இளவரசர் ஹென்றி' (Prince Henry, 1394–1460). கடல் பயணங்களில் இவர் காட்டிய ஆர்வம், இது போன்ற செயல்களுக்கு இவர் அளித்த ஆதரவு காரணமாக, இவர் 'மாலுமி ஹென்றி' (Henry the Navigator) என்றழைக்கப் பட்டார். இவர் மாலுமிகளுக்குப் பயிற்சி அளிப்பதற்கென்று 'மாலுமிகள் பயிற்சிப் பள்ளி' ஒன்றைத் தொடங்கினுர். ஆப்பிரிக்காக் கண்டத்தைச் சுற்றிச்சென்று இந்தியாவை அடைய நேரடிக் கடல்வழியொன்றைக் கண்டுபிடிக்க வேண்டுமென்பது இவரது குறிக்கோள். இவருடைய பெருமுயற்சியின் காரணமாக 'அஸோர்ஸ்' (Azores), 'மெடீரா' (Madeira) போன்ற தீவுகள் கண்டுபிடிக்கப்பட்டுப் போர்த்துக்கீசியக் குடியேற்றங்களாக மாறின. 1445-ல் 'காம்பியா' (Gambia), 'செனகல்' (Senegal) ஆகிய நதிகளின் முகத்துவாரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. 'வெர்டி முனைத்தீவுகள்' (Cape Verde Islands) கண்டுபிடிக்கப் பட்டுப் போர்த்துக்கீசியக் குடியேற்றங்களாயின. இளவரசர் ஹென்றியின் மரணம் இம் முயற்சிகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

இச்சமயத்தில்தான் மற்றொரு முக்கியமான நிகழ்ச்சி ஏற்பட்டது. கி.பி. 1453-ல் 'ஆட்டோமான் துருக்கியர்கள்' (Ottoman Turks) கான்ஸ்டான்டிநோபிள் நகரைக் கைப்பற்றினர். இத்துடன் கிழக்கு ரோமானியப் பேரரசு வீழ்ச்சியுற்றது. இந் நிகழ்ச்சியின் விளைவு என்னவெனில், ஐரோப்பியர்கள் இதுகாறும் இந்நகரின் வழியாக நடத்திவந்த தரைவழி வாணிகம் தடைப்பட்டது. துருக்கியர்கள், இவ்வழியைப் பயன்படுத்த ஐரோப்பியர்களை அனுமதிக்கவில்லை. எகிப்து வழியாக நடந்து வந்த கடல் வாணிகத்தையும் இவர்கள் தடுத்துவிட்டனர். எனவே, இந்தியா போன்ற கீழைநாடுகளை அடைய புதிய கடல் வழிகள் கண்டுபிடிக்கப்படவேண்டியதன் அவசியம் மேலும் அதிகமாயிற்று.

1488-ல் 'பார்த்தலோமியோ டயஸ்' (Barthalomew Diaz) என்ற போர்ச்சுக்கீசியர், ஆப்பிரிக்காவின் தென்கோடியை அடைந்தார். அங்குப் புயல்காற்று வீசவே அதற்குப் 'புயல்முனை' என்று பெயர் சூட்டினர் கடல்வழியாக இந்தியாவை அடையமுடியும் என்ற நம்பிக்கை போர்த்துக்கீசிய மாலுமிகளிடையே வளர ஆரம்பித்தது. ஆகவே, போர்த்துக்கீசிய மன்னராகிய இரண்டாம் ஜான், இம்முனைக்கு 'நன்னம்பிக்கை முனை' (Cape of Good Hope) என்று பெயர் சூட்டினர்.

டயஸ் சென்றவழியே பயணம்செய்து, 1497-ல் 'வாஸ்கோ-ட-காமா' (Vasco da Gama) என்ற மற்றொரு போர்த்துக்கீசியர் ஆப்பிரிக்க முனையைச்சுற்றி, கிழக்குக் கரையோரமாக வடக்கு நோக்கிச்சென்று, 'மாலிண்டி' (Malindi) என்ற இடத்தை அடைந்தார். அங்கிருந்து அராபிய மாலுமி ஒருவர் இந்தியப் பெருங்கடலின் வழியாக இந்தியாவை அடையும் வழியை இவருக்குக் காட்டினர். 1948-ல் வாஸ்கோ-ட-காமா இந்தியாவின் மேற்குக் கரையிலிருந்த கள்ளிக்கோட்டையை அடைந்தார். ஐரோப்பாவிலிருந்து தூரக்கிழக்கு நாடுகளுக்குப் புதிய கடல்வழியைக் கண்டுபிடித்ததின் நினைவாக, அவர் இங்குப் பளிங்குக் கல்லாலான தூண் ஒன்றை நினைவுச் சின்னமாக எழுப்பினர். 16ம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து போர்த்துக்கீசியக் கப்பல்கள் இப் புது வழியைப் பயன்படுத்தத் தொடங்கின. பட்டு வகைகள், விலையுயர்ந்த வைரக்கற்கள், நறுமணப் பொருள்கள் ஆகியவற்றை ஏராளமாக ஏற்றிக்கொண்டு போர்த்துக்கீசியக் கப்பல்கள் ஐரோப்பாவிற்கு வர ஆரம்பித்தன. அவர்கள், இலங்கை, சுமத்ரா, ஜாவா போன்ற தீவுகளுடனும் வர்த்தகத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டனர். இந்த வழி கண்டுபிடிக்கப்பட்டதன்

விளைவாக, மத்தியதரைக்கடல் பகுதி முக்கியத்துவத்தை இழந்தது, வெனிஸ், ஜினோவா போன்ற நகரங்கள் பொலிவிழந்து, அட்லாண்டிக் கடற்பகுதியில் அமைந்திருந்த நாடுகள், துறை முகங்கள் முக்கியத்துவம் பெறலாயின.

போர்ச்சுக்கலைப் பின்பற்றி ஸ்பெயினும் இந்த முயற்சியில் ஈடுபட்டது. இதற்குக் காரணமாக இருந்தவர் ஜினோவா நகரைச் சேர்ந்த 'கிறிஸ்டோபர் கொலம்பஸ்' (Christopher Columbus, 1440-1506) என்பவர். உலகம் உருண்டை வடிவானதால், அட்லாண்டிக் பெருங்கடலில் மேற்குநோக்கிப் பயணம் செய்தால், இந்தியா போன்ற கிழை நாடுகளை அடைவது இயலும் என்று அவர் கருதினர். ஆகவே, அட்லாண்டிக் பெருங்கடல் வழியாக இந்தியாவிற்கு ஒரு புது கடல்வழியைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பது அவரது திட்டம். ஆனல், போர்த்துக்கீசிய அரசாங்கம் அவருக்கு உதவ முன்வரவில்லை. இறுதியில், அவர் ஸ்பெயின் அரசை நாடினர். ஸ்பெயினின் அரசர் ஃபெர்டினண்டும், அரசி இஸபெல்லாவும் இத் திட்டத்திற்கு ஆதரவளித்தனர். இதன் விளைவாக 1492, ஆகஸ்டுத் திங்களில், கொலம்பஸ், 'பாலோஸ்' (Palos) என்ற ஸ்பானியத் துறைமுகத்திலிருந்து மூன்று கப்பல் களுடனும், 88 ஆட்களுடனும் வரலாற்று முக்கியத்துவம் பெற்ற இக் கடல்பயணத்தைத் தொடங்கினர். பல வாரங்கள் மேற்கு நோக்கி இப்பயணம் தொடர்ந்தது. கொலம்பஸுடன் இருந் தவர்கள் நம்பிக்கையிழந்தனர். ஆனல், கொலம்பஸ் மட்டும் நம்பிக்கையிழக்கவில்லை. இறுதியில் 1492, அக்டோபர்த திங்கள், 12ஆம் நாள் நிலப்பகுதி தென்பட்டது. கொலம்பஸ் இந்தியாவை அடைந்துவிட்டதாக எண்ணினர். ஆனல், உண்மையில் அவர் அடைந்த பகுதி மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்றன 'பஹாமாஸ்' (Bahamas) என்னும் தீவு. அந்தப்பகுதியிலிருந்த 'கியூபா, ஹைட்டி' (Cuba, Haitty) போன்ற தீவுகளையும் சுற்றிப்பார்த்து விட்டு, 1493-ல் ஸ்பெயின் நாட்டிற்குத் திரும்பினர். (இவைதான் இன்று 'கரிபியன் தீவுகள்' (Carribean Islands) என்று வழங்கப் படுகின்றன.) ஒப்பந்தப்படி அவர் கண்டுபிடித்த இடங்கள் அனைத்தும் ஸ்பெயின் அரசருக்குச் சொந்தமாயின. தான் கண்டு பிடித்த நிலப்பகுதி இந்தியாவிற்கு அருகிலுள்ள தீவு என்று கொலம்பஸ் தவருகக் கருதினர். ஆகவே, இத்தீவுகளில் வாழ்ந்த மக்களை அவர் 'செவ்விந்தியர்கள்' (Red Indians) என்றழைத் தார். இந்தியா, ஜப்பான், சீன முதலிய நாடுகளைத் தேடிக் கொலம்பஸ் 1493, 1498, 1502-ல் மேலும் மூன்று கடற்பயணங் களை மேற்கொண்டார். ஆனல், அம்முயற்சிகள் அவருக்கு ஏமாற்றத்தையே அளித்தன. 1493-ல் 'ஜமைகா தீவையும்

(Jamaica), 1498-ல் தென் அமெரிக்கப் பகுதியான வெனிஸீலா வையும் (Venezula), 1502-ல் 'ஹொண்டுராஸ்' (Honduras) என்ற பகுதியையும் கண்டுபிடித்தார். அட்லாண்டிக் கடலைக் கடந்துசென்ற முதல் ஐரோப்பியர் என்று கொலம்பஸைக் கருது வது பொருந்தாதாயினும், (ஏனெனில் 11, 12ஆம் நூற்றாண்டு களிலேயே 'ஸ்காண்டிநேவியாவைச்' சேர்ந்த (Scandinavia), 'வைக்கிங்குகள்' (Vikings), அட்லாண்டிக் கடலைக்கடந்து அமெரிக் காவின் வடகிழக்குப் பகுதியிலிருக்கும் 'கிரீன்லாந்துப்' (Greenland) பகுதியைக் கண்டுபிடித்தனர்) புது உலகமாகிய அமெரிக்கா கண்டுபிடிக்கப்படுவதற்கு அவர் காரணமாக இருந் தார் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

கொலம்பஸின் இப்பயணத்தைத் தொடர்ந்து பல கடல் பயணங்கள் மேற்கொள்ளப்பட்டன. 1497-ல் ஜினோவாவைச் சேர்ந்த 'ஜான் கேபட்' (John Cabot), இங்கிலாந்து நாட்டு அரசரான 'ஏழாம் ஹென்றியின்' (Henry VII) ஆணையின்படி மேற்குக் கடல்களில் பயணங்களை மேற்கொண்டு புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் பணியில் ஈடுபட்டார். இதன் விளைவாக, 'நியூபவுண்ட்லாந்துக்கு' (Newfoundland) அருகிலுள்ள 'கேப் பிரெடன் தீவை' (Cape Breten Island) அவர் கண்டுபிடித்தார். இது முதற்கொண்டு ஆங்கிலேயர்கள் அமெரிக்காமீது உரிமை கொண்டாட ஆரம்பித்தனர். கி.பி. 1500-ல் போர்ச்சுக்கல் நாட்டுப் 'பெட்ரோ காப்ரல்' (Pedro Cabral) என்னும் மாலுமி நன்னம்பிக்கை முனை வழியாக இந்தியா நோக்கிப் பயணம் செய்து கொண்டிருந்தபொழுது, புயல் காற்றினால் மேற்கு நோக்கித் தள்ளப்பட்டு தென் அமெரிக்கக் கரையை அடைந்தார். இவ்வாறு அவரால் கண்டுபிடிக்கப்பட்ட பகுதிதான் 'பிரேசில்' (Brazil) என வழங்கப்பட்டு, தென் அமெரிக்காமீது போர்த்துக்கீசியர் உரிமை கொண்டாடக் காரணமாக இருந்தது.

நாளடைவில், ஐரோப்பிய மக்கள் அட்லாண்டிக் கடலிற்கு அப்பாலிருக்கும் நிலப்பகுதி ஆசியா அன்று, அது ஒரு புது உலகம் என்ற உண்மையை உணர ஆரம்பித்தனர். கி.பி. 1501-ல் ஃபிளாரன்ஸ் நகரைச் சேர்ந்த 'அமெரிக்கோ வெஸ்புச்சி' (Americo Vespucci) என்பவர் ஸ்பெயின் மன்னரின் ஆதரவைப்பெற்று இந்தப் புது உலகிற்குச்சென்று சுமார் 2000 மைல் நீளத்திற்குப் பிரேசிலின் கிழக்குக் கடற்கரையை ஆராய்ந்தார். தன்னுடைய கடற்பயணங்கள் பற்றி 1503-ல் வெளியிட்ட நூலில் இந்தப் புது உலகத்தைக் கண்டுபிடித்தது தாமே என்று கூறிக்கொண்டார். நான்கு ஆண்டுகளுக்குப்பிறகு, ஜெர்மானியப் பேராசிரியர் ஒருவர்

இந்தப் புது உலகத்திற்கு இவர் பெயரையே சூட்டவேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தார். அப்பொழுது முதற்கொண்டு உலகத்தின் இந்தப்பகுதி அமெரிக்கா என்றழைக்கப்பட்டது.

இந்தக் கண்டுபிடிப்புகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல அமைந்தது 1519-ல் போர்த்துக்கீசிய மாலுமி 'ஃபெர்டினன்ட் மெகல்லன்' (Ferdinand Magellan) என்பவர் மேற்கொண்ட கடல்பயணம். ஸ்பெயின் அரசரின் ஆதரவைப் பெற்று, ஐந்து கப்பல்களுடனும், சில மாலுமிகளுடனும் மேற்கு நோக்கி அவர் தன் பயணத்தைத் தொடங்கினர். அட்லாண்டிக் கடலைக்கடந்து தென் அமெரிக்காவை அடைந்து, கிழக்குக் கரையோரமாகத் தெற்கே சென்று, 'மெகல்லன் ஜலசந்தியில்' (Magellan Straits) நுழைந்து மேற்கில் ஒரு பெருங்கடலைக் கண்டார். இது கொந்தளிப்பின்றி அமைதியாக இருந்ததால் இதற்குப் 'பசிபிக் பெருங்கடல்' (Pacific Ocean) என்று பெயரிட்டார். இதைக் கடந்துசென்று 1521-ல் பல தீவுகளைக் கண்டுபிடித்தார். அவரால் கண்டுபிடிக்கப்பட்ட தீவுக்கூட்டத் திற்கு ஸ்பெயின் மன்னர் இரண்டாம் பிலிப்பின் நினைவாக 'பிலிப்பைன் தீவுகள்' என்று பெயர் வழங்கலாயிற்று. மெகல்லன், பிலிப்பைன் தீவு மக்களால் கொல்லப்பட்டார். எஞ்சியிருந்த சில மாலுமிகள் தொடர்ந்து தங்கள் பயணத்தை மேற்கொண்டு வழியில் 'நறுமணத் தீவுகளைக்' (Spices Islands) கண்டு, இறுதியில் ஸ்பெயின் நாட்டை அடைந்தனர். இவ்வாறுக முதன் முதலில் உலகத்தை வலம்வந்த மாலுமிகள் இவர்களே. இதனுல், உலகம் உருண்டை வடிவமானது என்பது உறுதிப்பட்டது. இந்தச் சாதனையைக் காண மெகல்லன் உயிருடன் இருக்கவில்லை என்ருலும், அவர்தான் உலகத்தைச் சுற்றிய முதல் மாலுமி எனக் கூறுவது சாலப்பொருந்தும்.

புதிய நாடுகள் கண்டுபிடிப்பதில் முன்னணியில் நின்ற போர்ச்சுகல், ஸ்பெயின் ஆகிய நாடுகளிடையே கண்டுபிடிக்கப் பட்ட நாடுகளின் சொந்தம்பற்றிப் போட்டியும் பூசலும் ஏற்படவே, அவை போப்பாண்டவரின் உதவியை நாடின. 'ஆரும் அலெக்ஸாண்டர்' (Alexandar VI) என்ற போப் நடுவராக இருக்க ஒப்புக்கொண்டு 1493-ல் ஓர் ஆணையைப் பிறப்பித்தார் (Papal Bull). இந்த ஆணையை இருநாடுகளும் ஏற்றுக்கொண்டன. இதன்படி, 'அசோர்ஸ்' (Azores) தீவுகளுக்கு நூறு லீக் மேற்கில் வடக்கு, தெற்காக ஒரு கற்பனைக் கோடு வரையப்பட்டு இந்தக் கோட்டிற்குக் கிழக்கிலுள்ள பகுதிகள் போர்ச்சுகலுக்கும், மேற்கி லுள்ள பகுதிகள் ஸ்பெயினுக்கும் சொந்தம் என்று முடிவு செய்யப்

பட்டது. இந்த ஏற்பாட்டின்படி, ஏறக்குறைய ஆப்பிரிக்கா, ஆசியா, தென் அமெரிக்கா ஆகியவற்றின் கிழக்குப்பகுதி ஆகியவை போர்ச்சுகளுக்கும், வட அமெரிக்கா, தென் அமெரிக்காவின் மற்ற பகுதிகள் ஸ்பெயினுக்கும் சொந்தமாயின.

ஆசியா, ஆப்பிரிக்காக் கண்டங்களைக் காட்டிலும் அமெரிக்காக் கண்டத்தில் ஸ்பானியர்களும், போர்த்துக்கீசியர்களும் தங்கள் குடியேற்றங்களை அமைப்பதில் வெற்றிகண்டனர். இந்தப் புது உலகமக்களின் எண்ணிக்கை குறைவாக இருந்ததாலும், அவர்கள் கலாசாரத்துறையில் பின்தங்கியிருந்ததாலும் ஐரோப்பியர் களால் எளிதில் வெல்லப்பட்டனர். ஆப்பிரிக்காவில், ஐரோப் பியர்களின் ஊடுருவலுக்கு எதிர்ப்பு இருந்தபோதிலும் கடைசியில் அதுவும் கைப்பற்றப்பட்டது. ஆசியாவில் மக்கள் தொகை அதிகம். மேலும், இங்கு வாழ்ந்த மக்கள் மேம்பாடு அடைந்து தமக்கென ஒரு பண்பாட்டையும் பெற்றிருந்தனர். அவர்கள் ஐரோப்பியர்களின் ஊடுருவலை அறவே வெறுத்தனர். இறுதியில் ஐரோப்பிய ஆதிக்கம் ஏற்பட்ட போதிலும், ஆசிரியர்களின் பண்பாடு ஐரோப்பியர்களால் பாதிக்கப்படவில்லை.

புது உலகத்தில் தென் அமெரிக்காவின் பிரேசில் பகுதியில் தான் போர்த்துக்கீசியர்கள் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்த முடிந்தது. இங்கு வாழ்ந்த மக்களின் எதிர்ப்பை எளிதில் முறியடித்து, ஃபிரெஞ்சு, டச்சு, ஸ்பானியப் போட்டியையும் ஒழித்துப் போர்த்துக்கீசியர்கள் தங்கள் செல்வாக்கை இங்கு நிலை நாட்டினர். பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதியில் தெற்கில் 'சாவோ பாலோ' (Sao Paulo), வடக்கில் 'பெர்னாம்புகோ' (Pernambuco), 'பாஹியா' (Bahia) போன்ற குடியேற்றங்கள் அமைக்கப்பட்டன. 1549-ல் பிரேசில் முழுவதையும் ஆள, ஒரு கவர்னர்ஜெனரலைப் போர்த்துக்கீசிய மன்னர் நியமித்தார்.

புது உலகில், ஸ்பானியர்கள் முதன் முதலில் 'சான் டாமிங்கோ' (San Domingo) அல்லது 'ஹிஸ்பானியோலா' (Hispaniola) என்னும் தீவில் குடியேறினார்கள். படிப்படியாக 'கரிபியன்' (Caribean) தீவுகள் என்றழைக்கப்படும் மற்ற தீவு களையும், அடுத்திருக்கும் தென் அமெரிக்காவையும் அவர்கள் கைப்பற்றினார்கள். ஸ்பானியர்கள் அமெரிக்காவைக் கைப்பற்ற முயற்சித்த பொழுது, கலாசார மேம்பாடு அடைந்த பல பேரரசுகள் அப்பகுதிகளில் இருந்தன. மெக்சிகோப் பகுதியில் திகழ்ந்த 'மாயன்' (Mayan) கலாசாரத்தையும், 'அஸ்டெக்' (Azetc) கலாசாரத்தையும், 'பெருவில்' (Peru) திகழ்ந்த 'இன்கா'

(Incas) கலாசாரத்தையும் இங்குக் குறிப்பிடலாம். 16ஆம் நூற்றாண்டில் அமெரிக்காவிற்குச் சென்ற ஸ்பானியர்கள் ஈவு இரக்கமின்றி, அந்த மக்களையும், அவர்கள் பண்பாட்டையும் அழித்துத் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்தினர். 1519-ல் 'கோர்டெஸ்' (Cortes) என்ற ஸ்பானியப் படைத்தலைவர் 'அஸ்டெக்குகளை' (Aztecs) ஒழித்து, மெக்ஸிகோப் பகுதியைக் கைப்பற்றினார். 1531-ல் 'ஃபிரான்சிஸ் பிஸாரோ' (Francisco Pizzaro) என்னும் மற்றொரு ஸ்பானியர், இன்காக்களின் அரசரைச் சிறைப்பிடித்து அவர்களுடைய பேரரசை ஒழித்து, பெருவில் ஸ்பானிய ஆதிக்கத்தை ஏற்படுத்தினார். 1535-ல் 'லிமா' (Lima) என்னும் நகரம், தென் அமெரிக்காவில் ஸ்பானியப் பேரரசின் தலைநகரமாக ஆக்கப்பட்டது. இதைத் தொடர்ந்து வேறு சில ஸ்பானியர்கள், ஸ்பானிஷ் அரசின் ஆதரவைப்பெற்றுத் தென் அமெரிக்காவில் 'அர்ஜென்டினா' (Argentina), 'பராகுவே' (Paraguay), 'சிலி' (Chile), 'ஈக்வடார்' (Equador), 'கொலம்பியா' (Columbia) போன்ற பகுதிகளில் குடியேறினர்.

தென் அமெரிக்காவில் ஸ்பெயினும், போர்ச்சுக்கலும் குடியேற்றங்களை அமைக்கும் பணியில் ஈடுபட்டது போல வட அமெரிக்காவில் இங்கிலாந்தும், ஃபிரான்சும் இம்முயற்சியில் இறங்கின. தொடக்கத்தில் இவ்விரு நாடுகளும் இத்துறையில் அதிக ஆர்வத்தைக் காட்டவில்லை. 'ஜான் காபட்' (John Cabot) என்னும் இத்தாலியர், இங்கிலாந்து அரசரான ஏழாம் ஹென்றியின் உதவியோடு 1497-ல் புறப்பட்டு, வடமேற்காக அட்லாண்டிக் கடலைக்கடந்து, பனி மூடிக்கிடந்த ஒரு பெருந்தீவை அடைந்தார். புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட இந்தத் தீவு 'நியூபவுண்ட்லாந்து' (Newfoundland) என்று பெயர்பெற்றது. 1498-ல் மீண்டும் ஒரு பயணத்தை மேற்கொண்டு நியூபவுண்ட்லாந்து வந்து, அங்கிருந்து வட அமெரிக்கக் கரையில் இறங்கினார். பிறகு, 1509-ல் அவரது மகனான 'செபாஸ்டியன் காபட்' (Sebastian Cabot) என்பவர் 'லாப்ரடார்' (Labrador) என்ற பகுதியில் இறங்கினார். 1553—54-ல் 'ரிச்சர்ட் சான்சலர்' (Richard Chancellor) என்பவரும், 'ஹியூ வில்லபி' (Hugh Willoughby) என்பவரும் ஆர்க்டிக் பகுதியை ஆராயும் பணியில் ஈடுபட்டார்கள்.

1534-ல் 'ஜாக்கஸ் கார்டியர்' (Jaques Cartier) என்ற ஃபிரெஞ்சுக்காரர், வட அமெரிக்காவில் செயின்ட் லாரன்ஸ் நதியின் முகத்துவாரத்தில் இறங்கினார். இப்பகுதிதான், பிறகு கனடா என்ற பெயர் பெற்றது. இவ்வாறாகப் புது உலகத்தை ஸ்பெயின், போர்ச்சுகல், பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற ஐரோப்பிய நாடுகள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டன.

## இந்தக் கண்டுபிடிப்புக்களின் விளைவுகள்

1. உலகெங்கும் ஐரோப்பிய ஆதிக்கம் பரவுவதற்கு இந்தக் கண்டுபிடிப்புகள் வழிகோலின. குடியேற்றங்கள் அமைப்பதில் ஐரோப்பிய நாடுகள் முனைந்தன. இதனால் ஏகாதிபத்தியக் கோட்பாடு தோன்றியது.

2. சீனா, இந்தியா, அமெரிக்கா, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளுடன் ஏற்பட்ட வர்த்தகத் தொடர்பு காரணமாக ஐரோப்பாவில் செல்வம் குவிந்தது. செல்வம் பெருகியதால் 'முதலாளித்துவம்' (Capitalism) என்னும் முறை தோன்றியது. ஐரோப்பிய நாடுகளிடையே போட்டி மனப்பான்மை தோன்றி, போர்கள் ஏற்படக் காரணமாக இருந்தது.

3. இந்தத் துறையில் நடத்தப்பெற்ற ஆராய்ச்சிகளின் விளைவாக, இந்தியாவிற்குச் செல்ல ஒரு புது கடல்வழி கண்டுபிடிக்கப்பட்டது.

4. செல்வத்திலும், சிறப்பிலும், பழைய உலகத்தை மிஞ்சக்கூடிய ஒரு புது உலகம் கண்டுபிடிக்கப்பட்டது.

5. இந்தப் புதிய வியாபார வழிகள் மத்திய தரைக்கடல் பகுதியில்லாமல் அட்லாண்டிக் கடல்பகுதியில் அமைந்திருந்ததால், மத்தியதரைக்கடல்பகுதி பெற்றிருந்த முக்கியத்துவம் மறைந்தது. மத்தியதரைக்கடல் பகுதியிலிருந்த வெனிஸ், ஜினேவா போன்ற நகரங்கள் பொலிவிழந்தன. உலகத்தின் வர்த்தகம் முழுவதும் அட்லாண்டிக்கடல் பகுதியிலிருந்ததால், அப்பகுதியிலிருந்த ஸ்பெயின், போர்ச்சுகல், இங்கிலாந்து, ஃபிரான்ஸ் போன்ற நாடுகள் இப்பொழுது முக்கியத்துவம் பெறுகின்றன.

6. முன்போல அல்லாது இப்பொழுது ஐரோப்பாவிற்கும் ஆசியாவிற்குமிடையே உறவு, ஒரு புது அடிப்படையில் வளரலாயிற்று. இதுவரை, ஆசிரியர்கள் பலமுறை ஐரோப்பியர்மீது படையெடுத்திருப்பதை வரலாற்றின் வாயிலாக நாம் அறிகின்றோம். அலெக்சாண்டரின் ஆசியப் படையெடுப்பு தவிர, வேறு எப்பொழுதும் ஐரோப்பியர்கள் ஆசியாவில் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்தச் செய்த முயற்சிகள் வெற்றி பெறவில்லை. ஆனால், இந்தக் கண்டுபிடிப்புகளுக்குப் பிறகு ஐரோப்பிய, ஆசிய

மக்களுக்கிடையே உள்ள உறவில் ஒரு புது சகாப்தம் தோன்று கிறது. ஐரோப்பா, ஆசியாவை வென்று, ஆசியாவிற்கு வழி காட்டியாக மாறும் நிலையைத் தற்கால ஐரோப்பிய வரலாற்றில் காண்கிறோம்.

7. மனிதனுடைய புவியியல் கருத்துகள் வளர்ந்தன. இதுவரை மனிதன் பெற்றிருந்த புவியியல் அறிவு எவ்வளவு உண்மையற்றது, எவ்வளவு முழுமை பெறாதது என்பதை மக்கள் உணர ஆரம்பித்தனர். மேன் மேலும் இந்தத்துறையில் ஆராய்ச்சிகளை மேற்கொள்ள, இந்தக் கண்டுபிடிப்புகள் ஆக்கம் அளித்தன.

# 5. இத்தாலியப் போர்கள்

## முதல் கட்டம் : 1494–1518

### பதினைந்தாம் நூற்றாண்டில் இத்தாலி

பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் ஸ்பெயின், ஃபிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளில் ஒற்றுமையுணர்ச்சி மேலோங்கி, வலிமையுள்ள தேசிய முடியரசுகள் தோன்றின என்பதை முன்பு படித்தோம். ஆனால், இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகள் இதற்கு மாறான வகையில் ஒற்றுமையிழந்து பலவீன மான நிலையில் இருந்தன. இந்த இரண்டு நாடுகளிலும், தேசியத்தின் வளர்ச்சியையும், ஒற்றுமையுணர்வையும், பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் நாம் காண்கின்றோம். பல நூற்றாண்டுகள் அமைதிக்கும், மேம்பாடு அடைந்த பண்பாட்டிற்கும் இருப்பிடமாக விளங்கிய இத்தாலி, பதினாறும் நூற்றாண்டில், ஸ்பெயின், ஃபிரான்ஸ் ஆகிய நாடுகளின் ஆதிக்கப் போட்டியில் பிரதம போர்க்களமாக விளங்கும் பரிதாபமான நிலையைக் காண்கிறோம்.

ரோமானியப் பேரரசு வீழ்ச்சியடைந்தது முதல், ஐரோப்பாவின் வலிமை பொருந்திய அரசுகளின் ஆக்கிரமிப்புக்கு இலக்காக மாறியது இத்தாலி. ‘விசிகோத்துகள்’ (Visigoths) முதல் ‘ஃபிராங்குகள்’ (Franks) ஈருகப் பல இனமக்களின் படையெடுப்பிற்கு உள்ளாகியது இந் நாடு. பத்தாம் நூற்றாண்டு முதல் பதின்மூன்றும் நூற்றாண்டுவரை, புனித ரோமானியப் பேரரசர்கள் அடிக்கடி இத்தாலியின்மீது படையெடுத்தார்கள். பதின்மூன்றும் நூற்றாண்டின் இடைப்பகுதிவரை, இத்தாலி புனித ரோமப் பேரரசின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. புனித ரோமானியப் பேரரசர்கள் ஜெர்மனியர்களாதலாலும், இத்தாலிய நகரங்களின் எழுச்சிக்கு ஆதரவளிக்காததாலும், மக்கள் அவர்கள் ஆட்சியை விரும்பவில்லை. புனித ரோமானியப் பேரரசின் ஆதிக்கம் முற்றுப்

பெற்றது. 15ஆம் நூற்றுண்டில் கலாசாரத்துறையில் முன்னணியில் இருந்த இத்தாலி, அரசியல் துறையில் மிகவும் பின்தங்கியிருந்தது. ஒன்றோடொன்று சண்டையிட்டுக்கொள்ளும் பல சிறிய அரசுகளைக் கொண்ட நாடாக அது விளங்கியது. அறிவுத்துறையிலும், கலைத்துறையிலும் ஏற்பட்டதுபோல, படைத்துறையில் வளர்ச்சி பாதுகாப்பற்ற நாடாக அது விளங்கியது. இந்நிலையிலிருந்த இத்தாலி, அண்டையிலிருந்த வலிமை படைத்த ஃபிரான்ஸ் நாட்டின் ஆக்கிரமிப்பிற்கு இலக்கானதில் வியப்பொன்றுமில்லை. பதினைந்தாம் நூற்றுண்டில், இத்தாலியின் முக்கிய அரசுகளாகத் திகழ்ந்தவை, போப்பாண்டவரின் ஆட்சிக்குட்பட்டிருந்த, ரோம் நகரைத் தலைநகராகக் கொண்ட மத்திய இத்தாலி, தென்பகுதியில் சிசிலித்தீவைக் கொண்ட நேப்பிள்ஸ் அரசு, மிலான், வெனிஸ், ஃபிளாரன்ஸ் போன்ற நகர அரசுகள்.

சுதந்தரமாக வாழ விரும்பிய பல நகரங்கள், நிலமானியப் பிரபுக்களின் ஆதிக்கம் மேலோங்கியிருந்த சிறு அரசுகள் ஆகிய வற்றைக் கொண்ட இத்தாலியின் மத்திய பகுதியைக்காட்டி ஆளுவது அவ்வளவு எளிதானது அன்று. போப்பாண்டவரின் ஆதிக்கம் ஒருவாறுக இவ்வரசுகளின்மீது நிறுவப்பட்டது. பதினான்காம் நூற்றுண்டில், ரோம் நகரில் வசித்த போப்பாண்ட வர்கள், ஃபிரெஞ்சு மன்னர் ஆதிக்கத்திற்குட்பட்டு, அவினன் நகரத்திற்குத் தங்கள் அதிகாரப்பீடத்தை மாற்றிக்கொண்டதால் போப்பின் புகழ் குன்றியது. மத்திய இத்தாலி அரசுகள்மீது இருந்த போப்பின் அதிகாரம் முற்றிலும் மறைந்தது. அதே நூற்றுண்டின் இறுதியில், போப்பாண்டவர், ஃபிரெஞ்சு மன்னரின் பிடியிலிருந்து விடுபட்டு மீண்டும் ரோம்நகரை வந்தடைந்தவுடன், மற்ற இத்தாலிய அரசர்களைப் போலவே தாமும் மத்திய இத்தாலி மீது ஆதிக்கம் செலுத்த வேண்டுமென்று, இழந்த ஆதிக்கத்தை மீண்டும் ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டனர். இம்முயற்சியில் வெற்றியும் பெற்று, பல போப்பாண்டவர்கள் எல்லா உலக இன்பங்களையும் துய்த்து, டாம்பீகமான, சிற்றின்ப வாழ்க்கையை அனுபவித்துக்கொண்டு அப்பதவிக்கே இழிவைத் தேடித்தந்தனர். இவர்களுக்கிருந்த பதவிமோகத்தின் காரணமாகத்தான் பத்தொன்பதாம் நூற்றுண்டுவரை இத்தாலியில் ஒற்றுமை இயக்கம் வெற்றி பெறவில்லை. மற்ற இத்தாலிய அரசுகளுடன், மத்திய இத்தாலிய அரசுகளும் இணைவதற்கு இவர்கள் தடையாக இருந்தனர்.

நேப்பிள்ஸ் அரசு படைமானிய முறை வேரூன்றியிருந்த ஓர் அரசு. மூன்று வெவ்வேறு அரச குடும்பங்களினுல் ஆளப்பட்ட

இந்த அரசு, 15ஆம் நூற்றுண்டில் ஸ்பெயினிலுள்ள 'அரகானேச்' (Aragon) சேர்ந்த ஒரு குடும்பத்தின் ஆட்சியின்கீழ் இருந்தது. 1458 முதல் 1494 வரை இக்குடும்பத்தைச் சேர்ந்த முதலாம் 'ஃபெர்ராண்டே' (Ferrante I) என்ற அரசர் நேப்பிள்ஸை ஆண்டு வந்தார். இவருடைய ஃபிரெஞ்சு உறவினர்கள் சிலர், நேப்பிள்ஸ் அரியணைக்கு உரிமை கொண்டாடினர். இவ்வாருக, ஃபிரான்ஸைச் சேர்ந்த 'ஆஞ்சு' (Anjou) குடும்பத்தினருக்கும், நேப்பிள்ஸை ஆண்டு கொண்டிருந்த 'அரகான்' (Aragon) குடும்பத்தினருக்கு மிடையே பலத்த வாரிசுரிமைப் போட்டி ஏற்பட்டது. 1494-ல் ஃபிரெஞ்சு அரசரான எட்டாம் சார்லஸ் நேப்பிள்ஸ்மீது ஃபிரெஞ்சுக்காரர்களுக்கிருந்த உரிமையை வலியுறுத்தும் நோக்கத்துடன் இத்தாலிமீது படையெடுத்தார். இதுதான் ஃபிரான்சுக்கும், ஸ்பெயினுக்குமிடையே நடந்த இத்தாலியப் போர்களின் தொடக்கம்.

மிலான் நகரத்தை முதன் முதல் ஆண்டது 'வைகாண்டி' (Visconte) என்னும் குடும்பம். பதினைந்தாம் நூற்றுண்டில் (1447) இக்குடும்பத்தைச் சேர்ந்த கடைசி அரசர் வாரிசு யாருமின்றி இறந்துவிட்டார். மிலான் சுதந்திர அரசராகத் தன்னை அறிவித்துக் கொண்டது. ஆனால், 1450-ல் 'ஸ்போர்சா' (Sforza) என்னும் படைத்தலைவன் அதிகாரத்தைக் கைப்பற்றினான். இவனுடைய சந்ததியினர் 1499 வரை மிலானை ஆண்டனர். மிலானை முதலில் ஆண்ட வைகாண்டி குடும்பத்திற்கும், ஃபிரான்சின் ஆர்லியன்ஸ் குடும்பத்திற்குமிடையே ஏற்பட்ட திருமண உறவின் அடிப்படையில், ஆர்லியன்ஸ் குடும்பத்தைச் சேர்ந்த ஃபிரெஞ்சு அரசர் பன்னிரண்டாம் லூயி, மிலான் மீது அரசுரிமை கொண்டாடினுர். 1499-ல் மிலானைக் கைப்பற்றினுர். இவ்வாறு மிலான் ஃபிரெஞ்சு ஆட்சிக்குட்பட்டது.

ஏட்ரியாடிக் கடல் தீவுகளிடையே அமைந்த வெனிஸ் நகரம், அந்நியர் படையெடுப்பு ஏற்படாவண்ணம் இயற்கையாகவே பாதுகாப்புப் பெற்றிருந்தது. மத்திய தரைக்கடல் பகுதியின் மையத்தில் அது அமைந்திருந்ததால் மேற்கு, கிழக்கு நாடுகளிடையே வளர்ந்து கொண்டிருந்த வர்த்தகத்தில் வெனிஸ் நகரம் ஒரு முக்கிய பங்கை ஏற்கும் வாய்ப்பைப் பெற்றிருந்தது. அது மட்டுமின்றி 'கோர்பு' (Corfu), 'கிரீட்' (Crete), 'சைப்ரஸ்' (Cyprus), 'ஈஜியன் கடல்தீவுகள்' (Aegean Islands) போன்ற பகுதிகள் அடங்கிய கடற் பேரரசின் மையமாகவும் விளங்கியது. 'ஏட்ரியாடிக்கின் அரசி' (Queen of the Acriatic) என்ற புகழ் பெற்ற வெனிஸ் நகரம், கிழக்கு மத்திய தரைக்கடல் பகுதியுடன்

நெருங்கிய வர்த்தகத் தொடர்பு கொண்டு, ஏராளமான செல்வத்தை ஈட்டியது. பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெனிஸ், மூவாயிரம் கப்பல்களையும், மூன்று லட்சம் மாலுமிகளையும், வலிமையான பெரும் படையையும், வலிமையான அரசாங்கத்தையும் பெற்றிருந்தது. பெயரளவில், வெனிஸ் நகரத்து ஆட்சிமுறை ஒரு குடியாட்சி என்றாலும், நடைமுறையில் ஒரு சில செல்வந்தர்கள் கையில்தான் அதிகாரங்கள் யாவும் இருந்தன. வெனிஸ் நகரத்தின் செல்வத்திற்கும், பெருமைக்கும் காரணம் அந்நகரத்து வியாபாரிகள்தான். எனவே, அவர்கள் ஆட்சிப்பொறுப்பு தங்கள் கையிலேயே இருக்கவேண்டுமென்று விரும்பினர். சிறிது சிறிதாக, வெனிஸ் ஆட்சி முறையிலிருந்து ஜனநாயகக்கூறுகளை அகற்றிவிட்டுத் தாங்களே அதிகாரத்தைக் கைப்பற்றி தாங்களும், தங்கள் சந்ததியார்கள் மட்டுமே ஆளும் ஒரு நிலையை உருவாக்கிக்கொண்டனர். வியாபாரிகளின் கட்டுப்பாட்டில் இயங்கும் 'Grand Council என்ற ஒரு சபையும், பத்து உறுப்பினர்கள் கொண்ட கமிட்டி ஒன்றும், தேர்ந்தெடுக்கப்பட்ட 'டியூக்' (Duke) என்னும் அதிகாரியும், ஆட்சிப்பொறுப்பை ஏற்றனர். பெயரளவில், அதிகாரம் 'Grand Council'—வசம் இருந்தாலும். நடைமுறையில், பத்து உறுப்பினர் கொண்ட கமிட்டிதான் அன்றாட நிர்வாகத்தை நடத்தியது. இந்த வர்த்தகப் பிரபுக்கள் ஆட்சியின் சிறந்த பணி என்னவெனில். வெனிஸ் நகரை உள்நாட்டுக் குழப்பங்களிலிருந்து காப்பாற்றி, அதற்கு ஒரு நிலையான அரசாங்கத்தைக் கொடுத்து, அதன் பொருளாதார வளர்ச்சிக்கு உதவியதாகும். மறுமலர்ச்சியின் பொழுது இத்தாலிய கலாசார வளர்ச்சிக்கு வெனிஸ்நகரம் ஆற்றிய தொண்டு இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஃபிளாரன்ஸ்: பொருளாதார, கலாசாரத் துறைகளில் வெனிஸ் நகரத்துடன் ஒப்பிடக்கூடிய ஒரே நகரம் ஃபிளாரன்ஸ். ஆனால், வெனிசைப்போல அரசியல் துறையில் ஃபிளாரன்ஸ் நிலையான ஆட்சியைப் பெற்றிருக்கவில்லை. பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை 'வர்த்தகக் குழுக்கள்' (Merchant Guilds), 'கைத்தொழிற் குழுக்கள்' (Craft Guilds) ஆகியவைகளுக்கிடையே போட்டி ஏற்பட்டு, அதிகாரம் வர்த்தகக் குழுக்களின் கையில் சிக்கியது. இந்தச் சூழ்நிலையில்தான், பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஃபிளாரன்ஸ் நகரத்தின் ஆட்சி, வர்த்தகம்—பாங்கு தொழிலை நடத்தி வந்த மெடிச்சி குடும்பத்தினரால் கைப்பற்றப்பட்டது. 'காசிமோ' (Cosimo) என்பவர்தான் முதன் முதல் ஃபிளாரன்ஸ் நகர ஆட்சியைக் கைப்பற்றினர். மெடிச்சி குடும்பத்தினர் ஜனநாயகக் கருத்துகளுக்குப் பெரிதும் ஆதரவளித்தனர். இக்

குடும்பத்தினரின் தலைமையில், ஃபிளாரன்ஸில் ஒரு பிரபுத்துவ ஜனநாயக ஆட்சிமுறை ஏற்படுத்தப்பட்டது (Oligarchic Republic) 'லொரன்சோ-டி-மெடிச்சி (Lorenzo-de-Medici, the Magnificent) என்பவர் ஃபிளாரன்ஸை ஆண்டவர்களில் முக்கிய மான ஒருவர். இவர் கூறிய அரசியல் அறிவு பெற்றவர், ஒரு கவிஞர். கவிஞர்கள், தத்துவ ஞானிகள், கலைஞர்கள் ஆகிய பலரைப் போற்றி ஆதரித்தவர். அவர் ஆட்சிக்காலத்தில் ஃபிளாரன்ஸ் நகரம் இத்தாலியக் கலாசாரத்தின் சிறந்த உறைவிடமாகத் திகழ்ந்தது. லொரன்சோவிற்குப் பிறகு 'சவொனரோலா' (Sovonarola) என்ற சமயக்குருவின் தலைமை யில் மெடிச்சிகள் ஆட்சிக்கு எதிராக ஓர் இயக்கம் தோன்றியது. அவர் 1494-ல் ஃபிளாரன்ஸ் மீது படையெடுத்து வந்த ஃபிரெஞ்சு மன்னன் எட்டாம் சார்லசை ஆதரித்து அவரை வரவேற்றார். மெடிச்சிக்கள் ஆட்சி ஒழிக்கப்படுவதற்குக் காரண மாகவும் இருந்தார்.

### போரின் முதல் கட்டம் 1494—1518

எட்டாம் சார்லஸின் ஆட்சிக்காலத்தில் (1483—1498) இத்தாலிமீது ஃபிரெஞ்சுப் படையெடுப்பின் காரணங்கள் :

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில், இத்தாலியின் அரசியல் குழப்ப நிலையிலிருந்தது. ஃபிளாரன்ஸ் நகரத்தை ஆண்ட லொரன்சோ-டி-மெடிச்சியின் அரசியல் அறிவு, திறமை காரண மாக, நேப்பிள்ஸ், மிலான், ஃபிளாரன்ஸ் நகரங்களிடையே போட்டியும், பூசலும் மறைந்து, அவை ஒற்றுமையோடு செயல் பட்டு வந்தன. ஆனால், 1492-ல் லொரன்சோவின் மறைவிற்குப் பிறகு இந்த ஒற்றுமையுணர்ச்சி நீடிக்கவில்லை. இத்தாலியின் ஐந்து முக்கிய அரசுகளான போப்பின் அரசு, நேப்பிள்ஸ், மிலான், வெனிஸ், ஃபிளாரன்ஸ் ஆகியவை தங்கள் சுயநலத்திற்காக இத்தாலியின் நலத்தையே புறக்கணிக்கத் தயாராக இருந்தன. தேசிய ஒற்றுமை உணர்ச்சியோ, நாட்டுப்பற்றோ, படையெடுத்து வரும் அந்நியர்களை ஒன்றுகூடி எதிர்க்கவேண்டும் என்ற அக்கறையோ, இத்தாலிய அரசுகளிடம் காணப்படவில்லை. அறிவுத்துறையிலும், கலைத்துறையிலும் முன்னேற்றம் அடைந்த அளவிற்குப் போர்த்துறையில் இத்தாலி முன்னேற்றம் அடைய வில்லை. இத்தாலிய அரசுகளிடையே ஒற்றுமையுணர்வு இல்லாதது மட்டுமன்றி, அந்நியப் படையெடுப்பிலிருந்து நாட்டைப் பாது காக்கத் தேவையான தேசியப் படையொன்றும் இல்லை. இத்தாலிய அரசுகள் யாவும் கூலிப்படைகளையே நம்பி இருந்தன. இது இத்தாலியின் பாதுகாப்பைப் பெரிதும் பாதித்தது. செல்வம்

கொழித்திருந்த இத்தாலியின் போதுமான பாதுகாப்பு இல்லாத நிலை, அந்நியர்கள் படையெடுப்பிற்குச் சாதகமான சூழ்நிலையை உருவாக்கியது. இத்தாலியின் இந்தப் பரிதாபகரமான நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, இத்தாலிமீது படையெடுத்தது ஃபிரான்ஸ். இச்சமயத்தில் ஃபிரான்சில் வலிமை பொருந்திய முடியாட்சி ஏற்பட்டு, பொருளாதார, போர்த்துறைகளில் முன்னணியில் நின்றது ஃபிரான்ஸ். மற்ற ஐரோப்பிய நாடுகளைவிட, வலிமை பொருந்திய, பயிற்சி பெற்ற படையையும், குறிப்பாக, பீரங்கிப் படையொன்றையும் அது பெற்றிருந்தது. நிலமானியப் பிரபுக்கள் எல்லோரும் ஒடுக்கப்பெற்று, மன்னர் அதிகாரம் நிலைநிறுத்தப் பட்டது. ஃபிரான்சை, இந்த உன்னத நிலைக்குக் கொண்டுவரக் காரணமாக இருந்தவர் பதினொன்றும் லூயி. இந் நிலையில்தான் பதினொன்றும் லூயி இறந்து, எட்டாம் சார்லஸ் பட்டத்திற்கு வந்தார்.

ஃபிரெஞ்சு அரசன் எட்டாம் சார்லஸ், தன் தந்தை பதினொன்றும் லூயியைப்போல அறிவில் சிறந்தவரல்லர். ஆனால், தம் ஆட்சியில் ஏதாவது ஒரு பெரிய சாதனை புரியவேண்டுமென்ற ஆர்வம் கொண்டவர். இத்தாலியின் பலவீனமான நிலை அவரது கவனத்தைக் கவர்ந்தது. நேப்பிள்ஸ் அரசின்மீது, ஃபிரெஞ்சு அரசர்களுக்கு இருக்கும் உரிமையைச் சுட்டிக்காட்டி இத்தாலிமீது படையெடுக்க ஒரு வாய்ப்பை இவர் ஏற்படுத்திக்கொண்டார்[1]

இந்தப் படையெடுப்புக்கு மற்றொரு காரணமும் இருந்தது. 1485-ல் 'ஃபெர்ராண்டே' (Ferrante) என்பவரின் காலத்தில் பிரபுக்கள் இவருடைய கொடுங்கோலாட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். இக் கிளர்ச்சி ஒடுக்கப்பட்டு பல பிரபுக்கள் நாடு கடத்தப்பட்டனர். இவ்வாறு நாடு கடத்தப்பட்ட பிரபுக்களில் சிலர் 1492-ல் நேப்பிள்ஸ் அரியணைக்குத் தமக்கு இருக்கும் உரிமையைக் கோரும்படி எட்டாம் சார்லஸுக்கு அழைப்பு விடுத்தனர்.

[1] 1435-ல் 'இரண்டாம் ஜோனு' (Joanna II) என்ற நேப்பிள்ஸ் அரசி இறக்கும் பொழுது. இந்த அரசை 'ரானே' (Rene) என்ற 'ஆஞ்சு' (Anjou) குடும்பத்தைச் சேர்ந்த ஒருவருக்குக் கொடுத்துச் சென்றூர். 1480-ல் ரானே இறந்தபோது, அவருடைய உறவினரான 'மெயின் நகரத்து சார்லஸ்' (Charles of Maine) இவ்வுரிமையைப் பெற்றூர். 1481–ல் சார்லஸ் ஓர் உயிலின்படி நேப்பிள்ஸ் அரசுரிமையைப் பதினொன்றும் லூயிகு அளித்தார். பதினொன்றும் லூயியின் மகன் எட்டாம் சார்லஸ் இதன் அடிப்படையில் நேப்பிள்ஸ் அரசுமீது உரிமை கொண்டாடி அதைப் பெறும் பொருட்டு 1494-ல் இத்தாலியின்மீது படையெடுக்கத் தீர்மானித்தார்,

எட்டாம் சார்லஸுக்கு நேப்பிள்ஸ் பிரபுக்களிடமிருந்து வந்த அழைப்பை உறுதிபடுத்தும் வகையில் 1493-ல் மிலான் நகர மக்களிடமிருந்தும் இத்தாலியின் மீது படையெடுக்கும்படி அழைப்பு வந்தது. மிலானை ஆண்டு கொண்டிருந்த 'லுடோவிகோ' (Ludovico) நேப்பிள்ஸும், ஃபிளாரன்சும் கூட்டாகத் தன்நாட்டின் மீது படையெடுக்கும் நோக்கம் கொண்டிருப்பதை அறிந்து ஃபிரெஞ்சு அரசன் எட்டாம் சார்லசைத் தனக்குத் உதவி செய்யுமாறு அழைத்தான்.

மேற்கூறிய காரணங்களினால், இத்தாலியின்மீது படையெடுக்கத் தூண்டப்பட்ட எட்டாம் சார்லஸ் உடனடியாகத் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. ஏனெனில், இங்கிலாந்தின் ஏழாம் ஹென்றியும், ஸ்பெயின் அரசன் ஃபெர்டிணண்டும், புனித ரோமானியப் பேரரசர் மாக்சிமிலினும், ஃபிரான்சுடன் போர்தொடுக்கும் எண்ணம் கொண்டிருந்தனர். எனவே, 1492-ல் எட்டாம் சார்லஸ் 'ஈடேபிள்ஸ்' (Etaples) உடன்பாட்டின் மூலம், ஏழாம் ஹென்றி ஃபிரெஞ்சுப் படையெடுப்பைக் கைவிடுமாறு செய்தார். 1493-ல் 'பார்சிலோனா' (Barcelona) உடன்பாட்டின்படி, ஸ்பானிய, புனித ரோமானிய அரசர்களுடன் நட்புறவை ஏற்படுத்திக்கொண்டு இத்தாலியப் படையெடுப்பிற்கு அவர் ஆயத்தமானார். ஆனால், இத் திட்டத்தில் ஓர் இடையூறு இருந்தது. நேப்பிள்ஸ்மீது படையெடுத்தால், ஸ்பெயின் அதைப் பொருட்படுத்தாமல் இருக்குமா என்பது ஐயப்பாட்டிற்குரிய விஷயம். ஏனெனில், தானியக் களஞ்சியமாக விளங்கிய நேப்பிள்ஸ், ஸ்பெயின் நாட்டிற்கு உணவுப் பொருள் உதவிசெய்து கொண்டிருந்தது.

1494-ல் ஆல்ப்ஸ் மலையைக்கடந்து ஃபிரெஞ்சுப் படைகள் இத்தாலியில் நுழைந்தன. இந்தப் ஃபிரெஞ்சுப் படையெடுப்பு உலகத்தையே வியப்பில் ஆழ்த்தியது. மனிதாபிமானவாதிகளுக்கும், கலைஞர்களுக்கும் இருப்பிடமாகவும், மேற்கத்திய உலகத்தின் கலாசாரத்தின் மையமாகவும், விளங்கும் இத்தாலி, தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியாத அளவுக்கும் பலவீனம் அடைந்திருப்பதை உலகம் நன்றாக உணர்ந்தது. இத்தாலியின் முக்கிய ஐந்து அரசுகளும் ஒன்றுபட்டு ஃபிரெஞ்சுப் படைகளை எதிர்த்திருக்குமானால் இந்த நிகழ்ச்சியின்போக்கே வேறு மாதிரியாக அமைந்திருக்கும். இத்தாலியின் துரதிர்ஷ்டம் இந்த ஒற்றுமையுணர்வு அங்கு இல்லை. எனவே, எட்டாம் சார்லஸ் எதிர்ப்பின்றி இத்தாலி முழுவதும் தன் படைகளை நடத்திச் சென்றார். ஃபிளாரன்ஸ், 'பிஸா' (Pisa), ரோம் போன்ற நகரங்கள்

ஒன்றன்பின் ஒன்ருக அடிபணிந்தன. போப் ஆரும் அலக்சாண்டர் நேப்பிள்ஸுடன் கொண்டிருந்த நட்புறவை முறித்துக்கொண்டு சார்லஸுக்குக் கீழ்ப்பணிய உடன்பட்டார். இந்த வெற்றிக்குப் பிறகு, நேப்பிள்ஸ் மீது படையெடுத்தார். அப்பொழுது நேப்பிள்ஸை ஆண்டு கொண்டிருந்த 'இரண்டாம் அல்பான்சோ' (Alponso II) பதவியைத் துறக்கவே அவருடைய மகன் இரண்டாம் ஃபெர்டினண்டு பட்டமெய்தினர். சிறிது எதிர்ப்பிற்குப் பிறகு அவரும் நாட்டைவிட்டு ஓடிவிட்டார். 1495, பிப்ரவரியில் சார்லஸ் நேப்பிள்ஸைக் கைப்பற்றினர். இவ்வாறு ஏறக்குறைய இத்தாலி முழுவதும் ஃபிரெஞ்சு மன்னர் வசமாயிற்று.

ஆனல், இந்த நிலையில் திடீரென்று ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. 'வல்லரசுச் சமநிலை'[1] பற்றி இத்தாலிய அரசுகள் எண்ணத் தொடங்கின. மற்ற ஐரோப்பிய அரசுகளும், ஃபிரான்சின் செல்வாக்கு பெருகுவதைக் கண்டு அச்சப்பட்டன. எட்டாம் சார்லஸ் இத்தாலியில் பெற்ற வெற்றிகளினல் வல்லரசுச் சமநிலை பெரிதும் பாதிக்கப்பட்டு, மற்ற நாடுகளைவிட ஃபிரான்ஸ் வலிமை மிக்க நாடாக ஆகக்கூடிய ஒரு நிலை உருவாகியது. எனவேதான், இத்தாலிய அரசுகள் மட்டுமன்றி ஸ்பெயின், புனித ரோமானியப் பேரரசு போன்ற நாடுகளும், ஃபிரான்சின் செல்வாக்கைக் குறைக்கும் முயற்சியில் ஈடுபடலாயின.

ஃபிரெஞ்சுப் போர்வீரர்கள் இத்தாலியில் நடந்து கொண்ட முறையும், நேப்பிள்ஸ் மக்களை, எட்டாம் சார்லஸ் நல்லமுறையில் நடத்தாததும், ஃபிரெஞ்சு ஆதிக்கத்திற்கு எதிர்ப்பு தோன்றக் காரணமாக இருந்தன. ஃபிரெஞ்சு ஆதிக்கம் வளருவதன் அபாயத்தை உணர்ந்த இத்தாலிய அரசுகள் 'வெனிஸ் கூட்டணி' (League of Venice) என்ற ஒரு கூட்டணியை ஃபிரான்சுக்கு எதிராக அமைத்தன. அந்த அணியில் வெனிஸ், மிலான், நேப்பிள்ஸ், போப்பின் அரசு ஆகியவை சேர்ந்தன. தனக்குச் சொந்தமான சிசிலியின் மீது படையெடுக்கக்கூடும் என்று அஞ்சிய ஸ்பெயின் அரசன் ஃபெர்டினண்டும், ஃபிரெஞ்சு செல்வாக்கு பெருகுவதை விரும்பாத புனித ரோமானியப் பேரரசரான 'முதலாம் மாக்சிமிலியனும்' (Maximilian I) இந்தக்

1 ஐரோப்பிய அரசுகளிடையே ஏதாவது ஓர் அரசு மற்ற அரசுகளைவிட அதிக வலிமையும, செல்வாக்கும பெறுமானல், மற்ற அரசுகள் ஒன்றுகூடி அந்த அரசின் வலிமையைக் குறைக்க முயற்சி எடுக்கவேண்டும். இவ்வாறு ஓர் அரசின் வலிமையைக் குறைப்பதன் மூலம் வல்லரசுகளிடையே சமநிலையை ஏற்படுத்த முடியும் என்ற கொள்கைதான வல்லரசு சமநிலை என்று ஐரோப்பிய வரலாற்றில் கூறப்படுகிறது. (Balance of Power)

கூட்டணியில் சேர்ந்தனர். ஃபிளாரன்ஸைத் தவிர மற்ற எல்லா முக்கிய இத்தாலிய அரசுகளும் இதில் சேர்ந்தன. இனியும், இத்தாலியிலிருந்து கிளம்புவதற்குத் தாமதித்தால், இத்தாலியை விட்டு வெளியேறுவது இயலாது என்பதை உணர்ந்த சார்லஸ் வடக்கு நோக்கிப் புறப்பட்டார். மிலானை அடைந்தவுடன் கூட்டணிப் படைகள் இவரை எதிர்த்தன. ஜுலை 1495-ல் 'ஃபோர்னோவோ' (Fornovo) என்னுமிடத்தில் கூட்டணிப் படைகளை வென்று, தம் படைகளுடன் ஃபிரான்சை அடைந்தார்.

விளைவுகள் : இத்தாலியைவிட்டு ஃபிரெஞ்சுப் படைகள் புறப்பட்ட உடன் எட்டாம் சார்லஸ், தாம்வென்ற நாடுகளையெல்லாம் இழந்தார். குறிப்பாக, நேப்பிள்ஸ் நகரின்மீது ஏற்படுத்தப்பட்ட ஃபிரெஞ்சு ஆதிக்கம் அழிந்தது. இப் படையெடுப்பு ஃபிரான்சின் மதிப்பைப் பெரிதும் பாதித்தது.

இந்தப் படையெடுப்பு மேற்கு ஐரோப்பிய அரசுகளிடையே நெருங்கிய உறவை ஏற்படுத்த உதவியது.

இத்தாலியின் பெருமையும் பலவீனமும் வெளிப்பட்டன. இத்தாலியின் கலாசார மேம்பாடு மேற்கு ஐரோப்பிய நாடுகளை வெகுவாகக் கவர்ந்தது. அதே சமயத்தில், இத்தாலியில் காணப் பட்ட ஒற்றுமையின்மையும், பலவீனமும் மேலும் பல படை யெடுப்புகள் ஏற்பட வழிவகுத்தன.

ஃபிரான்சின் பெருமைக்கு இழுக்கு ஏற்பட்டதுமல்லாமல், இப் படையெடுப்பு ஃபிரான்சில் நிதி நெருக்கடி ஏற்படக் காரணமாக இருந்தது. ஃபிரான்சின் படைபலம் வெகுவாகப் பாதிக்கப்பட்டது.

மறுமலர்ச்சி இயக்கத்தின் பிறப்பிடமாக இருந்த இத்தாலியப் படையெடுப்பின் விளைவாக ஃபிரான்சில் மறுமலர்ச்சி இயக்கம் ஊக்கம் பெற்றது. கட்டடக்கலை, இலக்கியத்துறைகளில் வளர்ச்சி ஏற்பட உதவியது.

இந்தப் படையெடுப்பு ஃபிரான்சுக்கும், ஸ்பெயினுக்கு மிடையே பகைமை உணர்ச்சி ஏற்படக் காரணமாக இருந்தது.

இத்தாலிய அரசுகளிடையே நிலவ வேண்டிய உறவை நிர்ணயிப்பதில் பெரும்பங்கைப் பெற்ற 'வல்லரசுச் சமநிலைக்' கொள்கை, முதன் முதலாக மற்ற ஐரோப்பிய நாடுகளின்

வரலாற்றில் தோன்றுவதைக் காண்கிறோம். 'வெனிஸ் கூட்டணி' (League of Venice) என்ற கூட்டணி தோன்றியது இந்த வல்லரசுச் சமநிலைக் கொள்கையின் அடிப்படையில்தான்.[1]

பன்னிரண்டாம் லூயியின் ஆட்சியில் (1499-1504)

எட்டாம் சார்லஸ் 1498-ல் இறக்கவே, பன்னிரண்டாம் லூயி அரியணை ஏறினர். மற்ற ஃபிரெஞ்சு அரசர்களைப் போலவே அவரும் இத்தாலியப் படையெடுப்பில் ஆர்வம் கொண்டார். மிலான் அரசை ஆண்ட 'வைகாண்டி' (Visconte) அரச குடும்பத்தைச் சேர்ந்த 'வேலண்டின' (Valentina) என்பவர், ஃபிரான்சு நாட்டு ஆர்லியன்ஸ் அரச குடும்பத்தைச் சேர்ந்த லூயியை மணந்தார். இவர்களுடைய பேரர்தான் பன்னிரண்டாம் லூயி. தன்னுடைய பாட்டியின் மூலம் அவர் மிலான் அரசின்மீது உரிமை கொண்டாடினர். இவ்வுரிமையை நிலை நாட்டும் நோக்கத்தோடு இத்தாலிமீது படையெடுக்கத் தீர்மானித்தார் அவர். ஆனால், பன்னிரண்டாம் லூயியின் உரிமையைப் புனித ரோமானியப் பேரரசரான முதலாம் மாக்சிமிலியன் எதிர்த்தார். பெண்கள்மூலம் வாரிசுரிமை கொண்டாடுவது செல்லாது என்றும், ஆண் வாரிசுகள் யாரும் இல்லாததால் மிலான் அரசு ரோமானியப் பேரரசைத்தான் சேரவேண்டுமென்பதும் அவருடைய வாதம். 1450 முதல் மிலானை ஆண்டுவந்த 'ஸ்போர்சா' (Sforza) என்ற குடும்பத்தினரும் அதன்மீது உரிமை கொண்டாடினர். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த 'லுடோவிக்கோ'தான் (Ludovico) மிலானை ஆண்டு கொண்டிருந்தார்.

பன்னிரண்டாம் லூயி மிலான்மீது படையெடுத்தபோது எட்டாம் சார்லஸின் காலத்தில் நிறுவப்பட்ட வெனிஸ் கூட்டணி கலைக்கப்பட்டுவிட்டது. அந்த அணியைச் சேர்ந்த வெனிஸ் அரசரும், போப் ஆறும் அலக்சாண்டரும், லூயியுடன் உடன்பாடு செய்து கொண்டனர். முதலாம் மாக்சிமிலியன் ஸ்விட்சர்லாந்துடன் போரில் ஈடுபட்டிருந்ததால் ஃபிரான்சுக்கு எதிராக மிலானுக்கு உதவிபுரிய இயலவில்லை. மேலும், பன்னிரண்டாம் லூயி, மாக்சிமிலியனுக்கு அவர் கேட்டிருந்த சில நகரங்களைக் கொடுத்து அவருடைய நட்புறவைச் சம்பாதித்துக் கொண்டார். ஸ்பெயின் அரசன் ஃபெர்டினண்டும், பன்னிரண்டாம் லூயியுடன் 'மார்க்கோன்ஸி உடன்பாடு' (Treaty of Marconssis) என்ற

[1] Notes on European History—William Edwards, Vol. II, page 23, 24.

உடன்பாட்டைச் செய்துகொண்டனர் (1498). இவ்வாறு மிலான் அரசிற்கு உதவ எந்த அரசும் முன்வரவில்லை. மிலான் தனித்துப் போரிட வேண்டியதாயிற்று.

1499-ல் ஃபிரெஞ்சுப் படைகள் இத்தாலி மீது படையெடுத்தன. 'லொம்பார்டி' (Lombardy) கைப்பற்றப்பட்டது. அதே சமயத்தில் வெனிஸ் படைகள் கிழக்குப் பக்கமிருந்து மிலானைத் தாக்கின. எதிர்ப்பு ஏதுமின்றி ஃபிரெஞ்சுப் படைகளும், வெனிஸ் படைகளும் முன்னேறிக் கொண்டிருந்தன. மிலான் அரசர் 'லுடோவிகோ' (Ludovico) நாட்டிலிருந்து ஓடிவிடவே, மிலான் நகரம் சரணடைந்தது. ஃபிரெஞ்சுப் படைகளின் கொடுமையும், ஃபிரெஞ்சுக்காரர்களின் ஆணவமும், ஃபிரெஞ்சு ஆட்சிமீது வெறுப்பை ஏற்படுத்தியது. 1500-ல் லுடோவிகோ, ஸ்விட்சர்லாந்திலிருந்து ஒரு கூலிப்படையுடன் வந்து ஃபிரெஞ்சுப் படைகளை மிலானிலிருந்து விரட்டி, மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றினார். ஆனால், இவ்வராட்சி சில வாரங்கள்தான் நீடித்தது. ஃபிரான்சிலிருந்து மேலும் புதிய படைகளது உதவி பெற்ற லூயி, லுடோவிகோவை நோவாரா என்னுமிடத்தில் நடந்த போரில் மீண்டும் தோற்கடித்து அவரைச் சிறைபடுத்தினார். மிலான் அரசு ஃபிரெஞ்சுக்காரர் வசம் வந்தது.

### நேப்பிள்ஸ்மீது படையெடுப்பு

பன்னிரண்டாம் லூயி, அடுத்து நேப்பிள்ஸ்மீது தன் கவனத்தைத் திருப்பினார். ஆனால், மிலானைப்போல அவ்வளவு எளிதாக நேப்பிள்ஸைக் கைப்பற்ற முடியாத நிலை ஏற்பட்டது. ஏனெனில், நேப்பிள்ஸ் அரசின்மீது ஸ்பெயின் அரசர் ஃபெர்டினண்டும் உரிமை கொண்டாடினார். இதனால், இவ்விரு நாடுகளிடையே ஏற்படக்கூடிய நட்பு முறிவைத் தடுக்க, ஸ்பெயின் அரசரின் யோசனையின்படி இரு அரசுகளும் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டன. இது 'கிரானடா உடன்படிக்கை' (Treaty of Granada-1500) என்று வழங்கப்படுகிறது. இதன்படி, ஃபிரான்சும், ஸ்பெயினும் இணைந்து நேப்பிள்ஸ்மீது படையெடுத்து, நேப்பிள்ஸைக் கைப்பற்றி, தங்களுக்குள் பகிர்ந்து கொள்ளவேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. ஒப்பந்தப்படி இவ்விரண்டு வல்லரசுகளும் நேப்பிள்ஸைத் தாக்கின. மிலானைப்போலவே எளிதாக நேப்பிள்ஸ் கைப்பற்றப்பட்டு, நேப்பிள்ஸ் அரசர் சிறைப்படுத்தப்பட்டார்.

நேப்பிள்ஸ் விவகாரம் இத்துடன் முடிவடைந்து விடவில்லை. புதுச் சிக்கல்கள் தோன்றின. ஃபெர்டினண்டின் நோக்கம்

நேப்பிள்ஸ் முழுவதையும் அடைய வேண்டுமென்பது. கிரானடா உடன்பாட்டில் கண்டிருப்பது போல நேப்பிள்ஸை இருநாடுகளும் பிரித்துக் கொள்ள வேண்டும் என்ற நிபந்தனையை ஃபெர்டினண்டு ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. இதன் காரணமாக ஃபிரான்சுடன் போர் புரிய வேண்டிய ஒருநிலை ஏற்பட்டாலும் அதற்கும் அவர் தயங்கவில்லை. ஃபெர்டினண்டு நினைத்ததுபோல போர் மூளுவதற்குத் தகுந்த காரணங்களும் கிடைத்தன. கிரானடா உடன்படிக்கையில் எந்தெந்தப் பகுதிகளை எந்தெந்த அரசு பெற வேண்டும் என்பது பற்றிய விபரங்கள் திட்டவட்டமாக விளக்கப்படவில்லை. இதைப் பயன்படுத்திக் கொண்டு இரண்டு நாடுகளும் சில பகுதிகள் தங்களைச் சேர வேண்டும் என்று வாதித்தன. இதன் விளைவாக இவ்விரண்டு கொள்ளைக்கார நாடுகளிடையே போர் மூண்டது (1502-1504).

தொடக்கத்தில் போர் ஃபிரெஞ்சு மன்னனுக்குச் சாதகமாக இருந்தது. 1502-ல் ஃபிரெஞ்சுப் படைகள் 'டெர்ரனோவா' (Terranova) என்ற இடத்தில் நடந்த போரில் ஸ்பானியப் படைகளை முறியடித்தன. அடுத்து நடந்த 'செமினரா' (Seminara) போரில் ஸ்பானியர்கள் வெற்றி பெற்றனர். 1503–1504-ல் நடந்த போர்களில் தொடர்ந்து ஸ்பானியப் படைகள் வெற்றி வாகை சூடின. நேப்பிள்ஸ் அரசு இறுதியில் ஸ்பானியர் வசமாகியது. மிலானைத் தவிர வேறு எந்த அரசையும் ஃபிரான்ஸ், இத்தாலியில் பெறமுடியவில்லை.

பன்னிரண்டாம் லூயியின் தோல்விக்குக் காரணங்கள்

1, ஸ்பானியத் தளபதி 'கான்சால்வோ-டி-கொர்தோவாவின்' (Gonsálvo-de-Cordova) போர்த் திறமை.

2. பன்னிரண்டாம் லூயியின் தவறுகள்: (அ) 1503ஆம் ஆண்டு நடந்தபோரில் ஃபிரெஞ்சுப் படைகள் காலதாமதம் செய்து விட்டன. ரோம் நகரில் சிலநாட்கள் தங்கிவிட்டதால், அவர்கள் தாக்குதலை ஆரம்பித்தபொழுது மாரிக்காலம் தொடங்கிவிட்டது. அதனால், ஃபிரெஞ்சுப்படைகள் பல இன்னல்களுக்குள்ளாயின. (ஆ) கிரானடா உடன்படிக்கை செய்து கொண்டது. பன்னிரண்டாம் லூயி செய்த மற்றொரு தவறு. ஃபெர்டினண்டு இந்த உடன்படிக்கையைச் செய்து கொண்டதன் உள்நோக்கத்தை லூயி சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. (இ) இதேபோல 1503-ல் போர் நடந்து கொண்டிருந்தபொழுது, லூயியின் கவனத்தை வேறுபக்கம் திருப்பவும், போர் ஏற்பாட்டைச்

சரிவர செய்வதைக் தடுக்கவும், ஃபெர்டினண்டு சமாதானப் பேச்சுவார்த்தை தொடங்கி, சூழ்ச்சி செய்ததை ஃபிரெஞ்சு அரசன் உணரவில்லை.

3. ஸ்பெயின் அரசன் ஃபெர்டினண்டின் திறமையும், தந்திரமும் போரில் ஃபிரான்சின் தோல்விக்கு மற்றொரு முக்கிய காரணம்.

வெனிசுடன் போர் — 'காம்ப்ரே கூட்டணி' (Cambray League) (1508–1510)

இந்த நிலையில், போப்பாண்டவராக இருந்த ஆறும் அலெக்சாண்டர் இறந்து, இரண்டாம் ஜூலியஸ் போப்பாண்டவ ராகப் பதவி ஏற்றது இத்தாலிய அரசியலிலேயே ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியது. ஆறும் அலெக்சாண்டரைப் போலல்லாமல் அவர் இத்தாலிய அரசியலில் ஒரு முக்கிய பங்கை ஏற்க வேண்டுமென்று விரும்பினார். குறிப்பாக, அலெக்சாண்டரின் மகன் 'சீசர் போர்கியாவின்' (Cæsar Borgia) ஆதிக்கத்தில் இருந்த 'ரோமாக்னாவின்' (Romagna) பல நகரங்களை மீட்டு, அவ்வரசின் மீது போப்பின் ஆட்சியை மீண்டும் ஏற்படுத்தவேண்டும் என்பது அவரது நோக்கம். இதில் ஓரளவுக்கு ஜூலியஸ் வெற்றிபெற்றார். ஆனால், ரோமாக்னாவைச் சேர்ந்த மூன்று நகரங்களை வெனிஸ் கைப்பற்றியது.

பதினைந்தாம் நூற்றாண்டில் வெனிஸ், இத்தாலியின் ஒரு தலை சிறந்த அரசாக விளங்கியது. அதன் பெருமைக்குக் காரணம் கிழக்கு நாடுகளுடன் செய்த வியாபாரம் மூலம் அந்நகர் ஈட்டிய செல்வம், ஆனால், பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் ஆப்பிரிக்காவின் நன்னம்பிக்கைமுனை வழியாகக் கிழக்கு நாடுகளுக்குச் செல்லும் புதிய பாதை கண்டுபிடிக்கப்பட்டவுடன், வெனிஸ் போன்ற இத்தாலிய நகரங்கள் வியாபார முக்கியத்துவத்தை இழந்தன. வியாபாரத்துறையில் ஏற்பட்ட இழப்பைச் சரிக்கட்டுவதற்காக, வெனிஸ், அண்டை நாடுகளுக்குச் சொந்தமான பகுதிகளை ஆக்கிர மித்துக் கைப்பற்றிக் கொண்டது. மிலான், நேப்பிள்ஸ், ரோமாக்னா ஆகியவைகளுக்குச் சொந்தமான நகரங்களை வெனிஸ் கைப்பற்றியது. இதனால், வெனிஸ், பல இத்தாலிய, அந்நிய அரசுகளின் பகைமையைச் சம்பாதித்தது. ஃபிரான்சு அரசன் பன்னிரண்டாம் லூயி, வெனிசிடமிருந்த, மிலானுக்குச் சொந்த மான நகரங்களை மீட்க விரும்பினார். ஸ்பெயின் அரசன் ஃபெர்டினண்டு, 'அபூலியாப்' (Apulia) பகுதியிலுள்ள நகரங்களைக் கைப்பற்ற எண்ணினார். புனித ரோமானியப் பேரரசர் மாக்சி

மிலியன், வெனிஸ் அரசின் சில பகுதிகளைப் பெற விரும்பினர். போப் ஜூலியஸ், ரோமாக்னாவிற்குச் சொந்தமான மூன்று நகரங்களை வெனிசிடமிருந்து மீட்க எண்ணினர். இதன் விளைவாக, வெனிஸுக்கு எதிராக ஒரு கூட்டணி உருவாகியது. அதுதான் 'காம்ப்ரே கூட்டணி' (League of Cambray) என வழங்கப்படு கிறது (1508). புனித ரோமானியப் பேரரசர், போப்பாண்டவர், ஸ்பெயின், ஃபிரான்சு நாட்டு அரசர்கள், சில இத்தாலிய அரசர்கள் ஆகிய எல்லோரும் இதில் பங்கு கொண்டனர்.

இந்தக் கூட்டணி ஒரு பெரிய அரசியல் குற்றம்; தன்னலத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டது. இத்தாலிய தேசியக் கண்ணோக்கிலிருந்து ஆராயும்பொழுது நாட்டுப்பற்று உணர்ச்சியற்ற செயல் என்று 'எட்வர்ட்ஸ்' கூறுகிறார்.[1] இந்த வலிமைமிக்க நாடுகளுடன் நடந்த போரில், வெனிஸ் தோல்வியடைந்தது வியப்பிற் குரியதன்று. வெனீஷியப் படைகள், ஃபிரெஞ்சுப் படையினால் தோற்கடிக்கப்பட்டு, இத்தாலியில் பெற்றிருந்த பகுதிகளனைத்தையும் வெனிஸ் இழந்தது. போப், மாக்சிமிலியன், ஃபெர்டினண்டு, லூயி ஆகிய எல்லோரும் தாங்கள் விரும்பிய பகுதிகளை வெனிசிடமிருந்து கைப்பற்றினர். ரோமாக்னாவின் மூன்று நகரங்களைப் போப்பும், அபூலியாவிலுள்ள நகரங்களை ஃபெர்டினண்டும், மிலானுக்குச் சொந்தமான பகுதிகளை லூயியும், 'வெரோனா' (Verona), 'பாடுவா' (Padua) ஆகிய நகரங்களை மாக்சிமிலியனும் பெற்றனர். ஆனால், இவ் வெற்றிக்குப் பிறகு கூட்டணி அரசுகளிடையே சச்சரவுகள் தோன்றி, 1510-ல் காம்ப்ரே கூட்டணி முறிந்தது. ஃபிரான்சின் செல்வாக்கு இத்தாலியில் பரவுவதைப் போப்பாண்டவரும், ஃபெர்டினண்டும் விரும்பவில்லை. இத்தாலிய அரசுகளுக்கிடையே அப்பொழுது நிலவிய நிலையற்ற உறவு முறையில் 'இன்றைய நண்பர் நாளையப் பகைவராக' மாறும் ஒரு சூழ்நிலை உருவாயிற்று. 1511ஆம் ஆண்டு அக்டோபர் மாதம், போப் இரண்டாம் ஜூலியஸ் ஃபிரான்சுக்கு எதிராக ஒரு புனிதக் கூட்டணியை (Holy League) உருவாக்கினர். இதில் ஸ்பெயினும், வெனிசும் சேர்ந்தன. பெயரளவில் போப்பின் அரசுக்குச் சொந்தமான சில நகரங்களை மீட்பது, திருச்சபையில் ஒற்றுமையை நிலை நாட்டுவது, வெனிசுக்குச் சொந்தமான பகுதிகளை மீட்பது என்பவை இக்கூட்டணியின் நோக்கமென்றாலும். உண்மையில் இதன் நோக்கம் ஃபிரான்சை இத்தாலியிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்பதுதான்.

[1] The League of Cambray, a great political crime, was utterly selfish, grossly hypocritical; and from the point of view of Italian nationality, thoroughly unpatriotic—Notes on European History, Vol. II Edwards, page 55.

1512-ல் 'ராவன்னுப் போரில்' (Ravenna) ஃபிரான்சு வெற்றி பெற்றது. ஆனால், இந்த வெற்றியின் முழுப்பயனையும் ஃபிரான்சு பெறமுடியவில்லை. லொம்பார்டிப் பகுதியை, ஸ்விஸ் படைகள் தாக்கியதால், ஃபிரெஞ்சுப்படைகள் ஆல்ப்ஸ் மலையைக்கடந்து பின்வாங்க நேரிட்டது. இங்கிலாந்தின் எட்டாம் ஹென்றி இதே சமயத்தில் ஃபிரான்சின் மீது படையெடுத்ததால், ஃபிரான்ஸ் தொடர்ந்து இப்போரில் ஈடுபட முடியவில்லை. 1513-ல் இத்தாலியில், ஃபிரான்ஸ் தனக்குச் சொந்தமான பகுதிகளுள் மிலான், கிராமோனா, பிரஸியா தவிர (Milan, Cremona, Brescia) அனைத்தையும் இழந்தது. ஃபிரான்சின் அரச தந்திரத்தினுல் இப்புனிதக் கூட்டணியும் கலைக்கப்பட நேரிட்டது. ஆனுல், போப் இரண்டாம் ஜூலியஸை அடுத்துப் பதவிக்குவந்த 'பத்தாம் லியோ' (Leo X) ஃபிரான்சுக்கு எதிராக மீண்டும் ஒரு கூட்டணியை உருவாக்கினுர். இதில் எட்டாம் ஹென்றி, ஃபர்டினண்டு, மாக்சிமிலியன் ஆகியோர் சேர்ந்தனர். இதுதான் 'மெக்லின் உடன்படிக்கை' (Treaty of Mechlin) என்று வழங்கப்படுகிறது. 1513-ல் இத்தாலிமீது மீண்டும் படையெடுத்த பன்னிரண்டாம் லூயி, நோவாராப் போரில், ஸ்விஸ் படைகளால் தோற்கடிக்கப் பட்டார். ஆனுல், 1515-ல் அவர் இறப்பதற்குமுன் போப்புடனும், எட்டாம் ஹென்றியுடனும், ஃபர்டினண்டுடனும் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்பிறகு, 1515-ல் பன்னிரண்டாம் லூயி இறக்கவே, முதலாம் ஃபிரான்சிஸ் அரியணை ஏறினுர்.

## முதலாம் ஃபிரான்சிஸ் ஆட்சியில் (1515-1518)

நோவராப் போரில் ஃபிரான்சிஸ் அடைந்த தோல்வியின் இழுக்கைப் போக்கவும், தம் பகைவர்கள்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளவும், முதலாம் ஃபிரான்சிஸ் மீண்டும் இத்தாலிமீது படையெடுக்கும் திட்டத்தை மேற்கொண்டார். வெனிஸ் மட்டும் தான் ஃபிரான்ஸுக்கு உதவிசெய்ய முன்வந்தது. முதலாம் ஃபிரான்சிஸை எதிர்த்து மீண்டும் ஒரு கூட்டணி உருவாகியது. போப், ஃபர்டினண்டு, மாக்சிமிலியன், ஃபிரான்ஸ், ஸ்விட்சர்லாந்து இக்கூட்டணியில் உறுப்பினர்கள். 1515-ல் நடந்த 'மாரிக்னுனே' (Marignano) போரில் ஃபிரான்சிஸ் இக்கூட்டணிப் படைகளை முறியடித்தார். இந்த வெற்றியினுல் ஃபிரான்சிஸின் புகழ் ஓங்கியது. இவருடைய போர்த்திறமை வெளிப்பட்டது. இறுதியாக, மிலான், ஃபிரான்சிற்குச் சொந்தமானது. முதலாம் ஃபிரான்சிஸுக்கும், போப் லியோவுக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் விளைவாகச் (Concordat or Bologna) சுமுகமான

உறவு ஏற்பட்டது. 1516-ல் ஃபர்டினண்டு இறக்கவே, அவருக்குப் பிறகு அரியணை ஏறிய ஐந்தாம் சார்லஸ், போரைத் தொடங்க விருப்பமில்லாமல் ஃபிரான்சுடன் 'நொயான் உடன்படிக்கையைச் (Treaty of Noyon) செய்து கொண்டார். ஸ்விட்சர்லாந்தும், ஃபிரான்சுடன் சமாதானம் செய்து கொண்டது. 1518-ல் இங்கிலாந்திற்கும், ஃபிரான்சிற்குமிடையே 'லண்டன் உடன்படிக்கை' (Treaty of London) ஏற்பட்டது. இவ்வாறு 1518-ல் ஐரோப்பாவில் அமைதி ஏற்பட்டது. 1518-க்குப் பிறகு ஃபிரான்சிசின் ஆட்சியில் நடந்த நிகழ்ச்சிகளை மற்றொரு பகுதியில் காண்போம்.

### இதுவரை நடந்த போரின் விளைவுகள்

1. மிலானில் ஃபிரெஞ்சு ஆதிக்கமும், நேப்பிள்ஸில் ஸ்பானிய ஆதிக்கமும் ஏற்பட்டது. 2. மாக்சிமிலியனின் ஆதிக்கம் இத்தாலியிலிருந்து ஒழிக்கப்பட்டது. 3. போப்பின் ஆதிக்கத்திற் குட்பட்ட அரசுகள் விரிவடைந்தன. 4. வல்லரசுச் சமநிலை என்னும் கொள்கை ஐரோப்பிய அரச தந்திரத்துறையில் ஒரு முக்கிய கோட்பாடாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. 5. ஃபிரான்ஸ், ஸ்பெயின், ஜெர்மனி ஆகிய நாடுகள் இத்தாலியக் கலாசாரத்தின் செல்வாக்கிற்குட்பட்டன.

## இரண்டாவது கட்டம்

### ஸ்பானிய-ஃபிரெஞ்சு ஆதிக்கப் போட்டி

முதலாம் ஃபிரான்சிஸின் ஆட்சியில்: 1518-ல் முதலாம் ஃபிரான்சிஸ் மன்னரின் ஆட்சியில் இத்தாலியப் போர்கள் முடிவடைந்ததை முன்பு கண்டோம். இப்பொழுது இத்தாலி, வல்லரசுகளுக்கிடையே ஏற்பட்ட ஆதிக்கப் போட்டியின் களமாக விளங்குவதைக் காணப்போகிறோம். போட்டியிட்ட வல்லரசுகள் ஸ்பெயினும், பிரான்சும். 1519-ல் புனிதரோமானியப் பேரரசர் மாக்சிமிலியன் இறக்கவே, அந்தப் பதவிக்கு மூன்று ஐரோப்பிய அரசர்கள் போட்டியிட்டனர். ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைச் சேர்ந்த ஸ்பெயின் அரசர் முதலாம் சார்லஸ் (இவர் புனித ரோமானியப் பேரரசர் மாக்சிமிலியனின் பேரர்), ஃபிரெஞ்சு அரசர் முதலாம் ஃபிரான்சிஸ், இங்கிலாந்து அரசர் எட்டாம்

ஹென்றி. பேரரசர், தேர்வாளர்களால் (Electors) தேர்ந்தெடுக்கப்படுவார். இந்தப் போட்டியின் இறுதியில் ஸ்பெயின் அரசர் முதலாம் சார்லஸ் தேர்ந்தெடுக்கப்பட்டு, பேரரசர் ஐந்தாம் சார்லஸ் என்று அழைக்கப்பட்டார் (1519). இந்தச் சூழ்நிலையில் ஸ்பெயினுக்கும், ஃபிரான்சுக்குமிடையே போர் ஏற்படும் என்பது எல்லோரும் எதிர்பார்த்த ஒரு நிகழ்ச்சி. ஏனெனில், இத்தாலியில் செல்வாக்கைப் பெருக்கவும், மேற்கு ஐரோப்பாவில் ஆதிக்கத்தை ஏற்படுத்தவும், இவ்விரு நாடுகளுக்கிடையே போட்டி ஏற்பட்டது. மேலும், புனித ரோமானியப் பேரரசர் பதவிக்கு ஏற்பட்ட போட்டியில் முதலாம் ஃபிரான்சிஸ் தோல்வியுற்று, சார்லஸ் வெற்றி பெற்றது அவர்களுக்கிடையே பொறாமையையும், மனக்கசப்பையும் வளர்த்தது. அது மட்டுமின்றி, ஃபிரான்ஸ் எல்லாப் பக்கங்களிலும் ஸ்பானிய அரசைச் சேர்ந்த பகுதிகளால் சூழப்பட்டிருந்தது. இதனால், ஃபிரான்சு தனக்குப் போதிய பாதுகாப்பு இல்லை என்று அஞ்சியது. ஐந்தாம் சார்லஸ், ஃபிரான்சின் ஒரு பகுதியான பர்கண்டியைச் சேர்ந்த மேரியின் பேரர் என்ற முறையில் பர்கண்டிப் பகுதி மீதும், மிலான் அரசுமீதும் உரிமை கொண்டாடக்கூடும் என்று ஃபிரான்சிஸ் அஞ்சினார். மேற்கூறிய காரணங்களினால், இவ்விரு நாடுகளுக்கு மிடையே போர் தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது.

முதல் போர் (1521–23): போருக்குமுன் இருதரப்பினரும் இங்கிலாந்தின் உதவியை நாடினர். எட்டாம் ஹென்றியின் அமைச்சரான 'உல்சியின்' (Wolsey) ஆலோசனைப்படி இங்கிலாந்து, ஃபிரான்சுக்கு எதிராக, பேரரசர் ஐந்தாம் சார்லஸுக்கு உதவி செய்ய ஒப்புக் கொண்டது. 1521-ல் தொடங்கிய போர், பேரரசுக்குச் சாதகமாய் இருந்தது. ஃபிரெஞ்சுக்காரர்கள் மிலானிலிருந்து விரட்டப்பட்டனர். மிலான் பேரரசின் ஆட்சிக்குட்பட்ட ஒரு சிற்றரசராக ஆக்கப்பட்டது. 1522-ல் முதலாம் ஃபிரான்சிஸ் மிலானை மீட்கும் நோக்கத்துடன் இத்தாலிமீது படையெடுத்தார். ஆனால், 'பிக்கோக்கா' (Bicocca) போரில் ஃபிரான்சு மீண்டும் தோற்கடிக்கப்பட்டது.

இரண்டாவது போர் (1523–1526): 1524-ல் ஃபிரான்சின் செல்வாக்குமிக்க பூர்போன் குடும்பத்தைச் சார்ந்த பிரபு, ஃபிரான்சிஸ் மீது பகைமை கொண்டு பேரரசர் சார்லஸிடம் பணிக்கு அமர்ந்தார். பூர்போன் பிரபு தலைமையில் பேரரசின் படை ஒன்று, ஃபிரான்சின் மீது படையெடுத்து மார்செயில் நகரைத் தாக்கியது. இத்தாக்குதலை முறியடித்துவிட்டு, ஃபிரான்சிஸ் இத்தாலிமீது படை எடுத்தார். மிலானைக் கைப்

பற்றி, 'பேவியா' (Pavia) என்னும் நகரை முற்றுகையிட்டார். பேரரசின் படைகளுக்குச் சம்பளப் பாக்கியிருந்ததால் அவர்கள் உற்சாகம் இழந்திருந்தனர். போப் ஏழாம் கிளமெண்ட், முதலாம் ஃபிரான்சிஸுடன் சேர்ந்து கொண்டார். ஃபிளாரன்ஸ், வெனிஸ் நகரங்களும், ஃபிரான்சுடன் சேர்ந்து கொண்டன. பேரரசர் சார்லஸ் ஸ்பெயினில் நோய்வாய்ப்பட்டிருந்தார். இச்சூழ்நிலையில் பேரரசின் நிலை மிகவும் மோசமாக இருந்தது. இருப்பினும், பூர்போன் பிரபு ஜெர்மனியிலிருந்து படைகளைத் திரட்டிக் கொண்டு, இத்தாலியில் புகுந்து, பேவியாவில் முதலாம் ஃபிரான்சிஸின் படைகளைச் சந்தித்தார். ஃபிரெஞ்சுப்படைகள் முறியடிக்கப்பட்டன. ஃபிரான்சிஸ் சிறைபிடிக்கப்பட்டு, 'மாட்ரிட்' (Madrid) உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று (Treaty of Madrid-1526). இந்த உடன்படிக்கையின்படி, ஃபிரான்சிஸ், மிலான், நேப்பிள்ஸ், ஜினோவா, ஃபிளாண்டர்ஸ், ஆர்டாய் ஆகிய பகுதிகளின்மீது தனக்கிருக்கும் உரிமையைக் கைவிடச் சம்மதித்தார். பேரரசர் சார்லஸுக்குப் பர்கண்டி அரசைக் கொடுத்துவிட ஒப்புக்கொண்டார். இவ்வாறு ஃபிரான்சிஸ் தனக்குச் சொந்தமான பல பகுதிகளை இழந்ததோடு அல்லாமல், அவருடைய புகழும் அழிந்தது.

மூன்றுவது போர் (1526–1529): பேரரசர் பெற்ற இந்த பெரும் வெற்றி ஐரோப்பிய அரசுகளிடையே அச்சத்தை விளைவித்தது. வல்லரசு சமநிலை அழிந்து, ஸ்பெயினின் அதிகாரம் பெருகிவிடும் என்று அஞ்சிய ஐரோப்பிய நாடுகள் பேரரசர் சார்லஸுக்கு எதிராக ஒரு கூட்டணியை அமைத்தன. மாட்ரிட் உடன்படிக்கையை ஒப்புக்கொண்ட பிறகு விடுதலை பெற்ற முதலாம் ஃபிரான்சிஸ், அதன் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ள மறுத்தார். 1526-ல் 'காக்னுக் கூட்டணி' (League of Cognac) என்ற கூட்டணி ஏற்படுத்தப்பட்டது. ஃபிரான்சுடன் போப் அரசும், வெனிஸ், ஃபிளாரன்ஸ், மிலான் அரசுகளும் சேர்ந்தன. எட்டாம் ஹென்றி நேரடியாக இதில் சேராவிட்டாலும் தன் ஆதரவைக் கொடுக்கச் சம்மதித்தார்.

மீண்டும் 1526-ல் போர் துவங்கியது. மிலான் கைப்பற்றப் பட்டது. பேரரசின் படைகள் ரோம் நகரையும் கைப்பற்றின. இச்சமயத்தில்தான் ஒரு முக்கியமான நிகழ்ச்சி நடந்தது. 1527-ல் பேரரசின் படைகள் ரோம் நகரைச் சூறையாடின. போப் ஏழாம் கிளமெண்ட் பேரரசர், ஐந்தாம் சார்லஸின் கைதியானுர். இந்த நிகழ்ச்சி ஃபிரான்ஸ், ஸ்பெயினுக்குமிடையே நடந்த போரை எந்த வகையிலும் பாதிக்கவில்லையாயினும், இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்தம் ஏற்பட அது காரணமாக இருந்தது. ஏனெனில்,

இங்கிலாந்தின் எட்டாம் ஹென்றி இந்தச் சமயத்தில்தான் தன் மனைவி காதரினை விவாகரத்து செய்ய, போப்பின் அனுமதி கேட்டிருந்தார். போப் ஏழாம் கிளமெண்ட், கத்தோலிக்கப் பேரரசரான ஐந்தாம் சார்லஸின் கைதியாக இருந்ததால், அவரால், இந்தப் பிரச்சினையில் சுயேச்சையாக நடந்துகொள்ள முடியவில்லை. அவருடைய செல்வாக்கின்கீழ் இந்த விவகாரத்தை அனுமதிக்க மறுத்தார். எனவே, எட்டாம் ஹென்றி போப்பின் அதிகாரத்தை ஒழிக்கத் தீர்மானித்தார்.

இந்தச் சமயத்திலிருந்துதான் ஜெர்மனியில் சமயச் சீர்திருத்த இயக்கத்தின் போக்கிற்கு ஏற்ப, இப்போரின் நிகழ்ச்சிகள் அமைவதைக் காண்கிறோம். புராடஸ்டெண்டு சமயத்தை ஒடுக்குவதில் ஆர்வம் காட்டிய ஐந்தாம் சார்லஸ், இந்தப் போரிலிருந்து ஓய்வு கிடைக்கும் சமயங்களிலெல்லாம் புராடஸ்டெண்டுகளை ஒடுக்கும் பணியில் ஈடுபடுவதையும், முதலாம் ஃபிரான்சிஸ், ஜெர்மனியின் புராடஸ்டெண்டு அரசுகளுடன் சேர்ந்துகொண்டு ஐந்தாம் சார்லஸின் அதிகாரத்தை ஒடுக்க முனைவதையும் நாம் காண்கிறோம். ஜெர்மனியில் சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்றாமலிருந்தால், ஃபிரான்ஸ் வெகு எளிதாக ஒடுக்கப்பட்டிருக்கும். ஃபிரான்சுடன், ஸ்பெயின் போர் செய்யவேண்டிய நிலை ஏற்படாமலிருந்தால், ஜெர்மனியில் சமயச் சீர்திருத்த இயக்கம் மிக எளிதாக ஒடுக்கப்பட்டிருக்கும். 1527-ல் ஃபிரெஞ்சுப்படைகள் இத்தாலி மீது படையெடுத்தன. மிலான், நேப்பிள்ஸ் அரசுகள் தாக்கப்பட்டன. இதற்கிடையில் 1529-ல் இருதரப்பினரும் சமாதானம் செய்துகொள்ள விரும்பினர். இதன் விளைவாக 'காம்ப்ரே' உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. (Peace of Cambray) இந்த உடன்படிக்கையின்படி முதலாம் ஃபிரான்சிஸ் தன் இத்தாலிய உரிமைகளையெல்லாம் துறக்க ஒப்புக்கொண்டார். பேரரசர் சார்லஸ், பர்கண்டின்மீது தன் உரிமையை இழக்கச் சம்மதித்தார். இதன் விளைவாக, இத்தாலியில் ஐந்தாம் சார்லஸின் ஆதிக்கம் பெருகியது. 1530-ல் ஐந்தாம் சார்லஸ், ஏழாம் கிளமெண்டினால் பேரரசராக முடிசூட்டப்பட்டார்.

நான்காவது போர் (1536-1538): முதலாம் ஃபிரான்சிஸ் தான் இழந்த மிலான் அரசை மீண்டும் கைப்பற்ற எண்ணினார். ஐந்தாம் சார்லஸுக்குத் தொல்லை கொடுக்கும் நோக்கத்துடன் போப், துருக்கியர்கள், ஜெர்மானிய புராடஸ்டெண்டுகளுடன் உறவுகொண்டு பேரரசுக்கு இடையூறுகள் செய்தார். 1536-ல்

[1] Europe—The Story of the Last Five Centuries, A. J. Grant, page 478.

மிலான் அரசின்மீது தன் உரிமையை முதலாம் ஃபிரான்சிஸ் வலியுறுத்தினர். சில நிபந்தனைகளுக்குட்பட்டால் இந்த உரிமையைத் தாம் ஒப்புக்கொள்ளுவதாகச் சார்லஸ் அறிவித்தார். இதற்கு ஃபிரான்சிஸ் உடன்படாதால் மறுபடியும் போர் மூண்டது. ஃபிரெஞ்சுப் படைகள் 'செவாய்' (Savoy) அரசில் புகுந்து, 'டூரின்' (Turin) நகரைக் கைப்பற்றின. 1537-ல் ஃபிரெஞ்சுப்படை ஆர்டாய் பகுதிமீது படையெடுத்தது. பல தொல்லைகளால் இன்னல்பட்டுக் கொண்டிருந்த ஐந்தாம் சார்லஸ் போர் நிறுத்தம் கோரியதன் விளைவாக, 1538-ல் 'நைஸ் உடன் படிக்கை' (Truce of Nice) என்ற தற்காலிகப் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது.

ஐந்தாவது போர் (1542–1544): மீண்டும் மிலான் அரசின்மீது ஏற்பட்ட உரிமைப் போட்டியின் காரணமாக இந் நாடுகளுக் கிடையே போர் மூண்டது. இத்தாலியின் ஆர்டாய், பீட்மாண்ட் பகுதிகளின்மீது ஃபிரெஞ்சுப் படைகள் போர் தொடுத்தன. 1544-ல் பேரரசர் சார்லஸ், ஃபிரான்சிஸ் புராட்டஸ்டெண்டு களின் உதவி பெறுவதைத் தடுத்தார். இங்கிலாந்தின் எட்டாம் ஹென்றியின் உதவியுடன் பேரரசர் ஃபிரான்ஸ் மீதுபடையெடுத் தார். ஆனால், இதில் வெற்றி ஒன்றும் கிட்டவில்லை. இருதரப் பினரும் போரினல் பாதிக்கப்பட்டிருந்ததால் சமாதானம் செய்து கொள்ள விரும்பினர். 1544-ல் 'கிரஸ்பி உடன்படிக்கை' (Treaty of Crespy) செய்து கொள்ளப்பட்டது. நைஸ் போர் நிறுத்த உடன்படிக்கைக்குப் பிறகு, போரில் கைப்பற்றிய பகுதிகள் திரும்பவும் அந்தந்த நாடுகளுக்கேக் கொடுக்கப்படவேண்டும். ஃபிரான்சிஸும், சார்லஸும் துருக்கியர்களுக்கெதிராகவும், கத்தோலிக்க சமயத்தை ஆதரித்தும், ஒத்துழைக்கவேண்டும். நேப்பிள்ஸ், ஃபிளாண்டர்ஸ், ஆர்டாய் பகுதிகளின் மீது ஃபிரான்சிஸ் தன் உரிமைகளைத் துறக்கவேண்டும். சார்லஸ் பர்கண்டிமீது தன் உரிமையைக் கைவிடவேண்டும். இந்த உடன் படிக்கை சார்லஸுக்குச் சாதகமாக இல்லாவிட்டாலும், ஜெர்மனியில் புராட்டஸ்டெண்டு சமயத்தின் வளர்ச்சியைத் தடுக்கவும், துருக்கியர்களின் படையெடுப்புகளைச் சமாளிக்கவும், பொதுவாகத் திருச்சபைப் பிரச்சினைகளைத் தீர்க்கவும், சார்ல ஸுக்கு ஓய்வு தேவைப்பட்டதாலும் இந்த உடன்படிக்கையை ஒப்புக் கொண்டார்.

ஆறுவது போர் (1552–1559): இரண்டாம் ஹென்றியின் ஆட்சி யில்: 1547-ல் முதலாம் ஃபிரான்சிஸ் இறந்தார். இரண்டாம் ஹென்றி அரியணை ஏறினர். ஐந்தாம் சார்லஸின் செல்வாக்கு

அதிகரித்ததால் ஃபிரான்சுக்கு ஏற்பட்டிருக்கும் அபாயத்தை உணர்ந்த இரண்டாம் ஹென்றி, ஃபிரான்சை வலிமைப்படுத்தும் பணியில் ஈடுபட்டார். ஜெர்மன் நாட்டுப் புராடஸ்டெண்டு களுடனும், போப் மூன்றும் ஜூலியஸுடனும், துருக்கியர் களுடனும், இங்கிலாந்துடனும் நட்புறவை ஏற்படுத்திக் கொண்டார்.

1552-ல் போர் துவங்கியது. ஹென்றி, ஜெர்மனியின்மீது படையெடுத்து 'மெட்ஸ்' (Metz), 'டூல்' (Toul), 'வெர்டன்' (Verdun) நகரங்களைக் கைப்பற்றினர். மெட்ஸை மீட்கும் நோக்கத்துடன் ஐந்தாம் சார்லஸ் முற்றுகையிட்டார். ஆனால், இம்முயற்சியில் வெற்றி பெறவில்லை. இதன்பிறகு, சார்லஸ் தீவிரமாக இந்தப் போரில் ஈடுபடவில்லை. 1556-ல் சார்லஸ் முடி துறக்கத் தீர்மானித்தார். இரண்டாம் பிலிப் ஸ்பெயின் அரசராக அரியணை ஏறினர்.

போரின் கடைசி கட்டம்: 1555-ல் போப் மூன்றும் ஜூலிய ஸுக்குப் பிறகு, நான்காம் பால் போப்பாகப் பதவி ஏற்றார். இவர் ஸ்பெயினின் எதிரி. எனவே, ஃபிரான்சின் இரண்டாம் ஹென்றி யுடன் நெருங்கிய நட்புறவு கொண்டார். நேப்பிள்ஸ் அரசின் மீது ஃபிரான்சின் உரிமையை நிலைநாட்டும்படி ஹென்றியைத் தூண்டினர். 'கைஸ் பிரபுவின்' (Duke of Guise) தலைமையில் ஃபிரெஞ்சுப் படை ஒன்று இத்தாலியில் நுழைந்தது. இதற் கிடையே ஸ்பானிய, ஜெர்மன், ஆங்கிலப் படைகள் ஃபிரான்சின் மீது படையெடுத்ததால், ஃபிரெஞ்சுப் படை இத்தாலியிலிருந்து திருப்பி அழைக்கப்பட்டது. 1557-ல் ஃபிரான்சின் வடகிழக்குப் பகுதியிலுள்ள 'செயின்ட் குவிண்டின்' (St. Quentin) என்ற இடத்தில் ஒரு போர் நடந்தது. ஸ்பானியப் படைகள் வெற்றி பெற்று, செயின்ட் குவிண்டின் கைப்பற்றப்பட்டது. இரண்டாம் பிலிப் இவ்வெற்றியை நன்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை. 1558-ல் 'கைஸ்' (Guise) பிரபுவின் தலைமையில் ஃபிரெஞ்சுப் படை ஒன்று நெதர்லாந்தின்மீது படையெடுத்தது. 'கிரேவலின்ஸ் போரில்' (Gravelines) ஃபிரெஞ்சுப்படைகள் தோற்கடிக்கப் பட்டன. இந்த நீண்ட போரினல் பயன் ஏதும் இல்லை என்பதை உணர்ந்த இருதரப்பினரும், போரைமுடிக்க ஆவலாக இருந்தனர். சமாதானப் பேச்சு வார்த்தைகளின் விளைவாக 1559-ல் 'கேடோ கேம்பிரஸி' (Treaty of Cateau Cambresis) உடன்படிக்கை ஏற்பட்டது. இதன்படி, 'கலே நகரத்தை' (Calais) எட்டு ஆண்டு களுக்கும், மெட்ஸ், டூல், வெர்டன் ஆகியவற்றை நிரந்தரமாகவும் ஃபிரான்ஸ் வைத்துக் கொள்ளவேண்டும் என்றும், தாம் வென்ற

மற்ற பகுதிகளையெல்லாம் ஃபிரான்சு விட்டுவிடவேண்டும் என்றும் மிலான், நேப்பிள்ஸ் அரசுகள் ஸ்பெயினுக்குச் சொந்தம் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. கத்தோலிக்க சமய விரோதிகளை ஒழிப்பதில், ஃபிரான்சும், ஸ்பெயினும் ஒத்துழைக்கவேண்டும். ஸ்பெயின் அரசன், இரண்டாம் பிலிப் ஹென்றியின் மகள் எலிசபெத்தை மணக்கவேண்டும்.

மதிப்பீடு

இந்த உடன்படிக்கை ஃபிரான்சுக்கும், ஸ்பெயினுக்குமிடையே இருந்த பகைமை உணர்ச்சியைப் போக்கி நிரந்தர நட்புறவை ஏற்படுத்தவில்லை. மேலும், நூற்றைம்பது ஆண்டுகளுக்கு இவ்விரு நாடுகளுக்கிடையே பகைமை நீடித்திருந்தது. ஐரோப்பிய அரசியல் தந்திர வரலாற்றின் முக்கிய அம்சமாகும். 1500 முதல் 1700 வரை இவ்விரு நாடுகளுக்கிடையே நடந்து கொண்டிருந்த இப்போர்களை இருநூறுண்டுப்போர்கள் என்று அழைக்கலாம். இத்தாலியின்மீது ஆதிக்கம் ஏற்படுத்துவதற்காகத் தொடங்கப் பட்ட இத்தாலியப் போர்கள் இத்துடன் முடிவடைந்து, சமயப் போர்கள் துவங்குகின்றன. 1559-ல் ஏற்பட்ட கேடோ கேம்பிரஸ் உடன்படிக்கையிலிருந்து, 1648-ல் ஏற்பட்ட வெஸ்ட் பேலிய உடன்படிக்கைவரை சமயப் போர்களின் காலம் என்று நாம் கருதலாம். இந்த இருநாடுகளுக்கிடையே நிலவிய உறவு, சமயப்போர்களினுல் நிர்ணயிக்கப்படுகிறது. இதனுல்தான், இந்த உடன்படிக்கை ஐரோப்பிய வரலாற்றில் ஒரு சகாப்தத்தை முடித்து, மற்ருெரு புது சகாப்தத்தைத் தொடங்குகிறது என்று வரலாற்றறிஞர்கள் கருதுகிருர்கள்.

ஃபிரான்சின் 'வேலாய்' (Valois) அரச குடும்பத்திற்கும், ஸ்பெயினின் 'ஹாப்ஸ்பர்க்' (Hapsburg) குடும்பத்திற்குமிடையே நடந்த அரசியல் ஆதிக்கப் போட்டி இத்துடன் முடிவடைகிறது.

மெட்ஸ், டூல், வெர்டன் போன்ற ஜெர்மன் நகரங்களை ஃபிரான்ஸ் பெற்றது, ஃபிரான்சின் அயல்நாட்டுக் கொள்கைகளில் ஒரு சிறப்பான நிகழ்ச்சி. ஏனெனில், ஃபிரான்சின் எல்லை ரைன் நதி நோக்கி வளர்வது இந்த உடன்படிக்கையின் விளைவாகத் தான்.

இந்த நீண்டகாலப் போரினுல் (1494–1559), ஃபிரான்ஸ் பல இன்னல்களுக்குள்ளாகியது. ஐரோப்பிய அரசியலில் ஃபிரான்ஸ் ஒரு முக்கிய பங்கு ஏற்பதை இது பெரிதும் பாதித்தது.

இத்தாலியில், ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் இறுதியாக ஏற்படுத்தப் பட்டது. பத்தொன்பதாம் நூற்ருண்டில்தான் இத்தாலிய மக்கள் ஒற்றுமையுணர்வு பெற்று இந்த அந்நிய ஆதிக்கத்தை ஒழிக்க முடிந்தது.

இப்போர் ஸ்பானியர்களுடைய செல்வ நிலையைப் பெரிதும் பாதித்தது. இப்போரினுல் வலிமை குன்றிய ஸ்பெயின், நெதர் லாந்து புரட்சியை ஒடுக்கமுடியாமல், அந்நாட்டிற்கு விடுதலை அளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இங்கிலாந்துடன் நடந்த போரில் ஸ்பெயின் தோல்வியுற்றதற்கும் இதை ஒரு காரணமாகக் கருதலாம்.

# 6. சமயச் சீர்திருத்த இயக்கம்

## I. ஜெர்மனி, II. ஸ்விட்சர்லாந்து, III. ஃபிரான்சு, IV. இங்கிலாந்து

## பிராடஸ்டெண்டு சமயத்தின் தோற்றம்

### I. ஜெர்மனி

நவீனகாலத் தொடக்கத்தின் ஒரு சிறப்பு நிகழ்ச்சி மேற்கு-மத்திய ஐரோப்பாவெங்கிலும் சமயத்துறையில் ஏற்பட்ட ஒரு பெரும் புரட்சியாகும். கத்தோலிக்க கிறிஸ்துவ சமயத்தில் மலிந்திருந்த சீர்கேடுகளையும், ஊழல்களையும் கண்டிக்கும் வகையிலும் அவற்றை அறவே அகற்றி, கிறிஸ்துவ சமயத்தைப் புனிதமாக்கும் நோக்கத்துடனும், மார்டின் லூதரால் ஜெர்மனியில் துவக்கப்பட்ட இயக்கம்தான் சமயச் சீர்திருத்த இயக்கம்' என்று ஐரோப்பிய வரலாற்றில் அழைக்கப்படுகிறது. இந்த இயக்கத்தின் விளைவாகக் கிறிஸ்துவ சமயம், கத்தோலிக்க, பிராடஸ்டெண்ட் பிரிவுகள் என்று இரண்டாகப் பிளவுபட்டு இவைகளுக்கிடையே ஏற்பட்ட சமயவெறி, வெறுப்புணர்ச்சி காரணமாகப் பல சமய, அரசியல் போர்கள் ஐரோப்பாவில் ஏற்பட்டு 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், இச்சமயப் போர்களுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கப்படுகிறது. புனித ரோமானியப் பேரரசர் ஐந்தாம் சார்லசும், அவர் மகன் இரண்டாம் பிலிப்பும் ஐரோப்பாவில் கத்தோலிக்க சமயத்தை வலிமைப்படுத்த செய்த முயற்சி, இப்போர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட மற்றொரு நிகழ்ச்சியாகும். கத்தோலிக்க சமயத்தில் பிளவுகளை உண்டாக்கி ஐரோப்பாவை நீண்டகாலம் போரில் ஆழ்த்திய இந்தச் சமயப் புரட்சியைப்பற்றி ஆராய்வதற்கு முன்பு, திருச்சபையின் வரலாற்றையும் அதன் அமைப்பையும் பற்றி அறிந்து கொள்வது இன்றியமையாததாகும்.

பதினாறும் நூற்றாண்டிற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே கத்தோலிக்க சமயம் மேற்கு—மத்திய ஐரோப்பாவில்


ஐரோப்பாவில்
சமயங்களின் நிலை
கி.பி. 1600-ல்
கால்வீனிய சமய நாடுகள்
லூதரன் சமய நாடுகள்
ஆங்கிலிக சமய நாடுகள்
கத்தோலிக்க சமய நாடுகள்
வைதீக கிறிஸ்தவ சமய நாடுகள்
ருஷ்யா
போலந்து
துருக்கிப் பேரரசு
பொஹிமியா
ஆஸ்திரியா
ஜெர்மனி
இத்தாலி
பிரான்ஸ்
ஸ்பெயின்
போர்ச்சுகல்
ஸ்வீடன்
ஸ்காட்லாந்து
டென்மார்க்
நெதர்லாந்து
இங்கிலாந்து

ஒரு சிறப்பிடத்தைப் பெற்றிருந்தது. ரோமானியப் பேரரசர்கள் பலர் கிறிஸ்துவ சமயத்தைப் போற்றி வளர்த்தனர். கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு, ஐரோப்பாவில் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்திய ஜெர் மானிய மக்கள், கிறிஸ்துவ சமயத்தின் செல்வாக்கிற்குட்பட்டு அதைப் போற்றி ஆதரித்தனர். மத்திய—மேற்கு ஐரோப்பா முழுவதும் கிறிஸ்துவ சமயம் பரவியதால், அப்பொழுது அப்பகுதி 'கிறிஸ்துவ உலகம்' என்று அழைக்கப்பட்டது. இயேசுகிறிஸ்துவின் போதனைகளையும், ஒழுக்க நெறியையும் மக்களுக்கு எடுத்துக் கூறுவதற்காக இயேசுவினுல் ஏற்படுத்தப்பட்டது திருச்சபை என்று கிறிஸ்துவர்கள் எல்லோரும் கருதினுர்கள். தெய்வீகத்தின் அடிப் படையில், தெய்வீக அதிகாரத்தால் அரண் செய்யப்பட்ட ஒரு அமைப்பு திருச்சபை என்று எல்லோரும் நம்பினர். திருச்சபையின் அன்ருட நிர்வாகப் பொறுப்பை ஏற்றுநடத்தப் பல அதிகாரிகள் இருந்தனர். இந்த மேலிருந்து கீழான உள்ள அடுக்குமுறை அமைப்பின் உச்சியில், இயேசுகிறிஸ்துவின் பிரதிநிதியாகக் கருதப் பட்ட போப்பாண்டவர் இருந்தார். இவருடைய தலைமைப் பீடம் ரோம் நகரில் இருந்தது. உலகத்திலுள்ள கிறிஸ்துவர்கள் எல்லோருக்கும் இவர் தலைவர். திருச்சபையின் சட்டங்கள் இவரால் இயற்றப்பட்டன. இவரே திருச்சபையின் தலைமை நீதிபதி. கிறிஸ்துவ நாடுகளின் அரசர்களையும், பேரரசர்களையும் பதவியிலிருந்து நீக்கும் அதிகாரமும், அவர்களால் இயற்றப்பட்ட சட்டங்கள் செல்லாது என்று தீர்மானிக்கும் அதிகாரமும் இவர் பெற்றிருந்தார். பல வகைப்பட்ட கட்டணங்கள், வரிகள் ஆகியவை இவரால் கிறிஸ்துவ உலகில் வசூலிக்கப்பட்டன. இவருக்குக்கீழ் கார்டினல்கள், ஆர்ச்பிஷப்புகள், பிஷப்புகள், 'பிரிலேட்டுகள்' (Prelates), 'பாரிஷ் மதகுருக்கள்' (Parish Priests) போன்ற மற்ற அதிகாரிகளும் இருந்தனர். இவர்கள் எல்லோரும் திருச்சபையில் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டதன் மூலம், இவ்வுலக வாழ்க்கையோடு தொடர்பு கொண்டிருந்ததால் 'Secular Clergy' என்று அழைக்கப்பட்டனர். இவர்களைத்தவிர, இந்த உலக வாழ்க்கையின் இன்பங்களைத் துறந்து எளிமை, தூய்மை, ஏழ்மை, கற்புநெறி, ஆகிய நல்லொழுக்கங்களை மேற்கொண்டு தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்ட துறவிகளும் திருச்சபையில் இருந்தனர். இவர்கள் 'Regular Clergy' என்று அழைக்கப் பட்டனர். உலகெங்கிலும் கல்விக்கூடங்கள், மருத்துவ மனைகள், அறப்பணிகள் நடத்தி வந்தவர்கள் இத்துறவிகள்தாம். பெனிடிக் டைன், ஃபிரான்சிஸ்கன், டாமினிகன் போன்ற துறவிகள் குழுவினர் இதுபோன்ற நற்பணிகளைச் செய்து, கிறிஸ்துவ சமயப்

போதனைகளை மக்களிடையே பரப்பி வந்தனர். இதன் காரண மாக, இடைக்காலத்தில் திருச்சபை பெருமதிப்பும், செல்வாக்கும் பெற்று விளங்கியது.

ஆனால், இடைக்காலத்தின் இறுதியில் இந்நிலைமை மாறிற்று. திருச்சபையிலும் சமயக் குருமார்கள் வாழ்க்கையிலும் சீர்கேடு களும், ஊழல்களும் மலிந்து காணப்பட்டன. திருச்சபை, தன் மதிப்பையும், செல்வாக்கையும் இழந்தது. இடைக்காலத்தின் பிற்பகுதியில் போப்பாண்டவர்களுக்கும், பேரரசுக்குமிடையே ஏற்பட்ட ஆதிக்கப் போட்டியில் பேரரசர்கள் வென்றனர். போப் 'எட்டாம் போனிபஸ்' (Boniface VIII), ஃபிரெஞ்சு மன்னர் 'நான்காம் பிலிப்பினால்' (Philip IV) சிறைப்பிடிக்கப்பட்டார். 1309-லிருந்து 1378 வரை, போப்பாண்டவர்கள் எல்லோரும் தங்கள் ஆட்சிப்பீடமான ரோம் நகரை விடுத்து 'அவினான்' (Avignon) நகரில் ஃபிரெஞ்சு மன்னர்களின் கட்டுப்பாட்டில் கைதிகள் போல வாழ்ந்து வந்தனர். இந்த நிகழ்ச்சி, ஐரோப்பிய வரலாற்றில் 'பாபிலோனியச் சிறைவாசம்' (Babylonian Captivity) என்று அழைக்கப்படுகிறது. 1378-ல் போப்பாண்ட வர்கள் ரோம் நகரத்திற்குத் திரும்பியது முதல் 1417 வரை போப்பின் பதவிக்குப் பலர் போட்டியிட்டதால், திருச்சபையில் ஒரு 'பெரும் பிளவு (Great Schism) ஏற்பட்டது. சில சமயங் களில் இரண்டு அல்லது மூன்று போப்புகள் தாங்கள்தாம் தூய பீடரின் உண்மையான வாரிசுகள் என்று கூறிக்கொண்டு வெவ்வேறு இடங்களிலிருந்து தங்கள் அதிகாரத்தைப் பயன் படுத்தினர். இந்நிகழ்ச்சிகளின் விளைவாக, ஒரு பெரும் ஆன்மீகச் சக்தியாக விளங்கிய திருச்சபையின் மதிப்பு மேலும் குறைந்தது. போப்பாண்டவர்களும், சமயக் குருமார்களும் தங்களுடைய ஆன் மீகப் பணிகளைப் புறக்கணித்துச் சிற்றின்பங்களில் திளைத்து, இவ்வுலக வாழ்க்கையில் காட்டிய ஈடுபாடு கிறிஸ்துவர்களின் மனதைப் புண்படுத்தியதோடல்லாமல் ஒரு வெறுப்புணர்ச் சியையும் தோற்றுவித்தது. இந்த வெறுப்புணர்ச்சி நாளடைவில் எதிர்ப்பாக மாறி, சமயப் புரட்சியாக வெடித்தது.

பதினாறும் நூற்றாண்டில் மார்ட்டின் லூதர், இந்தச் சமயச் சீர்திருத்த இயக்கத்தைத் தொடங்குவதற்கு முன்பே ஐரோப் பாவில் பல சீர்திருத்தவாதிகள் தோன்றி, சீர்திருத்தத்தின் அவசியத்தையும், திருச்சபையில் மலிந்து கிடக்கும் ஊழல்களையும் மக்களின் கவனத்திற்குக் கொணர்ந்தனர். பதினான்காம் நூற்றாண்டில் 'ஜான் விக்ளிப்' (John Wycliff, 1320-1384) என்னும் ஆங்கிலேயர், திருச்சபையின் ஊழல்களையும், சமயக் குருமார்களின்

ஆடம்பர வாழ்க்கைகளையும் கண்டித்தார். போப்பாண்டவர், இயேசு கிறிஸ்துவின் பிரதிநிதி அன்று; கிறிஸ்துவர்களின் வழி காட்டி விவிலியமே அன்றி, போப் அன்று; திருச்சபையும் அரசும், இரண்டு வெவ்வேறு நிறுவனங்கள்; திருச்சபை தன் செல்வத்தைத் துறக்க வேண்டும் என்பவை போன்ற புரட்சிக் கருத்துகளை மக்களிடையே பரப்பினார். இதனால், போப்பாண்டவரின் சினத்திற்குள்ளானார். இவருடைய சீடர்கள் 'லோலர்டுகள்' (Lollards) என்று அழைக்கப்பட்டனர். இவருடைய பிரதம சீடர்களுள் ஒருவரான 'ஜான் ஹூஸ்' (John Hus) என்பவரும், அவருடைய சீடர்களான 'ஹூசைட்டுகளும்' (Hussites) ஜெர்மனியில் இக்கருத்துகளைப் பரப்பினர். 1415-ல் கூடிய 'சமயக்குழு ஒன்று' (Council of Constance) ஹூசை, சமயத்துரோகி என்று தீர்மானித்து அவரைத் தீயிட்டுக் கொளுத்தும்படி இட்ட ஆணையைப் பேரரசர் 'சிஜிஸ்மண்டு' (Sigismund) நிறைவேற்றினார். எனவே, விக்ளிப், ஹூஸ் போன்றவர்களைச் சமயச் சீர்திருத்தத்தின் முன்னோடிகள் என்று அழைக்கலாம். ஜான் விக்ளிப் சமயச் சீர்திருத்தத்தின் விடிவெள்ளி, (Morning Star of the Reformation) என்று அழைக்கப்படுகிறார். பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திருச்சபையினுள்ளிருந்தே திருச்சபையின் சீர்கேடுகளை அகற்றி அதைச் சீர்திருத்தச் செய்யப்பட்ட முயற்சிதான் 'கன்ஸிலியர் இயக்கமாகும்' (Conciliar Movement), இது போப்பின் சர்வாதிகாரத்தை எதிர்த்தது. கிறிஸ்துவ உலகின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு பொது கவுன்சிலுக்குப் போப்பாண்டவரைவிட அதிகமான அதிகாரங்கள் உண்டு என்று இந்த இயக்கத்தினர் வாதித்தனர். திருச்சபை இவ்வளவு எதிர்ப்புகளையும் சமாளித்து, பதினாறும் நூற்றாண்டில் தன் செல்வாக்கை ஓரளவு நிலைநாட்டியது. 'சிறுதுளி பெருவெள்ளம் என்பதுபோல 15ஆம் நூற்றாண்டில் சிறுசிறு துளியாகத் தோன்றிய இந்த எதிர்ப்பு, 16ஆம் நூற்றாண்டில் பெருவெள்ளமாகக் கரை புரண்டோடியது.

பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் திருச்சபையின் சீர்கேடுகள், குறிப்பாகச் சமயக் குருமார்களின் ஒழுக்க நெறிக்கு முரண்பட்ட வாழ்க்கை போன்றவை 'எராஸ்மஸ்' (Erasmus) போன்ற அறிஞர்களாலும், 'சவோனரோலா' (Savonarola) போன்ற சமயவாதிகளாலும்' கோலெ' (Colet) 'சர் தாமஸ் மூர்' (Sir Thomas More) போன்ற சீர்திருத்தவாதிகளாலும் கண்டிக்கப்பட்டாலும், இந்த இயக்கத்தைத் தோற்றுவித்த பெருமை ஜெர்மனியைச் சேர்ந்த மார்டின் லூதரையே சாரும். மார்டின் லூதரின் புரட்சி, திருச்சபை அமைப்பையும் திருச்சபையின் கோட்பாடுகளையும் பெரிதும் பாதித்தது.

## சமயச் சீர்திருத்த இயக்கத்தின் காரணங்கள்

### 1. மறுமலர்ச்சி இயக்கம்

சமயச்சீர்திருத்த இயக்கம் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணம் ஐரோப்பாவில் தோன்றிய மறுமலர்ச்சி இயக்கமாகும். இவ்வியக்கம் மக்களிடையே ஒரு புது உணர்வையும், விழிப்பையும் ஏற்படுத்தி, பகுத்தறிவுக்கு ஒவ்வாத கருத்துகளை மறுக்கும் துணிவையும், எந்தப் பிரச்னையையும் திறனாய்வு நோக்கோடு அணுகும் ஓர் உணர்வையும் ஏற்படுத்தியது என்பதை நாம் முன்பு கண்டோம். இடைக்காலத்தில், பல கட்டுப்பாடுகளின் கீழ்ச் செயல்பட்டு வந்த மனிதன், மறுமலர்ச்சி இயக்கத்தின் விளைவாகக் கட்டுப்பாடுகளைத் தகர்த்தெறிந்து, சுயேச்சையாகச் சிந்திக்கவும் செயல்படவும் தொடங்கினான். இதன் விளைவு, மனிதன் திருச்சபையின் கோட்பாடுகளையும், கட்டுப்பாடுகளையும் திறனாயும் பணியில் ஈடுபட்டு, இறுதியில் அதன் ஊழல்களையும், சீர்கேடுகளையும் கண்டிக்கும் துணிவைப் பெற்றான். சீர்கேடுகள் மிகுந்த திருச்சபையின் அதிகாரத்தை, மக்கள் ஏற்க விரும்பவில்லை. மறுமலர்ச்சி இயக்கத்தின் விளைவாக, இலக்கியத்துறையில் தோன்றிய 'அறிவிலிகளின் கப்பல்' (Ship of Fools). 'மடமையின் புகழ்ச்சி' (Praise of Folly). போன்ற நூல்கள் திருச்சபையின் ஊழல்களை மக்களின் கவனத்திற்குக் கொணர்ந்து அவற்றைக் கண்டித்தன. இதுபோன்ற கருத்துகள் பாமரமக்களிடையேயும் பரவின. அச்சுப்பொறி கண்டுபிடிப்பு உதவியதன் மூலம் சமயச் சீர்திருத்த இயக்கம் ஆக்கம் பெற்றது.

### 2. சமயச் சார்பான காரணங்கள்

திருச்சபையின் சீர்கேடுகள் (அ) போப்பாண்டவர்: 'பாபிலோனியச் சிறைவாசம்' (Babylonian Gaptivity), திருச்சபையில் 'பெரும் பிளவு' (Great Schism) போன்ற நிகழ்ச்சிகளால், போப்பாண்டவரின், மதிப்பும் செல்வாக்கும் குறைந்தன என்பதை முன்பு கண்டோம். இவை தவிர, போப்பாண்டவர்கள் அரசியலில் தலையிட்டுத் தங்கள் அதிகாரத்தை வளர்த்துக்கொள்ள ஆரம்பித்தார்கள். பேரரசர்களுடன் ஆதிக்கப்போட்டியில் ஈடுபட்டு, திருச்சபை ஓர் அரசியல் சக்தியாக மாறியது. பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினாறாம் நூற்றாண்டிலும் ஆறாம் அலெக்சாந்தர் *(1492-1503)*, இரண்டாம் ஜூலியஸ் *(1503-1513)*, பத்தாம் லியோ *(1513-1521)* போன்ற போப்பாண்டவர்கள் இன்பத்தில் திளைத்து ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தனர். மறுமலர்ச்சிக் காலத்

தோன்றிய இலக்கிய, கலை வளர்ச்சிக்கு ஆதரவு அளித்தனர். தங்கள் ஆடம்பர வாழ்க்கைக்குத் தேவையான நிதியைத் திரட்டப் பல்வேறு முறைகளைக் கையாண்டனர். திருச்சபையில் புதிய பதவிகள் உண்டாக்கப்பட்டு, அப்பதவிகள் பணத்திற்கு விற்கப் பட்டன. இந்தத் தீய பழக்கத்திற்கு 'சிமனி அல்லது திருச்சபைப் பதவி விற்பனை' (Simony) என்று பெயர். இவ்வாறு ஈட்டிய செல்வத்தை நாடு பிடிக்கும் போர்களுக்காகவும், தங்கள் உறவினர்களின் முன்னேற்றத்திற்காகவும், விருந்துகள் போன்ற கேளிக்கைகளுக்காகவும் செலவிட்டனர். போப்புகள் எல்லா நாடுகளிலும் உள்ள கிறிஸ்துவர்களைக் கட்டுப்படுத்தும் ஆணைகளை இடும் அதிகாரம் உண்டு என்று கோரினர். திருச்சபையின் தலைமை அதிகாரி என்ற முறையில், அதன் சொத்துகள் யாவும் போப் பாண்டவரின் கண்காணிப்பில் இருந்தன. திருச்சபையில் பதவி பெறும் ஒவ்வொருவரும், போப்பிற்கு 'அன்னேட்டுகள்' (Annates) என்ற ஒரு வரியைச் செலுத்தவேண்டும். பதவிகளைப் பணத்திற்கு விற்பதன் மூலம், போப்புகள் ஏராளமான செல்வத்தை ஈட்டினர். 'பாவமன்னிப்புச் சீட்டுகள்' (Indulgences) வழங்கும் உரிமை போப்பாண்டவர் பெற்றிருந்தாலும், அவற்றை விலைக்கு விற்கும் ஓர் இழிவான செயலில் போப்புகள் ஈடுபடலாயினர். சமயச் சீர்திருத்தத்தின் அடிப்படைக் காரணங்களை ஆராயும்பொழுது சமயத் தொடர்புள்ள காரணங்களைவிட நிதித் தொடர்புள்ள காரணங்கள்தாம் இவ்வியக்கம் தோன்றக் காரணமாக இருந்தன[1] போப்பாண்டவர்கள் இவ்வாறாக உலக வாழ்க்கை இன்பங்களில் ஈடுபட்டு, ஒழுக்கநெறி குன்றிய வாழ்க்கை வாழ்ந்தனர். பிஷப்புகள், அலட்டுகள் போன்ற திருச்சபையின் உயர்ந்த உயர் அதிகாரிகளும், கீழ்நிலை அதிகாரிகளும் போப்பாண்டவர்களின் உதாரணத்தையே பின்பற்றி, ஒழுக்கமற்ற, ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தனர். தங்களுடைய கடமைகளை மறந்து அரசியல்வாதி களாகவும், செல்வம் தேடுவதில் கண்ணுங் கருத்துள்ளவர்களா கவும், பயனற்ற ஆடம்பரச் செலவுகளைச் செய்பவர்களாகவும், உலக இன்பங்களைத் துய்ப்பதில் ஈடுபாடு கொண்டவர்களாகவும் விளங்கினார்கள். இதன் காரணமாக, இவர்கள் யாவரும் மக்களின் வெறுப்புக்குள்ளானார்கள். விழிப்படைந்த மக்கள் சீர்கேடுகளைக் கண்டிக்கவும், திருச்சபைச் சீர்திருத்தம் கோரவும் துணிவு பெற்றனர்.

(ஆ) சமயக் குருமார்கள் : கிறிஸ்துவ சமயக் குருமார்கள் பல சிறப்புரிமைகளைப் பெற்றிருந்தனர். (Benefit of the Clergy) சமயக் குருமார்கள் அரசின் எந்த நீதிமன்றங்களின் வரம்பிற்குட்பட்ட

[1] Cambridge Modern History, Volume I, page 667.

வர்கள் அல்லர். இவர்களை விசாரிப்பதெற்கென தனிப்பட்ட சமய நீதிமன்றங்கள் இருந்தன. இவர்கள், அரசிற்கு எந்தவகையான வரியையும் செலுத்த வேண்டியதில்லை. எளிமை, தூய்மை, கற்பு நெறி, துறவு போன்ற ஒழுக்கங்களை விடுத்து, தங்கள் சமயப் பணிகளை மறந்து, சுகபோக வாழ்வு நடத்தி வந்தனர். மோட்சத்தின் வாயிற் திறவுகோல் தங்கள் கையில் இருப்பதால், அவர்கள் உதவியின்றி எவரும் வீடுபேற்றை அடைய முடியாதென்று கூறிக்கொண்டனர். ஞானஸ்நானம் (Baptism), திருமணம், ஈமச் சடங்குகள் போன்ற சடங்குகளெல்லாம் அவர்களின்றி நடக்கமுடியாது. இந்தச் சிறப்புரிமைகளைப் பெற்றிருந்த சமயக் குருமார்கள் சமயத்தின் பெயரால் மக்களை ஏமாற்றி வந்தனர். கிறிஸ்துவ சமயக்கோட்பாடுகளுக்கு முரண்பட்ட இவர்கள் வாழ்க்கையும், இவர்களால் திருச்சபைக்கு ஏற்பட்ட இழிவும், மக்களிடையே வெறுப்புணர்ச்சியையும், மக்களின் எதிர்ப்பையும் உண்டாக்கியதில் வியப்பொன்றுமில்லை.

(இ) திருச்சபையின் செல்வம்: கிறிஸ்துவ உலகின் ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்கு செல்வத்தை, திருச்சபை பெற்றிருந்தது. ஏராளமான நிலத்தைத் திருச்சபை பெற்றிருந்தது. ஐரோப்பாவிலேயே மிகப் பெரிய நிலமானிய நிறுவனமாக விளங்கியது திருச்சபை. திருச்சபையின் இந்தச் செல்வநிலைதான் பல சீர்கேடுகளுக்குக் காரணமாக இருந்தது. எனவேதான், ஜான்விக்ளிப் போன்ற சீர்திருத்தவாதிகள் திருச்சபை தன் செல்வத்தைத் துறக்கவேண்டும் என்று கூறினர்.

### 3. தேசிய உணர்வு

சமயச்சீர்த்திருத்த இயக்கம் தோன்றக் காரணமாக இருந்தது திருச்சபையின் சீர்கேடுகள் மட்டுமன்று; மறுமலர்ச்சி இயக்கத்தின் விளைவாகத் தோன்றிய தேசிய உணர்வு என்றும் கூறலாம். தேசிய உணர்வு மேலோங்கி இருந்த இந்தக் காலத்தில், அரசர்களும், அவர்கள் ஆட்சியில் வாழ்ந்த மக்களும் போப்பாண்டவர்கள் தங்கள் நாட்டு விவகாரங்களில் தலையிடுவதை விரும்பவில்லை. கிறிஸ்துவ உலகின் எல்லாப் பகுதிகளிலும் வாழும் மக்களைக் கட்டுப்படுத்தும் ஆணைகளைப் பிறப்பிக்கும் உரிமை (Papal Bulls) தங்களுக்கு உண்டென்று போப்பாண்டவர்கள் கருதினார்கள். சமயத் தொடர்புள்ள எல்லா வழக்குகளிலும் மேல்விசாரணை விண்ணப்பம் (Appeal) தங்களுக்குத்தான் செய்யப்படவேண்டும் என்று கூறினர். பல்வேறு நாட்டு மக்களிடமிருந்து திருச்சபை சில வரிகளை வசூலித்தது. இவ்வாறு தங்கள் நாட்டுச் செல்வம் ரோமாபுரிக்குச் செல்வதை அரசர்கள் விரும்பவில்லை.

ஒவ்வொரு அரசிலும் உள்ள திருச்சபைகள், போப்பாண்டவரின் கட்டுப்பாட்டில் இயங்கி வந்தன. தேசிய உணர்வு வலுப்பெற்றிருந்த இந்தக் காலத்து மன்னர்களும், மக்களும் போப்பை அன்னியராகக் கருதினர். அவருடைய ஆதிக்கத்தை வெறுத்து எதிர்த்தனர்.

4. அரசியல் காரணங்கள்

பதினாறும் நூற்றாண்டு தேசிய நாடுகள் தோன்றி வலிமையுள்ள முடியாட்சிகள் தோன்றிய காலமாகும். தங்கள் அதிகாரம் நாடு முழுவதும் நிலைநாட்டும் பணி முற்றுப்பெற வேண்டுமானால், திருச்சபைகளையும் தங்கள் அதிகார வரம்பிற்குள் கொண்டுவர வேண்டியது இன்றியமையாதது என்பதைப் பல அரசர்கள் உணர்ந்தார்கள். எடுத்துக்காட்டாக, ஃபிரான்ஸ் மன்னர் ஏழாம் சார்லஸ், பின்னர் திருச்சபையைக் கட்டுப்படுத்த, போப் கோரிய உரிமையை மறுத்தார். ஸ்பெயினில் ஃபெர்டினாண்ட்-இசபெல்லா ஆட்சியில் பிஷப்புகளை அமர்த்தும் அதிகாரம் போப்பிடமிருந்து பறிக்கப்பட்டது. இங்கிலாந்தில் பல சட்டங்கள்மூலம் போப்பின் அதிகாரம் கட்டுப்படுத்தப்பட்டது. மேலும், திருச்சபையின் ஏராளமான செல்வத்தையும், அதன் சிறப்புரிமைகளையும் சில அரசர்கள் பறிக்க விரும்பினர். தங்கள் அதிகாரத்தை வலுப்படுத்திக்கொள்ள அதன் செல்வத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்திக்கொள்ள எண்ணினர் சிலர். ஜெர்மானிய சிற்றரசர்கள் புனித ரோமானியப் பேரரசரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற சமயச் சீர்திருத்த இயக்கத்திற்கு ஆதரவு அளித்தனர். தேசியம் வலுப்பெறாத நாடுகளில் திருச்சபையின் அரசியல் ஆதிக்கம் தேசியம் வளருவதற்குத் தடையாக இருப்பதாகக் கருதித் திருச்சபையை அரசின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முயற்சித்தனர் சிலர். மேற்கூறிய காரணங்கள் திருச்சபை தேசியமயமாக்கப்படுவதற்கு உதவியாக இருந்தன. இங்கிலாந்து போன்ற நாட்டில் குறிப்பாக இந்தப் போக்கை நாம் காணமுடிகின்றது.

5. பொருளாதாரக் காரணங்கள்

திருச்சபையிலும், சமயக் குருமார்களிடமும் காணப்பட்ட பொருளாதாரச் சீர்கேடுகள் மக்களின் கவனத்தைக் கவர்ந்தன. தொழிலதிபர்களும், வியாபாரிகளும், நிலச்சுவான்தார்களும் திருச்சபையின் செல்வம் பறிக்கப்பட வேண்டுமென்று விரும்பினர். ஏனெனில், அவர்களிடமிருந்த செல்வம் பொதுமக்களின் நலனுக்காகப் பயன்படுத்தப்படாமல் சமயக் குருமார்களின் சொந்த

நலனுக்காகப் பயன்பட்டது. திருச்சபையிடமிருந்த செல்வம் முடங்கிக் கிடந்த மூலதனமேயன்றி அதிலிருந்து அதிக வருவாய் ஒன்றுமில்லை. இந்தச் செல்வத்தை நல்லமுறையில் பயன்படுத்தி அதிலிருந்து வருவாயைப் பெருக்க முடியும் என்று தொழிலதிபர் களும், வியாபாரிகளும் எண்ணினர். எனவே, அரசர்கள் அந்தச் செல்வத்தைப் பறிக்கும் பணியில் ஈடுபட ஆக்கம் அளித்தனர். மூலதனம் மேன்மேலும் தேவைப்பட்ட சமயத்தில் நாட்டின் செல்வம் ரோம் நகருக்கு எடுத்துச் செல்லப்படுவதை நாட்டுப் பற்றுமிக்க மக்கள் விரும்பவில்லை.

### 6. உடனடிக் காரணம்

பாவமன்னிப்புச் சீட்டுகளை (Indulgences)[1] போப்பாண்டவர் விற்கும் வழக்கத்தை மார்ட்டின் லூதர் கடுமையாகக் கண்டித் தார். இந்த எதிர்ப்புதான் பின்னர் சமயச் சீர்திருத்த இயக்கமாக உருவெடுத்தது. கொள்கை அளவில் இது ஒரு நல்லமுறை என்று லும் நடைமுறையில் இது திருச்சபையில் பல ஊழல்கள் தோன்றக் காரணமாக இருந்தது. பாவமன்னிப்புச் சீட்டு சமயப் பணிகள் செய்தவர்களுக்குப் பரிசாகவும், சமயப் போர்களில் பங்கு கொள்ளத் தூண்டுவதற்காகவும் அளிக்கப்படுவது வழக்கம். இந்த முறையின்படி பாவச்செயலை ஒருவன் புரிந்துவிட்டு, போப் பிற்கு ஒரு குறிப்பிட்ட தொகையை அளிப்பதன் மூலம் தண்டனை யிலிருந்து தப்பிவிட முடியும் என்ற நிலை உருவாகியது. பாவமன்னிப்பு வழங்கும் உரிமையைப் பெற்றிருந்த போப்பாண்ட வர்கள், இதைப் பணம் ஈட்டுவதற்கான ஒரு கருவியாகப் பயன் படுத்த ஆரம்பித்தார்கள். பாவமன்னிப்புச் சீட்டுகள் வழங்கப் படும் நிலை மாறி, அவை பணத்திற்காக விற்கப்படும் நிலை

[1] பாவமன்னிப்புச் சீட்டு வழங்குதல், கடவுள் குற்றவாளியை மன்னிக்கிறார் என்ற கருத்தின் அடிப்படையில் கிறிஸ்துவ சமயத்தில் தோன்றிய ஒரு வழக்கம். பாவச் செயல்கள் புரிந்த ஒருவன் தன் செயலுக்கு உண்மையான வருத்தம் தெரிவித்து, குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் (Confession). இவ்வாறு செய்தால் அவன் பாவச் செயலுக்கான பொறுப்பிலிருந்து விடுவிக்கப்பட்டுத் தண்டனையிலிருந்து தப்புகிறான்.

ஆனால், இது அவனுக்கு முழு விடுதலை அளிப்பதில்லை. முழு விடுதலை பெற போப்பாண்டவர் அவனுக்குப் பாவமன்னிப்பு அளிக்கவேண்டும். இயேசுகிறிஸ்து மற்றும் பல சமயத் துறவிகளின் நற்பணிகளின் பயன்கள் சேமித்துவைக்கப்பட்டு அந்த நற்பணிகள் சேமிப்புநிதி போப்பாண்டவரின் கண்காணிப்பில் இருப்பதாக கிறிஸ்துவர்கள் நம்பினர். பாவம் செய்த ஒருவனுக்கு இந்த நிதியிலிருந்து நற்பணி யின் பயனை அளிப்பதன் மூலம அவன் தணடனையிலிருந்து விடுபடுகின்றான். போப் பாண்டவர் அளிக்கும் இந்த பாவமன்னிப்புதான் (Indulgence) என்று அழைக்கப் பட்டது.

உருவாகியது. இந்தத் தீய பழக்கத்தைத்தான் மார்டின்லூதர் கண்டித்தார். இதுதான் சமயச் சீர்த்திருத்த இயக்கத்தின் தொடக்கமாகும்.

## இந்த இயக்கம் ஏன் ஜெர்மனியில் தோன்றியது?

ஜெர்மனியிலிருந்த அரசியல் ஒற்றுமையின்மையும், ஜெர்மானிய சிற்றரசர்களுக்குள் இருந்த போட்டி மனப்பான்மையும், புனித ரோமானியப் பேரரசின் ஆதிக்கத்திலிருந்து விடுபட வேண்டுமென்ற சிற்றரசர்களின் எண்ணமும், ஜெர்மன் மக்களின் ஆழ்ந்த சமய உணர்வும் இவ்வியக்கம் ஜெர்மனியில் தோன்றக் காரணங்களாக இருந்தன. சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்ற முக்கிய காரணமாக இருந்த திருச்சபையின் சீர்கேடுகள் குறிப்பாக ஜெர்மனியில் மிகுந்து காணப்பட்டன. இவைபற்றி ஜெர்மானிய அரசுகளின் சட்டமன்றங்கள் அடிக்கடி ரோம் நகருக்குப் புகார்கள் அனுப்பியும், போப்பாண்டவர் இவற்றை அசட்டை செய்தார்.

இந்தப் புரட்சி தோன்றுவதற்கு உடனடிக் காரணமாக இருந்த பாவமன்னிப்புச் சீட்டு விற்கும் தீய பழக்கமும் ஜெர்மனியில் மலிந்திருந்தது. ஜெர்மனியில் பல்கலைக் கழகங்கள் மனிதாபிமான இயக்கத்தின் மையமாக விளங்கின. 'ஜோகன் ரூஷ்லின்' (Johan Reuchlin), 'எராஸ்மஸ்' (Erasmus) போன்ற ஜெர்மனியில் வாழ்ந்த அறிஞர்கள் திருச்சபையின் ஊழல்களைக் கண்டித்தனர். எராஸ்மஸ், லூதரின் புரட்சி இயக்கத்தை ஆதரிக்கவில்லை. ஏனெனில், எராஸ்மஸ் போன்றவர்கள் சீர்த்திருத்தத்தை விரும்பினர்களே அன்றி, புரட்சியை அன்று. மக்களிடையே நல்ல அறிவு பரவுவதன் விளைவாக, திருச்சபையின் ஊழல்கள் யாவும் தாமே மறைந்து விடும்; புரட்சிக்கு அவசியமில்லை என்ற கருத்தைக் கொண்டவர் எராஸ்மஸ். ஆனல், திருச்சபையின் சீர்த்திருத்தங்கள் உடனடியாகத் தேவை என்பதை இவர் உணராமலில்லை. எனவே "எராஸ்மஸ் இட்ட முட்டை லூதரால் குஞ்சு பொறிக்கப் பட்டது" (Erasmus laid the egg, Luther hatched it) என்ற கத்தோலிக்கர் ஒருவரின் கூற்றில் ஓரளவு உண்மை இருக்கிறது.

### மார்டின் லூதர் (1483-1546)

ஜெர்மனியில் ஒரு விவசாயக் குடும்பத்தில் 1483-ல் லூதர் பிறந்தார். விவசாயிகளுக்கே உரிய உடல் வலிமை, எளிமை போன்ற இயல்புகளைப் பெற்றிருந்தார். 'எர்ஃபர்ட்' (Erfurt) கலாசாலையில் சட்டப் படிப்பு பயின்று 1505-ல் அகஸ்டினியத்

துறவிகள் மடத்தில் சேர்ந்தார். விவிலியத்தையும், செயின்ட் அகஸ்டனின் பல நூல்களையும் படித்துச் சமயத்துறையில் நல்ல தேர்ச்சி பெற்முர். 1508-ல் 'விட்டன்பர்க்' (Wittenbrug) பல்கலைக் கழகத்தில் சமய இயல் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். 1510-ல் இவர் ரோம் நகருக்குச் செல்லும் வாய்ப்பு பெற்ற தனுல் திருச்சபையிலுள்ள சீர்கேடுகளையும், போப்பாண்டவர் களின் ஒழுங்கீனங்களையும் நேரே கண்டறிய முடிந்தது. செயின்ட் பால், செயின்ட் அகஸ்டின் போன்றவர்களின் சமய நூல்களைக் கற்றதன் விளைவாக, கத்தோலிக்க திருச்சபைக் கருத்துகளி லிருந்தும் மாறுபடத் தொடங்கினுர். மனிதன் நற்பணிகள் மூலமும், சடங்குகள் மூலமும்தான் மோட்சத்தை அடையமுடியும் என்ற கொள்கையைக் கத்தோலிக்க சமயம் வலியுறுத்தியது. (Justification by Sacraments and Works). இதற்கு மாருக லூதர் கடவுள் அருளில் கொள்ளும் ஆழ்ந்த நம்பிக்கை மூலம்தான் மோட்சத்தை அடைய முடியும் என்ற கொள்கையை வலியுறுத்தினுர் (Justification by faith). 1517 வரை ஓர் உண்மையான கத்தோலிக்க கிறிஸ்துவராக வாழ்ந்த லூதரின் வாழ்க்கையில் ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது. அந்த ஆண்டில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி உலகின் கவனத்தை லூதரின்மீது திருப்பி ஒரு மாபெரும் இயக்கம் துவங்குவதற்கே காரணமாக அமைந்தது. அந்த ஆண்டில் டோமினிக்க துறவி 'ஜான் டெட்ஸல்' (Tetzel) என்பவர் பாவமன்னிப்புச் சீட்டுகளை விற்பதற்காக ஜெர்மனிக்கு வந்தார். ரோம் நகரில் புனித பீட்டர் ஆலயத்தைக் கட்ட நிதி திரட்டுவதற்காக, போப் பத்தாம் லியோ அவரைப் பாவமன்னிப்புச் சீட்டுகளை விற்கும்படி அனுப்பியிருந்தார். ஜெர்மானியச் சிற்றரசர்கள் எல்லோரும் இந்தப் பாவமன்னிப்புச் சீட்டு விற்பனையை ஆதரிக்க வில்லை. பொருளாதார அடிப்படையில் ஜெர்மன்நாட்டுச் செல்வம் நாட்டைவிட்டு வெளியே செல்வதை அவர்கள் விரும்பவில்லை. ஆனுல், லூதர் இதைச் சமய அடிப்படையில் எதிர்த்தார். பாவ மன்னிப்புச் சீட்டு விற்பனைக்குத் தன் பலத்த கண்டனத்தையும் எதிர்ப்பையும் 95 வாதங்கள் (95 Theses) மூலம் தெரிவித்து லத்தீன் மொழியில் அவற்றை எழுதி விட்டன்பர்க் மாதாகோயில் கதவில் அறைந்தார். லத்தீன் மொழி தெரிந்த எல்லோரும் இதைப் படித்தனர். ஜெர்மன் மொழியிலும் இது மொழிபெயர்க்கப் பட்டு அச்சிடப்பட்டது. இதுவரை சாக்சனி அரசில்மட்டும் நடந்து கொண்டிருந்த இதுபற்றிய விவாதம் புனித ரோமானியப் பேரரசு முழுவதும் பரவியது. திருச்சபையில் பிளவை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த விவாதம் தொடங்கப்பட வில்லை. திருச்சபையின் உண்மையான கோட்பாட்டிற்கு முரண் பட்ட ஒரு தீய பழக்கத்தை மக்களின் கவனத்திற்குக் கொண்டுவர

வேண்டுமென்பதுதான் லூதரின் நோக்கம். மூன்று ஆண்டுகள் (1517-1520) தொடர்ந்து இந்த விவாதம் தீவிரமாக நடந்தது. இந்த விவாதத்தில் பாவமன்னிப்புச் சீட்டு விற்பது சரியா, தவறு என்ற முக்கிய பிரச்னை பின்னுக்குத் தள்ளப்பட்டு, போப்பாண்டவரின் அதிகாரப் பிரச்னை முன்னணிக்குக் கொண்டு வரப்பட்டது. இந்த விஷயத்தில் போப்பின் சார்பாகப் 'பிரிரியாஸ்' (Prierias), 'கார்டினல் கஜடான்' (Cardinal Cajetan), 'மில்டிட்ஸ்' (Miltitz), 'எக்' (Eck) போன்றவர்கள் பங்குகொண்டு லூதரை எதிர்த்தனர். 1520ஆம் ஆண்டு லூதரின் கருத்துகள் தெளிவுபெற்றுப் பல பிரசுரங்கள் மூலம்[1] போப்பின் ஆதிக்கத்தையும், திருச்சபை ஊழல்களையும் லூதர் கண்டித்தார். லூதருடன் சமரசப் பேச்சு வார்த்தைகள் நடத்தித் தோல்விகண்ட போப் பத்தாம் லியோ 1520-ல் லூதரைத் சமயத் துரோகி என்று அறிவித்து அவரைச் சமயத்திலிருந்து விலக்கி ஓர் ஆணையைப் பிறப்பித்தார். தன் செயல்களுக்கு வருத்தம் தெரிவித்து மன்னிப்புகோருமாறு அந்த ஆணையில் கூறப்பட்டிருந்தது. மன்னிப்பு தெரிவிப்பதற்கு மாறாக விட்டன்பர்க் நகரில் போப்பின் ஆணையை லூதர் எரித்தார். திருச்சபையில் பிளவு தோன்றி பிராடஸ்டண்டு சமயம் பிறந்து விட்டது. மார்டின் லூதரின் இயக்கம் திருச்சபையின் சீர்கேடுகளையும், ஊழல்களையும் கண்டிக்கும் நோக்கத்துடன் தொடங்கப்பட்டதால் இதைப் பிராடஸ்டெண்டு இயக்கம் என்றும், லூதரைப் பின்பற்றியவர்கள் பிராடஸ்டெண்டுகள் (கண்டன இயக்கத்தினர்) என்றும் அழைக்கப் பட்டனர். கிறிஸ்துவ உலகத்தில் இவ்வாறு தோன்றிய பிளவு இறுதிவரை மறையவேயில்லே. இந்த நிலைக்கு லூதர்தான் பொறுப்பு என்று கருதுவது பொருந்தாது. அவருடைய எண்ணங்களின் அடிப்படையில் நோக்கும் பொழுது அவரை ஒரு புரட்சிவாதி என்றோ, பிரிவினையை ஆதரித்தவர் என்றோ கருதமுடியாது. உண்மையான கிறிஸ்துவ கோட்பாடுகளுக்கு முரண்பட்ட சில சீர்கேடுகள், பழக்க வழக்கங்கள் திருச் சபையில் வளர்ந்து விட்டதை லூதர் சுட்டிக்காட்டினார். இது அவருடைய குற்றமன்று. விவாதத்தின் மூலம் அவருடைய குற்றச் சாட்டுகள் பொய் என்று நிருபிப்பதற்கு மாறாக அவருடைய எதிரிகள் அவரைக் கண்டிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தனர். அதிகாரத்தினைப் பயன்படுத்தி அவரை ஒடுக்கி விடலாம் என்று நினைத்தனர். இந்தச் சூழ்நிலையில் ஸ்பெயின்

[1] பிராடஸ்டண்டு சமயம் தோன்றியபொழுது அதன் அடிப்படைக் கருததுகள் அடங்கிய பிரசுரங்கள் (Pamphlets) லூதரால் வெளியிடப்பட்டன. "Address to the Christian nobility of the German Nation, in the Babylonian Captivity of the Church", "Concerning Christian liberty".

அரசர் ஐந்தாம் சார்லஸ் புனித ரோமானியப் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். கத்தோலிக்க சமயத்தில் ஆழ்ந்த நம்பிக்கையும், தீவிரப் பற்றும்கொண்ட இவர் லூதரின் புரட்சி இயக்கத்தை வெறுத்தார். ஆனால், லூதரின் இயக்கம் ஜெர்மன் தேசியத்தின் அடிப்படையில் அமைந்திருந்ததாலும், பல ஜெர்மானிய அரசர்கள், ஜெர்மன் மக்கள் ஆகியோரின் ஆதரவைப் பெற்றிருந்ததாலும் ஐந்தாம் சார்லஸ், லூதரின் இயக்கத்தை அவ்வளவு எளிதாக ஒடுக்க முடியவில்லை. லூதரின் சமயத் துரோகச் செயலைத் தக்க விசாரணையின்றித் தண்டிக்கவும் அவர் துணியவில்லை. எனவே, 1521-ல் லூதரின் விசாரணைக்காக ஒம்ஸ் நகரில் புனித ரோமானியப் பேரரசின் 'டயட் சபை' (Diet of Worms 1521) கூட்டப்பட்டது. லூதர் இக்கூட்டத்திற்கு அழைக்கப்பட்டுத் தன் சமயக் கருத்துக்களைக் கைவிட்டு மன்னிப்பு கோருமாறு வேண்டப்பட்டார். லூதர் மறுக்கவே 'ஒம்ஸ் ஆணை மூலம்' (Edict of Worms) லூதரையும், அவரைப் பின்பற்றியவர் களையும் 'சமூகத்திலிருந்து விலக்கப்பட்டவர்கள்' (Outlaws) 'சமயத்துரோகிகள்' (heretics) என்று இந்தச் சபை அறிவித்தது. ஆனால், லூதருடைய நண்பரான சாக்சனியன் சிற்றரசர் ஓராண்டு காலம் 'வார்ட்பர்க் கோட்டையில்' (Wartburg Castle) லூதரைத் தங்கச்செய்து ஆதரவளித்தார். இந்தச் சமயத்தில்தான் முதன் முதலாக விவிலியநூலின் 'புதிய ஏற்பாடு' (New Testament) லூதரால் ஜெர்மன் மொழியில் மொழி பெயர்க்கப்பட்டது.

### சமயப் புரட்சியின் வெற்றிக்குக் காரணங்கள்

லூதரின் சமயக் கருத்துக்கள் ஜெர்மனியின் வடக்கு, மத்தியப் பகுதியிலுள்ள அரசுகளில் வேகமாகப் பரவின. ஒரு சாதாரண சமயப் புரட்சியாகத் தோன்றிய இந்த இயக்கம் கிறிஸ்துவ உலகத்தின் வரலாற்றைப் பாதிக்கும் வகையில் பெருத்த செல்வாக்கையும், ஆதரவையும் நாளடைவில் பெற்றது. இந்த இயககம் இவ்வளவு வேகமாக வெற்றி பெற்றதற்குக் காரணங்கள என்ன என்பதை ஆராய்வது இங்குப் பொருத்தமாகும். லூதரின் சமய இயக்கம், ஜெர்மானிய அரசுகள், சமூக அரசியல் பிரச்னைகள், ஐரோப்பிய வல்லரசுகளிடையே இருந்த உறவு ஆகிய வற்றுடன் பின்னிப் பிணைந்திருந்ததால் அதனுடைய வெற்றி தோல்விக்கு இவையும் காரணமாக அமைந்தன. சூழ்நிலை சந்தர்ப்பம் காரணமாகப் பேரரசர் ஐந்தாம் சார்லஸ் அடுத்த பத்து ஆண்டுகளுக்கு ஜெர்மனிமீது தம் கவனத்தைச் செலுத்த முடியவில்லை. நெதர்லாந்து பிரச்னை, துருக்கியர்களுடன் போர், இத்தாலியில் ஃபிரான்சுடன் ஆதிக்கப் போட்டி ஆகிய வற்றில் ஈடுபட்டிருந்ததால் பேரரசர் ஐந்தாம் சார்லஸ்

ஜெர்மானிய விவகாரங்களில் தலையிட முடியவில்லை. இந்தச் சூழ்நிலை லூதரின் இயக்கம் வளர்வதற்குப் பேருதவியாக இருந்தது.

லூதரின் குண இயல்புகளும், அறிவுத் திறமையும் ஒரு முக்கிய காரணமாகும். அஞ்சாநெஞ்சம் படைத்த லூதர் தன்னைப் பின் பற்றியவர்களின் உள்ளங்களை எளிதில் கவரக்கூடிய குண இயல்புகளைப் பெற்றிருந்தார்.

மேலும் ஜெர்மனி, அரசியல் ரீதியில் ஒன்று படுத்தப்பட்ட நாடு அன்று. பெயரளவில் சார்லஸ் பேரரசரே அன்றி நடைமுறையில் ஜெர்மானியச் சிற்றரசர்களின் ஒப்புதல் இன்றி பேரரசர் எதையும் செய்யமுடியாது. இந்த நிலையில் தன்னுடைய சமயக் கருத்துகளை ஜெர்மானியச் சிற்றரசர்கள் மகுஏற்படி செய்ய பேரரசரால் இயலவில்லை.

மேலும் இந்த இயக்கம் வெற்றிபெற்ற தேசிய உணர்ச்சி காரணமாக இருந்தது. தேசியத்தில் பற்றுகொண்ட ஜெர்மன் மக்கள் பேரரசர் சார்லசை அன்னியராகக் கருதினர். போப்பின் ஆதிக்கமும் இதே காரணத்தினுல் வெறுக்கப்பட்டது. போப்பின் ஆதிக்கம் ஒழிக்கப்படவேண்டும் என்ற நோக்கங் கொண்ட ஜெர்மன் தேசியவாதிகளால் ஆதரிக்கப்பட்டது. (ஜெர்மனி ஜெர்மானியர்களுக்கே என்ற அடிப்படையில் லூதரின் இயக்கம் அமைந்திருந்தது.) திருச்சபையில் மலிந்திருந்த சீர்கேடுகளை அகற்றித் திருச்சபையைப் புனிதமாக்க வேண்டுமென்று எண்ணிய உண்மைக் கிறிஸ்துவர்களின் பெருத்த ஆதரவு லூதரின் இயக்கத்திற்கு இருந்தது. திருச்சபையின் நிலங்களையும, சொத்துகளையும் கவர்ந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணங்கொண்ட அரசர்களும், பிரபுக்களும் லூதரின் இயக்கத்திற்கு ஆதரவளித்தனர்.

1522-ல் மீண்டும் பேரரசின் டயட் சபை 'நூரம்பர்க் நகரில்' (Nuremberg) கூட்டப்பட்டது. ஒம்ஸ் ஆணையைத் தொடர்ந்து லூதரின் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று எதிர்பார்க்கப் பட்டது. ஆனுல், ஐந்தாம் சார்லஸ் இத்தாலியப் போர்களில் ஈடுபட்டிருந்ததால் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. சமயப் பிரச்னைக்குத் தீர்வு காண்பதற்கு ஒரு பொதுக்குழு கூட்டப் படவேண்டும் என்று இந்தக் கூட்டம் கோரியது.

## குடியானவர்கள் கிளர்ச்சி (The Peasant's War, 1524-25)

லூதரின் சமயப்புரட்சியின் ஓர் உடனடி விளைவு ஜெர்மனியில் 1524-ல் ஏற்பட்ட குடியானவர்களின் கிளர்ச்சியாகும். 16ஆம்

நூற்றுண்டில் ஜெர்மனியில் குடியானவர்கள் நிலை மிகவும் சீர்கேடுற்றிருந்தது. நிலப்பிரபுக்கள், சமயக் குருமார்களின் சுரண்டலுக்கு ஆளாகியிருந்தனர். குடியானவர்கள் சமூகத்தின் மற்ற பிரிவினர் நிலைமட்டும் முன்னேற்றம் அடைந்திருக்க, குடியானவர் நிலை அரை நூற்றுண்டுக்கு முன்பு இருந்ததைவிட மோசமான நிலையை அடைந்திருந்தது. குடியானவர்கள் நிலப்பிரபுக்களின் அடிமைகளாகக் கருதப்பட்டார்கள். இந்நிலையில் சமயக் குருமார்களை எதிர்க்குமாறும் திருச்சபையின் நிலங்களைக் கைப்பற்றுமாறும் தூண்டிய லூதரின் வேண்டுகோளை குடியானவர்கள் உடனே நிறைவேற்றத் துடித்தார்கள். தங்களை அடக்கி ஆண்டு கொண்டிருந்த நிலப்பிரபுக்கள், சிற்றரசர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர். லூதரைக் காப்பாற்றி அவர் இயக்கத்திற்கு ஆதரவு அளித்த சிற்றரசர்கள், பிரபுக்கள் ஆகியோருக்கு எதிராக குடியானவர்கள் கிளர்ச்சி செய்வதை லூதர் விரும்பவில்லை. குடியானவர்களுக்கும், பிரபுக்களுக்குமிடையே ஏற்பட்டுள்ள இந்தப் பிளவு தன் சமய இயக்கத்தையே பாதிக்கக்கூடும் என்பதை உணர்ந்த லூதர், இந்தக் கிளர்ச்சியை ஒடுக்கத் தீவிர நடவடிக்கை எடுக்குமாறு சிற்றரசர்களை வேண்டினர்[1]. 1525-ல் இக்கிளர்ச்சி ஒடுக்கப்பட்டது. இந்தக் கிளர்ச்சியின் விளைவாக நிலப்பிரபுக்களின் ஆதிக்கம் வளர்ந்து ஜெர்மானியக் குடியானவர்களின் நிலைமை முன்பிருந்ததைவிட மேலும் சீர்கேடு அடைந்தது. மற்றொரு முக்கியமான விளைவு ஜெர்மானியக் குடியானவர்களிடையே லூதரின் செல்வாக்கு குறைந்து ஜெர்மானியில் லூதரின் இயக்கம் பரவுவது தடைப்பட்டது.

1526-ல் ஸ்பியர் என்ற இடத்தில் பேரரசின் 'டயட் சபை' (Diet of Speyer) கூடியது. ஓம்ஸ் சபையில் லூதரைத் தண்டிக்கும் வகையில் எடுக்கப்பட்ட முடிவை இந்தச் சபை மூலம் செயல்படுத்த வேண்டுமென்று ஐந்தாம் சார்லஸ் விரும்பினர். ஆனல், ஏற்கனவே லூதரின் இயக்கத்தை ஆதரித்த சிற்றரசர்கள் இதை எதிர்த்தனர். ஒவ்வோர் அரசும் பின்பற்ற வேண்டிய சமயம் எது என்பதை முடிவுசெய்யும் உரிமை அந்தந்த சிற்றரசருக்குத் தான் உண்டு என்று இந்த அவை கருதியது. ஐந்தாம் சார்லஸ் இதை விரும்பவில்லை. 1529-ல் மீண்டும் அதே இடத்தில் டயட் சபை கூடி முன் கூட்டத்தில் லூதரின் சமயத்திற்கு அளிக்கப்பட்ட சலுகைகளை ரத்துசெய்ய தீர்மானித்தது. மேலும் ஓம்ஸ் ஆணையின்படி லூதரும், அவரைப் பின்பற்றியவர்களும் சமயத்

[1] Luther declared. "The Ass will have blows and the people will be ruled by force" He urged the princes "to stab and kill and strangle" the peasants.

துரோகிகள் என்று கருதப்படவேண்டும் என்றும், பிராடஸ்டெண்ட் அரசுகளில் கத்தோலிக்க முறை வழிபாடு அனுமதிக்கப்படவேண்டும் என்று முடிவுசெய்யப்பட்டது. சாக்சனி சிற்றரசரும் மற்றும் சிலரும் இந்த முடிவை ஆட்சேபித்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினர்[2] இந்தச் சமயத்திலிருந்துதான் சமயச்சீர்திருத்தவாதிகள் பிராடெஸ்டெண்டுகள் (கத்தோலிக்கர்களின் தீர்மானத்தை ஆட்சேபித்ததினால், Protested) என்று அழைக்கப்படலாயினர். நாளடைவில் கத்தோலிக்க சமயத்திற்கு எதிரான கிறிஸ்துவர்கள் எல்லோருமே பிராடஸ்டெண்டுகள் என்று அழைக்கப்பட்டனர்.

1530-ல் ஐந்தாம் சார்லஸ் ஆக்ஸ்பர்க் என்னுமிடத்தில் மீண்டும் டயட் சபையைக்கூட்டி இருதரப்பினருக்குமிடையே சமரசம் ஏற்பட முயற்சி செய்தார். பிராடஸ்டெண்டுகள் தங்களுடைய நிலையை விளக்கி ஒரு விண்ணப்பத்தைப் பேரரசரிடம் சமர்ப்பித்தனர். லூதரின் நெருங்கிய நண்பரும், உடன் பணி புரிந்தவருமான 'மெலான்க்தன்' (Melanchthon) என்பவரால் தயாரிக்கப்பட்ட இந்த விண்ணப்பம் 'The Confession of Augsburg' என்று வழங்கப்படுகிறது. பேரரசர் சார்லஸ் இதை ஏற்க மறுத்து ஆறுமாதகால தவணையில் பிராடஸ்டெண்டுகள் தங்கள் சமயக் கொள்கைகளைக் கைவிட வேண்டுமென்றும், தவறினால் எல்லோரும் கட்டாயமாகக் கத்தோலிக்க சமயத்தில் சேர்க்கப்படுவார்கள் என்றும் எச்சரித்தார். இதைக்கண்டு வெகுண்ட பிராடஸ்டெண்டு சிற்றரசர்கள் 1531-ஒ 'ஷ்மால்கால்டென்' (Schmalkalden) என்ற இடத்தில் கூடி ஓர் அணியை நிறுவி, பிராடஸ்டெண்டுகளின் நலனைப்பாதுகாக்கவும், தேவைப்பட்டால் கத்தோலிக்கர்களின் பலாத்காரத்தைப், பலாத்காரத்தினாலேயே எதிர்க்கவேண்டும் என்றும் உறுதி பூண்டனர் (League of Schlmalkalden-1531). சாக்ஸனி, 'ஹெஸி' (Hesse), பிராண்டன்பர்க் போன்ற அரசுகள் இந்த அணியில் சேர்ந்தன.

இவ்வாறு கத்தோலிக்கர்களுக்கும், பிராடஸ்டெண்டுகளுக்குமிடையே ஒரு போர் மூளக்கூடிய சூழ்நிலை உருவாகியது. ஆனால், ஐரோப்பாவின் மீது துருக்கியர்கள் ஆக்கிரமிப்பு ஏற்பட்டதால், ஐந்தாம் சார்லஸ் இந்தப்போரில் உடனடியாக ஈடுபட முடியவில்லை. துருக்கியர் படையெடுப்பின் பொழுது பிராடஸ்டெண்டு அரசர்களின் ஆதரவை இழக்க விரும்பாத ஐந்தாம்

[2] "We hereby protest to you that we cannot and may not concur therein but hold the resolution null and not binding." It is this protest which ultimately gave to the movement the name of protestantism:

சார்லஸ், லூதர் ஆதரவாளர்களுடன் ஓர் உடன்பாடு செய்து கொண்டார். கத்தோலிக்கர்கள், பிராடஸ்டெண்டுகளுக்கிடையே உள்ள சமயக் கருத்து வேறுபாடுகள் திருச்சபையின் ஒரு பொதுக்குழுவின் முன் கொண்டு வரப்பட்டு அதன் முடிவுகளை இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று ஒப்புக்கொள்ளப் பட்டது.

1545-ல் தன் பகைவர்கள்மீது வெற்றிகண்ட பேரரசர் சார்லஸ், மீண்டும் சமயப் பிரச்னைக்குத் தீர்வுகாணும் எண்ணத் துடன் டிரெண்ட் என்னுமிடத்தில் ஒரு பொதுக் குழுவைக் கூட்டினர். ஆனல், கத்தோலிக்க சமயத்துடன் இணையும் எண்ணத்தை அறவே கைவிட்ட பிராடஸ்டெண்டுகள் சார்லசின் முயற்சிகளுக்கு ஆதரவு கொடுக்கவில்லை. 1546-ல் இருதரப் பினருக்குமிடையே போர் மூண்டது. போர் மூளுவதற்கு முன்பே மார்டின் லூதர் இறந்துவிட்டார். இந்தப் போர்தான் ஷ்மால் கால்டிக் போர் என்று குறிக்கப்படுகிறது. இத்துடன் சமயச் சீர்திருத்த இயக்கத்தின் ஒருகட்டம் முடிவடைந்து மற்றொரு கட்டம் தொடங்குகிறது. இதுவரை திருச்சபையின் கோட் பாடுகள் பற்றி வாதங்கள், எதிர் வாதங்கள் நடந்து வந்தன. இனி வரப்போகும் நிகழ்ச்சிகளின் இரண்டாவது கட்டத்தில் 'அரசியல் சூழ்ச்சிகளும்' (political intrigues), மூன்றாவது கட்டத்தில் சமயப் போர்களும் நிகழ்வதைக் காணப்போகிறோம்.

லூதரின் சமயம் ஐரோப்பாவில் பரவிய இடங்களிலெல்லாம் தனக்கென்று சில சிறப்பியல்புகளைப்பெற்று விளங்கியது. கிறிஸ்துவ சமயக் கோட்பாடுகளுக்கும், அறநெறிக்கும் விவிலியம்தான் அடிப்படை ஆதாரமேயன்றி, திருச்சபை அன்று. (The Bible and not the Church that was the fundamental authority for christian belief & morals). ஒவ்வொரு கிறிஸ்துவனும் இயேசு கிறிஸ்துவின் மீது முழுநம்பிக்கை வைப்பதன் மூலம்தான் 'வீட்டுப்பயனை' (Salvation) அடைய முடியுமேயன்றி நற்பணிகளைச் செய்வதன்மூலம் அன்று (goodworks). மனிதனுக்கும், கடவுளுக்கும் உள்ள தொடர்பு சமயக்குருமார்களின் பணிகளையோ, சடங்குகளையோ பொறுத்தது அன்று. குருவின் மூலமாக வழிபாட்டின் பொழுது அளிக்கப்படும் ரொட்டித்துண்டு, மது இயேசு கிறிஸ்துவின் உடலாகவும், இரத்த மாகவும் மாறுகிறது என்ற கொள்கையைப் (Eucharist) பிராடஸ் டெண்டுகள் ஏற்றுக் கொள்ளவில்லை. பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புத்துண்டில் நெருப்பு இருப்பது எவ்வாறு உண்மையோ அதேபோல ரொட்டித்துண்டிலும், மதுவிலும் கிறிஸ்து இரண்டறக் கலந்து இருக்கிறார் என்று பிராடஸ்டெண்டுகள் நம்பினார்கள்.

## லூதரைப்பற்றிய ஒரு மதிப்பீடு

போப்பின் அதிகாரத்திற்கு எதிர்ப்பை உருவாக்கியதின் மூலம் ஜெர்மனியில் தேசியத்தை வளர்த்தார் லூதர். விவிலியத்தை மொழி பெயர்த்ததன் மூலம் ஜெர்மன் மொழி வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்தார். லூதரை ஒரு 'பழமைவாதி' (Conservative) என்று கருதுவது பொருந்தும். ஏனெனில், லூதர் ரோமன் கத்தோலிக்க சமயத்தின் பழமையான சடங்குகளிலும் கோட்பாடுகளிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். ஆகவே, அவருடைய சமயம் ஓரளவுக்குத்தான் வெற்றி பெற்றது. சமயத் துறையில் தீவிரக் கொள்கைகளில் நம்பிக்கை கொண்டிருந்த ஸ்விங்கிலி போன்றவர்களால் லூதரின் கருத்துகள் ஏற்றுக் கொள்ளப் பொருத்தமற்றவைகளாக இருந்தன.

லூதரின் கொள்கைகளுக்கும், செயல்களுக்குமிடையே முரண்பாடுகள் இருந்தன. எடுத்துக் காட்டாக, குடியானவர்கள் கிளர்ச்சியின்பொழுது சமத்துவ உரிமையைக் கோரிய குடியானவர்களை லூதர் கண்டித்தார். ஒவ்வொரு கிறிஸ்துவனுக்கும் சமயச் சுதந்தரம் உண்டு என்று வாதாடிய லூதர், அவருடைய எதிர்ப்பாளர்கள் அதே சுதந்தரத்தைக் கோரியபொழுது அதை ஏற்க மறுத்தார். எளிமை, உண்மையான உழைப்பு, துணிவு, அன்புள்ளம் ஆகிய இயல்புகள் கொண்ட அவர், தலைவர்களிடையே ஒரு சிறப்பிடத்தைப் பெறுகின்றார். லூதர் கத்தோலிக்க திருச்சபையைவிட்டு விலகிய போதிலும், திருச்சபை சீர்திருத்தப்பட்டு அந்த அமைப்பின் ஒற்றுமை நிலைநாட்டப்பட வேண்டும் என்று விரும்பினார். ஆனால், கத்தோலிக்க சமயத்திலிருந்து விலகிய மற்றவர்கள் திருச்சபையில் பிளவைத் தவிர்க்கவேண்டும். கத்தோலிக்க சமயத்துடன் சமரசம் செய்து கொள்ளவேண்டும் என்ற விருப்பமே சிறிதும் இல்லாதவர்கள். இது போன்றவர்கள் லூதரின் சமயக் கருத்துக்களால் ஈர்க்கப்படாததில் வியப்பொன்றுமில்லை. மேலும் லூதரின் வெற்றிக்குக் காரணமாக இருந்தவர்களும், அவருக்கு ஆதரவு அளித்தவர்களும் ஜெர்மானிய சிற்றரசர்களேயாவர். எனவே, மக்கள் இயக்கங்களுக்கும் மக்கள் உரிமைகளுக்கும் லூதர் ஆதரவு அளிக்கவில்லை. மற்ற சீர்திருத்த வாதிகளைப் போல லூதர் தன் சமய வளர்ச்சிக்கு மக்களின் அரசியல், சமூக, பொருளாதாரப் பிரச்னைகளைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பவில்லை.

## ஷ்மால்கால்டிக் போர் (Schmalkaldic war, 1546-47)

இது ஜெர்மனியில் நடைபெற்ற முதல் சமயப் போராகும். சாக்சனி சிற்றரசர் ஜான் பிரெடரிக்கும், 'ஹெஸி' (Hesse)

சிற்றரசர் பிலிப்பும் பிராடஸ்டெண்டு அரசர்கள் சார்பில் போரில் ஈடுபட்டனர். பேரரசர் ஐந்தாம் சார்லஸ், துருக்கி, ஃபிரான்ஸ் நாடுகளுடன் வெற்றிகரமாகப் போரை முடித்துக்கொண்டு பிராடஸ்டெண்டு அணியை ஒழிக்கும் பணியில் முழுமூச்சுடன் ஈடு பட்டார். சாக்சனி அரச குடும்பத்தைச் சேர்ந்த மாரிஸ் (Maurice of Saxony) பேரரசருக்கு உதவிசெய்ய ஒப்புக்கொண்டார். இதற்கு ஈடாக மாரிசுக்கு சாக்சனியின் தேர்வாளர் பதவியைப் பேரரசர் வாங்கிக் கொடுக்கவேண்டியது என்று உறுதியளிக்கப்பட்டது. பேரரசர் சாக்சனப்படைகளை 'முல்பர்க்' (Muhlberg) என்ற போரில் (1547) முறியடித்து ஜான் பிரெடரிக்கைச் சிறைப் பிடித்தார். மாரிஸ் சாக்சனியின் சிற்றரசராக்கப்பட்டார். ஹெஸியின் சிற்றரசர் பிலிப்பும் சிறையிலிடப்பட்டார். இவ்வாறு இப்போரில் பேரரசர் ஐந்தாம் சார்லஸ் வெற்றி பெற்றார். இது பேரரசருக்கு உண்மையான வெற்றி அன்று. ஏனெனில், இவருக்கு உதவியாக இருந்த சிற்றரசர் மாரிஸ், பிராடஸ் டெண்டுகளை ஒன்றுகூட்டிப் பேரரசருக்கு எதிராகப் போர் செய்ய முயற்சித்தார். கத்தோலிக்க சிற்றரசர்களும் பிராடஸ்டெண்டு சிற்றரசர்களும் தமது கொள்கைகளைச் சிறிதும் விட்டுக்கொடுக்கத் தயாராக இல்லை. இந்நிலையில் பேரரசரின் சார்பில் ஆஸ்திரியாவை ஆண்டுவந்த அவரது தம்பி ஃபெர்டினண்ட் 1555-ல் ஜெர்மானியச் சிற்றரசர்களை ஆக்ஸ்பர்க் நகரில் கூட்டினார். அங்கு நடந்த பேச்சு வார்த்தைகள் விளைவாக ஆக்ஸ்பர்க் உடன்படிக்கை கையெழுத் தாயிற்று. இந்த உடன்படிக்கையின்படி சமயப் பிரச்னைக்குத் தற்காலிகமாக ஒரு தீர்வு காணப்பட்டது.

இந்த உடன்பாட்டின் சிறப்பு அம்சம் என்னவெனில், ஐரோப்பாவில் ஒன்றுபட்ட 'ஒரே திருச்சபை' (Unity of the Church) என்ற இடைக்காலக் கோட்பாடு முதன் முதலாகக் கை விடப்பட்டு கத்தோலிக்க திருச்சபையுடன் பிராடஸ்டெண்டு திருச்சபையும் சட்டபூர்வமாக அங்கீகரிக்கப்பட்டது.

இதன் முக்கிய அம்சங்கள்

(1) 'அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி' (Cujus regio ejus religio) என்ற கொள்கை அடிப்படையில் தமது குடிமக்களின் சமயத்தைத் தேர்ந்தெடுக்கும் உரிமை ஒவ்வொரு சிற்றரசருக்கும் உண்டு. (2) 1552 வரை பிராடஸ்டெண்டுகள் கைப்பற்றிய திருச்சபையின் சொத்துகளை அவர்களே வைத்துக்கொள்ள வேண்டியது. (3) பிராடஸ்டெண்டு சமயத்தின் பல பிரிவு களுள் லூதர் ஏற்படுத்திய பிரிவு மட்டுமே (Lutheranism) ஜெர்மனியில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. (4) லூதரின்

சமயத்தைச் சேர்ந்த கிறிஸ்துவர்கள் எவரையும் கத்தோலிக்க சமயத்தைத் தழுவுமாறு வற்புறுத்தக்கூடாது. (5) திருச்சபையில் பதவி வகிக்கும் எவரும் பிராடஸ்டெண்டு சமயத்தைத் தழுவினால் தன்னுடைய பதவியையும் அதையொட்டி அனுபவிக்கும் சொத்துரிமைகளையும் விட்டுவிட வேண்டியது. பிராடஸ்டெண்டு சமயத்தின் மற்ற பிரிவுகளான கால்வினியமோ அல்லது ஸ்விங்கினிய சமயமோ சட்டப்பூர்வமாக அங்கீகரிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு வடக்கு, மத்திய ஜெர்மனியில் லூதரின் சமய இயக்கம் வெற்றி பெற்றது. ஜெர்மனிக்கு அப்பால் ஸ்வீடன், டென்மார்க் போன்ற நாடுகளில் கூட அவர் கருத்துகள் பரவின. லூதரைப் போலவே வேறு பலரும் சமய சீர்திருத்த இயக்கம் நடத்தி வெற்றி பெற்றனர். இந்த இயக்கங்களைப் பற்றி இங்குச் சிறிது ஆராயலாம்.

## II. ஸ்விட்சர்லாந்தில் சமயச்சீர்திருத்த இயக்கம்

### 1. உல்ரிச் ஸ்விங்லி (Ulrich Zwingli, 1484–1531)

ஸ்விட்சர்லாந்து நாட்டில் சமயச்சீர்திருத்த இயக்கம் தோன்றக் காரணமாக இருந்தவர் உல்ரிச் ஸ்விங்லி என்பவர். செல்வாக்கு மிகுந்த ஒரு நிலப்பிரபுவின் குடும்பத்தில் பிறந்த இவர், வியன்னா, 'பேசல்' (Basel) பல்கலைக் கழகங்களில் பயின்று லத்தீன் இலக்கியங்களிலும், கிறிஸ்துவ சமயக் கோட்பாடுகளிலும் நல்ல தேர்ச்சி பெற்றார். 1506-ல் சமயத்துறையில் பணிபுரிவதற்கு இவருக்கு ஒரு வாய்ப்பு கிட்டியது. ஆனால், அவருக்குச் சமயப்பணியில் அவ்வளவு ஈடுபாடு இல்லை. ஐரோப்பிய அரசுகளுக்கு ஸ்விஸ் மக்கள் கூலிப்படைகளாக விற்கப்பட்டு வந்த ஒரு தீய பழக்கத்தைத் தீவிரமாகக் கண்டித்ததன் மூலம் அவர் ஸ்விஸ் மக்களின் கவனத்தைக் கவர்ந்தார். திருச்சபைக்கும் இதில் ஒரு பங்கு இருந்ததால் திருச்சபையையும் கண்டித்தார். நாளடைவில் திருச்சபையின் ஊழல்களும் அவர் கவனத்தைக் கவர்ந்தன. இந்தச் சீர்கேடுகளையும் அவர் கண்டிக்கத் தவறவில்லை. 1518-ல் 'சூரிச்' (Zurich) நகரத்து ஆலயத்தில் குருவாகப் பணிபுரிந்து கொண்டிருக்கும்பொழுது போப்பாண்டவரின் ஆதிக்கத்தைக் கண்டித்தும், உண்மையான கிறிஸ்துவர்களுக்கு விவிலியம்தான் வழிகாட்டி, திருச்சபை அன்று என்ற கருத்தை ஆதரித்தும் தம் கருத்துகளை வெளியிட்டார். நாளடைவில் கிறிஸ்துவ சமயக் கோட்பாடுகளையும், நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும் எதிர்த்துக் கருத்துகள் வெளியிட்டார்.

இவருடைய சமயக் கருத்துகள் லூதரின் கருத்துகளைவிட தீவிரமானவை. உதாரணமாக, திருச்சபை நிர்வாகத்தைப் பொறுத்தவரை ஸ்விங்லி மக்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, திருச்சபை நிர்வாகம் ஜனநாயக அடிப்படையில் அமைய வேண்டும் என்று கருதினார். ஜெர்மனியில் திருச்சபை நிர்வாகம் அந்தந்தச் சிற்றரசரின் பொறுப்பிலேயே விடப்பட்டது. இதை ஸ்விங்லி ஆதரிக்கவில்லை. அதிகாரமும், நிர்வாகப் பொறுப்பும் ஒரே இடத்தில் குவிந்திருக்காமல் திருச்சபை அமைப்பின் அடித்தளத்தில் இருக்கும் 'பாரிஷ்' (Parish) போன்ற பல்வேறு அமைப்புகளுக்குப் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்று கருதினார். சமயக் கோட்பாடுகளைப் பொறுத்தவரை ஸ்விங்லியின் கருத்துகள் தொடக்கத்தில் லூதரின் கருத்துகளை ஒத்துஇருந்தபோதிலும் நாளடைவில் இக் கருத்துகளுக்குமிடையே வேறுபாடுகள் தோன்றின. குறிப்பாகப் (புனிதப்பொருள் மாறும் கொள்கை) (Transubstantiation) என்ற கத்தோலிக்கக் கோட்பாட்டில் சில மாறுதல்களுடன் லூதர் 'புனிதப்பொருள் மாறுக்கொள்கை' (Consubstantiation)[1] என்ற கோட்பாட்டை ஒப்புக்கொண்டார். இந்த இரண்டு கோட்பாடுகளையும் ஸ்விங்லி மறுத்து ரொட்டியை வேறு பொருளாகச் செய்வதில்லை. அதைப்பற்றிய பிரார்த்தனை இயேசு கிறிஸ்துவின் நினைவாகச் செய்யப்படுவதேயல்லாமல் வேறன்று (Commemoraton Ceremony) என்று கூறினார். இவ்விரு கொள்கைகளையும் மூடநம்பிக்கை என்றும், பகுத்தறிவிற்கு ஒவ்வாதது என்றும் கண்டித்தார். மேலும் உபவாசம் இருத்தல், பரிசுத்தவான்களை (Saints) வழிபடுதல், துறவு முதலியவற்றையும் இவர் கண்டித்தார். ஸ்விங்லியின் கருத்துகள் வெகுவிரைவாக சூரிச் காண்டனில் பரவின. மக்கள் ஆதரவோடு ஸ்விங்லி 1525-ல் போப்புடன் இருந்த தொடர்பை அறுத்துக்கொண்டு சீர்திருத்தப்பட்ட ஒரு சுதந்தரத் திருச்சபையை நிறுவினார். லூதரின் சமயத்திற்கும், ஸ்விங்லியின் சமயத்திற்குமிடையே சமரசத்தை ஏற்படுத்த 'ஹெஸி' (Hese) சிற்றரசர் பிலிப், 'மார்பர்க்' (Marburg) நகரில் கூட்டிய மாநாடு வெற்றி பெறவில்லை. லூதரும், ஸ்விங்லியும் 'புனிதப்பொருள் மாறுக்கொள்கையைப்' (Consubstantiation) பொறுத்தவரையில் தத்தம் கருத்துகளை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லாத காரணத்தினால் இம்முயற்சி வெற்றி பெறவில்லை.

[1] ஆலயத்தின் வழிபாட்டின் பொழுது அளிக்கப்படும் ரொட்டி, மது ஆகியவை இயேசு கிறிஸ்துவின் உடலாகவும், இரத்தமாகவும் மாறுகின்றன என்ற நம்பிக்கையைப் பற்றிய ஒருதத்துவம் Consubstantiation என்பதாகும்.

ஸ்விங்லியின் சமயம் ஸ்விட்சர்லாந்தின் 'ஐந்து காண்டன்கள்' (Forest Contons) தவிர மற்ற பகுதிகளில் விரைவில் பரவியது. இந்தப் பகுதிகளிலும் தன் சமயம் பரவுவதற்கு வன்முறையைக் கூட பயன்படுத்த அவர் தயங்கவில்லை. இந்த ஐந்து காண்டன் களும் தன் சமயத்தை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்துவதற்காக 1531-ல் அவைகளுடன் போர் தொடுத்தார். 'காப்பெல்' (Kappel) என்ற இடத்தில் நடந்த சண்டையில் ஸ்விங்லியின் படைகள் தோற்கடிக்கப்பட்டு, ஸ்விங்லியும் போரில் கொல்லப் பட்டார். இதைத் தொடர்ந்து இருதரப்பினருக்குமிடையே ஏற்பட்ட சமாதானத்தின்படி தனது சமயத்தைத் தேர்ந் தெடுத்துக்கொள்ளும் உரிமை ஒவ்வொரு காண்டனுக்கும் உண்டு என்றும், இதைக்குறித்துக் காண்டன்கள் தங்களுக்குள் போரிட்டுக் கொள்ளுவது தவறு என்றும் முடிவு செய்யப்பட்டது. இவ்வாறு ஏற்பட்ட 'காப்பெல் உடன்பாடு' (Peace of Kappel) ஜெர்மனியில் சமயப் பிரச்னையைத் தீர்க்க ஏற்பட்ட ஆக்ஸ்பர்க் உடன்பாட்டை ஒத்திருந்தது. இந்த இரண்டு உடன்பாடுகளும் 'அரசன் எவ்வழி மக்கள் அவ்வழி' (Cujus regio, ejus religio) என்ற விதியின் அடிப் படையில் முடிவாகியது.

2. ஜான் கால்வின் (John Calvin, 1509–1564)

லூதரின் சமய இயக்கத்தைவிட முக்கியத்துவம் வாய்ந்ததும், மற்ற சீர்திருத்த இயக்கங்களைப் போலல்லாமல் ஒரு முறையான கடவுட்கொள்கையும், செம்மையான திருச்சபை அமைப்பும் பெற்று விளங்கியது ஜான் கால்வினால் தோற்றுவிக்கப்பட்ட கால்வினீய சமயம். ஸ்விங்லியின் இறப்பிற்குப் பிறகு தலைவரின்றித் தவித்த ஸ்விட்சர்லாந்து பிராடஸ்டெண்டுகளின் தலைமையைக் கால்வின் ஏற்றுக்கொண்டார். 1509ல் ஃபிரான்சில் 'நோயன்' (Noyon) என்ற இடத்தில் ஒருமத்தியதரக் குடும்பத்தில் பிறந்த இவர் பாரிசில் ஆர்லியன் பல்கலைக் கழகத்தில் கல்வி பயிலும்பொழுதே சமயம், இலக்கியம், கடவுட்கொள்கை பற்றிய ஆராய்ச்சிகளில் ஈடுபாடு காட்டினார். சமயக் குருவாகப் பணிபுரிய வேண்டுமென்று விரும்பிய கால்வின், தந்தையின் விருப்பத்திற்கிணங்க சட்டப்படிப்பு மேற்கொண்டார். இந்தச் சமயத்தில் ஃபிரான்சிலும் சமயத்துறையில் சீர்திருத்தக் கருத் துகள் பரவத் தொடங்கின. கத்தோலிக்க திருச்சபையின் சீர்கேடுகள் கண்டிக்கப்பட்டன. லூதரின் கருத்துகள் ஃபிரான் சிலும் புகுந்து மக்களின் எண்ணத்தைக் கவர்ந்தன. இந்நிலையில் 1529-ல் கால்வின் கத்தோலிக்க சமயத்திலிருந்து விலகிக்கொண்டு சீர்திருத்த இயக்கத்தை ஆதரிக்கத் தொடங்கினார். இவர் கத்தோலிக்க சமயத்திலிருந்து ஒரு தூய கிறிஸ்துவ சமயத்தை

ஏற்படுத்த கடவுளே இவருக்கு ஓர் ஆணையிட்டதாகக் கருதினர். ஃபிரான்சின் அரசர் முதலாம் ஃபிரான்சிஸ் கத்தோலிக்க சமயத்திற்கு எதிராகத் தோன்றிய இயக்கங்களை ஒடுக்க நடவடிக்கை எடுத்த காரணத்தினால் கால்வின் ஃபிரான்சைவிட்டு வெளியேறி ஸ்விட்சர்லாந்தில் 'பேசல்' (Basel) நகரில் குடியேறினர். இங்குதான் அவர் தன்னுடைய சமயக் கருத்துகளுக்கு ஒரு முழுமையான உருவம் கொடுத்து, தன் சீர்திருத்தக் கருத்துகளை 1536-ல் 'The Institutes of the Christian Religion' என்ற நூலின் வாயிலாக வெளியிட்டார். கால்வினீய சமயத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் இந்த நூலில் தெளிவாகவும், தர்க்க ரீதியாகவும் விளக்கப்பட்டுள்ளன. 1536-ல் இவர் ஜெனிவா நகரில் தங்க நேர்ந்தபொழுது பிராடஸ்டெண்டு சமயத்தை அங்குப் பரப்பும் பணியில் ஈடுபட்டிருந்த 'ஃபாரல்' (Farel) என்னும் சமயக்குரு இவருடைய உதவியை நாடினர். இதற்கு உடன்பட்டு ஜெனிவா நகரில் தங்கி தன் அயரா உழைப்பாலும், அறிவுக் கூர்மையாலும் தன் சீர்திருத்தக் கருத்துகளின் அடிப்படையில் ஒரு புதிய திருச்சபை அமைப்பை நிறுவினர். ஜெனிவா மக்களின் சமயத் தலைவராக மட்டுமல்லாமல், அவர்களுடைய ஆட்சியையே கைப்பற்றித் தன் அரசியல் தலைமையை நிலைநாட்டினர். இவருடைய தலைமையில் ஜெனிவா, பிராடஸ்டெண்டு சமயக் கருத்துகளின் மையமாகப் பெரும் புகழ்பெற்று விளங்கியது. நாள்தோறும் சமய போதனை செய்தல், கடவுட்கொள்கை பற்றிய நூல்கள் எழுதுதல் போன்ற நற்பணிகளில் ஈடுபட்டார். விவிலியத்தை ஃபிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்து வெளியிட்டார். ஜெனிவா பல்கலைக்கழகம் போன்ற பல பிராடஸ்டெண்டுகள் கல்விக்கூடங்களை நிறுவினர்.

கால்வின் போதித்த பிராடஸ்டெண்டு சமயத்தின் சில சிறப்பியல்புகளை இங்கு ஆராயலாம். திருச்சபை நிர்வாக அமைப்பு ஜனநாயக அடிப்படையில் இயங்கவேண்டும் என்று இவர் வலியுறுத்தினர். திருச்சபை நிர்வாகப் பொறுப்பு சாதாரண மக்களிடம் ஒப்படைக்கப்படவேண்டும் என்று விரும்பினர். மத்திய வகுப்பினரின் ஆதரவைப் பெற்று ஐரோப்பாவில் பிராடஸ்டெண்டு இயக்கம் ஒரு மக்கள் இயக்கமாகச் செயல்பட்டதற்குக் கால்வினின் இந்தக் கொள்கைதான் முக்கிய காரணம் என்பதை மறுக்க முடியாது.

கால்வினீயத்தின் மற்றொரு சிறப்பு அம்சம் என்னவெனில் நன்னடத்தைக்கும், நல்லொழுக்கத்திற்கும் முக்கியத்துவம் அளித்தது. சிற்றின்பங்களைத் துய்க்கும் ஆசையை விடுத்து மனிதன் எளிய, தூய, அறநெறி வாழ்க்கை

வாழவேண்டும் என்ற கருத்தைக் கால்வின் வலியுறுத்தினர். பிற்காலத்தில் தோன்றிய பியூரிட்டன் சமயப்பிரிவு கால்வினின் இந்தக் கொள்கையின் அடிப்படையில்தான் உருவாக்கப்பட்டது. போதனைகளினுல் மட்டும் மனிதனை நல்லொழுக்க வாழ்க்கையை வாழச்செய்ய முடியாது. ஓரளவிற்கு அரசிற்கும் இதில் பொறுப் புள்ளது என்பதை உணர்ந்த கால்வின், ஜெனிவாவில் 'கன்ஸிஸ்டரி' (Consistory) என்ற மதகுருமார்களும், மதகுரு மார்கள் அல்லாதாரும் சேர்ந்த ஓர் அமைப்பை ஏற்படுத்தி மக்களின் அன்ருட வாழ்க்கையைக் கண்காணிக்கும் பொறுப்பை இந்த நிறுவனத்திடம் ஒப்படைத்தார். ஒழுக்கநெறி தவறி நடந்தவர்கள் தண்டிக்கப்பட்டார்கள். பெற்ருேர்களிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொள்ளுதல், நடனமாடுதல், சீட்டாட்டம் போன்ற கேளிக்கைகளில் ஈடுபடுதல், ஆலய வழி பாட்டிற்கு வராதிருத்தல் போன்ற செயல்கள் குற்றங்களாகக் கருதப்பட்டு தண்டனைகள் விதிக்கப்பட்டன.

கால்வினீயத்தின் மூன்ருவது சிறப்பியல்பு கடவுள் கொள்கை யைப் பற்றியது. கால்வினின் தத்துவப்படி கடவுள் எல்லாம் அறிந் தவர்; அவர் இச்சைப்படிதான் எதுவும் நடக்கும். மனிதன் தன் நற்பணிகளின் மூலம் நற்கதியை அடையமுடியும் என்ற கத்தோ லிக்க கொள்கையையும், கடவுளின்மீது கொள்ளும் நம்பிக்கை மூலமே நற்கதி பெறமுடியும் என்ற லூதரின் கொள்கையையும் கால்வின் ஏற்கவில்லை. அதற்கு மாருக கடவுள் ஒருவர்தான் மனிதனைக் காப்பாற்றமுடியும், அதற்கும் அவருடைய அருள் தேவை. ரொட்டியின் மூலமாகக் கடவுளோடு கலக்காவிட்டாலும் கடவுளின் 'அருளை' (Grace) அடைவதற்கு ஒரு நல்லவழி அமை கிறது என்பது கால்வினின் கோட்பாடாகும். கடவுளால் முன்பே விதிக்கப்பட்ட ஓர் ஏற்பாட்டின்படி மனிதன் இதைப் பெறுகிருன் என்ற கருத்துக்களைக் கால்வினீயம் வலியுறுத்தியது. இதுதான் 'முன் விதிப்புக் கொள்கை' (Doctrine of Predestination) என்று அழைக்கப்படுகிறது, கடவுளுக்குமுன் மனிதன் ஒரு துரும்புபோலச் செயலற்றவனுகிருன். கடவுளால் முன்பே விதிக்கப்பட்ட ஓர் ஏற்பாட்டின்படி எல்லாம் நிகழ்கின்றன என்ற கொள்கையை வலியுறுத்திய போதிலும் கால்வினீயம் விதியையே முழுவதும் நம்பி இராமல், மனிதன் தன் கடமைகளையும் செவ்வனே செய்ய வேண்டும் என்ற கருத்தையும் வலியுறுத்தியது என்பது இங்கு நோக்கற்பாலது.[1]

[1] A History of Europe from the Reformation to the present dry, Ferdinand Schevill, page 128, 129.

கால்வினின் கருத்துகள், ஸ்விட்சர்லாந்துக்கு அப்பாலும் ஜெர்மனி, நெதர்லாந்து, ஃபிரான்ஸ், இங்கிலாந்து, ஸ்காட்லாந்து ஆகிய நாடுகளில் பரவின. கால்வினீயத்தைப் பின்பற்றியவர்கள் ஃபிரான்சில் 'ஹியூகோனேக்கள்' (Huguenots), என்றும் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து நாடுகளில் 'பிரெஸ்பிடேரியன்கள்' (Presbytrians) என்றும் அழைக்கப்பட்டனர்.

## III. ஃபிரான்சில் சமயச் சீர்திருத்த இயக்கம்

ஃபிரான்சில் சமயச் சீர்திருத்த இயக்கம் அரசியலோடு நெருங்கிய தொடர்பு கொண்டதாக இருக்கிறது. அரசியல் வாதிகள் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு போர்களில் ஈடுபட்டனர். ஃபிரான்சின் அரசர் ஏழாம் சார்லஸ் காலத்தில் 'Pragmatic Sanction', (1438) என்ற ஏற்பாட்டின்படி ஃபிரான்சின் திருச்சபை ரோமானியக் கட்டுப்பாட்டிலிருந்து விடுவிக்கப்பட்டுத் தனித்து இயங்கத் தொடங்கியது. ஆனால், போப்பின் ஆதிக்கத்திற்குப் பதிலாக, ஃபிரான்சின் திருச்சபைமீது ஃபிரான்சின் மன்னர் ஆதிக்கம் ஏற்படுத்தப்பட்டது. 1516-ல் ஃபிரான்சின் அரசர் முதலாம் ஃபிரான்சிற்கும், போப் பத்தாம் லியோ (Leo X) விற்கும் ஏற்பட்ட உடன்பாட்டின்படி (Concordat) இந்த நிலை போப்பினால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஃபிரான்சின் அரசரின் ஆதிக்க வளர்ச்சியில் இது ஒரு முக்கியமான கட்டமாகும்.

திருச்சபையின் சீர்கேடுகளையும் ஊழல்களையும் கண்டிக்கும் மனப்பான்மையும், சீர்திருத்தம் செய்யும் முயற்சியும் முதன்முதல் ஃபிரான்சில் பன்னிரண்டாம் லூயி (Louis XII) காலத்தில் தோன்றின. இந்த முயற்சி ஃபிரான்சில் பரவிய மறுமலர்ச்சி இயக்கத்தின் விளைவாகும். அடுத்து வந்த முதலாம் ஃபிரான்சிஸ் மறுமலர்ச்சி இயக்கத்தில் ஈடுபாடு கொண்டவராகையால் ஃபிரான்சில் தோன்றிய சமயச் சீர்திருத்த முயற்சிகளுக்கு ஆதரவளித்தார். ஃபிரான்சில் சமயச் சீர்திருத்த இயக்கத்தின் முதல் கட்டத்தில் (1500–1525) இந்த இயக்கம் அரசரின் ஆதரவுடன் தடையேதுமின்றி வளர்ந்தது. இரண்டாவது கட்டத்தில் (1525–1559) இதை ஒடுக்க முயற்சிகள் செய்யப்பட்ட போதிலும், கால்வினின் கொள்கைகளை ஏற்றுக் கொண்டு இந்த இயக்கம் மேலும் வலுப்பெற்றது. 1559–1572 ஆண்டுகளில் மூன்றாவது கட்டத்தில் ஃபிரான்சின் பிராடஸ்டெண்டுகள் (ஹியூகோனேக்கள்) ஒரு வலிமை பெற்ற அரசியல் சக்தியாக விளங்கினார்கள். நான்காவது கட்டத்தில் (1572–1589) பிராடஸ்டெண்டுகள் ஃபிரான்சில் கைஸ். பூர்போன் என்ற இரு அரச குடும்பங்களுக்

இடையே (Guises and Bourbon) நடந்த போருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதைக் காண்கிறோம். 1589-1598-ல் கடைசி கட்டத்தில் ஃபிரான்சின் பிராடஸ்டெண்டு இயக்கம் சட்டப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

எட்டாம் சார்லஸ், பன்னிரண்டாம் லூயி ஆகிய மன்னர்கள் காலத்தில் இத்தாலியுடன் ஏற்பட்ட தொடர்பின் விளைவாக ஃபிரான்சில் தோன்றிய மறுமலர்ச்சி இயக்கம் முதலாம் ஃபிரான்சிஸ் காலத்தில் உச்சநிலையை அடைந்தது. முதலாம் ஃபிரான்சிஸ் மனிதாபிமான இயக்கத்தையும், மறுமலர்ச்சிக் கலை வளர்ச்சியையும் ஆதரித்தார். பாரிஸ் பல்கலைக்கழகம் இந்த மறுமலர்ச்சிக் கருத்துகளின் மையமாக விளங்கியது. லியனார்டோடாவின்சி, டிடியன் போன்ற ஓவியக்கலைஞர்களுடன் ஃபிரான்சிஸ் நட்புறவு கொண்டு ஃபிரான்சில் மறுமலர்ச்சிக்கலை வளர பெரும்பாடுபட்டார். இவ்வாறு மறுமலர்ச்சிக் கருத்துகளைத் தொடர்ந்து, மற்ற ஐரோப்பிய நாடுகளைப்போல ஃபிரான்சிலும் சமயச் சீர்திருத்தக் கருத்துகள் தோன்ற ஆரம்பித்தன. பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் சமயச் சீர்த்திருத்தக் கருத்துகளை ஃபிரான்சில் போதித்தவர் 'ஜாக்ஸ் லாஃபேவர்' (Jacques Lafevre) என்பவர். நாளடைவில் லூதரின் கருத்துகளும் ஃபிரான்சில் தோன்றின. கத்தோலிக்க சமயத்திற்கு எதிராகத் தோன்றிய இந்த இயக்கத்தைப் பாரிஸ் பல்கலைக் கழகத்தின் சமயத்துறை (Sorbonne) எதிர்க்கும் முயற்சிகளில் ஈடுபட்டது. இதற்கு அரசின் உதவியும் தேவைப்பட்டது. ஆனால், அப்பொழுது ஃபிரான்சின் அரசரான முதலாம் ஃபிரான்சிஸ் பிராடஸ்டெண்டுகளை ஒடுக்கும் முயற்சியில் ஈடுபடத் தயாராக இல்லை. 1525-ல் பேரரசர் ஐந்தாம் சார்லசினால் 'பாவியாப் போரில்' (Battle of Pavia) முதலாம் ஃபிரான்சிஸ் தோற்கடிக்கப் பட்டுச் சிறைப்பிடிக்கப்பட்டார். இதன் விளைவாக அவருடைய அன்னை ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். இந்த நிலைமையைப் பயன் படுத்திக் கொண்டு ஃபிரான்சின் கத்தோலிக்கர்கள் ஃபிரெஞ்சு அரசின் உதவிபெற்று பிராடஸ்டெண்டு சமயம் வளருவதைத் தடுத்தார்கள். ஆனால், ஃபிரான்சிஸ் விடுதலையாகி நாடு திரும்பிய வுடன் பழைய கொள்கையின்படியே சமயச் சீர்திருத்த இயக்கம் வளருவதற்கு உதவி செய்தார். அதே சமயத்தில் அரசியல் காரணங்களுக்காகப் பிராடஸ்டெண்டுகளை ஒடுக்கும் பணியிலும் இவர் ஈடுபடவேண்டியிருந்தது.[1]

[1] ஸ்பெயினுக்கும், ஃபிரான்சுக்கும் இடையே நடந்துகொண்டிருந்த ஆதிக்கப் போட்டியில் ஸ்பெயினுக்கு எதிராக ஃபிரான்சைப் போரில் ஈடுபடுததப் போப்பின் உதவியும், ஃபிரெஞ்சுத் திருச்சபையின் மூலம் நிதி உதவியும் மிகவும் தேவைப் பட்டது. இதைப்பெற ஒரே வழி ஃபிரெஞ்சுப் பிராடஸ்டெண்டுகளை ஒடுக்குவதன் மூலம்தான். எனவே, தன் சொந்த விருப்பத்தின்படி இந்த ஒடுக்கும் கொளகையை அவர் விரும்பாவிட்டாலும் அரசியல் காரணத்திற்காக இது அவசியமாயிற்று.

இந்தச் சூழ்நிலையில் ஜெனிவா நகரத்திலிருந்து சீர்திருத்த சமயக் கருத்துக்களைப் பரப்பிக் கொண்டிருந்த கால்வினின் சமயக் கொள்கைகள் ஃபிரான்சிலும் பரவ ஆரம்பித்தன. சமூகத்தின் எல்லாத் தளங்களிலிருந்தும் மக்கள் கால்வினின் சமயத்தைப் பின் பற்றினர். குறிப்பாக நகரங்களில் வாழ்ந்த தொழிலாளர்கள் இக் கருத்துகளால் பெரிதும் ஈர்க்கப்பட்டனர். ஃபிரான்சில் செல்வம் படைத்த பிரபுக்களில் பலர் இச்சமயத்தை ஆதரித்தனர். இதற்குச் சமயப்பற்று மட்டும் காரணமன்று. அரசனுடைய அதிகாரம் வளர்வதைத் தடுக்கவும், திருச்சபையின் செல்வத்தைப் பறிக்கவும் பிரபுக்கள் விரும்பியது இதற்கு மற்றொரு காரண மாகும். ஃபிரான்சின் தென் பகுதியிலும், மேற்குப் பகுதியிலும் பிராடஸ்டெண்டு சமயம் விரைவாக வளர்ந்தது. இந்த நிலையில் ஃபிரான்சின் அரியணையேறிய இரண்டாம் ஹென்றி (1547–1559) பிராடஸ்டெண்டு சமய வளர்ச்சியை ஒடுக்கும் பணியில் தீவிர மாக ஈடுபட்டார். பல ஹ்யூகோனோக்கள் தீயிலிட்டு எரிக்கப்பட் டனர். சமயத்துரோகிகளைத் தண்டிக்க 'இன்கியுசிஷன்' அல்லது 'விசாரணைமன்றம்' (Inquisition) போன்ற முறைகளைக்கூட மேற்கொள்ள முயற்சித்தார். ஆனால், இதற்குக் கடும் எதிர்ப்பு இருந்தது. இவ்வளவு தடைகளுக்கிடையே ஹ்யூகோனோக்கள் இயக்கம் ஃபிரான்சில் மேன்மேலும் வலுப்பெற்று இரண்டாம் ஹென்றியின் ஆட்சியின் இறுதியில், பாரிஸ் நகரத்திலேயே கால்வின் சமயத்தைச் சார்ந்தவர்களுடைய மாநாடு நடந் தேறியது.

## ஃபிரான்சில் சமயப்போர்கள் (Religious Wars) (கி.பி. 1562-1598)

இரண்டாம் ஹென்றிக்குப் பிறகு இரண்டாம் ஃபிரான்சிஸ் ஃபிரான்சின் அரியணை ஏறினர். இவர் அனுபவமில்லாத இளைஞர் மட்டுமன்று; ஒரு நோயாளியும் ஆவார். எனவே, இவருடைய ஆட்சியில் ஃபிரான்சின் கைஸ், பூர்போன் என்ற அரச குடும்பங் களுக்கிடையே அரசியல் ஆதிக்கப்போட்டி ஏற்பட்டது. இதில் பூர்போன் குடும்பத்துப் பிரதிநிதிகளான 'நவாரேயின் அந்தோனியும்' (Anthony of Navarre) அவர் தம்பி 'கோண்டே இளவரசர் லூயியும்' (Louis, Prince of Conde) கைஸ் குடும்பத் திற்கு எதிராக ஃபிரான்சின் ஹ்யூகோனோக்களின் உதவியைநாடி பிராடஸ்டெண்டு சமயத்தை ஏற்றுக்கொண்டு அதை ஆதரிக்க முன்வந்தார்கள். இவ்வாறு பிராடஸ்டெண்டு சமயத்தின் வரலாறு ஃபிரான்சில் அரசியல் வரலாற்றுடன் பின்னிப் பிணைந்திருப்பதை நாம் இங்கு நோக்கவேண்டும்.

இதுவரையில் இந்த ஆதிக்கப்போட்டியில் தலையிடாமல் இருந்த அரசனின் தாயார் 'காதரின்-டி-மெடிசி' (Catharine-de-Medici) (இரண்டாம் ஹென்றியின் மனைவி) ஆட்சியில் தன் செல்வாக்கை நிலைநாட்டிக் கொள்ளவும், தன் பிள்ளைகளின் (ஒன்பதாம் சார்லஸ், மூன்றும் ஹென்றி) உரிமைகளைப் பாது காக்கவும் இந்த ஆதிக்கப்போட்டியில் தலையிடத் தீர்மானித்தார். அரசனின் அதிகாரம் குன்றி, சமூகத்தில் மக்களிடையே சமய உணர்வு மேலோங்கி வலிமைமிக்க அதிகார வெறிகொண்ட பிரபுக்கள் செல்வாக்கு ஓங்கியிருக்கும் ஒரு சூழ்நிலையில், ஒரு நாடு உள்நாட்டுப் போருக்கு இலக்காவதில் வியப்பொன்றுமில்லை. இந்த நிலையில்தான் நாம் ஃபிரான்சைக் காண்கிறோம். இதன் விளைவாக ஏற்பட்டதுதான் ஃபிரான்சின் சமயப்போர்கள். காதரைன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டவுடன் இரண்டு அரச குடும்பங்களைச் சேர்ந்த பிரபுக்களையும் தன் ஆலோசனைக் குழுவில் சேர்த்துக்கொண்டு இருதரப்பினருடனும் நல்லுறவை வளர்க்க முயற்சி செய்தார். பூர்போன்கள் பிராடஸ்டெண்டு சமயத்தை ஆதரித்தவர்கள். அவர்கள் நல்லெண்ணத்தைப் பெற, பிராடஸ் டெண்டுகளுக்குச் சமயச் சுதந்தரம் வழங்கப்பட்டது 1562-ல் வெளியிடப்பட்ட 'சமயப்பொறை ஆணை' (Edict of Toleration) என்ற ஆணைப்படி ஹ்யூகோனேக்கள் தங்கள்வசம் இருக்கும் திருச் சபைச் சொத்துகளைத் திருப்பிக்கொடுத்துவிட வேண்டும். நகரங் களுக்கு வெளியே கூடி வழிபடும் உரிமை இவர்களுக்கு அளிக்கப் பட்டது. பிராடஸ்டெண்டுகளுக்குச் சட்டப்பூர்வமான அங்கீகாரம் ஃபிரான்சில் முதன் முதலாக அளிக்கப்பட்டது. சமயவெறி மேலோங்கியிருந்த இந்தக் காலத்தில் இதுபோன்ற ஒரு கொள் கைக்கு வெற்றி வாய்ப்புகள் இல்லை. 1562-ல் சமய வெறியின் விளைவால் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி ஃபிரான்சை ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு உள்நாட்டுப் போரில் ஆழ்த்தியது. இந்த நிகழ்ச்சி தான் ஃபிரான்சின் வரலாற்றில் 'வாசிப் படுகொலை' (Massacre of Vassy) என்று அழைக்கப்படுகிறது. 'கைஸ் கோமகன்' (Duke of Guise) வாசி என்ற நகரின் வழியாகத் தன் படைகளுடன் சென்று கொண்டிருந்தபொழுது சமய வழிபாட்டில் ஈடுபட்டிருந்த ஹ்யூகோனேக்களைப் போர் வீரர்கள் தாக்கிப் படுகொலை செய் தனர். இந்த நிகழ்ச்சி ஃபிரான்ஸ் எங்கிலும் உள்ள பிராடஸ் டெண்டுகள் கோபத்தையும், ஆத்திரத்தையும் மூட்டியது. ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்த காதரைன், கைஸ் கோமகனைத் தட்டிக் கேட்கத் துணிவற்றவராக இருந்தார். ஹ்யூகோனேக்களின் தலைவ ரான 'கோண்டே' (Conde) இளவரசர், பிராடஸ்டெண்டுகள் அனைவரையும் போரில் ஈடுபடுமாறு அறைகூவல் விடுத்தார். இவ்வாறு ஃபிரான்சில் சமயப்போர்கள் தொடங்கின.

போர் நிகழ்ச்சிகள் : முதல் கட்டம் (1562–70)

1562-லிருந்து 1598 வரையில் விட்டுவிட்டு நடைபெற்ற இப்போரில் கொலை, கொள்ளை, அழித்தல் போன்ற மனிதத் தன்மையற்ற அநாகரிகச் செயல்கள் இடம்பெற்றன. ஃபிரான்சைப் பொறுத்தவரை பெருஞ் சேதத்தை விளைவித்த இப்போர் அடுத்த நூற்றாண்டில்கூட ஃபிரான்சின் நிலைமையைப் பாதித்தது. பொதுவாக நிலைமையை எடுத்து நோக்கும் பொழுது கத்தோலிக்க தரப்பினருக்குத்தான் இந்தப் போர் சாதகமாக இருந்தது. ஃபிரான்சின் வடக்கு, மத்திய பகுதிகளில் கத்தோலிக்கர்களும், தென்மேற்குப் பகுதியில் ஹ்யூகோனோக்களும் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தனர். மாநிலங்களில் வாழ்ந்த சிறு பிரபுக்களும், நகரங்களில் வாழ்ந்த வியாபாரிகளும் பிராடஸ்டெண்டுகளை ஆதரித்தனர். பெரிய பிரபுக்கள், குடியானவர்கள், நகரமக்கள் அரசு அலுவலர்கள் சத்தோலிக்கர்களை ஆதரித்தனர் 'நவாரேயின் அந்தோணி' (Antony of Navarre), 'கோண்டே இளவரசர்' (Prince of Conde) ஆகியோர்களைத் தவிர பிராடஸ்டெண்டுகளுக்கு 'காலினி' (Coligny) என்ற தலைசிறந்த படைத்தலைவர் உதவியாக இருந்தார். இங்கிலாந்து அரசி எலிசபெத் ஃபிரான்சின் பிராடஸ்டெண்டுகளுக்குத் தொடக்கத்தில் உதவி புரிந்தார். ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்து நாடுகளிலிருந்தும் உதவி கிடைத்தது. கத்தோலிக்கர்களுக்கு ஸ்பெயின் உதவி புரிந்தது. 1570 வரை நடந்த நிகழ்ச்சிகளில் 'பாய்டியர், பூர்கே, ரூவன்' (Poitiers, Bourges, Roven) போன்ற நகரங்களைக் கத்தோலிக்கர் கைப்பற்றினர் 'ட்ருக்ஸ் போரில்' (Battle of Dreux) கத்தோலிக்கர்கள் வெற்றி பெற்றனர். பிராடஸ்டெண்டுகளுக்குப் பெருத்தசேதம் ஏற்பட்டது. அந்தோணி நவாரே இந்தப் போரில் உயிரிழந்தார். கோண்டே இளவரசர் தம் படைகளுடன் பாரிஸ் நோக்கிச் சென்றார். வழியில் 'செயின்ட் டெனிஸ் போரில்' (Battle of St. Denis) அவருடைய படைகள் தோற்றன. 1568-ல் கோண்டே, காலினி முதலிய பிராடஸ்டெண்டு தலைவர்களைச் சிறைப்பிடிக்க கத்தோலிக்கர்கள் திட்டமிட்டனர். பிராடஸ்டெண்டு தலைவர்கள் 'ரொசெல்' (Rochelle) என்ற இடத்திற்குச் சென்று அங்கிருந்து போரைத் தொடர்ந்து நடத்த முடிவு செய்தனர். 1569-ல் 'ஜார்னக் சண்டையில்' (Battle of Jarnac) கத்தோலிக்கர்கள் வெற்றி பெற்றனர். இளவரசர் கோண்டே இந்தப் போரில் கொல்லப்பட்டார். ஹ்யூகோனோக்களுக்கு இப்பொழுது எஞ்சியிருந்த தலைவர் காலினி ஒருவர்தான். 1569-ல் நடைபெற்ற 'மான்கான்டூர்' (Moncontour) போரில் காலினியின் படைகள் தோற்கடிக்கப்பட்டன. இந்தச் சூழ்நிலையில் 1570-ல் 'செயின்ட் ஜெர்மெயின் உடன்படிக்கை' (Peace of St. Germain)

கையெழுத்தாயிற்று. இந்த உடன்படிக்கை பொதுவாகப் பிராடஸ்டெண்டுகளுக்குச் சாதகமாக அமைந்திருந்தது. பிராடஸ்டெண்டுகளுக்குச் சமயச் சுதந்தரம் அளிக்கப்பட்டது. ஒவ்வொரு மாநிலத்திலும் குறிப்பிட்ட இரண்டு நகரங்களில் மட்டும் பிராடஸ்டெண்டுகளுக்கு வழிபாட்டுச் சுதந்தரம் அளிக்கப்பட்டது. ஆனால், பாரிஸ் நகரைப் பொறுத்தவரை இந்தச் சுதந்தரம் அளிக்கப்படவில்லை. பல்கலைக் கழகங்களிலும், அரசாங்கப்பணியிலும் இவர்களுக்குச் சம உரிமைகள் அளிக்கப்பட்டன. இவர்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட சொத்துகள் திருப்பிக் கொடுக்கப்பட்டன.

### போரின் இரண்டாவது கட்டம் (1570–1573)

பார்த்தலோமியோ திருநாட் படுகொலை, 1572 (Massacre of Saint Bartholomew's Day): ஃபிரான்சின் அரசர் ஒன்பதாம் சார்லஸ் ஆட்சிப்பொறுப்பை தானே நேரடியாக ஏற்று நடத்தி வந்தார். ஃபிரான்சில் நடந்து கொண்டிருந்த உள்நாட்டுப்போர் நாட்டு மக்களையும், நாட்டின் செல்வ நிலையையும் பாதித்தது. இருதரப்பினருக்குமிடையே பகைமை உணர்ச்சியை வளரவிடுவதால் பயனொன்றுமில்லை என்பதை அரசனும், நாட்டுப்பற்று மிக்க சில தலைவர்களும் உணர ஆரம்பித்தனர். இந்தக் கருத்தை வலியுறுத்தியவர் காலினி என்னும் ஹ்யூகோனேக்களின் தலைவராவர். ஃபிரான்சில் நிலவிவரும் உள்நாட்டுப் பூசல்களை அகற்றி ஃபிரான்சை ஸ்பெயினுடன் போரில் ஈடுபடுத்த வேண்டுமென்பது ஒன்பதாம் சார்லசின் விருப்பம் அதற்கு இங்கிலாந்து அரசியின் உதவியைப் பெற அந் நாட்டுடன் ஃபிரான்ஸ் ஒரு நெருங்கிய நட்புறவு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது அவருடைய திட்டம். பிராடஸ்டெண்டுகள் தலைவர், 'நவாரேயின் ஹென்றி' (Henry of Navarre) க்கும், தன் சகோதரி மார்கரெட்டுக்கும் திருமணம் முடிப்பதன் மூலம் ஹ்யூகோனேக்களின் நல்லெண்ணத்தையும், ஆதரவையும் பெற்று நாட்டை ஒன்றுபடுத்தி ஸ்பெயினுக்கு எதிராகப் போரில் ஈடுபடுத்த வேண்டுமென்பது அவர் நோக்கம். அவர் விருப்பப்படியே இந்தத் திருமணம் 1572-ல் நிறைவேறியது.

ஃபிரான்ஸ் அரசின் சமயக் கொள்கை இவ்வாறு மாற்றப்பட்டு கத்தோலிக்க பிராடஸ்டெண்டு பிரிவினர்களிடையே ஒற்றுமை ஏற்படுவதைச் சில தீவிர கத்தோலிக்கர்கள் விரும்பவில்லை. மேலும் பிராடஸ்டெண்டு தலைவரான காலினியின் எழுச்சி அவர்களுடைய ஆத்திரத்தையும், பொறாமையையும் தூண்டியது.

குறிப்பாக அரசனின் தாயார் காதரின்-டி-மெடிசி, காலினியின் செல்வாக்கு அரசில் வளருவதைச் சிறிதும் விரும்பவில்லை. கைஸ் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பிராடஸ்டெண்டுகளின் செல் வாக்கை ஒழிக்க எண்ணினார்கள். இவ்வாறு ஒன்பதாம் சார்லஸ், காலினி ஆகியவர்களுக்கு எதிராக ஒரு சதிக்கூட்டம் செயல்பட ஆரம்பித்தது. இதன் விளைவு 1572 ஆகஸ்ட் 22ஆம் நாள் காலினியைக் கொல்ல சதி உருவாகியது. அரசரின் அரண்மனையி லிருந்து வீடு திரும்பிச்சென்று கொண்டிருந்த காலினி, சதிகாரன் ஒருவனால் சுடப்பட்டுக் காயமடைந்தார். இதைக் கேள்வியுற்ற அரசர் உடனே விரைந்து சென்று காலினியைச் சந்தித்து "காயம் உங்களுக்கு, துயரம் எனக்கு" (yours the wound, mine the sorrow) என்று ஆறுதல் கூறி சதிகாரர்களைக் கண்டுபிடித்துத் தண்டிப்பதாக உறுதி அளித்தார்.

இந்தச்சதி பற்றிய விசாரணை நடந்தால் அரசரின் தாய் காதரின், கைஸ் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோருக்கும் சதியில் பங்கு உண்டு என்பது வெளிப்பட்டுவிடும் என்று அஞ்சிக் காலினியையும், அவருடைய பிராடஸ்டெண்டு கூட்டத் தினரையும் அறவே ஒழித்துவிடும் எண்ணத்துடன் மற்றொரு பெரிய சதித்திட்டத்தை உருவாக்கினர். இதற்கு ஒப்புதல் அளிக்க, அரசர் கட்டாயப் படுத்தப்பட்டார். ஆகஸ்டு 24ஆம் நாள் 'செயின்ட் பார்த்தலோமியோ' நாளன்று விடியற்காலை பாரிஸ் நகர கிறிஸ்துவ ஆலயமணி ஓசை கேட்டவுடன் கத்தோலிக் கர்கள் கூட்டங் கூட்டமாக ஏற்கனவே திட்டமிட்டிருந்தபடி ஹ்யூகோனேக்களின் வீடுகளில் புகுந்து பலரை வெட்டிவீழ்த் தினார்கள். காலினியும் கொல்லப்பட்டார். ஃபிரான்சின் பல பகுதிகளிலும் இதேபோல ஆயிரக்கணக்கான பிராடஸ்டெண்டுகள் கொல்லப்பட்டனர்.[1] பாரிஸ் நகர வீதிகளிலும், ஃபிரான்சின் மற்ற பகுதிகளிலும் இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடியது. போப் பதின்மூன்றும் கிரெகரியும், ஸ்பெயின் மன்னர் இரண்டாம் பிலிப்பும் இந்தக் கொலை, நிகழ்ச்சிகளைக் கேட்டு மனம் மகிழ்ந் தார்கள் என்று அறியும்பொழுது சமய வேறுபாடுகள் எந்த அளவிற்கு மக்களிடையே வெறுப்புணர்ச்சியை ஏற்படுத்த முடியும் என்பதை நாம் நன்கு உணரமுடிகின்றது. ஹ்யூகோனேக்களின் தலைவர்கள் பலர் உயிரிழக்க நேரிட்டதால் அவர்களுடைய வலிமை குன்றியது. எனினும் தங்களுடைய உரிமைகளைப் பாதுகாத்து கொள்ள இறுதிவரையில் போராடத் தீர்மானித்தார்கள்.

[1] சுமார் 10,000 பிராடஸ்டெண்டுகள் கொல்லப்பட்டிருக்கக்கூடும் என்று கருதப்படுகிறது. சிலர் கொல்லப்பட்டவர்கள் எண்ணிக்கை 70,000 என்றும், சிலர் 80,000 என்றும் கருதுகின்றனர். இதை அறுதியிட்டுக் கூற இயலாது.

போரின் மூன்றாவது கட்டம் (1574–1598)

கி.பி. 1574-ல் ஒன்பதாம் சார்லஸ் இறக்கவே, அவருடைய தம்பி மூன்றாம் ஹென்றி அரியணை ஏறினார். 1574–89 இவருக்குப் பிள்ளைகள் இல்லாததால் சட்டப்படி இவருக்குப்பிறகு இவருடைய நெருங்கிய ஆண் உறவினர் நவாரேயின் ஹென்றிதான் அரியணை ஏற உரிமை பெற்றவர். இவர் பட்டத்திற்கு வரக்கூடும் என்ற நிலையில் கைஸ் குடும்பத்து ஹென்றியும், மற்ற கத்தோலிக்கர்களும் ஒன்றுசேர்ந்து இதைத் தடுக்க 'புனித சங்கம்' (Holy League) என்னும் அமைப்பை ஏற்படுத்தி பிராடெஸ்டெண்டுகளின் செல்வாக்கு வளர்வதைத் தடுக்க முயற்சித்தனர். இவ்வாறு நாடு கட்சிப் பூசல்களால் வலுவிழந்து இருந்த சமயத்தில் புதுக்கட்சி ஒன்று உருவாகியது. இக் கட்சியைச் சேர்ந்தவர்கள் தங்களைப் 'பெலிடிக்குகள்' (Politiques or Politicians) என்று அழைத்துக் கொண்டனர். இவர்களுடைய முக்கிய நோக்கம் நாட்டின் நலனைப் பேணுவது. ஒரு குறிப்பிட்ட சமயத்தின் வெற்றி தோல்வியைவிட நாட்டின் நல்வாழ்வே முக்கியமானது. இந்தக் குறிக்கோளை அடைய மக்கள் தங்கள் சமய வேறுபாடுகளை மறந்துவிட வேண்டும். பொறையுடைமைக் கொள்கையின் அடிப்படையில் (Toleration) அரசாங்கம் செயல்பட வேண்டும் என்று இந்தக் கட்சி விரும்பியது. தீவிர கத்தோலிக்கரல்லாதவர்கள் பலர் இந்தக் கட்சியில் சேர்ந்தனர். ஹ்யூகோனோக்கள் பலர் இக் கட்சியின் ஆதரவோடு பிராடெஸ்டெண்டு சமயம் நாடு முழுவதும் அனுமதிக்கப்பட வேண்டுமென்று கோரினர். இதன் விளைவாக மீண்டும் இருதரப்பினரிடையே போர் ஏற்பட்டு இரண்டு ஆண்டுகள் நடந்தது (1574–76). கைஸ் கோமகன் ஹென்றியின் தலைமையில் கத்தோலிக்க லீக் மேலும் வலுப்படுத்தப்பட்டது. இதன் நோக்கம் மூன்றாம் ஹென்றிக்குப்பிறகு, ஹென்றி நவாரே அரியணை ஏறுவதைத் தடுப்பது. ஏனெனில் ஹென்றி நவாரே பிராடெஸ்டெண்டு சமயத்தைச் சேர்ந்தவர். இவ்வாறு 1585-ல் ஃபிரான்சில் மூன்று கட்சிகள் தோன்றி அவற்றின் மூன்று தலைவர்களும் ஆதிக்கப் போட்டியில் ஈடுபட்டிருந்தனர். இவர்களிடையே 1585 முதல் 1589 வரை நடந்த இந்த ஆதிக்கப்போட்டி ஃபிரெஞ்சு வரலாற்றில் 'மூன்று ஹென்றிகளின் போர்' (The War of the Three Henrys) என்று அழைக்கப்படுகிறது. ஏனெனில், இந்த மூன்று கட்சிகளின் தலைவர்களும் ஹென்றி என்று பெயர் கொண்டவர்கள் — கத்தோலிக்கர்கள் சார்பில் 'ஹென்றி கைஸ்' (Henry Guise), பிராடெஸ்டெண்டுகள் சார்பில் 'ஹென்றி நவாரே' (Henry Navarre), இவர்களுக்கிடையில் சிக்கிக் கொண்டிருந்த வலிமையற்ற அரசன் மூன்றாம் ஹென்றி ஆகிய மூவரும் மூன்று ஹென்றிகளாவர். மூன்றாம்

ஹென்றி கட்சிப் பூசல்களில் சிக்கிக் கொண்டு செயலற்ற நிலையிலிருந்தார். கத்தோலிக்கர்களுக்கு ஸ்பெயின் அரசர் இரண்டாம் பிலிப்பும், பிராடஸ்டெண்டுகளுக்கு ஜெர்மானிய அரசர்களும் உதவி செய்தனர். 1587-ல் 'குட்ராஸ்' (Coutras) என்ற இடத்தில் நடந்த போரில் நவாரேயின் ஹென்றி கத்தோலிக்க படைகளைத் தோற்கடித்தார். இதற்கிடையே அரசர் மூன்றும் ஹென்றிக்கும், ஹென்றி கைசுக்குமிடையே கருத்து வேறுபாடுகள் காரணமாகப் பகைமை வளர்ந்து 1588-ல் அரசரால் ஹென்றி கைஸ் கொல்லப்பட்டார். இதனால் கத்தோலிக்கர்கள் இவர்மீது வெறுப்பு கொண்டனர். இதன் விளைவாக 1589-ல் மூன்றும் ஹென்றி கத்தோலிக்க பாதிரி ஒருவரால் குத்திக் கொல்லப்பட்டார்.

நவாரேயின் ஹென்றி, நான்காம் ஹென்றி என்ற பட்டத்துடன் அரியணையேறினார். பிராடஸ்டெண்டுகளின் தலைவர் ஹென்றி, அரியணை ஏறியதை கத்தோலிக்க லீக் எதிர்த்தது. மீண்டும் இருதரப்பினர்களிடையே போர் மூண்டது. அரசனுடைய படைகள் கி.பி. 1590-ல் 'ஐவி' (Ivy) என்ற இடத்தில் நடந்த சண்டையில் வெற்றி பெற்றன. எனினும் கத்தோலிக்க தரப்பினரை முற்றிலும் ஒடுக்க முடியவில்லை. நான்காம் ஹென்றியின் திறமையும், அரசியல் அறிவும் கத்தோலிக்கர்கள் கூட அவரை விரும்பும்படிச் செய்தன. அவர் பிராடஸ்டெண்டு என்ற ஒரு காரணம்தான் அவரை அரசராக ஏற்கத் தடையாக இருந்தது. அவர் கத்தோலிக்க சமயத்தை ஏற்றுக்கொண்டால் அவரை அரசராக ஏற்றுக்கொள்ள கத்தோலிக்க லீக் உடன்படும். எனவே, 1593-ல் ஃபிரான்சின் பாராளுமன்றம் கூடி அரசனைக் கத்தோலிக்க சமயத்தை ஏற்கும்படி வேண்டியது. அரசரும் நிலைமையை நன்றாக ஆராய்ந்து, நெடுங்காலமாக நாட்டைக் குழப்பத்தில் ஆழ்த்தி மக்களை இன்னலுக்குள்ளாக்கிய போர் ஒழிக்கப்பட்டு, ஒற்றுமை ஏற்பட வேண்டுமானால் தாம் கத்தோலிக்க சமயத்தை ஏற்பதுதான் சிறந்த வழி என்பதை உணர்ந்தார். 1593-ல் கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்து விட்டதாக அறிவித்தார். சில தீவிர கத்தோலிக்கர்களைக் கொண்ட கத்தோலிக்க லீக்கும், ஸ்பெயினின் இரண்டாம் பிலிப்பும் இதை விரும்பவில்லை. தொடர்ந்து ஹென்றிக்கு எதிர்ப்பை உருவாக்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால், பெருவாரியான மக்கள் மாநிலங்களிலும், நகரங்களிலும் நான்காம் ஹென்றியின் சமய மாற்றத்தை வரவேற்று அவரை அரசராக ஏற்றனர். 1594-ல் நான்காம் ஹென்றி ஃபிரான்சின் அரசராக முடிசூட்டப்பட்டார். கத்தோலிக்க தரப்பில் இருந்த கைஸ் குடும்பத்துப் பிரபுக்களும்,

மற்ற தலைவர்களும் அரசுடன் சமரசம் செய்து கொண்டனர். 1595-ல் சமயத்திலிருந்து இவரை விலக்கிப் போப்பினால் பிறப்பிக்கப்பட்டிருந்த ஆணை ரத்து செய்யப்பட்டது. ஸ்பெயின் அரசன் பிலிப், அரசனுக்கு எதிராகக் கத்தோலிக்கர்களைத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்ததால் 1595-ல் நான்காம் ஹென்றி இங்கிலாந்தின் உதவியுடன் ஸ்பெயின்மீது போர் தொடுத்தார். இந்தப் போரில் பல வெற்றிகளைக் கண்ட நான்காம் ஹென்றி 1598-ல் பிலிப்புடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு போரை முடித்தார். இவ்வாறு ஸ்பெயினுடன் போரை முடித்துக்கொண்ட ஹென்றி உள்நாட்டு விவகாரங்களில் உடனடியாகக் கவனம் செலுத்தி ஹ்யூகோனோக்களின் பிரச்னைக்கு ஒரு நல்ல முடிவுகாணும் பணியில் ஈடுபட்டார். ஹ்யூகோனோக்கள் ஃபிரான்சின் உண்மையான குடிமக்களாக, அமைதியான வாழ்க்கை நடத்த வேண்டுமென்றால் அவர்களுக்குச் சமய சுதந்திரம் அளிக்கப்படவேண்டும். தங்களுடைய உயிர் உடைமைகளுக்கு ஆபத்து ஒன்றுமில்லை என்ற ஒரு நம்பிக்கை அவர்களுக்கு ஏற்பட வேண்டும். இந்தச் சூழ்நிலையை உருவாக்க வேண்டியது தம்முடைய முதற்கடமை என்பதை உணர்ந்த நான்காம் ஹென்றி 1598-ல் 'நாண்டிஸ் ஆணைகளை' வெளியிட்டார் (Edict of Nantes). இவை ஃபிரான்சின் பிராடஸ்டெண்டுகளுக்கு சிவில், அரசியல், சமய உரிமைகளை அளித்தன[1] இவ்வாறு நாட்டை உள்நாட்டுப் போரில் ஆழ்த்தி மக்களுக்கு எல்லையில்லாத் துன்பத்தை உண்டாக்கிய சமயப் பிரச்னைக்குக் கடைசியாக இந்த ஆணைகளின் மூலம் ஒரு நல்ல தீர்வு காணப்பட்டது.

## சமயச் சீர்திருத்த இயக்கத்தின் விளைவுகள்

1. 1500 வரை மத்திய, மேற்கு ஐரோப்பிய மக்கள் யாவரும் கத்தோலிக்க கிறிஸ்துவ சமயத்தைச் சேர்ந்தவர்களாக அமைதியான வாழ்க்கை வாழ்ந்தனர். ஆனால், இதற்குப் பிறகு சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்றியதன் விளைவாகக் கத்தோலிக்க சமயம் பிளவுபட்டு லூதரின் சமயம், கால்வினியம் போன்ற பல சமயப் பிரிவுகள் தோன்றி இவைகளுக்கிடையே போட்டி, பொறாமைகள் வளர்ந்தன. சமய வெறுப்புணர்ச்சியும், சமய வெறியும் வளர்ந்து ஐரோப்பா சமயப் போர்களில் ஆழ்த்தப்பட்டது. கத்தோலிக்கர்களும், பிராடஸ்டெண்டுகளும் தத்தம் சமயத்தைப் பாதுகாக்கப் போரில் ஈடுபட்டனர். கத்தோ

[1] நாண்டிஸ் ஆணைகளைப் பற்றி மேலும் விரிவாக நான்காம் ஹென்றியின் ஆட்சியைப் பற்றிய பகுதியில் காணலாம்.

லிக்கநாடுகளில் இன்குசிஷன் போன்ற நீதிமன்றங்கள், போலீஸ் படையினர், இராணுவத்தினர் ஆகியவர்கள் உதவியுடன் கத்தோலிக்க சமயத்திற்குத் தோன்றிய எதிர்ப்பு ஒடுக்கப்பட்டது. பிராடஸ்டெண்டு நாடுகளில் இதேபோல கத்தோலிக்கர்கள் ஒடுக்கப்பட்டனர். ஆனால், சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்றிப் பல ஆண்டுகள் கழித்துதான் ஐரோப்பாவில் பொறை யுடைமை தோன்றியது.

2. இந்த இயக்கத்தின் மற்றொரு விளைவு ஒழுக்க நெறியில் ஏற்பட்ட முன்னேற்றமாகும். கத்தோலிக்கர்களும், பிராடெஸ் டெண்டுகளும் ஒழுக்க நெறியிலிருந்து தவறியதாக ஒருவர் மீது ஒருவர் குற்றம்சாட்டிக் கொண்டனர். இரு பிரிவினரும் மக்களிடையே தங்கள் செல்வாக்கை நிலைநிறுத்திக் கொள்ள அறநெறியின் அடிப்படையில் தங்கள் வாழ்க்கையைத் தூய்மை ஆக்கிக் கொண்டனர். மக்களிடையேயும் ஒழுக்க நெறியின் அவசியத்தைப் பற்றி வலியுறுத்தினர்.

3. தங்களுடைய எதிரிகளுடன் வாதம் செய்து தங்கள் சமயத்தின் உயர்வை நிலைநாட்ட, கத்தோலிக்கர்களுக்கும், பிராடஸ்டெண்டுகளுக்கும் சமயக் கல்வி அறிவும், தனிப் பயிற் சியும் தேவைப்பட்டன. இந்தத் தேவையைப் பூர்த்திச் செய்ய இரு பிரிவினரும் பல கல்விக்கூடங்களையும், பயிற்சிக் கூடங்களையும் தொடங்கினர்.

4. இந்த இயக்கத்தின் விளைவாகத் தோன்றிய சில தீவிர சமயப் பிரிவுகள் தனி மனிதனுக்கும், அவன் கருத்துக்களுக்கும், உணர்ச்சிகளுக்கும் முக்கியத்துவம் அளித்தன. இதன் மூலம் தற்கால ஜனநாயகக் கோட்பாடு வளர்ச்சி பெறுவதற்கு, இந்த இயக்கம் மறைமுகமாக உதவியது என்று சிலர் கருதுகின்றனர். ஆனால், இந்த இயக்கத்தின் விளைவாக உண்மையில் நிகழ்ந்தது என்னவென்றால், அரசர்களின் அதிகாரம்தான் வலுப்பெற்றது. கத்தோலிக்க, பிராடஸ்டெண்டு நாடுகளிலெல்லாம் மன்னர்களின் அதிகாரம் வரம்புமீறி வளர்ந்தது.

5. அரசனுடைய அரசியல் வளர்ந்ததோடு மட்டுமின்றி இதுவரை திருச்சபை ஏற்று இருந்த கல்வி, அறநிலையங்கள் போன்ற பொறுப்புகள் அரசின் கைக்கு மாற்றப்பட்டன. பிராடஸ்டெண்டு நாடுகளின் திருச்சபையின் செல்வம் பறிக்கப் பட்டதால் இந்தச் சமூகநலப் பணிகளை அரசே ஏற்று நடத்த வேண்டியதாயிற்று.

6. ஐரோப்பாவில் முதலாளித்துவத்தின் வளர்ச்சி விரிவு படுத்தப்பட்டதற்குப் பிராடஸ்டெண்டு சமயத்தின் எழுச்சி முக்கிய காரணம் (குறிப்பாக கால்வினியம்) என்று சில வரலாற்று சிரியர்கள் கருதுகின்றனர்.[1]

## IV. இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்தம்

இங்கிலாந்தில் சமயச்சீர்திருத்த இயக்கம் ஐரோப்பிய நாடு களில் நிகழ்ந்ததைப்போல் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்த வில்லை. இந்த இயக்கம் சீராகவும், படிப்படியாகவும் வளர்ந்து பதினாறும் நூற்றாண்டில் இங்கிலாந்தின் திருச்சபை போப்பின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, ஒரு தேசியத் திருச்சபையாக தனித்து இயங்கும் நிலையை அடைந்தது. இந்தச் சீர்திருத்தப்பட்ட கிறிஸ்துவ சமயம் 'ஆங்கிலிகன் சமயம்' (Anglicanism) என்றும், அரசின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்ட திருச்சபை 'ஆங்கிலிகன் திருச்சபை' (Anglican Church)[2] என்றும் அழைக்கப் பட்டது. ஐரோப்பாவில் தோன்றிய லூதர், கால்வின் சமயக் கொள்கைகளைவிட இந்த ஆங்கிலிகச் சமயம் பழமைச் சார்புடைய தாக அமைந்திருந்தது. திருச்சபை அமைப்பில், இங்கிலாந்தில் ஏற்பட்ட இந்த மாறுதல்கள் 'டியூடர் அரசர் எட்டாம் ஹென்றியின்' ஆட்சியில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளின் விளைவாகும்.

இங்கிலாந்தில் சமயச்சீர்திருத்த இயக்கம் சமயச் சார்புடைய தாக இல்லாமல், அரசியல் சார்புடையதாக இருந்தது. தொடக் கத்தில், இந்த இயக்கத்தில் சமயவாதிகள் எவரும் பங்குகொள்ள வில்லை. அரசரே இந்த இயக்கத்தை நடத்தினர் என்பது, இங்கு நோக்கத்தக்கது. மேலும், சமயத் துறையில் மாறுதல்களை ஏற் படுத்த வேண்டும் என்ற நோக்கமே அரசருக்கு இல்லை. அவர் விரும்பியதெல்லாம், போப்பின் அதிகாரத்தை ஒடுக்க வேண்டும் என்பதுதான்.

1521-ம் ஆண்டு முதலே லூதரின் கருத்துகள் இங்கிலாந்தில் பரவத் தொடங்கின. ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ், லண்டன்

[1] History of Europe since 1500—J. H. Hayes & C. W. Cole, page 36, 38

[2] சமயச்சீர்திருத்த இயக்கம் தோன்றுவதற்கு முன்பும், இங்கிலாந்தின் கத் தோலிக்க திருச்சபை (Ecclesia Anglicana or Anglican Church) என்று அழைக் கப்பட்டது. ஆனல், 16ஆம் நூற்றாண்டில் ஆங்கிலிகன் திருச்சபை என்பது போப் புடன் தொடர்பைத் துண்டித்துக்கொண்டு தனித்து இயங்கும் ஒரு தேசியத் திருச் சபையாகவும், பிராடஸ்டெண்டு சமயக் கோட்பாடுகளைப் பின்பற்றும் ஒரு அமைப் பாகவும் விளங்கியது.

ஆகிய நகரங்களில் லூதரின் கருத்துகளில் ஈடுபாடு வளர்ந்து, அறிஞர்களால் இக்கருத்துகள் விவாதிக்கப்பட்டன. மேலும், திருச்சபையில் சீர்திருத்தம் உடனடியாகத் தேவை என்பதை, கிறிஸ்துவ உலகத்தின் மற்ற பகுதிகள் உணர்ந்ததைப்போல இங்கிலாந்திலும் மக்கள் உணரலாயினர். கத்தோலிக்க திருச்சபையைச் சேர்ந்தவர்களே இவ்வாறு கருதினர் மனிதாபிமானவாதிகளான 'கோலெ' (Colet, 'மூர்' (More) போன்றவர்கள், சீர்திருத்தத்தின் அவசியத்தை வலியுறுத்தினர். ஏராஸ்மஸ் போன்றவர்களுடைய முற்போக்குக் கருத்துகளுக்கும் இங்கிலாந்தில் ஆதரவு இருந்தது. மூன்றாவதாக இங்கிலாந்திலும், தேசிய உணர்வு வலுவடைந்துகொண்டிருந்தது. சமயத்துறையில், இங்கிலாந்து ஓர் அன்னிய ஆதிக்கத்திற்கு (போப்பின் ஆதிக்கத்திற்கு) உட்படுவதை மக்கள் விரும்பவில்லை. டியூடர் அரசர் ஏழாம் ஹென்றி பாராளுமன்றத்தையும், பிரபுக்களையும் தம் ஆதிக்கத்திற்குட்படுத்தி ஒரு வலிமை பொருந்திய முடியாட்சியை ஏற்படுத்தியிருந்தார். அவருடைய வாரிசான எட்டாம் ஹென்றி அரசரின் எதேச்சாதிகாரத்திற்குத் தடையாக இருந்த ஒரே நிறுவனம் திருச்சபை என்பதை உணர்ந்து, அதையும் தம் ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவர எண்ணினார். இவ்வாறு, திருச்சபையை அரசின் ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவர எட்டாம் ஹென்றி செய்த முயற்சிகளின் விளைவுதான், சமயச் சீர்திருத்த இயக்கம் என்றழைக்கப்பட்டது.

இந்த எண்ணம் ஏற்பட்டுப் பல ஆண்டுகள் கழித்துங்கூட எட்டாம் ஹென்றி, இந்தத் திட்டத்தைச் செயல்படுத்த முற்படவில்லை. கத்தோலிக்க சமயநெறிகளிலிருந்து வழுவாது ஓர் உண்மையான கத்தோலிக்க கிறிஸ்துவராக வாழ்ந்துவந்தார். 1521-ல் லூதரின் சமயக் கோட்பாடுகளைத் தாக்கிக் கத்தோலிக்க சமயத்தை ஆதரித்து, "ஏழு புனிதச் சடங்குகளுக்கு ஆதரவு" (The Defence of the Seven Sacraments) என்ற நூலை வெளியிட்டார். இவர் கத்தோலிக்க சமயத்திற்காகச் செய்த இந்த நற்பணியைப் போற்றி, போப் இவருக்குச் "சமயக் காவலர்" (Defender of the Faith) என்ற பட்டத்தைச் சூட்டினார். ஐரோப்பிய அரசியலில், பல சந்தர்ப்பங்களில் போப் பத்தாம் லியோவுக்கு இவர் ஆதரவு அளித்திருக்கிறார். இவருடைய முதலமைச்சராக இருந்தவரே தாமஸ் உல்சி என்னும் கத்தோலிக்க திருச்சபையின் கார்டினல்களுள் ஒருவராவார். கத்தோலிக்க திருச்சபையுடன் இவ்வளவு நெருங்கிய நட்புறவுகொண்டிருந்த இங்கிலாந்து, எப்படி கத்தோலிக்க அமைப்பிலிருந்து விலகி, தனித்த திருச்சபையாக விளங்கியது என்பதைப் புரிந்துகொள்ள, நாம் எட்டாம் ஹென்றியின் சொந்த வாழ்க்கையோடு தொடர்புள்ள சில நிகழ்ச்சிகளை ஆராயவேண்டும்.

ஸ்பெயினை அரசாண்ட ஃபெர்டினண்ட்-இசபெல்லாவின் மக ளான காதரின் என்பவரை ஏழாம் ஹென்றியின் மகன் ஆர்தர் மணந்திருந்தார். மணமாகிச் சில நாட்களில் ஆர்தர் இறக்கவே, அவரது தம்பி எட்டாம் ஹென்றி காதரினை மணக்கவேண்டியது என்று முடிவுசெய்யப்பட்டது. ஆனால், அண்ணனின் விதவையைத் தம்பி மணப்பது என்பதைத் திருச்சபைச்சட்டம் அனுமதிக்கவில்லை. அப்பொழுது போப் பதவியிலிருந்த இரண்டாம் ஜூலியஸ், சட் டத்தை விலக்கிவைக்கும் சிறப்பதிகாரத்தைப் (Dispensing power) பயன்படுத்தி, இந்தத் திருமணத்தை அனுமதித்தார். 1509-ல் எட்டாம் ஹென்றிக்கும், காதரினுக்கும் திருமணம் நடந்தது. இருபது ஆண்டுகள் திருமண வாழ்க்கை நடத்திய பிறகு, திடீ ரென்று எட்டாம் ஹென்றி காதரினை மணவிலக்குச் செய்ய எண் ணினார். காதரின்மூலம் இவருக்குப் பிறந்த (மேரி என்ற ஒரு பெண் குழந்தை தவிர) எல்லாக் குழந்தைகளும் இளமையிலேயே இறந்துவிட்டன. இது ஒரு காரணமாகும். மேரியும் நோயாளி யாகவே இருந்தார். காதரினுக்கு வயது அதிகமாகி, இனி அவ ருக்கு மகப்பேறு இல்லை என்ற நிலை ஏற்பட்டதும், எட்டாம் ஹென்றிக்குத் தனக்குப் பிறகு அரியணை ஏற வாரிசு இல்லாத மனக் கவலை அதிகமாகியது. தன்னுடைய அரச குடும்பத்தின் எதிர் காலத்திற்காக, இந்தத் திருமணத்தை ரத்துசெய்துவிட்டு மறு மணம் செய்துகொள்ளவிரும்பினார். மற்றொரு காரணம், காதரி னுக்கு வயதான காரணத்தினால் அவர் மீது இருந்த ஆசை மறைந்து, அவருக்குப் பணிப்பெண்ணாக இருந்த ஆன்பொலின் என்ற இளம் பெண்மீது அரசருக்கு மோகம் ஏற்பட்டது. அவரை மணந்துகொள்ளவும் அரசர் தீர்மானித்தார்.

திருமணம் என்பது ஒரு புனிதச் சடங்காகக் கருதப்பட்டதால் திருமணம், மணவிலக்கு ஆகிய விஷயங்களில் முடிவுசெய்ய திருச் சபைக்கு மட்டும் அதிகாரம் உண்டு. மணவிலக்கைத் திருச்சபை சாதாரணமாக அனுமதிப்பதில்லை. ஆனால், எட்டாம் ஹென்றி மணவிலக்கு கோரி, போப்பிற்கு மனு செய்துகொண்ட தன்னுடைய முதல் திருமணம் திருச்சபைச் சட்டபடி செல்லுபடி யாகாதென்றும், போப் விலக்கு அளித்த காரணத்தினால் திருமணம் நடைபெற்றது என்றும் அந்த விலக்கு ஆணையை (Dispensing Power) ரத்து செய்துவிட்டால் திருமணம் செல்லு படியாகாதென்றும் வாதாடி, ஆன்பொலினை மணக்க போப் ஏழாம் கிளெமெண்டின் அனுமதியைக் கோரினார். அரசருடைய அமைச் சராக இருந்த கார்டினல் உல்ஸி போப்பிடம் தனக்கிருந்த செல் வாக்கைப் பயன்படுத்தி இந்தத் திருமணத்திற்குப் போப்பின் ஒப்புதலைப்பெற முயன்றார். அப்பொழுது பேரரசராக இருந்த

ஐந்தாம் சார்லஸ் காதரின் அரசியாரின் நெருங்கிய உறவினர். இந்தத் திருமணம் ரத்து செய்யப்படுவதை அவர் விரும்பவில்லை. எனவே, போப் ஏழாம் கிளெமெண்ட், ஐந்தாம் சார்லசின் விருப்பத்திற்கு எதிராக இந்தப் பிரச்னையில் முடிவெடுக்கத் துணியவில்லை. எனவே, காலதாமதம் செய்தார். 1529-ல் இது பற்றி விசாரணை செய்ய இங்கிலாந்திற்கு 'கார்டினல் காம்பெக்கியோ' (Cardinal Compeggio) என்பவரை அனுப்பினார். ஆனால், பிரச்னை தீர்க்கப்படவில்லை. மேலும் காலதாமதம் செய்யும் நோக்கத்துடன் போப் இவ்வழக்கு விசாரணையை ரோம் நகருக்கு மாற்றினார். இதனால் வெறுப்படைந்த எட்டாம் ஹென்றி தன் கோபத்தை அமைச்சர் உல்ஸி மீது காட்டினார். பதவியிலிருந்து அவரை நீக்கி அவரது சொத்துக்களைப் பறிமுதல் செய்து அவரைச் சிறையிலிட்டு, கொலை தண்டனை விதிக்கவும் முடிவுசெய்தார். ஆனால், அதற்கு முன்னரே 1530-ல் உல்ஸி இறந்தார்.

இந்தத் திருமணப் பிரச்னையில் எட்டாம் ஹென்றியின் விருப்பப்படி போப் நடக்காததால் போப்பின் அதிகாரத்தையே ஒழித்து விடவேண்டும் என்ற எண்ணம் அரசர் மனதில் தோன்றியதால் இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்ற இது காரணமாக அமைந்தது. கத்தோலிக்க சமயக் கோட்பாடுகளையோ வழிபடும் முறையையோ, திருச்சபையின் அமைப்பையோ மாற்ற வேண்டும் என்பது எட்டாம் ஹென்றியின் நோக்கமன்று. போப்பின் அதிகாரத்தை விலக்கிவிட்டு அதற்கு மாறாக அரசரின் அதிகாரத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதுதான் ஹென்றியின் குறிக்கோள். ஆகவே, இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்த இயக்கம் தொடக்கத்தில் சமயச் சார்புடையதாக இல்லாமல், அரசியல் சார்புடையதாக இருந்தது. எட்டாம் ஹென்றியின் ஆட்சியில் அவர் இயற்றிய சட்டங்களிலிருந்து இது நன்றாகப் புலனாகும். லூதர், கால்வின் ஆகிய சமயச் சீர்திருத்தவாதிகள் கோட்பாடுகளுக்கு ஒத்தவகையில் இங்கிலாந்தின் திருச்சபையை மாற்றியமைக்க மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளை எட்டாம் ஹென்றி எதிர்த்தார். திருச்சபை ஒரு சுதந்தர நிறுவனமாக இயங்குவதை அரசர் விரும்பவில்லை. ரோமுடன் இருக்கும் தொடர்பைத் துண்டித்துவிட்டுப் போப்பின் ஆதிக்கத்திற்குப் பலமாக அரசரின் ஆதிக்கத்தை ஏற்படுத்தி, திருச்சபையை அரசின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவந்து விட்டால் தம் விருப்பப்படி திருமணப் பிரச்னையைத் தீர்த்துக் கொள்ளமுடியும் என்று எட்டாம் ஹென்றி திட்டமிட்டார். இந்தப் பணிகளையெல்லாம் சட்டத்தின் பாதுகாப்புடன் செய்துவைத்தார். இந்த நோக்கம் நிறைவேற பல சட்டங்கள் இயற்ற பாராளுமன்றம் இவருடன் ஒத்துழைத்தது.

1529-ல்முதல் 1536-வரை கூடி, பல சட்டங்களை இயற்றிய இந்தப் பாராளுமன்றம் சமயச் சீர்திருத்தப் பாராளுமன்றம் என்று வழங்கப்படுகிறது.

சமயச் சீர்திருத்தப் பாராளுமன்றம் போப்பின் ஆதிக்கத்தையும், தலையீட்டையும் ஒழிக்கும் நோக்கத்துடனும், சமயக் குருமார்களிடையே காணப்பட்ட ஊழல்களை அகற்றும் நோக்கத்துடனும் பல சட்டங்களை இயற்றியது. அவற்றுள் சிலவற்றை இங்கு ஆராயலாம். 1529-ல் நிறைவேற்றப்பட்டஒரு சட்டத்தின் மூலம் மதகுருமார்கள் வசூலிக்க வேண்டிய பலவகைக் கட்டணங்கள் நிர்ணயிக்கப்பட்டன. மற்றொரு சட்டத்தின்மூலம் ஒருவர் பல திருச்சபைப் பதவிகளை வகிக்கும் வழக்கம் தடை செய்யப்பட்டது. 1532-ல் மீண்டும் கூடிய பாராளுமன்றம் போப்பின் அதிகாரத்தையும், தலையீட்டையும் ஒழிக்கும் நோக்கத்துடன் 'அன்னேட்டுகள் சட்டத்தை' (Act of Annates) நிறைவேற்றியது. இதன்படி பிஷப்புகள் தங்கள் முதலாண்டு வருமானத்தைப் (இதற்கு 'அன்னேட்' என்று பெயர்) போப் பாண்டவருக்குச் செலுத்தும் வழக்கம் தடைசெய்யப்பட்டது. மேலும் பிஷப்புகளும், ஆர்ச் பிஷப்புகளும் போப்பின் ஆணையின்றியே பதவியை ஏற்கலாம் என்றும் இது கூறியது. 1533-ல் நிறைவேற்றப்பட்ட 'முறையீட்டுச் சட்டம்' (Act of Appeals) இங்கிலாந்தின் சமய நீதிமன்றங்கள் போப்பின் நீதிமன்றத்திற்கு முறையீடுகள் செய்வது தடை செய்யப்பட்டது. 1534-ல் இரண்டாவது முறையீட்டுச் சட்டம், அரசரது அனுமதியின்றித் திருச்சபை எந்த ஆணையையும் பிறப்பிக்கக்கூடாது என்று விதித்தது. 1534-ல் நிறைவேற்றப்பட்ட இரண்டாவது அன்னேட்டுகள் சட்டம் பிஷப்புகள் தேர்ந்தெடுக்கப்படும் முறையையும், அவர்கள் போப்பின் ஆணையின்றியே பதவிஏற்கும் முறையையும் குறிப்பிடுகின்றது. இதே ஆண்டில் 'முதலாவது அரசு வாரிசுரிமைச் சட்டம்' (First Royal Succession Act) இயற்றப்பட்டது. இங்கிலாந்தின் வாரிசுரிமை காதரின் மகள் மேரியிடமிருந்து பறிக்கப்பட்டு, எட்டாம் ஹென்றிக்கும், ஆன்பொலினுக்கும் பிறக்கும் குழந்தைகளுக்கே வாரிசுரிமை உண்டு என்று இச்சட்டம் அறிவித்தது. ஏற்கனவே முறையீட்டுச் சட்டத்தின்படி இங்கிலாந்து திருச்சபை போப்பின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கப் பட்டிருந்தது. 1534-ல் இயற்றப்பட்ட 'ஆதிக்கச் சட்டம்' (Act of Supermacy) இங்கிலாந்தின் மன்னர்தான் இங்கிலாந்து திருச்சபையின் தலைவர் என்று அறிவித்தது. திருச்சபை நிறுவனங்களைப் பார்வையிடவும், சமயக் குருமார்களின் கடமைகள், பணிகள் பற்றி அவ்வப்பொழுது ஆணைகள் பிறப்பிக்கவும் இந்தச்சட்டம்

அரசருக்கு அதிகாரம் அளித்தது. 1536-ல் கிறிஸ்துவ மடாலயங்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது. மத குருமார் களின் தலைவராக இருந்த (Vicar General) 'தாமஸ் கிராம்வெல்' (Thomas Cromwell) என்பவர் கிறிஸ்துவ மடாலயங்களைப் பார்வையிட்டு அவற்றில் மலிந்திருந்த ஊழல்களைப்பற்றி அறிந் திருந்தார். அவருடைய சிபாரிசின்படி, 1536-ல் மடாலயங்களை மூடும் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இதன்படி இருநூறு பவுன்களுக்குக் குறைவான வருமானமுள்ள சிறிய மடாலயங்கள் மூடப்பட்டு, அவற்றின் சொத்துகள் அரசருக்கும், அவரது வாரிசு களுக்கும் சொந்தம் என்று அறிவிக்கப்பட்டது. இதேபோல 1539-ல் மற்றொரு சட்டத்தின் மூலம் எஞ்சியிருந்த பெரிய மடாலயங்களும் மூடப்பட்டு, அவற்றின் சொத்துகள் மன்னரால் எடுத்துக் கொள்ளப்பட்டன.

இவ்வாறு இங்கிலாந்து, திருச்சபையைப் போப்பின் ஆதிக்கத் திலிருந்து விடுவித்து அரசரின் ஆதிக்கத்திற்குட்படுத்திய எட்டாம் ஹென்றி, சமயக் கோட்பாடுகளைப் பொறுத்தவரை கத்தோலிக்க சமயத்துடன் வேறுபாடுகள் ஒன்றுமில்லை என்பதைத் தன் ஆட்சி யின் பிற்பகுதியில் தெளிவுபடுத்தினார். 1539-ல் இயற்றப்பட்ட 'ஆறு கட்டளைச் சட்டம்' (Statute of Six Articles) எட்டாம் ஹென் றிக்கு, கத்தோலிக்க சமயக் கோட்பாடுகளில் இருந்த ஆழ்ந்த நம்பிக்கையை உணர்த்துகின்றது. இந்தச் சட்டம் கத்தோலிக்க கோட்பாடுகளில் முக்கியமான ஆறை வலியுறுத்தி, (1. 'புனிதப் பொருள் மாறும் கொள்கையில் நம்பிக்கை' (Transubstantiation). 2. 'திருவிருந்து வழிபாட்டைக் கை விடாதிருத்தல்' (Communion Service). 3. மத குருமார்கள் துறவற நெறியில் வாழ்தல், 4. இல்லற வாழ்வில் ஈடுபடுவதில்லை என்று உறுதி எடுத்துக் கொள்ளுதல். 5. 'மாஸ்' தொழுகையை நடத்துதல். 6. பாதிரி யாரிடம் பாவங்களைக்கூறி மன்னிப்பு பெறுதல்-) இவற்றில் நம்பிக்கையில்லாதவர்கள் சமயத் துரோகிகள் என்று கருதப்பட்டு தண்டிக்கப்படுவார்கள் என்று அறிவித்தது. 1539-ல் இந்தச் சட்டத்தை மீறியதாக மூன்று பிராடஸ்டெண்டுகள் தண்டிக்கப் பட்டனர். ஆதிக்கச் சட்டத்தை ஏற்றுக் கொள்ளவில்லை என்று குற்றஞ் சாட்டப்பட்டு மூன்று பாதிரிமார்கள் தூக்கிலிடப் பட்டனர்.

## ஆறும் எட்வர்டு (1547-1553)

ஆறும் எட்வர்டு அரியணை ஏறும்பொழுது அவருக்கு வயது ஒன்பது. எனவே, அவருடைய தாய் மாமன் 'சாமர்செட் கோமகன்' என்ற பட்டத்துடன் காப்பாளராகப் பதவிஏற்று அரச

காரியங்களைக் கவனித்து வந்தார். எட்டாம் ஹென்றி காலத்தில் இங்கிலாந்து திருச்சபை, போப்புடன் தொடர்பைத் துண்டித்துக் கொண்டு ஒரு தேசிய திருச்சபையாக இயங்கிவந்தாலும் கோட்பாடுகளைப் பொறுத்தவரை கத்தோலிக்க திருச்சபையாகவே இயங்கி வந்தது. எட்டாம் ஹென்றி இத்துறையில் புதுமைகளைப் புகுத்த விரும்பவில்லை. ஆறும் எட்வர்டு ஆட்சியில் சாமர்செட் கோமகனும், காண்டர்பரியின் ஆர்ச்பிஷப் கிரான்மரும் இங்கிலாந்தில் பிராடஸ்டெண்டு சமயத்தைப் புகுத்தும் முயற்சியில் ஈடுபட்டனர். லூதரையும், கால்வினையும் பின்பற்றுபவர்கள் தங்கள் சமயக் கருத்துகளை இங்கிலாந்தில் பரப்ப அனுமதிக்கப் பட்டனர். இங்கிலாந்து திருச்சபையின் கோட்பாடுகள் பிராடஸ்டெண்டு சமயக் கோட்பாடுகளுடன் ஒத்திருக்கும் வகையில் மாற்றியமைக்கப்பட்டன. 'கத்தோலிக்க வழிபாட்டு நூல்கள்' (Service Books) லத்தீன் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் ஆர்ச்பிஷப் கிரான்மரால் மொழிபெயர்க்கப்பட்டு 1549-ல் 'முதல் பொது வழிபாட்டு நூல்' (First Book of Common Prayer) என வெளியிடப்பட்டது. இங்கிலாந்தில் உள்ள எல்லாக் கிறிஸ்துவ ஆலயங்களும் இந்த வழிபாட்டு நூலைத்தான் பயன்படுத்த வேண்டும் என்று விதிக்கும் ஒரு 'வழிப்பாட்டுச் சட்டம்' (Act of uniformity) 1549-ல் இயற்றப்பட்டது. புனிதப்பொருள் மாறும் தன்மைக் கொள்கை மறுக்கப்பட்டது. ஆலய வழிபாட்டில் மாற்றங்கள் செய்யப் பட்டன. 'மாஸ்' வழிபாடு கைவிடப்பட்டது. ஆலயங்களில் இருந்த விக்கிரகங்களும், படங்களும் அகற்றப்பட்டன. சாமர் செட்கோமகன் சமயத்துறையில் இவ்வாறு புதுமைகளைப் புகுத்தச் செய்த முயற்சிக்கு எதிர்ப்பு தோன்றியது. மேற்கு இங்கிலாந்தில் ஒரு கலவரம் ஏற்பட்டது. பொருளாதாரக் காரணங்களினால் குடியானவர்களும் கிளர்ச்சி செய்தார்கள். இந்தக் குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு வார்விக் பிரபு என்பவர் சாமர்செட் கோமகனைப் பதவியிலிருந்து விலக்கி நார்த்தம்பர்லண்டு கோமகன் என்ற பட்டத்துடன் தாமே ஆட்சியைக் கைப்பற்றினார். பிராடஸ்டெண்டுகளின் செல்வாக்கு இங்கிலாந்தில் வளர்ந்திருப்பதை உணர்ந்த இவர், பிராடஸ்டெண்டுகளின் ஆதரவைப் பெற முயன்றார். 1552-ல் மீண்டும் கிரான்மரால் 'இரண்டாவது பொது வழிபாட்டு நூல்' (Second Book of Common Prayer) வெளியிடப்பட்டது. இதையே எல்லா ஆலயங்களிலும் பயன் படுத்த வேண்டுமென 'மற்றொரு வழிபாட்டுச் சட்டம்' (Second Act of Uniformity) இயற்றப்பட்டது. 'நாற்பத்திரண்டு கோட் பாடுகள்' (42 Articles of religion)மூலம் இங்கிலாந்து திருச்சபையின் நிலை என்ன என்பது விளக்கப்பட்டு வழிபாட்டிலும், கோட்பாடு களிலும் பிராடஸ்டெண்டு சமயம் முழுமையாகப் புகுத்தப்பட்டது.

மேரி அரசி (1553–1558): 1533-ல் ஆறும் எட்வர்டு இறந்தார். கத்தோலிக்க சமயத்தைச் சேர்ந்த மேரி அரியணை ஏறுவதைத் தடுக்க நார்த்தம்பர்லண்டு கோமகன் பல சூழ்ச்சிகள் செய்தார். ஆனால், வெற்றி பெறவில்லை. மேரி பட்டத்திற்கு வந்தவுடன் நார்தம்பர்லண்டு கைது செய்யப்பட்டார். இங்கிலாந்து திருச்சபையின் தலைவி என்ற முறையில் ஆறும் எட்வர்டு ஆட்சியில் சமயத்துறையில் புகுத்தப்பட்ட புதுமைகளை விலக்கி, மீண்டும் இங்கிலாந்து திருச்சபையைக் கத்தோலிக்க திருச்சபையாக மாற்றும் பணியில் ஈடுபட்டார். இங்கிலாந்து திருச்சபையை மீண்டும் போப்பின் ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவர முயற்சித்தார். தனக்குக் கட்டுப்பட்டு நடந்த பாராளுமன்றத்தின் உதவியோடு ஆறும் எட்வர்ட் ஆட்சியில் சமயத்துறையில் இயற்றப்பட்ட சட்டங்கள் அனைத்தையும் அரசி மேரி ரத்து செய்தார். பொது வழிபாட்டு நூலை மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்று இயற்றப்பட்ட சட்டமும் அகற்றப்பட்டது. 'மாஸ்' தொழுகை மீண்டும் புகுத்தப்பட்டது. பல பிராடஸ்டெண்டு பிஷப்புகள் பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். கத்தோலிக்க வாழ்க்கை நெறிமுறைகளை மீறி திருமணம் செய்து கொண்ட சமயக்குருமார்கள் பதவியிலிருந்து அகற்றப்பட்டனர். ஆனால், 'மேல் ஆதிக்கச் சட்டத்தை' (Act of Supermacy) அகற்ற பாராளுமன்றம் மறுத்து விட்டது. சமய துரோகத்திற்கு எதிராக (Heresy) இங்கிலாந்தில் நடைமுறையிலிருந்த, எட்டாம் ஹென்றி காலத்தில் அகற்றப்பட்ட, சட்டங்கள் யாவும் இப்பொழுது புதுப்பிக்கப்பட்டன. எட்டாம் ஹென்றி காலத்தில் செய்யப்பட்ட மாறுதல்கள் பயனற்றுப் போயின. ஆனால், மடாலயங்களிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்ட நிலங்கள், சொத்துகள் அவற்றிற்கு மீண்டும் அளிக்கப்படவில்லை. கத்தோலிக்க சமயத்தை இங்கிலாந்தில் வலுப்படுத்தவும் அந்நிய நாடுகளில் செல்வாக்கைப் பெறவும் மேரி, ஸ்பெயின் அரசர் இரண்டாம் பிலிப்பை மணந்தார். ஆனால், இங்கிலாந்து மக்கள் இதை விரும்பவில்லை. மேலும் இவர் பிராடஸ்டெண்டுகளை ஒழிக்கும் பணியிலும், கத்தோலிக்க சமயத்தைப் புகுத்துவதிலும் மிகவும் தீவிரமாக ஈடுபட்டதால் மக்களுக்கு இவர் மீது வெறுப்பு ஏற்பட்டது. 1558-ல் இவர் இறந்தபொழுது இவரது தங்கையான எலிசபெத் அரியணை ஏறியதை மக்கள் வரவேற்றனர். இவர் பிராடஸ்டெண்டு சமய ஆதரவாளர். எனவே, இவர் ஆட்சியில் மீண்டும் பிராடஸ்டெண்டு சமயம் புத்துயிர் பெறுவதைக் காணலாம்.

முதலாம் எலிசபெத் (1558–1603)

மேரிக்குப்பிறகு பட்டமெய்திய எலிசபெத், சமயத்துறையில் தீவிர வாதத்தை வெறுத்தார். தீவிர பிராடஸ்டெண்டு

கொள்கையைப் பின்பற்றிய ஆறும் எட்வர்டுக்கும் தீவிர கத்தோலிக்க கொள்கையைப் பின்பற்றிய மேரிக்கும் மக்கள் ஆதரவு கிடைக்கவில்லை என்பதை நன்றாக அறிந்திருந்த எலிசபெத் இவ்விரண்டு தீவிர வாதங்களுக்கும் இடைப்பட்ட நிலையிலிருந்து ஒரு சமரசக் கொள்கையைப் பின்பற்ற விரும்பினார். அதன் விளைவுதான் அவரால் இங்கிலாந்தில் திருத்தி அமைக்கப்பட்ட ஆங்கிலிகத் திருச்சபை. இந்தப் புதிய திருச்சபையையும், புதிய சமய அமைப்பையும் பாராளுமன்றத்தின் உதவியோடு சட்டப் பூர்வமாக நிறுவினார். 1554-ல் மேரியின் ஆட்சியில் கத்தோலிக்க சமயத்தைப் புகுத்துவதற்காக இயற்றப்பட்ட சட்டங்கள், 1559-ல் ஒரு சட்டம் மூலம் ரத்து செய்யப்பட்டன. இதே ஆண்டில் ஒரு ‘மேல் ஆதிக்கச் சட்டம்’ (Act of Supermacy) இயற்றப்பட்டு இங்கிலாந்து திருச்சபை போப்பின் அதிகாரத்தி லிருந்து விடுவிக்கப்பட்டு அரசியாரே சமயத் துறைக்கும் தலைவர் என்ற நிலை வலியுறுத்தப்பட்டது. ஒரு ‘வழிபாட்டுச் சட்டம்’ (Act of Uniformity) இயற்றப்பட்டு ஆறும் எட்வர்டு காலத்தில் இயற்றப்பட்ட இரண்டாவது வழிபாட்டு நூலில் காணப்பட்ட வழிபாட்டு முறையை எல்லா ஆலயங்களிலும் பின்பற்றவேண்டும் என்று விதிக்கப்பட்டது. ஆறும் எட்வர்ட் காலத்தில் தொகுக்கப் பட்ட 42 கோட்பாடுகளில் 39 கோட்பாடுகள் இப்பொழுது மீண்டும் வலியுறுத்தப்பட்டன.

இவ்வாறு எலிசபெத் அரசியார் பிராடஸ்டெண்டு சமயத்தை மீண்டும் இங்கிலாந்தில் புகுத்தினார். ஆனால், தீவிரக் கொள்கை களையும், தீவிர நடவடிக்கைகளையும் தவிர்த்த காரணத்தினால் ஐரோப்பாவில் நடைபெற்றதைப் போல இங்கிலாந்தில் சமயச் சண்டைகள் நடைபெறாமல் தடுக்கப்பட்டன. ஆங்கிலேயர்கள் எல்லோரும் இச் சமயத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. சிலர் கத்தோலிக்க சமயத்தைப் பின்பற்றினார்கள். மற்றும் சிலர் எலிசபெத்தின் பிராடஸ்டெண்டு கொள்கைகளைவிட தீவிரமான கால்வினியக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டுமென்று விரும் பினார்கள். இவர்கள்தான் ‘பியூரிட்டன்கள்’ (Puritans) என்று அழைக்கப்பட்டனர். ஆனால், பெரும்பான்மையான மக்கள் எலிசபெத் நிறுவிய ஆங்கிலிகத் திருச்சபை அமைப்பை ஏற்றுக் கொண்டனர்.

# 7. கத்தோலிக்க மதச்சீர்திருத்த இயக்கம் அல்லது சமயச்சீர்திருத்த மறுப்பு இயக்கம் (Counter Reformation)

இடைக்காலத்தின் இறுதியில் கிறிஸ்துவத் திருச்சபையில் மலிந்துகிடந்த ஊழல்களும், சீர்கேடுகளும் மக்கள் மனதில் அதிருப்தியை ஏற்படுத்திச் சமயச்சீர்திருத்த இயக்கம் (பிராடஸ்டெண்டு இயக்கம்) தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது. திருச்சபையின் சீர்கேடுகளை அகற்றி, திருச்சபையைப் புனிதமாக்கவேண்டும், தூய்மைப்படுத்த வேண்டும் என்ற எண்ணங்கொண்ட குருமார்கள் திருச்சபையினுள்ளேயே பலர் இருந்தனர். திருச்சபை சீர்திருத்தப் படவேண்டியதன் அவசியம்பற்றிக் கருத்து ஒற்றுமை இருந்தபோதிலும் இக்குறிக்கோளை அடைய என்ன வழிமுறைகள் கையாளப்பட வேண்டும் என்பதுபற்றிக் கருத்து வேறுபாடுகள் இருந்தன. இறுதியில், பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் கத்தோலிக்க சமயத்தைத் திருத்தவேண்டியதன் அவசியத்தையும், அவசரத்தையும் உணர்ந்து கத்தோலிக்க சமயத்தவர்களே இதற்கான முயற்சிகளில் ஈடுபட்டுக் கத்தோலிக்க திருச்சபையின் புனிதத் தன்மையையும், தூய்மையையும் மீட்கும் பணியைத் தொடங்கினார்கள். இந்த முயற்சிதான் 'கத்தோலிக்க மதச் சீர்திருத்த இயக்கம்' (Counter Reformation) என்று வழங்கப்படுகிறது. ஒருபுறம், வளரும் பிராடஸ்டெண்டு சமயத்தை நசுக்கவேண்டும், மற்றொருபுறம் கத்தோலிக்க சமயத்திலுள்ள குறைபாடுகளையும், ஊழல்களையும் களைந்து அதை வலுப்படுத்தவேண்டும் என்பது இந்த இயக்கத்தின் நோக்கமாகும்.

திருச்சபையைத் திருத்தவேண்டிய அவசியம் பதினைந்தாம் நூற்றாண்டிலேயே உணரப்பட்டது. ஆறாம் அலெக்சாண்டர், இரண்டாம் ஜூலியஸ், பத்தாம் லியோ போன்ற போப்புகளின் ஆடம்பர வாழ்க்கை திருச்சபைக்கு இழிவை உண்டாக்கியது. சமயக் குருமார்கள் வாழ்க்கையிலும் ஆன்மீகத் தூய்மை குறைந்து

சீர்கேடுகள் மலிந்தன. இவையெல்லாம் போப்பாண்டவரின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டு, சீர்திருத்தத்தின் அவசியம் எடுத்துக் கூறப்பட்டபொழுது போப்புகள் இதை அசட்டை செய்தார்கள்[1]. தக்கதருணத்தில் தகுந்த நடவடிக்கை எடுக்கப் பெருத காரணத்திஞல், பிராடஸ்டெண்டு இயக்கம் தோன்றி கிறிஸ்துவ சமயத்தில் பிளவை ஏற்படுத்தியது. ஜெர்மனியின் பெரும்பகுதி கத்தோலிக்க சமயத்திலிருந்து விலகிவிட்டது. ஃபிரான்ஸ், ஹாலந்து நாடுகளில் பிராடஸ்டெண்டு கருத்துகள் வெகு வேகமாகப் பரவிக்கொண்டிருந்தன. இங்கிலாந்தும் கத்தோலிக்கத் திருச்சபையுடன் தன் உறவைத் துண்டித்துக்கொண்டுவிட்டது. டென்மார்க், நார்வே, ஸ்வீடன் நாடுகளில் லூதரின் கருத்துகள் செல்வாக்கு பெற்றன. இந்தச் சூழ்நிலையில் பதினும் நூற்ருண்டின் பிற்பகுதியில் போப் பதவியை வகித்த மூன்ரும் பால் (Paul III, 1534–1549), நான்காம் பால் (Paul IV, 1555–1559), நான்காம் பயஸ் (Pius IV, 1559–1565) போன்றவர்கள் இனியும் இந்தப் போக்கை வளரவிடக் கூடாது; வளரவிட்டால் கத்தோலிக்க சமயமே அழிந்துவிடும் என்பதை உணர்ந்து சீர்திருத்த பணியினை மேற்கொள்ள முடிவுசெய்தனர். இவ்வாறு திருச்சபையின் சீர்திருத்தம், திருச்சபையின் முயற்சியிஞலேயே :தொடங்கப்பட்டது.

திருச்சபையின் சீர்கேடுகளைக் களைந்தெறிய மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளின் வரலாற்றை நோக்குமிடத்து, இம் முயற்சி ஸ்பெயினில் ஃபர்டிஞண்ட் இசபெல்லா ஆட்சியிலேயே தொடங்கியது. இந்தப்பணியை இவர்கள் 'கார்டினல் ஸிமேனெஸ்' (Ximenes) என்பவரிடம் ஒப்படைத்தனர். இவர் ஸ்பானிய திருச்சபைகளின் ஊழல்களைப் போக்கி, ஸ்பானிய மதகுருமார்கள் வாழ்க்கையைத் திருத்திஞர். பதினும் நூற்ருண்டின் தொடக்கத்தில் கத்தோலிக்க மதத்தைச் சீர்திருத்தும் நோக்கத்துடன் ரோம் நகரத்துச் சமயக் குருமார்கள் சிலர் 'தீடைன் சங்கம்' (Theatine order) என்ற சங்கத்தை நிறுவினர். சமயக் குருமார்கள் தூய வாழ்க்கை வாழ வேண்டும், உலக இன்பங்களில் திளைத்திருக்கக் கூடாது போன்ற கருத்துகளை இச்சங்கத்தார் வலியுறுத்தினர். இதேபோல 'காபுசின் (Capuchins) சங்கம் என்ற மற்ருெரு சங்கமும் நிறுவப்பட்டது.

[1] இந்த நிலையை மாற்றித் திருச்சபையைத் திருத்துவதற்கான முயற்சிகள் திருச்சபையின் பொதுக் குழுக்கள்மூலம் மேற்கொள்ளப்பட்டும் 1414-18-ல் கான்ஸ்டன்ஸ் என்ற இடத்திலும், 1431–1449-ல் பேசல் என்ற இடத்திலும் (Councils of Constance and Basel) இரண்டு முறை கூடிய பொதுக்குழு, போப்புகளின் எதிர்ப்பு காரணமாக ஒன்றையும் சாதிக்க முடியவில்லை; ஊழல்களும் சீர்கேடுகளும் மேலும் வளர்ந்துகொண்டே வந்தன.

இச்சங்கம் பாமர மக்களிடையே மிக்க செல்வாக்கு பெற்றுக் கத்தோலிக்க திருச்சபையின் செல்வாக்கு வளர மிக்க துணை புரிந்தது. ஆனால், இவற்றையெல்லாம்விட முக்கியமானதும், புகழ்பெற்றதுமான ஒரு நிறுவனம் இயேசு சபையாகும் (Society of Jesus). இந்த நிறுவனம் கத்தோலிக்க திருச்சபை இழந்த செல்வாக்கை மீண்டும் பெறுவதற்குப் பேருதவி புரிந்தது.

## கத்தோலிக்க மதச்சீர்திருத்தம் ஏற்பட உதவியாக இருந்த அமைப்புகள் (Agencies of the Counter Reformation)

1. இயேசு சபை (Society of Jesus)

கத்தோலிக்க சமயத்தின் மறுமலர்ச்சிக்கும், கத்தோலிக்க திருச்சபை வலுவடைவதற்கும் முக்கிய காரணமாக இருந்தது இயேசு சபை என்னும் அமைப்பாகும். இதைச் சேர்ந்தவர்கள் ஜெஸுட்டுகள் (JeSuits) என்றழைக்கப்பட்டனர். இதை நிறுவியவர் 'இக்னேஷியஸ் லயோலே' (Ignatius Loyola, 1491-1556) என்பவராவர். ஸ்பானியப் பிரபுக் குடும்பத்தைச் சேர்ந்த இவர், ஸ்பெயின் இராணுவத்தில் பணி ஏற்று, ஐந்தாம் சார்லஸ் மன்னர் காலத்தில் ஃபிரான்சுடன் நடந்த போர்களில் ஈடுபட்டிருக்கிறார். 1521-ல் நடந்த ஒரு போரில் காயமுற்று மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவந்தபொழுது இயேசு கிறிஸ்துவைப்பற்றியும், மற்ற கிறிஸ்துவப் புனிதவான்களைப்பற்றியும் (Saints) பல நூல்கள் மூலம் படித்து அறிந்துகொள்ள வாய்ப்பு கிடைத்தது. இதன் பிறகு இவருடைய வாழ்க்கையில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. திருச்சபையின் பணிக்காகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டார். கிறிஸ்துவ சமயத் தத்துவத்தைப் பயிலுவதற்காகப் பாரிஸ் பல்கலைக் கழகம் சென்றார். அங்கு இவரைப்போலவே கிறிஸ்துவ திருச்சபைக்குப் பணிசெய்வதை இலட்சியமாகக்கொண்ட மற்றும் சிலர் அவருடன் நட்புக்கொண்டனர். அவர்கள் எல்லோரும் ஜெருசலம் நகர் செல்வதென்றும், துருக்கியப் பேரரசில் தாமும், கிறிஸ்துவர்களிடையே தொண்டுபுரிவதென்றும் முடிவுசெய்தனர். ஆனால், கிழக்கு ஐரோப்பா துருக்கியர் ஆதிக்கத்திலிருந்ததால், இவர்களால் வெனிஸ் நகரத்தைத் தாண்டிச் செல்லமுடியவில்லை. கத்தோலிக்க சமயத்தைக் காப்பதற்கெனப் போராடுவதற்காக உறுதியும், கட்டுப்பாடும்கொண்ட மனிதர்களைத் திரட்டி ஒரு சங்கம் அமைப்பது என்று அவர்கள் முடிவுசெய்தார்கள். இவ்வாறு துவக்கப்பட்ட சங்கம்தான் பிறகு இயேசு சங்கம் என்ற பெயருடன் புகழ்பெற்று விளங்கியது. இச் சங்கத்திற்கு ஆதரவு

பெறுவதற்காக இக்னேஷியஸ் லயோலாவும், அவருடைய நண்பர்களும் போப்பைக் காண ரோம் நகரம் சென்றார்கள். 1533-ல் தொடங்கப்பட்ட இந்தச் சங்கத்தை 1540-ல்தான் போப் மூன்றும் பால் ஓர் ஆணையின்மூலம் அங்கீகரித்தார். லயோலா இராணுவ தளபதியாக இருந்தவர். எனவே, அவருடைய இந்த அமைப்பிலும் இராணுவமுறையைக் கையாண்டார். இதனுடைய தலைமையகம் போப் வசிக்கும் ரோம் நகரிலேயே அமைக்கப்பட்டது. இதன் தலைவர் 'தளபதி' (General) என்று அழைக்கப்பட்டார். ஏழ்மை, துறவு, பணிவு ஆகிய மூன்று விரதங்களைத் தவிர, இச் சங்கத்தினர் நான்காவதாக ஒரு விரதத்தையும் மேற்கொண்டனர். போப் ஆண்டவரிடம் விசுவாசத்துடன் இருத்தல், அவருடைய ஆணைகளுக்குக் கீழ்ப்படிதல், என்பதே நான்காவது விரதமாகும். இதன் உறுப்பினர்கள் கடுமையான சட்டதிட்டங்களுக்கு உட்பட்டும், கட்டுப்பாடுடனும் வாழ்ந்தனர். இந்தச் சங்கத்தில் சேர்ந்தவுடன் முதலாவதாக அறிந்துகொள்ளவேண்டியது மேலிடத்து ஆணைகளுக்குக் கீழ்ப்படிதலாகும். இவர்களுள் அவரவர் தகுதிக்கும், திறமைக்கும் ஏற்ப வெவ்வேறு வகையான பணிகள் ஒப்படைக்கப்பட்டன. அவர்கள் தங்களுக்கென்று ஒரு தனிப்பட்ட உடையை அணிந்துகொள்ளவில்லை. தீவிரமான துறவறத்தை அவர்கள் மேற்கொள்ளவில்லை. குறுகிய நாட்டுப் பற்றோ, தேசிய உணர்வோ அவர்களிடையே வளர்வது தடுக்கப்பட்டது. ஏனெனில், அவர்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் திருச்சபையின் தொண்டுதான் அவர்களுடைய முக்கியப் பணி.

இந்தச் சபை மூன்று துறைகளில் அரும்பணியாற்றியது

(அ) சமயப் பிரசாரம்: உலகம் முழுவதும் குறிப்பாக, பிராடஸ்டெண்டு நாடுகளில், கத்தோலிக்க சமயப் பிரசாரம் செய்வதில் இச் சபையினர் ஈடுபட்டனர். இந்தத் துறையில் அவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் வெற்றிபெற்றதுபோல, வேறு எந்தத் துறையிலும் அவர்கள் வெற்றிபெறவில்லை. கால்வீனியம் பரவியிருந்த போலந்து நாடு மீண்டும் கத்தோலிக்க சமயத்திற்கு மாறியதும், பவேரியா, தெற்கு நெதர்லாந்து நாடுகளில் கத்தோலிக்க சமயம் வலுப்பெற்றதும், அயர்லாந்தில் கத்தோலிக்க சமயம் பாதுகாக்கப்பட்டதும் இந்தியா, சீனா, வடஅமெரிக்காவின் பழங்குடிமக்கள் வாழ்ந்த பகுதியில் சமயப் பிரசாரம் மூலம் கத்தோலிக்க சமயம் வளர்ந்ததும் அவர்களுடைய சமயப் பிரசாரப் பணியின் விளைவாகத்தான் என்பதை மறுக்கமுடியாது. 16ஆம் நூற்றாண்டின் இறுதியில், பிராடஸ்டெண்டு சமயத்தின் வளர்ச்சி

தடுத்து நிறுத்தப்பட்டு, கத்தோலிக்க சமயம் வளர்வதற்கு 'ஜெஸ்யூட்டுகள் இயக்கம்' முக்கிய காரணமாக இருந்தது.

(ஆ) ஆன்மீக வழிகாட்டிகள்: மக்களிடையே சமய உரைகள் ஆற்றி, மக்களை நல்வழிப்படுத்தும் பணியில் இச் சபை ஆர்வம் காட்டியது. தங்கள் அறிவுக் கூர்மையினாலும், தாங்கள்பெற்ற பிரத்தியேகப் பயிற்சியினாலும் அவர்கள் கிறிஸ்துவ ஆலயங்களில் சமய உரைகள் ஆற்றி மக்களை நல்வழிப்படுத்தினர். சமூகத்தின் ஆன்மீக வளர்ச்சிக்கு அவர்கள் பணி பேருதவியாக இருந்தது.

(இ) கல்வி: கல்வித்துறையில் அவர்கள் ஆற்றிய தொண்டு மகத்தானது. முதலில் ஐரோப்பாவிலும், பிறகு உலகெங்கிலும் அவர்கள் கல்விபரப்பும் பணியை மேற்கொண்டார்கள். பல கல்விக்கூடங்களும், பல்கலைக் கழகங்களும் இச் சபையினரால் நிறுவப்பட்டன. கல்வியைப் பரப்புவதில் அவர்கள் காட்டிய ஆர்வம், அவர்களுடைய விடாமுயற்சி, கடின உழைப்பு ஆகியவை காரணமாக அவர்கள் இத்துறையில் பெரும்புகழ் அடைந்தார்கள். அவர்கள் பணி ஈடு இணையற்றதாக விளங்கியது. கல்விப் பணியின் மூலம், அவர்கள் வளரும் தலைமுறையின்மீது மிக்க செல்வாக்கு பெற்றிருந்தார்கள். 17ஆம் நூற்றாண்டில் இத்தாலி, ஃபிரான்ஸ், ஸ்பானிய நெதர்லாந்து, கத்தோலிக்க ஜெர்மனி ஆகிய நாடுகளில் அவர்களால் நிறுவப்பட்ட கல்விக்கூடங்கள் மிக்க புகழ் வாய்ந்தவையாக விளங்கின. போர்ச்சுகல், ஸ்பெயின் போன்ற நாடுகளில் கல்வித் துறையை அவர்கள் தங்கள் ஏகபோக உரிமையாக ஆக்கிக்கொண்டுள்ளனர்.

## 2. டிரெண்ட் கவுன்சில் (Council of Trent 1545–65)

திருச்சபையில் சிக்கலான பிரச்னைகள் எழும் பொழுதெல்லாம் அவற்றிற்குத் தீர்வு காண்பதற்குக் கார்டினல்கள், ஆர்ச் பிஷப்புகள், பிஷப்புகள், மற்ற சமயப் பெரியார்களைக் கொண்ட திருச்சபையின் பொதுக் குழுவைக்கூட்டி ஆலோசிப்பது கிறிஸ்துவ உலகின் வழக்கமாக இருந்தது. பிராடஸ்டெண்டு சமயம் தோன்றியவுடன் திருச்சபையில் ஏற்பட்ட பிளவை நீக்கப் பொதுக்குழு ஒன்றைக் கூட்டவேண்டும் என்று கருதப்பட்டது. பேரரசர் ஐந்தாம் சார்லசும் இந்த முயற்சிக்கு ஆதரவு அளித்தார். அவருடைய தூண்டுதலின் பேரில் போப் மூன்றாம் பால் 1542-ல் டிரெண்ட் நகரில் திருச்சபையின் பொதுக்குழு ஒன்றைக் கூட்டினார். இந்தக் கூட்டம் மீண்டும் மீண்டும் ஒத்திவைக்கப் பட்டு, 1562 வரையில் பயனுள்ள ஒரு செயலையும் சாதிக்கவில்லை,

இறுதியில் 1562-ல் போப் 'நான்காம் பயஸ்' (Pius IV, 1559-1566) டிரெண்ட் கவுன்சிலைக் கூட்டினார். இந்தக் கூட்டத்தில்தான் கத்தோலிக்க சமயத்தைப் பாதுகாக்க உருப்படியான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. லூதரைப் பின்பற்றியவர்களுக்கும், போப்பாண்டவருக்குமிடையே சமரசத்தை ஏற்படுத்த வேண்டுமென்பது ஐந்தாம் சார்லசின் நோக்கம். ஆனால், பலமுறை கூடிய டிரெண்ட் கவுன்சில் இதை ஏற்றுக்கொள்ளவில்லை. இறுதியில் 1562-ல் கூட்டப்பட்ட குழு சமரச முயற்சியைக் கைவிட்டு, போப்பாண்டவரின் தலைமையில் கத்தோலிக்க திருச்சபையின் அதிகாரத்தைப் பலப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டது. கத்தோலிக்க திருச்சபையின் ஊழல்களை நீக்கி, அதைச் சீர் திருத்தும் நடவடிக்கைகள் இந்தப் பொதுக் குழுவினால் மேற்கொள்ளப்பட்டன.

முதலில் திருச்சபையின் சீர்கேடுகளையும், சமயக் குருமார்களின் வாழ்க்கையில் காணப்பட்ட ஊழல்களையும் அகற்றும் பணி மேற்கொள்ளப்பட்டது. திருச்சபைப் பதவிகளை விற்றல், சமயக் குருமார்கள் சமயப்பணிகளை விடுத்து உலக வாழ்க்கையில் ஈடுபடுதல், பிஷப்புகளும், பாதிரிகளும் தம் சமயப் பொறுப்புகளை வேறொருவரிடம் ஒப்படைத்துவிட்டு வெளியூர்களில் வசித்தல் போன்ற தீய பழக்கங்கள் தடை செய்யப்பட்டன. சமயக் குருமார்கள் ஆன்மீகப் பணியில் தம் முழுக்கவனத்தையும் செலுத்தவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது. பாதிரிகளுக்குச் சமய அறிவு புகட்டுவதற்கும், அவர்களுடைய பணியில் அவர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கும் சமயப்பள்ளிகள் துவக்கப்பட்டன. பாவமன்னிப்புச் சீட்டு விலைக்கு விற்கும் பழக்கம் தடை செய்யப்பட்டது.

கோட்பாடுகளைப் பொறுத்தவரை டிரெண்ட் கவுன்சில் பிராடஸ்டெண்டு கோட்பாடுகள் யாவற்றையும் மறுத்து, பதின்மூன்றாம் நூற்றாண்டில் 'தாமஸ் அக்வினாஸ்' (Thomas Aquinas) போன்றவர்களால் விளக்கப்பட்ட கத்தோலிக்க சமயக் கொள்கைகளை வலியுறுத்தியது. கிறிஸ்துவ மரபுகளும், விவிலிய நூலும் கிறிஸ்துவ சமயத்தின் ஆதாரம் என்றும், லத்தீன் மொழியிலான 'விவிலிய நூலே' (Vulgate) ஆதாரப் பூர்வமானது என்றும் விவிலிய நூலுக்கு விளக்கம் கூறும் அதிகாரம் திருச்சபைக்கே உண்டு என்றும் இக்கூட்டம் முடிவு செய்தது. 'தெய்வ நம்பிக்கை மூலம் மட்டுமே வீட்டுப்பேற்றை அடையமுடியும்' (doctrine of justification by Faith) கடவுள் அருள், மோட்சத்தை அடைய இன்றியமையாதது போன்ற பிராடஸ்டெண்டு கொள்

கைகளை இந்தக்கூட்டம் நிராகரித்தது. கத்தோலிக்க சமயத்தினுல் ஏற்றுக் கொள்ளப்பட்ட 'ஏழு புனிதச் சடங்குகளின்' (Seven Sacraments) இன்றியமையாமை, 'மாஸ்' (Mass) சடங்கின் புனிதத்தன்மை, விக்கிரக வழிபாட்டின் அவசியம், பாவ மன்னிப்புச் சீட்டின் முக்கியத்துவம் இவையாவும் வலியுறுத்தப் பட்டன. ஆனுல், இவற்றின் நடைமுறையில் புகுந்துவிட்ட சில சீர்கேடுகள் களைந்து எறியப்பட்டன. மத விஷயங்களில் பொதுக் குழு, போப் இவர்களில் யார் அதிகாரம் மேலானது என்ற பிரச்னை போப்பிற்கு ஆதரவாகத் தீர்க்கப்பட்டது. கிறிஸ்துவர்கள் நம்பிக்கைகள், திருச்சபையின் நிர்வாகம் இவற்றைப் பொறுத்தவரை போப்பின் வரம்புகடந்த அதிகாரம் இந்தக் குழுவினுல் ஏற்றுக்கொள்ளப்பட்டது. டிரெண்ட் கவுன்சில் மேற்கொண்ட நடவடிக்கைகளின் விளைவாக, கத்தோலிக்க சமயத்தினரிடையே நிலவிய, கோட்பாடுகள் பற்றிய கருத்து வேறுபாடுகள் மறைந்து அவர்களுடைய சமயக் கருத்துகள் தெளிவடைந்து திட்டவட்டமாக அறிவிக்கப்பட்டன. சமயக் குருமார்களிடையே காணப்பட்ட சீர்கேடுகள் அகற்றப்பட்டன. திருச்சபையின் நிர்வாக அமைப்பு சீர்படுத்தப்பட்டு வலுப்பெற்றது. கிறிஸ்துவ உலகம் மீண்டும் ஒன்றுபடுவதற்கு இது வழிகோலவில்லை என்ருலும், சீர்திருத்தப்பட்ட கத்தோலிக்க சமயம் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் பணி எளிதாயிற்று.

### 3. இன்குசிஷன் (Inquisition)

திருச்சபையின் ஊழல்களைக் கண்டிக்கும் பணி இடைக் காலத்திலேயே சில தனிப்பட்ட மனிதர்களாலும், பலர் ஒன்றுகூடி ஓர் இயக்கமாகவும் மேற்கொள்ளப்பட்டது. இவர்கள் சமயத் துரோகிகள் என்று கருதப்பட்டுப் போப்பினுலும், அரசனுலும் தண்டிக்கப்பட்டனர். பதின்மூன்ரும் நூற்ருண்டின் தொடக்கத்தில் ஃபிரான்சின் தென்பகுதியில் பரவிய 'ஆல்பிஜென்சியன்' Albigensian) இயக்கம் இவற்றுள் குறிப்பிடத்தக்கது. இந்த இயக்கத்தை ஒடுக்கும் நோக்கத்துடன் 1208-ல் போப் 'மூன்ரும் இன்னஸெண்ட்' (Innocent III) இவர்களுடைய சமயத்துரோகச் செயல்களை விசாரித்துத் தண்டிப்பதற்காக, இன்குசிஷன் என்ற சிறப்பு மன்றம் ஒன்றை நிறுவினுர். ஆல்பிஜென்சியன் இயக்கம் ஒடுக்கப்பட்ட பிறகும்கூட சமயத் துரோகச் செயல்களை ஒடுக்கும் நோக்கத்துடன் இம்மன்றம் தொடர்ந்து செயல்பட்டு வந்தது. பதினைந்தாம் நூற்ருண்டில் மனிதாபிமான இயக்கம் பரவியதன் விளைவாகச் சமயத்துறையில் பலாத்கார முறைகளுக்கு மதிப்பு இல்லாமல் போகவே இன்குசிஷன் மன்றத்தின் அதிகாரமும்

குறையத் தலைப்பட்டது. ஃபர்டிநாண்ட்—இசபெல்லா ஆட்சியில் ஸ்பெயினில் யூதர்கள், மூர்களினால் தொல்லைகள் ஏற்பட்ட பொழுது இந்த மன்றத்திற்குப் புத்துயிர் அளிக்க முயற்சி செய்யப் பட்டது. 1478-ல் போப் 'நான்காம் சிக்ஸ்டஸ்' (Sixtus IV) ஓர் ஆணையின்மூலம் காஸ்டில் அரசில் இந்த மன்றத்தை ஏற்படுத்த அனுமதி அளித்தார். இதுதான் ஐரோப்பிய வரலாற்றில் ஸ்பானிஷ் இன்குசிஷன் என்ற பெயரைப் பெற்றது. ஸ்பானிய அரசர்களின் அதிகாரத்திற்குட்பட்டுச் செயல்பட்டுவந்த இந்த மன்றம் ஸ்பானிய அரசர்களின் அதிகாரம் வளருவதற்கு ஒரு முக்கிய காரணமாக இருந்தது. ஸ்பெயினிலும், அதனைச்சார்ந்த அரசுகளிலும் இந்த நீதிமன்றம் தீவிரமாகச் செயல்பட்டு பிராடஸ் டெண்டு சமயம் பரவுவதைத் தடுத்தது.

சமயத்துரோகச் செயல்களை ஒடுக்கும் பணியினை வெற்றி கரமாகச் செய்துவந்த இந்த ஸ்பானிய இன்குசிஷன் மாதிரியே போப் 'மூன்றும் பால்' (Paul III) 1542-ல் கத்தோலிக்க சமயத்தின் பாதுகாப்பிற்காக ஓர் இன்குசிஷன் மன்றத்தை நிறுவினர். இது ஐரோப்பிய வரலாற்றில் 'போப்பின் இன்கு சிஷன்' (Papal Inquisition) என்று பெயர் பெற்றது. ஆறு கார்டினல்களைக் கொண்ட (பிறகு பன்னிரண்டாக உயர்த்தப் பட்டது) ஒரு குழு ரோம் நகரில் அமைக்கப்பட்டு, மதத் துரோகக் குற்றங்கள் யாவற்றையும் விசாரித்துத் தண்டனை அளிக்கும் அதிகாரமும் இதற்கு வழங்கப்பட்டது. இதனுடைய அதிகார வரம்பிற்குட்பட்டு, ஐரோப்பிய நாடுகளில் இதனுடைய கிளை மன்றங்கள் அமைக்கத் திட்டமிடப்பட்டது. ஆனால், ஸ்பெயினும் மற்ற பல கத்தோலிக்க நாடுகளும் ரோமானிய இன்குசிஷன் மன்றத்தின் கிளைகள் தங்கள் நாடுகளில் அமைக்கப் படுவதை வரவேற்கவில்லை. சமயத்துரோகச் செயல்களை ஒடுக்கு வதில் ஒவ்வொரு நாட்டு அரசிற்கும் அதிகாரம் இருக்கிறது என்றும், போப்பின் குறுக்கீடு தேவை இல்லை என்றும், இவ்வாறு போப்பின் அதிகாரத்தை ஒப்புக்கொள்ளுவது தேசியத்திற்கு முரண்பட்டது என்றும் இந்த நாடுகள் கருதின. எனவே, இத்தாலியைத் தவிர வேறு எந்த ஐரோப்பிய நாட்டிலும் போப்பின் இன்குசிஷன் மன்றம் செல்வாக்கு பெறவில்லை.

இன்குசிஷன் மன்றத்தின் நடைமுறையில் பல அநீதிகளும், கொடுமைகளும் இழைக்கப்பட்டன. சாட்சியம் பெறுவதற்குச் சாட்சிகள் சித்திரவதைக்கு உள்ளாக்கப்பட்டனர். குற்றம் புரிந்த வனுக்கு எதிராகச் சாட்சி கூறுபவர்களை விசாரிக்கும் உரிமைகூட குற்றம் புரிந்தவனுக்கு அளிக்கப்படவில்லை. சமயத் துரோகிகள்

என்று நிரூபிக்கப்பட்டவர்களுக்கு மிகவும் கடுமையான, அநாகரிக மான தண்டனைகள் விதிக்கப்பட்டன. இந்த மன்றம் பத்திரிகைச் சுதந்திரத்தில்கூட தலையிட்டு, பத்திரிகைகள் தணிக்கைக் குள்ளாக்கப்பட்டன.

4. 'இன்டெக்ஸ்' (Index) என்னும் தடை செய்யப்பட்ட நூல்கள் பட்டியல்

டிரெண்ட் கவுன்சிலின் ஆணைக்கிணங்க போப் ஒரு குழுவை அமைத்துக் கத்தோலிக்க சமயத்திற்கு விரோதமான கருத்துகளைக் கொண்ட நூல்களின் பட்டியல் ஒன்றைத் தயார் செய்தார். இந்த நூல்கள் தடை செய்யப்பட்டன. இந்தப் பட்டியல்தான் 'இன்டெக்ஸ்' (Index) என்று அழைக்கப்படுகிறது (Index Libroum Prohibitorum) இந்தக்குழு முதல் பட்டியலை 1564-ல் வெளியிட்டது. இந்தப்பட்டியல் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. முதல் பிரிவில் சமயத்துரோகிகள் என்று கருதப்படுபவர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருந்தன. இரண்டாவது பிரிவில் தடைசெய்யப் பட்ட நூல்களில் பட்டியல் கொடுக்கப்பட்டிருந்தது. மூன்றுவது பிரிவில் சில நூல்களில் காணப்பட்ட ஆட்சேபகரமான பகுதிகள் மட்டும் குறிப்பிடப்பட்டு அவை தடை செய்யப்பட்டன. இத்தாலி போன்ற நாடுகளில் இந்த முறை தீவிரமாகவும், கண்டிப் புடனும் செயல்படுத்தப்பட்டது. எங்கெல்லாம் இது செயல் படுத்தப்பட்டதோ அங்கெல்லாம் அறிவு வளர்ச்சி தடைப்பட்டது என்பதை மறுக்கமுடியாது. ஆனல், பல கத்தோலிக்க நாடுகள் இதை அமுல்படுத்த மறுத்துவிட்டன.[1]

## கத்தோலிக்க சீர்திருத்த இயக்கத்தின் விளைவுகள்

1. கத்தோலிக்க திருச்சபையின் அதிகாரம் வலுப்படுத்தப் பட்டது. பழைய சீர்கேடுகள் அகற்றப்பட்டன. கத்தோலிக்க பழைய மரபு நிலைநாட்டப்பட்டது. கத்தோலிக்க சமயத்தின் கோட்பாடுகள் தெளிவாகவும், திட்டவட்டமாகவும் விளக்கப் பட்டன. இவ்வாறு தற்காலத்திய ரோமன் கத்தோலிக்க திருச் சபை பிறந்தது.

[1] Wherever as in Italy the Index became effective it must have contributed to the darkening of the intellectual skies. But many catholic countries dobutless to the advantage of free Play of ieads refused to enforce it and even a learned jesuit was found, who, a white crow in a black flock significantly hinted that the best way to discredit bad books was to write better ones (Ferdinand Schevill—A History of Europe page 139)

2. திருச்சபையின் மீது போப் பெற்றிருந்த அதிகாரம் உறுதிப்படுத்தப்பட்டது. கிறிஸ்துவ சமயக் கோட்பாடுகளை எடுத்துக்கூறும் உரிமையும், அவைகளுக்கு விளக்கங்கள் கொடுக்கும் அதிகாரமும் போப்பிற்கு உண்டு என்பது வலியுறுத்தப்பட்டது. போப், கிறிஸ்துவின் பிரதிநிதி என்ற நிலை ஏற்றுக் கொள்ளப் பட்டு, ஜெசூட்டுகளும், இன்குசிஷன் மன்றமும் அவர் அதிகாரம் வலுப்பெற உதவின.

3. கத்தோலிக்க திருச்சபை ஒரு புது உணர்வினால் ஊக்கு விக்கப்பட்டு, போப்புகள் அரசியலிலும், ஆடம்பர வாழ்க்கை யிலும் ஈடுபடுவதை விடுத்து, திருச்சபைச் சீர்கேடுகளை அகற்றும் சீர்திருத்தப்பணியில் அக்கறை காட்டினர்.

4. ஜெசூட்டுகளின் நிறுவனங்கள் தோன்றியதன் விளைவாக அறிவு வளர்ச்சி ஊக்குவிக்கப்பட்டது.

5. ஸ்பெயினில் கத்தோலிக்க சமயத் துரோகத்தைத் தடுக்க இரண்டாம் பிலிப் மேற்கொண்ட முயற்சிகளும், நெதர்லாந்து புரட்சியை அவர் எதிர்த்ததும், ஃபிரான்சில் கைஸ் பிரபுக்கள் ஹ்யூகோனோக்களை எதிர்த்ததும் இந்த இயக்கத்தின் விளைவுகள் என்று கருதலாம்.[1]

[1] Michael Edwards—Notes on European History Volume II, pages 314-316.

# 8. ஸ்பெயினின் எழுச்சி

## I. ஐந்தாம் சார்லஸ், II. இரண்டாம் பிலிப்

### I ஐந்தாம் சார்லஸ் (1519-1526)

பதினாறும் நூற்றாண்டில் ஐரோப்பிய நாடுகளில் ஸ்பெயின் முன்னணியில் திகழ்வதற்கும் பல சந்தர்ப்ப சூழ்நிலைகள் காரண மாக இருந்தன. ஐரோப்பாவிலேயே வலிமையும் ஆற்றலுமிக்க தரைப்படை ஒன்றையும், கடற்படை ஒன்றையும் ஸ்பெயின் பெற்றிருந்தது. அமெரிக்கா கண்டுபிடிக்கப்பட்டதன் விளை வாகவும், மேற்கு இந்தியத் தீவுகள், மெக்சிகோ, பெரு போன்ற நாடுகளுடன் கொண்டிருந்த தொடர்பு காரணமாகவும் ஸ்பெயினின் செல்வம் பெருகியது. இந்த நாடுகளிலிருந்து விலையுயர்ந்த உலோகங்களும், மற்றும் பல வகைப்பட்ட பொருள் களும் ஸ்பெயினில் வந்து குவிந்தன. ஸ்பெயினின் இந்தப் பொருளாதார வளர்ச்சி, அது ஐரோப்பிய அரசியலில் ஒரு முக்கிய பங்கை ஏற்க உதவியாக இருந்தது. அப்பொழுது ஸ்பெயினை ஆண்ட அரச குடும்பமும், நாட்டு வளர்ச்சியில் அக்கறை காட்டியது. குறிப்பாக, திருமண உறவுகள் மூலம் நாட்டைப் பலப்படுத்தும் முறையை மிக வெற்றிகரமாகக் கையாண்டனர். ஸ்பெயினின் மன்னர்கள். ஐக்கிய ஸ்பெயின் அரசு தோன்றுவதற்கே காரணமாக இருந்தது 'காஸ்டில்' (Castile) அரசி இஸபெல்லாவுக்கும், அரகான் அரசன் ஃபெர்டி னண்டுக்கும் நடந்த திருமணம்தான் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. இவர்களுக்கு மூன்று பெண்கள் இருந்தனர். ஸ்பெயினின் செல்வாக்கு ஐரோப்பாவெங்கும் பரவவேண்டும் என்ற நோக்கத் துடன் இம்மூன்று இளவரசிகளின் திருமணமும் ஏற்பாடு செய்யப் பட்டது. மூத்தமகளான 'ஜோனு' (Joanna), புனிதரோமானியப் பேரரசரான முதலாம் மாக்ஸிமிலியனின் மகனின் ஹாப்ஸ்பர்க் குடும்பத்துப் பிலிப்பை மணந்தார். இரண்டாவது மகளான 'மரியா' (Maria), போர்ச்சுக்கல் அரசர் 'முதலாம் இம்மானு


ஐந்தாம் சார்லஸின் பேரரசு
ஆஸ்திரியாவின் மாக்ஸிமில்லியனிடமிருந்து பெற்றது.
பர்கண்டி மேரியிடமிருந்து பெற்றது.
ஆரகானின் பெர்டினண்டினிடமிருந்து பெற்றது.
காஸ்டிலின் இஸபெல்லாவிடமிருந்து பெற்றது.
புனித ரோமானியப் பேரரசு
ஐந்தாம் சார்லஸின் சகோதரர் பெர்டினண்டு கைப்பற்றியது.
ரஷ்யா
போலந்து
அயர்லாந்து
இங்கிலாந்து
பிரான்சு
செவாய்
வெனிஸ்
போப்பின் நாடு
ஹங்கேரி
துருக்கிப் பேரரசு
போர்ச்சுகல்

வேலே' Emmanual I) மணந்தார். மூன்றும் மகளான காதரின், இங்கிலாந்து அரசர் எட்டாம் ஹென்றியை மணந்தார்.

ஜோனுவுக்கும், முதலாம் பிலிப்புக்கும் 1500-ல் பிறந்த குழந்தைதான் சார்லஸ். இவர்தான் பிற்காலத்தில் ஐரோப்பிய வரலாற்றில் ஐந்தாம் சார்லஸ் என்ற புகழ்பெற்ற அரசர். 1504-ல் இவரது தாய் ஜோனுவும், 1506-ல் இவர் தந்தை முதலாம் பிலிப்பும் இறக்கவே காஸ்டில் அரசும், நெதர்லாந்தும் இவருக்குச் சொந்தமாயின. 1516-ல் இவரது தாய்வழிப் பாட்டனை ஃபர்டினண்டு இறந்ததால், ஸ்பானிய அரசும் அதைச் சேர்ந்த பகுதிகளும் (ஸ்பெயின், இத்தாலியில் நேப்பிள்ஸ், சிசிலி, சார்டினியா, அமெரிக்கக் குடியேற்றங்கள்) இவருக்குக் கிடைத்தன. முதலாம் சார்லஸ் என்ற பட்டத்துடன் இவர் ஸ்பெயின் அரியணை ஏறினுர். மூன்று ஆண்டுகள் கழித்துத் (1519) தந்தைவழிப் பாட்டனை மாக்சிமிலியன் இறந்ததால் ஹாப்ஸ்பர்க் அரசுரிமைகள் அனைத்தையும் இவர் பெற்றுர். அதே ஆண்டு இவர் புனித ரோமானியப் பேரரசராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஐந்தாம் சார்லஸ் என்ற பட்டத்துடன் ஒரு பரந்த பேரரசை ஆளும் வாய்ப்பு இவரது பத்தொன்பதாம் வயதிலேயே கிடைத்தது. இவருடைய இளமைப் பருவம் நெதர்லாந்தில் கழிந்தது. இவர் 1517-ல் ஸ்பெயினுக்கு வந்து அரச பொறுப்பை ஏற்றுக்கொண்டார். இளமையிலிருந்தே பொறுமையுடனும், விழிப்புடனும் செயல்படும் ஆற்றல் பெற்றிருந்த இவர், தம் குறிக்கோளை எப்படியும் அடையவேண்டுமென்ற பிடிவாத குணம் படைத்தவர். சார்லமேனுக்குப் பிறகு, ஐரோப்பாவே கண்டிராத ஒரு பரந்த பேரரசின் தலைவராக இருந்த போதிலும் அமைதியுடனும், தன்னடக்கத்துடனும் இவர் ஆட்சி புரிந்தார். ஸ்பெயின் அரசராக இருக்கும்பொழுது, நெதர்லாந்தைச் சேர்ந்தவர்களைத் தன் ஆலோசகர்களாகவும், அதிகாரிகளாகவும் அமைத்துக்கொண்டதால், ஸ்பெயின் மக்கள் இவர் ஆட்சியை விரும்பவில்லை. ஆனுல், எல்லா எதிர்ப்பையும் ஒடுக்கி நாட்டைக் கண்டிப்புடன் ஆட்சிபுரிந்தார். இளம் பருவத்திலிருந்தே கத்தோலிக்க சமயத்தில் தீவிர பற்றுக்கொண்டார்.

### சார்லஸ் புனிதரோமானியப் பேரரசர் ஆதல்

1519-ல் பேரரசர் முதலாம் மாக்சிமிலியன் இறக்கவே, ஹாப்ஸ்பர்க் அரசுரிமைகள் அனைத்தையும் இவர் பெற்றதோடு, பேரரசராகவும் தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்புகள் பெற்றிருந்தார். வழக்கமாக ஹாப்ஸ்பர்க் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தான் பேரரசர் பதவி கிடைத்த போதிலும், பேரரசரைத் தேர்வாளர்கள் தேர்ந்தெடுப்பதுதான் வழக்கமாக இருந்தது.

சார்லஸ், பேரரசர் பதவிக்குப் போட்டியிட முடிவுசெய்தார். இவரைத் தவிர ஃபிரான்சின் அரசன் முதலாம் ஃபிரான்சிஸும், இங்கிலாந்து அரசன் எட்டாம் ஹென்றியும், இந்தப் பதவிக்குப் போட்டியிட்டனர். இவர்களைவிட சார்லஸுக்கு வெற்றி வாய்ப்புகள் அதிகமிருந்தன. ஏனெனில், இதுவரை ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தான் வழக்கமாக ரோமானியப் பேரரசர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தனர். ஆஸ்திரியா, 'டைரோல்' (Tyrol) போன்ற பகுதிகள் இவருடைய ஆதிக்கத்தில் இருந்ததால், துருக்கியின் தாக்குதலிலிருந்து, ஜெர்மனியைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்கத் தகுதி பெற்றிருந்தார். மேலும், பாங்குத் தொழிலில் ஈடுபட்டிருந்த செல்வந்தர்கள் பலருடன் இவர் நெருங்கிய நட்பு கொண்டிருந்தார். இலஞ்சம், அரச தந்திரம் போன்ற முறைகளைக் கையாண்டு, தேர்தலில் வெற்றிபெறும் சூழ்நிலையில் ஐந்தாம் சார்லஸ் மற்றவர்களைவிட வாய்ப்புகள் அதிகம் பெற்றிருந்தார். ஃபிளாரன்ஸ் நகரத்துப் பிரபுக்கள் குடும்பமான மெடிச்சி குடும்பத்தினரிடமிருந்தும், ஆக்ஸ்பர்க் நகரத்தில் பாங்குத் தொழிலில் ஈடுபட்டிருந்த ஃபக்கர்ஸ்[1] (Fuggers) குடும்பத்தினரிடமிருந்தும் ஏராளமான பண உதவியைப் பெற்று சார்லஸ் பேரரசர் தேர்தலில் வெற்றி பெற்றார். இவருக்குப் பாதகமாகவும் சில கூறுகள் இருந்தன. பத்தொன்பது வயதே நிரம்பிய இளைஞர் என்பது அவற்றுள் ஒன்று. ஐரோப்பாவின் பல பகுதிகளில் சிதறிக்கிடந்த பல அரசுகளை இவர் பெற்றிருந்ததால், பேரரசராகத் தேர்ந்தெடுக் கப்பட்டால் ஜெர்மனியின் விவகாரங்களில் முழுக் கவனத்தையும் செலுத்த இயலாது என்று ஜெர்மன் மக்கள் கருதினர். மேலும், இவ்வளவு பரந்த அரசு ஒன்றை ஆளும் மன்னர் பேரரசராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டால் ஐரோப்பாவின் வல்லரசு சமநிலை பாதிக் கப்படும் என்றும் கருதப்பட்டது. இவருடன் போட்டியிட்ட முதலாம் ஃபிரான்சிஸ் சில ஜெர்மன் தேர்வாளர்களின் ஆதரவை யும், செல்வாக்கு மிக்க பிரபுக்கள் ஆதரவையும் பெற்றிருந்தார். ஆனால், இறுதியில் ஸ்பெயின் அரசர் முதலாம் சார்லஸ் புனித ரோமானியப் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 1520-ல் ஐந்தாம் சார்லஸ் என்ற பட்டத்துடன் முடி சூட்டப்பட்டார்.

[1] முதலாளிகளின் ஆதரவில் பேரரசர்கள் தேர்ந்தெடுக்கப்படுவது என்பது அக்காலத்து நியதி. பதினைந்தாம் நூற்றாண்டில் வடக்கு இத்தாலியில் ஃபிளாரன்ஸ் நகரம் முதலாளித்துவத்தின் இருப்பிடமாக விளங்கியது; குறிப்பாக மெடிசி குடும்பத்தினர் வங்கித் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். ஆனால், பதினாறும் நூற்றாண்டில் ஆகஸ்பர்க் நகரம் வங்கித் தொழிலின் இருப்பிடமாக விளங்கியது. இங்குதான் Welsors, Hochstetters, Mentings, Fuggers போன்ற செல்வம் படைத்த குடும்பத்தினர் வங்கித் தொழிலிலும், வியாபாரத்திலும் ஈடுபட்டிருந்தனர். குறிப்பாக Fuggers குடும்பத்தினர் சுரங்கத் தொழில்மூலமும், ஹாப்ஸ்பர்க் அரசர்களுக்குக் கடன் கொடுப்பதன்மூலமும் இலாபம் சம்பாதித்தனர்.

இவருடைய ஆதிக்கத்திற்குட்பட்ட அரசுகள் ஐரோப்பாவிலும், அதற்கப்பாலும் சிதறிக்கிடந்தன. ரோமானியப் பேரரசைப் போல ஐக்கியப்படுத்தப்பட்ட, வலிமை பொருந்திய, கட்டுக்கோப்புடன் கூடிய ஓர் அரசாக இல்லாமல், பல தனிப்பட்ட சுதந்தர அரசுகளின் தொகுப்பாகக் காணப்பட்டது (Congeries of States and Sovereignties) இவருடைய பேரரசின் பகுதிகளான காஸ்டில், நெதர்லாந்து, ஸ்பெயின், ஆஸ்திரியா, இத்தாலி, ஜெர்மனி ஆகியவை மொழி, இனம், அரசியலமைப்பு, சட்டம் முதலியவற்றில் ஒன்றோடொன்று வேறுபட்டு இருந்தன. இவ்வாறு ஒன்றோடொன்று முரண்பட்ட தன்மைகொண்ட பல அரசுகளை ஒற்றுமைப்படுத்தி அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டி இந்த வகை செய்வதுதான் இவருடைய தலையாய பிரச்னையாக இருந்தது. இதுபோன்ற ஒரு பேரரசை ஆளுவது அவ்வளவு எளிதான செயல் அன்று. மேலும் பிராடஸ்டெண்டு சமயம் தோன்றியதன் விளைவாக ஜெர்மனியில் ஏற்பட்ட சிக்கல்களையும், பிரச்னைகளையும் இவர் எதிர்நோக்க வேண்டியிருந்தது. இந்தச் சூழ்நிலையில் நல்ல முறையில் தன் பணியினை ஆற்ற இவரிடம் இருந்த திறமை, செல்வம், சக்தி எல்லாம் தேவைப்பட்டது. ஜெர்மனியைப் பொறுத்தவரையில், இவருடைய முயற்சிகள் தோல்வியுற்றாலும் நெதர்லாந்து, ஸ்பெயின் போன்ற பகுதிகளை ஆட்சிசெய்யும் பணியில், இவர் ஓரளவு வெற்றி பெற்றார் என்றே கூறவேண்டும்.

**ஃபிரான்சுடன் போர்**

**போரின் காரணங்கள்:** ஐந்தாம் சார்லஸ் தன்னுடைய ஆட்சியின் பெரும் பகுதியைப் ஃபிரான்சுடன் போரில் கழித்தார். நெடுநாட்களாகவே ஃபிரெஞ்சு அரசகுடும்பத்தினருக்கும், ஸ்பானிய அரச குடும்பத்திற்கும் இடையே பகைமை உணர்ச்சி இருந்துவந்தது. ஃபிரெஞ்சு அரசரான முதலாம் ஃபிரான்சிஸ் புனித ரோமானியப் பேரரசர் தேர்வில் தோற்று, ஸ்பானிய அரசர் சார்லஸ் வெற்றிபெற்றது, இந்தப் பகைமை உணர்ச்சியை மேலும் வளர்த்தது. மேலும், ஹாப்ஸ்பர்க் அரசுகளால் ஃபிரான்ஸ் சூழப்பட்டிருந்ததால் அச்சமும், ஐயமும் கொண்டது[1].

[1] ஃபிரான்சிற்குத் தெற்கே செல்வமும், படை வலிமையும் கொண்ட ஸ்பெயினும், தென்கிழக்கே சார்லஸின் செல்வாக்குக்கு உட்பட இத்தாலியும், கிழக்கே ஐந்தாம் சார்லஸினால் ஆளப்பட்ட 'ஃபிரான்ச் கோமடி' (Franche Comte) என்ற அரசும், வடக்கேயும், வடகிழக்கேயும் ஜெர்மானியும், வடமேற்கே சார்லஸுக்குச் சொந்தமான நெதர்லாந்தும் அமைந்திருந்தன. இந்த நிலையில் ஃபிரெஞ்சு அரசன் முதலாம் ஃபிரான்சிஸ் தன்னுடைய நாடும் சார்லஸினால் அபகரிக்கப்படும் என்று அஞ்சியதில் வியப்பொன்றுமில்லை.

இவைதவிர, போர் மூளுவதற்கு உடனடியான காரணங்கள் பல இருந்தன. 1. முதலாம் ஃபிரான்சிஸுக்கு முன் ஆட்சிபுரிந்த ஃபிரெஞ்சு அரசன் பன்னிரெண்டாம் லூயி நேப்பிள்ஸ் மீது தனக்கிருந்த உரிமையை 1504-ல் விட்டுக்கொடுத்தார். ஆனால், இப்போது ஃபிரான்சிஸ் நேப்பிள்ஸ்மீது மீண்டும் உரிமை கொண்டாடினார். 2. 1512-ல் பன்னிரண்டாம் லூயி இழந்த மிலான் நகரை மீட்கும் நோக்கத்துடன் ஃபிரான்சிஸ் இத்தாலிமீது படையெடுத்து 'மாரிக்னானோ' (Marignano) போரில் வெற்றிபெற்று மிலான் நகரைக் கைப்பற்றினார்(1516). சார்லஸ், இந் நகரம் புனித ரோமானியப் பேரரசின் ஒரு பகுதி என்று வாதிட்டு, அதை மீட்க உறுதிபூண்டார். 3. ஸ்பெயினால் இணைத்துக்கொள்ளப் பட்ட நவாரே அரசின்மீது ஃபிரான்சிஸ் உரிமைகொண்டாடினார். 4. செல்வம் கொழித்த நெதர்லாந்துமீது தன் ஆதிக்கத்தைப் பரப்ப ஃபிரான்சிஸ் விரும்பினார். ஆனால், சார்லஸ் இதைத் தடுக்கத் தீர்மானித்தார். அதுமட்டுமன்றித் தன் பாட்டனாரிடமிருந்து பதினொன்றும் லூயியால் பறிக்கப்பட்ட பர்கண்டி என்னும் அரசை ஃபிரான்சிடமிருந்து மீட்க விரும்பினார். 5. புனித ரோமானியப் பேரரசர் தேர்தலில் ஃபிரான்சுக்கு ஏற்பட்ட தோல்வி போர் மூளுவதைத் துரிதப்படுத்தியது. 1522-ல் தொடங்கிய இந்தப் போர், முதலாம் ஃபிரான்சிஸ், ஐந்தாம் சார்லஸ் ஆகியவர்களுடைய ஆட்சி முழுவதும், அதற்குப் பிறகும் கூட தொடர்ந்து நடந்தது.

[1]போர் நிகழ்ச்சிகள்: போப்பும், எட்டாம் ஹென்றியும் சார்லஸுக்கு உதவினர். போர் நிகழ்ச்சிகள் பெரும்பாலும் இத்தாலியிலும், சில இத்தாலிக்கு வெளியிலும் நடந்தன. ஃபிரான்சிஸால் மீட்கப்பட்ட மிலான் நகரம் மீண்டும் சார்லஸினால் கைப்பற்றப்பட்டது. மிலான், புனித ரோமானியப் பேரரசின் சார்பு நாடாக ஆக்கப்பட்டது. வெற்றிகண்ட சார்லஸின் படைகள் ஆல்ப்ஸ் மலைகளைக் கடந்து, ஃபிரான்சில் நுழைந்து, ஃபிரெஞ்சுத் துறைமுக நகரமான மார்செயிலேத் தாக்கின. ஃபிரான்சிஸின் படைகள் சார்லஸின் படைகளை முறியடித்து, ஃபிரான்ஸைவிட்டு விரட்டின. ஆனால், 1525-ல் பாவியா (Pavia) என்னுமிடத்தில் நடந்த போரில் சார்லஸின் படைகள் ஃபிரெஞ்சுப் படைகளை முறியடித்தன. ஃபிரான்சிஸ் கைது செய்யப்பட்டு, உடன்படிக்கைக்குச் சம்மதித்தார். பர்கண்டி, நெதர்லாந்து, இத்தாலி, ஆகிய நாடுகள்மீது எந்தவிதமான

[1] இவை விரிவாக இத்தாலியப் போர்கள் என்னும் அத்தியாயத்தில் விளக்கப் பட்டுள்ளன.

உரிமையும் கொண்டாடுவதில்லை என்றும், பேரரசரின் சகோதரி எலியனுரை மணந்துகொள்ளுவதாகவும் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். இதன்பிறகு, விடுதலை செய்யப்பட்டு ஃபிரான்ஸை அடைந்தவுடன், இந்த ஒப்பந்தம் செல்லாது என்று அறிவித்தார். இதன் விளைவாகப் போர் மீண்டும் தொடங்கியது.

ஐந்தாம் சார்லஸின் வலிமையும், செல்வாக்கும் பெருகுவதைக் கண்டு அஞ்சிய போப்பும், சில இத்தாலிய அரசுகளும் ஃபிரான்சிஸுக்கு உதவிசெய்ய ஒப்புக்கொண்டன. 1526-ல் 'காக்னுக்' புனிதக் கூட்டணி' (Holy League of Cognac) என்ற கூட்டணி அமைக்கப்பட்டது. எனவே, போர் தொடங்கியவுடன் சார்லஸின் படைகள் இத்தாலியில் புகுந்தன. படைவீரர்களுக்குச் சம்பளப் பாக்கியிருந்தது. கொள்ளையடிப்பதன்மூலம் தங்கள் சம்பளப் பாக்கியைச் சரிக்கட்ட எண்ணி சார்லஸின் படைகள் இத்தாலிய நகரங்களைத் தாக்கத் திட்டமிட்டன. ஃபிளாரன்ஸ் மீது தாக்குதல் நடத்த எண்ணிய திட்டம் நிறைவேறவில்லை. உடனே போப்பின் இருப்பிடமான ரோம் நகரம் தாக்கப்பட்டுச் சூறையாடப்பட்டது (1527). சுமார் 4000 மக்கள் இத்தாக்குதலினுல் உயிரிழந்தனர். மடாலயங்கள், கிறிஸ்துவ ஆலயங்கள், கல்லறைகள், யாவும் சூறையாடப்பட்டன. போப்பாண்டவரின் உறைவிடமான 'வாடிகன்' என்ற பகுதியிலிருந்த நூலகம் அழிக்கப்பட்டது. ரோமாபுரியின் கலைச்செல்வங்கள் சேதமாயின. இந்தச் சூறையாடல் ஒன்பது மாதங்கள் நடந்தது. இந்நிகழ்ச்சிகளைப் பற்றிக் கேள்வியுற்ற கத்தோலிக்க ஐரோப்பா சினங்கொண்டது. இங்கிலாந்து மன்னர் எட்டாம் ஹென்றி ஃபிரான்சிஸுக்கு உதவியளிக்க முன்வந்தார்.

இதற்குப்பிறகு இப்போரின் நிகழ்ச்சிகள் ஜெர்மனியின் சமயச் சீர்திருத்த இயக்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதை நாம் நோக்கவேண்டும். இத்தாலியில் ஃபிரான்சிஸின் நிலைமையில் ஒருவித முன்னேற்றமும் இல்லை. தனக்கு வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையும் ஃபிரான்சிஸுக்கு இல்லை. எனவே, 1529-ல் ஃபிரான்சிஸ், சார்லஸுடன் 'காம்பிராய்' (Cambrai) உடன்படிக்கை செய்து கொண்டார். நேப்பிள்ஸ், மிலான், நெதர்லாந்துமீது எந்தவித உரிமையும் கொண்டாடுவதில்லை என்று ஃபிரான்சிஸ் உறுதியளித்தார். இதுவரை நடந்த போரின் விளைவாக ஹாப்ஸ்பர்க் குடும்பத்து ஆதிக்கத்தின்கீழ் இத்தாலி கொண்டு வரப்பட்டது. நேப்பிள்ஸ் சார்லஸின் நேரடி ஆட்சிக்குட்பட்டிருந்தது. மிலான் நகரை ஆண்ட பிரபுக்கள் குடும்பமும் ஃபிளாரன்ஸை ஆண்ட மெடிச்சி குடும்பமும், போப் ஏழாம்

களெமெண்டும் சார்லஸின் செல்வாக்கிற்குட்பட்டிருந்தனர். இந்த நிலையில் ஐந்தாம் சார்லஸ் 1529-ல் இத்தாலி விஜயம் செய்து 1530-ல் 'பொலோக்ஞ' (Bologna) என்னுமிடத்தில் போப் பாண்டவரால் புனித ரோமானியப் பேரரசராக முடிசூட்டப் பட்டார்.

1529-ல் கையெழுத்திடப்பட்ட காம்பிராய் உடன்படிக்கை ஒரு தற்காலிகப் போர்நிறுத்த உடன்படிக்கையாக இருந்ததேயன்றி நிரந்தரமாகப் போரை நிறுத்த உதவவில்லை. 1536-ல் மிலான் கோமகன் இறந்ததும், சார்லஸும், ஃபிரான்சிஸும் அவ்வரசுமீது உரிமை கொண்டாடினர். மீண்டும் போர் மூண்டது. சார்லஸுக்கு எதிராக ஃபிரான்சிஸ் ஸ்காட்லாந்து, ஸ்வீடன் டென்மார்க், துருக்கி, ஜெர்மனியில் பிராடஸ்டெண்டு அரசுகள் ஆகியவைகளுடன் உடன்படிக்கை செய்துகொண்டார். ஆனால், இப்போரில் முன்பிருந்த ஊக்கமும், உற்சாகமும் காணப்பட வில்லை. 1538-ல் கையெழுத்திடப்பட்ட நைஸ் போர்நிறுத்த ஒப்பந்தத்தின்படி பத்து ஆண்டுகளுக்குப் போர் நிறுத்தப்பட வேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால், நான்கு ஆண்டுகள் முடிந்த உடனேயே 1542-ல் மீண்டும் போர் மூண்டது. இப்போரில் ஃபிரான்சிஸ் பல வெற்றிகளைப் பெற்றார். ஆனால், ஐரோப்பாவில் வேறுசில பகுதிகளில் நடந்த சில நிகழ்ச்சிகள் இருதரப்பினரையும் பாதித்ததால், இவ்விருதரப்பினரும் போரை முடித்துக்கொள்ள விரும்பினர். 1544-ல் அவரவர் கைப்பற்றிய பகுதிகளை அவரவர்களே வைத்துக்கொள்ள வேண்டும் என்ற அடிப்படையில் 'கிரெஸ்பி உடன்படிக்கை' (Peace of Crespy) கையெழுத்தாயிற்று.

1547-ல் முதலாம் ஃபிரான்சிஸ் இறந்தார். அவரது மகன் இரண்டாம் ஹென்றி (1547-1559) ஃபிரான்சின் அரியணை ஏறினார். இவரது ஆட்சியிலும் இப்போர் தொடர்ந்து நடந்தது. போரின் இந்தக் கட்டத்தில் போர் நிகழ்ச்சிகள் ஜெர்மன் பிராடஸ் டெண்டு இயக்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. வேகமாகப் பரவிவந்த பிராடஸ்டெண்டு இயக்கத்தை நசுக்க முயன்றார் ஐந்தாம் சார்லஸ். கத்தோலிக்க அரசரான ஹென்றி சார்லஸுக்கு எதிராகப் பிராடஸ்டெண்டுகளை ஊக்குவித்தார். ஜெர்மனியில் சார்லஸ் தோல்வியடைந்தார். ஆனால், ஃபிரான்சின் எல்லையிலிருந்த 'மெட்ஸ்' (Metz) நகரை முற்றுகையிட்டு அதைக் கைப்பற்றும் தருணத்தில் ஹென்றிக்கு உதவியாக ஒருபெரும் ஃபிரெஞ்சுப்படை வந்து, சார்லஸுன் வெற்றி வாய்ப்புகளைக் கெடுத்துவிட்டன. மிக்க ஏமாற்றமடைந்த சார்லஸ் பின்வாங்கு

நேரிட்டது. இதுதான் இவராட்சியில் நடந்த, கடைசிப் போர் நிகழ்ச்சி. உடல்நலக் குறைவினாலும், ஏமாற்றத்தினாலும் மன முடைந்துபோன சார்லஸ் தன் பதவியைத் துறந்தார். இந்தப் போர் தொடர்ந்து 1559 வரை நடந்தது. 1559-ல் இவ்விரு நாடுகளுக்கிடையே நடந்து கொண்டிருந்த போருக்கு 'கேடோ கேம்பிரசிஸ்' (Cateau Cambresis) உடன்படிக்கையின் மூலம் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

விளைவுகள்: ஃபிரான்சிஸுக்கும், சார்லஸுக்கும் நடந்த போரின் விளைவாக 1. இத்தாலியில் ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டது.[1] 2. 'மெட்ஸ்' (Metz), 'டூல்' (Toul) 'வெர்டன்' (Verdun) என்ற நகரங்களைப் பெற்றதன் மூலம் ஃபிரான்ஸ் வடகிழக்கு எல்லையில் ரைன் ஆறுவரையில் தன் ஆதிக்கத்தைப் பரப்ப முடிந்தது. 3. ஹாப்ஸ்பர்க் பேரரசோடு ஃபிரான்ஸ் இணைக்கப்படுவது தடுக்கப்பட்டு, அதன்மூலம் வல்லரசுச் சமநிலை பாதுகாக்கப்பட்டது. 4. கிழக்கு ஐரோப்பாவில் துருக்கியர் ஆதிக்கம் வளர, இது உதவியது. 5. துருக்கியர்களுடன் ஃபிரான்சிஸ் வளர்த்துக் கொண்ட நட்புறவு, தொழில் வியாபாரத் துறையில் ஃபிரான்சிற்கு சில நற்பலன்களை அளித்தது. 6. இப்போர் ஜெர்மனியில் பிராடஸ்டெண்டு சமயம் வளருவதற்கு மிக்க உதவியாக இருந்தது.

**சார்லஸும், துருக்கியும்:**

1453-ல் கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றிய பிறகு துருக்கியர்கள் கிழக்கு மத்தியதரைக் கடல் பகுதியில் ஒரு பேரரசை நிறுவி, ஐரோப்பாவையே கைப்பற்றத் திட்டமிட்டனர். துருக்கிய அரசர் இரண்டாம் சுலைமான் (1520–1566) தணிந்தும், சில சமயங்களில் ஃபிரான்சின் உதவியுடனும் ஐரோப்பாமீது அடிக்கடி படையெடுத்து வெற்றிகள் பெற்றார். 1521-ல் அவர் ஹங்கேரி மீது படையெடுத்தார். பெல்கிரெட் நகரம் கைப்பற்றப் பட்டது. செர்பியா முழுவதும் அவர் வசமாயிற்று. 1526-ல் 'மொஹாக்ஸ்' (Mohacs) என்ற இடத்தில் நடந்த போரில் ஹங்கேரியப் படைகள் முறியடிக்கப்பட்டன. 1529-ல் துருக்கியப் படைகள் ஆஸ்திரியத் தலைநகர் வியன்னாவைத் தாக்க ஆரம்பித்தன. ஆனால், தீவிர எதிர்ப்பு இருந்ததால் மூன்று வாரங்

[1] இத்தாலி, இங்கிலாக்கு உள்ளாவதை உணர்ந்து 16ஆம் நூற்றாண்டு முற்பகுதியிலேயே மக்கியவெல்லி என்னும் அறிஞர் இத்தாலியைப்பற்றிக் கீழ்க்கண்டவாறு மனம்நொந்து கூறியிருக்கிறார். "Italy was without head, without order, beaten, despoiled, torn, over run,............... She had endured every kind of desolation. To all of us the barberous dominion stinks"—Europe, The story of last five centuries, A. J. Grant, page 480.

களுக்குப் பிறகு துருக்கியப் படைகள் பின்வாங்க நேரிட்டது. 1532-ல் மீண்டும் துருக்கிய அரசர் சுலைமான் தன் படைகளுடன் ஐரோப்பாவில் தோன்றினார். துருக்கிய அபாயத்தைச் சமாளிக்க எல்லா மக்களுடைய உதவியும் தேவைப்பட்டதால், பிராடெஸ்டென்டுகளை ஒடுக்கும் பணியில் ஈடுபட்டிருந்த ஐந்தாம் சார்லஸ், அவர்களுடன் ஓர் உடன்பாடு செய்துகொண்டு துருக்கியர்களை எதிர்க்க ஆயத்தமானார். இவருடைய போர் ஏற்பாடுகளைக் கண்டு அஞ்சிய துருக்கியர்கள், போர் செய்யாமலே திரும்பிவிட்டனர். ஆனால், சில ஆண்டுகளுக்குப் பிறகு ஹங்கேரியின் பெரும்பகுதி துருக்கியர்களால் கைப்பற்றப்பட்டுத் துருக்கியப் பேரரசின் ஒரு மாநிலமாக அமைக்கப்பட்டது. இந்த நிலையை ஐந்தாம் சார்லஸ் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று.

சார்லஸின் ஸ்பானிய, இத்தாலிய மாநிலங்கள் ஆப்பிரிக்கக் கடற்கரையோரங்களில் இருந்த முகம்மதிய கடற்கொள்ளைக்காரர்களின் தாக்குதலுக்கு உள்ளாயின. இவர்கள் துருக்கியர்களுடன் சேர்ந்துகொண்டு சார்லஸுக்குத் தொந்தரவு கொடுத்தனர். கிறிஸ்துவ நாடுகளிலிருந்து வரும் கப்பல்களைத் தாக்கிப் பிரயாணிகளைச் சிறைப்படுத்தி அடிமைகளாகப் பயன்படுத்தினர். கடற்கொள்ளைக்காரர்களின் கொட்டத்தை அடக்கும் நோக்கத்துடன் 1535-ல் பேரரசர் சார்லஸ், ஒரு பெரிய கடற்படையைத் திரட்டிக் கடற்கொள்ளைக்காரர்களின் இருப்பிடமான 'டியூனிஸ்' (Tunis) நகரைக் கைப்பற்றினார். இவர்கள் செல்வாக்கை ஒடுக்க மேலும் முயற்சிகளில் ஈடுபடுவதற்குமுன், துருக்கிய அரசர் சுலைமானும், ஃபிரெஞ்சு அரசர் முதலாம் ஃபிரான்சிஸும் கடற்கொள்ளைக்காரர்களுக்கு உதவி அளிக்க முன்வந்தனர். இதன் விளைவாக 1536-38-ல் சார்லஸ் முதலாம் ஃபிரான்சிஸுடன் ஒரு போரில் ஈடுபட வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்தப் போருக்குப் பிறகு மீண்டும் கடற்கொள்ளைக்காரர்களை ஒடுக்கும் பணியில் சார்லஸ் ஈடுபட்டார். இவர்களின் தலைவனான 'பார்பரோஸா' (Barbarossa) அல்ஜியர்ஸ் நகரைச் சேர்ந்தவன். கடற்கொள்ளைக்காரர்களின் முக்கிய நகரமான அல்ஜியர்ஸைக் கைப்பற்றும் எண்ணத்துடன் சார்லஸ் 1541-ல் ஒரு பெரிய கடற்படையுடன் சென்றார். ஆனால், இந்த முயற்சி தோல்வியுற்றது.[1]

1 ஆப்பிரிக்காவின் வடபகுதியில் நிகழ்ந்த இந்தச் சண்டைகள் கிறிஸ்துவர்களுக்கும் துருக்கியர்களுக்குமிடையே நடந்த ஆதிக்கப் போட்டியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவை. மத்தியதரைக் கடல் பகுதிமீது ஆதிக்கம்பெற கிறிஸ்துவர்களும் துருக்கியர்களும் கடும் போட்டியிட்டனர். வெனிஸ் போன்ற ஐரோப்பிய நகரங்களுக்கு ஆதரவாக ஐந்தாம் சார்லஸ் ஒருபுறமும், பார்பரோஸா போன்ற கடற்கொள்ளைக்காரர்களின் ஆதரவோடு சுலைமான் மற்றொரு புறமும் இந்த ஆதிக்கப் போட்டியில் ஈடுபட்டிருந்தனர். இந்தப் போரின் முதல் கட்டத்தில் துருக்கியர்களுக்கு வெற்றி கிட்டியது. ஆனால், இறுதியில் 1570-71-ல்தான் துருக்கியர்களின் கடல் ஆதிக்கம் ஒடுக்கப்பட்டு, அவர்களால் ஐரோப்பாவிற்கு ஏற்பட்டுக் கொண்டிருந்த தொந்தரவிற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. போப் 'ஐந்தாம் பயஸ்' (Pius V) என்பவரின் முயற்சியால் ஒரு கடற்படை தயாரிக்கப்பட்டு ஸ்பெயின், ஜினோவா, வெனிஸ் அரசுகளின் ஒத்துழைப்புடன் இந்தக் கடற்படை, ஐந்தாம் சார்லஸின் மகன் 'டான் ஜானின்' (Don John) தலைமையில் துருக்கியர்களை 'லெபான்டோ போரில்' (Battle of Lepanto) தோற்கடித்தது (1571).

சார்லஸும் ஜெர்மனியும்

1520-ல் சார்லஸ் புனித ரோமானியப் பேரரசராகப் பதவி ஏற்றபொழுது, பேரரசு ஜெர்மன் மொழி பேசும் மக்களை மட்டுமே கொண்டதாக இருந்தது. தமது பொதுவான மொழி கலை, பண்பாடு, பாரம்பரியம் பற்றிய உணர்வு இருந்தபோதிலும் அவர்களிடையே அரசியல் ஒற்றுமை இல்லை. பேரரசிற்குட்பட்ட முந்நூறுக்கும் மேற்பட்ட அரசுகள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. ஆனால், அவைகளிடையே காணப்பட்ட ஒற்றுமை என்னவெனில், அவை யாவும் பேரரசர் சார்லஸை வெறுத்தன. சார்லஸ், ஜெர்மானியர் அன்று என்ற காரணம் மட்டுமின்றிச் சிற்றரசர்கள் தமக்குமேல் ஒரு பேரரசர் இருப்பதை விரும்பவில்லை. சிற்றரசர்கள் தங்களுடைய அரசியல் அதிகாரத்தை வளர்த்துக் கொள்வதில் கண்ணும் கருத்துமாக இருந்தனர். சார்லஸ் பட்டத்திற்கு வந்தபொழுது சிற்றரசர்கள் அரசாங்கத்திலும், கொள்கை நிர்ணயம் செய்வதிலும் கூடுதலான உரிமைகளையும், அதிகாரங்களையும் பெற்றனர். இந்தச் சூழ்நிலையில்தான் ஜெர்மனியில் பிராடஸ்டெண்டு சமயம் தோன்றியது. பிராடஸ்டெண்டு சமயத்தை ஆதரித்ததன்மூலம் ஜெர்மன் சிற்றரசர்களும், பிரபுக்களும் சார்லஸுக்கு எதிரிகளானார்கள். தீவிர கத்தோலிக்க வாதியான சார்லஸ், பிராடஸ்டெண்டு சமயத்தை ஒடுக்கும் பணியில் ஈடுபட்டார். ஏனெனில், தனக்கு இருக்கும் அரசியல் அதிகாரம் பாதுகாக்கப்பட வேண்டுமானால், கத்தோலிக்க திருச்சபையின் அதிகாரம் நிலைநாட்டப்பட வேண்டும் என்பதைச் சார்லஸ் உணர்ந்தார். மேலும் அவருடைய அயல்நாட்டுக் கொள்கைத் திட்டங்களைச் செயல்படுத்தப் போப்பினுடைய உதவி தேவைப்பட்டது. எனவே, 1521-ல் ஒம்ஸ் நகரில் கூடிய 'ஜெர்மன் டயட்டில்' (Diet of Worms) பிராடஸ்டெண்டு சமயத்தை ஒடுக்குவதற்கான ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. ஆனால், பிராடஸ்டெண்டு சமயம் ஜெர்மனியில் வெகு வேகமாகப் பரவிக் கொண்டிருந்தது. துருக்கியர்கள் படையெடுப்பு, ஃபிரான்சுடன் ஆதிக்கப் போட்டி போன்ற பல தொல்லைகளுக்கிடையே ஐந்தாம் சார்லஸ் அடுத்த இருபத்தைந்து ஆண்டுகள் ஜெர்மனியில் பிராடஸ்டெண்டு சமயத்தை ஒடுக்கும் முயற்சியில் ஈடுபட்டார். பிராடஸ்டெண்டுகளுடைய இந்த முயற்சிக்குப் பலத்த எதிர்ப்பு இருந்தது. 1531-ல் லூதரின் சமயத்தைப் பின்பற்றிய எல்லா ஜெர்மன் சிற்றரசர்களும் 'ஷ்மால்கால்டு சங்கம்' (League of Schmalkald) என்ற ஓர் அமைப்பில் ஒன்றுகூடிப் போருக்கு ஆயத்தமானார்கள். ஆனால், துருக்கியர் படையெடுப்பின் காரணமாக இந்தப் போர் ஒத்திவைக்கப்பட்டது. பிராடஸ்டெண்டுகளுக்கும் கத்தோலிக்கர்களுக்குமிடையே உள்ள வேறுபாடுகள் திருச்சபையின் பொதுக் கவுன்சிலினால் ஆராயப்படும் என்று சார்லஸ் அறிவித்து, உடனடி

யாகப் போர் மூளுவதைத் தவிர்த்தார். 1545-ல் மற்றத் தொல்லைகளிலிருந்து விடுபட்ட சார்லஸ், டிரெண்ட் நகரத்தில் பொதுக் கவுன்சில் ஒன்றைக் கூட்ட ஏற்பாடு செய்தார். ஆனால், பிராடஸ்டென்டுகள் இப்பொழுது சமரசத்திற்குத் தயாராக இல்லை. ஆகவே, இம் முயற்சி கைவிடப்பட்டு சார்லஸ் மீண்டும் பிராடஸ்டென்டுகளுடன் போருக்குத் தயாரானார். 1546-ல் தொடங்கிய இந்தப் போர்தான் 'ஷ்மால்கால்டிக் போர்' என்று குறிக்கப்படுகிறது. இப் போரின் தொடக்கத்தில் சார்லஸ் சில வெற்றிகள் பெற்ற போதிலும், இறுதியில் அது அவருக்குச் சாதகமாக அமையவில்லை. எனவே, 1553-ல் ஜெர்மன் பிரச்னையைத் தீர்க்கும் பொறுப்பைத் தன் தம்பி ஃபெர்டினண்டிடம் ஒப்படைத்தார். இவருடைய முயற்சியின் விளைவாக 1555-ல் ஏற்பட்ட ஆக்ஸ்பர்க் உடன்படிக்கையின்படி, லூதரின் சமயத்திற்குச் சட்டப்பூர்வமான அங்கீகாரம் அளிக்கப்பட்டு, தங்கள் குடிமக்களின் சமயத்தைத் தேர்ந்தெடுக்கும் உரிமை சிற்றரசர்களுக்கு உண்டு என்னும் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது.[1]

### சார்லஸும் ஸ்பெயினும்

தாய்வழிப் பாட்டன் ஃபெர்டினண்ட் இறந்ததால் ஸ்பெயின் அரசுரிமை பெற்ற சார்லஸ், முதலாம் சார்லஸ் என்ற பட்டத்துடன் ஸ்பெயினின் அரியணை ஏறினர். இளமைப் பருவம் முழுவதும் நெதர்லாந்திலேயே கழித்த சார்லஸ் 1517-ல் ஸ்பெயின் வந்தடைந்தார். நெதர்லாந்துமீது இவருக்கிருந்த அளவுகடந்த ஆசையாலும், நெதர்லாந்தைச் சேர்ந்தவர்களையே தன் ஆலோசகர்களாகவும் அதிகாரிகளாகவும் அமைத்துக் கொண்டதாலும், ஸ்பானிய மக்கள் இவரை ஓர் அந்நியராகவே கருதினர். ஸ்பெயினில் இவர் தன் எதேச்சாதிகார ஆட்சியை ஏற்படுத்தினர். பிரபுக்களின் சிறப்புரிமைகளைப் பறித்தார். 1519-ல் இவர் புனித ரோமானியப் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதும், ஸ்பெயின், பேரரசின் ஒரு மாநிலமாகக் கருதப்பட்டு, தன் தனித் தன்மையை இழந்துவிடும் என்று ஸ்பெயின் மக்கள் அஞ்சினர். இருப்பினும், எதிர்ப்புகள் யாவற்றையும் சமாளித்து, ஸ்பெயினைக் கண்டிப்புடன் ஆட்சி புரிந்தார்.

இவர் ஆட்சியில்தான் கடல்கடந்த குடியேற்றங்கள் மேலும் வளர்ச்சி பெற்று, ஸ்பானியப் பேரரசு முழுமை பெற்றது.

[1] ஐந்தாம் சார்லஸுக்கும் ஜெர்மானிய பிராடஸ்டென்டுகளுக்குமிடையே நடந்த போர்கள், பிராடஸ்டென்டு சமயத்தை ஒடுக்க அவர் செய்த முயற்சிகள் பற்றி மேலும் விரிவாக 'சமயச் சீர்திருத்த இயக்கம்' என்னும் தலைப்பின் கீழ்க் காணலாம்.

பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் துவக்கப்பட்ட கடற் பயணங்களும், புதிய நாடுகள் கண்டுபிடிப்பும் மேலும் ஊக்குவிக் கப்பட்டன. 1519-ல் 'ஆல்வாரெஸ்-டி-பினெடா' (Alvarez-de-Pineda) என்ற மாலுமி ஃபிளாரிடாவிலிருந்து மெக்சிகோ வரை யிலுள்ள அமெரிக்கக் கரையோரப் பகுதியை ஆராய்ந்தார். இதே ஆண்டில் ஸ்பானிய அரசின் கீழ், பணிசெய்து கொண்டிருந்த மெகல்லன் என்பவர் கிழக்கிந்தியத் தீவுகளுக்கு ஒரு புது வழியைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடன், மேற்கு நோக்கிக் கடற்பயணத்தை மேற்கொண்டு, ஃபிலிப்பைன் தீவுகளைக் கண்டு பிடித்தார். 'ஹெர்னுண்டோ கோர்டெஸ்' என்ற மற்ருெரு ஸ்பானியர் மெக்சிகோவை அடைந்து அப்பகுதியில் வாழ்ந்த அஸ்டெக்குகளையும், அவர்கள் பேரரசையும் வீழ்த்தி ஸ்பானிய ஆதிக்கத்தை அங்கு ஏற்படுத்தினுர். சில ஆண்டுகளுக்குப் பிறகு 'பிஸாரோ' என்பவர் தென் அமெரிக்காவின் 'பெரு' என்னும் பகுதிக்குச் சென்று, அங்கு ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்த 'இங்காக்களை' வென்று அவர்களின் பேரரசை வீழ்த்தினுர். இவ்வாறு அமெரிக்காவில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட ஸ்பானியக் குடியேற்றங்களில் கிறிஸ்துவ சமயப் பிரசாரம் மேற்கொள்ளப் பட்டு, அந்நாடுகளின் பழங்குடி மக்கள் கிறிஸ்துவ சமயத்திற்கு மாற்றப்பட்டனர். ஐந்தாம் சார்லஸ் காலத்தில் இக் குடியேற் றங்கள் பொருளாதாரச் சுரண்டலுக்கு உள்ளாக்கப்பட்டு, ஸ்பெயின் ஏராளமான செல்வத்தைப் பெற்றது. வெள்ளிச் சுரங்கங்கள் பல தோண்டப்பட்டு, புது உலகத்திலிருந்து ஏராளமான வெள்ளி, ஸ்பெயினில் வந்து குவிந்தது. பதினுரும் நூற்றாண்டில் ஸ்பெயின் பல துறைகளிலும் சிறந்து விளங்கியது. இந்தச் செல்வத்தினுல்தான் ஸ்பானிய மொழி, கலாசாரம் ஆகியவை புது உலகில் புகுத்தப்பட்டன. இந்தக் குடியேற்றங்களை நிர்வகிக்க ஸ்பானிய அரசு, நிர்வாக முறை ஒன்றை உருவாக்க வேண்டியிருந்தது. இந்தப் பணி ஐந்தாம் சார்லஸ் காலத்தில் முற்றுப்பெற்றது. சட்டம் இயற்றுதல், நீதி நிர்வாகம், வைஸ் ராய்கள், கவர்னர்கள் போன்ற அதிகாரிகளை நியமிப்பது, ஆட்சிக் கொள்கைகளை நிர்ணயிப்பது இன்னபல பணிகளைக் கவனிப்பதற்கு 'Council of the Indies' என்னும் ஒரு குழு அமைக்கப்பட்டு குடியேற்றங்களின் நிர்வாகப் பொறுப்பு இக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது.

### சார்லஸும் இங்கிலாந்தும்

சார்லஸ் ஆட்சிக் காலத்தில் இங்கிலாந்தில் தேசிய உணர்வு மேலும் வலுப்பெற்றது. இங்கிலாந்தை ஆண்ட எட்டாம் ஹென்றி யின் மனைவி காதரின் ஐந்தாம் சார்லஸின் சிற்றன்னை. ஐந்தாம் சார்லஸுக்கும், ஃபிரெஞ்சு அரசன் முதலாம் ஃபிரான்ஸுக்கும் இடையே நடந்துகொண்டிருந்த ஆதிக்கப்போட்டி, ஐரோப்பிய

அரசியலில், இங்கிலாந்து ஒரு சிறப்பிடத்தைப் பெற ஒரு வாய்ப்பாக அமையும் என்பதை எட்டாம் ஹென்றியின் அமைச்சர் 'கார்டினல் உல்சி' (Cardinal Wolsey) உணர்ந்தார். ஆகவே, ஆதிக்கப் போரில் இங்கிலாந்தின் தலையீட்டை ஆதரித்தார். முதலில் எட்டாம் ஹென்றி, ஃபிரான்சிஸுக்கு ஆதரவு அளித்த போதிலும், ஐந்தாம் சார்லஸின் விடாமுயற்சியின் விளைவாக இங்கிலாந்து சார்லஸுக்குப் படையுதவி அளிக்க ஒப்புக் கொண்டது. இந்த நல்லுறவு நீடித்திருப்பதில் ஒரு சிக்கல் ஏற்பட்டது. அதுதான் எட்டாம் ஹென்றியின் திருமணப்பிரச்சினை. எட்டாம் ஹென்றி காதரினை மணவிலக்கு செய்து, ஆன்பொலின் என்பவரை மணக்க விரும்பி, போப்பின் அனுமதியைக் கோரினார். ஐந்தாம் சார்லஸ் தன் சிற்றன்னை காதரினுக்கு ஆதரவாக, மண விலக்குக் கோரிக்கையை மறுக்கும்படிப் போப்பை வேண்டினார். போப்பின் ஆணையையும் மீறி ஹென்றி ஆன்பொலினைத் திருமணம் செய்துகொண்டார். இது அவருக்கும் சார்லஸுக்குமிடையே இருந்த நட்புறவைப் பாதித்தது. ஆனால், 1553-ல் எட்டாம் ஹென்றியின் மகள் மேரி, இங்கிலாந்தின் அரியணை ஏறியவுடன் இவ்விரு நாடுகளுக்கிடையே மீண்டும் சுமுகமான உறவு ஏற்பட்டது. ஐந்தாம் சார்லஸ் தன் மகன் இரண்டாம் ஃபிலிப்புக்கும் மேரிக்கும் மணம் முடித்து வைத்தார்.

ஏறக்குறைய நாற்பது ஆண்டுகள் ஓய்வில்லாமல் போர்களிலும் அரச காரியங்களிலும் ஈடுபட்டு அமைதியற்று இருந்த சார்லஸுக்கு அரச பதவியே கசந்தது. 1555-ல் பிரஸ்ஸல்ஸ் நகரில் நெதர்லாந்தின் அரசுரிமையைத் தன் மகன் ஃபிலிப்பிடம் ஒப்படைத்தார். 1556-ல் ஸ்பானிய, இத்தாலிய அரசுரிமைகளைப் ஃபிலிப்புக்கும், ஆஸ்திரியாவைத் தன் தம்பி ஃபெர்டினண்டுக்கும் கொடுத்துவிட்டு, அரச பதவியைத் துறந்து, ஸ்பெயினில் ஒரு கிறிஸ்துவ மடாலயத்தில் சேர்ந்து 1558-ல் உயிர் நீத்தார்.

### மதிப்பீடு

குறுகிய மனப்பான்மையும், விரைவில் ஒரு முடிவுக்கு வரமுடியாத சலனபுத்தியும் படைத்த சார்லஸிடம் கடமை உணர்ச்சியும் பிடிவாதமும் நிறைந்திருந்தன. போர்த் திறமையும் மதிநுட்பமும் பெற்றிருந்த சார்லஸ் ஒரு தீவிர கத்தோலிக்கர். அவர் வாழ்ந்த பதினாறும் நூற்றாண்டின் கலாசாரத்தில் ஊறித் திளைத்தவர். மறுமலர்ச்சிக் கலையில், குறிப்பாக ஓவிய, இசைக் கலைகளில் ஈடுபாடுகொண்டு அவற்றைப் போற்றி வளர்த்தார். பாங்குத் தொழிலில் ஈடுபட்டிருந்த 'ஃபக்கர்ஸ்' (Fuggers) போன்ற குடும்பங்களை ஆதரித்ததன்மூலம் ஜெர்மனியிலும் நெதர்லாந்திலும்

முதலாளித்துவம் தோன்றுவதற்கு இவர் உதவினர். ஸ்பெயினின் ஆதிக்கம் கடல்கடந்து வெளிநாடுகளில் பரவுவதற்கு, இவர் காரணமாக இருந்தார்.[1] நெப்போலியன் இவரைப்பற்றிக் கூறும்பொழுது, சார்லஸ் ஒரு பிராடஸ்டெண்டாக மாறி, ஜெர்மனியில் தேசிய பிராடஸ்டென்டு முடியாட்சியை ஏற்படுத்தியிருக்க வேண்டுமென்று கருத்துத் தெரிவிக்கின்ருர். ஆனல், அவர் அவ்வாறு செய்திருந்தால் புனித ரோமானியப் பேரரசு சிதைவுற்றிருக்கும். பேரரசிற்குட்பட்டிருந்த சிற்றரசுகள், சார்லஸ் ஒரு பிராடஸ்டென்டு என்ற நிலையில்கூட அவருக்குக் கீழ்ப்படிந்து அவருடைய அதிகாரத்தை ஏற்றுக்கொண்டிருப்பார்கள் என்று அறுதியிட்டுக் கூறமுடியாது. மேலும், சார்லஸ் போன்ற ஒரு தீவிர கத்தோலிக்கவாதி எந்த ஒரு காரணத்திற்காகவும், பிராடஸ்டெண்டாக மாறுவார் என்பது நடவாத ஒரு நிகழ்ச்சியாகும். சார்லஸுக்கு எதிராகச் செயல்பட்டுக் கொண்டிருந்த சிற்றரசர்கள், அரசர்கள், போப்புகள், கொள்கையைப் புறக்கணித்து, பொய், சூது, சூழ்ச்சி ஆகியவற்றில் ஈடுபட்ட சுயநலவாதிகள் ஆகியவருடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது ஐந்தாம் சார்லஸ் பதினரும் நூற்ருண்டின் முற்பகுதியின் தலைசிறந்த மன்னராகவே விளங்குகிருர்.[2] அடக்குமுறைமூலமும், கடுமையான நடவடிக்கைகள்மூலமும் இவர் ஓர் எதேச்சாதிகார ஆட்சியை ஏற்படுத்தினர் என்றும், பிராடஸ்டென்டு சமயத்தை ஒடுக்கும் பணியில் ஈடுபட்டார் என்றும், இவர்மீது குற்றம் சாட்டப்படுகின்றது. எதேச்சாதிகார ஆட்சியும், மாற்றுச் சமயத்தை ஒடுக்குவதும் ஸ்பெயினில் மட்டுமோ, கத்தோலிக்க நாடுகளில் மட்டுமோ நடந்த நிகழ்ச்சிகள் அன்று. பதினரும் நூற்ருண்டில் அவை ஐரோப்பாவெங்கும் சாதாரணமாக நடந்த நிகழ்ச்சிகள் ஆகும். பதினரும் நூற்ருண்டின் இந் நிகழ்ச்சிகளை, இருபதாம் நூற்ருண்டின் அளவுகோல் கொண்டு ஆராய்வது பொருத்தமற்றது.[3]

ஐரோப்பாவிலிருந்து துருக்கியர்களை வெளியேற்ற முடியவில்லை என்ருலும், அவர்களின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தினர். மத்தியதரைக் கடல்பகுதியில் கடற் கொள்ளைக்காரர்களின் கொட்டத்தை அடக்கினர். திருச்சபையின் ஒற்றுமையை நிலைநாட்ட முடியவில்லையெனினும், ஜெர்மனியில் அமைதி நிலவு

[1] Modern Europe to 1870—Carlton J. H. Hayes, page 205.

[2] A text book of Modern European History, 1453-1661—G. W. Southgate, page 73.

[3] Notes on European History, Vol. II—William Edwards, page 219.

வதற்கான ஒரு சூழ்நிலையை உருவாக்கினார். ஜெர்மனியில் பிராடஸ்டென்டு சமயத்தின் வளர்ச்சியைத் தடுக்க முடியவில்லை என்றாலும் ஸ்பெயின், நெதர்லாந்து, தெற்கு ஜெர்மனி ஆகிய பகுதிகளில் அச் சமயம் பரவுவதைத் தடுத்தார். இத்தாலியில் ஸ்பெயினின் ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டது. இவ்வளவு சாதனைகளைப் புரிந்த ஐந்தாம் சார்லஸ், ஐரோப்பாவின் ஒரு தலைசிறந்த மன்னர் என்பதில் ஐயமில்லை. தான் பட்டத்துக்கு வருவதற்கு முன்பு இருந்ததைவிட, ஹாப்ஸ்பர்க் குடும்பத்தை இவர் வலிமையுள்ளதாக ஆக்கினார் என்பதும், இவருடைய பரந்த அரசின் வெவ்வேறு பகுதிகள், இவர் ஆட்சியில் முன்பிருந்ததைவிட வலிமை, செல்வம், புகழ் ஆகியவற்றுள் மிகுந்து விளங்கின என்பதுமே இவருடைய பெருமைக்குச் சான்றுகளாகும்.

## II. இரண்டாம் பிலிப் (1556-1598)

பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதியை ஐரோப்பிய வரலாற்றில் ஐந்தாம் சார்லஸின் காலம் என்று கூறினால், அந் நூற்றாண்டின் பிற்பகுதியை இரண்டாம் பிலிப்பின் காலம் என்று கூறுவது பொருந்தும். வலிமையிலும் செல்வாக்கிலும் ஸ்பெயின் உச்சநிலையை அடைந்திருந்த தருணத்தில், இரண்டாம் பிலிப் அரியணை ஏறினார். ஐந்தாம் சார்லஸின் பரந்த பேரரசு முழுவதும் இவருக்குக் கிடைக்கவில்லை என்பதையும், அதன் சில பகுதிகளான ஸ்பெயின், நெதர்லாந்து, பிரான்ஷ் காம்டி, மிலான், நேப்பிள்ஸ், சிசிலி, வட ஆப்பிரிக்கா, அமெரிக்கா, மேற்கிந்தியத் தீவுகளில் ஸ்பானியக் குடியேற்றங்கள், பிலிப்பைன் தீவுகள் ஆகியவை மட்டுமே இவருக்குக் கிடைத்தன என்பதையும் நாம் முன்பு குறிப்பிட்டுள்ளோம். சார்லஸின் பேரரசின் மற்றப் பகுதிகளின் அரசுரிமை அவருடைய தம்பி ஃபெர்டினாண்டுக்குக் கிடைத்தது. இரண்டாம் பிலிப், அவருடன் திருமண உறவுகள்மூலம் நெருங்கிய நட்புறவு கொண்டிருந்தார்.

இரண்டாம் பிலிப்பின் கொள்கைகள், அவர் கையாண்ட முறைகள் ஆகியவற்றின் அடிப்படையில் இவரைப்பற்றி முரண்பட்ட கருத்துகள் வரலாற்றாசிரியர்களால் தெரிவிக்கப்பட்டுள்ளன. ஆங்கில வரலாற்றறிஞர்கள் இவரை ஒரு கொடுங்கோலர் என்றும், சமயவெறி கொண்டவர் என்றும் சித்திரிக்கின்றனர். ஸ்பானிய அறிஞர்கள் அவரை ஐரோப்பாவின் தலைசிறந்த மன்னர் என்றும், பண்பாட்டின் காவலர் என்றும் புகழ்ந்துள்ளனர். இந்த மதிப்பீடுகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருந்தபோதிலும், இரண்டாம் பிலிப்பின் கொள்கை

களும் குண இயல்புகளும் நமக்குத் தெளிவாக விளங்குகின்றன. தம் தந்தையைப் போலல்லாமல், இரண்டாம் பிலிப் ஸ்பெயினைத் தம் தாய்நாடாகக் கருதினர். தம் பேரரசில் அடங்கியிருந்த பல பகுதிகளுள், ஸ்பெயினுக்கு முக்கியத்துவம் அளித்தார். ஸ்பெயினில் பிறந்து வளர்ந்ததால் அந் நாட்டின்மீது அவருக்கு ஒரு தனிப் பற்று இருந்தது. ஸ்பானிய மொழியை நன்ருகப் பேசினர். ஸ்பெயினிலேயே வாழ்ந்தார். ஸ்பானியர்களையே தன் அதிகாரிகளாக நியமித்துக் கொண்டார். ஸ்பெயின் வலிமையும் புகழும் பெறுவதற்கு எல்லா முயற்சிகளும் மேற் கொண்டார். உலகத்திலேயே ஸ்பெயினைத் தலைசிறந்த நாடாக ஆக்க வேண்டுமென்பது அவர் நோக்கம்.

மேலும், இவர் கத்தோலிக்கச் சமயத்தில் ஆழ்ந்த பற்று கொண்டவர். பிராடஸ்டென்டு சமயம், திருச்சபைக்கு எதிராகக் கிறிஸ்துவப் பண்பாட்டிற்கே ஓர் ஆபத்தாக விளங்கிய இயக்கம் என்றும், ஆகவே, அது பூண்டோடு ஒழிக்கப்பட வேண்டும் என்றும் எண்ணங்கொண்டவர். தம் நாட்டின் நலனை விட கத்தோலிக்க சமயத்தின் நலனைப் பேணுவதுதான் தம் கடமை என்று கருதினர். எனவே, இவருடைய அயல்நாட்டுக் கொள்கையில்கூட இவருடைய கத்தோலிக்க சமயப்பற்று குறுக் கிட்டது. நாட்டின் செல்வமெல்லாம் சமயப் போர்களில் வீணுக்கப்பட்டு, நாட்டின் நிதிநிலை சீர்கேடு அடைந்தது.

இரண்டாம் பிலிப் கொள்கைகளும், குறிக்கோள்களும் கொண்ட ஓர் அரசர் மட்டுமன்றி, அவற்றைச் செயல்படுத்து வதற்குத் தேவையான ஆற்றலும், மன உரமும் படைத்தவர். அலுப்பின்றி இரவும் பகலும் நிர்வாக அலுவல்களைக் கவனிக்கும் திறமையும், வலிமையும், பொறுமையும் அவரிடமிருந்தன. நிர்வாகத் தொடர்பான கடிதப் போக்குவரத்து, ஆணைகள் முதலியவற்றைத் தாமே நேரடியாகக் கவனிக்கும் அளவிற்கு அவருக்கு நிர்வாகத்தில் ஈடுபாடு இருந்தது. போர்வாளை ஏந்திப் போர் செய்வதைவிட, பேனு முனையில் சட்டங்கள் தீட்டுவது, ஆணைகள் இடுவது போன்ற பணிகளை வெகுதிறமையாகச் செய்தார்.[1] போர் புரிவதைவிட, அரச தந்திரத்தில் நம்பிக்கை கொண்ட அவர், தாம் சரி என்று கருதும் எந்தக் காரணத்திற் காகவும், போர்புரியத் தயங்கமாட்டார். அரசியல், சமயத் துறையில் தம் கருத்திற்கு முரண்பட்ட கருத்துகள் தோன்றுவதைச் சிறிதும் விரும்பாத பிலிப், தமக்கு எதிர்ப்புத் தோன்றுவதை அடியோடு வெறுத்தார்.

[1] History of Europe since 1500—C. J. H. Hayes & C. W. Cole, page 74.

இவ்வளவு ஆற்றலும் திறமையும் கொண்டிருந்த அவர், உலகத்திலேயே ஸ்பெயினைத் தலைசிறந்த நாடாக ஆக்கவேண்டுமென்ற குறிக்கோளிலும், கிறிஸ்துவ உலகின் ஒற்றுமையை மீண்டும் நிலை நாட்டவேண்டும் என்ற குறிக்கோளிலும் தோல்வியே அடைந்தார். இதற்கு முக்கிய காரணம், இவர் திட்டங்கள் பலவற்றை ஒரே சமயத்தில் செயல்படுத்த முயன்றதுதான். எடுத்துக் காட்டாக, இவருடைய பரந்த அரசின் சிக்கலான நிர்வாக முறையைக் கவனித்ததோடு மட்டுமன்றி, போர்ச்சுகலுடன் போர் செய்து, அந் நாட்டை இணைத்துக் கொள்ளவேண்டிய பொறுப்பும் இவரிடம் இருந்தது. பயன்தரத்தக்க வர்த்தக—குடியேற்றக் கொள்கையை மேற்கொள்ள வேண்டிய பொறுப்பு ஒருபுறமிருக்க, நெதர்லாந்து மக்களின் புரட்சியை ஒடுக்கவேண்டிய பணி மற்றொருபுறம் இருந்தது. கிறிஸ்துவ உலகத்தை முகம்மதியர்களிடமிருந்து காப்பாற்றும் பொறுப்பை ஏற்றிருந்த இவர், இங்கிலாந்திலும் ஃபிரான்சிலும் கத்தோலிக்க சமயத்தை நிலைநாட்டும் பணியிலும் ஈடுபடவேண்டியிருந்தது. பல பிரச்சினைகளை ஒரே சமயத்தில் அணுகவேண்டிய சூழ்நிலையில், நாட்டின் நெருக்கடியான நிதிநிலை, நாட்டின் நிலைமையை மேலும் சிக்கலாக்கியது.

### பிலிப்பின் ஆட்சியில் ஸ்பெயின்

ஸ்பெயின் ஒரே அரசாக இருந்தாலும், மக்களிடையே ஒற்றுமை உணர்ச்சி இல்லை. காஸ்டில், அரகான், கிரானடா என்ற வெவ்வேறு பகுதிகள் தங்கள் பழைய மரபுகள், சிறப் புரிமைகளை விட்டுக்கொடுக்கத் தயாராக இல்லை. ஸ்பெயின் நாட்டுப் பல அரசுகளிடையே சட்ட திட்டங்கள், நிர்வாக அமைப்பு ஆகியவை வேறுபட்டே இருந்தன. இந்த நிலையை மாற்றி, ஸ்பெயினை ஒற்றுமைப்படுத்த வேண்டுமென்பது பிலிப்பின் நோக்கம். இந்த நோக்கம் நிறைவேற அரசனுடைய அதிகாரம் வலுப்படுத்தப்பட வேண்டும். இதற்கான வழி முறைகளைப் பிலிப் மேற்கொண்டார். மாநிலங்களின் சட்ட மன்றங்களின் அதிகாரங்கள், உரிமைகளை ஒப்புக்கொள்ள மறுத்தார். 'கோர்டெஸ்' (Cortes) என்ற ஸ்தல சட்டமன்றங்களின் உதவியின்றியே, சட்டங்களை இயற்றினார். புது வரிகள் விதிக்க அனுமதி பெறுவதற்கு மட்டுமே இம்மன்றங்கள் கூட்டப்பட்டன. அரசின் முக்கிய பதவிகளிலிருந்து பிரபுக்களை நீக்கிவிட்டு, நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்களை அப்பதவிகளில் அமர்த்தினார். அரசரின் ஆணையின்படி, அரசரின் பணியாளர்களால், அரசரால் நடத்தப் பட்ட அரசாங்கமாக விளங்கியது ஸ்பெயின் நிர்வாகம். இதை, 'அரச அவை அரசாங்கம்' (Court Government) என்று ஓர் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்[1]. இந்தச் சிக்கலான நிர்வாகத்தின் மையமாக

1 Modern Europe to 1870—Carlton J. H. Hayes, page 208.

விளங்கினர் அரசர்.[1] மேலும், தன் அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்ள 'இன்குசிஷன்' மன்றத்தைப் பயன்படுத்திக்கொண்டார். அரசர் அதிகாரம் வலுப்படுவதற்குத் திருச்சபை உதவியாக இருந்தது.

அமெரிக்கக் குடியேற்றங்களிலிருந்து ஏராளமான செல்வம் குவிந்தும்கூட ஸ்பெயின் பொருளாதார நிலை திருப்திகரமாக இல்லை. அமெரிக்க வாணிபத்தில் ஸ்பெயின் ஏகபோக உரிமை பெற்றிருந்தாலும், மற்ற ஐரோப்பிய நாடுகள் நேரடியாகவும் மறைமுகமாகவும் இந்த வர்த்தகத்தில் ஈடுபட்டு இலாபம் சம்பாதித்தன. அமெரிக்காவிலிருந்து வந்து குவிந்த செல்வம் காரணமாக நாட்டில் விலைவாசிகள் ஏறின. அமெரிக்கச் செல்வத்தைத் தொழில், வர்த்தகத் துறைகளில் முதலீடுசெய்து உள்நாட்டுத் தொழில்களை வளர்க்கத் தவறியதால், ஸ்பெயின் தன்னுடைய தேவைகளுக்கு வெளிநாடுகளிடம் கையேந்தி நிற்கவேண்டிய நிலை ஏற்பட்டது. அமெரிக்காவிலிருந்து வந்த செல்வம் முழுவதும், ஸ்பானிய மக்களுக்குத் தேவைப்பட்ட பொருள்களை வெளிநாடுகளிலிருந்து வாங்குவதற்கும், போர்கள் நடத்துவதற்கும் செலவிடப்பட்டது. அரசாங்கத்தினுல் வசூலிக்கப்பட்ட 'அல்கபாலா' (Alcabala) என்ற பத்து சதவீத விற்பனைவரி நாட்டின் வாணிப வளர்ச்சியைத் தடைசெய்தது. உற்பத்தி பாதிக்கப்பட்டது. நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் முக்கியப் பங்கு ஏற்றிருந்த யூதர்கள், மூர்கள் போன்றவர்களை ஒடுக்கும் பணியில் பிலிப் ஈடுபட்டதால், நாட்டின் பொருளாதார வளர்ச்சி தடைப்பட்டது.

இவருடைய அரசியல், பொருளாதாரக் கொள்கைகளின் விளைவாக நாட்டின் பல பகுதிகளில் கிளர்ச்சிகள் தோன்றின. 1568-ல் ஸ்பெயினின் தென்பகுதியில் வசித்த மூர்கள் செய்த கிளர்ச்சி, இரண்டு ஆண்டுகள் கடும் போருக்குப் பிறகு ஒடுக்கப்பட்டது. 1591-ல் அரகான் அரசில் மற்ருெரு கிளர்ச்சி தோன்றியது. இவற்றையெல்லாம்விட பயங்கரமான மற்ருெரு புரட்சி, நெதர்லாந்து நாட்டில் உருவெடுத்தது. இதைப்பற்றி நாம், இத் தலைப்பின் மற்ருெரு பகுதியில் விரிவாக ஆராயலாம்.

1580-ல் மற்ருெரு சிக்கலான பிரச்சினை உருவெடுத்தது. ஐபீரியத் தீபகற்பம் முழுவதையும், தன் ஆட்சியின்கீழ்க் கொண்டு

[1] Thus Philip's rule became a personal despotism exercised through subservient Royal Councils............Royal autocracy checked constitutional development and popular government was unknown: Notes on European History, Vol. II—William Edwards, page 274.

வரும் நோக்கத்துடன், சுதந்தர அரசாக இயங்கிவந்த போர்ச்சு கலின்மீது பிலிப் உரிமை கொண்டாடினர். 1580-ல் ஸ்பானியத் துருப்புகள் போர்ச்சுகலைக் கைப்பற்றின. போர்ச்சுகல் மக்களின் ஆதரவைப் பல வழிகளில் பெறமுயன்றும், பிலிப்பின் ஆட்சியைப் போர்ச்சுகல் மக்கள் ஏற்க மறுத்தனர். ஆனால், அறுபது ஆண்டுகள் கழித்தே ஸ்பெயினின் ஆதிக்கம் அங்கு ஒழிக்கப்பட்டது. போர்ச்சுகல் ஸ்பெயினின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்ததால், ஸ்பெயினுக்கு அதிகப் பொறுப்புகளும், செலவுகளும், இன்னல் களும் ஏற்பட்டனவேயன்றி நன்மைகள் ஏதும் இல்லை.

### அமெரிக்கக் குடியேற்றங்கள்

அமெரிக்கக் கண்டத்தில் ஸ்பெயினின் குடியேற்றங்களைப் பேணிப் பாதுகாப்பதும் வளர்ப்பதும் இவருடைய முக்கியப் பொறுப்புகளில் ஒன்றாக அமைந்திருந்தது. ஏறக்குறைய ஒன்றரை லட்சம் ஸ்பானியர்கள் அமெரிக்காவில் குடியேறி, இருநூறுக்கும் மேற்பட்ட நகரங்களை நிறுவியிருந்தனர். அரசருடைய கட்டுப் பாட்டிற்குட்பட்டு 'Council of the Indies' என்ற ஒரு சபை இந்தக் குடியேற்றங்களின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தது. வைஸ் ராய்கள், கவர்னர்கள் போன்ற அதிகாரிகளை இந்தக் கவுன்சில் நியமித்தது. குடியேற்றங்களில் திருச்சபை அரசரின் அதிகாரத் திற்குட்படுத்தப்பட்டு, அரசர் அதிகாரம் வளர்வதற்குப் பெரிதும் உதவியது. அமெரிக்கக் குடியேற்றங்களின் வெள்ளிச் சுரங்கங் களிலிருந்து ஏராளமான வெள்ளி, ஸ்பெயினில் வந்து குவிந்தது. அமெரிக்காவில் குடியேறுவதற்கும் வியாபாரம் செய்வதற்கும், ஸ்பானியரல்லாதவரும் ஐந்தாம் சார்லஸ் காலத்தில் அனுமதிக்கப்பட்டனர். ஆனால், இரண்டாம் பிலிப் காலத்தில் ஸ்பானியர்களுக்கு மட்டுமே இவ்வுரிமை வழங்கப்பட்டது. இந்த வியாபாரத்தை நடத்துவதற்கென்று 'Casa-da-Contratacion' என்ற ஒரு நிறுவனம் இருந்தது. இதற்கு உதவியாக 'Consullado' என்ற வியாபாரிகள் நீதிமன்றமும் செயல்பட்டு வந்தது. அமெரிக் காவில் ஸ்பானிய ஆதிக்கம் உறுதிப்படுத்தப்பட்டது. சுரங்கங்களின் அபிவிருத்தி, குடியேற்ற ஆட்சிமுறை நிறுவப்படுதல் ஆகியவை பிலிப்பின் ஆட்சியின் சாதனைகள். இவை தவிர ஸ்பானியர்கள் பிலிப்பைன் தீவுகளில் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்தியதும் இவர் காலத்தில்தான்.

வெளிநாட்டுக் கொள்கை: ஃபிரான்ஸ்: ஃபிரெஞ்சு அரசர் முத லாம் ஃபிரான்சிஸ் 1547-ல் இறக்கவே, அவரது மகன் இரண்டாம் ஹென்றி ஃபிரெஞ்சு அரியணை ஏறினர். ஐந்தாம் சார்லஸுக்கும் ஃபிரான்சிஸுக்கும் நடந்து கொண்டிருந்த ஆதிக்கப் போட்டி,

இவர் ஆட்சியிலும் தொடர்ந்தது. 1557 வரை இப் போரை நடத்தி வெற்றி ஏதும் காணாத ஐந்தாம் சார்லஸ், அந்த ஆண்டில் தம் அரச பதவியைத் துறந்தார் என்பதை நாம் முன்பு கண்டோம். இரண்டாம் பிலிப் இப் போரில் தொடர்ந்து ஈடு பட்டார். இத்தாலியில் ஃபிரெஞ்சுப் படைகள் தோற்கடிக்கப் பட்டன. பிலிப்புக்கு ஆதரவாகப் போரில் ஈடுபட்ட இங்கிலாந் திடமிருந்து ஃபிரான்ஸ் ''கலே' (Calais) நகரத்தைக் கைப் பற்றியது. ஆனால், மீண்டும் ஸ்பானியப் படைகள் 'செயின்ட் குவென்டின்' (St. Quentin), 'கிரேவலின்ஸ்' (Gravelines) என்ற இரண்டு போர்களில் (1557-58) ஃபிரான்சைத் தோற் கடித்தன. எனவே, ஃபிரான்ஸ் போரை நிறுத்தி ஸ்பெயினுடன் உடன்படிக்கை செய்துகொள்ள இசைந்தது. 1559-ல் 'கேடோ கேம்பிரசிஸ்' (Treaty of Cateau Cambresis) உடன்படிக்கை கையெழுத்தாகியது. இதன்படி இத்தாலியின்மீது ஸ்பானிய ஆதிக்கம் ஃபிரான்சினால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஃபிரான்சின் வடகிழக்கு எல்லையில் மெட்ஸ், டூல், வெர்டன் என்ற மூன்று பகுதிகள் ஃபிரான்சுக்குக் கிடைத்தன. இந்த உடன்படிக்கை ஃபிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் இடையே நடந்துகொண்டிருந்த அரசியல் ஆதிக்கப்போட்டிக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது. பிலிப்பின் ஆட்சியில், இவ்விரு நாடுகளும் மீண்டும் போரில் ஈடுபட்டன. ஆனால், இந்தப் போர் சமயக் காரணங்களை ஒட்டி எழுந்த போர். பிராடஸ்டென்டு இயக்கம் பரவியதன் விளைவாக ஃபிரான்ஸ் இரண்டாகப் பிளவுபட்டு, கத்தோலிக்கர்களுக்கும், பிராடஸ்டென்டுகளுக்குமிடையே போர்கள் நிகழ்ந்தன. பிலிப் இந்தப் போரில் கத்தோலிக்கர்களுக்கு ஆதரவாக ஈடுபட்டார். ஸ்பானியப் படைகள் ஃபிரான்சில் புகுந்து, பாரிஸ் நகரைக்கூடக் கைப்பற்றின. 1589-ல் நான்காம் ஹென்றி ஃபிரெஞ்சு அரசராகப் பதவி ஏற்றவுடன், ஸ்பானியப் படைகளை விரட்டப் போரைத் துவக்கினார். 1598 வரை இந்தப் போர் நடந்தது. ஃபிரான்சின் மீது தன் ஆதிக்கத்தை ஏற்படுத்த முடியாது என்பதை உணர்ந்த பிலிப், 1598-ல் வெர்வின்ஸ் உடன்படிக்கையை ஏற்றுக் கொண்டார். இது கேடோ கேம்பிரசிஸ் உடன்படிக்கையை அப்படியே உறுதிப்படுத்தியது. இவ்வாறு தன்னுடைய ஃபிரெஞ்சுக் கொள்கையில் பிலிப் தோல்வியைத்தான் கண்டார்.

### இங்கிலாந்து

பிலிப்பின் ஆட்சியின் தொடக்கத்தில் ஸ்பெயினுக்கும் இங்கிலாந்துக்குமிடையே நட்புறவு நிலவிவந்தது. ஏனெனில், இங்கிலாந்து அரசியான டியூடர் மேரியை (1553-58) பிலிப் மணந்திருந்தார். மேரியும் கத்தோலிக்கச் சமயத்தின் ஆதர வாளர். இங்கிலாந்தில் கத்தோலிக்கச் சமயத்தை மீண்டும்

ஏற்படுத்தித் தன் வெளிநாட்டுக் கொள்கையை பிலிப்பின் கொள்கைக்கு ஒத்தவகையில் அமைத்துக் கொண்டார். 1558-ல் மேரி இறக்கவே, எலிசபெத்து அரசி பட்டத்திற்கு வந்தார் (1558–1603). இது இவ்விரு நாடுகளுக்கிடையே இருந்த உறவு முறையை மாற்றி அமைத்துவிட்டது. இரண்டாம் பிலிப் இவருடைய நட்புறவை நாடி, இவரை மணந்துகொள்ள எண்ணினார். ஆனால், எலிசபெத் அரசி இத் திட்டத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. மேலும் இவர் ஒரு பிராடஸ்டென்டு சமயவாதி. ஸ்பெயினின் நலனிற்கு ஊறு விளைவிக்கும் வகையில், கடல்கடந்த வர்த்தகத்தில் தலையிடுவது, ஸ்பெயினின் ஆதிக்கத்திலிருந்த நெதர்லாந்து மக்களின் புரட்சிக்கு ஆதரவு அளிப்பது போன்ற செயல்களில் இங்கிலாந்து ஈடுபட்டதால் இவ்விரு நாடுகளுக்கிடையே நட்புறவு ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இல்லாமல் போய்விட்டது. எலிசபெத்துக்கு எதிராகப் பல சூழ்ச்சிகளுக்கும் சதித் திட்டங்களுக்கும் ஆதரவு அளித்து, எலிசபெத்தைப் பதவியிலிருந்து நீக்கி, ஸ்காட்லாந்து அரசியான மேரி ஸ்டூவர்ட் என்பவரை இங்கிலாந்தின் அரசியாக்க, பிலிப் பல முயற்சிகள் செய்தார்.[1] இவ்வாறு செய்த பல முயற்சிகளிலும் தோல்வியுற்ற பிலிப், இறுதியில் போர் மூலம் இங்கிலாந்தை ஒடுக்கிவிடலாம் என்று மனப்பால் குடித்தார்.

இங்கிலாந்துக்கும், ஸ்பெயினுக்கும் 1588-ல் நடந்த இந்தப் போருக்குப் பல முக்கிய காரணங்கள் இருந்தன.

1 இங்கிலாந்தின் டியூடர் வம்சத்து அரசர் ஏழாம் ஹென்றி தன் மகள் மார்கரெட் என்பவரை, ஸ்காட்லாந்து அரசர் நான்காம் ஜேம்ஸுக்கு மணம் புரிவித்தார். இவர்களுடைய சந்ததிகளில் ஒருவரான மேரி 1542-ல் ஸ்காட்லாந்தின் அரியணை ஏறினார். ஏழாம் ஹென்றியின் சந்ததி என்ற காரணத்தினால் இங்கிலாந்து அரியணை ஏற உரிமைபெற்றவர் என்று கருதப்பட்டது. ஆனால், 1558-ல் எலிசபெத் பட்டம் பெறவே இவருக்கு அந்த வாய்ப்பு இல்லை. எனினும், எலிசபெத்திற்குச் சந்ததிகள் இல்லையென்றால், அவருக்குப்பிறகு மேரிக்குத்தான் இங்கிலாந்தின் அரசியாகும் உரிமை உண்டு என்று கருதப்பட்டது. மேலும் ஆன்பொலினின் மகள் எலிசபெத் என்ற காரணத்தினால அவருக்குச் சட்டப்படி உரிமை இல்லையென்றும், மேரிக்குத்தான் உரிமை அதிகம் என்றும் கத்தோலிக்கர் வாதாடினர். இவர் ஃபிரான்சிற்கு அனுப்பப்பட்டு, ஃபிரெஞ்சு அரசர் இரண்டாம் ஃபிரான்சிஸை மணந்தார். 1561-ல் கணவர் இறக்கவே ஸ்காட்லாந்து திரும்பினார். முதலில் ஸ்காட்லாந்து மக்களின் அன்பையும், ஆதரவையும் பெற்ற இவர் தன் ஒழுக்கம் கெட்ட நடத்தையின் காரணமாக மக்களின் ஆதரவை இழந்து, ஸ்காட்லாந்திலிருந்து துரத்தப்பட்டு இங்கிலாந்தில் சரண் புகுந்தார் (1568). எலிசபெத்தினால சிறையிடப்பட்ட இவர், எலிசபெத்துக்கு எதிராகச் செய்யப்பட்ட சூழ்ச்சிகளுக்கு மையமாக விளங்கினார். இரண்டாம் பிலிப் இவரை அரசியாக்க முயன்றார். மேரி உயிருடன் இருந்தால், தன் பதவிக்கும், நாட்டிற்கும் பிராடஸ்டென்டு மதத்திற்கும் ஆபத்து என்பதை உணர்ந்த எலிசபெத் 1587-ல் அவரைக் கொல்ல உத்தரவிட்டார்.

1. இந்தப் போருக்கு, சமயம் ஒரு முக்கிய காரணமாக இருந்தது என்ற ஒரு கருத்து உண்டு. பிராடஸ்டென்டு, கத்தோலிக்கச் சமயங்களுக்கிடையே நடந்து கொண்டிருந்த பெரும் போரின் ஒரு பகுதி என்று சிலர் இதைக் கருதுவர். இரண்டாம் பிலிப் கத்தோலிக்கச் சமயத்தின் ஆதரவாளராகப் பிராடஸ் டென்டு சமயத்தை ஒழிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். எலிச பெத் பிராடஸ்டென்டு சமயத்தின் பாதுகாவலராகக் கருதப் பட்டுக் கத்தோலிக்க அபாயத்தை எதிர்த்துப் போராடும் பொறுப்பை அவர் ஏற்கவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.[1]

2. இந்தப் போருக்குச் சில முக்கிய பொருளாதாரக் கார ணங்களும் இருந்தன. புது உலகமான அமெரிக்காவைக் கண்டு பிடித்து, அதைப் பொருளாதாரச் சுரண்டலுக்கு உள்ளாக்கி அந்தச் செல்வம் முழுவதையும் ஸ்பெயின் ஏகபோக உரிமையாக அனுபவித்து வந்தது. இங்கிலாந்திற்கு இந்தச் செல்வத்தில் பங்கு இல்லை.

3. மேலும் 'ஹாக்கின்ஸ்' (Hawkins), 'டிரேக்' (Drake), 'ராலே' (Raleigh), 'காவெண்டிஷ்' (Cavendish), 'கில்பர்ட்' (Gilbert) போன்ற ஆங்கில மாலுமிகளும், கடற் தளபதிகளும், ஸ்பானிய வியாபாரத்திற்கு ஊறு விளைவிக்கும் வகையில் அமெரிக் காவிலிருந்து வெள்ளி போன்ற பல பொருள்களை ஏற்றிவந்த ஸ்பானியக் கப்பல்களை நடுக்கடலில் தாக்கிச் சூறையாடினர். ஸ்பானியக் குடியேற்றங்கள்மீதும் கொள்ளையடிக்கும் நோக்கத் துடன் இதுபோன்ற தாக்குதல்கள் நடத்தப்பட்டன. இச் செயல் கள் எல்லாம் எலிசபெத் அரசியின் முழு ஆதரவுடனும், ஆசி யுடனும் நடைபெற்றுவந்தன. இது பிலிப்பின் ஆத்திரத்தையும் கோபத்தையும் தூண்டியது.

4. இங்கிலாந்து ஸ்பெயினுக்கு எதிராக நெதர்லாந்துக்கும் ஃபிரான்சுக்கும் உதவியளித்தது. குறிப்பாக அப்பொழுது ஸ்பெயினின் ஆதிக்கத்திலிருந்து விடுதலைபெற நெதர்லாந்து மக்கள்

[1] 'With the closing of the ranks effected by the Council of Trent (1563) the Catholic Counter Reformation waxing stronger everyday became more resolutely set on wrinning back the lost ground......... The outstanding fact of the last quarter of the sixteenth century is that inexorably Catholicism and Protestantism were drawn into a world struggle in which Phillip of Spain presented himself as the Zealous champion of Rome and Elizabeth with Characteristic manifest reluctance became the Paladin of the newer faith...' A History of Europe—Ferdinand Schevill, page 170.


ஸ்பானிஷ் ஆர்மடா
சென்ற வழி - கி.பி.1588
லண்டன்
ஆங்கில கால்வாய்
கலே
பிரான்ஸ்
லிஸ்பன்
கேடிஸ்

நடத்திக் கொண்டிருந்த விடுதலைப் போருக்கு எலிசபெத் பண உதவியும் படை உதவியும் அளித்தார். இது இவ்விரு நாடுகளுக் கிடையே பகைமை உணர்ச்சியை மேலும் வளர்த்தது.

5. ஸ்காட்லாந்து அரசி மேரியை, எலிசபெத் கொன்றதால், அவர்மீது பழிவாங்க வேண்டும் என்ற இரண்டாம் பிலிப்பின் நோக்கமும், அரசியல் வர்த்தக, சமயத்துறைகளில் இங்கிலாந்தை ஸ்பெயினின் ஆதிக்கத்திற்குட்படுத்த வேண்டும் என்ற நோக்கமும் இப் போர் மூளுவதற்கு மற்றொரு காரணமாக அமைந்தது.

மேற்கூறிய நிகழ்ச்சிகளால் பொறுமையை இழந்த இரண்டாம் பிலிப், 1588-ல் இங்கிலாந்தைத் தண்டிக்க முடிவு செய்து ஒரு மாபெரும் கப்பற் படையைத் தயாரித்தார். 130 கப்பல் களையும், 8000 மாலுமிகளையும், 19,000 போர் வீரர்களையும் கொண்ட இந்த ஸ்பானியக் கடற்படைதான் ஐரோப்பிய வரலாற்றில் 'The Invincible Armada' என்று புகழ் பெற்றது. இங்கிலாந்தும் இந்தச் சவாலை ஏற்க ஆயத்தம் செய்து கொண்டிருந்தது. அளவில் சிறியதும், எளிதில் நகரக்கூடியதுமான கப்பல் களைக் கொண்ட ஒரு கடற்படை திரட்டப்பட்டது. பிலிப் எதிர்பார்த்ததற்கு மாறாக இங்கிலாந்து மக்கள் வேற்றுமை யுணர்ச்சிகளை எல்லாம் மறந்து, கத்தோலிக்கர்கள், பிராடஸ் டென்டுகள் எல்லோரும் ஒன்றுதிரண்டு நாட்டைக் காக்க, 'செய் அல்லது செத்துமடி' என்ற உணர்வில் செயல்பட முன்வந்தனர். மக்களிடையே தேசிய உணர்வு உச்சநிலையை அடைந்தது. தூரத்திலிருந்தே சுடுவதற்கு ஏற்றவகையில் பீரங்கிகள் பொருத்தப்பட்டிருந்த ஆங்கிலக் கப்பல்கள், கனம் நிறைந்த ஸ்பானியக் கப்பல்கள்மீது தாக்குதலைத் தொடங்கின. அவை களால் எளிதில் நகரவோ தாக்குதலிலிருந்து தப்பவோ முடிய வில்லை. திறமையும், ஆற்றலும், வீரமும் மிக்க 'ஹோவர்டு பிரபு' (Lord Howard), 'ஸர் ஃபிரான்சிஸ் டிரேக்' (Sir Francis Drake), 'ஸர் மார்டின் ஃபிரோபிஷர்' (Sir Martin Firobisher) போன்ற ஆங்கிலத் தளபதிகளின் தலைமையில் இங்கிலாந்து கடற்படை போரிட்டது. எனவே, போரின் முடிவு இங்கிலாந்துக்குச் சாதகமாக அமைந்ததில் வியப்பொன்றுமில்லை. இங்கிலீஷ் கால்வாயில் எட்டு நாள்கள் தொடர்ந்து நடந்த தாக்குதலின் விளைவாக, பல ஸ்பானியக் கப்பல்கள் சேதமடைந்தன. பழுது பார்ப்பதற்காகக் 'கலே' (Calais) துறைமுகத்தில் தங்கியிருந்த எஞ்சியிருந்த ஸ்பானியக் கப்பல்கள் மீண்டும் தாக்குதலுக்கு உள்ளாக்கப்பட்டு ஆங்கிலேயர்களால் அழிக்கப்பட்டன. இதற்குப் பிறகும் தொடர்ந்து போரை நடத்த இயலாத நிலையில் ஸ்பானியக் கடற்படை நாடு திரும்ப நினைத்தது. ஆனால், வழியில்

புயல்காற்றில் சிக்கிக்கொண்ட ஸ்பானியக் கடற்படை முழுவதும் அழிக்கப்பட்டது. இந்தத் துயரக் கதையை நாட்டு மக்களுக்குக் கூறுவதற்காகப் போலும் ஒருசில கப்பல்கள் மட்டும் தப்பித்து ஸ்பெயினை வந்தடைந்தன.

இங்கிலாந்து, ஸ்பெயின்மீது பெற்ற இவ் வெற்றியின் விளைவாக இங்கிலாந்தில் தேசிய உணர்வும், நாட்டுப்பற்றும் வலுவடைந்தன. இந்த வெற்றிக்குப் பிறகு, அரசி எலிசபெத்தின் பெருமை உச்சநிலையை அடைந்தது. ஸ்பெயினின் வீழ்ச்சியும், இங்கிலாந்தின் வளர்ச்சியும் இதன் உடனடி விளைவுகள். புதிய உலகத்தின்மீது ஸ்பெயின் பெற்றிருந்த ஆதிக்கமும், ஏகபோக வர்த்தக உரிமையும் தகர்க்கப்பட்டன. கடல் ஆதிக்கத்திலும், வாணிபத் துறையிலும், குடியேற்றங்களை அமைப்பதிலும், பிற்காலத்தில் இங்கிலாந்து முன்னணியில் வருவதற்கு இந்த வெற்றிப் பெரிதும் உதவியது. இதைத் தொடர்ந்து இங்கிலாந்தில் வியக்கத்தக்கப் பொருளாதார வளர்ச்சியும், ஏனைய பல துறை களில் முன்னேற்றமும் ஏற்பட்டு இங்கிலாந்தின் புகழ் உச்ச நிலையை அடைந்தது என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. ஐரோப்பா முழுவதும் பிராடஸ்டென்டு சமயம் பாதிக்கப் பட்டது. நெதர்லாந்து சுதந்தரம் பெறுவதற்கு இவ் வெற்றி காரணமாக இருந்தது.

துருக்கி

தோல்வியையும், இழிவையுமே இதுவரைக் கொணர்ந்த இவருடைய வெளிநாட்டுக் கொள்கைத் துருக்கியைப் பொறுத்த வரை, ஸ்பெயினுக்குப் புகழைத் தேடித்தரும் வகையில் அமைந் திருந்தது. ஐரோப்பாவில் ஆட்டோமன் துருக்கியர்களின் ஆதிக்கம் வளர்வதைத் தடுத்து நிறுத்தியது, இரண்டாம் பிலிப்பின் சாதனை என்றால் அது மிகையாகாது. துருக்கியர்களும் ஆப்பிரிக்கக் கரையோரப் பகுதியில் வாழ்ந்த கடல் கொள்ளைக்காரர்களும் சேர்ந்துக் கொண்டு ஸ்பெயினுக்கு இடையூறு விளைவித்தனர் என்பதை ஐந்தாம் சார்லஸ் ஆட்சியைப்பற்றி ஆராயும்பொழுது நாம் கண்டோம். ஐந்தாம் சார்லஸ் அவர்களுடன் போர் செய்து, அவர்களின் வலிமையை ஒடுக்கிய போதிலும் ஸ்பானியக் கரையோரப் பகுதிகளும், ஸ்பானியக் கப்பல்களும் தொடர்ந்து இவர்களின் தாக்குதலுக்கு இலக்காயின. இரண்டாம் பிலிப்பின் ஆட்சியில் இந் நிலை மேலும் மோசமடைந்தது. ஏனெனில், பிலிப் ஐரோப்பிய பிரச்னைகளில் தன் முழுக் கவனத் தையும் செலுத்த வேண்டிய சூழ்நிலையில், மத்தியதரைக்கடல் பகுதி பிரச்னைமீது போதுமானக் கவனம் செலுத்த முடியவில்லை. 1566-ல் துருக்கிய அரசர் சுலைமான் இறந்த பிறகு, துருக்கியர்கள் ஹங்கேரிமீது தங்கள் பிடியை வலுப்படுத்திக் கொண்டு மத்திய

தரைக்கடல் பகுதியைத் தாக்கி வந்தனர். 1570-ல் சைப்ரஸ் தீவைக் கைப்பற்றினர். 'மால்டா' (Malta), 'கிரீட்' (Crete) ஆகியவை தவிர மத்தியதரைக்கடல் பகுதியில் மற்ற எல்லா இடங்களையும் ஐரோப்பியர் இழந்தனர். இந்நிலையில் துருக்கியின் ஆதிக்க வளர்ச்சியைத் தடுக்க வெனிஸ் நகரம் மேற்கொண்ட முயற்சியில், ஃபிலிப்பும் ஈடுபட வேண்டுமென்று போப் ஐந்தாம் பயஸ் (Pius V) விடுத்த வேண்டுகோளுக்கிணங்க, இரண்டாம் ஃபிலிப் ஒரு கப்பற்படையை அனுப்பினார். ஜினோவா, வெனிஸ் ஆகிய நகரங்களின் கப்பற் படையுடன், ஸ்பானியக் கப்பற் படையும் சேர்ந்து, ஃபிலிப்பின் தம்பி 'டான் ஜான்' (Don John) தலைமையில் போருக்கு ஆயத்தமாயின. 203 கப்பல்கள் கொண்ட ஐரோப்பியக் கப்பல் படை, 273 கப்பல்கள் கொண்ட துருக்கியப் படையுடன் 'லிபாண்டோ வளைகுடாவில்' (Gulf of Lepanto) மோதியது (1571). 'கிறிஸ்து உங்கள் தலைவர்', 'சிலுவைக்காக இந்தப் போர்' (Christ is your Leader, This is the battle of the Cross) போன்ற கோஷங்களை முழக்கி, போர் வீரர்களிடையே உற்சாகத்தை மூட்டித் திறமையுடன் போர் புரிந்தார் படைத் தலைவர் டான் ஜான். துருக்கியப்படை பெருந் தோல்வி யடைந்தது. லிபாண்டோ போரில் கிறிஸ்துவ நாடுகள் அடைந்த வெற்றியில் ஸ்பெயினுக்கு முக்கிய பங்கு உண்டு. எனினும், இந்த வெற்றியைத் தொடர்ந்து ஸ்பெயினும், மற்ற நாடுகளும் துருக்கியர்களுக்கு எதிராக நடவடிக்கைகள் ஒன்றும் எடுக்காத தால், துருக்கியர்களின் அபாயம் அறவே நீங்கிவிட்டது என்று கூறுவது பொருந்தாது. மத்தியதரைக்கடலில் துருக்கியர்களின் ஆக்கிரமிப்பிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

### நெதர்லாந்து விடுதலைப் போர் (1566-1598) (The Dutch War of Independence)

ரைன் ஆற்றின் முகத்துவாரத்தில் அமைந்திருக்கும் நெதர் லாந்து, இடைக்காலத்தில் ஜெர்மனிக்குச் சொந்தமாக இருந்தது. இந் நாட்டின் மேற்குக் கரையோரப் பகுதியான 'ஃபிளாண்டர்ஸ்' (Flanders) ஃபிரெஞ்சு அரசனின் ஆதிக்கத்திற்குட்பட்ட ஒரு பிரபுவின் ஆட்சியின் கீழ் இருந்ததால் ஃபிரான்சிற்கும், நெதர் லாந்துக்கும் தொடர்பு இருந்தது. பதினைந்தாம் நூற்றுண்டில் ஜெர்மன் அரசரின் ஆதிக்கம் ஒழிந்து, நெதர்லாந்து பர்கண்டி பிரபுக்களின் ஆட்சிக்குட்பட்டது. 1477-ல் பர்கண்டி கோமகன் சார்லஸ் இறக்கவே, அவ் வரசை அவருடைய மகள் மேரி பெற்றுர். ஆனல், ஃபிரெஞ்சு அரசன் பதினென்ரும் லூயி, பர்கண்டி அரசுக்கு ஆண் வாரிசு இல்லை என்ற காரணத்தினுல்,

அந்த அரசு ஃபிரான்சிற்கே சொந்தம் என்று அறிவித்து, நெதர் லாந்து நீங்கலாக, பர்கண்டியின் மற்ற பகுதிகளைத் தன் நாட்டுடன் இணைத்துக் கொண்டார். நெதர்லாந்து மட்டும் மேரியின் ஆட்சியில் தொடர்ந்து இருந்தது. மேரி, ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைச் சேர்ந்த மாக்சிமிலியனை (புனித ரோமானியப் பேரரசர்) மணந்ததால், நெதர்லாந்து ஹாப்ஸ்பர்க் ஆட்சிக்குட் பட்டு, முறையே 'ஆர்ச்டியூக் பிலிப்' (Archduke Philip), பேரரசர் ஐந்தாம் சார்லஸ், ஸ்பெயினின் இரண்டாம் ஃபிலிப் இவர்களின் ஆட்சிக்குட்பட்டது.

பதினாறும் நூற்றாண்டில் நெதர்லாந்து பதினேழு மாநிலங்கள் அடங்கிய ஒரு கூட்டரசாக இயங்கி வந்தது. இந்தக் கூட்டரசில் ஒவ்வொரு மாநிலச் சட்டமன்றத்தின் பிரதிநிதிகள் அடங்கிய 'ஸ்டேட்ஸ் ஜெனரல்' என்னும் பாராளுமன்றம் இருந்தது. எனினும் மாநிலங்களும் பெரிய நகரங்களும் இடைக்காலம் தொட்டே அனுபவித்து வந்த சுயாட்சி உரிமையையும், மற்றும் பல சிறப்புரிமைகளையும் விட்டுக்கொடுக்க விரும்பவில்லை. எனவே, ஐந்தாம் சார்லஸ் காலத்தில் வலுப்படுத்தப்பட்ட கூட்டாட்சி அமைப்பு பெயரளவில்தான் இயங்கியதே அன்றி நடைமுறையில் ஒவ்வொரு மாநிலமும், சாசனங்கள் பெற்ற நகரங்களும் சுதந்தர மாக இயங்கி வந்தன. இந்த மாநிலங்களிடையே அரசியல் ஒற்றுமை இல்லாதது மட்டுமன்றிச் சமூக, பொருளாதார வேறு பாடுகள் நிறைந்திருந்தன. இனத்தாலும், மொழியாலும் மக்கள் வேறுபட்டிருந்தனர். வடபகுதியில் டச்சு மக்களும், தென்பகுதி யில் 'ஃபிளமிங்குகள்' (Flemings), 'வாலூன்கள்' (Walloons). ஜெர்மானியர்கள் போன்றவர்களும் வாழ்ந்தனர். தென் மாநிலங்களில் கிராமப்புறங்கள் யாவும் நிலமானியப் பிரபுக் களின் ஆதிக்கத்திலும், நகரங்கள் யாவும் செல்வம் மிகுந்த தொழிலதிபர்கள் ஆதிக்கத்திலும் இருந்தன. வட மாநிலங்கள் யாவும் விவசாயத்தில் ஈடுபட்டிருந்தன. இந்த நிலையில் நெதர் லாந்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற எல்லா அரசர்களும், நாடு முழுவதும் ஒரே நிர்வாக முறையின்கீழ்க் கொண்டுவந்து மாநிலங்கள் அனுபவித்து வந்த சிறப்புரிமைகளை ஒழிக்க வேண்டு மென்ற குறிக்கோள் கொண்டிருந்தார்கள். இதற்கு நெதர்லாந்து மக்களிடையே எதிர்ப்பு இருந்தது என்பதில் வியப்பொன்று மில்லை. ஸ்பெயின்மீது இவர்கள் கொண்ட பகைமையும், இரண்டாம் பிலிப்பின் ஆட்சியில் இவர்களுக்கேற்பட்ட வெறுப்பும், வேற்றுமைகளுக்கிடையே ஒற்றுமையுணர்ச்சியை வளர்த்தது.

நெதர்லாந்தைப்பற்றி, நாம் அறிந்துகொள்ளவேண்டிய மற்றொரு இன்றியமையாதக் குறிப்பு என்னவெனில், அந் நாட்டின் வியாபார, தொழில் வளர்ச்சியும், செல்வ வளர்ச்சியும் ஆகும். இடைக்காலந்தொட்டே நெதர்லாந்து இந்தப் புகழ் பெற்றிருந்தது. 'ஆண்ட்வர்ப்' (Antwerp), 'கெண்ட்' (Ghent), 'லில்லி' (Lille), 'ஆம்ஸ்டர்டாம்' (Amsterdam) போன்ற நகரங்கள் செல்வம் மலிந்த நகரங்களாக மட்டுமன்றி, பண்பாட்டில் மேம்பட்ட நகரங்களாகவும் விளங்கின. 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற மூதுரைக்கேற்ப, நெதர்லாந்து மக்கள் கடல்கடந்து வாணிபம்செய்து ஏராளமான செல்வம் ஈட்டினர். நகரத்தில் வாழ்ந்த செல்வச் சீமான்கள் தங்கள் செல்வத்தை முதலீடுசெய்து பல தொழில்களைத் துவக்கித் தொழில் வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்தனர்.

பேரரசர் ஐந்தாம் சார்லஸ் ஆட்சியில் நெதர்லாந்து மாநிலங்களின் கூட்டரசை வலுப்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டபோதிலும் மாநிலங்கள், நகரங்களின் சுயாட்சி உரிமையையும், சிறப்புரிமைகளையும் பாதிக்கும் வகையில் எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளப்படவில்லை. மேலும், ஐந்தாம் சார்லஸ் நெதர்லாந்தில் பிறந்தவர். ஸ்பெயின் மன்னராகவும் பிறகு பேரரசராகவும் ஆனபிறகும் கூட இவருக்கு நெதர்லாந்துமீது தனிப்பற்று இருந்தது. எனவே, நெதர்லாந்து மக்களும் இவர்மீது அன்பு கொண்டிருந்தனர். நெதர்லாந்தில் வளர்ந்துகொண்டிருந்த பிராடஸ்டென்டு சமயத்தைத் தீவிரக் கத்தோலிக்கரான ஐந்தாம் சார்லஸ் இன்குசிஷன் போன்ற முறைகளின்மூலம் ஒடுக்க முயற்சி செய்தார். எனினும் இவர் நெதர்லாந்தைச் சேர்ந்தவர் என்ற காரணத்தினாலும், இவருடைய ஆட்சி மற்ற துறைகளில் நெதர்லாந்து மக்களின் நலனிற்கு உகந்ததாக அமைந்ததாலும், சார்லஸின் சமயக் கொள்கையை இவர்கள் பொருட்படுத்தவில்லை. இவ்வாறு புரட்சித் தோன்றுவதற்கான காரணங்கள் ஐந்தாம் சார்லஸ் ஆட்சியில் இருந்தாலும், புரட்சி அவர் ஆட்சியில் ஏற்படாமல், இரண்டாம் ஃபிலிப்பின் ஆட்சியில்தான் ஏற்பட்டது.

### புரட்சியின் காரணங்கள்

1566-ல் தொடங்கி, இரண்டாம் ஃபிலிப்பின் ஆட்சியின் இறுதி வரையில் (1598) நீடித்த இப் புரட்சிக்குப் பல முக்கியக் காரணங்கள் இருந்தன. அவையாவன :

1. பொருளாதாரக் காரணங்கள் : வியாபாரம், தொழில்மூலமாக நெதர்லாந்து ஈட்டிய பெருஞ் செல்வத்தை இரண்டாம்

ஃபிலிப் தன்னுடைய ஆதிக்க வளர்ச்சிக்கான திட்டங்களுக்காகப் பயன்படுத்தினர். நெதர்லாந்து மக்களின் செல்வம், ஸ்பெயின் நாட்டு ஆதிக்கமும், புகழும் பெருகுவதற்குப் பயன்படுத்தப்படு வதை டச்சு மக்கள் அறவே வெறுத்தனர். மேலும் ஸ்பெயின் நாட்டின் நலனுக்கும், வளர்ச்சிக்கும் ஏற்ற வகையில், நெதர் லாந்தின் வியாபாரத்தின்மீது தடைகளையும், கட்டுப்பாடுகளையும் விதித்தார். இது நெதர்லாந்து நகரங்களின் பொருளாதார வளர்ச்சியை வெகுவாகப் பாதித்தது. நெதர்லாந்து மக்கள்மீது பலக் கடுமையான வரிகளை விதித்தார்.

2. அரசியல், தேசியக் காரணங்கள் : ஸ்பெயினைப்போல நெதர் லாந்திலும், ஃபிலிப் தன்னுடைய எதேச்சாதிகார ஆட்சியை நிறுவினர். மாநிலங்கள், நகரங்கள், பிரபுக்கள் அனுபவித்து வந்த சிறப்புரிமைகள் யாவும் பறிக்கப்பட்டன. அவைகள் பரம் பரையாக அனுபவித்துவந்த சுயாட்சி உரிமைப் பறிக்கப்பட்டு, அரசனின் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்டன. ஃபிலிப்பின் ஆட்சி மீது வெறுப்பு ஏற்பட மற்றொரு காரணம், ஃபிலிப் தன் தந்தை சார்லஸைப்போல நெதர்லாந்து மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளாததுதான். 1559-க்குப் பிறகு, ஃபிலிப் நெதர்லாந்துக்குச் செல்லவேயில்லை. டச்சு மொழி அவருக்குத் தெரியாது. டச்சு மக்களின் பழக்கவழக்கங்களை அவர் புரிந்துகொள்ளவில்லை. நாட்டு நிர்வாகத்திலும், திருச்சபையிலும் எல்லா முக்கிய பொறுப்பு களும் ஸ்பானியர்களுக்கும், மற்ற அயல்நாட்டவர்களுக்கும் கொடுக்கப்பட்டன. டச்சுக்காரர்கள் புறக்கணிக்கப்பட்டனர். எனவே, நெதர்லாந்து மக்கள் ஃபிலிப்பின் ஆட்சி அந்நியர்களுக் காக, அந்நியர்களால் நடத்தப்படும் ஆட்சி என்றே கருதினர். தேசிய உணர்வால் தூண்டப்பட்ட டச்சு மக்கள் ஃபிலிப்பின் ஆட்சிக்கு எதிராகப் புரட்சி செய்ததில் வியப்பொன்றுமில்லை.

3. சமயக் காரணங்கள் : ஜெர்மனியில் தோன்றிய பிராடஸ் டெண்டு இயக்கம் நெதர்லாந்திலும் பரவியது என்பதையும், தீவிரக் கத்தோலிக்கரான ஐந்தாம் சார்லஸ் இன்குஷன் மூலம் அதை ஒடுக்க முயற்சித்தார் என்பதையும் முன்பே கண்டோம். இந்த மன்றம் கத்தோலிக்கச் சமய எதிரிகளைச் சிறை பிடிப்பது, தீயிட்டுக் கொளுத்துவது, அவர்களின் சொத்துகளைப் பறிமுதல் செய்வது போன்ற கொடுமையான தண்டனைகளை அளித்தது. நெதர்லாந்தின் வட மாநிலங்களில் பரவிய கால்வினீய சமயத்தை ஒடுக்கவும், கத்தோலிக்க சமயத்தை நிலைநாட்டவும் ஃபிலிப் தீவிர மாகச் செயல்பட்டார். இன்குசிஷன் மன்றம் மேலும் வலுப்படுத் தப்பட்டு, மேலும் கொடுமையான தண்டனை வழங்கப்பட்டது.

இதனால், இன்குசிஷன் மன்றத்திற்குப் பலத்த எதிர்ப்பு தோன்றிச் சமய விரோதிகளை, இதுபோன்ற மனிதத் தன்மையற்ற முறைகளில் நடத்தக் கூடாது என்று மக்கள் விடுத்த வேண்டுகோள்களுக்கு மன்னர் செவிசாய்க்கவில்லை. இதுபோன்ற நடவடிக்கைகளை அந்நியன் ஒருவன் மேற்கொள்ளுகிறான் என்ற உணர்வு, மக்களின் எதிர்ப்பை மேலும் வலுப்படுத்தியது.

## புரட்சியின் நிகழ்ச்சிகள்

1559-ல் ஃபிலிப் தன் சகோதரி மார்கரேட் (Margaret of Parma) என்பவரை நெதர்லாந்தின் ரீஜண்டாக அமர்த்திவிட்டு ஸ்பெயின் திரும்பினார். ஆனால், உண்மை அதிகாரம் முழுவதும் ஃபிலிப்பின் நம்பிக்கைக்குப்பாத்திரமான 'கார்டினல் கிரான்வெல்' (Cardinal Granvelle) என்பவரிடம் சிக்கியது. ஃபிலிப்பின் கைப் பாவையாகக் கொடுங்கோல் ஆட்சி நடத்திக்கொண்டிருந்த இவர் மீது, நெதர்லாந்து மக்கள் வெறுப்புக் கொண்டனர். இளவரசன் 'ஆரஞ்சு வில்லியம்' (Prince William of Orange), 'எக்மண்ட்'. 'ஹார்ன்' (Counts of Egmont and Hoorn) ஆகியவர்கள் தலைமையில் எதிர்ப்பு உருவாகியது. ஃபிரான்சுடன் போர் நடந்த பொழுது ஸ்பானியப் படைகளை நெதர்லாந்தில் புகுத்தி, அவற்றின் செலவுகளையெல்லாம் நெதர்லாந்து மக்களே ஏற்கும்படிச் செய்தது, சமாதானக் காலத்தில் ஸ்பானியத் துருப்புகளுக்கான செலவுகளை நெதர்லாந்து மக்கள்மீது சுமத்துவது போன்ற அநீதிகளைக் கண்டித்து, இவற்றை அரசின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டுமென்று மக்கள் விரும்பினர். இவையெல்லாவற்றிற்கும் மேலாக இன்குசிஷன் மன்றத்தின் கொடுமைகளையும், அநீதிகளையும் பொறுக்கமுடியாத மக்கள், அதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். ஸ்பானியப் படைகளை நெதர்லாந்திலிருந்து நீக்கியது, மக்களின் வெறுப்புக்கு ஆளான சில அரசாங்க அதிகாரிகளைப் பதவியிலிருந்து விலக்கியது போன்ற சலுகைகள்மூலம், ரீஜண்ட் மார்கரெட் மக்களின் குறைகளைப் போக்க முயன்றார். ஆனால். 1566-ல் பிரபுக்கள் பலர் நாட்டின் அரசியலமைப்பை மாற்றியமைக்க வேண்டுமென்றும், உடனடியாகப் பாராளுமன்றத்தைக் கூட்ட வேண்டுமென்றும் கோரி, ஒரு விண்ணப்பத்தை மார்கரெட்டிடம் சமர்ப்பிக்க வந்தனர். முதலில், இவர்களைக் கண்டு மார்கரெட் அஞ்சினார். அப்போது, அரசவையைச் சேர்ந்த 'பார்லேமாண்ட்' (Barlaymont) என்ற பிரபு ஏளனமாக "மேன்மை தங்கிய ரீஜண்ட் அம்மையார் இந்தப் பிச்சைக்காரர்களைக் கண்டா அஞ்சுவது ?" என்று கூறி, அவருக்குத் தைரியம் ஊட்டினார். அது முதல், ஃபிலிப்பின் ஆட்சியை எதிர்த்த பிரபுக்கள் தங்களைப்

'பிச்சைக்காரர்கள்' (Beggars) என்று கூறிக்கொண்டனர். இவர்களுடைய கோரிக்கை ஃபிலிப்புக்கு அனுப்பப்பட்டது. ஆனால், ஃபிலிப் அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

இதன் விளைவாக 1566-ல் பிராடஸ்டெண்டுகளில் தீவிர வாதிகளில் சிலர் அரசனுடைய சமயக் கொள்கையை எதிர்த்து வன்முறைச் செயல்களில் ஈடுபட்டனர். கத்தோலிக்க ஆலயங்களும், மடங்களும் அவர்களுடைய தாக்குதலுக்கு இலக்காயின. திருச்சபையின் சொத்துக்கள் சூறையாடப்பட்டன. ஆலயங்களிலிருக்கும் படங்களும், சிலைகளும் உடைத்தெறியப்பட்டன; ஆண்ட்வெர்ப் நகரத்துப் பெரிய கிறிஸ்துவ ஆலயம் அழிக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சி நெதர்லாந்து வரலாற்றில் "The Iconoclastic Fury of 1566" என்றழைக்கப்படுகிறது. பல வாரங்கள் இந்த வெறிச் செயல்கள் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருந்தன. இன்குசிஷன் மன்றத்தைக் கலைத்து, சமயப் பொறைக் கொள்கையைப் ஃபிலிப் கடைப்பிடித்திருந்தால் மக்கள் திருப்தி அடைந்திருப்பார்கள். அமைதியை நிலைநாட்டியிருக்க முடியும். ஆனால், சமயத்துறையில் பரந்த மனப்பான்மை, சகிப்புத்தன்மை என்பவை அக்கால அரசர்கள் ஏற்றுக் கொள்ளாத கருத்துகளாகும். அடக்குமுறை மூலம் உடனடியாக இக்கிளர்ச்சி ஒடுக்கப்பட்டது.

'ஆல்வா கோமகன்' (Duke of Alva) ரீஜண்டாக நியமிக்கப்படுதல் :

இரண்டாம் ஃபிலிப் இத்துடன் நின்றுவிடவில்லை. கிளர்ச்சியில் பங்கு கொண்டவர்கள்மீது பழிவாங்கும் எண்ணம் அவர் மனதில் மேலோங்கியிருந்தது. எனவே, 1577-ல் தன் படைத்தளபதிகளில் சிறந்தவரான ஆல்வா கோமகனை ரீஜண்டாக நியமித்தார்.

இவர் நியமிக்கப்பட்டதன் நோக்கங்கள் :

1. சமயத் துரோகச் செயல்கள் ஒழிக்கப்பட வேண்டும். 2. அண்மையில் நடந்த வன்முறைச் செயல்களில் பங்கு கொண்டவர்கள் தண்டிக்கப்பட வேண்டும். 3. நாட்டின் வரிவிதிப்பு முறையைச் சீர்படுத்தி அமைக்கவேண்டும். ஒரு பெரும்படையுடன் ஆல்வா நெதர்லாந்தை அடைந்து தன் அடக்குமுறை ஆட்சியைத் தொடங்கினர். அண்மையில் நடந்த பிராடஸ்டெண்டுகளின் கிளர்ச்சியில் பங்கு பெற்றவர்களைக் கண்டுபிடித்துத் தண்டிப்பதற்காகத் 'தொல்லை ஒழிப்பு மன்றம்' (Council of Troubles) என்ற ஒரு சிறப்பு மன்றம் அமைக்கப்பட்டது. ஆல்வா கோமகன் பதவியிலிருந்த ஆறு ஆண்டுகளில் இந்த மன்றம் எக்மாண்ட், ஹார்ன் பிரபுக்கள் உள்பட ஏறக்குறைய எட்டா

யிரம் பேர்களுக்கு மரண தண்டனை வழங்கியது. பிரபுக்களின் சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. வரிகள் அதிகரிக்கப் பட்டன. இந்த மன்றத்தின் கொடுமையைத் தாங்க முடியாத ஆயிரக்கணக்கான நெதர்லாந்து மக்கள் நாட்டைவிட்டே ஓடி விட்டனர். இதுபோன்ற இரக்கமற்ற மிருகத்தனமான செயல்கள் புரிந்ததால் இந்த மன்றத்திற்கு 'இரத்தவெறி மன்றம்' (The Council of Blood) என்ற பெயர் ஏற்பட்டது. ஆல்வாவின் கொடுங்கோன்மையை எதிர்த்து நெதர்லாந்தின் தென் பகுதியில் வாழ்ந்த கத்தோலிக்கர்கள், வட பகுதியில் வாழ்ந்த பிராடஸ் டென்டுகளுடன் ஒன்றுபட்டனர்.

ஸ்பானியக் கொடுங்கோல் ஆட்சிக்கு எதிராக உருவாகிய இந்த இயக்கம் ஆரஞ்சு வில்லியம் (1553-1584) தலைமையில் செயல்படத் தொடங்கியது. ஒரு பழைய ஜெர்மன் குடும்பத்தைச் சேர்ந்த இவர் ஜெர்மன் அரசுகளில் ஒன்றான 'நாசௌ' (Nassau) என்ற அரசின் பிரபு ஆவார். 1530-ல் இவர் குடும்பம் பெற்ற 'ஆரஞ்சு' என்ற சிற்றரசை இவர் ஆண்டதால் இவர் ஆரஞ்சு வில்லியம் என்றழைக்கப்பட்டார். நெதர்லாந்தில் இவருக்கு ஏராளமான நிலங்களும், பண்ணைகளும், மற்றச் சொத்துகளும் இருந்தன. மேலும், ஐந்தாம் சார்லஸின் ஆதரவைப்பெற்று நெதர்லாந்து நிர்வாகத்துறையில் முக்கியப் பணியை ஏற்றார். நாளடைவில் இரண்டாம் ஃபிலிப்பின் ஆட்சியின்மீது இவருக்கு வெறுப்பு ஏற்பட்டு, டச்சு மக்களை ஸ்பானியக் கொடுங்கோன்மை யிலிருந்து விடுவிக்க வேண்டுமென்று உறுதிபூண்டார். கத்தோ லிக்கச் சமயத்தவராயினும் சமயத்தின் பெயரால் நெதர்லாந்து மக்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளையும், துன்பங்களையும் கண்டு மனம் பொறாமல் பிராடஸ்டென்டு சமயத்தைத் தழுவினார். ஒரு தலைசிறந்த போர்வீரர் என்றோ, அரசியல் அறிவுக்கூர்மை பெற்றவர் என்றோ கருதப்படுவதற்குத் தகுதி இல்லாதவராயினும், இவருடைய பெருமைக்கும், புகழுக்கும் காரணம் என்னவெனில், ஸ்பானியக் கொடுங்கோன்மையில் சிக்கித் தவித்துக் கொண் டிருந்த டச்சு மக்களின் விடுதலைக்காக, இவர் தம் உடல், உயிர், செல்வம் அனைத்தையுமே தியாகம் செய்வதற்குத் தயாராக இருந்தார். விடாமுயற்சியும், அஞ்சாநெஞ்சமும் கொண்ட இவர் தோல்வியைக்கண்டு மனந்தளராமல், ஸ்பெயினை எதிர்க்கத் துணிந்தார். தன்னுடைய சொத்துகளை எல்லாம் விற்று, ஒரு படையைத் திரட்டி 1568-ல் நெதர்லாந்துமீது படையெடுத் தார். 'ஹீலிகர்லி' (Heligerlee) என்ற இடத்தில் நடந்தப் போரில் வில்லியம் வெற்றிபெற்றார். ஆனால், வில்லியத்தின் படைகள் ஆல்வாவின் ஸ்பானியப் படைகளால் 'ஜெம்மிங்கன்' (Jemmingen) போரில் தோற்கடிக்கப்பட்டன. இத்தோல்விக்குக் காரணம்

வில்லியத்தின் படைகள் கூலிப்படைகள் என்பது மட்டுமன்றி, எதிர்பார்த்தவாறு நெதர்லாந்து மக்கள் வில்லியத்திற்கு ஆதரவாகக் கிளர்ச்சி செய்யத் தவறிவிட்டார்கள்.

ஆல்வா தன் ஆட்சியில் செய்த சில தவறுகள்:

புரட்சிக்காரர்களின் ஆத்திரத்தையும், கோபத்தையும் மேலும் தூண்டிவிட்டது. இவர் ஆட்சியின் கொடுமை தளர்த்தப்படாதது மட்டுமன்றி, வரிகளும் அதிகமாக வசூலிக்கப்பட்டன. ஒரு சதவிகிதச் சொத்துவரி ஐந்து சதவிகித நில விற்பனை வரி, பத்து சதவீத விற்பனை வரி, ஆகியவை வசூலிக்கப்பட்டன. நெதர்லாந்துக் கரையோரப் பகுதிகளில் வசித்த மக்களும், நெதர்லாந்திலிருந்து வெளியேறியப் பிராடெஸ்டென்டுகளும், ஸ்பானியக் கப்பல்களைத் தாக்கிக் கொள்ளையிட்டனர். தங்களைக் 'கடல் பிச்சைக்காரர்கள்' (Beggars of the Sea) என்று கூறிக்கொண்டனர். 1572-ல் இவர்கள் நெதர்லாந்தில் 'பிரில்' என்ற நகரத்தைத் தாக்கிக் கைப்பற்றினர். இதைத் தொடர்ந்து நெதர்லாந்தின் வட மாநிலங்கள் புரட்சியில் ஈடுபட்டன. வட மாநிலங்களில் ஒன்றான ஹாலந்து ஆரஞ்சு வில்லியத்தைக் கவர்னராகத் (Stadtholder) தேர்ந்தெடுத்துப் புரட்சியின் தலைமையை அவரிடம் ஒப்படைத்தது. இதற்கிடையில் புரட்சி தென் மாநிலங்களிலும் பரவியது. வட மாநிலங்களில் 'மாலென்ஸ்' (Malines), 'ஸுட்பென்' (Zutphen), 'நார்டென்' (Naarden) போன்ற நகரங்கள் ஆல்வா கோமகனால் கைப்பற்றப்பட்டு, ஸ்பானியப் படைவீரர்களால் சூறையாடப்பட்டன. ஸ்பானியப் படைகள் இந் நகர மக்களுக்குப் பல கொடுமைகளை இழைத்தனர், ஆல்வாவினால் நிலைமையைச் சமாளிக்க முடியவில்லை என்பதை உணர்ந்த இரண்டாம் ஃபிலிப் 1573-ல் அவரைப் பதவியிலிருந்து நீக்கி 'ரெக்குசென்' (Don Luis De Requesens) என்பவரை ரீஜண்டாக நியமித்தார்.

ரெக்குசென்னும், நெதர்லாந்தும் (1573–76)

புரட்சிக்காரர்களுடன் சமரசம் செய்துகொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் பதவியேற்ற ரெக்குசென், இம் முயற்சியில் தோற்றுவிட்டார். வில்லியம் போன்ற தலைவர்கள் கோரிய சமயப் பொறைக் கொள்கை, நெதர்லாந்து மக்களின் சிறப்புரிமைகளை மீண்டும் வழங்குதல், ஸ்பானியத் துருப்புகளை வெளியேற்றுதல் போன்றக் கோரிக்கைகளைப் பரிசீலனை செய்ய ரெக்குசென்னுக்கு அதிகாரம் இல்லை. நெதர்லாந்து மக்களும் சமரசம் செய்துக் கொள்ள விரும்பவில்லை. ஆனால், ரெக்குசென் கடைப்பிடித்த கொள்கையின் பயனாகப் புரட்சிக்காரர்களிடையே பிளவு

ஏற்பட்டுக் கத்தோலிக்கச் சமயத்தைச் சேர்ந்த தென் மாநிலங்கள் புரட்சியிலிருந்து விலகின. கால்வினீய சமயத்தைச் சார்ந்த வட மாநிலங்கள் தொடர்ந்து கிளர்ச்சியை நடத்தின. 'மூகர்' (Mooker) ஹெய்டு' (Heyde) என்ற போர்களில் நெதர்லாந்துப் படைகள் தோற்கடிக்கப்பட்டன. 1573 நவம்பர் முதல் 1574 அக்டோபர் வரை ரெக்குசென்னின் முற்றுகைக்குள்ளாக்கப்பட்ட 'லெய்டன்' (Leyden) நகரம் புரட்சிக்காரர்களால் விடுவிக்கப் பட்டது. ஸ்பானியப் படைகளுக்குப் போதுமான உணவு, ஆயுதங்கள் இல்லை. மேலும் வில்லியம் கடல் அணைகளை (Dykes) எல்லாம் உடைத்துவிடுமாறு கட்டளையிட்டார். கடல் மட்டத் திற்குத் தாழ்ந்த நிலப் பகுதியில் லெய்டன் நகரம் அமைந்திருந் ததால் கடல் நீர் நகரில் புகுந்தது. ஸ்பானியப் படைகள் முற்று கையைக் கைவிட வேண்டிய நிலை ஏற்பட்டது. லெய்டன் நகரம் காப்பாற்றப்பட்டது. புரட்சிக்காரர்களுக்குக் கிடைத்த இவ் வெற்றி அவர்களை ஒன்றுபடுத்த உதவியது. மீண்டும் தென் மாநிலங்களும் புரட்சியில் கலந்துக்கொண்டன. மீண்டும் ரெக்கு சென் சமரச முயற்சியில் ஈடுபட்டார். இம்முயற்சி வெற்றிபெற வில்லை. இந்த நிலையில் 1576-ல் ரெக்குசென் திடீரென இறந்து விட்டார்.

தலைவரை இழந்த ஸ்பானியப் படைகளுக்குப் பல மாதங் களாகச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. எனவே, படையினர் நெதர்லாந்து நகரங்களைத் தாக்கி அவற்றைக் கொள்ளையடித் தனர். குறிப்பாக ஆண்ட்வெர்ப் நகரம் இதுபோன்ற ஒரு கடுமையான தாக்குதலுக்கு உள்ளாகியது. ஸ்பானியப் படைகள் புரிந்த இந்தக் கொலை, கொள்ளைச் செயல்கள்தான் 'ஸ்பானியரின் சீற்றம்' (Spanish Fury) என்று அழைக்கப்படுகிறது. இந்நிகழ்ச்சி, நெதர்லாந்து மக்களிடையே மனக் கசப்பையும், ஸ்பானிய ஆட்சி மீது வெறுப்பையும் ஏற்படுத்தி இனம், மொழி, சமய வேறுபாடு களின்றி எல்லோரும் ஒன்றுசேர்ந்து ஸ்பானிய ஆட்சியை எதிர்க்க வழிகோலியது. 1576-ல் நெதர்லாந்தின் பதினேழு மாநிலங் களின் பிரதிநிதிகளும் 'கெண்ட்' நகரில் கூடி, கெண்ட் சமா தானம்' (Pacification of Ghent) என்ற ஒப்பந்தத்தைச் செய்துக் கொண்டனர். இதன்படி, ஸ்பானிய ஆதிக்கத்தை நெதர்லாந்தி லிருந்து ஒழிக்க வேண்டும் என்றும், இந்தக் குறிக்கோளை அடைய பதினேழு மாநிலங்களும் ஒத்துழைக்க வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

1576 முதல் 1578 வரை பிலிப்பின் சகோதரரான 'டான் ஜான்' (Don John) ரீஜண்டாகப் பணியாற்றினர். அவரும் சமரச முயற்சிகளை மேற்கொண்டார். ஆனால், வெற்றிக் கிட்டுமுன்

இறந்துவிட்டார். இவரை அடுத்து 1578 முதல் 1592 வரை 'பார்மா கோமகன் அலெக்சாண்டர்' (Alexandro Farnese, Duke of Parma) ரீஜண்டாகப் பணியாற்றினர். போர்த் துறையிலும், அரச தந்திரத்திலும் கைதேர்ந்த இவர் நெதர்லாந்து மக்களிடையே இருந்த ஒற்றுமையை எப்படியாவதுக் குலைத்துவிட வேண்டும் என்று திட்டமிட்டார். அப்பொழுது ஐரோப்பாவில் கத்தோலிக்கர்களுக்கும், பிராடஸ்டெண்டுகளுக்கும் இடையே இருந்த பகைமை உணர்ச்சி, சந்தேக மனப்பான்மை ஆகிய சூழ்நிலையில். நெதர்லாந்து மக்களைப் பிரிப்பது அவ்வளவு கடினமான செயலன்று. இதை நன்கு உணர்ந்திருந்த அலெக்சாண்டர் கத்தோலிக்க மாநிலங்களுக்குப் பல முக்கிய சலுகைகள் அளித்து, அவைகளை வட மாநிலங்களான பிராடஸ்டெண்டு மாநிலங்களிலிருந்து பிரித்தார். இவரது முயற்சியின் காரணமாகத் தெற்கிலிருந்த மூன்று கத்தோலிக்க மாநிலங்களின் பிரதிநிதிகள் 'அர்ராஸ்' என்னுமிடத்தில் கூடி கத்தோலிக்கச் சமயத்தைப் பாதுகாக்கவும், இரண்டாம் ஃபிலிப்பின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ளவும் உறுதிபூண்டனர். இவ்வாறு கத்தோலிக்க மாநிலங்கள் செய்துகொண்ட ஏற்பாடு 'The Union of Arras' (1579) என்று அழைக்கப்படுகிறது.[1] கத்தோலிக்கர்கள் ஒன்றுபடுவதற்கான ஓர் அமைப்பு ஏற்பட்டவுடன் புரட்சித் தலைவரான ஆரஞ்சு வில்லியம் அதே ஆண்டில் பிராடஸ்டெண்டுகளை ஒன்றுபடுத்தும் நோக்கத்துடன் வட மாநிலங்களுக்கு அழைப்பு விடுத்தார். ஏழு பிராடஸ்டெண்டு மாநிலங்கள் 'உட்ரெக்ட்' என்னுமிடத்தில் கூடி 'உட்ரெக்ட் ஐக்கியம்' (Union of Utrecht) என்ற அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு தங்களைச் சுதந்திர நாடாக அறிவித்துக் கொண்டன. இவைதான் 'நெதர்லாந்தின் ஏழு ஐக்கிய மாநிலங்கள்' (The Seven United Provinces of Netherlands) அல்லது 'டச்சுக் குடியரசு' (The Dutch Republic) என்ற பெயர் பெற்றது[2]. இந்த அமைப்பு ஒரு கூட்டமைப்பாக (Confederation) நிறுவப்பட்டது. அயல்நாட்டுக் கொள்கை, படைகள் முதலிய நாட்டிற்குப் பொதுவான அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்தால் நிர்வகிக்கப்பட்டன. மாநிலங்களின் சுயாட்சி உரிமை அங்கீகரிக்கப்பட்டது. இந்த அமைப்பில் பல குறைபாடுகள் இருந்தாலும், இது வில்லியத்தின் தலைமையில் இயங்கியதால் நடைமுறையில் கூட்டரசு அமைப்புச் செவ்வனே செயல்பட்டது. இவ்வாறு 1576-ல்

[1] ஆர்டாய் (Artois), ஹெனுல்ட் (Hainault), டூவே (Douay).

[2] Holland, Zeeland, Utrecht, Gelderland, Ooverijssel, Groningen and Friesland.

கெண்ட் சமாதானத்தின்படி நெதர்லாந்தில் ஏற்பட்ட ஐக்கியம் குலைக்கப்பட்டு நெதர்லாந்து, கத்தோலிக்கத் தெற்கு, பிராடஸ்டென்டு வடக்கு என்று இரண்டாகப் பிளவுபட்டது.[2]

இந்தப் பிளவுக்குப் பிறகு புரட்சியின் மற்ளுெரு முக்கியமான கட்டம் தொடங்குகிறது. வடக்கு மாநிலங்களுக்கும், தெற்கு மாநிலங்களுக்குமிடையே இருந்த 'பிராபாண்ட்' (Brabant) 'ஃபிளாண்டர்ஸ்' (Flanders) என்ற இரு மாநிலங்களே இன்னும் எக்கட்சியிலும் சேராமல் இருந்தன. 'பார்மா கோமகன்' (Duke of Parma) தன் அரச தந்திரத்தைப் பயன்படுத்தி இவ்விரு மாநிலங்களையும் கத்தோலிக்கர்களுடன் சேர்த்துவிட்டார். இதற்குப் பிறகு ஸ்பெயினின் முழுவெற்றிக்குத் தடையாக இருப்பது வில்லியத்தின் தலைமைதான் என்பதை உணர்ந்த இரண்டாம் ஃபிலிப் அவரை ஒடுக்கும் பணியில் முனைந்தார். 1581-ல் வில்லியம் ஒரு தேசத்துரோகி என்றும், அவரை உயிருடனே அல்லது அவருடைய சவத்தையோ கொண்டுவருபவருக்குத் தக்க வெகுமானம் அளிக்கப்படும் என்றும் அறிவித்தார். இதற்கு வில்லியம் அளித்த பதில்தான் வட மாநிலங்களின் பிரதிநிதிகள் 'ஹேக்' நகரில் கூடி (The Hague) வெளியிட்ட 'டச்சு விடுதலைப் பிரகடனம்' (Dutch Declaration of Independence). இதன்படி, வடக்கு மாநிலங்கள் தங்களை ஸ்பெயின் ஆட்சியிலிருந்து விடுவித்துக்கொண்டு, ஃபிலிப்பிற்குத் தங்கள்மேல் எவ்வித அதிகாரமும் கிடையாது என்று அறிவித்து, அரசனுடைய முத்திரையையும் உடைத்தெறிந்தன. 1584-ல் வில்லியம், பர்கண்டியைச் சேர்ந்த 'பால்தசார் ஜெரார்ட்' (Balthasar Gerard) என்றச் சமய வெறியன் ஒருவனால் சுட்டுக்கொல்லப்பட்டார். இறக்கும்பொழுதுகூட இவருக்குத் தன் நாட்டைப் பற்றியும், தன் மக்கள் ஈடுபட்டிருந்த விடுதலை இயக்கம்பற்றியும்தான் நினைவு. இறக்குந் தறுவாயில் அவர் பின்வருமாறு கூறினர். ''ஆண்டவனே என் ஆத்மாமீதும், இந்த மக்கள்மீதும் கருணைவை''.[3]

ஃபிலிப் எதிர்பார்த்தபடி வில்லியத்தின் இறப்பினால் டச்சு மக்களின் எதிர்ப்பு முடிந்து விடவில்லை. பார்மா கோமகன்

[2] தென் பகுதியிலிருந்த கத்தோலிக்க மாநிலங்கள் ஏறக்குறைய இரண்டு நூற்றாண்டுகள் 'ஸ்பானிய நெதர்லாந்து' ஆஸ்திரிய நெதர்லாந்து'என்ற பெயருடன் ஹாப்ஸ்பர்க் ஆட்சியில் இருந்தன. இந்தப் பகுதிதான் இன்று பெல்ஜியம என்றழைக்கப்படுகிறது. வட பகுதியிலிருந்த பிராடஸ்டென்டு மாநிலங்கள் ஹாலந்து என்ற பெயருடன் சுதந்திர அரசாக உருப் பெற்றன.

[3] "Lord have pity on my soul and on this poor people" —A History of Europe, Ferdinand Schevill, page 189.

1585-ல் ஆண்ட்வெர்ப் துறைமுகத்தைக் கைப்பற்றினர். தெற்கு மாநிலங்கள் யாவும் ஸ்பெயினின் ஆதிக்கத்திற்குள்ளாக்கப் பட்டன. இதை எதிர்த்துப் போராடும் பொறுப்பை ஹாலந்து, ஸீலந்து, மாநிலங்கள் ஏற்றுக்கொண்டன. ஆனல், வலிமை மிக்க அந்நிய நாடுகளின் உதவியின்றி டச்சு விடுதலைப்போர் வெற்றிபெற முடியாது என்பதை வில்லியம் உணர்ந்திருந்தார். இவர் இறப்பதற்கு முன்பு ஃபிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளின் உதவியைக் கோரினர். இங்கிலாந்தின் அரசி எலிசபெத் தவிர வேறு எவரும் டச்சு மக்களுக்கு உதவி செய்ய முன்வரவில்லை. எலிசபெத் அரசிகூட இரகசியமாகப் பொருளுதவி செய்தாரே அன்றி, வெளிப்படையாகப் பங்கு கொள்ளவில்லை. ஸ்பெயினுக்கும், இங்கிலாந்துக்கும் இடையே வளர்ந்துக் கொண் டிருந்தப் பகைமையின் காரணமாகவும், இங்கிலாந்தின் நலனைக் கருதியும், எலிசபெத் டச்சு மக்களுக்கு உதவிசெய்ய முடிவு செய்தார். 1585ஆம் ஆண்டு டச்சுக்காரர்களுடன் ஓர் உடன் படிக்கைச் செய்துகொண்டு இங்கிலாந்துப் படைகளை நெதர் லாந்துக்கு அனுப்ப ஒத்துக்கொண்டார். எலிசபெத்தின் நேரடித் தலையீடு ஃபிலிப்பின் ஆத்திரத்தை மேலும் அதிகரித்தது. ஃபிலிப் தன் படைவலிமை முழுவதையும் இங்கிலாந்தை ஒடுக்குவதில் பயன்படுத்தினர். 1588-ல் ஒரு பெரிய ஸ்பானியக் கப்பற்படை (The Spanish Armada) இங்கிலாந்தின்மீது படையெடுத்துச் சென்றது. ஆனல், ஸ்பானியக் கப்பற்படை பெருந்தோல்வி யடைந்தது என்பதை முன்பே கண்டோம். இத்தோல்விக்குப் பிறகு இரண்டாம் ஃபிலிப் தன் முழுக்கவனத்தையும் நெதர்லாந்து மீது திருப்பமுடியவில்லை. ஃபிரான்சின் அரசராகப் பிராடஸ் டென்டு சமயத்தைச் சேர்ந்த நவாரேயின் ஹென்றி பட்டத்திற்கு வந்ததால் ஃபிரான்சில் கத்தோலிக்க சமயத்தைக்காக்க ஃபிரெஞ்சு விவகாரங்களில் இவர் தலையிட்டார். இங்கிலாந்து, ஃபிரான்ஸ் நாடுகளுடன் நடந்த போர்களின் விளைவாக ஸ்பெயினின் செல்வமும், படைபலமும் குன்றியது. 1592-ல் பார்மா கோமகனும் இறந்தார். எனவே, நெதர்லாந்துப் போரில் பிலிப் முன்போல அக்கரை காட்டவில்லை.

வில்லியம் இறந்தபிறகு டச்சுமக்கள் அவருடைய மகன் 'மாரிஸ்' (Maurice) என்பவரின் தலைமையில் தொடர்ந்துப் போராட்டத்தை நடத்தினர்கள். ஸ்பானியப்படைகள் எல்லா நகரங்களிலிருந்தும் விரட்டியடிக்கப்பட்டன. இந்தத் தோல்வி களுக்குப் பிறகும்கூட இரண்டாம் ஃபிலிப் டச்சு மக்களுடன் சமா தானம் செய்துகொள்ள விரும்பவில்லை. 1598-ல் இரண்டாம்ஃபிலிப் இறக்கவே, அவர் மகன் மூன்றும் ஃபிலிப் ஸ்பெயினின் அரியணை

ஏறினர். 1609 வரை இந்தப் போர் தொடர்ந்து நடைபெற்றது. இறுதியில் இந்த ஆண்டில் மூன்றும் ஃபிலிப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு தற்காலிகப் போர்நிறுத்த ஒப்பந்தம் செய்துக் கொண்டார் (Twelve Years Truce). இந்தக் காலவரம்பு முடிவடைவதற்குள் ஐரோப்பாவில் முப்பதாண்டுப் போர் தொடங்கியது. அதன் முடிவில் கையெழுத்தான 'வெஸ்ட்பேலியா உடன்படிக்கையின்'படி (Treaty of Westphalia, 1648) டச்சு மக்களின் சுதந்தரத்தை ஸ்பெயின் ஏற்றுக்கொண்டது.[1] பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் நெதர்லாந்து பலத் துறைகளிலும் முன்னேற்றம் அடைந்தது. மீன் பிடிக்கும் தொழிலின் மூலமும், அந்நியநாட்டு வியாபாரம் மூலமும், டச்சு மக்கள் பெருஞ் செல்வம் ஈட்டினர். கப்பல் கட்டும் தொழில் வளர்ச்சிபெற்று கடல் ஆதிக்கத்தில் முன்னணியில் நின்றது நெதர்லாந்து. ஆப்பிரிக்காவிலும், கிழக்கிந்தியத் தீவுகளிலும், சீனாவிலும் மேற்கிந்தியத் தீவுகளிலும், தென் அமெரிக்காவிலும், டச்சு வியாபார ஸ்தலங்கள் அமைக்கப்பட்டன. 1601-ல் டச்சு கிழக்கிந்தியக் கம்பெனி என்ற வர்த்தகக் கம்பெனி நிறுவப்பட்டது.

டச்சுக் குடியரசு ஏழு மாநிலங்கள் கொண்ட, ஒரு பலவீனமான 'கூட்டாட்சியாக' (Loose Confederation) விளங்கியது. ஒவ்வொரு மாநிலமும் உரிமைப் பெற்றிருந்தது. ஒவ்வொரு மாநிலமும் ஒரு தனிச் சட்டசபையையும், 'Stadtholder' என்ற கவர்னரையும் பெற்றிருந்தது. மாநிலச் சட்டசபையின் பிரதிநிதிகள் அடங்கிய 'Estates General' என்னும் ஒரு மத்தியப் பாராளு மன்றம் இருந்தது. 'Captain General' என்ற படைத் தளபதியையும், 'Admiral General' என்ற கடற் தளபதியையும் நியமிக்கும் அதிகாரம் இந்த மன்றத்திற்கு உண்டு. சட்டத்தைச் செயல்படுத்தும் அதிகாரம் (Executive Power) Council of State' என்ற குழுவினிடமும், 'Stadtholder' என்ற கவர்னரிடமும் ஒப்படைக்கப்பட்டன.

**நெதர்லாந்தின் வெற்றிக்குக் காரணங்கள் :**

1. டச்சுக்காரர்களின் மாநில உரிமைகளையும், சமயச் சுதந்தரத்தையும் ஸ்பெயின் பறிக்க முயற்சித்ததால், ஸ்பெயினை

[1] பிராடஸ்டென்டு மாநிலங்களான வட மாநிலங்கள் ஏழும், டச்சுக் குடியரசாக உருவம் பெற்றன. மத்திய. தெற்கு மாநிலங்களான கத்தோலிக்க மாநிலங்கள் பத்தும் தொடர்ந்து ஸ்பெயினின் ஆதிக்கத்தில் இருந்தன. இப் பகுதிதான் ஸ்பானிய நெதர்லாந்து என்று அழைக்கப்பட்டது. 1700-ல் ஸ்பானிய ஹாப்ஸ்பர்க்குகளின் ஆட்சியிலிருந்து ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்க்குகளின ஆட்சிக்கு மாற்றப்பட்டு, ஆஸ்திரிய நெதர்லாந்து என்ற பெயர்ப் பெற்றன. பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஆஸ்திரிய நெதர்லாந்து சுதந்திரம் பெற்று பெல்ஜியம் என்ற பெயர் பெற்றது.

எதிர்த்து மன உறுதியுடன் போர்ப் புரிந்தனர் டச்சு மக்கள். ஆரஞ்சு வில்லியம், அவர் மகன் மாரிஸ், போன்ற தலைவர்கள் இந்த உறுதியை வலுப்படுத்தி வளர்த்தனர்.

2. நாட்டின் இயற்கையமைப்பு இவர்களின் வெற்றிக்குத் துணைப் புரிந்தது. கால்வாய்கள் நிறைந்த இந்த நாட்டில் போர் புரிவது மிகக்கடினமாக இருந்தது. நாட்டின் பல பகுதிகள் கடல் மட்டத்திற்குக்கீழ் இருந்ததால் எதிரிகளால் ஆபத்து நேரக்கூடிய காலங்களில் கடல் அணைகள் உடைக்கப்பட்டன. கடல்நீர் நாட்டிற்குள் புகுந்து எதிரிகள் போரிட முடியாவண்ணம் இன்னல்களை விளைவித்தது.

3. டச்சுக்காரர்களின் கடலாதிக்கம் ஸ்பானியர்களுடைய கடல் வலிமையைக் குலைத்தது. ஸ்பெயின் நெதர்லாந்துடன் தொடர்புக் கொள்ளமுடியாமல் தடுத்தது.

4. டச்சு மக்கள் தங்கள் வியாபாரம் மூலமாக ஏராளமான செல்வம் பெற்றிருந்தனர்.

5. ஏராளமானக் கூலிப்படைகளை அமர்த்தி, போர்புரியும் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்ததால், போர்க்காலங்களில் கூட அவர்களால் வியாபாரம், தொழில் போன்ற நடவடிக்கை களில் ஈடுபட்டு, தங்கள் செல்வ வளத்தைப் பெருக்கிக்கொள்ள முடிந்தது.

6. அயல்நாட்டவர்கள் டச்சுக்காரர்களுக்கு அளித்த உதவி இவ்வெற்றிக்கு ஒரு முக்கிய காரணமாக இருந்தது என்பதை நாம் மறந்து விடக்கூடாது. ஜெர்மன் பிராடஸ்டெண்டு அரசுகளும், இங்கிலாந்து, ஃபிரான்ஸ் நாடுகளும், அவ்வப்பொழுது டச்சு மக்களுக்குப் பொருள், படை, போர்த் தளவாடங்கள் கொடுத்து உதவின.

7. நெதர்லாந்து விடுதலைப் புரட்சியை ஒடுக்கும் முயற்சியில் தன் முழுக்கவனத்தையும், செல்வம் முழுவதையும், ஈடுபடுத்த முடியாவண்ணம் இரண்டாம் ஃபிலிப் மற்ற பல திட்டங்களைச் செயல்படுத்த வேண்டிய நிலையிலிருந்தார். உதாரணமாக இங்கிலாந்துடன் போரும், ஃபிரெஞ்சு விவகாரங்களில் அவர் தலையீடும், நெதர்லாந்துப் புரட்சியை ஒடுக்கத் தீவிர முயற்சி யெடுக்கத் தடையாக அமைந்தன.

8. ஸ்பெயின் கப்பற்படை இங்கிலாந்தினால் தோற்கடிக்கப் பட்டது டச்சு வெற்றிக்கு அடிகோலியது.

இவ்வாறு இரண்டாம் ஃபிலிப்பின் ஆட்சியில் ஸ்பெயினின் நிலைமையை நோக்கும்பொழுது உள்நாட்டு, வெளிநாட்டு விவகாரங்களில் ஃபிலிப்பின் திட்டம் யாவும் தோல்வியடைந்தன. 1598-ல் இவருடைய ஆட்சி முடிவடைந்தபொழுது ஸ்பெயின் வலிமையும், செல்வாக்கும் இழந்து காணப்பட்டது. இவருக்கு முன் ஆண்ட ஐந்தாம் சார்லஸ் காலத்தில் ஐரோப்பிய வரலாற்றில் முன்னணியில் இருந்த ஸ்பெயின் இப்பொழுது ஐரோப்பிய அரசியல் அரங்கிலிருந்து வெளியேற்றப்பட்டு, அடுத்த நூற்றுண்டில் ஃபிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகள் ஐரோப்பிய அரசியலில் முன்னணியில் நிற்பதைக் காண்கின்றோம். ஸ்பெயின் நாட்டின் இந்த எழுச்சிக்கும், வீழ்ச்சிக்கும் என்ன காரணங்கள் என்பதை ஆய்வது மிகவும் அவசியமாகும். பதினாறும் நூற்றுண்டில் ஸ்பெயின் முன்னணியில் இருந்ததற்குப் பின்வரும் காரணங்களைக் கூறலாம். 1. மத்தியதரைக்கடல், அட்லாண்டிக் கடல் ஆகிய இரு கடற்கரைகளிலும் துறைமுகங்களைக் கொண்ட சாதகமான ஒரு பூகோள அமைப்பை ஸ்பெயின் பெற்றிருந்தது. 2. நாடு முழுவதும் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டும் வல்லமை பொருந்திய மத்திய அரசு ஸ்பெயினில் இயங்கியது. 3. ஐந்தாம் சார்லஸ், இரண்டாம் ஃபிலிப் போன்ற திறமை பெற்ற அரசர்களால் ஆளப்பட்டது. 4. ஸ்பெயினுக்கும் அப்பால் இத்தாலி, நெதர்லாந்து, அமெரிக்கா போன்ற தொழில்வளம், செல்வவளம் பெற்ற வெளிநாடுகள் ஸ்பெயினின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தன. 5. ஐரோப்பாவில் கத்தோலிக்கச் சமயத்தைக் காக்கும் பொறுப்பு மரபு வழியாக ஸ்பெயினுக்குக் கிடைத்ததால் போப்பின் உதவியும் திருச்சபையின் ஆதரவும் ஸ்பெயின் பெற்றது. 6. முகம்மதியர்களின் ஆதிக்கம் ஐரோப்பாவில் பரவுவதைத் தடுக்கும் பொறுப்பை ஸ்பெயின் ஏற்றிருந்தது. 7. ஸ்பெயின்நாடு சமயப் பிளவுகள் இன்றி, ஒன்றுபட்டிருந்தது. 8. விலை மதிக்கமுடியாத உலோகப் பொருள்கள், மற்ற செல்வங்கள், கடல்கடந்த குடியேற்றங்களிலிருந்து ஸ்பெயினுக்குக் கிடைத்தது மட்டுமின்றி ஜெர்மனி, இத்தாலி நாட்டுச் செல்வந்தர்கள், ஸ்பெயின் அரசர்களுக்குப் பொருளுதவி புரிந்தனர். 9. ஐரோப்பாவிலேயே ஆற்றல்மிக்க சிறந்த ஒரு தரைப்படையையும், போர்த்தளபதிகளையும், ஸ்பெயின் பெற்றிருந்தது. 10. மத்தியதரைக்கடல், அட்லாண்டிக் கடல் பகுதிகளில் ஸ்பெயினின் கடல் ஆதிக்கம் ஓங்கியிருந்தது.

அதே பதினாறும் நூற்றுண்டின் இறுதியில் ஸ்பெயினின் வீழ்ச்சிக்குப் பின்வரும் காரணங்களைக் கூறலாம் : 1. ஸ்பெயின் நாடு பல அரசுகளை உட்கொண்டதாக இருந்தது என்பதை முன்பு கண்டோம். அந்த அரசுகளிடையே நிலவிவந்த அரசியல்

ஒற்றுமையின்மை ஸ்பெயினைப் பலவீனப் படுத்தியது. 2. ஸ்பெயின் தொழில், வியாபாரத் துறைகளில் வளர்ச்சி பெறவில்லை. அமெரிக்கக் குடியேற்றங்களிலிருந்து ஸ்பெயின் ஈட்டிய செல்வம் அனைத்தும், ஃபிரான்ஸ் இங்கிலாந்து போன்ற நாடுகளிலிருந்து தேவைப்பட்ட பொருள்களை வாங்குவதற்காகச் செலவிடப் பட்டது. 3. சமய வெறுப்புணர்ச்சி காரணமாக ஸ்பெயினின் பொருளாதார வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்ட யூதர்கள், மூர்கள் போன்ற மக்கள் நாட்டைவிட்டு விரட்டப்பட்டதன் விளைவாக, பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்பட்டது. 4. அரசின் வரிக்கொள்கை, நாட்டின் தொழில், வியாபார வளர்ச்சிக்குத் தடையாக இருந்தது. 5. நாட்டின் செல்வம் முழுவதும் நேரடியாக ஸ்பெயினின் முன்னேற்றத்திற்குத் தொடர்பில்லாத பல திட்டங்களுக்குச் செலவிடப்பட்டது, 6. ஃபிரான்சிற்கும், ஸ்பெயினுக்குமிடையே தொடர்ந்து நடந்து கொண்டிருந்த ஆதிக்கப்போட்டி, கத்தோலிக்க நாடுகளின் தலைமையை ஏற்றிருந்ததால், பிராடஸ்டெண்டுகளுக்கு எதிராகப் போரிட வேண்டிய பொறுப்பு, மத்தியதரைக்கடற் பகுதியில் துருக்கியர்களுக்கு எதிராகப் போரிட வேண்டிய பொறுப்பு, ஆகிய காரணங்களினால் ஸ்பெயின் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டும் பணியில் முழுக் கவனத்தைச் செலுத்த முடியவில்லை. 7. நெதர்லாந்துப் புரட்சி. பல்வேறு வகைகளிலும் ஸ்பெயினின் வலிமையைக் குலைத்து இறுதியில் அதன் வீழ்ச்சிக்கே காரணமாக அமைந்தது. 8. ஸ்பெயின் முன்னணியில் இருந்ததால் மற்ற ஐரோப்பிய நாடுகளிடையே ஏற்பட்ட பொறாமை, பகைமை உணர்ச்சி அதன் வீழ்ச்சிக்கு அடிகோலியது.[1]

[1] History of Europe since 1500—C.J.H. Hayes and C. W. Cole, page 89, 90.

## காஸ்டைல் ஆரகான் வம்சங்கள்



# 9. முப்பதாண்டுப் போர் (கி.பி. 1618-1648)

பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதி ஐரோப்பிய வரலாற்றில் முக்கிய நிகழ்ச்சி முப்பதாண்டுப் போராகும். பெரும்பாலும் இந்தப் போர் புனித ரோமானியப் பேரரசின் எல்லைக்குள்ளேயே நடந்தாலும் ஐரோப்பாவின் பல நாடுகள் இந்தப் போரில் பங்கு கொண்டு அவை இப்போரினால் வெகுவாகப் பாதிக்கப்பட்டன. இந்தப் போரின் காரணங்களையும் நிகழ்ச்சிகளையும் ஆராய்வதற்கு முன்பு, இப்போரின் இரண்டு முக்கிய கூறுகளை மனதில் கொள்ள வேண்டும். ஒன்று சமயம். திருச்சபைக்கு எதிராகத் தோன்றிய புரட்சியை அதாவது பிராடஸ்டெண்டு சமயத்தை வன்முறை மூலம் ஒழிப்பதற்குக் கத்தோலிக்க நாடுகள் மேற்கொண்ட பெரு முயற்சிதான் இந்தப் போர் என்று கூறலாம். மற்றொன்று அரசியல். அரசியல் அடிப்படையில் நோக்கும்பொழுது இந்தப் போர் புனித ரோமானியப் பேரரசர், சிற்றரசர்களைத் தன் அதிகாரத்திற்குட்படுத்தித் தம் ஆதிக்கத்தை நிலைநாட்டச் செய்த ஒரு முயற்சி என்று கருதலாம். எனவே, சமய அரசியல் பிரச்சினைகள் கலந்து காணப்படும் ஒரு நிகழ்ச்சி இப்போர் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

**காரணங்கள்**

1. சமயக் காரணங்கள்: பிராடஸ்டெண்டு சமயத்தினருக்கு ஒரு பெரும் வெற்றியாகக் கருதப்பட்ட ஆக்ஸ்பர்க் சமாதானம் (1555) சமயப் பூசல்களுக்கும், சச்சரவுகளுக்கும் ஒரு முடிவு காணத் தவறிவிட்டது. பல முக்கிய பிரச்னைகளுக்கு இது ஒரு சரியான தீர்வு காணவில்லை. உதாரணமாக பிராடஸ்டெண்டு சமயத்தில் லூதரின் பிரிவை மட்டும் (Lutheranism) இந்தச் சமாதானம் ஏற்றுக்கொண்டது. பொஹீமியா, மத்திய, தெற்கு ஜெர்மனி ஆகிய பகுதிகளில் நிலவிவந்த கால்வினியப் பிரிவை இது ஏற்றுக் கொள்ளவில்லை. 'Ecclesiastical Reservation' என்ற விதியின்படி 1552க்குப் பிறகு கத்தோலிக்க திருச்சபையின்


கி.பி.1648-ல்
ஐரோப்பா
திருச்சபையின் அரசுகள்
ஸ்பெயினின் பகுதிகள்
பிரான்டன்பர்க் பிரஷ்யா
ஆஸ்திரியப் பகுதிகள்
ஸ்வீடனின் பகுதிகள்
பேரரசின் எல்லை
ரஷ்யா
போலந்து
ஸ்வீடன்
டென்மார்க்
ஸ்காட்லாந்து
துருக்கிப் பேரரசு
போப்பின் அரசு
சிசிலி அரசுகள்
சார்டினியா
ஸ்பெயின்

சொத்து எதையும் பறிமுதல் செய்யக்கூடாது. ஆனால், நடைமுறையில் பிராடஸ்டெண்டு சிற்றரசர்கள் வாய்ப்பு கிடைக்கும் பொழுதெல்லாம் திருச்சபையினுடைய நிலத்தை அபகரித்தார்கள். இது மட்டுமன்றி பல கத்தோலிக்கப் பிஷப்புகளும், குருமார்களும் பிராடஸ்டெண்டுகளாக மாறி, திருச்சபையின் சொத்துகளைத் தமக்கே சொந்தமாக்கிக் கொண்டனர். பதினாறும் நூற்றாண்டில் பிராடஸ்டெண்டுகளிடையே காணப்பட்ட ஊக்கமும் ஆர்வமும் இப்பொழுது மறைந்து பிராடஸ்டெண்டு சமயம் வலிமை குறைந்து காணப்பட்டது. இதற்கு மாறாக, கத்தோலிக்கத் திருச்சபை சிறிது சிறிதாகத் தன் வலிமையை மீண்டும் பெறத் தொடங்கியது. கத்தோலிக்கச் சமயச் சீர்திருத்த இயக்கத்தின் பயனாகப் போப்பின் தலைமையில் கத்தோலிக்கர்கள் எல்லோரும் ஒன்றுபட்டனர். கத்தோலிக்கச் சமயத்தின் கோட்பாடுகள் யாவை என்பது டிரென்ட் கவுன்சிலில் திட்டவட்டமாக அறிவிக்கப்பட்டது. ஜெசூட்டுகள் கத்தோலிக்க சமயத்திற்கு மீண்டும் உயிர் கொடுத்துக் கத்தோலிக்கர்களிடையே ஒரு புது உணர்வைப் புகுத்தினர். பிராடஸ்டெண்டுகளை ஒடுக்க கத்தோலிக்கர்கள் இன்குசிஷன் போன்ற மன்றங்களை ஏற்படுத்திக் கொண்டனர். கத்தோலிக்கத் திருச்சபையின் ஊழல்கள் களையப்பட்டு குருமார்கள் சமயநெறி, ஒழுக்க நெறிகளிலிருந்து வழுவாத ஒரு நல்லொழுக்க வாழ்க்கை வாழ்ந்தனர். இவ்வாறு சீர்திருத்தப்பட்ட கத்தோலிக்கச் சமயம் பிராடஸ்டெண்டுகளுக்கு எதிராகப் போரிடுவதற்கான தகுதியையும், துணிவையும், வலிமையையும் பெற்று விளங்கியது. பவேரியாவின் அரசர் மாக்ஸிமிலியன் கத்தோலிக்கக் கட்சியின் தலைவர். ஜெர்மனியில் கால்வினியத்தின் வளர்ச்சியை இவர் ஒடுக்கினார். பிராடஸ்டெண்டு சமயத்தைக் காக்கும் நோக்கத்துடன் 1608-ல் பிராடஸ்டெண்டு அரசுகள் ஒரு கூட்டணியை அமைத்தன. இதற்கு எதிராகக் கத்தோலிக்க லீக் ஒன்றைப் பவேரியாவின் அரசர் மாக்ஸிமிலியன் நிறுவினார். பேரரசர் 'இரண்டாம் ருடால்ப்' (Rudolph II) தன் ஆதரவை இதற்கு அளித்தார். இவ்வாறு ஜெர்மனி பிளவுபட்டுச் சமயப்பற்று மட்டுமன்றி அரசியல் பொறாமை, போட்டி காரணமாகவும் எழுந்த போர்தான் முப்பதாண்டுப் போர்.

2. அரசியல் காரணங்கள்: புனித ரோமானியப் பேரரசருக்கும் சிற்றரசர்களுக்குமிடையே இருந்த பொறாமை, பகை உணர்ச்சி இப்போர் ஏற்படக் காரணமாக இருந்தது. ஜெர்மனி அல்லது புனித ரோமானியப் பேரரசு அரசியல் ஒற்றுமை இல்லாத ஓர் அரசு. பேரரசர் மற்ற ஜெர்மானிய அரசுகளின்மீது தன்

அதிகாரத்தை நிலைநாட்ட முடியவில்லை. படைத்துறை, நிதித் துறை போன்றவற்றைத் தன் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வந்து சிற்றரசர்களின் வலிமையை ஒடுக்கப் பேரரசர்கள் முயற்சித்தார்கள். சிற்றரசர்களோ தங்கள் சுதந்திரத்தையும் சிறப்புரிமைகளையும் விட்டுக்கொடுக்க மனமின்றி இது போன்ற முயற்சிகளை எதிர்த்தார்கள். பேரரசர் ஜெர்மனியை ஒன்றுபடுத்தி, தம் ஆதிக்கத்திற்குட்படுத்த முடியுமா? அல்லது பல்வேறு சிற்றரசுகள் தங்களுடைய அதிகாரத்தை வளர்த்துக்கொள்ளும் முயற்சியில் வெற்றி பெறுமா? இவைதான் பதினேழாம் நூற்றாண்டில் பேரரசின் வரலாற்றில் எழுந்த பிரச்சினைகள். இந்தப் பிரச்சினைகளின் அடிப்படையில் நிகழ்ந்ததுதான் முப்பதாண்டுப் போராகும்.

3. பால்டிக் பிரச்சினை: பால்டிக் கடற் பகுதியில் ஆதிக்கம் ஏற்படுத்தவும் அப்பகுதியில் வாணிக உரிமையைக் கைப்பற்றவும் ஐரோப்பிய நாடுகளிடையே ஏற்பட்ட பலத்த போட்டி இப்போர் ஏற்படக் காரணமாக இருந்தது. ஜெர்மானியக் குடியரசுகளைக் கொண்ட 'ஹான்சீடிக் சங்கம்' (Hanseatic) League) ஒரு காலத்தில் இப்பகுதியில் செல்வாக்குப் பெற்றிருந்தது. ஆனால், பதினேழாம் நூற்றாண்டில் டென்மார்க், போலந்து, ஸ்வீடன் போன்ற நாடுகள் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்த முயன்றுக் கொண்டிருந்தன. போர்த் திறமையும், அரசியல் திறமையும் நிறைந்த ஸ்வீடன் அரசர் 'குஸ்தாவஸ் அடால்பஸ்' (Gustavus Adolphus) பால்டிக் பகுதியில் தன் ஆதிக்கத்தை ஏற்படுத்த விரும்பினார். டென்மார்க்கும், ஸ்வீடனும் சமயத்துறையில் ஒன்றுபட்டிருந்த போதிலும் (இருநாடுகளும் லூ த ரி ன் சமயத்தை ஏற்றுக் கொண்டன) பால்டிக் பிரச்சினையைப் பொறுத்தவரை அவை ஒன்றை ஒன்று எதிரியாகக் கருதிக் கொண்டன. இவைகளைத் தவிர பேரரசும், ஸ்பெயின், ஃபிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளும் பால்டிக் பகுதியில் தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ள விரும்பின.

4. அரச குடும்பங்களின் ஆதிக்கப்போட்டி: பதினாறும் நூற்றாண்டிலிருந்தே ஃபிரான்சின் வேலாய், பூர்போன் அரச குடும்பங்களுக்கும், ஸ்பெயின் ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்க் குடும்பத்திற்கும் இடையே போட்டியும், பகைமையும் வளர்ந்துகொண்டிருந்தன. பதினேழாம் நூற்றாண்டில் ஹாப்ஸ்பர்க் அரசுகளால் ஃபிரான்ஸ் சூழப்பட்டிருந்தது. ஃபிரான்சின் செல்வாக்கும், வலிமையும் பெருக வேண்டுமானால் ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் ஒழிக்கப்படவேண்டும் என்று ஃபிரான்சின் மன்னர்கள் கருதினார்கள். பேரரசும் ஹாப்ஸ்பர்க்குகளின் கையில் இருந்தது. பேரரசரின் தலைமையில் ஜெர்மனி ஒற்றுமைப்படுவதை ஃபிரான்ஸ் விரும்பவில்லை. ஹாப்ஸ்பர்க்

குடும்பத்தினர் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிக்கொள்ள ஃபிரான்சின் வலிமையும், செல்வாக்கும் ஒடுக்கப்படவேண்டும் என்று கருதினர். இவ்வாறு இவ்விரு நாடுகளின் அரச குடும்பங்களுக்கிடையே ஏற்பட்ட ஆதிக்கப் போட்டி முப்பதாண்டுப் போர் ஏற்படக் காரணமாக இருந்தது.

5. உடனடிக் காரணம். பொஹீமிய நிகழ்ச்சி: *1618-ல் பொஹீமியாவில்*[1] ஹாப்ஸ்பர்க்குகளுக்கு எதிராக நடந்த புரட்சி முப்பதாண்டுப் போர் துவங்கக் காரணமாக இருந்தது. புனித ரோமானியப் பேரரசரான 'மத்தியாஸ்' (Mathias), பொஹீமியாவின் அரசராகவும் இருந்துவந்தார். அவருக்குக் குழந்தைகள் இல்லாததால் நெருங்கிய உறவினரான ஸ்டைரியா சிற்றரசை ஆண்டு வந்த ஃபெர்டினண்டு (Ferdinand of Styria) அடுத்த வாரிசாக விளங்கினார். இவர் ஒரு தீவிர கத்தோலிக்கர். பொஹீமியா ஒரு பிராடஸ்டெண்டு நாடு. லூதரின் சமயத்தைப் பின்பற்றியவர்களும், கால்வினீயவாதிகளும் இங்கு நிறைந்திருந்தனர். தீவிரக் கத்தோலிக்கரான ஃபெர்டினண்டு பொஹீமிய அரசரானால், பிராடஸ்டென்டுகளின் சமய உரிமைகள் பறிக்கப்படும் என்று பொஹீமிய மக்கள் அஞ்சினர். 1618-ல் ஹாப்ஸபர்க் ஆட்சியை ஒழித்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் பொஹீமியப் பிரபுக்கள் சிலர் பேரரசர் மத்தியாஸுக்கு எதிராக ஒரு புரட்சியைத் தோற்றுவித்தனர். பொஹீமியாவின் தலைநகரான 'பிராக், நகரில் (Prague), பேரரசரின் பிரதிநிதிகள் வசித்துவந்த இடத்தைப் புரட்சிக்காரர்கள் தாக்கி, அவர்களை அறுபது அடி, கீழே இருந்த அகழியில் தூக்கி எறிந்துவிட்டனர். பேரரசருடைய அதிகாரத்தை ஏற்க பொஹீமிய மக்கள் விரும்பவில்லை என்பதை, இது மிகத் தெளிவாக விளக்கியது. புரட்சிக்காரர்கள் பிராக் நகரில் ஒரு புரட்சி அரசாங்கத்தை நிறுவினார்கள். இது பொஹீமியாவில் நடந்த ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி என்றாலும், இதனுடைய விளைவுதான் ஜெர்மனி முழுவதையும் ஒரு பெரிய போரில் ஆழ்த்தியது. இப்போர்தான் முப்பதாண்டுப் போராகும்.

[1] 1526-ல் பொஹீமிய அரசு ஹாப்ஸ்பர்க்குகள் வசம் வந்தது. ஸ்லாவ் (Slav) இனத்தைச் சேர்ந்த ஸெக்குகளும், ஜெர்மானியர்களும் இங்கு வாழ்ந்த மக்களாவர். ஸெக்குகள் பெரும்பான்மையினராகையால் இந்நாடு' செக்கோஸ்லோவேகியா' (Czechoslovakia) என்று அழைக்கப்படுகிறது. பதினைந்தாம் நூற்றாண்டில் திருச்சபைச் சீர்திருத்த இயக்கத்தைத் தோற்றுவித்த ஜான் ஹஸ் என்பவரின்மூலம் இந்நாடு ஐரோப்பிய வரலாற்றில் ஒரு முக்கியத்துவம் பெற்றது. ஹஸ் சமய விரோதி என்று தண்டிக்கப்பட்டு, ஹஸைப் பின்பற்றியவர்கள் ஒடுக்கப்பட்டபோதிலும் பிற்காலத்தில் லூதரின் இயக்கம் பொஹீமியாவில் வேகமாகப் பரவியது. தீவிர கத்தோலிக்கரான பேரரசர், 'இரண்டாம் ருடால்ப்' (Rudolph II) 1609-ல் பிராடஸ்டென்டுகளுக்குச் சமய உரிமைகள் அளித்தார்.

போர் நிகழ்ச்சிகள் : இந்தப் போர் நிகழ்ச்சிகளை உற்று நோக்கும்பொழுது இது ஒரே ஒரு போர் அன்று. ஒன்றோடொன்று தொடர்புகொண்ட பல போர்களின் தொகுப்பு என்ற உண்மை புலப்படும். எனவே, இப் போரின் நிகழ்ச்சிகளை நாம் ஐந்து கட்டங்களாகப் பிரித்துக்கொள்ளலாம்.

*முதல் கட்டம் — பொஹீமிய நிகழ்ச்சிகள்* (Bohemian Period, 1618–20)

*இரண்டாவது கட்டம் — பாலடினேட் நிகழ்ச்சிகள்* (Palatine Period, 1621–23)

*மூன்றாவது கட்டம் — டென்மார்க்கின் தலையீடு* (Danish Period, 1625–29)

*நான்காவது கட்டம் — ஸ்வீடன் தலையீடு* (Swedish Period, 1630–35)

*ஐந்தாவது கட்டம் — ஃபிரான்சின் தலையீடு* (French Period, 1635–48)

முதல் கட்டம் : பொஹீமிய நிகழ்ச்சிகள் (1618–20)

பொஹீமியாவின் புரட்சி அரசாங்கம் ஜெர்மன் பிராடஸ்டென்டுகளின் உதவியை நாடியது. கால்வினீயச் சமயத்தைத் தழுவிய சில ஜெர்மன் சிற்றரசர்கள் மட்டும் உதவ முன்வந்தனர். அவ்வாறு உதவிய சிற்றரசர்களுள் ஒருவர், பாலடினேட் தேர்வாளர் 'ஃபிரெடரிக்' (Frederick, Elector Palatinate) ஆவார். பேரரசர் புரட்சியை ஒடுக்கும் பணியில் ஈடுபட்டார். ஆனால், இடையில் பேரரசர் மத்தியாஸ் இறக்கவே, இரண்டாம் ஃபெர்டினண்டு (Ferdinand II) பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதே சமயத்தில் பொஹீமியப் புரட்சிக்காரர்கள் பாலடினேட் தேர்வாளர் ஃபிரெடரிக்கைப் பொஹீமியாவின் அரசராக ஏற்றுக்கொண்டனர் (1619). ஃபெர்டினண்டு பொஹீமியப் புரட்சியை ஒடுக்கும் பணியில் தீவிரமாக முனைந்தார். ஜெர்மனியில் கத்தோலிக்க அரசுகளின் அணி ஒன்று நிறுவப்பட்டிருந்தது. இந்த அணியின் உதவியைப் பேரரசர் நாடினார். இந்த அணியின் தலைவர் பவேரியாவின் சிற்றரசர் மாக்ஸிமிலியன், மிக்க ஊக்கத்துடனும், ஆர்வத்துடனும் பேரரசருக்கு உதவிபுரிய முன்வந்தார். பேரரசரின் படைகளுக்கும், பொஹீமியப் படைகளுக்குமிடையே மோதல் ஏற்பட்டது. பொஹீமிய அரசர் ஃபிரெடரிக்குக்குப் பிராடஸ்டென்டுகளின் உதவி கிடைக்கவில்லை. தனித்து விடப்

பட்ட பொஹீமியா, பேரரசரின் படையெடுப்பைச் சமாளிக்க முடியவில்லை. மாக்ஸிமிலியனின் கத்தோலிக்கப் படைகள் தளபதி 'டில்லி'யின் (Tilly) தலைமையில் பொஹீமியாவுக்குள் புகுந்தன. பிராக் நகரை அடைவதற்குமுன் 1680-ல், 'வெண் குன்று' (Battle of White Hill) என்னுமிடத்தில் நடந்த போரில், ஃபிரெடரிக்கின் படைகள் படுதோல்வியடைந்தன. ஃபிரெடரிக் போர்க்களத்திலிருந்து தப்பி ஓடிவிட்டார். ஃபெர்டினண்டு பொஹீமியாவைக் கைப்பற்றி, புரட்சிக்குக் காரணமான பிரபுக்கள் எல்லோருடைய சொத்துகளையும் பறிமுதல் செய்து, அவர்கள் அதிகாரத்தை ஒடுக்கினார். பிராடஸ்டென்டு சமயம் ஒழிக்கப்பட்டுக் கத்தோலிக்க சமயம் பொஹீமியாவில் புகுத்தப் பட்டது. இவ்வாறு கத்தோலிக்கர்கள் போரின் முதல் கட்டத்தில் வெற்றிவாகை சூடினார்கள்.

## இரண்டாவது கட்டம் : பாலடினேட் நிகழ்ச்சிகள் (1621–23)

இத்துடன் நின்றிருந்தால் போர் தொடர்ந்து நடைபெறுவ தற்கான வாய்ப்புகள் இருந்திருக்காது. ஆனால், பேரரசர் ஃபெர்டி னண்டு மேற்கொண்ட சில நடவடிக்கைகள் போர் தொடர்ந்து நடைபெறுவதற்கு வழி வகுத்தன. பேரரசர், பாலடினேட் தேர் வாளர் ஃபிரெடரிக்கைச் சமூகத்திலிருந்து விலக்கப்பட்டவர் (out law) என்று அறிவித்து, அவர் அரசைக் கைப்பற்றும்படி ஆணையிட் டார். பேரரசரின் இந்தச் செயல் பிராடஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்த பாலடினேட் மக்களின் ஆத்திரத்தைக் கிளறியது. ஆனால், மற்ற பிராடஸ்டென்டு அரசுகள் இதைத் தடுக்க முன்வரவில்லை. எனவே, கத்தோலிக்கப் படைகள் பாலடினேட் அரசைக் கைப் பற்றின. பாலடினேட் அரசில் கத்தோலிக்க சமயம் புகுத்தப் பட்டது. இந்தப்போரில் தமக்கு உதவி புரிந்ததற்காகப் பேரரசர், பவேரிய அரசரான மாக்ஸிமிலியனைத் தேர்வாளராக நியமித்தார். ஃபிரடெரிக் அந்தப் பதவியை இழந்தார். பாலடினேட் அரசின் ஒரு பகுதி மாக்ஸிமிலியனுக்குப் பரிசாக அளிக்கப்பட்டது. இவ்வாறு கத்தோலிக்கர்கள் தொடர்ந்து பெற்றுக்கொண்டிருந்த வெற்றிகள் மற்ற பிராடஸ்டென்டு நாடுகளிடையே அச்சத்தை ஏற்படுத்தியது. இங்கிலாந்து, நெதர்லாந்து, ஸ்வீடன், டென் மார்க் ஆகிய நாடுகள் ஃபிரடெரிக்கின் சார்பாகத் தலையிட முடிவு செய்தன. ஃபிரடெரிக்கின் மாமனாரான இங்கிலாந்து அரசர் முதலாம் ஜேம்ஸ், பிராடஸ்டென்டு அரசுகளின் அணி ஒன்றை நிறுவும் முயற்சியில் தோல்வியடைந்தார். டச்சுக்காரர்கள் ஸ்பெ யினுடன் போர்புரிய வேண்டிய நிலையிலிருந்ததாலும், ஸ்வீடன்,

ரஷ்யா, போலந்து நாடுகளுடன் போரில் ஈடுபட்டிருந்ததாலும், அவை இந்த அணியில் சேரமுன்வரவில்லை. டென்மார்க் மட்டும் பிராடஸ்டெண்டுகள் சார்பில் போரிட ஒப்புக்கொண்டது. முதலாம் ஜேம்ஸ் பொருளுதவியும், படை உதவியும் செய்ய ஒப்புக்கொண்டார். ஆனால், இங்கிலாந்து பாராளுமன்றத்திற்கும் இவருக்குமிடையே கருத்து வேறுபாட்டின் காரணமாக இந்த உதவியை அவரால் தொடர்ந்து அளிக்க முடியவில்லை. இதன் விளைவாக, டென்மார்க் அரசர் 'நான்காம் கிறிஸ்டியன்' (Christian IV), கத்தோலிக்கர்களுடன் தனித்துப் போரிடவேண்டிய நிலை ஏற்பட்டது.

### மூன்றாவது கட்டம் : டென்மார்க் தலையீடு (1625-29)

ஐரோப்பாவின் வல்லரசுச் சமநிலை கத்தோலிக்க அரசுகளுக்குச் சாதகமாக அமைந்துவிடும் என்று அஞ்சிய டென்மார்க் அரசர் நான்காம் கிறிஸ்டியன் (1558-1648) போரில் தலையிட முடிவு செய்தார். 'ஹால்ஸ்டின்' (Holstein) கோமகன் என்ற முறையில் இவரும் புனித ரோமானியப் பேரரசின் ஓர் உறுப்பினராவார். ஜெர்மனியில் ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் பெருகுவதை இவர் விரும்பவில்லை. நார்வே, டென்மார்க் பகுதிகளின் அரசர் என்ற முறையில் ஜெர்மனியின் வடக்குக் கடற்கரைப் பகுதிகளில் தன் செல்வாக்கைப் பரப்பி, பால்டிக் பகுதியின் வியாபாரத்தில் பங்குபெற விரும்பினார். ஒரு பிராடஸ்டெண்டு என்ற முறையில் ஜெர்மன் பிராடஸ்டெண்டுகளுக்கு ஆதரவு அளிக்க முன்வந்தார்.

டென்மார்க்கின் தலையீட்டின் விளைவாகத் தெற்கு ஜெர்மனியிலிருந்து போர்க்களம் வடக்கு ஜெர்மனிக்கு மாற்றப்பட்டது. 1625-ல் கிறிஸ்டியன் ஒரு பெரும் படையுடன் ஜெர்மனிமீது படையெடுத்தார். பேரரசின் சார்பில் தளபதி 'டில்லி' (Tilly) போரிட ஆயத்தமானார். டென்மார்க்கின் படைகளைத் தனியாக நின்று எதிர்ப்பது டில்லிக்குக் கடினமாக இருந்திருக்கும். ஆனால், அதிர்ஷ்டவசமாக ஹாப்ஸ்பர்க்குகளுக்கு உதவியாக 'வாலன்ஸ்டீன்' (Wallenstein) என்ற ஒருவர் போரிட முன்வந்தார். இவர் பொஹீமியாவின் பிரபுக்குடும்பத்தைச் சேர்ந்தவர். பொஹீமியப் புரட்சியின்பொழுது பேரரசருக்கு உண்மையாக உழைத்து அவருடைய நல்லெண்ணத்தையும், ஆதரவையும் பெற்றார். புரட்சியின்பொழுது பிரபுக்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட செல்வத்தைப் பேரரசரிடமிருந்து பெற்று இவர் பெருஞ் செல்வந்தரானார். பேரரசை டென்மார்க்கின் படையெடுப்பிலிருந்து காப்பாற்றப் படை ஒன்றை அமைக்கவும்,

போரில் தலையிடவும் பேரரசரின் அனுமதியைப் பெற்றார். கணிசமான ஊதியமும், கொள்ளைப் பொருள்களில் பங்கும் தருவதாக வாக்களித்து 50,000 வீரர்களைக் கொண்ட படை ஒன்றைத் திரட்டினார். இவர் போர்த்துறையில் நல்ல பயிற்சி பெற்ற ஒரு சிறந்த தளபதி. போர் வீரர்களுக்கு நல்லமுறையில் பயிற்சி அளித்து ஒரு திறமைமிக்கப் படையை உருவாக்கினார். இவருடையப் படைகள் நாட்டுப்புறங்களையெல்லாம் சூறையாடி மக்களுக்கு அளவிலா இன்னல்களைப் புரிந்தன.

1626.ஆம் ஆண்டில் வடக்கு ஜெர்மனியில் 'லுட்டர்' (Lutter) என்ற இடத்தில் நடந்தப் போரில் டில்லியின் படைகள் கிறிஸ்டியனின் படைகளை, 'டிசோ பாலம்' (Bridge of Dessau) என்ற இடத்திலும் மற்றொரு போரில் வாலன்ஸ்டினின் படைகள் கிறிஸ்டியனின், தளபதி 'மேன்ஸ் ஃபீல்டின்' (Mansfield) படைகளையும் முறியடித்தன. இந்தச் சமயத்தில் பிராடஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்த பிராண்டன்பர்க் தேர்வாளர் கத்தோலிக்கக் கட்சியில் சேர்ந்துகொண்டுப் பேரரசருக்கு ஆதரவாக டென்மார்க் படைகளுடன் போர் செய்தார். ஜெர்மனியிலிருந்து டென்மார்க் படைகள் விரட்டப்பட்டன. பேரரசரிடம் ஒரு சிறந்த கப்பற் படை இல்லாததாலும், பால்டிக் வட கடற்பகுதிகளில் பேரரசரின் ஆதிக்கம் நிலைநாட்டப்படாததாலும் டென்மார்க்மீது படையெடுக்க முடியவில்லை. இந்த நிலையில் டென்மார்க் அரசர் கிறிஸ்டியன் பேரரசருடன் 'லூபெக் உடன்படிக்கையைச்' செய்துக் கொண்டார் (Peace of Lubeck, 1629). இதன்படி கத்தோலிக்கத் திருச்சபையிடமிருந்து அபகரித்த ஜெர்மானிய பிஷப்ரிக்குகளை டென்மார்க் பேரரசுக்குத் திருப்பித் தரவேண்டும். 'ஜட்லண்ட்' (Jutland), 'ஷ்லெஸ்விக்; (Schleswig) ஹால்ஸ்டின் பகுதிகளை டென்மார்க் அரசர் வைத்துக் கொள்ளலாம் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்த உடன்படிக்கை கையெழுத்தாவதற்கு முன்பே பேரரசைக் கொண்ட வாலன்ஸ்டினின் படைகள் ஜெர்மனியின் பிராடஸ்டென்டு வட மாநிலங்களைக் கைப்பற்றி, நாட்டுப்புறமும் நகர்ப்புறமும் சூறையாடப்பட்டன. ஆயிரக்கணக்கான பிராஸ்டெண்டுகள் கொல்லப்பட்டனர். வாலன்ஸ்டினின் திட்டம் என்னவெனில், கத்தோலிக்க பிராடஸ்டென்டு மாநிலங்களையெல்லாம் அச்சுறுத்திப் பேரரசரின் ஆதிக்கத்திற்குள்ளாக்கி பேரரசரைத் தன்னாதிக்கத்திற்குள்ளாக்கிக் கொள்ளவேண்டும் என்பதுதான். ஆனால், பேரரசரும், ஜெர்மானிய அரசர்களும் வாலன்ஸ்டினின் திட்டங்களுக்கு ஆதரவு

அளிக்கவில்லை. அவருடைய செல்வாக்கும், புகழும் ஓங்குவதைக் கண்டு அச்சமும் ஐயமும் கொண்டப் பேரரசர் அவரைப் படைத் தலைமைப் பதவியினின்று நீக்கினர்.[1]

இதுவரை நடந்த போர் நிகழ்ச்சிகளை ஆராயும்பொழுது முதல் இரு கட்டங்களில் பிராடஸ்டென்டுகளின் செல்வாக்கு ஒடுக்கப்பட்டு ஜெர்மனியின் தென்பகுதி முழுவதும் கத்தோலிக்க ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்டதும், மூன்றுவது கட்டத்தில் ஜெர்மனியின் வடபகுதியில் பால்டிக் வட கடற்கரைகள் வரை கத்தோலிக்க ஆதிக்கம் பரவியிருப்பதும் தெளிவாகப் புலப்படும். கத்தோலிக்க ஆதிக்கத்தைத் தடுத்து நிறுத்தும் வலிமைபெற்ற எந்த ஒரு சக்தியும் ஜெர்மனியில் அப்பொழுது இல்லை. பிராடஸ்டென்டுகளின் செல்வாக்கை அறவே ஒழித்துக் கத்தோலிக்க ஆதிக்கத்தை வலுப்படுத்த இதுதான் தகுந்த தருணம் என்று உணர்ந்தப் பேரரசர் ஃபெர்டினண்டு கத்தோலிக்க அணியின் தலைவரான மாக்ஸிமிலியனின் தூண்டுதலுக்கிணங்க 1629-ல் ‘திருப்பித்தரு ஆணை’ (Edict of Restitution), என்ற ஓர் ஆணையை வெளியிட்டார். ஆக்ஸ்பர்க் சமாதானத்தின் நிபந்தனைக்குப் புறம்பாக 1552க்குப் பிறகு கத்தோலிக்கத் திருச்சபையினிடமிருந்து கவரப்பட்டச் சொத்துகள் திருச்சபைக்கே திருப்பிக் கொடுக்கப்படவேண்டும் என்று கூறுவது இந்த ஆணை. இந்த ஆணையைச் செயல்படுத்த உயர் அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். இவர்கள் எல்லோரும் கத்தோலிக்கர்கள். எனவே, இந்த ஆணையை மிகவும் தீவிரமாக இவர்கள் செயல்படுத்தியதன் விளைவாகக் கத்தோலிக்கத் திருச்சபை தான் இழந்த சொத்துகளை மீண்டும் பெற்றது. கால்வினியர்கள் \ லூதரின் பிரிவினர் என்ற பாகுபாடு ஏதுமின்றி இந்த ஆணை எல்லாப் பிராடஸ்டென்டு

[1] கத்தோலிக்க சமயத்தின் ஆதிக்கத்தை வலுப்படுத்த பேரரசர் ‘திருப்பித்தரு ஆணை’ (Edict of Restitution) என்ற ஓர் ஆணையை வெளியிட்டார். இதைச் செயல்படுத்த டில்லி, வாலான்ஸ்டின் போன்ற படைத்தலைவர்களின் ஒத்துழைப்பு தேவைப்பட்டது. வாலன்ஸ்டின் சமயப்பொறைக் கொள்கையை ஆதரித்தவர். பிராடஸ்டென்டுகளை ஒடுக்கப் பிறப்பிக்கப்பட்ட ஆணையைச் செயல்படுத்த அவர் பேரரசுகளுடன் ஒத்துழைக்க விரும்பவில்லை. மேலும், ஜெர்மனியில் தன் ஆதிக்கத்தை ஏறபடுத்த வேண்டுமென்ற இவர் எண்ணமும், இவர் தொடர்ந்து பெற்றுக் கொண்டிருந்த வெற்றிகளும், மிக வேகமாக வளர்ந்துக் கொண்டிருந்த இவர் செல்வாக்கும் பேரரசரின் மனதில் பொறுமையையும் அச்சத்தையும் ஏற்படுத்தின. தன் படை வீரர்களுக்கு ஊதியத்தை அளிக்கக கடைப்பிடித்த கொலை கொள்ளை போன்ற விரும்பத்தகாத முறைகள் இவர்மீது வெறுப்புணர்ச்சியை உண்டாக்கியது. 1630-ல் ராடிஸ்பன் நகரில் கூடிய பேரரசின் டயட் கூட்டத்தில் பவேரியாவின் மாகஸ்மிலியன் இவரைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்று கோரினர். இனி மேலும், வாலன்ஸ்டினைப் பதவியில் வைத்திருந்தால் கத்தோலிக்கர்கள் ஆதரவை இழக்க நேரிடும் என்று உணர்ந்த பேரரசர் இவரைப் பதவியிலிருந்து நீக்கினர்.

களுக்கும் எதிராகச் செயல்படுத்தப்பட்டது. இந்த ஆணை கால்வினியவாதிகளைத்தான் பாதிக்கும், தங்களைப் பாதிக்காது என்று நினைத்துக் கொண்டிருந்த லூதரின் பிரிவினர் விழித்துக் கொண்டனர். லூதர் பிரிவைச் சேர்ந்த ஸ்வீடன் நாடு இப்பொழுது போரில் தலையிட்டது.

நான்காவது கட்டம்: ஸ்வீடன் தலையீடு (1630–1635)

பேரரசரின் திருப்பித்தரு ஆணைக்குப் பிறகு ஜெர்மனியில் பிராடஸ்டென்டுகளின் நிலைமை மிக மோசமாகியது. ஜெர்மனியின் பல பிராடஸ்டென்டு சிற்றரசர்கள் வெளிநாட்டு உதவியை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்தார்கள். இந்த உதவி ஸ்வீடன் நாட்டிலிருந்து கிடைத்தது. அப்பொழுது ஸ்வீடனை 'குஸ்தாவஸ் அடால்பஸ்' (Gustavus Adolphus, 1611–1632)[1] ஆண்டு கொண்டிருந்தார். பிராடஸ்டென்டு நாடான ஸ்வீடனை வட ஐரோப்பாவிலேயே ஒரு தலைசிறந்த நாடாக ஆக்கவேண்டும் என்பதும், பால்டிக்கடலில் ஸ்வீடனின் ஆதிக்கத்தை நிலைநாட்ட வேண்டுமென்பதும் இவருடைய திட்டம். பின்லாந்து, எஸ்தோனியா போன்ற அண்டை நாடுகளைக் கைப்பற்றி 1617-ல் ரஷ்யா இதை ஒப்புக்கொள்ளும்படிச் செய்தார். 1621 முதல் 1629 வரை உறுதியுடன் போலந்துடன் போர் புரிந்து லிவோனியா என்னும் மாநிலத்தைப் பெற்றார். இப்போர்களின் காரணமாகப் படைத்துறையில் நல்ல தேர்ச்சியும், குதிரைப் படையையும், பீரங்கிப் படையையும் போரில் பயன்படுத்தும் ஆற்றலையும் பெற்றிருந்தார். இந்தப் போர்கள் முடிந்தவுடன் வட ஜெர்மனிமீது தன் கவனத்தைத் திருப்பினார். இவர் இப் போரில் தலையிட்டதற்குப் பல காரணங்கள் இருந்தன. டென்மார்க் மீது வாலன்ஸ்டின் பெற்ற வெற்றிகளின் விளைவாக, பால்டிக் கடற்கரைப் பகுதிகளில் ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் வளர்ந்து கொண்டிருந்தது. இது ஸ்வீடனின் சுதந்திரத்திற்கும், பால்டிக் பகுதியில் ஸ்வீடனின் செல்வாக்கு வளர்வதற்கும் தடையாக இருக்கும் என்பதைக் குஸ்தாவஸ் உணர்ந்தார். எனவே, ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம்

[1] இந்த அரசரைப் பற்றிப் பேராசிரியர் Hayes பின்வருமாறு கூறுகிறார்: "Gustavus Adolphus was one of the most attractive figures of his age — In the prime of life, tall, fair and blue eyed, well educated and versed in seven languages, fond of music and poetry, skilled and daring in war, impetuous and versatile. A rare combination of idealist, general and practical man of affairs, Gusatavus Adolphus dreamed of making of protestant sweden, the leading power of northern Europe and of the Baltic Sea a Swedish lake"! —*History of Europe Since 1500*, Hayes & Cole, page 99.

மேலும் வளருவதை உடனடியாகத் தடுக்கும் நோக்கத்துடன் இந்தப் போரில் ஈடுபட்டார். ஜெர்மனியில் அடியோடு ஒழிக்கப் படும் நிலையிலிருந்த பிராடஸ்டெண்டு சமயத்தைக் காப்பாற்றும் நோக்கமே, இவரை இப் போரில் ஈடுபடத் தூண்டியது.[2] ஸ்வீடனின் தலையீட்டிற்கு மற்றொரு காரணமும் இருந்தது. ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் எப்படியாவது ஒழிக்கப்பட வேண்டும் என்று விரும்பிய ஃபிரான்சின் அமைச்சர் 'கார்டினல் ரிசெல்யூ' (Cardinal Richelieu) ஸ்வீடனின் தலையீட்டை ஆதரித்து அரசர் குஸ்தாவசை ஊக்குவித்தார். ரிசெல்யூ ஒரு தீவிரக் கத்தோலிக்கராக இருந்தும்கூட அவர் பிராடஸ்டெண்டு அரசரான குஸ்தாவசுக்கு உதவிசெய்ய முன்வந்ததன் நோக்கம் ஹாப்ஸ்பர்க்குகளின் ஆதிக்கம் ஒழிக்கப்பட்டு ஃபிரான்சின் செல்வாக்கும், புகழும் ஓங்கவேண்டும் என்பதுதான். இதிலிருந்து ரிசெல்யூவிற்கு ஃபிரான்சின் வளர்ச்சியிலும், பூர்போன் குடும்பத்தின் வளர்ச்சியிலும் சமயத்தைவிட அதிக அக்கரை இருந்தது என்பது நன்கு புலனாகும். எனவே, 1631-ல் குஸ்தாவசுடன் ரிசெல்யூ ஓர் ஒப்பந்தம் செய்துக் கொண்டார் (Treaty of Barwalde). இதன்படி இந்தப் போரை நடத்துவதற்காக ஸ்வீடனுக்கு ஃபிரான்ஸ் ஒவ்வோர் ஆண்டும் ஒரு குறிப்பிட்ட உதவித் தொகையும் படை உதவியும் அளிப்பதாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

1630-ல் குஸ்தாவஸ் தன் படைகளுடன் 'போமரேனியா' (Pomerania) மாநிலத்தில் வந்து இறங்கினார். பிராண்டன்பர்க்' சாக்ஸனி அரசுகளின் உதவியைக் கோரி, பேச்சு வார்த்தைகள் நடத்திக்கொண்டிருந்தபொழுது பேரரசின் படைகள்' 'டில்லி'யின் தலைமையில் பிராடஸ்டெண்டுகளுக்குச் சொந்தமான 'மாக்டபர்க்' (Magdeburg) நகரைக் கைப்பற்றின (1631). ஆயிரக்கணக்கான போர்வீரர்களும், அந் நகர மக்களும் ஈவு இரக்கமின்றிக் கொல்லப் பட்டனர். நகர் சூறையாடப்பட்டது. இந் நிகழ்ச்சி பிராடஸ்டெண்டுகளின் ஆத்திரத்தைக் கிளறியது. பிராண்டன்பர்க், சாக்ஸனி அரசுகளும், வட ஜெர்மனியின் மற்ற பிராடஸ்டெண்டு அரசுகளும் குஸ்தாவசுக்கு உதவிசெய்ய முன்வந்தன. குஸ்தாவஸ் சாக்ஸனியில் நுழைந்து, டில்லியின் படைகளை 1631-ல் லீப்ஸிக் நகருக்கு

[2] "There was more however than the safety of Sweden to the King's intervation......... Admitting that the usual mixture of motives prompted the Swedish intervention in the German Civil War, we may agree that Gustavus acted in the main in order to safeguard the interests of his country. But it is also true that he desired to rescue German protestantism from the destruction with which it was threatened. The abiding historical significance of his intervention is that the succeeded in doing so" — A History of Europe from the Reformation to the present day—Ferdinand Schevill, page 225.

அருகில் 'பிரெட்டன்ஃபெல்ட்' (Breitenfeld) போரில் முறியடித்தார். டில்லிப் போரில் காயமடைந்துப் போர்க்களத்திலிருந்து தப்பி ஓடினர். இதை அடுத்து குஸ்தாவஸ் கத்தோலிக்க ஆதிக்கத்திற்குட்பட்ட பவேரியாமீது படையெடுத்தார். 1632-ல் 'லெஷ்' (Lech) என்ற இடத்தில் நடந்த போரில் டில்லி கொல்லப்பட்டார். அடுத்து வியன்னு நகரையே தாக்கவேண்டும் என்று குஸ்தாவஸ் திட்டம் வகுத்தார். இந்த நெருக்கடியான நிலைமையில் பேரரசைக் காக்க வாலன்ஸ்டின் ஒருவரால்தான் முடியும் என்று நம்பிய பேரரசர், அவரைத் திரும்ப அழைத்து மீண்டும் படைத் தலைமையை அவரிடம் ஒப்படைத்தார். ஐரோப்பாவின் இரண்டு தலைசிறந்த போர் வீரர்களிடையே மோதல் ஏற்பட்டது. 1632-ல் லீப்ஸிக் அருகே 'லூட்சென்' (Lutzen) என்ற இடத்தில் நடந்த பயங்கரச் சண்டையில் வாலன்ஸ்டினின் படைகள் படுதோல்வியடைந்தன. ஆனல், குஸ்தாவஸ் போரில் கொல்லப்பட்டார். இப்போருக்குப் பிறகு வாலன்ஸ்டினின் நடவடிக்கைகள் பேரரசருக்கு அச்சத்தை ஊட்டின. ஜெர்மன் பிராடஸ்டெண்டுகளுடனும், ஸ்வீடன், ஃபிரான்சுடனும் ஓர் உடன்பாடு செய்துக் கொள்ள வாலன்ஸ்டின் இரகசியப் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். பேரரசரின் தூண்டுதலின் பேரில் வாலன்ஸ்டினின் கூலிப் படைகளைச் சேர்ந்த சில அதிகாரிகள் 1634-ல் ஒரு சதித்திட்டத்தை வகுத்து அவரைக் கொன்றுர்கள். ஸ்வீடன் படைகள் தொடர்ந்து போர்புரிந்துக் கொண்டிருந்தன. 1634-ல் 'நார்ட்லிங்கன்' (Nordlingen) என்ற இடத்தில் நடந்தச் சண்டையில் பிராடஸ்டெண்டுப் படைகள் முறியடிக்கப்பட்டன. ஸ்வீடன் படைகள் தெற்கு ஜெர்மனியிலிருந்து வெளியேற்றப்பட்டன. இறுதியில் போரினல் பேரரசிற்கு ஏற்பட்ட பொருளாதார இன்னல்களும், ஜெர்மனியிலிருந்து அந்நியப் படைகளையும், அந்நியர் செல்வாக்கையும் விலக்கவேண்டும் என்ற ஜெர்மன் மக்களுடைய விருப்பமும் போர் முடிவுற்றுச் சமாதானம் ஏற்பட வழிவகுத்தன. பிராடஸ்டெண்டுக் கட்சியின் தலைவரான சாக்சனித் தேர்வாளருடன் பேரரசர் சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். இதன் விளைவாக 1635-ல் 'பிராக் உடன்படிக்கை' (Treaty of Prague) கையெழுத்தாயிற்று. இத்துடன் போரின் நான்காவது கட்டம் முடிவடைந்தது. இந்த உடன்படிக்கையின்படி பேரரசின் படைகள் பேரரசரின் நேரடிக் கண்காணிப்பில் இயங்கவேண்டும்; ஜெர்மன் சிற்றரசர்களின் கூட்டணிகள் கலைக்கப்படவேண்டும்; இருதரப்பினரும் தாங்கள் கைப்பற்றியப் பிரதேசங்களைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும். திருச்சபை நிலங்களைப் பொறுத்தவரை 1627-ல் எவர் வசம் நிலம் இருந்ததோ அவர்களே நிலத்தை வைத்துக் கொள்ளவேண்டும் என்று முடிவாயிற்று.

ஐந்தாவது கட்டம்: ஃபிரான்ஸ் தலையீடு (1635-1648)

முதல் நான்கு கட்டங்களிலும் பெரும்பாலும் சமயப்பிரச்சினைகளின் அடிப்படையிலேயே நடந்துக் கொண்டிருந்த முப்பதாண்டுப் போர் கடைசிக் கட்டத்தில் ஓர் அரசியல் போராக உருவெடுத்து ஹாப்ஸ்பர்க், பூர்போன் குடும்பங்களுக்கிடையே ஏற்பட்ட ஓர் ஆதிக்கப்போட்டியாக மாறியது. பிராக் உடன்படிக்கையோடு முடிவடைந்திருக்க வேண்டிய போர் தொடர்ந்து நடைபெற்றதற்கு ஃபிரான்சின் அமைச்சர் ரிஷெல்யூவின் கொள்கைதான் காரணம். ஜெர்மன் பிராடஸ்டென்டுகளுக்கும் பேரரசருக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டதை ரிசெல்யூ விரும்பவில்லை. ஃபிரான்சின் செல்வாக்கு ஓங்குவதற்கு ஹாப்ஸ்பர்குகள் ஆதிக்கம் ஒடுக்கப்பட வேண்டும். எதிர்பார்த்தபடி இப்போரில் ஹாப்ஸ்பர்குகள் ஆதிக்கம் ஒடுக்கப்படவில்லை. எனவே, போர் தொடர்ந்து நடப்பதுதான் ஃபிரான்சின் நலனிற்கு உகந்தது என்று ரிசெல்யூ கருதினார். தீவிரக் கத்தோலிக்கரான ரிசெல்யூ தன் சமய நலனைக் கூடக் கருதாமல் ஃபிரான்சின் அரசியல் நலனைமட்டுமே கருத்தில் கொண்டு போர் தொடர்ந்து நடைபெற முயற்சிகளை மேற்கொண்டார். இதுவரையில் நேரிடையாகப் போரில் ஈடுபடாமல் இருந்த ஃபிரான்ஸ் இப்பொழுது போரில் பிராடஸ்டென்டுகளின் சார்பில் தலையிட்டது. ஃபிரான்சிற்குக் குறிப்பாக ஸ்பானிய ஹாப்ஸ்பர்க் குடும்பத்தின்மீது தீராப்பகை இருந்துவந்தது. 1635-ல் ரிசெல்யூ ஸ்பெயின்மீது போர் தொடுத்தார். ஸ்வீடனும், ஜெர்மன் சிற்றரசர்களும் ஹாப்ஸ்பர்க் பேரரசருடன் போர்செய்துக் கொண்டிருக்கும் சமயத்தில் ஃபிரான்ஸ், ஸ்பானிய ஹாப்ஸ்பர்க் குடும்பங்கள் ஒன்றுக்கொன்று உதவிபுரிய இயலாவண்ணம் செய்துவிடவேண்டும் என்பது ரிசெல்யூவின் திட்டம். இதுவரை ஸ்பெயின் அரசர் நான்காம் பிலிப் ஹாலந்து மீதும், ஜெர்மன் பிராடஸ்டென்டு அரசுகள்மீதும் நடத்திக் கொண்டிருந்தத் தாக்குதல்களை விடுத்து, தனக்குச்சொந்தமான பெல்ஜிய நெதர்லாந்து 'பிரான்ஷ் காம்டி' (Franche Comte), வட இத்தாலி ஆகிய இடங்களில் ஃபிரான்சின் தாக்குதலைச் சமாளிக்க வேண்டியிருந்தது.

போரின் தொடக்கத்தில் ஸ்பெயின் வெற்றிமேல் வெற்றி பெற்றது. திறமையும் தேர்ச்சியும் பெற்ற ஸ்பானியப்படைகள் ஆற்றல்மிக்கத் தளபதிகளின்கீழ்ப் போர்புரிந்தன. ஃபிரான்சின் படைகள் சரியானப் பயிற்சிப் பெற்றிருக்கவில்லை. ஃபிரான்சின் தளபதிகளும் திறமையற்றவர்களே. 1636-ல் ஸ்பானியப்படை ஒன்று ஃபிரான்சின் வட பகுதியில் நுழைந்து பாரிஸ் நகரை அணுகியது. மற்றொரு படை பிரன்னீஸ் மலையைக்கடந்துத் தெற்கு

ஃபிரான்ஸ்மீது படையெடுத்துப் பல வெற்றிகளைப் பெற்றது. ஆனால், விரைவில் நிலைமை மாறியது. ஃபிரான்சில் இரண்டு புதுத் தளபதிகள்— 'காண்டே கோமகன்', 'டூரென் பிரபு' (Conde and Turenne) தோன்றிப் போரின் போக்கையே மாற்றியமைத்தனர். ஸ்பானியப் படைகள் ஃபிரான்சிலிருந்து நெதர்லாந்து, ரைன்லாந்து, வடக்கு இத்தாலி ஆகிய பகுதிகளுக்கு விரட்டப்பட்டன. ஸ்பெயினின் ஆட்சியிலிருந்து விடுதலைபெறும் நோக்கத்துடன் பெல்ஜிய நெதர்லாந்து மக்கள் ஃபிரான்சிற்கு உதவி அளித்தனர். போர்ச்சுக்கல், நேப்பிள்ஸ் போன்ற பகுதிகளில் ஸ்பெயினுக்கு எதிராகக் கிளர்ச்சிகள் தோன்றின. 1643-ல் ஃபிரான்சின் படைகள் காண்டேயின் தலைமையில் 'ராக்ராய்' (Rocroy) என்ற இடத்தில் நடந்த சண்டையில் ஸ்பானியப் படைகளைத் தோற்கடித்தன. மீண்டும் 1648-ல் 'லென்ஸ்' (Lens) என்ற இடத்தில் நடந்த போரில் ஸ்பானியப் படைகள் முறியடிக்கப்பட்டன. ஸ்பெயினின் புகழ் மங்கத்தொடங்கியது.

இஃதிவ்வாறாக, ஜெர்மனியில் பேரரசருடைய கத்தோலிக்கப் படைகளுக்கும், பிராடஸ்டென்டு படைகளுக்குமிடையே போர் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. ஸ்பெயின் அடுத்து அடுத்து தோல்வியடைந்ததால் ஃபிரான்சின் படைகளின் ஒரு பகுதி ஜெர்மனியில் பிராடஸ்டென்டுகளுக்கு உதவியாக அனுப்பப்பட்டது. ஃபிரான்சும், ஸ்வீடனும் ஜெர்மனிமீது இருமுனைத் தாக்குதல்களை நடத்தின. 1648-ல் ஃபிரான்ஸ் பவேரியாவைக் கைப்பற்றியது. போர் வீரர்களின் கொலை, கொள்ளைபோன்ற அட்டூழியங்களினால் ஜெர்மன் மக்கள் அல்லலுற்றனர். போர் வீரன் என்றால் கொலைகாரன், கொள்ளைக்காரன் என்று மக்கள் நினைக்கும் அளவிற்கு அவர்கள் 'பெருமை' நாட்டில் பரவியிருந்தது. அப்பொழுது பேரரசராக இருந்தவர் 'மூன்றாம் ஃபெர்டினாண்டு' ஆவார். (1637-ல் இரண்டாம் ஃபெர்டினாண்டு இறக்கவே அவர் மகன் மூன்றாம் ஃபெர்டினாண்டு பேரரசரானார்.) நிலைமையை நன்கு உணர்ந்த பேரரசர் போரை முடிக்க ஆர்வங்கொண்டு, சமாதானப் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினார். ஆனால், ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் அடியோடு ஒழிக்கப்படும்வரை சமாதானம் ஏற்படக்கூடாது என்று ரிசெல்யூ இதற்கு முட்டுக்கட்டையாக இருந்தார். 1642-ல் ரிசெல்யூ இறந்து, 'மசாரின்' (Mazairn) அமைச்சரானார். அவருடைய முயற்சியினால் மீண்டும் சமாதானப் பேச்சு வார்த்தைகள் தொடங்கப்பட்டு 1648-ல் வெஸ்ட்பேலியா என்னுமிடத்தில் கையெழுத்திடப்பட்ட பல உடன்படிக்கைகளின் விளைவாகப் பேரரசில் போர் ஓய்ந்தது. முப்பதாண்டுப் போர் முடிவுற்றது. ஆனால், இந்தச் சமாதானம் ஸ்பெயினுக்கும்,

ஃபிரான்சுக்குமிடையே நடந்து கொண்டிருந்தப் போருக்கு முடிவு காணவில்லை. அப் போர் தொடர்ந்து பதினொன்று ஆண்டுகட்கு நடந்துக் கொண்டிருந்தது.

வெஸ்ட்பேலியா சமாதானம் (Peace of Westphalia 1648)

இந்தச் சமாதானத்தை மூன்று தலைப்புகளின்கீழ் ஆராயலாம். சமயப் பிரச்சினை எவ்வாறு தீர்க்கப்பட்டது? ஒவ்வொரு நாடு அல்லது அரசிற்குச் சொந்தமானப் பகுதிகள் அல்லது அவற்றின் எல்லைகள் எவ்வாறு மாற்றியமைக்கப்பட்டன? பேரரசிற்குள் என்ன அரசியல், அரசியலமைப்பு மாறுதல்கள் ஏற்பட்டன?

சமயத்தைப் பொறுத்தவரை ஆக்ஸ்பர்க் சமாதானத்தில் ஒப்புக்கொள்ளப்பட்ட 'அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி' என்ற கொள்கையின் அடிப்படையில் ஒவ்வொரு ஜெர்மானியச் சிற்றரசரும் தமது அரசின் சமயத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம் என்ற கருத்து உறுதிப்படுத்தப்பட்டது. சிற்றரசர்கள் தங்கள் மக்களுக்குச் சமய, வழிபாட்டுச் சுதந்திரம் அளிக்க வேண்டும்; ஓர் அரசிலிருந்து மற்றோர் அரசிற்குக் குடிபெயரும் உரிமையும் அளிக்கவேண்டும். கால்வினியச் சமயம் சட்டப்பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டது. லூதரின் சமயப் பிரிவினர்களுக்கு அளிக்கப்பட்ட சலுகைகள் யாவும் கால்வினியர்களுக்கும் அளிக்கப்பட்டது. 1624ஆம் ஆண்டில் பிராடஸ்டெண்டுகளிடமிருந்த கத்தோலிக்க திருச்சபைச் சொத்துகள் எல்லாவற்றையும் அவர்களே வைத்துக்கொள்ளலாம். அதேபோல கத்தோலிக்க திருச்சபையும் தன்வசம் உள்ள சொத்துகளை வைத்துக்கொள்ளலாம். பேரரசின் நீதி மன்றங்களில் கத்தோலிக்க, பிராடஸ்டெண்டு நீதிபதிகள் சம எண்ணிக்கையில் நியமிக்கப்படவேண்டும்.

ஃபிரான்ஸ், அல்சேஸ் மாநிலத்தைப் (ஸ்டிராஸ்பர்க் நகர் நீங்கலாகப்) பெற்றது. 'மெட்ஸ்', 'டூல்', 'வெர்டன்' என்ற பிஷப்ரிக்குகள் ஃபிரான்சுக்கே சொந்தம் என்பது உறுதிப்படுத்தப்பட்டது போமரேனியாவின் மேற்குப் பகுதியும், 'பிரெமன்' (Bremen) என்ற பிஷப்புரிக்கும் ஸ்வீடனுக்கு அளிக்கப்பட்டது. இதன் விளைவாக 'ஓடர்' (Oder) 'எல்ப்' (Elbe), 'வெஸர்' (Weser) நதி முகத்துவாரப் பகுதிகள் ஸ்வீடனுக்குச் சொந்தமாயின. பால்டிக், வட கடற்பகுதிகளில் ஸ்வீடனின் செல்வாக்கு வளர இது பேருதவியாக இருந்தது. ஜெர்மன் பிரதேசங்களைப் பெற்றதினால், ஃபிரான்சும், ஸ்வீடனும் பேரரசின் டயட்டில் உறுப்பினராகும் தகுதியையும் அதன் விவகாரங்களில் தலையிடும் வாய்ப்பையும் பெற்றன.

பேரரசிற்குள் பல முக்கியமான அரசியல் மாறுதல்களும், அரசுகளின் எல்லை மாற்றங்களும் ஏற்பட்டன. பேரரசின்மீது பெற்றிருந்த ஆதிக்கத்தை ஹாப்ஸ்பர்குகள் இழந்தனர். ஜெர்மனியின் ஒவ்வொரு சிற்றரசருக்கும் சுதந்திரமாகச் செயல் படும் உரிமை அளிக்கப்பட்டது. ஒவ்வொரு சிற்றரசருக்கும் அயல்நாடுகளுடன் போர் புரியவோ, சமாதானம் செய்து கொள்ளவோ முழுச் சுதந்திரம் அளிக்கப்பட்டது. வெளிநாடு களுக்குத் தூதுவர்களை அனுப்புவது, சட்டங்கள் இயற்றுவது, நாணயம் அச்சிடுவது போன்ற அதிகாரங்கள் யாவும் சிற்றரசர்கள் பெற்றனர். இவ்வாறு பேரரசரின் அதிகாரங்கள் வெகுவாகக் குறைக்கப்பட்டன. போரின் தொடக்கத்தில் ஃபிரடெரிக்கிட மிருந்து பறிக்கப்பட்ட பாலடினேட் அரசு இரண்டு துண் டாக்கப்பட்டு, கீழ்ப்பகுதி ஃபிரடெரிக்கின் மகனுக்குத் திருப்பிக் கோடுக்கப்பட்டது. அவர் தேர்வாளராகவும் நியமிக் கப்பட்டார். மேல் பகுதி பவேரியாவுக்கு அளிக்கப்பட்டு, பவேரியாவின் சிற்றரசர் மாக்ஸ்மிலியனுக்கு ஏற்கனவே அளிக் கப்பட்டிருந்த தேர்வாளர் உரிமை உறுதிப்படுத்தப்பட்டது. லூதர் காலத்திலிருந்து வட ஜெர்மனியின் பிராடஸ்டெண்டு அரசுகளின் தலைமை சாக்சனி அரசின் கையில் இருந்தது. வெஸ்ட் பேலியா சமாதானத்திற்குப் பிறகு இத்தலைமை பிராண்டன்பர்க் அரசின் கைக்கு மாறியது. கிழக்குப் போமரேனியாவும் 'மாக்டிபர்க்' (Magdeberg) உள்பட பல பிஷப்ரிக்குகளும் இவ்வரசிற்குக் கிடைத்தன. இவ்வாறு 1648-ல், 158 சிற்றரசு களும், 123 பிஷப்ரிக்குகளும், 62 நகர அரசுகளும் கொண்ட 343 பிரிவுகளாக ஜெர்மனி துண்டாடப்பட்டது.

ஸ்விட்சர்லாந்து, டச்சு நெதர்லாந்து ஆகியவை சுதந்திர நாடுகள் என்பது இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்பட்டது.

மதிப்பீடு: முப்பதாண்டுப் போரும். வெஸ்ட்பேலியா சமா தானமும் தற்கால ஐரோப்பிய வரலாற்றில் சிறப்பிடத்தைப் பெறும் நிகழ்ச்சிகளாகக் கருதப்படுகின்றன. சமயப்போர்கள் என்றழைக்கப்படும் போர்களில் இதுவே கடைசியானது. பிராடஸ்டெண்டுகளுக்கும், கத்தோலிக்கர்களுக்குமிடையே ஒரு போராகத் தொடங்கிய இந்த நிகழ்ச்சி பொருளாதார, அரசியல் பிரச்சினைகளின் அடிப்படையில் நிகழ்ந்தது என்பதை நாம் மறந்து விடக்கூடாது. இறுதிக் கட்டத்தில் இது ஹாப்ஸ்பர்குகளுக்கும், பூர்போன்களுக்குமிடையே ஒரு பெரிய ஆதிக்கப் போட்டியாக உருவெடுத்தது. பிராடஸ்டெண்டு சமயத்தைச் சேர்ந்த பிராண்டன்பர்க் சிற்றரசர், கத்தோலிக்கப் பேரரசர் சார்பில் போரிட்டதும், கத்தொலிக்கச் திருச்சபையின் கார்டினலான

ரிசெல்யூ கத்தோலிக்கப் ஃபிரான்சை ஜெர்மானியப் பிராடஸ்டென்டுகள் தரப்பில் போர் புரியும்படிச் செய்ததும், இரண்டு கத்தோலிக்க அரச குடும்பங்கள் போரிட்டுக் கொண்டதும் சமயத்தைவிட அரசியல், அரச குடும்பங்களின் நலன்தான் ஐரோப்பிய அரசர்களால் முக்கியமாகக் கருதப்பட்டது என்பதற்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.[1]

சமயத் துறையைப் பொறுத்தவரை இந்தச் சமாதானம் ஐரோப்பிய வரலாற்றில் ஒரு சிறப்பிடத்தைப் பெறுகின்றது. கால்வினீயச் சமயம் சட்டப் பூர்வமாக ஏற்றுக்கொள்ளப்பட்டதோடு மட்டுமன்றிக் கத்தோலிக்கர்கள், லூதரின் பிரிவினர்கள், கால்வினீயர்கள் ஆகிய எல்லோருக்கும் சம உரிமைகள் அளிக்கப்பட்டதன் மூலம் ஐரோப்பாவில் எழுந்த சமயப் பிரச்சினைக்கு ஒரு நிரந்தரமான தீர்வு காணப்பட்டது. சமயப்பொறைக் கொள்கை இன்னும் ஐரோப்பாவில் தோன்றவில்லை என்றாலும், இந்தப் போருக்குப் பிறகு சமயவெறியும், புறச் சமயங்களை ஒடுக்கும் (Persecution) நிகழ்ச்சிகளும் வெகுவாகக் குறைந்துவிட்டன. எனவே, ஐரோப்பாவின் சமய வரலாற்றில் ஒரு புது சகாப்தம் தொடங்கியது. இந்தச் சமாதானத்துக்குப் பிறகு சமயப் பொறைக் கொள்கை, முற்போக்குக் கருத்துகள் கொண்ட ஒரு சிலரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அடுத்த நூற்றைம்பது ஆண்டுகளில் ஐரோப்பாவெங்கும் பரவி, ஃபிரெஞ்சுப் புரட்சியின் பொழுது உலகின் மேற்குப் பகுதி மக்கள் அனைவரும் பெருமையுடன் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு கோட்பாடாக வளர்ந்தது[2]. பொதுவாக நோக்குமிடத்து, இப் போர் கத்தோலிக்கர்களுக்கு ஒரு வெற்றியாக அமைந்தது என்பதை எவரும் மறுக்கமுடியாது. பிராடஸ்டென்டு சமயம், மேலும் வளர்ச்சிபெறுவது தடுத்து நிறுத்தப்பட்டதுமட்டுமன்றிக் கத்தோலிக்க திருச்சபை இழந்த செல்வாக்கைப் பல பகுதிகளில் மீண்டும் பெற்றது.

ஜெர்மனியைப் பொறுத்தவரைப் பிரிவினைச் சக்திகள் வலுப்பெற்று, ஜெர்மனி ஐக்கியம்பெற்ற ஒரு தேசிய நாடாக வளருவது தடைப்பட்டது. இந்தச் சமாதானம் செய்த ஏற்பாட்டின்படி

[1] Modern Europe to 1870. C. J. H. Hayes, page 239

[2] It may be asserted without fear of contradiction that toleration had by the time of the peace of West phalla won a standing among a limited body of liberal minded men. Duting the next one hundred and fifty years the concept filtered slowly in consequence of the literary labours of numerous high minded champions, through the upper strata of society and became in the era of the French Revolution the common possession of western mankind." (A History of Europe, Ferdinand Schevill, page 233)

பேரரசரின் அதிகாரங்கள் வெகுவாகக் குறைக்கப்பட்டதால், அவர் பெயரளவில்தான் ஜெர்மானிய அரசுகளின் தலைவராக இருந்தாரேயன்றி உண்மையில் ஜெர்மன் அரசுகளிடையே தம் ஆதிக்கத்தை அவரால் நிலைநாட்ட முடியவில்லை. ஒரு காலத்தில் கிறிஸ்துவ உலகத்திலேயே ஒரு மாபெரும் சக்தியாக விளங்கிய ஜெர்மனி, இப்பொழுது தன் செல்வாக்கை இழந்து நின்றது. இவ்வாறு ஒருபுறம் ஜெர்மனி செல்வாக்கை இழந்ததும், ஸ்பெயினின் வீழ்ச்சியும் பதினெட்டாம் நூற்றாண்டில் ஃபிரான்ஸ் ஒரு வல்லரசாகத் திகழ்வதற்குப் பேருதவியாக இருந்தது[1].

இந்தப் போருக்குப் பிறகுதான் ஐரோப்பாவின் 'தற்கால அரசுமுறை' (Modern State System) தோன்றியது என்று கூறலாம். ஐரோப்பாவின் பல்வேறு அரசுகள் ஒன்றைவிட ஒன்று எவ்வகையிலும் தாழ்ந்தவை அன்று என்ற அடிப்படையில் வளர்ந்ததுதான் தற்கால அரசுமுறையாகும். ஆனால், வெஸ்ட் பேலியா சமாதானத்திற்கு முன்பு ஐரோப்பாவில் புனித ரோமானியப் பேரரசு மற்ற தேசிய அரசுகளைவிட உயர்ந்தது என்ற ஒரு கோட்பாடு அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. ஆனால், இந்தச் சமாதானம் ஃபிரான்ஸ், இங்கிலாந்து, ஸ்வீடன், ஸ்பெயின், டச்சுக் குடியரசு போன்ற தேசிய அரசுகளைப்போல, பேரரசும் ஓர் ஐரோப்பிய அரசு, அது எந்த வகையிலும் மற்ற அரசுகளைவிட உயர்ந்தது அன்று, என்ற ஒரு நிலையை வலியுறுத்தியதன்மூலம் இந்தக் கொள்கைக்கு ஒரு முடிவுகட்டியது[2]. உலக நாடுகளின் உறவுமுறையின் மற்றொரு முக்கிய அம்சம் இந்தப் போரின் விளைவாக வலியுறுத்தப்பட்டது. இந்தப் போரில் படை வீரர்களால் மக்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள், கொலை, கொள்ளைபோன்ற வெறிச் செயல்கள் நல்லவர்களின் கவனத்தைக் கவர்ந்தது. இதன் விளைவாகப் போர்க் காலங்களில் போரில் ஈடுபடாத பாமர மக்களைக் காப்பாற்றுவது, போரில் காயமுற்றவர்களுக்குச் சிகிச்சை அளிப்பது, போர்க் கைதிகளை நடத்தும் முறை, கொலை, கொள்ளைச் செயல்களைத் தடுப்பதுபோன்ற நடவடிக்

1 A History of Europe. H. A. L. Fisher, page 630.

2 "But a real state system could not emerge so long as one European state, the Holy Roman Empire claimed to be, and potentially was superior to all other states. What the Thirty Years' War did in this respect was to reduce the empire to a position certainly no higher than that of the national monarchies of France, Sweden, England and Spain or that of the Dutch Republic. There could now be a European State System based on the novel modern principle of the essential equality of Independent sovereign states, though admitting of the fact that there were great powers as well as lesser powers." Modern Europe to 1870, C. J. H. Hayes. page 239.

கைகளை மேற்கொள்ள விதிமுறைகள், சட்ட திட்டங்கள் வகுக்கும் பணியில் அறிஞர்கள் ஈடுபட்டார்கள். இவ்வாறு, இப் பணியை மேற்கொண்டவர்களில் முக்கியமானவர் டச்சு அறிஞரான 'ஹியூகோ குரோஷியஸ்' (Hugo Grotius) என்பவராவார். இவரால் எழுதப்பட்ட 'On the Laws of War and Peace' என்ற நூல் சர்வதேசச் சட்டத்தைப்பற்றி எழுதப்பட்ட முதலாவது சிறந்த நூலாகும். உலக நாடுகளிடையே உறவுமுறை எவ்வாறு அமையவேண்டும் என்பதுபற்றி விரிவான விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

பால்டிக் பகுதியைப் பொறுத்தவரை முப்பதாண்டுப் போரின் விளைவாக ஸ்வீடனின் ஆதிக்கம் மேலோங்கி அதன் செல்வாக்கு உச்சநிலையை அடைந்தது. ஆனால், இந்த நிலைமை வெகுகாலம் நீடிக்கவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ரஷ்யா, பிரஷ்யா ஆகிய நாடுகளின் எழுச்சி காரணமாக ஸ்வீடன் தன் செல்வாக்கை இழந்தது. இந்தப் போரின் விளைவாக ஆஸ்திரியா. ஸ்பெயின் நாடுகளை ஆண்ட ஹாப்ஸ்பர்க் அரச குடும் பத்தின் ஆதிக்கம் முடிவடைந்து, ஐரோப்பிய வரலாற்றில் பூர்போன் குடும்பத்தின் ஆதிக்கம் தொடங்குகின்றது. இப் போரி னால் ஜெர்மனியில் பெருத்த சேதமும், அழிவும் ஏற்பட்டது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. நாட்டின் வியாபாரம், தொழில், விவசாயம் ஆகிய யாவும் அழிக்கப்பட்டு ஜெர்மனி பெரும் நஷ்டத்திற்கு உள்ளானது. ஜெர்மனி நாட்டின் சுபிட்சமும், கலாசாரமும் பாதிக்கப்பட்டு இந்த நிலையிலிருந்து ஜெர்மனி மீளப் பல ஆண்டுகள் ஆயின. ஸ்பெயினைப் பொறுத்தவரை போர் நிகழ்ச்சிகள் அந் நாட்டில் நடக்கவில்லையென்றாலும், ஹாப்ஸ்பர்க் குகள் சார்பில் ஸ்பெயின் போரில் ஈடுபட்டு, தெற்கு ஜெர்மனி, நெதர்லாந்து, வடக்கு இத்தாலி ஆகிய இடங்களில் ஸ்பானியப் படைகள் போரில் ஈடுபட்டதால் ஸ்பெயினின் பொருளாதாரமும் இப் போரினால் பாதிக்கப்பட்டது. ஸ்பெயினின் கருவூலம் காலி யாகிப் பதினாறும் நூற்றாண்டில் செல்வம் கொழித்த நாடாக இருந்த ஸ்பெயின், இப்பொழுது தன் செல்வத்தை இழந்து வறுமையில் வாடியது.

# 10. ஃபிரான்சின் எழுச்சி

## I. நான்காம் ஹென்றி II. பதின்மூன்றும் லூயி III. பதினான்காம் லூயி

## 1. நான்காம் ஹென்றி (1589-1610)

பதினாறும் நூற்றாண்டில் ஃபிரான்சில் நடந்த சமயப் போர்களில் 'வாலாய்', 'கைஸ்', பூர்போன் ஆகியப் ஃபிரெஞ்சுப் பிரபுக்களின் குடும்பங்கள் ஈடுபட்டிருந்தன என்பதை முன்பு கண்டோம். பூர்போன் குடும்பத்தைச் சேர்ந்த 'நவாரேயின் ஹென்றி' (Henry of Navarre) ஃபிரெஞ்சுப் பிராடஸ்டெண்டுகளின் (ஹ்யூகோனேக்கள்) தலைமையை ஏற்று இப் போரில் கலந்துக் கொண்டார். 1589-ல் ஃபிரான்சின் அரசர் மூன்றும் ஹென்றி கொல்லப்படவே அவரது நெருங்கிய உறவினரான நவாரேயின் ஹென்றி நான்காம் ஹென்றி என்ற பட்டத்துடன் ஃபிரான்சின் அரியணை ஏறினார். இவர்தான் பூர்போன் வம்சத்தின் முதல் அரசர். இவர் பிராடஸ்டெண்டு சமயத்தவராதலால் பெரும்பான்மையினரானக் கத்தோலிக்க மக்கள் இவரை அரசராக ஏற்றுக்கொள்ள மறுத்தனர். சமயத்தின் பெயரால் நடந்து கொண்டிருந்த போர் ஃபிரான்சைப் பல இன்னல்களுக்குள்ளாக்கியது. நாட்டின் பிரபுக் குடும்பங்கள் பகை உணர்ச்சியுடன் ஒன்றுடன் ஒன்று சண்டையிட்டுக் கொண்டிருந்தன. ஃபிரான்சின் கத்தோலிக்கர்கள் சார்பில் ஸ்பெயின் அரசர் இரண்டாம் ஃபிலிப் போரிட்டுக் கொண்டிருந்தார். நாட்டின் நிலைமையை நன்குணர்ந்த ஹென்றி, நாட்டில் போரை ஒழித்து அமைதியையும் சுபிட்சத்தையும் ஏற்படுத்தவும், அந்நியர்களின் தலையீட்டை அகற்றவும், பெரும்பான்மையினரானக் கத்தோலிக்கர்களின் ஆதரவைப் பெறவும் ஒரேவழி, தாம் கத்தோலிக்கச் சமயத்தை ஏற்றுக் கொள்ளுவதுதான் என்பதை உணர்ந்தார். 1593-ல் பிராடஸ்டெண்டு சமயத்தை விடுத்துக் கத்தோலிக்கராக மாறினார். எதிர்பார்த்தபடி இது நல்லபயனை


பதினான்காம் லூயியால் விரிவாக்கப்பட்ட
பிரான்சின் எல்லைகள்-கி.பி.1643-1715
அயர்லாந்து
வட கடல்
இங்கிலாந்து
ஸ்பானிய நெதர்லாந்து
டச்சு நெதர்லாந்து
ஜெர்மனி
இங்கிலாந்து கால்வாய்
ஆர்டாய்
லக்ஸம் பர்க்
வெர்டன்
பாரிஸ்
டூல்
மெட்ஸ்
ஸ்ட்ராஸ் பர்க்
பிரான்ஷே காம்டி
லா ரோசெல்
ஸ்விட்சர் லாந்து
செவாய்
பியட் மாண்டு
ரூசிலான்
ஸ்பெயின்
மார்செய்ல்
டூலோன்
மத்திய தரைக் கடல்
பதினான்காம் லூயியால் இணைக்கப்பட்ட பகுதிகள்

அளித்தது. ஃபிரான்சின் ஒவ்வொரு நகரமும், மாநிலமும் அவரை அரசராக மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டன. பிராடஸ்டெண்டாக இருந்தபொழுது இவரை வெறுத்து அவமதித்த பாரிஸ் நகர மக்கள்கூட இவரைத் தங்கள் அரசராக ஏற்றுக் கொண்டனர். கத்தோலிக்கர்களில் தீவிரவாதிகள் தவிர மற்ற அனைவரும் இவரை அரசராக ஒப்புக்கொண்டனர். அரியணை ஏறியதும் உடனடியாக இவர் மேற்கொண்ட பணி என்னவெனில் நாட்டு மக்களை ஒன்றுபடுத்தி அந்நிய நாடுகளின் தலையீட்டை ஒழிக்க ஸ்பெயினுடன் போர் புரிந்ததாகும். ஸ்பெயினுடன் ஏற்கனவே போர் புரிந்து கொண்டிருந்த நெதர்லாந்து இங்கிலாந்து ஆகிய நாடுகளுடன் உடன்பாடு செய்துகொண்டு 1595-ல் ஹென்றி ஸ்பெயின்மீது போர் தொடுத்தார். ஒரே சமயத்தில் மூன்று நாடுகளுடன் போர் புரியவேண்டிய நிலைமையைச் சமாளிக்க முடியாத இரண்டாம் ஃபிலிப் ஹென்றியுடன் சமாதானம் செய்துகொள்ள ஒப்புக்கொண்டார். 1598-ல் கையெழுத்தான 'வெர்வின் உடன்படிக்கையின்படி' (Peace of Vervins) இவ்விரு நாடுகளுக்கிடையே நடந்து கொண்டிருந்த போர் முடிவுற்றது.

நாட்டில் அமைதியை நிலைநாட்டுவதில் வெற்றிகண்ட ஹென்றிக்கு மற்றொரு பிரசினைக் காத்துக்கொண்டிருந்தது. இவர் கத்தோலிக்கராக மாறிவிட்டதால் பிராடஸ்டெண்டுகளிடையே மனக் கசப்பு இருந்தது. அவர்களுடைய புண்பட்ட உள்ளங்களுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் 1598-ல் ஹென்றி 'நாண்டிஸ் ஆணைகள்' (Edict of Nantes) மூலம் ஃபிரான்சின் பிராடஸ்டெண்டுகளுக்குப் பல சமய, அரசியல், சிவில் உரிமைகளை வழங்கினர். இதன்படி, பிராடஸ்டெண்டுகளுக்குச் சமயச் சுதந்திரமும், தனிப் பட்டமுறையில் ஃபிரான்ஸ் முழுவதும் வழிபாட்டு உரிமையும் வழங்கப்பட்டது. பிராடஸ்டெண்டுகளின் 'பொது வழிபாடு' ((Public Worship) நாட்டின் குறிப்பிட்ட இருநூறு நகரங்களிலும் (பாரிஸ் நகரம் தவிர) மூவாயிரம் பிரபுக்களின் கோட்டைகளில் மட்டுமே அனுமதிக்கப்பட்டது. பிராடஸ்டெண்டு பள்ளிக் கூடங்கள் அரசினிடமிருந்து நிதி உதவி பெற்றன. பிராடஸ்டெண்ட் சமய நூல்கள் வெளியிடுவதின்மீதிருந்த தடைகள் அகற்றப்பட்டன. பிராடஸ்டெண்டுகளுக்குச் சட்டத்தின் பாதுகாப்பு அளிக்கப்பட்டதோடு மட்டுமின்றி, அவர்கள் அரசின் எந்தப் பதவியிலும் நியமிக்கப்படத் தகுதி உள்ளவர்கள். எல்லாப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இவர்கள் சேர்த்துக்கொள்ளப்படலாம் என்றும் இந்த ஆணை அறிவித்தது. தற்காலத்து அரசுகள்கூட, கொடுக்கத் தயங்கும் சில உரிமைகளை இந்த ஆணை ஹ்யூகோனேக்களுக்கு வழங்கியது. எடுத்துக்காட்டாக ஹ்யூகோனேக்கள் தங்க

ளுக்கு வேண்டிய சட்டங்களை இயற்றிக்கொள்ள, அவர்களுக்கென தனிச் சட்ட மன்றமும், அவர்கள் வழக்குகளை விசாரிக்க பிராடஸ்டென்டு நீதிபதிகள்கொண்ட தனி நீதிமன்றங்களும் அமைக்கப் பட்டன. இந்த உரிமைகளும், சலுகைகளும் எதிர்காலத்தில் பறிக்கப்படமாட்டா என்பதற்கு உத்திரவாதமாக 'லா ரொசேல்' (La Rochelle) போன்ற அரண்கள் அமைந்த 200 நகரங்கள் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. அவற்றில், தங்கள் படைகளை வைத்துக்கொள்ளவும் அவர்கள் அனுமதிக்கப்பட்டார்கள்.

நான்டிஸ் ஆணை பிராடஸ்டென்டுகளுக்கு அளித்த அளவிற்கு சம சுதந்திரம் வேறு எந்தக்காலத்திலும் பிராடஸ்டென்டுகள் பெறவில்லை. சமயப்பொறைக் கொள்கை இந்த ஆணையில் ஏற்றுக் கொள்ளப்பட்ட அளவிற்கு வேறு எந்த ஏற்பாட்டிலும் இடம்பெறவில்லை. சமய நலன்கருதி இந்த ஆணை பிறப்பிக்கப் பட்டது என்பதற்கு மாறாக அரசியல் நலனுக்காகப் பிறப்பிக்கப் பட்டது என்று கூறுவதுதான் பொருந்தும். ஐம்பது ஆண்டுகள் போர்ச் செய்தபிறகுகூட ஒழிக்கமுடியாத அளவிற்கு அவர்கள் செல்வாக்கு வளர்ந்திருந்ததால் அவர்களைச் சட்டபூர்வமாக அங்கீகரிக்கவேண்டிய அவசியம் அரசருக்கு ஏற்பட்டது. ஹ்யூகோனேக்கள் சிறுபான்மையினராக இருந்தும் அவர்களுக்கு இவ்வளவுச் சலுகைகள் வழங்கியது அரசனின் அரசியல் அறிவுக் கூர்மையைப் புலப்படுத்துகிறது. ஆனால், இந்த ஆணை அவர்களுக்கு அளித்தச் சுதந்திரம் ஓரளவிற்கு மன்னனின் அதிகாரத்திற்கே ஊறு விளைவிக்கும் வகையில் அமைந்திருந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும்[1]. நான்காம் ஹென்றி தம் ஆட்சியில் இவ்வாணையை நல்ல முறையில் செயல்படுத்தியதன்மூலம் ஃபிரான்சில் தொழில் வளர்ச்சிக்கும், செல்வ வளர்ச்சிக்கும் முக்கிய காரணமாக இருந்த ஹ்யூகோனேக்களின் நல்வாழ்விற்கு வழிவகுத்தார். இவருக்குப் பிறகு ஆண்ட அரசர்கள், இந்த ஆணையைச் செயல்படுத்துவதில் அக்கறை காட்டாததால் பிராடஸ்டென்டுகள் தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள மேற்கொண்ட முயற்சிகள் பதினேழாம் நூற்றுண்டில் மேலும் பூசல்களும், சச்சரவுகளும் ஏற்படக் காரணமாக இருந்தன.

[1] இந்த ஆணையைப்பற்றி G. W. சௌத்கேட் (G. W. Southgate) என்ற அறிஞர் பின்வருமாறு கூறுகின்றார், "It granted too much political privilege and too little religious liberty. It put forward no policy of general toleration; its favours were reserved for Huguenots only. Its guarantees were of such a nature that they strengthened feudal privilege and that tendency to local independence which was inconsistent with the supreme authority of the crown", (A Text Book of Modern European History, 1453-1661, page 117)

ஸ்பெயினுடன் நடந்துகொண்டிருந்தப் போர் முடிவடைந்து, ஹ்யூகோனேக்கள் பிரச்சினையும் தீர்க்கப்பட்ட பிறகு, ஹென்றி நாட்டின் மற்ற முக்கிய பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் பணியில் ஈடுபட்டார். ஏறக்குறைய நூறு ஆண்டுகள் உள்நாட்டு, வெளி நாட்டுப் போர்களில் ஆழ்ந்திருந்த ஃபிரான்சின் பொருளாதாரம் சீர்குலைந்து நிதிநிலைமை மிகவும் மோசமாக இருந்தது. நாட்டில் சட்டம், ஒழுங்கு, அமைதி இவற்றை நிலைநாட்ட முடியாமல் அரசர் வலிமையிழந்து இருந்ததால் பிரபுக்கள் தங்கள் அதிகா ரத்தைப் பெருக்கிக்கொண்டு மன்னரை மதிக்காமல் வாழ்ந்துவந் தனர். ஃபிரான்சின் எல்லைகள் அந்நிய நாடுகளின் தாக்குதலுக்கு ஆளாயின. கிராமங்களும், நகரங்களும் படைகளால் அழிக்கப் பட்டு விவசாயம் தடைப்பட்டது. தொழில், வியாபாரத் துறை களில் தேக்கநிலை ஏற்பட்டது. சாலைகள், பாலங்கள் போன்ற போக்குவரத்து வசதிகள் அழிந்துகிடந்தன. நாட்டின் பொருளா தார நிதிநிலையைச் செப்பனிட்டு மன்னனின் அதிகாரத்தை மக்கள் யாவரும் ஏற்றுக்கொள்ளும் அளவிற்கு வலிமையுள்ளதாக ஆக்கி, நாட்டில் ஒழுங்கையும், அமைதியையும் நிலைநாட்டி ஐரோப்பா விலேயே ஃபிரான்சை ஒரு தலைசிறந்த அரசாக ஆக்கவேண்டு மென்பது ஹென்றியின் குறிக்கோள். அரசர் என்ற முறையில் இது தன்னுடைய முதல் கடமை என்றும் கருதினார். இந்தக் கடமையைச் செவ்வனே செய்துமுடிக்கும் ஆற்றலும், மன உறுதியும் ஹென்றி பெற்றிருந்தார். இப்பணியைச் செய்துமுடிப் பதில், இவருக்கு உறுதுணையாக இருந்தவர் இவரது அமைச்சர் 'சல்லி' (Duke of Sully) என்பவராவார். பதினேழாம் நூற்றாண்டில் ஃபிரான்சில் மன்னரின் அதிகாரம் வளர்ந்து, ஃபிரான்சின் புகழ் பெருகுவதற்குக் காரணமாக இருந்தவர் நான்காம் ஹென்றி. தாம் செய்த நற்பணிகளின்மூலம் பதினெட்டாம் நூற்றாண்டில் பதினான்காம் லூயி காலத்தில், ஃபிரான்சின் ஆதிக்கம் உச்ச நிலை அடைவதற்கு இவர் வழிகோலினார் என்றால் அது மிகை யாகாது.

அமைச்சர் சல்லி, அரசரின் நெருங்கிய நண்பர்; பிராடஸ் டென்டு சமயத்தைச் சேர்ந்தவர். திறமையும், கடமை உணர்ச்சி யும் நிர்வாகத் துறையில் தேர்ச்சியும் பெற்ற ஓர் அதிகாரி. இவர் உடனடியாகக் கவனிக்கவேண்டிய முக்கிய பிரச்சினை நாட்டின் நிதிச் சீரமைப்புப் பிரச்சினை ஆகும். வரிகள் சரியானபடி வசூலிக் கப்படாததால் நாட்டின் வருவாய் குறைந்து கடன்சுமை அதிக மாகியது. நிதிச் சீரமைப்பை மேற்கொள்ளுவதற்குமுன் நாடு முழுவதும் சுற்றுப் பயணம் செய்து நாட்டின் நிதி நிலைமையை ஆய்ந்து அறிந்துகொண்டார். வரி வசூல்செய்யும் முறையிலிருந்த

குறைபாடுகள் அகற்றப்பட்டன. மாநிலக் கவர்னர்கள், அரசனின் அனுமதியின்றி வரி வசூல்செய்யும் வழக்கம் ஒழிக்கப்பட்டது. வரி வசூல்பற்றிய கணக்குவழக்குகள் சரியான முறையில் எழுதப்பட்டு தணிக்கைக்குள்ளாக்கப்பட்டன. படைத் தலைவர்கள் தங்களுக்குத் தேவையான பணத்தை அரசாங்கத்தினிடமிருந்து பெற்று அதற்கான கணக்குகளைக் கொடுக்கவேண்டும். படையின் செல விற்கு வேண்டிய பணத்தை நேரிடையாக மாவட்டத்து மக்களிட மிருந்து வசூல்செய்யும் பழக்கம் ஒழிக்கப்பட்டது. நிர்வாகத்தில் சிக்கனத்தைக் கடைப்பிடித்ததன்மூலமும் கலைஞர்களுக்கும், அரசரின் உற்றார் உறவினர்களுக்கும் கொடுக்கப்பட்டுவந்த உதவித்தொகையைக் குறைத்ததன்மூலமும் நாட்டில் ஒழுங்கை யும், அமைதியையும் நிலைநாட்டுவதற்குத் தேவையான ஒரு சிறு படையை மட்டும் வைத்துக்கொண்டதன்மூலமும் செலவி னங்களைக் குறைத்தார். இந்தச் சீர்திருத்தங்களின் பயனாக, நாட்டின் நிதி நெருக்கடி மறைந்தது.

நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும், சுபிட்சத்திற்கும் உதவும் வகையில் பல சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. நாட்டின் சுபிட்சத்திற்கு விவசாய வளர்ச்சி இன்றியமையாதது என்பதை உணர்ந்த அமைச்சர் சல்லி, விவசாயத்திற்கு ஆக்கம் அளித்தார். உணவுத் தானியங்களைத் தடையேதுமின்றி ஏற்றுமதி செய்ய அனுமதித்ததால் விவசாயம் வளர்ந்தது. நாட்டின் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்கு உணவுத் தானியங்களைத் தடையேதுமின்றி எடுத்துச் செல்லலாம் என்று ஆணையிட்டார். சதுப்பு நிலங்கள் விவசாயத்திற்கு ஏற்றதாக ஆக்கப்பட்டன. காடுகள் அழிக்கப்படுவது தடை செய்யப் பட்டது. இவ்வாறு ஒருபுறம் விவசாயத் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டிருக்க, ஹென்றி தொழில் வர்த்தகத்துறை களின் வளர்ச்சிக்கு முயற்சிகள் மேற்கொண்டார். வர்த்தகத் துறையின் தலைவராயிருந்த 'பார்த்தலெமி டி லஃபேமா' (Barthe-lemy de Laffemas) என்பவரின் உதவியுடன் தொழில் வளர்ச்சிக்குப் பாடுபட்டார். பட்டு, கம்பள நெசவு, கண்ணாடி-பீங்கான், இரும்பு எஃகுத் தொழில்கள் தோன்றின. நாட்டின் விவசாயம் செழிப்பதற்காகச் சாலைகளும், பாலங்களும் செப்பனிடப்பட்டன. நாட்டின் ஆறுகளைக் கால்வாய்கள மூலம் இணைக்கத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. இங்கிலாந்து, ஸ்பெயின், துருக்கி போன்ற நாடுகளுடன் வர்த்தக ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப்பட்டன. குடியேற்றங்கள் ஏற்படுத்துவதிலும் ஹென்றி அக்கறை காட்டினர். 1608-ல் கனடா நாட்டில் 'கியூபெக்' Quebec) குடியேற்றம் நிறுவப்பட்டது. வர்த்தக வளர்ச்சிக்கு

மிகவும் அவசியமான கடற்படை ஒன்று இவரால் நிறுவப் பட்டது. தொழில் வளர்ச்சியின் விளைவாக ஃபிரான்ஸ் வெளிநாடு களுக்கு ஏராளமான பொருள்களை ஏற்றுமதி செய்து பெரும் செல்வம் ஈட்டியது.

இதுபோன்ற சீர்திருத்தங்களின் விளைவாக நாட்டின் வருவாய் அதிகரித்துக் கடன் சுமை குறைக்கப்பட்டு, பெருந்தொகை சேமிக்கப்பட்டது. பொருளாதாரச் சீரமைப்பைவிட இவர் அரசியல்துறையில் ஆற்றிய பணி மகத்தானது. அரசரை மதியாது, பிரபுக்கள் தங்கள் சொந்தப் படைகளை வைத்துக் கொண்டு ஒருவரோடொருவர் போரிட்டுக் கொண்டு நாட்டைக் குழப்பத்தில் ஆழ்த்தினர். இந்த நிலைக்கு முடிவுகட்டி அரசரின் அதிகாரத்தையும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தையும் நாடு முழுவதும் மக்கள் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்தார். சிலருக்குப் பணஉதவி செய்ததன் மூலமும், சிலருக்குச் சலுகைகள் பல அளித்ததன் மூலமும் பிரபுக்களின் எதிர்ப்பைச் சமாளித்தார். சில பிரபுக்கள் மீது போர் தொடுத்து அவர்கள் செல்வாக்கை ஒழித்தார். தன்னுடைய நிர்வாகத்தில் பிரபுக்கள் குடும்பங்களைச் சேர்ந்தவர்களுக்குப் பதிலாக நடுத்தரக் குடும்பத்தினரைப் பதவியிலமர்த்தி பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்கினர். இவ்வாறு இவரால் அமர்த்தப்பட்ட இந்தப் பயிற்சிப் பெற்ற அதிகாரிகள்தான். ஏறக்குறைய இருநூறு ஆண்டுகள் ஃபிரான்சு அரசாங்கம் திறமையுடன் செயல்படப் பேருதவியாக இருந்தனர். நாட்டின் பாராளுமன்றமான 'ஸ்டேட்ஸ் ஜெனரலை' (States General) இவர் கூட்டவே இல்லை. உதவி தேவைப்பட்ட பொழுதெல்லாம் நாட்டின் உயர் அதிகாரிகளைக் கொண்ட 'Assembly of Notables' என்ற சபையைக் கூட்டி அதன் ஆலோசனையை நாடினர்.

அயல்நாட்டு விவகாரங்களைப் பொறுத்த வரை மாபெருந் திட்டம் ஒன்றை வகுத்தார். ஐரோப்பாவில் பிராடஸ்டென்டு நாடுகள் அனைத்தையும் ஃபிரான்சின் தலைமையில் ஒன்றுபடுத்தி ஆஸ்திரிய, ஸ்பானிய ஹாப்ஸ்பர்க்குகளின் ஆதிக்கத்திற்கு முடிவு கட்ட வேண்டுமென்பதுதான் இந்தத் திட்டம். ஆனால், ஐரோப்பிய அரசுகளிடையே காணப்பட்ட போட்டி பொறாமை காரணமாக இத்திட்டத்தை ஹென்றி செயல்படுத்த முடியவில்லை. எனினும், நெதர்லாந்து, ஸ்விட்சர்லாந்து, வெனிஸ், டஸ்கனி போன்ற இத்தாலியின் சுதந்திர அரசுகள், ஜெர்மன் பிராடஸ்டென்டு அரசுகள் ஆகியவற்றுடன் நெருங்கிய நட்புறவு கொண்டு தன் நிலைமையை வலுப்படுத்திக் கொண்டு ஹாப்ஸ்பர்க்குகளுடன்

போர் துவக்க ஒரு தகுந்த வாய்ப்புக்காகக் காத்துக்கொண்டிருந்தார். ஆனால், போர் துவங்குவதற்கு முன்பே 1610-ல் சமய வெறியன் ஒருவனால் குத்திக் கொல்லப்பட்டார்.

நான்காம் ஹென்றியின் சாதனைகள் மகத்தானவை. உள் நாட்டுப் போரில் ஆழ்ந்திருந்த ஃபிரான்ஸில் மீண்டும் அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டி ஃபிரெஞ்சுப் படைகளைச் சீர்திருத்தி அமைத்தார். நிதித்துறையைச் சீர்திருத்தியதன் மூலமும், விவசாயம், தொழில், வியாபாரம், ஆகியவைகளுக்கு ஆக்கம் அளித்ததன் மூலமும் நாட்டில் சுபிட்சம் ஏற்படக் காரணமாக இருந்தார். சமய பிரச்சினைக்கு அப்பொழுது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒரு தீர்வை அளித்தது அவருடைய அரசியல் அறிவுக் கூர்மையைப் புலப்படுத்துகிறது. ஃபிரான்ஸ் இழந்திருந்த புகழைப் பத்து ஆண்டுகளுக்குள் மீட்டுத் தந்தார், ஃபிரான்சின் வளர்ச்சிக்குக் கையாள வேண்டியக் கொள்கை என்ன என்பதைத் தம் ஆட்சியின் வாயிலாகச் சுட்டிக் காட்டித் தமக்குப் பிறகு ஃபிரான்சை ஆண்ட மன்னர்களுக்கு ஒரு வழிகாட்டியாக விளங்கினார்.[1]

சிறந்த போர்த் திறமையும் நிர்வாகத் திறமையும் பெற்ற இவர், அரச தந்திரத்தில் கைதேர்ந்தவர். மக்கள் நலத்தில் உண்மையான நாட்டம் கொண்டவர். நாண்டிஸ் ஆணையை வெளியிட்டதும், நிர்வாகச் சீரமைப்பும் அவரது தலைசிறந்த சாதனைகளாகும். தம் ஆட்சியின் தொடக்கத்தில் பல இன்னல்களுக்குள்ளாயிருந்த ஃபிரான்ஸ் நாட்டைத் தம் ஆட்சியின் முடிவில் சீர்படுத்தி, பதினான்காம் லூயியின் சாதனைகளுக்கு அடிகோலினார் என்று வில்லியம் எட்வர்ட்ஸ் என்னும் ஆசிரியர் கூறுகின்றார்.[2]

## II. பதின்மூன்றும் லூயி (Louis XIII, 1610-1643)

1610-ல் நான்காம் ஹென்றி இறந்தவுடன் அவருடைய ஒன்பது வயது மகன் பதின்மூன்றும் லூயி அரியணை ஏறினார்.

[1] A Text Book of Modern European History 1453-1661 G.W. Southgate page 155.

[2] "He was a great administrator, a tactful diplomat. He had a true love for his people. His greatest achievements were the Edict of Nantes and his administrative reforms......He found France in an abyss of misery and he left her capable of becoming what she became for good or evil under Louis XIV, the arbiter of the whole of Europe" Notes on European History. Vol II. William Edwards page 34, 243.

நான்காம் ஹென்றியின் மனைவி 'மேரி-டி-மெடிசி' (Marie de Medici) அமைச்சர் சல்லியைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டுத் தாமே அரசனுக்குக் காப்பாளராகப் (Regent) பதவி ஏற்றார். இவர் ஒரு தீவிரக் கத்தோலிக்கவாதி. ஹ்யூகோனேக்களும், தங்கள் சிறப்புரிமைகளையும் ஆதிக்கத்தையும் மீண்டும் பெற விரும்பிய பிரபுக்களும் இவரை வெறுத்தனர். ஆனால், திறமை சிறிதும் இல்லாத இவர் அதிகாரத்தைத் தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான சில இத்தாலியப் பிரபுக்கள் கையில் ஒப்படைத்தார். இதை ஃபிரெஞ்சுப் பிரபுக்கள் வெறுத்தனர். குறிப்பாக, ஹ்யூகோனேப் பிரபுக் குடும்பங்கள், கோட்டைகளும், படைகளும் பெற்றிருந்ததால் அரசிற்கு எதிராகக் கிளர்ச்சிகள் செய்தன. 1614, 1615, 1616-ல் மூன்று கிளர்ச்சிகள் ஏற்பட்டன. மேலும், இவர் ஹாப்ஸ்பர்க் குடும்பத்துடன் நெருங்கிய நட்புறவு கொள்ள விரும்பி, திருமண உடன்படிக்கைகள் செய்துகொண்டார். ஃபிரான்சின் அரசன் பதின்மூன்றும் லூயி, ஸ்பெயின் மன்னர் மூன்றும் பிலிப்பின் மகள் 'ஆன் இளவரசியையும்' (Anne of Austria) அவரது மகள் எலிசபெத், ஸ்பெயின் பட்டத்து இளவரசரையும் மணக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. இவ்வாறு ஹாப்ஸ்பர்க்குகளின் ஆதிக்கத்தை எதிர்த்து நான்காம் ஹென்றியால் உருவாக்கப்பட்ட கொள்கை இப்பொழுது கைவிடப்பட்டது. மேலும், நான்காம் ஹென்றியின் ஆட்சியில் சேமித்து வைக்கப்பட்டிருந்த நிதி வேகமாகக் கரைந்து ஒரு நெருக்கடியான நிலைமை உருவாகியது. இந்த நிலைமையைச் சமாளிக்க 1614-ல் நாட்டின் பாராளுமன்றம் (States General) கூட்டப்பட்டது.[3] பாராளுமன்றத்தில் சமயக் குருமார்கள், பிரபுக்கள், பொதுமக்கள் என்ற மூன்று பிரிவினர் இருந்தனர். இவர்கள் தனித்தனியாக அமர்ந்து பிரச்சினைகளை விவாதித்து முடிவு எடுக்கும் வழக்கம் இருந்தது. சமயக் குருமார்களும், பிரபுக்களும் தங்கள்மீது வரி விதிக்கப்படுவதை விரும்பவில்லை. பொதுமக்களுடன் ஒத்துழைக்க இவர்கள் மறுத்தனர். இந்தக் கருத்து வேறுபாடுகளின் காரணமாகப் பாராளுமன்றம் எதையும் சாதிக்க முடியவில்லை. எனவே, கூட்டப்பட்ட மூன்று வாரங்களுக்குப் பிறகு 'காப்பாளர்' (Regent) பாராளுமன்றத்தைக் கலைத்தார். நாட்டில் எழுந்த பிரச்னைகள் இன்னும் தீர்க்கப்படவில்லை.

காா்டினல் ரிசெல்யூ (Cardinal Richelieu, 1585-1642)

இந்நிலையில் ஃபிரான்சைக் குழப்பத்திலிருந்து மீட்டு வலிமையான அரசாங்கம் ஒன்றை நிறுவி, ஃபிரான்சின் புகழ் வளரக்

3 இந்தக் கூட்டம்தான் பாராளுமன்றத்தின் கடைசிக் கூட்டம். இதற்குப் பிறகு 1789 ஃபிரெஞ்சுப் புரட்சிவரை 'ஸ்டேட்ஸ் ஜெனரல்' கூட்டப்படவே இல்லை.

காரணமாக இருந்தவர் ரிசெல்யூ என்பவராவர். இவருடைய இயற்பெயர் 'ஆர்மண்ட்-ஜீன்-டு-பிளெஸி' (Armand Jean du Plessis) என்பதாகும். தமது தாயின் நிர்வாகத்தில் ஃபிரான்சின் நிலைமை மேலும் மேலும் மோசமாகி வருவதை உணர்ந்த பதின் மூன்றும் லூயி 1617-ல் அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டுத் தாமே ஆட்சிப்பொறுப்பை ஏற்ருர். நிர்வாகத் திறமை சிறிதும் இல்லாத இவர் இசை, வேட்டையாடுதல் போன்ற கேளிக்கை களில் மிக்க ஈடுபாடுக் கொண்டிருந்தார். ஆட்சிப்பொறுப்பை முதல் அமைச்சராக இருந்த ரிசெல்யூவிடம் ஒப்படைத்துவிட்டு இவர் தன் வாழ்நாட்களை இன்பமாகக் கழித்தார். 1624 முதல் 1642 வரை லூயி பெயரளவில்தான் அரசராக இருந்தாரேயன்றி, உண்மையில் அதிகாரம் முழுவதும் ரிசெல்யூவின் கையில் இருந்தது. 1585-ல் பிரபுக்கள் குடும்பத்தில் பிறந்த இவர் சமயத்துறையில் பணியாற்றப் பயிற்சி பெற்று 1606-ல் 'லூகன்' (Lucon) என்ற இடத்தில் பிஷப்பாகப் பதவி ஏற்ருர். 1614-ல் மேரி டி மெடிசியால் கூட்டப்பட்ட பாராளுமன்றத்தில் குருமார்களின் பிரதிநிதியாக இவர் ஆற்றிய பணி அரசியாரை மிகவும் கவர்ந்தது. தம் அமைச் சர்களுள் ஒருவராக இவரை அமர்த்திஞர். 1622-ல் போப் இவரைக் கத்தோலிக்க திருச்சபையின் கார்டினலாக நியமித்தார். 1624-ல் பதின்மூன்றும் லூயி இவரைத் தம் முதல் அமைச்சராக நியமித்தார். பதவி ஏற்கும் பொழுது அவர் அரசருக்குப் பின் வரும் உறுதிமொழியை அளித்தார். "ஹ்யூகோனேக்களை ஒழிப் பதிலும், பெரிய பிரபுக்களின் ஆணவத்தையும் கொட்டத்தையும் அடக்குவதிலும், குடிமக்கள் அனைவரும் தங்கள் கடமைகளை உணர்ந்து நடக்கும்படிச் செய்வதிலும், அயல் நாடுகளிடையே ஃபிரான்சின் பெருமையையும், மதிப்பையும் உயர்த்துவதிலும் என் சக்தி முழுவதையும் தாங்கள் எனக்கு அளிக்க விரும்பும் அதிகாரத் தையும் பயன்படுத்துவேன்" என்பதே ரிசெல்யூ அளித்த உறுதி மொழியாகும். முதல் அமைச்சராகப் பணியாற்றிய அடுத்த பதினெட்டு ஆண்டுகள் இந்த உறுதிமொழியைச் செயல்படுத்து வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார்.

### ரிசெல்யூவின் கொள்கைகள்

உள்நாட்டு விவகாரங்களைப் பொறுத்தவரை ஹ்யூகோனேக் களின் அரசியல் ஆதிக்கத்தையும் மற்ற பிரபுக்களின் செல்வாக்கை யும் ஒழித்து அரசனுடைய அதிகாரத்தை வலுப்படுத்த வேண்டு மென்பதும், வெளிநாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரை ஹாப்ஸ்பர்க்குகளின் ஆதிக்கத்திற்கு முடிவுகட்டி ஃபிரான்சை ஐரோப்பாவின் தலைசிறந்த நாடாக ஆக்கவேண்டுமென்பதும் இவரது குறிக்கோள்களாகும்.

### உள்நாட்டுக் கொள்கை

ஹ்யூகோனேக்களை அடக்குதல்: சமயக்குருவாக இருந்தாலும் இவருக்கு அரசியலில்தான் ஈடுபாடு அதிகம். ஃபிரான்சில் பிராடஸ்டென்டுகள் ஒரு சமயப்பிரிவினர்களாக மட்டுமல்லாமல், வலிமை மிக்க ஓர் அரசியல் சக்தியாகவும் விளங்கினார்கள். நான்காம் ஹென்றியின் நாண்டிஸ் ஆணை அவர்களுக்குச் சமயச் சுதந்திரம் மன்றுமன்றி பல அரசியல் உரிமைகளையும், சலுகை களையும் வழங்கியிருந்தது. தமக்குக் கொடுக்கப்பட்டிருந்த கோட்டைகள், படைகள் இவற்றைக்கொண்டு ஹ்யூகோனேக்கள் அரசின் அதிகாரத்தையே மீறும் அளவிற்குச் செல்வாக்கு பெற்றிருந்தார்கள். இவர்கள் 'அரசிற்குள் ஓர் அரசாக' (an imperium in imperio) அதிகாரம் பெற்று விளங்கினார்கள். எனவே, அவர்களுடைய சமயச் சுதந்திரத்தையும் உரிமைகளையும் பாதிக்காத வகையில் அவர்கள் அரசியல் அதிகாரங்களை அகற்றி மன்னனுக்குக் கீழ்ப்படியும்படிச் செய்ய வேண்டுமென்று உறுதி பூண்டார். அவர்கள்மீது நடவடிக்கை எடுக்கத் தகுந்த தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். 1625-ல் ஹ்யூகோனேக்கள் இங்கிலாந்தின் உதவியுடன் அரசுக்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டார்கள். ரிசெல்யூ தம் படைகளுடன் கிளர்ச்சிக்காரர்களின் முக்கிய கோட்டையான லாரோசெல்மீது தாக்குதல் தொடங்கினார். ஹ்யூகோனேக்கள் வீரத்துடன் போர் புரிந்தனர். பதினைந்து மாதங்கள் நடந்த போரின் இறுதியில் ஹ்யூகோனேக்கள் சரணடைந்தார்கள். லாரோசெல் கோட்டை யும், மற்றும் பல ஹ்யூகோனேக்களின் நகரங்களும் கைப்பற்றப் பட்டன. 1629-ல் நாண்டிஸ் ஆணைக்குப் பதிலாக 'அலே ஆணை' (Edit of Alais) வெளியிடப்பட்டது. பிராடஸ்டென்டுகளுக்கு எப்பொழுதும்போலச் சமயச் சுதந்திரமும் வழிபாட்டுச் சுதந்திர மும் அளிக்கப்பட்டன. நாண்டிஸ் ஆணை அவர்களுக்கு அளித்த அரசியல் சலுகைகள் யாவும் பறிக்கப்பட்டன. அவர்களது கோட்டைகள் யாவும் கைப்பற்றப்பட்டு, அவர்கள் படைகள் கலைக்கப்பட்டன. எனினும் அரசாங்க அலுவலகங்களிலும், நீதி மன்றங்களிலும் பதவிகள் வகிக்கும் உரிமையை அவர்கள் தொடர்ந்து அனுபவித்து வந்தனர். இவ்வாறு அரசனின் எதேச் சாதிகாரத்திற்கும், நாட்டின் ஒற்றுமைக்கும் இடையூறாக இருந்த ஹ்யூகோனேக்களின் செல்வாக்கு ரிசெல்யூவால் ஒடுக்கப் பட்டது.

பிரபுக்கள்மீது நடவடிக்கை: நாட்டில் பிரபுக்களின் கொட் டத்தை அடக்குவது இதைவிடக் கடினமான ஒரு செயலாக இருந்தது. ஏனெனில், இந்த நடவடிக்கைக்குக் கடும் எதிர்ப்பு

இருந்தது. மாநிலங்களின் கவர்னர்களாகப் பிரபுக்கள் நியமிக்கப் படும் வழக்கம் இருந்தது. இவர்களில் பலர் தங்களுக்கென்று தனியாகப் படைகளையும், கோட்டை கொத்தளங்கள் அமைக்கப் பட்ட நகரங்களையும் பெற்றிருந்தனர். இந்த நிலையில் அவர்கள் அரசரை மதியாமல் அரசுக்கு எதிராகக் கிளர்ச்சிகள் செய்தனர். மேலும் அரசரின் அவையிலிருந்த சில பிரபுக்கள் ரிசெல்யூவின் அதிகார வளர்ச்சியைக் கண்டு பொறாமைப்பட்டு அவருடைய திட்டங்களை முறியடிக்கச் சதி செய்தனர். அவருக்கு எதிராகச் செயல்பட்ட அரசவையைச் சேர்ந்த பிரபுக்களின் சதித்திட்டங்கள் கண்டு பிடிக்கப்பட்டு அவர்கள் ஈவு இரக்கமின்றித் தண்டிக்கப் பட்டனர். சதிச்செயல்களைக் கண்டு பிடிப்பதற்கென்று ஒற்றர் படை ஒன்றை நிறுவினார். நாட்டின் பாதுகாப்பிற்குத் தேவைப் படும் கோட்டைகளைத் தவிர மற்ற எல்லாக் கோட்டைகளும் இடிக்கப்படவேண்டும் என்று 1626-ல் ஓர் ஆணை பிறப்பித்தார்.

மத்திய அரசாங்கம் வலுப்படுத்தப்படுதல்: பிரபுக்களின் செல் வாக்கை ஒடுக்கும் பணியோடு அரசனின் அதிகாரத்தை வலுப் படுத்தும் வகையில் நிர்வாக முறையைச் சீர்திருத்தும் பணியும் மேற்கொள்ளப்பட்டது. இதன் நோக்கம் நிர்வாகத்தில் அதிகாரக் குவிப்பாகும். மாநிலக் கவர்னராகப் பதவியிலிருந்த பிரபுக்கள் அரசரின் கட்டுப்பாட்டிற்குட்பட்டுச் செயல்பட விரும்ப வில்லை. எனவே, அவர்களிடமிருந்த அதிகாரங்கள் பறிக்கப்பட்டு அரசரால் நியமிக்கப்பட்ட நடுத்தர வகுப்பினரைச் சேர்ந்த அதிகாரிகள் வசம் ஒப்புவிக்கப்பட்டன. இந்த உயர் அதிகாரிகள் 'இன்டென்டண்டுகள்' (Intendants) என்று அழைக்கப்பட்டனர். மாவட்டங்களின் நிர்வாகம் இவர்கள் பொறுப்பில் விடப்பட்டது. வரிவிதிப்பு, வரிவசூல் செய்வது, போலீஸ் படை நிறுவுவது, போருக்கான படைகளை அமைப்பது, ஒழுங்கை நிலை நாட்டுவது, நீதி, நிர்வாகம் போன்ற ஏராளமான அதிகாரங்கள் இவர்களுக்கு அளிக்கப்பட்டன. இந்த அதிகாரிகள் ரிசெல்யூவின் உண்மையான ஊழியர்களாகச் செயல்பட்டார்கள். நாட்டின் நிலைமைபற்றி அமைச்சருக்கு அவ்வப்பொழுது அறிக்கைகள் அனுப்பி அவருடைய ஆணைகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்து வந்தனர். இவர்கள் அரசரின் கண்களாகவும், காதுகளாகவும் விளங்கினர். நிர்வாகத்தில் இவர் களுடைய அதிகாரம் பெருகப் பெருக மாநிலக் கவர்னர்களின் அதிகாரம் குறைந்துகொண்டே வந்தது. நிர்வாகப் பொறுப்பை ஏற்க இதுபோன்ற அதிகாரிகளை நியமித்ததன் மூலம் அதிகார வர்க்கமுறையின் அடிப்படையில் ஒரு நவீன நிர்வாக அமைப்பை ரிசெல்யூ ஃபிரான்சில் தோற்றுவித்தார் என்று கூறலாம்.[1]

[1] History of Europe Since 1500, Hayes & Cole, page 121.

இன்டென்டண்டுகள் என்ற அதிகாரிகளை நியமித்ததைத் தவிர வேறு எந்த மாறுதல்களையோ புதுமையையோ நிர்வாகத்தில் ரிசெல்யூ புகுத்தவில்லை. ஃபிரான்சின் ஆட்சிமுறை வரம்பு கடந்த ஒரு முடியாட்சியாக அமைந்திருந்தது. மத்திய அரசாங்கம் என்ற தனி அமைப்பு ஒன்றையும் அவர் உருவாக்கவில்லை. அரசரின் பெயரால் ரிசெல்யூ நடத்திக் கொண்டிருந்த நிர்வாகம் தான் மத்திய அரசாங்கம் ஆகும். எனினும், ரிசெல்யூ செய்த மாற்றங்களின் விளைவாக ஃபிரான்சின் அரசாங்கம் நிலமானிய அடிப்படையில் இல்லாமல் அரசரின் அதிகாரத்தின் அடிப்படையில் அமைந்திருந்தது.[2]

நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் அதிகாரம் அரசரின் கையில் இருக்கவேண்டும் என்று தீர்மானித்த ரிசெல்யூ, அரசரின் அதிகார வளர்ச்சிக்கு ஸ்டேட்ஸ் ஜெனரலும் 'பார்லெமென்டு'களும் (Parlement) தடையாக இருக்கக்கூடும் என்று கருதி அவற்றின் வளர்ச்சியைத் தடைசெய்தார். நாட்டின் பாராளு மன்றமான ஸ்டேட்ஸ் ஜெனரல் கூட்டப்படுவதையே அவர் விரும்பவில்லை. மாநிலங்களின் சட்ட மன்றங்களும் (Provincial Estates) பெயரளவில்தான் அதிகாரங்கள் பெற்றிருந்தன. இவ்வாறு பிரதிநிதித்துவ சபைகளின் வளர்ச்சியைத் தடுத்து நாட்டில் எதேச்சாதிகார ஆட்சி ஏற்பட இவர் வழிகோலினார்.

நிர்வாகத் துறை மட்டுமன்றி, படைத் துறையிலும் இவர் சில சீர்திருத்தங்களை மேற்கொண்டார் இதுவரை அரசரின் படைகள் பிரபுக்களால் திரட்டப்பட்டு, பிரபுக்களின் தலைமையில் இயங்கிக்கொண்டிருந்தன. இதுபோன்ற பிரபுக்களின் படைகள், அரசரின் நலனிற்காக உண்மையாக ஊழியம் புரியுமா என்று ரிசெல்யூ ஐயப்பட்டார். எனவே, அரசினால் திரட்டப்பட்டு, அரசரின் நேரடிக் கண்காணிப்பில் இயங்கும் புதிய படை ஒன்றை நிறுவினார். இந்தப் படைதான் பதினான்காம் லூயி காலத்தில் ஃபிரான்சிற்குப் பல வெற்றிகளைத் தேடித்தந்து ஃபிரான்சின் புகழை உயர்த்தக் காரணமாக இருந்த படையாக வளர்ந்தது. ஃபிரான்சின் கப்பற்படையை வலுப்படுத்தவும் முயற்சிகளை மேற்கொண்டார்.

நிர்வாக, படைத்துறைகளில் சீர்திருத்தங்களை மேற்கொண்ட ரிசெல்யூ, நாட்டின் பொருளாதாரத்தைப்பற்றிக் கவலைப்பட்ட

[2] "Yet there can be no doubt that Richelieu transformed the Spirit of government in France. He made it less feudal and more royalist" Modern Europe to 1870, C. J. H. Hayes, page 249.

தாகத் தெரியவில்லை, நாட்டின் விவசாய, தொழில்வளர்ச்சிக்கான எந்த நடவடிக்கையும் இவர் எடுக்கவில்லை. வியாபாரக் கம்பெனி கள் தொடங்குவதில் ஓரளவு அக்கறை காட்டினர். நிதித்துறையில் வரி வசூல்முறையில் சில மாற்றங்களைச் செய்தார். ஆனால், மக்களின் இன்னல்களைப் போக்கும் எந்த ஒரு நிதிச் சீர்திருத்தமும் இவரால் செய்யப்படவில்லை. சிக்கனத்தைக் கடைப்பிடிக்காமல் ஆடம்பரச் செலவுகள் செய்ததால் நாட்டின் கடன்சுமை அதிகமா யிற்று. ஃபிரான்சின் பெருமை ஓங்கவேண்டும் என்பதுதான் அவர் குறிக்கோள். எனினும், பொருளாதார வளர்ச்சியின் அடிப்படை யில்தான் ஒரு நாட்டின் புகழ் ஓங்கமுடியும் என்பதை அவர் உணர வில்லை. இந்த உண்மையை உணராமல் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான நடவடிக்கைகளை எடுக்கத் தவறியது இவருடைய புகழுக்கு ஓர் இழுக்காகும்[1].

'கெஜட்' (Gazette) என்ற ஓர் அரசுச் செய்தித்தாள் வெளியிட இவர் உதவிசெய்தார். இலக்கியத்தில் ஆர்வம்கொண்ட ரிசெல்யூ ஃபிரெஞ்சு மொழி வளர்ச்சிக்காக ஃபிரெஞ்சு அகடமி (French Academy) என்ற ஒரு சங்கத்தை நிறுவினர்.

ரிசெல்யூவின் அயல்நாட்டுக் கொள்கை

அயல்நாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரை இவர் நான் காம் ஹென்றியின் அடிச்சுவட்டைப் பின்பற்றினர். ஃபிரான் சுடன் ஆதிக்கப் போட்டியில் ஈடுபட்டிருந்த ஹாப்ஸ்பர்க்குகளின் செல்வாக்கை ஒடுக்கி ஃபிரான்சை ஐரோப்பாவின் வலிமைமிக்க நாடாக ஆக்கவேண்டுமென்பதும், ஃபிரான்சின் எல்லைகளை வலுப் படுத்த வேண்டுமென்பதும், இவருடைய நோக்கங்கள் ஆகும். அப்பொழுது ஜெர்மனியில் நடந்துகொண்டிருந்த முப்பதாண்டுப் போர் இவர் ஹாப்ஸ்பர்க்குகளைச் சிறுமைப்படுத்த ஒரு சாதகமான சூழ்நிலையை உருவாக்கியது. ஜெர்மன் பிராடஸ்டென்டுகளுக்கு உதவி செய்வதன்மூலம் கத்தோலிக்க ஹாப்ஸ்பர்க்குகளின் ஆதிக் கத்தை ஒடுக்கமுடியும் என்று கருதி முப்பதாண்டுப் போரில் தலையிட்டார். கத்தோலிக்கக் கார்டினலான இவர் பிராடஸ் டென்டுகளுக்கு ஆதரவு அளிப்பதைப்பற்றிச் சிறிதும் கவலைப்பட வில்லை. ஏனெனில், சமயத்தைவிட இவருக்கு ஃபிரான்சின் அரசியல் நலன்தான் மேலானதாகத் தோன்றியது. முதலில் இவர் நேரிடையாகப் போரில் ஈடுபடாமல் ஆஸ்திரிய ஸ்பானிய ஹாப்ஸ் பர்க்குகளுக்கு எதிராகப் போர்புரிந்துகொண்டிருந்த ஜெர்மன்

[1] "His inability to realise that national greatness must rest upon a sound economic basis must be regarded as detracting from his reputation". A Text Book of Modern European History 1453-1661. G. W. Southgate, page 163.

பிராடஸ்டென்டுகளுக்கும், ஸ்வீடன். நெதர்லாந்து மக்களுக்கும் பொருளுதவி செய்தார். உதாரணமாக 1630-ல் இவர் குஸ்தாவஸ் அடால்பசுடன் ஓர் உடன்படிக்கைச் செய்துகொண்டு அவரது போர்ச்செலவுக்குப் பணம் கொடுக்க ஒப்புக்கொண்டார். மறைமுகமான பொருளுதவியால் மட்டும் தனது நோக்கம் நிறைவேறாது என்பதை உணர்ந்த ரிசெல்யூ 1635-ல் போரில் நேரிடையாக ஈடுபட முடிவுசெய்தார். ஃபிரெஞ்சுப் படைகள் முதன் முதலாகப் போரில் இறங்கிப் பேரரசுடனும், ஸ்பெயினுடனும் போர்செய்தன. முதலில் தோல்விகள் ஏற்பட்டாலும் விரைவிலேயே 'காண்டே' (Conde), 'டூரென்' (Turenne) போன்ற புதிய படைத் தலைவர்கள் ஃபிரான்சிற்குப் பெரும் வெற்றிகளை ஈட்டித் தந்தனர்.

ஸ்பெயின் நாட்டின் ஐக்கியத்தைக் குலைக்கும் நோக்கத்துடன் ரிசெல்யூ ஸ்பெயினின் மாநிலங்களில் கலகங்களைத் தோற்றுவித்தார். இந்த நெருக்கடியான சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு ஃபிரெஞ்சுப்படைகள் ஸ்பெயினிடமிருந்து 'ரூசிலோன்' (Roussillon) என்ற பகுதியைக் கைப்பற்றின. அல்சேஸ் மாநிலத்தில் பல இடங்களும் கைப்பற்றப்பட்டன. இந்நிலையில் ஹாப்ஸ்பர்க் அரசர்கள் சமாதானம் செய்து கொள்ளத் தயாராக இருந்தார்கள். ஆனால், ரிசெல்யூ அவர்களின் ஆதிக்கத்தை அடியோடு ஒழிக்கும் வரை சமாதானம் செய்துக் கொள்வதில்லை என்று உறுதிபூண்டு தொடர்ந்து போரை நடத்திக் கொண்டிருந்தார். ஆனால், இந்த நோக்கம் நிறைவேறுவதற்கு முன்பே 1642-ல் இவர் இறந்தார். ஆனால், இறக்கும் பொழுது ஃபிரான்சின் எல்லைகள் வலுப்படுத்தப்பட வேண்டும் என்ற தன் நோக்கம் ஓரளவுக்கு நிறைவேறிவிட்டது என்ற மனநிறைவோடு இறந்தார். ஏனெனில், 'டியூரின் '(Turin), ரைன் ஆற்றுப் பகுதி, 'பீட்மாண்ட்' (Piedmont) 'ரூசிலோன்' போன்ற பகுதிகள் இப்பொழுது ஃபிரான்சின் வசம் இருந்தன. இவர் இறந்த ஓர் ஆண்டிற்கெல்லாம் 1643-ல் பதின்மூன்றும் லூயியும் இறந்தார். ஹாப்ஸ்பர்க் அரசி ஆனுக்கும், இவருக்கும் பிறந்த பிள்ளையான பதினான்காம் லூயி ஃபிரான்சின் அரியணையேறினார். இவர் அரசராகப் பட்டமெய்தியபொழுது இவருக்கு வயது ஐந்தாகும்.

ரிசெல்யூ ஒரு மதிப்பீடு

வரலாற்றில் சிறப்பிடத்தைப்பெறும் மாபெரும் தலைவர்கள் பலருள் ரிசெல்யூ ஒருவராவர். மற்றவர்களின் அன்பையும் நம்பிக்கையையும் பெறும் பண்புகள் பெற்றிராத இவர், எப்படியோ அரசரின் நம்பிக்கைக்குப் பாத்திரமானார். அரசருக்கு இவர்மீது அன்பு இல்லாவிட்டாலும் அளவுகடந்த நம்பிக்கையும், மரியாதையும் இருந்தன. அவருடைய மனஉறுதி, நாட்டுப்பற்று, செயலாற்றும் திறமை பற்றி யாருக்கும் ஐயப்பாடு இருக்க

முடியாது. ஹ்யூகோனேக்களின் அரசியல் உரிமைகளைப் பறித்தும், பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்கியும், பிரதிநிதித்துவ சபைகளின் அதிகாரங்களைக் குறைத்தும் ஃபிரான்சின் வரம்பு கடந்த முடியாட்சிக்கு அடிகோலினர். இவ்வாறு பதினான்காம் லூயியின் வல்லாட்சிக்கு வழி வகுக்கப்பட்டது. ஐரோப்பாவில் மற்ற நாடுகளில் வரம்புக்குட்பட்ட முடியாட்சியும், மக்கள் உரிமைகளைப் பெற போராட்டமும் நிகழ்ந்த காலத்தில் இவர் ஃபிரான்சில் வரம்புகடந்த முடியாட்சியை ஏற்படுத்தி மக்களை மன்னரின் எதேச்சாதிகாரத்திற்குள்ளாக்கினார். ஹாப்ஸ்பர்க்கு களின் செல்வாக்கை ஒடுக்கியதன் மூலம் ஃபிரான்சின் வலிமையைப் பெருக்கினார். ஃபிரான்சை அவர் நேசித்தார் என்பது உண்மை. ஃபிரான்சின் பாமரமக்களின் நலனுக்காக அவர் ஒன்றும் செய்யவில்லை. பொருளாதாரத் துறையில் அவர் ஆற்றிய தொண்டு மிகக்குறைவு. அவருடைய குறிக்கோள்கள் நியாயமானவையாயும் போற்றத்தக்கவையாயும் இருப்பினும், அவற்றை அடைய அவர் கையாண்ட முறைகள் யாவும் நியாயமானவை என்று கூறமுடியாது. ஆனால், அவர் தாம் கையாண்ட முறைகளைப்பற்றி மற்றவர்கள் என்ன கருதுகிறார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படவில்லை.[1]

## III. பதினான்காம் லூயி (1643-1715)

**பிள்ளைப் பருவம் (1643-1661)**

1643-ல் பதினான்காம் லூயி அரியணை ஏறியபொழுது அவருக்கு வயது ஐந்து. எனவே, அவருடைய தாய் 'ஆஸ்திரிய இளவரசி ஆன்' (Anne of Austria) ரீஜண்டாக நியமிக்கப்பட்டு அவருக்கு நிர்வாகத்தில் உதவிபுரிய ஒரு கவுன்சிலும் அமைக்கப்பட்டது. 'ஆர்லியன்ஸ் கோமகன்' (Duke of Orleans), காண்டே இளவரசர், 'மாசரின்' (Mazarin) இன்னும் பல உயர் அதிகாரிகள் ஆகியோர் இக்கவுன்சிலின் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டனர். ஆனால், விரைவிலேயே மாசரின் ஆன் இளவரசியின் நல்லெண்ணத்தையும் ஆதரவையும் பெற்று முதலமைச்சராக நியமிக்கப்பட்டார். 1643 முதல் 1661 வரை ஃபிரான்சின் ஆட்சிப் பொறுப்பு இவர் கையில் தான் இருந்தது.

**கார்டினல் மாசரின் (Cardinal Mazarin, 1602-1661)**

மாசரினின் வாழ்க்கை வரலாற்றைக் கூர்ந்து கவனித்தால். அது ரிசெல்யூவின் வாழ்க்கை வரலாற்றின் பின் குறிப்புப்

[1] "His ends were legitimate, even laudable, his means were more open to question......yet his actions, in his own opinion, needed no other justification than that thev were for the glory and greatness of France"—A Text Book of Modern European History, 1453-1661, G. W. Southgate, page 166.

போன்றது என்பது புலனாகும்.[2] ஃபிரான்சில் ரிசெல்யூ தொடங்கிய பணியை முடிவுறச் செய்தது தான் இவருடைய சாதனையே அன்றி, இவர் எந்த ஒரு புதுக்கொள்கையையும் உருவாக்கவில்லை. மாசரின் 1601-ல் இத்தாலியில் நேப்பிள்ஸ் அரசில் பிறந்தார். சமயத் துறையில் பணிபுரியும் நோக்கத்துடன் ரோம் நகரிலும், ஸ்பெயினிலும் கல்விகற்று, போப்பின் தூதுவராகப் பல நாடுகளில் பணிபுரிந்தார். கத்தோலிக்கத் திருச்சபையில் கார்டினல் பதவியும் பெற்றார். ஃபிரான்சில் போப்பின் தூதுவராக இருந்த போதுதான் ரிசெல்யூவுடன் இவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. ரிசெல்யூவின் ஆதரவைப்பெற்று ஃபிரெஞ்சு அரசாங்கப்பணியில் சேர்ந்து 1639-ல் ஃபிரெஞ்சுக் குடியுரிமையும் பெற்றார். ரிசெல்யூ விடம் பணியாற்ற அமர்ந்ததன் மூலம், அவருடன் நெருங்கிப் பழகவும், அவரிடம் அரசியல் நிர்வாகத் துறைகளில் பயிற்சி பெறவும், இவருக்கு வாய்ப்புகள் கிடைத்தன. ரிசெல்யூ இறக்கும்பொழுது வெளியிட்ட தன் விருப்பத்திற்கிணங்க, மாசரின் முதலமைச்சராக நியமிக்கப்பட்டார் (1643). ரிசெல்யூ வின் கொள்கைகளை அப்படியே பின்பற்றி அவர் திட்டங்களை நிறைவேற்றும் பணியை மேற்கொண்டார். அவருடைய அழகும், புத்தி சாதுரியமும், ரீஜன்ட் ஆன் அரசியை மிகவும் கவர்ந்தன. அவருடைய மரியாதைக்கும் நம்பிக்கைக்கும் பாத்திர மானதோடு மட்டுமன்றி, அவர் அன்பையும் பெற்று அவரை மணந்துக் கொண்டார் என்றுகூட சிலர் கருதுகின்றனர். ரிசெல்யூவைப் போலவே இவரும் ஃபிரான்சில் மன்னனின் எதேச் சாதிகார ஆட்சியை நிறுவவும், பதினேழாம் நூற்றாண்டு ஐரோப் பாவில் ஃபிரான்சை ஒரு சிறந்த நாடாக ஆக்கவும் உறுதி பூண்டார். குண இயல்புகளைப் பொறுத்தவரையில் இவ்விரு அமைச்சர்களிடையே வேறுபாடுகள் பல இருப்பினும் மாசரின் ஃபிரான்சின் தலைமையை ஏற்கத் தேவையான எல்லாத் தகுதி களையும் பெற்றிருந்தார்.

இவர் முதலமைச்சராக இருந்த காலத்தில் ஃபிரான்சில் இவருக்கு எதிராகப் பல கிளர்ச்சிகள் எழுந்தன. இவை ஃபிரெஞ்சு வரலாற்றில் ‘ஃபிரான்டேக்கள்’ (Fronde)[3] என் றழைக்கப்படுகின்றன. பிரபுக்கள் செய்த இந்தக் கிளர்ச்சி

[2] "Vieved in true perspective, the career of Mazarin appears to have been little more than a postscript to that of Riehelieu"—A Text Book of Modern European History 1457-1661. G.W. Southgate, page 185.

[3] பாரிஸ் நகரச் சிறுவர்கள் கவண்கற்களைக் கொண்டு தெருக்களில் விளையாடும் ‘பிரான்டே’ என்ற விளையாட்டின் பெயர் இக்கிளர்ச்சிகளுக்கு அளிக்கப் பட்டது.

களுக்குப் பல காரணங்கள் இருந்தன. தங்களை ஒடுக்குவதற்கு ரிசெல்யூ செய்த முயற்சிகளை ஃபிரெஞ்சுப் பிரபுக்கள் எதிர்த்தனர் என்பதை முன்பு கண்டோம். மாசரினும் அதே குறிக்கோளைக் கொண்டிருந்தார். எனவே, மாசரினைத் தங்கள் எதிரியாகப் பிரபுக்கள் கருதினர். மேலும், அரசாங்கத்தில் அவருக்கிருந்த செல்வாக்கு பல பிரபுக்களின் பொறாமையையும், ஆத்திரத்தையும் தூண்டியது. தாங்கள் இழந்த சிறப்புரிமைகளையும், செல்வாக்கையும் மீண்டும் பெற பிரக்கள் ஆவலாக இருந்தனர். மேலும், மாசரின் நாட்டின் செல்வத்தைத் தன்னுடைய நலத்திற்காகவும், தன்னுடைய குடும்ப நலத்திற்காகவும் பயன்படுத்திக் கொண்டு ஏராளமான செல்வம் சம்பாதித்தார். இதனால் பிரபுக்களும், மக்களும், இவரை வெறுத்தனர். இந்தக் காரணங்கள் தவிர, இவர் அந்நியர் என்ற காரணத்தினால் இவர்மீது மக்களுக்கு வெறுப்பு ஏற்பட்டது. பிரபுக்கள் மட்டுமன்றிப் பொது மக்களில் பலரும், இக்கிளர்ச்சிகளில் ஈடுபட்டனர். 'பிராண்டே' (Fronde) என்னும் கிளர்ச்சிகள் 1648 முதல் 1652 வரை நடந்தன. மன்னரின் எதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்து நடத்தப்பட்ட போர் என்றும், மன்னரின் கொடுங்கோன்மை தாங்காது, பாரிஸ் நகரமக்கள் செய்த கிளர்ச்சி என்றும், நாட்டில் நடுத்தர வகுப்பினரின் செல்வாக்கும், அந்நியர்களின் செல்வாக்கும், பெருகுவதைக்கண்டு மனம் பொறாத பிரபுக்கள், தாங்கள் இழந்த பதவிகளையும், உரிமைகளையும் மீண்டும் பெறுவதற்காகத் தொடங்கப்பட்ட போர் என்றும் ஃபிராண்டேக்கள் பலவாறாகக் கருதப்படுகின்றன. அரசரின் வரிக்கொள்கையை எதிர்த்தும், சீர்திருத்தங்கள் கோரியும்; பாரிஸ் பார்லிமெண்டினால் கிளர்ச்சியாகத் தொடங்கிய ஃபிராண்டே இயக்கம், பிரபுக்களின் எதிர்ப்பியக்கமாக உருவெடுத்தது.

இதன் உடனடிக்காரணம் என்னவெனில் பாரிஸ் நகரத்துப் பார்லிமெண்டு நீதிமன்றத்தின்[1] விவகாரங்களில் மாசரின் தலையிட்டதுதான். நீதிமன்றமாக இயங்கிவந்த பாரிஸ் பார்லிமெண்டு இப்பொழுது நாடு எவ்வாறு ஆளப்படவேண்டும் என்பதை முடிவு செய்யும் உரிமையில் தனக்கும் பங்கு உண்டு என்று வாதாடியது. அரசன் பிறப்பிக்கும் ஆணைகளைப் பார்லிமெண்டு பதிவு செய்த பிறகுதான் அந்த ஆணைகள் செயல்படுத்தப்

[1] ஃபிரான்சில் பார்லிமெண்டுகள் (Parlements) நீதி மன்றங்களாக இயங்கி வந்தன. முக்கியமான வழக்குகளையும், கீழ்க்கோர்ட்டுகளிலிருந்து முறையீடுகளையும் (appeals) இம்மன்றங்கள் விசாரித்தன. இதுபோன்ற பதின்மூன்று நீதி மன்றங்கள் 17ஆம் நூற்றாண்டில் ஃபிரான்சில் இருந்தன. இவற்றுள் பாரிஸ் நகரத்துப் பார்லிமெண்டு மிகவும் புகழ் வாய்ந்தது.

படுவது வழக்கம். 1648-ல் பாரிஸ் நகரில் விற்பனைக்குக் கொண்டு வரப்படும் பொருள்கள்மீது வரிவிதிக்கும் ஆணையை மாசரின் பிறப்பித்தார். வழக்கம்போல இந்த ஆணை பதிவு செய்யப்படுவதற்காகப் பார்லிமெண்டின் முன் கொண்டுவரப்பட்டது. ஆனால், பார்லிமெண்ட் இந்த ஆணையைப் பதிவு செய்ய மறுத்தது. பொதுவாக நாட்டின் நிதி நிர்வாகத்தைப்பற்றி மக்களிடையே இருந்த அதிருப்தியைப் பயன்படுத்திக் கொண்டு பாரிஸ் பார்லிமெண்டு, இதேபோன்ற மற்ற மன்றங்களின் உறுப்பினர்களுடன் கலந்து ஆலோசித்து நாட்டின் அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் பற்றி ஆராய்ந்து முடிவெடுக்க ஒரு குழுவை நியமித்தது. பார்லிமெண்டின் அனுமதியின்றி எந்த வரியும் விதிக்கப்படக்கூடாது. 'இன்டெண்டண்டுகள்' (Intendants) என்ற அதிகாரிகள் அகற்றப்படவேண்டும். விசாரணையின்றி எவரையும் சிறையிலடைத்தல் கூடாது போன்ற இருபத்தேழு கோரிக்கைகளை இந்தக் குழு அரசன் முன் வைத்தது. அரசன் பிறப்பிக்கும் ஆணைகள் இனி மேல் பார்லிமெண்டைக் கட்டுப்படுத்தாது என்றும் அறிவித்தது. பாரிஸ் மக்களும் இதை ஆதரித்தனர். இதே சமயத்தில் ஸ்டூவர்ட் மன்னர்களின் எதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்து, இங்கிலாந்து பாராளுமன்றம் நடத்திக் கொண்டிருந்த இயக்கம்தான் பாரிஸ் மக்களின் கொள்கைக்குத் தூண்டுகோலாக இருந்தது என்பது நோக்கத்தக்கது. இங்கிலாந்தின் பாராளுமன்றம் பெற விரும்பிய உரிமைகளை ஃபிரான்சின் பாராளுமன்றம் பெற முயன்று கொண்டிருந்தது. இன்டெண்டண்டுகளை நீக்குவது, வரிகளைக் குறைப்பது, நிதி நிர்வாகத்திலிருக்கும் ஊழல்களைப்பற்றி விசாரிப்பது போன்ற கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ளுவதாக மாசரின் அறிவித்தார். பார்லிமெண்டை ஒடுக்க வேண்டுமென்பதுதான் அவர் நோக்கம். ஆனால், நிலைமை தனக்குச் சாதகமாக இல்லாததால் தற்காலிகமாக விட்டுக்கொடுக்க முடிவு செய்தார். மேலும், இதே சமயத்தில் இங்கிலாந்தில் நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சிகள், பாராளுமன்றத்திற்கும், அரசருக்குமிடையே நடந்து கொண்டிருந்த போர், முதலாம் சார்லஸ் மக்களின் எதிரி என்று கொல்லப்பட்டது, மாசரின் மனதில் அச்சத்தை ஏற்படுத்தின. எனவேதான், அவர் விட்டுக்கொடுக்க முடிவு செய்தார். ஆனால், ஆறுமாதங்களுக்குள் தன் நிலைமையைச் சீர்படுத்திக் கொண்டு கிளர்ச்சியை அடக்கும் பணியைக் காண்டேயிடம் ஒப்படைத்தார். ஆனால், கிளர்ச்சி முற்றிலும் ஒடுக்கப்படவில்லை. கிளர்ச்சிக்காரர்களுடன் மாசரின் 1649-ல் ஓர் உடன்பாடு செய்து கொண்டார். நிதித்துறையில் சலுகைகள் கொடுக்க அரசு ஒப்புக்கொண்டது. இத்துடன் முதல் ஃபிரான்டே முடிவடைந்தது. இது பாரிஸ் பார்லிமெண்டுக்கு வெற்றி என்றாலும்,

நாட்டிற்கு இது ஒரு நல்ல பயனையும் அளிக்கவில்லை. இண்டென் டண்டுகள் நீக்கப்பட்டதால் நாட்டின் நிர்வாகம் சீர்குலைந்தது. வரிகள் குறைக்கப்பட்டதால், நிதி நெருக்கடி ஏற்பட்டது.

முதல் ஃபிராண்டேயைத் தொடர்ந்து மற்றொரு கிளர்ச்சி ஏற்பட்டது. இது இரண்டாவது ஃபிராண்டே என்று அழைக்கப் படுகிறது. இந்த இரண்டாவது கிளர்ச்சி பொதுமக்களின் நலனைக் குறிக்கோளாகக் கொண்டது அன்று. அதிருப்தியடைந்த பிரபுக் களில் சிலர் தன்னலத்திற்காகக் காண்டே என்பவரின் தலைமையில் செய்த புரட்சியாகும். அரசரின் அதிகாரத்திற்கு இடையூறாகக் காண்டே பிரபு இருப்பதை உணர்ந்த மாசரின் அவரையும் அவரைச் சார்ந்த சில பிரபுக்களையும் சிறைப்பிடிக்க உத்தர விட்டார். இதன் விளைவாகப் பாரிஸ் நகரத்திலும், சில மாநிலங் களிலும் எதிர்ப்பு உருவாகியது. அரசருக்கு உண்மையாக ஊழியம் புரிந்து கொண்டிருந்த தளபதி டூரென்கூட இப்பொழுது கிளர்ச்சிக்காரருடன் சேர்ந்து கொண்டார். காண்டேயும், மற்ற பிரபுக்களும் விடுதலைச் செய்யப்படவேண்டும் என்றும், மாசரின் நாட்டைவிட்டு வெளியேற்றப்பட வேண்டுமென்றும், பிரபுக்கள் கோரினர். இதற்கிணங்க மாசரின், காண்டேயையும் மற்ற பிரபுக்களையும் விடுதலைசெய்து ஃபிரான்சைவிட்டு வெளியேறினார். காண்டே படையுடன் வந்து பாரிஸ் நகரைக் கைப்பற்றினார். அவருடைய ஆணவமும், மிருகத்தனமான செயல்களும் பாரிஸ் நகர மக்களின் மனதைப் புண்படுத்தின. காண்டே, அவர்கள் ஆதரவை இழந்தார். பிரபுக்களிடையேயும் போட்டி, பொறாமை வளர்ந்து, அவர்களால் ஒற்றுமையுடன் செயல்பட இயலவில்லை. 1652-ல் டூரென், அரசரின் சார்பில் படைத் தலைமையை ஏற்று, காண்டேயைப் போரில் தோற்கடித்து நாட்டைவிட்டு விரட் டினார். காண்டே ஸ்பானியப் படையில் பதவி ஏற்று ஃபிரான்சிற்கு எதிராகப் போர் புரிந்தார். பாரிஸ் பார்லிமெண்டு அரசரிடம் சரணடைந்தது. கிளர்ச்சிகள் ஒடுக்கப்பட்டன. மாசரின் நாடு திரும்பினார். இதன் விளைவாகப் பாரிஸ் பார்லிமெண்டு இனி அரசியல் விஷயங்களிலும், நிர்வாக, நிதி விஷயங்களிலும் தலையிடுவது தடுக்கப்பட்டது. அரச ஆணைகளைப் பதிவு செய்து, நீதி வழங்குவது, இவைகள் மட்டுமே அதனுடைய வேலை என்று திட்டவட்டமாக நிர்ணயிக்கப்பட்டது. பிரபுக்கள் தங்கள் அரசியல் உரிமைகளையெல்லாம் இழந்து, அரசரின் அதிகாரத் திற்கு உட்படுத்தப்பட்டார்கள். அரசரின் அதிகாரம் வலுப் படுத்தப்பெற்று, பதினான்காம் லூயியின் எதேச்சாதிகார ஆட்சிக்கு வழி வகுக்கப்பட்டது. இந்த ஃபிராண்டே கிளர்ச்சிகள்தான் பதினான்காம் லூயியின் வருங்காலக் கொள்கைகளை உருவாக்கின

என்று கூறலாம். ஏனெனில், அரசனின் அதிகாரத்திற்குப் பிரபுக்களால் ஏற்பட்ட தொல்லேகளை மனதில் கொண்டுதான் பதினுன்காம் லூயி தன் ஆட்சி முழுவதிலும் மன்னர் அதிகாரம் மேலோங்கிநிற்கத் தேவைப்பட்ட நடவடிக்கைகளை மேற்கொண்டார். நிலமானியப் பிரபுக்கள் அரசனுக்கு எதிராகச் செய்துவந்த போர்களில் இதுதான் கடைசிப்போர் என்றுகூறலாம். பிரபுக்களின் கிளர்ச்சிகளின் விளைவாக ஏற்படும் அமைதியற்ற குழப்பச் சூழ்நிலையிலிருந்து நாடு தப்பவேண்டுமானல் அரசருடைய வலிமை பொருந்திய ஆட்சி ஏற்படவேண்டும் என்று மக்கள் உணர ஆரம்பித்தனர். கிளர்ச்சியில் ஈடுபட்டப் பிரபுக்களிடையே ஒற்றுமை இல்லை. பல வேறுபட்ட நோக்கங்கள் கொண்டு இவர்கள் போராடினர்கள். இவர் நாட்டுப் பற்றில்லாத பேராசை கொண்ட, தன்னலவாதிகள். எனவே, இவர்கள் தோல்வி அடைந்ததில் வியப்பொன்றுமில்லை. மாசரின் 1653-ல் ஃபிரான்சிற்குத் திரும்பிவந்து மீண்டும் பதவி ஏற்றார். 1661-ல் இறக்கும்வரை ஃபிரான்சின் நிர்வாகம் அவர் கையில்தான் இருந்தது. இந்தக்காலத்தின் பெரும்பகுதி ஸ்பெயினுடன் போரிலேயே கழிந்தது. ஸ்பெயினுடன் போர் முடிவடைந்து பிரெனீஸ் உடன்படிக்கை கையெழுத்தாகி இரண்டு ஆண்டுகள் கழித்து மாசரின் இறந்தார். பதினுன்காம் லூயி நிர்வாகப் பொறுப்பைத் தானே ஏற்று ஃபிரான்சை ஆளத்தொடங்கினர்.

### அயல்நாட்டுக் கொள்கை

முப்பதாண்டுப் போரைத் தொடர்ந்து நடத்தினர் மாசரின். இவர் காலத்தில்தான் இரண்டு தலைசிறந்த தளபதிகள்—காண்டே இளவரசரும், டுரென் பிரபுவும் ஃபிரான்சின் சார்பில் இப் போரில் பங்கு கொண்டனர். பெல்ஜிய எல்லையில் 1643-ல் காண்டே, 'ராக்ராய்' போரில் (Rocroy) ஸ்பானியப் படைகளை முறியடித்தார். இது ஃபிரான்ஸ் இப் போரில் பெற்ற மாபெரும் வெற்றியாகும். ஐந்தாம் சார்லஸ் காலம் முதல் எவராலும் வெல்ல முடியாது என்று புகழ்பெற்ற ஸ்பானியக் காலாட்படை முதன் முறையாகத் தோற்கடிக்கப்பட்டது. 1648-ல் தளபதி காண்டே 'லென்ஸ்' (Lens) என்னும் போர்க்களத்தில் மற்ருெரு வெற்றியைப் பெற்ருர். உடனே ஆஸ்திரியா சமாதானம் செய்துகொள்ள முன்வந்தது. நீண்ட பேச்சுவார்த்தைகளின் விளைவாக வெஸ்ட் பேலிய சமாதானம் கையெழுத்தாயிற்று. இந்தச் சமாதானத்தின் மூலம் ஃபிரான்ஸ் அல்சேஸ் மாநிலத்தையும், மெட்ஸ், டூல், வெர்டன் ஆகிய பிஷப்புரிக்குகளையும் பெற்றதால் ரைன் ஆறு நோக்கி ஃபிரான்சின் எல்லை விரிவடைந்தது. பேரரசின் விவகாரங்களில் தலையிடும் வாய்ப்பு ஃபிரான்சுக்குக் கிடைத்தது. ஃபிரான்சின் செல்வாக்கும் புகழும் உயர்ந்தன. இவற்றிற்

கெல்லாம் மாசரின்தான் முக்கிய காரணம். ஆஸ்திரிய ஹாப்ஸ் பங்குகளுடன் சமாதானம் ஏற்பட்டது. ஆனால், ஸ்பானிய ஹாப்ஸ்பர்குகளுடன் சமாதானத்திற்கு ஒப்புக்கொள்ளவில்லை. எனவே, மாசரின் ஸ்பெயினுடன் போரைத் தொடர்ந்து நடத்தினர். இரு நாடுகளும் நீண்ட நாட்களாகப் போரில் ஈடுபட்டிருந்ததால் களைத்துப் போயிருந்தன. எனவேதான் "களைத்துப் போன குதிரைகளுக்கிடையே நடந்த பந்தயம்" என்று இப்போர் வர்ணிக்கப்பட்டுள்ளது.[1] மாசரின் தன் அரச தந்திரம் மூலம் ஸ்பெயின் மற்ற நாடுகளின் உதவி பெற முடியாமல் செய்து விட்டார். அப்பொழுது இங்கிலாந்து ஆலிவர் கிராம்வெல்லின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. அவருடைய போர்த் திறமையையும், இரும்புக் கவசம் அணிந்த போர் வீரர்களின் ஆற்றலையும் பற்றி அறிந்த மாசரின் இங்கிலாந்தின் உதவியைப் பெற விரும்பினர். ஸ்பெயினும் கிராம்வெல்லின் உதவியைக் கோரியது. ஸ்பெயினின் குடியேற்றங்களைப் பறித்துக்கொள்ளத் திட்டமிட்ட கிராம்வெல் இறுதியில் ஃபிரான்சுக்கு உதவி செய்ய மாசரினுடன் ஒப்பந்தம் செய்துக் கொண்டார். இதன்படி 'லாக்ஹார்ட்' (Lockhart) என்பருடைய தலைமையில் 6000 போர் வீரர்கள் கொண்ட கிராம் வெல்லின் புதுமாதிரிப் படை (New Model Army) ஃபிரான்சுக்கு உதவிபுரிய அனுப்பப்பட்டது. 1658-ல் ஸ்பானிய நெதர்லாந்தில் 'டியூன்ஸ் போரில்' (Battle of Dunes) லாக்ஹார்ட், டூரென் ஆகியவர்களின் படைகள் காண்டேயின் தலைமையிலான ஸ்பானியப் படைகளைத் தோற்கடித்தன. இந்த உதவிக்கு ஈடாக இங்கிலாந்து 'டன்கர்க்' (Dunkirk) நகரத்தைப் பெற்றது. தோல்வியுற்ற ஸ்பெயின் சமாதானம் செய்து கொள்ள முன்வந்தது. இவ்வாறு 'பிரனீஸ் உடன்படிக்கை' கையெழுத்தாகியது. ((Treaty of Pyrenees)

இந்த உடன்படிக்கை, வெஸ்ட்பேலியா சமாதானத்தின் தொடர்ச்சி என்று கூறலாம். வடக்கு எல்லையில் ஆர்டாய் மாநிலத்தையும், தெற்கில் ரூஸிலான் என்ற இடத்தையும் ஃபிரான்ஸ் பெற்றது. முப்பதாண்டுப் போரில் ஜெர்மனியையும், இப்போரில் ஸ்பெயினையும் தோற்கடித்து ஃபிரான்ஸ் ஐரோப்பாவில் முதலிடத்தைப் பெற்றது. ஃபிரான்சின் மதிப்பும் புகழும் மேலும் வளர்ந்தன. காண்டே மன்னிக்கப்பட்டு ஃபிரான்சுக்குத் திரும்பி வர அனுமதிக்கப்பட்டார். இவ்விரு அரச குடும்பங்களுக்கிடையே நட்புறவு வலுப்பெற திருமண ஒப்பந்தமும் செய்துகொள்ளப் பட்டது. ஸ்பெயின் அரசர் நான்காம் பிலிப்பின் மகள் 'மரிய

[1] 'Race between tired horses'—Europe, The Story of Last Five centuries —A.J. Grant, page 571.

தெரசாவிற்கும்' (Maria Theresa) ஃபிரான்சின் அரசர் பதினான்காம் லூயியிக்கும் திருமணம் நடந்தது. தன் மனைவியின் மூலம் ஸ்பானிய அரியணைமீதோ, ஸ்பானியப் பகுதிகளின்மீதோ எந்தவித உரிமையும் கொண்டாடுவது இல்லை என்று பதினான்காம் லூயி உறுதி அளித்தார். இதற்கு ஈடாக ஸ்பெயின் அரசர் ஒரு பெரிய தொகையைச் சீதனமாக லூயியிக்கு அளிக்கச் சம்மதித்தார்.[1] இந்த உடன்படிக்கை மாசரினுக்குப் பெரும் வெற்றியாகும். இது கையெழுத்தாகி இரண்டு ஆண்டுகளில் மாசரின் மரணம் அடைந்தார்.

ஃபிரான்சிற்கும் ஸ்பெயினுக்குமிடையே நிலவிவந்த பகைமை உறவு முடிவடைந்து நெருங்கிய நட்புறவு தொடங்கியது இந்த உடன்படிக்கைக்குப் பிறகுதான். இச்சமாதானத்தின் விளைவாக ஃபிரான்ஸ் வடக்குத் திசையைத் தவிர மற்ற திசைகளில் இயற்கை எல்லையைப் பெற்றது (பிரன்னீஸ், ஆல்ப்ஸ்). ஸ்பெயினின் ஆதிக்கம் மறைந்து ஃபிரான்சின் புகழ் வளரத் தொடங்கியது.

### மதிப்பீடு

பிரபுக்களை அடக்கும் முயற்சியில் இவர் வெற்றி கண்டாலும், இவருடைய உள்நாட்டுக் கொள்கை வலிவிழந்து காணப்பட்டது. இவருடைய நிதி நிர்வாகத்தில் ஊழல்கள் மலிந்திருந்தன. இவர் ஏராளமான செல்வம் ஈட்டுவதிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தார். பொதுமக்களின் முன்னேற்றத்திற்காகவோ, நாட்டின் இலக்கிய, கலை வளர்ச்சிக்காகவோ இவர் ஒன்றும் செய்யவில்லை. அரச தந்திரத்தில் இவர் கைதேர்ந்தவர். வெஸ்ட்பேலியா, பிரன்னீஸ் உடன்படிக்கைகள் இதற்கு எடுத்துக்காட்டுகளாகும். ரிசெல்யூவைப் போல வன்முறையையும், படை வலிமையும் மட்டும் நம்பி இராமல், அரச தந்திரம் மூலமும், தன் புத்திசாதுரியத்தாலும் (tact) காரியங்களைச் சாதித்துக் கொண்டார். உள்நாட்டுத் துறையைவிட வெளிநாட்டு உறவுத்துறையில் இவருடைய சாதனைகள் மகத்தானவை.

### பதினான்காம் லூயியின் ஆட்சி (1661-1715)

1661-ல் மாசரின் இறந்தவுடன் அடுத்து முதலமைச்சர் பதவியை, யார் ஏற்பது என்ற கேள்வி மக்களிடையே எழுந்தது.

[1] ஸ்பெயினின் நிதிநிலைமை காரணமாக இந்தப் பெரும் தொகையை ஸ்பெயின் அரசரால் கொடுக்க முடியவில்லை. சீதனம் கொடுக்கப்படாததால் தான் அளித்த வாக்குறுதி தன்னைக் கட்டுப்படுத்தாது என்று வாதிட்டு, பதினான்காம் லூயி பின்னர் ஸ்பெயின் அரசுரிமையைக் கொண்டாடினார். இதுவே ஸ்பானிய வாரிசுரிமைப் போர் ஏற்படக் காரணமாக இருந்தது.

பதினன்காம் லூயி தாமதம் ஏதுமின்றி இதற்கு ஒரு விடையளித்தார். ஆட்சிப் பொறுப்பைத் தாமே நேரடியாக ஏற்று, முதலமைச்சர் பொறுப்பையும் தாமே மேற்கொள்ளப் போவதாக அறிவித்தார்; தம்முடைய நீண்ட ஆட்சி முழுவதிலும் உள்நாட்டு அயல்நாட்டுக் கொள்கைகளைச் செயல்படுத்தும் பொறுப்பைத் தம்மிடமே வைத்திருந்தார்.

பதினன்காம் லூயி ஆட்சிப் பொறுப்பை ஏற்றபொழுது, ஐரோப்பாவில் போர்கள் ஓய்ந்து அமைதி நிலவியது. இங்கிலாந்தில் முடியாட்சி ஏற்பட்டு இரண்டாம் சார்லஸ் பட்டம் எய்தியது, ஸ்வீடன், டென்மார்க் ஆகிய நாடுகளில் வலிமை பொருந்திய முடியாட்சி ஏற்பட்டது, ரிசெல்யூ, மாசரின் அவர்கள் கடைப்பிடித்த கொள்கைகள் — இவையாவும் ஃபிரான்சில் அரசனின் அதிகாரம் வலுப்பெறுவதற்குச் சாதகமாக இருந்தன. ஃபிரான்சின் எதிரியான ஸ்பெயின் பிரன்னீஸ் உடன்படிக்கைக்குப் பிறகு தன் வலிமையையும் செல்வாக்கையும் இழந்தது. நாடு சுபிட்ச நிலையிலிருந்தது மட்டுமன்றி, மக்களும் அரசனுக்கு முழு ஆதரவு அளித்தார்கள். பிராடஸ்டென்டுகளின் கிளர்ச்சிகளோ, பிரபுக்களின் புரட்சிகளோ கடந்தகால நிகழ்ச்சிகளாகி விட்டன. நாட்டின் பாராளுமன்றம் செல்வாக்கை இழந்து காணப்பட்டது. ஸ்தல ஆட்சி நடுத்தர வகுப்பைச் சேர்ந்த அதிகாரிகளால் அரசனின் கட்டுப்பாட்டிற்குட்பட்டு நடத்தப்பட்டு வந்தது. இந்தச் சாதகமான சூழ்நிலையில் பதினன்காம் லூயியின் காலத்தில் ஃபிரான்சின் புகழ் மேலும் வளர்ந்து ஃபிரான்சின் வரலாற்றில் ஒரு புது சகாப்தம் உருவாகியது. டியூடர்கள் ஆட்சியில் நீண்டகால உள்நாட்டுப் போர்களிலிருந்து இங்கிலாந்து விடுதலை பெற்று, அமைதி ஒழுங்கு நிலவியதுபோல் பதினன்காம் லூயியின் ஆட்சியில் ஃபிரான்ஸ் உள்நாட்டுப் போர்களிலிருந்தும், வெளிநாட்டுப் படையெடுப்பிலிருந்தும் பாதுகாக்கப்பட்டு, அமைதியான முன்னேற்றத்திற்கு வழிவகுக்கப்பட்டது.

'மாபெரும் மன்னர்' (The Grand Monarch) என்று வரலாற்றில் அழைக்கப்பட்ட பதினன்காம் லூயி 1638-ல் பிறந்தார். 1643-ல் ஃபிரான்சின் அரியணை ஏறிய இவர் 1661 வரை பெயரளவில் மட்டும் அரசராக இருந்தார். அப்பொழுது நாட்டின் ஆட்சிப் பொறுப்பை முதலமைச்சர் கார்டினல் மாசரின் ஏற்றிருந்தார் என்பதை முன்பு கூறியுள்ளோம். நல்ல உடற்கட்டும், கவர்ச்சியான தோற்றமும், பெற்றிருந்த லூயி, மற்றவர் மனம் புண்படாமல் பழகும் தன்மை பெற்றிருந்தார். அவருடைய நடை, உடை, பாவனை 'அனைத்திலும் அரசர்களுக்குத் தேவை

யான கம்பீரமும், கண்ணியமும் காணப்பட்டன. கல்வியறிவு மிக்கவர் என்றோ,[2] சிறந்த போர் வீரர் என்றோ இவரைக் கருத முடியாதாயினும், இவருடைய தாயும், அமைச்சர் மாசரினும் அரசனின் கடமைகள் பற்றியும். அவன் ஆற்ற வேண்டிய பணிகள் பற்றியும், அவருக்கு எடுத்துக்கூறி அப் பதவிக்குத் தகுதி பெற்றவராகச் செய்தனர். அவருடைய பாட்டனுரான நான்காம் ஹென்றியின் சாதனைகளைச் சுட்டிக்காட்டி, அவர் போலவே இவரும் விளங்க வேண்டும் என்று எடுத்துக் கூறினுர்கள். ஆட்சிப் பொறுப்பை ஏற்றது முதல் இவர் அரச காரியங்களில் மிக்க அக்கரை கொண்டு, மெய்வருத்தம் பாராமலும், பசி நோக்காமலும், கண்துஞ்சாமலும், தன் கடமைகளைச் செய்வதில் பெருங்கவனம் செலுத்திக் கடமை வீரராக விளங்கினுர்.

மன்னனின் எதேச்சாதிகாரம் என்ற கோட்பாடு இவர் காலத்தில்தான் முழுமை பெற்றது, இவர் ஆட்சி முறையின் அடிப்படையாக விளங்கிய இந்தக் கொள்கை 'பாஸே' (Bossuet) என்ற ஃபிரெஞ்சுப் பிரபு ஒருவரால் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. இதன்படி அரசு என்பது கடவுளால் விதிக்கப்பட்ட ஓர் ஏற்பாடு. முடியாட்சி முறைதான் ஆட்சி முறைகளிலேயே சிறந்தது. அரசர், ஒரு குடும்பத்தின் தலைவரான தந்தையைப் போன்றவர், அவருடைய அதிகாரம் எந்த வரம்புக்கும் உட்பட்டதன்று. தம் செய்கைகள் யாவற்றிலும் அரசர் கடவுளுக்குத்தான் பொறுப்பாளியாகிறுர். இவ்வாறு லூயியின் முடியாட்சி வரம்புகடந்த அதிகாரத்தைப் பெற்றதோடு மட்டும் அல்லாமல், தெய்வீக உரிமைக் கொள்கையின் அடிப்படையில் அமைந்திருந்தது. ஃபிரெஞ்சு மக்கள் இக் கொள்கையை ஏற்றுக்கொண்டதோடு மட்டுமன்றி, ஃபிரான்ஸ் ஐரோப்பாவின் முன்னணியில் இருந்த நாடாகையால், மற்ற ஐரோப்பிய மக்களும், ஃபிரான்சைப் பின்பற்றி இக் கொள்கையை ஏற்றுக்கொண்டனர். எனவே, ஃபிரெஞ்சுப் புரட்சி தோன்றும்வரையில் ஏறக்குறைய ஒரு நூற்றுண்டிற்கு ஐரோப்பிய அரசியலில் செல்வாக்குப் பெற்றிருந்த இந்தத் தெய்வீக உரிமைக் கோட்பாடு பதினுன்காம் லூயியின் ஆட்சியில் உருப்பெற்றது.[3] அதிகாரம் முழுவதும் மத்திய அரசாங்

[2] பிலிப்ஃபோர்டின் (Philip Fortin) என்பவர் இவருக்குக் கல்வி கற்பிக்க ஆசிரியராக நியமிக்கப்பட்டார். வரலாறு, நிலவியல், புராணவியல் ஆகியவை பற்றிப் புதிய முறையில் இவருக்கு அறிவு புகட்டப்பட்டது. லத்தின் மொழியும், கணித பாடமும் கற்றுக்கொடுக்கப்பட்டன. எனினும் கல்வியில் மிகுந்த தேர்ச்சி பெற்றவர் என்று இவரைக் கருத முடியாது. லூயிக்கு எழுதப் படிக்கமட்டும்தான் தெரியும் என்ற செயின்ட் சைமனின் கூற்று சரியன்று—Europe in the 17th century—David Ggg—page 282.

கத்திடம் குவிக்கப்பட்டு, சிறந்த நிர்வாக முறையும் இவர் ஆட்சியில்தான் உருவாக்கப்பட்டது. இவர் ஒருமுறை 'நானே அரசு (I am the State) என்று கூறியது இவர் பெற்றிருந்த எதேச்சாதிகாரத்தையும், அரசர்தான் எல்லா அதிகாரத்திற்கும் பிறப்பிடம் என்பதையும் உணர்த்துகிறது.

லூயியின் நிர்வாக முறை

லூயியின் வரம்புகடந்த முடியாட்சியில் அரசர், நிர்வாக முறையின் மையமாகவும், அதிகாரத்தின் பிறப்பிடமாகவும் விளங்கினர். அமைச்சர்களுக்கு நிர்வாகத்தில் முன்போல முக்கிய பங்கு ஒன்றுமில்லை. அரசின் கொள்கைகளை உருவாக்கும் உரிமை அரசனுடையது. அரசரின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து, அவற்றைச் செயல்படுத்தும் கடமை அமைச்சர்களைச் சார்ந்தது. அமைச்சர்கள் முற்றிலும் அரசருக்குக் கட்டுப்பட்ட அரசரின் ஊழியர்களே அன்றி அவர்களுக்குச் சுதந்திரமாகச் செயல்படும் உரிமை கிடையாது. சமூக அந்தஸ்தைவிட உழைப்பு, நேர்மை, புதுமையைப் புகுத்தும் ஆற்றல்போன்ற பண்புகளைத்தான் தன்னுடைய அமைச்சர்களிடம் எதிர்பார்த்தார். நாட்டின் பாராளுமன்றத்திற்கு, ஆட்சியில் ஒரு பங்கும் கிடையாது. ஏனெனில், அது கூட்டப்படவே இல்லை! பார்லிமெண்டுகள் போன்ற நீதி மன்றங்களும், மாநில, நகரப் பொறுப்பேற்ற நிறுவனங்களும் அரசரின் கட்டுப்பாட்டிற்குட் படுத்தப்பட்டன. 'Council of State', 'Council of Despatches', 'Council of Finance' and the 'Privy Council' என்ற நான்கு குழுக்களின்மூலம் நாட்டின் நிர்வாகம் நடத்தப்பட்டது. இவற்றுள் 'Council of State' என்னும் குழு முதன்மையானது. இன்டென்டண்டுகள் நாட்டின் நிர்வாக அமைப்பில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருந்தார்கள். நாட்டின் நிர்வாக அமைப்பில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருந்தார்கள். நாட்டின் நிர்வாகம், நிதி, படை, பொதுப் பணிகள், கடற்படைபோன்ற பல துறைகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு துறையும், மன்னரால் நியமிக்கப்பட்ட அமைச்சரின் பொறுப்பில் விடப்பட்டது. 'Secretaries of State' என்றழைக்கப்பட்ட இந்த அமைச்சர்களுள், வெளிநாட்டுறவு, போர், அரசர் அவை, திருச்சபை ஆகிய துறைகளைக் கவனித்துவந்த அமைச்சர்கள் முக்கியமானவர்கள். இதுபோன்ற நிர்வாக முறையில் அரசரின் பொறுப்புகள் அதிகமாகி, அரசர் ஓய்வின்றி

[3] Thanks to Louis XIV, France acquiesead in the doctrine, thanks to the new predominance of France in Europe, other continental people imitated the French and endorsed the principle of divine right monarchical absolutism. The era of Louis XIV thus sanctioned a political doctrine which was to dominate most of Europe for a century and until the French Revolution—Modern Europe to 870—C. J. H. Hayes, page 255.

அரச காரியங்களிலேயே தமது கவனம் முழுவதையும் செலுத்த வேண்டியதாயிற்று. அரசர் சூரியனைத் தமது சின்னமாக வைத்துக்கொண்டார். இவ்வுலகில் வாழும் எல்லா உயிர்களுக்கும் சூரியன் ஒளியையும், உயிரையும் தருவதுபோல் தாமும் விளங்கவேண்டும் என்று எண்ணினார். மேயர்கள் அதுவரை தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தார்கள். ஆனால், லூயியின் ஆட்சியில் மேயர்கள்கூட அரசரால் நியமிக்கப்பட்டார்கள். திருச்சபையின் பதவிகளுக்கும், அரசர் ஆட்களையே நியமித்து அதையும் தன்னுடைய கட்டுப்பாட்டிற்குட்படுத்திக் கொண்டார். இவ்வாறு 'வரம்பு கடந்த முடியாட்சி' (Absolute Monarchy) நிறுவப்பட்டது. நாட்டின் பல்வேறு துறைகளைத் திறம்படநிர்வாகம் செய்ய அரசர் பல வல்லுநர்களின் உதவியைப் பெற்றார். 'லியான்' (Lionne) என்ற அமைச்சர் ஃபிரான்சின் அயல்நாட்டு உறவுத் துறையைத் திறம்பட நடத்தப் பேருதவியாக இருந்தார். 'மைக்கேல் டெல்லியர்' (Michalle Tellier), 'லுவாய்' (Louvois) என்ற இருவரும், படைத்துறை நிர்வாகத்தில் கைதேர்ந்தவர்கள். அவர்கள் லூயியின் படைத்துறை அமைச்சர்களாகப் பணியாற்றி ஒரு தலைசிறந்த படையை நிறுவினார்கள். 'வாபன்' (Vauban) என்ற போர்த்துறை பொறியியல் வல்லுநர் ஒருவரும், 'காண்டே', 'டுரென்' (Conde, Turenne) ஆகிய தளபதிகளும் இவர் ஆட்சியில் வாழ்ந்தவர்கள். இவர்கள் எல்லோரையும்விட லூயியின் நிதி அமைச்சராகப் பணியாற்றிய 'கால்பர்ட்' (Colbert) என்பவரின் பணி மிக மகத்தானதாகும்.

### கால்பர்ட்டின் சீர்திருத்தங்கள்

1661 வரை நிதித் துறையை 'நிக்கலஸ் ஃபொக்கே' (Nicholas Fouquet) என்பவர் கவனித்து வந்தார், அந்தப் பதவியிலிருந்த பொழுது சட்ட விரோதமான வழிகளில் ஏராளமான செல்வம் சம்பாதித்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு 1661-ல் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். இந்தப் பதவிக்குக் கால்பர்ட் நியமிக்கப்பட்டார். 'ஜீன் கால்பர்ட்' (Jean Colbert) நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு வியாபாரியின் மகன். மாசரினின் கீழ்ப் பணியாற்றி, அவரிடம் சிறந்த பயிற்சி பெற்றார். லூயியின் ஆட்சியில் இவர் பொதுப் பணிகள், நிதி, கடற்படை, வியாபாரம், விவசாயம், குடியேற்றங்கள் போன்ற பல்வேறு துறைகளின் அமைச்சராகப் பணிபுரிந்து நாட்டு நிர்வாகத்தில் பல்வேறு துறைகளில் நல்ல தேர்ச்சிபெற்றார். ரிசெல்யூவைப்போன்றோ, மாசரின்போன்றோ, சுதந்தரமாகச் செயல்படும் அதிகாரம் இவர் பெற்றிருக்கவில்லையாயினும், அரசரின் நம்பிக்கைக்குப் பாத்திரமானார். தம்முடைய அயரா உழைப்பினால் நாட்டின் பொளாதாரத்தைச் சீர்ப்படுத்திச் செல்வ வளத்தைப் பெருக்கினார்.

கால்பர்ட் முதலில் நாட்டின் நிதித் துறையைச் சீர்படுத்தும் பணியை மேற்கொண்டார். ரிசெல்யூ, மாசரின் ஆகியோர் அமைச்சர்களாக இருந்த காலத்தில் நிதித் துறையில் ஊழல்கள் மலிந்திருந்தன. வரி வசூல்செய்யும் முறையில் பல குறைபாடுகள் காணப்பட்டன. குறிப்பாக, வரி வசூல்செய்யும் அதிகாரம் தனிப்பட்ட நபர்களிடமோ அல்லது ஒரு குழுவினிடமோ ஒப்படைக்கப்பட்டதால் (Farming of Taxes) அவர்கள் மக்களிடமிருந்து ஏராளமான பணத்தை வசூலித்து, சிறு தொகையை மட்டுமே அரசிற்குச் செலுத்தினுர்கள். வரி வசூலிக்கும்பொழுது மக்களுக்குப் பல கொடுமைகள் இழைக்கப்பட்டன. பிரபுக்களும், மதகுருமார்களும், வரி செலுத்துவதிலிருந்து விலக்களிக்கப்பட்டு, பொது மக்கள்மீது வரிச்சுமை முழுவதும் விழுந்தது. நாட்டின் செலவினங்களும் அதிகமாக இருந்தன. கால்பர்ட் புதிய வரிகள் ஒன்றும் விதிக்காமலேயே, வரி வசூல்செய்யும் முறையைச் சீர்திருத்தியும், மற்ற பல சீர்திருத்தங்களைப் புகுத்தியும், நாட்டின் நிதி நிலைமையைச் சீர்படுத்தினுர். வரி வசூல்செய்யும் முறைகளில் காணப்பட்ட குறைபாடுகள் அகற்றப்பட்டன. வரி வசூல் வேலையைக் கண்காணிப்பதற்கு நேர்மையான அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். அரசை ஏமாற்றி வந்த வரிவசூல் அதிகாரிகள் தண்டிக்கப்பட்டு, பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். குடியானவர்கள்மீது விதிக்கப்பட்ட 'Taille' என்னும் நில வரி குறைக்கப்பட்டு, பிரபுக்கள்மீது பலவகையான மறைமுக வரிகள் விதிக்கப்பட்டன. ஏழைக் குடியானவர்களுக்கு வரிச்சுமையிலிருந்து நிவாரணம் அளித்து, விவசாயம் செழிப்பதற்கான உதவிகளைச் செய்தார். கடனுக்கு ஈடாகக் குடியானவர்களின் விவசாயக் கருவிகள் பறிக்கப்படும் வழக்கத்தை ஒழித்தார். குடியானவர்கள் குதிரை, ஆடு, மாடு, வளர்க்கும் திட்டத்திற்கு ஆதரவு அளித்தார். கப்பல் கட்டும் தொழிலுக்கு மரம் தேவைப்பட்டதால் காடுகளை அபிவிருத்தி செய்வதில் அக்கறை காட்டினுர். இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டதன் விளைவாக நாட்டின் வருவாய் அதிகரித்தது. நாட்டின் கடன்சுமை குறைந்து, கருவூலத்தில் பணம் மிச்சப்படுத்தப்பட்டது. முதன்முதலாக, அரசாங்கத்தில் வரவு செலவுத் திட்டம் (Budget) தயார்செய்யும் முறை மேற்கொள்ளப்பட்டது. நாட்டின் நிதிக் கணக்கு தணிக்கை செய்யப்பட்டது. நாட்டின் மொத்த வருவாய், செலவினங்களைக் குறித்து வைக்க 'ரொக்கப் புத்தகம்' (Cash book) வைக்கும் முறை பின்பற்றப்பட்டது. 1661-ல் 'இருபத்திரண்டு மில்லியன் ஃபிராங்குகள்' (22 Million Francs) பற்றுக்குறையாக இருந்த நிலையை, 1667-ல் முப்பது மில்லியன் ஃபிராங்குகள் சேமிக்கக்கூடிய நிலைக்கு மாற்றியது இவருடைய நிதி நிர்வாகத் திறமையை எடுத்துக்

காட்டுகின்றது. அரசருடைய 'ஆடம்பரச் செலவுகள் இல்லை யென்றால் இன்னும் அதிகமான தொகையை இவரால் சேமித் திருக்க முடியும்.

இரண்டாவதாக, இவர் தொழில் வர்த்தகத் துறையில் சீர்திருத்தப் பணியை மேற்கொண்டார். கடற்படை, வியாபாரம், குடியேற்றங்கள், ஆகியவற்றின் முக்கியத்துவத்தைப் பற்றியும், நீதி நிர்வாகத்தைப்பற்றியும், சாலைகள், ஆறுகள், கால்வாய்கள் மூலமாக, போக்குவரத்துச் சாதனங்களை அபிவிருத்தி செய்வது பற்றியும், இவரைப்போல தெளிவான கருத்துகள் இதற்குமுன் யாரும் பெற்றதில்லை என்று ஒரு வரலாற் றறிஞர் கூறுகின்றார்[1]. ஒரு நாட்டின் பெருமை அந்நாட்டின் செல்வத்தைப் பொறுத்திருக்கின்றது, நாட்டின் செல்வம் மக்களின் உழைப்பைப் பொறுத்திருக்கின்றது என்று ஒரு சமயம் அவர் கூறினார். இதேபோல ஒரு நாட்டின் வலிமையைப் போர் வீரர்கள் அணியும் பகட்டான சீருடையைக் கொண்டு அளவிட முடியாது; தொழில், வியாபாரம், விவசாயம் போன்றவைதான் நாட்டின் வலிமைக்குச் சரியான அளவுகோல் என்பது இவர் வலியுறுத்திய மற்றொரு கருத்தாகும்[2]. எனவே, இம் மூன்று துறைகளையும் ஊக்குவித்தார். இதுவரை ஃபிரான்ஸ் தொழில் வளம் இல்லாத நாடாக இருந்தது. தனக்குத் தேவைப்பட்ட உற்பத்திப் பொருள்களை அண்டை நாடுகளிலிருந்து இறக்குமதி செய்தது. இந்த நிலையை மாற்றி, ஃபிரான்சைத் தொழில்வளம் மிக்க நாடாக ஆக்கவேண்டும் என்பது கால்பர்ட்டின் நோக்கம். இங்கிலாந்து, ஹாலந்து, இத்தாலி போன்ற நாடுகளிலிருந்து தொழில் நிபுணர்களையும், தொழிலாளிகளையும் வரவழைத்து ஃபிரெஞ்சு மக்களுக்குத் தொழில் துறையில் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்தார். 'காலுறை' (Stockings) தயாரித்தல், பட்டு நெசவு, கண்ணாடித் தொழில் போன்ற புதிய தொழில்களைத் துவக்கப் பொருளுதவி செய்து ஆக்கம் அளித்தார். தொழி லாளர்கள் ஃபிரான்சைவிட்டு வெளியேறுவது தடுக்கப்பட்டது. நாட்டுத் தொழில்கள் நசித்துப் போகாமல் இருக்க, 'காப்புக் கொள்கையைக்' (Protection) கடைப்பிடித்தார். அதாவது அயல் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள், உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்குப் போட்டி யாக இருப்பதைத் தடுக்க, இறக்குமதிப் பொருள்கள்மீது 'காப்பு

[1] M. JUSSERAND as quoted by H. A. L. Fisher in his History of Europe, page 664.

[2] A History of Europe, H.A.L. Fisher, page 664.

வரி' விதிக்கப்பட்டது (Protective Tariff). இதன்மூலம் இறக்கு மதிகள் குறைக்கப்பட்டன. இவர் சீர்திருத்தங்களில் மிகவும் புகழ்பெற்றது காப்பு வரிக்கொள்கை. இவரே இக்கொள்கையின் தந்தை என்று கருதப்படுகிருர்.

அயல்நாட்டு வியாபாரத்தைப் பெருக்குவதற்காக அதில் ஈடுபட்டிருந்த வியாபாரக் கப்பல்களுக்குப் பொருளுதவி வழங்கப் பட்டது. ஐரோப்பாவின் அயல்நாட்டு வியாபாரம் முழுவதும் இங்கிலாந்து ஹாலந்து நாடுகளின் கையில் இருந்தது. இதற்காக அந்நாடுகள் வியாபாரக் கம்பெனிகளை நிறுவியிருந்தன. கால்பர்ட் அம்முறையைப் பின்பற்றி அயல்நாட்டு வியாபாரத்தை நடத்த பல ஃபிரெஞ்சு வியாபாரக் கம்பெனிகளை நிறுவினுர். கிழக்கு நாடுகளுடன் வியாபாரம் செய்ய 'வடக்குக் கம்பெனி' (Northern Company) ஒன்றும், துருக்கியுடன் வியாபாரம் செய்ய 'லெவண்ட் கம்பெனியும்' (Levant Company), அமெரிக்கா, மேற்கிந்தியத் தீவுகளுடன் வாணிபத்திற்காக மேற்கிந்தியக் கம்பெனியும்' (French West India Company) ஆப்பிரிக்காவுடன் வர்த்தகம் செய்ய 'ஃபிரெஞ்சு ஆப்பிரிக்கக் கம்பெனி' (The French African Company) என்ற மற்ருெரு கம்பெனியும் துவக்கப்பட்டன. உள்நாட்டு வியாபாரத்தை வளர்க்க, போக்குவரத்து வசதிகள் பெருக்கப்பட்டன. ஏராளமான புதிய சாலைகள் அமைக்கப்பட்டு, பல கால்வாய்களும் வெட்டப்பட்டன.

நாட்டின் தொழில் வளமும், வர்த்தகமும் பெருக நாட்டிற்கு ஒரு சிறந்த கடற்படை தேவை என்பதைக் கால்பர்ட் நன்கு உணர்ந்தார். துறைமுகங்கள் புதுப்பிக்கப்பட்டன. பல புதிய துறைமுகங்களும், கப்பல் கட்டும் கூடங்களும், நிறுவப்பட்டன. 'ரோச்போர்ட்' (Rocheport) 'கலே' (Calais), 'பிரெஸ்ட்' (Brest), 'ஹாவ்ரே' (Havre) போன்ற இடங்களில் இவை நிறுவப்பட்டன. இங்கிலாந்து, ஹாலந்து நாட்டுக் கடற்படையுடன் ஒப்பிடக் கூடிய ஒரு படையைக் கால்பர்ட் நிறுவினுர். கடற்கரைப் பகுதியில் வசித்த மக்கள் இக் கடற்படையில் பணியாற்ற. கட்டாயமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஃபிரான்சின் வியாபாரம் தழைக்கக் குடியேற்றங்களின் அவசியத்தை உணர்ந்த கால்பர்ட், குடியேற்றங்களை நிறுவும் பணியில் ஈடுபட்டார். ஃபிரான்சில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் குடியேற்றங்களில் விற்கப் பட்டன. மேற்கிந்தியத்தீவுகளில் 'மார்டினிக்' (Martinique) 'குவாடிலூப்! (Guadeloupe) போன்ற இடங்கள் விலைக்கு வாங்கப்
பட்டன. மேற்கிந்தியத் தீவுகளில் 'மார்டினிக்' (Martinique) 'குவாடிலூப்' (Guadeloupe) போன்ற இடங்கள் விலைக்கு வாங்கப்

பட்டன. 'சான் டாமிங்கோ' (San Domingo), கனடா, 'லூசியானு' (Louisiana) பகுதிகளில் புதிய குடியேற்றங்கள் அமைக்கப்பட்டன. இந்தியா, 'செனிகல்' (Senegal), 'மடகாஸ்கர்' (Madagascar) போன்ற இடங்களிலும், முக்கிய வியாபார ஸ்தலங்கள் ஏற்படுத்தப்பட்டன. மற்ற ஐரோப்பிய நாடுகளுடன் ஃபிரான்ஸ் காலனி ஆதிக்கப்போட்டியில் இறங்கியது.

இவ்வாறு கால்பர்ட் விவசாய, தொழில், வர்த்தகத்துறைகளில் கடைப்பிடித்த பொருளாதாரக் கொள்கை 'கால்பர்டிசம்' (Colbertism) என்று குறிக்கப்படுகிறது. இது பதினேழு, பதினெட்டாம் நூற்றுண்டுகளில் ஐரோப்பாவில் செல்வாக்கு பெற்றிருந்த 'மெர்கண்டிலிசம்' (Mercantilism) என்ற பொருளாதாரக் கொள்கையை ஒத்திருந்தது[1].

இவை தவிர இன்னும் சில சீர்திருத்தங்களையும் கால்பர்ட் செய்தார். சிவில், கிரிமினல் பிரிவுகளில் ஒரே மாதிரியான சட்டம் நாடு முழுவதிலும் பின்பற்றப்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் கால்பர்ட்டின் வேண்டுகோளுக்கிணங்க பதினுன்காம் லூயி

[1] ஒரு நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் குறிப்பாக தொழில், வர்த்தகத் துறைகளில்—அரசு தலையிட்டு, சட்டதிட்டங்கள் மூலமாக ஒழுங்குபடுத்தும் ஒரு முறைதான் 'மெர்கண்டிலிசம்' என்று அழைக்கப்படுகிறது. இந்த முறையின்படி ஒவ்வொரு நாடும் இயன்ற அளவு வெள்ளி, தங்கம், ஆகிய உலோகங்களைத் தன் கையில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று விரும்பியது. ஏனெனில் இவைதான் ஒரு நாட்டின் செல்வமாகக் கருதப்பட்டது. இந்த நோக்கம் நிறைவேறுவதற்கு ஏற்றவகையில் ஒரு நாட்டின் தொழிலும், வியாபாரமும் அரசினுல் ஒழுங்குபடுத்தப் பட்டன. காப்பு வரிகள் விதிப்பது, சில பொருள்களின் ஏற்றுமதியைத் தடை செய்வதுபோன்ற நடவடிக்கைகள் சில சமயங்களில் அவசியமாயின. மேலும் ஒவ்வொரு நாடும், இயன்ற அளவு வெள்ளி, தங்கத்தைப் பெறவேண்டும் என்று விரும்பியதால் உலக நாடுகளுக்கிடையே பொருளாதார உறவு பாதிக்கப்பட்டு, போட்டிகளும், ஆக்ரமிப்புப் போர்களும் ஏற்பட இக் கொள்கை காரணமாக இருந்தது.

"The fundamental principle of mercantilism is that because money generally constitutes wealth and since there is always a definite amount of money in circulation, it is the interest of each country to acquire as much as possible of that fixed fund. From this it was deduced that national prosperity must be at the expense of foreigners and so aggressive war found some justification, since it was assumed always that military success brings direct advantage at the expense of the enemy. In a sense, therefore, mercantilism was protective, but it tended also to be aggressing because it emphasised only the exculusive and competitive elements in the economic relations of the states." Europe in the 17th Century, David Ogg., page 289. Modern Europe to 1870—C.J.H. Hayes, page 88-89.

பல ஆணைகளைப் பிறப்பித்தார். இந்த ஆணைகள் தொகுக்கப்பட்டு லூயியின் 'சட்டத் தொகுப்பு' (Code Louis) என்று அழைக்கப் பட்டன. இலக்கிய வளர்ச்சிக்காக ரிசெல்யூவால் நிறுவப்பட்ட ஃபிரெஞ்சு அகாடமி (French Academy) என்ற கழகத்திற்குக் கால்பர்ட் ஆதரவு அளித்தார். இதுபோன்ற 'விஞ்ஞான அகாடமி' ஒன்றையும் (Academy of Sciences), பாரிஸ் நகரில் 'விண்ணியல் ஆராய்ச்சிக் கூடம்' ஒன்றையும் (astronomical observatory) நிறுவினர். பல எழுத்தாளர்களையும், கலைஞர்களையும், விஞ்ஞானிகளையும், அயல்நாடுகளிலிருந்து வரவழைத்து அவர்களை ஆதரித்தார். கட்டடங்கள் பலவும், வெற்றிச் சின்ன வளைவுகள் பலவும் இவர் காலத்தில் கட்டப்பட்டன. ஆனுல், தனியார் சுதந்தரம் பறிக்கப்பட்டுச் செய்தித்தாள்கள் கடுமையான தணிக் கைக்குள்ளாக்கப்பட்டன.

போர்களிலேயே நாட்டம் கொண்ட பதினுன்காம் லூயிக்கும் சமாதானத்தை விரும்பிய கால்பர்ட்டிற்குமிடையே கருத்து வேறுபாடுகள் தோன்ற ஆரம்பித்தன. 1672-ல் அவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். அவருடைய பொருளாதாரத் திட்டங்கள் எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை என்றுல் அதற்குக் கால்பர்ட் பொறுப்பு என்றே, அவருடைய திட்டங்களில் குறை பாடுகள் இருந்தனவென்றே கருதுவது பொருந்தாது. பதினுன் காம் லூயியின் ஆடம்பரச் செலவும், அவர் நாட்டைப் பல போர்களில் ஈடுபடுத்தியதும், செல்வம் கரையக் காரணமாக இருந்தன.

லூயியின் சமயக் கொள்கை

லூயி ஒரு தீவிர கத்தோலிக்கர் ஆவார். அவருடைய எதேச் சாதிகாரப் போக்கை நாம் மத விஷயங்களிலும் காண்கிறோம். நாட்டின் அரசியல் துறையில் மட்டுமன்றிச் சமயத்துறையிலும், தன் மேலதிகாரத்தை ஏற்படுத்தத் தீர்மானித்தார். இதன்படி கத்தோலிக்கத் திருச்சபை தன் ஆணையின்படிதான் நடக்க வேண்டு மென்று வற்புறுத்தினர். 'காலிகன் திருச்சபையின் உரிமைகளைப் பாதுகாக்கும் அறிக்கை' (Declaration of liberties of the Gallican Church) என்ற ஓர் அறிக்கை வெளியிடப்பட்டது (1682). 1. அரசரின் அதிகாரம் போப்பின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டது. 2. மத விஷயங்களில் போப்பைவிட பொதுக்குழுவிற்குத்தான் அதிக அதிகாரங்கள் உண்டு. 3. திருச்சபையில் போப்பும், பிஷப்பு களும் இணைந்து அதிகாரம் செலுத்த வேண்டும். 4. அரசர்களைப் பதவியிலிருந்து விலக்க போப்புகளுக்கு அதிகாரம் கிடையாது என்று அறிவித்தார். இதன் விளைவாகப் பதினுன்காம் லூயிக்கும் போப் 'பதினென்றும் இன்னசெண்டுக்கும்' (Innocent XI) இடையே

ஒரு சண்டை ஏற்பட்டது. இறுதியில் 1693-ல் இந்த அறிக்கையை லூயி திரும்பப் பெற்றார்.

கத்தோலிக்க சமயத்திலிருக்கும் ஊழல்களை அகற்றி அதை மேலும் தூய்மையாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் தொடங்கப்பட்ட 'ஜென்சனிஸம்' (Jansenism) என்ற ஓர் இயக்கத்தை லூயி ஒடுக்கினார். 'ஜென்சன்' (Jansan) என்ற பிஷப்பு ஒருவரால் தொடக்கப்பட்ட இந்த இயக்கத்தில், ஃபிரான்சின் புகழ்பெற்ற எழுத்தாளரான 'ராசீன்' (Jean Racine), விஞ்ஞான மேதை 'பாஸ்கல்' (Pascal) போன்றவர்கள் முக்கிய பங்கேற்றார்கள். இதிலிருந்து லூயியின் கத்தோலிக்க சமயப்பற்று நன்கு புலப்படுகின்றது.

கத்தோலிக்க சமயத்திற்குப் புறம்பான எந்தச் சமயமும் நாட்டில் வளரக்கூடாது என்பது இவருடைய கருத்து. அதன்படி ஃபிரான்சில் பிராடஸ்டென்டு சமயத்தை ஒழிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். நான்காம் ஹென்றி காலத்தில் நாண்டிஸ் ஆணை மூலம் ஹ்யூகோனுக்களுக்குப் (ஃபிரெஞ்சு பிராட்ஸ்டென்டுகள்) பல சலுகைகள் அளிக்கப்பட்டன என்பதை முன்பு கண்டோம். இவர்கள் எண்ணிக்கையில் குறைந்து இருப்பினும், நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு முக்கிய காரணமாக இருந்தார்கள். தொழில் வியாபாரத் துறைகளில் ஈடுபட்டுப் பெருஞ் செல்வம் ஈட்டினர். தீவிர கத்தோலிக்கரான இவரது மனைவி மாடம்-டி-மெயின்டினன்' (Madame de Maintenon) என்பவருடைய தூண்டுதலின் பேரில் இவர் ஃபிரான்ஸில் பிராட்ஸ்டென்டு சமயத்தை ஒழிக்கும் பணியை மேற்கொண்டார். முதலில் ஹ்யூகோனுக்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சலுகைகள் குறைக்கப்பட்டன. அவர்கள் அரசின் தீவிர கண்காணிப்புக்குள்ளாக்கப்பட்டார்கள். அவர்களுடைய ஆலயங்களும், பள்ளிகளும் மூடப்பட்டுச் சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. ஒவ்வொரு ஹ்யுகோனுக் குடும்பமும் சில படை வீரர்களை வைத்துக் காப்பாற்ற வேண்டும் என்று ஓர் ஆணையைப் பிறப்பித்தார். இந்தப் படை வீரர்களின் கொடுமை தாங்காமல் பலர் கத்தோலிக்க சமயத்தைத் தழுவினர். பொருளாசை காட்டியும், வன்முறை மூலமும் பலர் கத்தோலிக்க சமயத்தைத் தழுவ வற்புறுத்தப்பட்டனர். இறுதியில் 1685-ல் 'நாண்டிஸ்', 'ஆலே' (Nantes, Alais) ஆணைகள் ரத்து செய்யப்பட்டன. ஹ்யூகோனுக்கள் சமயச் சுதந்தரத்தை இழக்கவில்லை என்றாலும் வழிபாட்டுச் சுதந்தரத்தை இழந்தனர். ஃபிரான்சைச் சமயப் பொறைக்கு உறைவிடமாக்கிய ஃபிரான்சு அரசர்களின் சமயக் கொள்கை இப்பொழுது கைவிடப்பட்டது. இவர்களுக்கு

எதிராக இழைக்கப்பட்ட கொடுமைகளைத் தாங்க முடியாமல் பல ஆயிரக்கணக்கான ஹ்யூகோனுக்கள் நாட்டைவிட்டு வெளியேறி, இங்கிலாந்து, ஹாலந்து, பிரஷ்யா, அமெரிக்கா போன்ற நாடுகளில் சென்று குடியேறினர். இது ஃபிரான்சிற்குப் பேரிழப்பாகும். தொழில் வியாபாரத்துறைகளில் ஆற்றல்மிக்கு விளங்கிய ஹ்யுகோனுக்கள் நாட்டைவிட்டு வெளியேறியதால் ஃபிரான்சின் தொழில் வளம் குன்றியது. இவர்கள் சென்று குடியேறிய நாடுகளில் தொழில் வளம் பெருகத் தொடங்கியது. குறிப்பாக, பிரஷ்யாவின் 'ஃபிரெட்ரிக் வில்லியம்' (The Great Elector) இவர்களுக்குப் பேராதரவு அளித்து இவர்களுடைய ஆற்றலைப் பயன்படுத்திக் கொண்டு பிரஷ்யாவின் வலிமையைப் பெருக்கிக் கொண்டார்.

லூயியின் அயல்நாட்டுக் கொள்கை, குறிக்கோள்

முதலாம் ஃபிரான்சிஸ் காலத்திலிருந்து ஃபிரான்சின் அரசர்கள் கடைப்பிடித்து வந்த வெளிநாட்டுக் கொள்கையின் அடிப்படையில் இவருடைய கொள்கையும் அமைந்திருந்தது. லூயியின் முதல் நோக்கம் என்னவெனில், ஹாப்ஸ்பர்குகளின் ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டும் என்பதாகும். ஸ்பானிய ஹாப்ஸ்பர்குகள் ஃபிரான்சிற்குத் தெற்கே ஸ்பெயினையும், வடக்கே பெல்ஜிய நெதர்லாந்தையும், கிழக்கே 'ஃபிரான்ஷே காம்டி' (Franche Comte) என்ற பகுதியையும், வட இத்தாலியில் மிலானையும் ஆண்டு கொண்டிருந்தார்கள். ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்குகள் ஃபிரான்சின் வடகிழக்கு எல்லையில் ரைன் மாநிலங்களை ஆண்டு கொண்டிருந்தனர். இவ்வாருக ஃபிரான்ஸ் எல்லாத் திசைகளிலும் ஹாப்ஸ்பர்குகளின் ஆதிக்கத்தால் சூழப்பட்டிருந்தது.

இரண்டாவதாக, இயற்கை தனக்கு அளித்திருக்கும் எல்லைகளை (Natural Boundaries) ஃபிரான்ஸ் பெறவேண்டும் என்பது இவருடைய குறிக்கோள். அதாவது பிரன்னீஸ், ஆல்ப்ஸ் மலைகள், ரைன் ஆறு, கடல் ஆகியவை ஃபிரான்சின் எல்லைகளாக அமைய வேண்டும். இந்த எல்லைகளுக்குட்பட்ட பிரதேசங்கள் வேறு எந்த அரசின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தாலும் அது அங்கிருந்து அகற்றப்படவேண்டும் என்ற ஒரு கொள்கையை லூயி உருவாக்கினார். இந்த நோக்கம் ஈடேற போர்களில் ஈடுபடவும் ஆயத்தமானர்.

மூன்ருவதாக, போர்த் துறையில் சாதனைகள் பல புரிந்து, ஃபிரான்சின் புகழையும், பெருமையும் பெருக்க வேண்டும் என்பது மற்றொரு குறிக்கோள் ஆகும். இவை ஈடேற ஃபிரான்ஸை நீண்டகாலம் போரில் ஆழ்த்தி ஃபிரான்சின் செல்வம் கரைவதற்கும், மக்கள் இன்னல்படுவதற்கும் காரணமாக இருந்தார்.

இந்தப் போர்களின் விளைவாக ஐரோப்பிய மக்களின் வெறுப்பிற்கும், கோபத்திற்கும் ஆளானார். இவர் இறந்து நூறு ஆண்டுகள் கழித்தும்கூட ஃபிரான்ஸ், நாடு பிடிக்கும் வெறி கொண்ட ஓர் ஆக்கிரமிப்பு நாடு என்றும், ஐரோப்பாவின் அமைதிக்குக் கேடு விளைவிக்கும் நாடு என்றும் கருதப்பட்டது.

இக் குறிக்கோள்கள் நிறைவேற லூயி நான்கு போர்கள் புரிந்தார். அவையாவன : 1. ஸ்பானிய நெதர்லாந்தைப் (பெல்ஜியம்) பெற ஸ்பெயினுடன் (War of Devolution) நெதர்லாந்து உரிமைப் போர் (1667-1668), 2. டச்சுப் போர் (1672-1678), 3. ஆக்ஸ்பர்க் போர் (War of the Palatinate or of the League of Augusburg), 4. ஸ்பானிய வாரிசுரிமைப் போர் (War of the Spanish Succession (1702-1713). இந்தப் போர்களின் வரலாற்றை இரண்டு கட்டங்களாகப் பிரித்துக்கொண்டு ஆராயலாம்.

முதல் கட்டம்-1678 வரை : இந்தக் கட்டத்தில் நடந்த இரண்டு போர்களில் ஃபிரான்ஸிற்கு ஓரளவு வெற்றிகள் கிடைத்து லூயியின் அயல்நாட்டுக் கொள்கை நல்ல பலன்கள் தரும் முறையில் அமைந்தது.

### 1. நெதர்லாந்து உரிமைப் போர் (War of Devolution, 1667-68)

1648-ல் வெஸ்ட்பேலிய சமாதானத்திற்குப் பிறகும், ஸ்பெயினும், ஃபிரான்சும் தொடர்ந்து போரில் ஈடுபட்டிருந்தன என்பதையும், 1659-ல் இவ்விரு நாடுகளுக்குமிடையே பிரன்னீஸ் உடன்படிக்கை ஏற்பட்டது என்பதையும் முன்பு கண்டோம். இந்த உடன்படிக்கையின்படி ஸ்பெயின் அரசர் நான்காம்பிலிப்பின் மகள் 'மரியா தெரிசா' (Maria Theresa) பதினான்காம் லூயியை மணந்தார். நான்காம்பிலிப்பிற்கு இரண்டாவது மனைவியின்மூலம் ஒரு மகன் பிறந்தான். 1665-ல் அவர் இரண்டாம் சார்லஸ் என்ற பட்டத்துடன் ஸ்பானிய அரியணை ஏறினார். இந்தச் சமயத்தில் லூயி ஓர் உரிமைப் பிரச்சினையைக் கிளப்பினார். ஸ்பெயினுக்குச் சொந்தமான நெதர்லாந்துப் பகுதி தன் மனைவி மரியா தெரிசாவிற்குச் சேரவேண்டும் என்று லூயி வாதாடினார். இதற்குச் சாதகமாக நெதர்லாந்தின் ஒரு மாநிலமான 'பிரபாண்டில்' (Brabant) வழக்கிலிருந்த ஒரு வாரிசு உரிமை முறையை எடுத்துக் காட்டினார். 'Devolution' என்று அழைக்கப்பட்ட இம் முறையின் படிச் சொத்துகளை அடைவதில் முதல் திருமணத்தின்மூலம் பிறந்த

பெண்ணுக்கு, இரண்டாவது திருமணத்தின்மூலம் பிறந்த ஆணை விட உரிமை அதிகம். எனவே, நெதர்லாந்துமீது இரண்டாம் சார்லஸைவிட தன் மனைவி மரியா தெரிசாவிற்குத்தான் உரிமை அதிகம் என்று லூயி வாதாடினர். இந்த உரிமையை நிலைநாட்ட 1667-ல் நெதர்லாந்துமீது படையெடுத்தார். படையெடுப்பதற்கு முன்பு அரச தந்திரத்தின்மூலம் ஸ்பெயினுக்கு வேறு எந்த ஐரோப்பிய அரசும் உதவிபுரியாத படி செய்துவிட்டார். ஹாலந்து, ஸ்வீடன், ஜெர்மனியின் பிராடஸ்டெண்டு அரசுகள் யாவும் நடுநிலைமை வகிக்க ஒப்புக்கொண்டன. இங்கிலாந்து அப்பொழுது டச்சுக்காரர்களுடன் ஒரு போரில் ஈடுபட்டிருந்ததால், இப்போரில் தலையிட முடியவில்லை. ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்குகள், தங்கள் உறவினர்களான ஸ்பானிய ஹாப்ஸ்பர்குகளுக்கு உதவக்கூடாது என்று எச்சரித்தார்.

ஆற்றல்மிக்க தளபதிகளால் பயிற்றுவிக்கப்பட்டு, போர்த்துறையில் சிறந்து விளங்கிய ஃபிரெஞ்சுப்படைகள் எல்லையிலிருந்த பல கோட்டைகளை எளிதில் கைப்பற்றின. இதே நிலைமை தொடர்ந்து நீடித்திருந்தால் நெதர்லந்து முழுவதையும் ஃபிரெஞ்சுப் படைகள் கைப்பற்றியிருக்கும். ஆனல் எதிர்பாராமல் நடந்த ஒரு நிகழ்ச்சி போரின் போக்கை மாற்றிவிட்டது. இங்கிலாந்துக்கும், டச்சுக்காரர்களுக்குமிடையே நடந்துகொண்டிருந்த போர் முடிவுற்றது. இங்கிலாந்து, ஹாலந்து ஆகிய இவ்விரு நாடுகளும், ஸ்வீடனுடன் சேர்ந்துகொண்டு ஃபிரான்சுக்கு எதிராக ஒரு 'முச்கூட்டு ஒப்பந்தம்' செய்துகொண்டன (Triple Alliance). ஃபிரான்ஸின் செல்வாக்கு வளர்வதைத் தடுத்து, ஐரோப்பாவில் 'வல்லரசுச் சமநிலை'யை நிலைநாட்ட இந்தப் போரில் தலையிட்டதாக இந்த ஐரோப்பிய அரசுகள் கூறின. லூயியின் 'இயற்கை எல்லைகள்' என்னும் கோட்பாட்டிற்கு ஒரு தகுந்த பதிலாக அமைந்தது. ஐரோப்பிய அரசுகளின் 'வல்லரசுச் சமநிலைக் கோட்பாடு. ஐரோப்பிய அரசுகளின் தலையீட்டைக் கண்டு அஞ்சிய லூயி உடனே போரை நிறுத்த முடிவுசெய்து, ஸ்பெயினுடன் சமாதானப் பேச்சு வார்த்தைகள் தொடங்கினர். இதன் விளைவாக 'ஐக்ஸ்-லா-ஷாபேல் உடன்படிக்கை' (Treaty of Aix-la-Chapalle) ஏற்பட்டது. இதன்படி 'சார்லராய்' (Charlaroi) 'டூர்னே' (Tournai), 'லிலி' (Lille) போன்ற கோட்டை நகரங்கள் உட்பட்ட நெதர்லாந்தின் ஒரு பகுதியை ஸ்பெயின் ஃபிரான்சிற்கு கொடுக்க ஒப்புக்கொண்டது.

11. டச்சுப் போர் (The Dutch War, 1672-78)

நெதர்லாந்து உரிமைப்போர் முடிந்து சில ஆண்டுகள் டச்சு மக்கள்மீது பழிவாங்க வேண்டும் என்ற எண்ணம் லூயியின்

மனதில் மேலோங்கியிருந்தது. ஏனெனில், கடந்த போரில் ஃபிரான்சுக்கு எதிராகக் கூட்டணியை உருவாக்கியவர்கள் டச்சுக் காரர்கள், மேலும், வர்த்தகத் துறையில் ஃபிரான்சுடன் ஹாலந்து பலத்த போட்டியில் ஈடுபட்டிருந்தது. ஃபிரான்சின் வர்த்தகம் வளர வேண்டுமானல், டச்சு ஆதிக்கம் ஒழிக்கப்படவேண்டும் என்பதை லூயி நன்குணர்ந்தார். ஹாலந்தில் இருந்த குடியரசு ஆட்சிமுறையை லூயி வெறுத்தார். மேலும், ஃபிரான்சிலிருந்து அரசியல் சமயக் காரணங்களுக்காக வெளியேற்றப்பட்டவர்களுக்கு டச்சு மக்கள் புகலிடம் அளித்தார்கள். லூயியின் குண இயல்புகளையும், கொள்கைகளையும் கண்டித்து ஹாலந்தில் பல நூல்கள் எழுதப்பட்டன. எனவே, ஹாலந்துமீது போர் தொடுக்க லூயி முடிவுசெய்தார்.

கடந்த போரின்பொழுது உருவாக்கப்பட்ட முக்கூட்டு அணியை உடைத்து ஹாலந்தைத் தனித்து நிற்கும்படி செய்ய லூயி ஒரு திட்டம் வகுத்தார். இங்கிலாந்து அரசர் இரண்டாம் சார்லஸுடன் 1670-ல் 'டோவர் உடன்படிக்கை' என்ற ஓர் இரகசிய ஒப்பந்தம் செய்துகொண்டார் (Secret Treaty of Dover). அதன்படி இரண்டாம்சார்லஸுக்குஒரு பெருந்தொகை பணஉதவி செய்வதாக வாக்களித்து இங்கிலாந்தை முக்கூட்டு அணியிலிருந்து பிரித்தார். இதே முறையின் மூலம் ஸ்வீடனும் இந்த அணியிலிருந்து விலக்கப்பட்டு, ஹாலந்து தனித்து விடப்பட்டது. மேலும், லூயியை எதிர்த்துப் போராடுவதற்கான வலிமை ஹாலந்து மக்களிடம் இல்லை. ஏனெனில், நாடு அப்பொழுது இரண்டாகப் பிளவுபட்டிருந்தது. ஹாலந்து மக்களில் ஒரு சாரார் ஆரஞ்சுக் குடும்பத்தின் தலைமையில் முடியாட்சியை நிறுவ திட்டமிட்டுக் கொண்டிருந்தனர். கிராமப்புற மக்கள், பிரபுக்கள், குடியானவர்கள், கால்வினீயச் சமயத்தவர்கள் ஆகியோர் இந்த திட்டத்திற்கு ஆதரவு அளித்தனர். நகரவாழ் மக்கள், செல்வம் படைத்த வியாபாரிகள், தொழிலதிபர்கள் ஆகியோரின் ஆதரவுடன் 'ஜான் டி விட்' (John De Witt) என்பவருடைய தலைமையில் மற்ருெரு சாரார் ஹாலந்து குடியரசாக இருப்பதையே விரும்பினர். இவ்விரு தரப்பினருக்குமிடையே போட்டி பூசல் காரணமாக நாடு வலிமை இழந்து காணப்பட்டது.

இந்தச் சூழ்நிலையில் 1672-ல் லூயி ஹாலந்து மீது போர் தொடுத்தார். காண்டே, டியூரென் ஆகிய ஃபிரெஞ்சுத் தளபதிகளின் தலைமையில் பிரெஞ்சுப் படைகள் ஹாலந்திற்குள் புகுந்தன. எல்லையிலிருந்த 'லொரேன்' (Lorraine) மாநிலம் முதலில் கைப்பற்றப்பட்டது. ஃபிரெஞ்சுப் படைகள் ஆம்ஸ்டர்டாம் நகர்

நோக்கி முன்னேறின. குடியரசின் தலைவர் ஜான் டி விட் மக்களால் கொல்லப்பட்டு, ஆரஞ்சுக் குடும்பத்தின் மூன்றும் வில்லியம் போர்த் தலைமையை ஏற்றார். கடல் அணைகள் உடைக்கப்பட்டன. வடபகுதி முழுவதும் வெள்ளக் காடாயிற்று ஃபிரெஞ்சுப் படைகள் முன்னேற முடியவில்லை. எனினும், ஹாலந்து மக்கள் சமாதானத்திற்குத் தயாராக இருந்தனர். ஆனால், லூயி போரை நிறுத்தச் சம்மதிக்கவில்லை. இதைக்கண்டு அஞ்சிய ஐரோப்பிய நாடுகள் ஹாலந்துக்கு உதவ முன்வந்தன. பேரரசர் லியோபால்ட், 'பிராண்டன்பர்கின் தேர்வாளர்' (Elector of Brandanburg), ஜெர்மானியச் சிற்றரசர்கள் சிலர் ஆகியோரின் உதவி ஹாலந்துக்குக் கிடைத்தது. ஃபிரெஞ்சுப் படைகள் பல வெற்றிகள் பெற்று ஸ்பானிய நெதர்லாந்து, 'பிரான்ஷே காம்டே' (Franche Comte) ஆகிய பகுதிகளில் புகுந்தன. இந் நிலையில் பாராளுமன்றத்தின் ஆணைக்கிணங்க, இரண்டாம் சார்லஸ் லூயிக்கு எதிராகப் போர் புரியும்படி கட்டாயப் படுத்தப்பட்டார். இதைக் கண்ட லூயி போரை நிறுத்திக்கொள்ளச் சம்மதித்து, ஹாலந்துடன் நிம்வேஜன் உடன் படிக்கை செய்துகொண்டார் (Trepty of Nimwegen–1678)

இந்த உடன்படிக்கையினால் டச்சுக்காரர்களுக்கு இழப்பு ஒன்றுமில்லை. ஆனால், போரில் தலையிட்டதன் விளைவாக ஸ்பெயின் தனக்குச் சொந்தமான பல பகுதிகளை இழந்தது. 'பிரான்ஷே காம்டே' (Franche Comte) மாநிலத்தையும், பெல்ஜிய நெதர்லாந்தில் பல கோட்டை நகரங்களையும் ஸ்பெயின் ஃபிரான்சுக்குக் கொடுக்க ஒப்புக்கொண்டது. ஹாலந்தைத் தண்டிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் தொடங்கப்பட்டது இந்தப் போர். ஆனால், அந்த நோக்கம் நிறைவேறவில்லை.

விளைவுகள் : (1) மேற்கூறிய இடங்களைப் பெற்றதன் மூலம் ஃபிரான்சின் எல்லை விரிவடைந்து, இயற்கை எல்லையான ரைன் ஆற்றை நோக்கி ஃபிரான்ஸ் முன்னேற இப்போர் உதவியது. (2) இந்தப் போரினால் ஃபிரான்சுக்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது. எல்லை மாநிலங்கள் பல இன்னல்களுக்குள்ளாயின. கருவூலம் காலியாயிற்று. ஃபிரெஞ்சு அரசாங்கத்தில் வரிகளும் கடன்களும் அதிகமாயின. (3) ஃபிரான்சின் புகழ்பெற்ற தளபதி டியூரென் இப்போரில் உயிரிழந்தார். மற்றொரு தளபதி 'காண்டே' (Conde) முதுமை, உடல்நலக்குறைவு ஆகிய காரணங் களினால் பதவியிலிருந்து விலகி ஓய்வு பெற்றார்.

பதினான்காம் லூயி ஈடுபட்ட அடுத்தபோர் 1688-ல் தொடங் கியது. அதுவரை ஏறக்குறைய பத்து ஆண்டுகள் ஃபிரான்சில்

அமைதி நிலவியது. இந்தப் போரில்லாத இடைக்காலத்தில் (1678-1688) வேறு பல முறைகளில் புது நாடுகளைப் பிடிக்கும் முயற்சியில் லூயி ஈடுபட்டார். இதற்கென லூயி ஒரு புது கோட்பாட்டை உருவாக்கினார். வெஸ்ட் பேலியா, நிம்வேஜன் உடன் படிக்கைகளின்படி தன் வசமான நாடுகளின் ஆதிக்கத்திற்குட்பட்ட 'சார்புநாடுகள்' (dependencies) தனக்குச் சேரவேண்டும் என்று வாதிட்டு, இதுபோன்ற பகுதிகள் எவை என்பதை நிர்ணயிக்க 'Chambers of Reunion' என்ற தனிப்பட்ட நீதிமன்றங்களை அமைத்தார். இந்த மன்றங்கள் செய்த முடிவின் அடிப்படையில் லக்ஸம்பர்க், ஸ்ட்ராஸ்பர்க் போன்ற பேரரசுக்குச் சொந்தமான இருபதுக்கும் மேற்பட்ட நகரங்கள் கைப்பற்றப் பட்டன. லூயியின் படை வலிமை அதிகமாக இருந்ததாலும், அப்பொழுது துருக்கியர்களுடன் ஒரு போரில் ஈடுபட்டிருந்ததாலும், பேரரசர் லூயிக்கு எதிராக ஒரு நடவடிக்கையும் எடுக்க முடியவில்லை.

## III. ஆக்ஸ்பர்க் போர் (War of the League of Augusburg or War of the Palatinate, 1688—1697)

### இரண்டாவது கட்டம், (1688—1714)

பேரரசின் செல்வாக்கிற்குப் போட்டியாக ஃபிரான்சின் செல்வாக்கு வெகு வேகமாக வளருவதைக் கண்டு அஞ்சிய பேரரசர் லியோபால்ட் 1686-ல், புனித ரோமானியப் பேரரசைக் காக்கும் நோக்கத்துடன் இதர ஜெர்மானிய அரசுகள், ஸ்பெயின், ஸ்வீடன், ஆஸ்திரியா ஆகிய நாடுகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு 'ஆக்ஸ்பர்க் லீக்' (League of Augusburg) என்ற ஓர் அணியை நிறுவினார். இந்த அணியில் இங்கிலாந்தும் சேர்ந்து கொண்டது[1]. 'பாலடினேட்' (Palatinate) என்பது ஜெர்மானியச் சிற்றரசுகளில் ஒன்று. அதன் சிற்றரசரின் தங்கையை, லூயியின் தம்பி ஆர்லியன்ஸ் பிரபு மணந்திருந்தார். மனைவியின் மூலம், அது தன் தம்பிக்குச் சொந்தம் என்று பாலடினேட் மீது லூயி உரிமை கொண்டாடினார். 1688-ல் அச் சிற்றரசின்மீது, படை

1 பிறகு ஏற்பட்ட போரில் இங்கிலாந்து தீவிரமாக ஈடுபடச் சாதகமான சூழ்நிலை இங்கிலாந்தில் உருவாகியது. லூயியுடன் நட்புறவு கொண்டிருந்த இரண்டாம் ஜேம்ஸ் 1688-ல் ஒரு புரட்சியின் மூலம் பதவியிலிருந்து நீக்கப்பட்டு, ஆரஞ்சு வில்லியம் இங்கிலாந்தின் மன்னராக நியமிக்கப்பட்டார். இவர் ஃபிரான்சின் ஆதிக்கத்தை ஒடுக்கவேண்டும் என்ற எண்ணம் கொண்டவர். இவர் பட்டத்திற்கு வந்தவுடன் லூயிக்கு எதிராக இங்கிலாந்து மக்களின் ஆதரவைப் பெறுவது எளிதாயிற்று. இவர் தூண்டுதலின் பேரில்தான் இங்கிலாந்து இந்தப் போரில் தலையிட்டது.

யெடுத்தார். பாலடினேட் சிற்றரசர் ஆக்ஸ்பர்க் அணியின் உதவியை நாடினர். ஃபிரான்சுக்கு எதிராகப் போலந்து, ஹாலந்து, பேரரசு, ஸ்பெயின், ஸ்வீடன், பிராண்டன்பர்க், இங்கிலாந்து ஆகிய எல்லா நாடுகளும் சேர்ந்து ஒரு பேரணியை (Grand Alliance) ஏற்படுத்தின. ஃபிரான்ஸ் தனித்து நின்றது.

காண்டே, டூரென் போன்ற தளபதிகள் இல்லையெனினும் லக்ஸம்பர்க் பிரபுவின் தலைமையில் ஃபிரெஞ்சுப் படைகள் திறமையுடன் போர் செய்து, 'ஃப்ளீயூரஸ்' (Fleurus), 'ஸ்டீன்கர்க்' (Steinkirk), 'நீர்விண்டன்' (Neerwinden) ஆகிய போர்களில் ஃபிரெஞ்சுப் படைகள் வெற்றிவாகை சூடின. கடற் போரில் இந்த அளவு வெற்றி ஃபிரான்சுக்குக் கிட்டவில்லை. 1690-ல் நடந்த 'பீசிஹெட்' (Beachy Head) என்ற கடற் போரில் ஃபிரெஞ்சுக் கப்பற்படை, ஆங்கிலேய - டச்சுக் கப்பற்படைகள் மீது ஒரு வெற்றியைப் பெற்றது. ஆனல், 1692-ல் 'லாஹோக்' (La Hogue) என்ற இடத்தில் நடந்த சண்டையில் ஃபிரெஞ்சுக் கப்பற்படை தோற்கடிக்கப்பட்டது. அயர்லாந்துமீது படையெடுக்கச் செய்த முயற்சிகளும் வெற்றி பெறவில்லை. மேலும், ஐந்து ஆண்டுகள் போரைத் தொடர்ந்து நடத்திய லூயி, நாட்டின் நிதி நெருக்கடி காரணமாகப் போரை உடனடியாக நிறுத்த முடிவு செய்தார். 1697-ல் 'ரிஸ்விக் உடன்படிக்கையின்' மூலம் (Treaty of Ryswick) இப்போர் முடிவடைந்தது.

இதன்படி 1. டச்சுப் போருக்குப் பிறகு அரச தந்திரத்தின் மூலம் பெற்ற ஜெர்மானிய அரசுகளுக்குச் சொந்தமான பகுதிகளைத் திருப்பித் தரவும், 'லொரெயின்' (Lorraine) அரசை மீண்டும் அதன் அரசருக்கே திருப்பித் தரவும் லூயி ஒப்புக் கொண்டார். 2. பெல்ஜியன் நெதர்லாந்தில் உள்ள எல்லாக் கோட்டைகளிலும் டச்சுக்காரர்கள் தங்கள் படைகளை வைத்துக் கொள்ள லூயி அனுமதித்தார். இது டச்சு மக்களை ஃபிரான்சின் ஆக்கிரமிப்பிலிருந்து காப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட ஒரு நடவடிக்கை ஆகும். 3. பாலடினேட் மீது தாம் கொண்டாடிய உரிமையை விட்டுக்கொடுக்க லூயி இணங்கினர். 4. மூன்ரும் வில்லியத்தை இங்கிலாந்தின் மன்னராக ஏற்றுக்கொள்ள லூயி சம்மதித்தார். அவருக்கு எதிராக ஃபிரான்ஸ் யாருக்கும் உதவி புரியாது என்ற வாக்குறுதி அளிக்கப்பட்டது.

இந்தப் போருக்குப் பிறகு பதினன்காம் லூயியின் பெருமை குன்றத் தொடங்கியது. அரசனுடைய எதேச்சாதிகாரம் மேலும் மேலும் வளர்ந்தது. திருச்சபையையும், போப்பையும் தன்

ஆதிக்கத்திற்குட்படுத்த முயற்சி செய்தார். நாட்டின் நிதிநிலை மோசமாகிக்கொண்டே வந்தது. இந்தச் சூழ்நிலையில் இவருடைய ஆட்சியின் கடைசிப் போர் நிகழ்ந்தது.

## IV. ஸ்பானிய வாரிசுரிமைப் போர் (War of the Spanish Succession, 1702—1713)

ஹாப்ஸ்பர்குகளால் ஆளப்பட்டு வந்த ஸ்பானியப் பேரரசு ஒரு பரந்த அரசாகத் திகழ்ந்தது. காஸ்டில், அரகான், பெல்ஜியன் நெதர்லாந்தில் ஒரு பகுதி, சிசிலி, சார்டினியா, மிலான், அமெரிக்கக் குடியேற்றங்கள், பிலிப்பைன் தீவுகள் ஆகிய பகுதிகளைத் தன்னுட்கொண்ட இந்தப் பேரரசை ஹாப்ஸ்பர்க் வம்சத்தைச் சேர்ந்த இரண்டாம் சார்லஸ் ஆண்டு வந்தார். இவருக்குப் பிறகு பட்டமெய்த பிள்ளைகளோ, தம்பிகளோ கிடையாது. இவர் இறந்துவிட்டால் ஸ்பானியப் பேரரசை ஆளுவது யார் என்ற பிரச்னை எழுந்தது. இவருடைய நெருங்கிய உறவினர் ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைச் சேர்ந்த பேரரசர் முதலாம் 'லியோபால்ட்' (Leopold I), சார்லஸுடைய சகோதரிகளில் ஒருவரான மார்கரெட் தெரிசா லியோபால்டையும், மற்றொருவரான மரியா தெரிசா பதினான்காம் லூயியையும் மணந்திருந்தனர். 1659-ல் செய்து கொள்ளப்பட்ட பிரன்னீஸ் உடன்படிக்கையின்படி ஸ்பானியப் பேரரசின் மீது எந்தவித உரிமையையும் கொண்டாடுவதில்லை என்று பதினான்காம் லூயி வாக்குறுதி அளித்திருந்தார். இதற்கு ஈடாக ஸ்பெயின் ஒரு பெருந் தொகையைச் சீதனமாகக் கொடுக்க வேண்டும் என்று அந்த உடன்படிக்கை கூறியது. இந்தத் தொகையை ஸ்பெயின் கொடுக்க இயலாததால் லூயி தன் வாக்குறுதியை மீறி தன் மனைவி மூலமாக ஸ்பானியப் பேரரசின் மீது உரிமை கொண்டாடினார். பேரரசர் லியோபால்ட், ஸ்பெயின் அரசர் நான்காம் பிலிப்பின் தங்கை 'மரியா'வின் (Maria) மகன். எனவே, தன் தாய் மூலமாக ஸ்பானியப் பேரரசின்மீது இவர் உரிமை கொண்டாடினார். இவர்கள் இருவரைத் தவிர பவேரியாவின் தேர்வாளர் 'மாக்ஸ் இமானுவெல்' (Max Emmanuel) மார்கரெட் தெரிசாவின் மகள் மரியா, அன்டோனியாவை மணந்திருந்ததால், தன் மனைவி மூலமாக ஸ்பானியப் பேரரசு தன் மகனுக்குச் சேர வேண்டும் என்று வாதாடினார். இவ்வாறு ஸ்பானியப் பேரரசின் அரியணைக்கு மூன்று பேர் போட்டியிட்டனர். ஃபிரான்சும், ஆஸ்திரியாவும் ஏற்கனவே பரந்த பேரரசுகளாகத் திகழ்ந்து வந்தன. இவ்விரு நாடுகளில் எது ஸ்பானியப் பேரரசைப் பெற்றாலும் அந்த நாட்டின் ஆதிக்கம் வளர்ந்து, ஐரோப்பாவின்

வல்லரசுச் சமநிலை பாதிக்கப்படும் என்று மற்ற ஐரோப்பிய நாடுகள் அஞ்சின. மேலும் இங்கிலாந்து, ஹாலந்து போன்ற நாடுகள் இதை விரும்பவில்லை. ஏனெனில், ஸ்பானியப் பேரரசு ஃபிரான்சிற்குக் கிடைத்துவிட்டால், ஸ்பானிய ஃபிரெஞ்சுக் குடியேற்றங்களில் தங்களுடைய வியாபாரச் சலுகைகள் அறவே ஒழிக்கப்பட்டு, தங்களுடைய வர்த்தக நலன் பாதிக்கப்படும் என்று இந்த இரு நாடுகளும் கருதின. எனவே, இங்கிலாந்தின் அரசரான மூன்றும் வில்லியம், பேரரசோ, ஃபிரான்சோ அதிக செல்வாக்கு பெறுவதைத் தடுத்து, அதன் மூலம் வல்லரசுச் சம நிலையை நிலைநாட்டும் நோக்கத்துடன் லியோபால்டுடனும், லூயியுடனும் பங்கீட்டு ஒப்பந்தங்கள் (Partition Treaties) செய்து கொண்டார். இவ்வாறு செய்து கொள்ளப்பட்ட முதல் ஒப்பந் தத்தின்படி ஸ்பானியப் பேரரசு பவேரிய இளவரசருக்குச் சேர வேண்டும் என்றும், ஸ்பானியப் பேரரசின் எல்லைகளில் இருக்கும் சில பகுதிகளை ஆஸ்திரியாவும், ஃபிரான்சும் பெற வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. ஸ்பானிய அரசர் இரண்டாம் சார்லஸும் தன் உயில் மூலம் இந்த ஏற்பாட்டை ஏற்றுக் கொண்டார். ஆனால், இது அமுல்படுத்தப்படுவதற்கு முன் பவேரிய இளவரசர் இறந்துவிடவே, இரண்டாவது பங்கீட்டு ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது. இதன்படி ஸ்பானியப் பேரரசின் பெரும்பகுதி பேரரசர் லியோபால்டின் மகன் இளவரசர் சார்லஸுக்கும், இத்தாலியில் ஸ்பெயினுக்குச் சொந்த மான பகுதிகள் லூயிக்கும் சேரவேண்டியது என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால், 1700-ல் ஸ்பெயின் அரசர் இரண் டாம் சார்லஸ் மற்றொரு உயில் மூலம் ஸ்பானியப் பேரரசிற்கு வாரிசாக லூயியின் பேரரான 'ஆஞ்சுக் கோமகனை' (Philip, Duke of Anjou) நியமித்திருந்தார். எனவே, பங்கீட்டு ஒப்பந்தங்கள் பயனற்றுப் போயின. இந்த ஏற்பாடு பதினான்காம் லூயிக்கு மிக்க மகிழ்ச்சியை அளித்தாலும், லூயி இதைச் செயல்படுத்தத் தயங்கினார். ஏனெனில், இதனால் ஆஸ்திரியாவுடனும், இங்கிலாந் துடனும் போர் மூளக்கூடும். ஏற்கனவே, பல போர்களினால் நொந்து போயிருந்த ஃபிரான்சை மீண்டும் போரில் ஆழ்த்துவது சரியன்று என்று லூயி கருதினார். ஆனால், தயக்கத்தையும், அச்சத் தையும் விடுத்து லூயி தன் பேரருக்கு ஐந்தாம் பிலிப் என்ற பட்டம் சூட்டி ஸ்பானிய அரியணையில் அவரை அமர்த்தினார். இங்கிலாந்துடனும், ஆஸ்திரியாவுடனும் போர் மூளக்கூடும் என்று எதிர்பார்த்த லூயி ரிஸ்விக் உடன்படிக்கையின்படி டச்சுப் படைகள் வசமிருந்த எல்லைக் கோட்டைகளைக் கைப்பற்றினார்.

லூயியின் இந்த ஏற்பாட்டை எதிர்த்து இங்கிலாந்தின் தலைமையில் ஒரு 'பேரணி' உருவாகியது (Grand Alliance).

ஹாலந்து, ஆஸ்திரியா, ஜெர்மானிய அரசுகளான பிராண்டன் பர்க், பிரஷ்யா, ஹானோவர், பாலடினேட் ஆகியவை இந்த அணியில் சேர்ந்தன. இந்த அணிக்கும் ஃபிரான்சிற்குமிடையே நடந்த போர்தான் ஸ்பானிய வாரிசுரிமைப் போர் (1702-1713) என்று அழைக்கப்படுகின்றது.

போர் நிகழ்ச்சிகள்: போர் தொடங்கியவுடன் மூன்றும் வில்லியம் இறக்கவே, இங்கிலாந்தின் ஆன் அரசி இப்போரைத் தொடர்ந்து நடத்தினர். லூயி ஒரு வலிமைமிக்க படையைப் பெற்றிருந்தாலும், திறமைமிக்க படைத் தலைவர்கள் அவரிடம் இல்லை. ஆனால், பேரணியின் சார்பில் இங்கிலாந்தின் 'மார்ல்பரோ கோமகன்' (Duke of Marlborough) ஆஸ்திரியாவின் 'சேவாய் இளவரசர் யூஜென்' (Eugene, Prince of Savoy) போன்ற திறமை மிக்க தளபதிகள் போராடினூர்கள். போர் நிகழ்ச்சிகள் நெதர் லாந்து, இத்தாலி, ஸ்பெயின், தெற்கு ஜெர்மனி, வடஅமெரிக்கக் குடியேற்றங்கள் ஆகிய பகுதிகளில் நடந்தன.

ஃபிரெஞ்சுப் படைகள் ஆஸ்திரியாவில் புகுந்து வியன்னு நகரைக் கைப்பற்றவேண்டும் என்பது திட்டம். ஆனுல், இது நிறைவேற முடியாமல் பேரணியின் படைகள் மார்ல்பரோ, யூஜென் ஆகியவர்களின் தலைமையில் 1704-ல் 'பிளென்ஹீம்' (Blenheim) என்ற இடத்தில் நடந்த போரில் ஃபிரெஞ்சுப் படைகளை முறியடித்தன. 1704-ல் இங்கிலாந்து ஜிப்ரால்டரைக் கைப்பற்றியது. இதன்மூலம் மத்தியதரைக்கடற் பகுதியில் இங்கிலாந்திற்கு ஒரு கப்பல் தளம் கிடைத்தது. 1706-ல் ஆஸ்திரிய தளபதி யூஜென் ஃபிரெஞ்சுத் துருப்புக்களை இத்தாலியிலிருந்து விரட்டினூர் 'ராமிலீஸ்' (Ramillies 1706), 'ஊடனூர்ட்' (Oudenarde 1708), 'மால்பிளாகே' (Malplaquet 1709) ஆகிய போர்களில் மார்ல்பரோ பெற்ற வெற்றிகளின்மூலம், பிரெஞ்சுப் படைகள் நெதர்லாந்திலிருந்து விரட்டப்பட்டன. பேரணியின் படைகள் ஃபிரான்சை நோக்கி முன்னேறிக்கொண்டிருந்தன. பதினூன்காம் லூயி ஃபிரான்சை இந்தப் படையெடுப்பிலிருந்து காப்பாற்ற, பல முயற்சிகளும் செய்தார். மக்களும் இவருடன் இந்த நெருக்கடியான நேரத்தில் ஒத்துழைத்தனர். இதற்குள்ளாக இங்கிலாந்தில் டோரிக் கட்சியின் ஒரு புதிய அமைச்சரவை பதவி ஏற்று, மார்ல்பரோக் கோமகனைப் பதவியிலிருந்து விலக்கியது. போரைத் தொடர்ந்து நடத்துவதில் இந்த அரசு ஊக்கம் காட்டவில்லை. ஆஸ்திரியாவுக்கும், இங்கிலாந்துக்குமிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. எனவே, அந்நாடுகள் லூயியுடன் சமாதானம் செய்துகொள்ளத் தயாராயிருந்தன. போர்களினுல் களைத்துப் போன லூயியும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு

போரை முடித்துக் கொள்ளத் தீர்மானித்தனர். இதன்விளைவாக 1713-ல் 'ஊட்ரெக்ட் உடன்படிக்கை' (Treaty of Utrecht) கையெழுத்தாயிற்று.

இதன்படி பதினான்காம் லூயியின் பேரர் ஐந்தாம் ஃபிலிப் ஸ்பெயின் அரசராக ஏற்றுக்கொள்ளப் பட்டார். ஆனால், ஃபிரான்ஸ் அரசும், ஸ்பெயின் அரசும் ஒன்றுபடுவது தடைசெய்யப்பட்டது. ஸ்பெயினுக்குச் சொந்தமான மிலான், நேப்பிள்ஸ், சார்டினியா, ஸ்பானிய நெதர்லாந்து ஆகிய பகுதிகள் ஆஸ்திரியாவுக்குக் கொடுக்கப்பட்டன. ஃபிரான்சினிடமிருந்து 'நியுஃபவுண்டுலாந்து', 'நோவாஸ்கோஷியா', 'ஹட்சன் விரிகுடா' (New Foundland, Novascotia, Hudson Bay) ஆகிய பகுதிகளையும், ஸ்பெயினிடமிருந்து 'ஜிப்ரால்டர்', ,மைனார்கா' (Gibraltar, Minorca) ஆகிய பகுதிகளையும் இங்கிலாந்து பெற்றது. ஸ்பானியக் குடியேற்றங்களில் அடிமை வியாபாரத்தில் ஏகபோக உரிமையையும் இங்கிலாந்து பெற்றது. 'பிராண்டன்பர்க் தேர்வாளர்' (Elector of Brandenburg) பிரஷ்யாவின் அரசராக ஒப்புக்கொள்ளப்பட்டார். டச்சுக்காரர்கள் தங்கள் எல்லைக் கோட்டைகளை மீண்டும் பெற்றனர். சேவாய்க் கோமகன் ஆட்சியிலிருந்த பகுதி ஒரு தனி அரசாக ஏற்றுக்கொள்ளப்பட்டு சிசிலித்தீவு அவ்வரசிற்கு வழங்கப் பட்டது. இப்போரின் விளைவாக ஃபிரான்சிற்கு எந்தவித பயனும் கிட்டவில்லை. ஃபிரான்ஸ் தனது குடியேற்றங்களில் சிலவற்றை இழக்க நேரிட்டது. ஃபிரான்சின் கடன்சுமை மேலும் அதிகமாகி மக்கள் பல இன்னல்களுக்குள்ளானார்கள். நாட்டின் நிதி நிலைமை மேலும் மோசமாகி புரட்சி தோன்றுவதற்கான ஒரு சூழ்நிலை உருவாகியது.

இந்த உடன்படிக்கையின் முக்கியத்துவம்: ஃபிரான்சின் ஆதிக்கத்தை ஒடுக்கி 1746 வரை மீண்டும் ஐரோப்பாவில் ஒரு போர் மூளாமல் தடுக்க இந்த உடன்படிக்கை உதவியது. சமயச் சீர்திருத்த இயக்கத்தின் விளைவாக எழுந்த சமயப் பிரச்சினைகளை வெஸ்ட் பேலியச் சமாதானம் தீர்த்ததுபோல, ஃபிரான்சின் ஆக்ரமிப்புக் கொள்கையின் விளைவாக எழுந்த அரசியல் பிரச்சினைகளுக்கு இந்த உடன்படிக்கை தீர்வு கண்டது. இந்தப் போரின் விளைவாக இங்கிலாந்தின் செல்வாக்கு பெருகி, ஐரோப்பாவில் ஒரு பெரிய வல்லரசாக இங்கிலாந்து விளங்கியது. இந்தச் சமாதானத்தின் மூலம் இங்கிலாந்து பெற்ற குடியேற்றங்கள், பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்து ஒரு காலனி ஆதிக்க நாடாக விளங்குவதற்கு அடிகோலின. ஃபிரான்ஸ் தன் ஆதிக்கத்தை ஏற்படுத்தும் முயற்சியில் தோல்வியுற்று, ஃபிரான்சின் வீழ்ச்சிக்கு இந்த உடன்படிக்கை வழிவகுத்தது. இந்தச் சமாதானத்தின்மூலம் ஹாலந்து

பாதுகாப்பு பெற்றபோதிலும் ஐரோப்பாவில் அந்நாடு மூன்றும் வில்லியம் காலத்தில் பெற்றிருந்த சிறப்பிடத்தை இப்பொழுது இழந்தது. ஸ்பெயின் தனக்குச் சொந்தமான பல பகுதிகளை இழந்தது.

பிரஷ்யா ஒரு தனிப்பட்ட அரசாக அங்கீகரிக்கப்பட்டு, பிற்கால ஜெர்மனியின் வரலாற்றில் அவ்வரசு ஒரு முக்கிய பங்கை ஏற்க வழி வகுக்கப்பட்டது. இதேபோல சேவாயும் (Savoy) ஒரு தனி அரசாக அங்கீகரிக்கப்பட்டதால்₂ அவ்வரசு பிற்காலத்தில் இத்தாலியை ஒற்றுமைப்படுத்தும் முயற்சியில் முன்னணியில் நிற்க வழிவகை செய்யப்பட்டது.

உள்நாட்டு, அயல்நாட்டுக் கொள்கைகளில் ஏற்பட்ட தோல்விகளும், ஏமாற்றங்களும், லூயியின் உளநலத்தையும், உடல் நலத்தையும் வெகுவாகப் பாதித்தன. அவருடைய மகனும், பேரனும் அவருக்கு முன்பே இறந்துவிட்டனர். எனவே, அவருடைய பேரரின் பிள்ளையான பதினைந்தாம் லூயி பட்டத்திற்கு வரவேண்டுமென்றும், அவர் ஐந்து வயதுக் குழந்தை ஆதலால் அரசு பொறுப்பை ஏற்று நடத்த ஒரு 'காப்பாளர் குழு' (Regency Council) அமைக்கப்பட வேண்டுமென்றும் ஓர் உயில் எழுதி வைத்துவிட்டு, 1715-ல் பதினான்காம் லூயி மரணம் அடைந்தார்.

### லூயியின் ஆட்சியில் கலாசார வளர்ச்சி

ஆடம்பரப் பிரியரான பதினான்காம் லூயி ஃபிரான்சின் கலாசார வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்தார். கட்டடக் கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசை, இலக்கியம் ஆகிய யாவும் பெரிதும் போற்றி வளர்க்கப்பட்டன. பதினாறும் நூற்றாண்டில் மறுமலர்ச்சி இயக்கத்தின் விளைவாக ஃபிரான்சில் அரும்பிய கலை ஆர்வம், சிறிது சிறிதாக வளர்ந்து லூயியின் காலத்தில் முழுமை பெற்று பல அரிய கலைப் படைப்புகள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது. கிரேக்க-ரோமானியக் கலை வடிவங்களின் அடிப்படையில் ஃபிரான்சின் கலைகள் வளர்ந்தன எனினும், அவை ஒரு தனித்தன்மை பெற்றிருந்தன[1]. கலை உலகில்

[1] "It is notable that there was in all the art of the period, from the tragedies to the door knobs and from versailles to the chairs inside it a common spirit. It has been called the spirit of classicism because it drew its inspiration from ancient Greece and Rome via the Italian Renaissance and because it sought magnificence, dignity, symmetry and balance rather than charm, delicacy, or daintiness." History of Europe since 1500—C. J. H. Hayes and C. W. Cole, page 128.

ஃபிரான்ஸ் தோற்றுவித்த் பாணி மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கு ஒரு மாதிரியாக அமைந்தது. ஃபிரான்சின் அரசியல் கொள்கைகளும், 'வழக்காறுகளும்' (Practices) ஃபிரெஞ்சு மொழியும், இலக்கியமும், ஃபிரெஞ்சு நடை, உடை பாவனைகளும் ஐரோப்பாவெங்கிலும் ஆர்வத்துடன் பின்பற்றப்பட்டன. கால்பர்ட் போன்ற அமைச்சர்களால் பெருக்கப்பட்ட நாட்டின் செல்வ வளம், கலை வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்தது. குறிப்பாக, இலக்கியத் துறையில் வியக்கத்தக்க வளர்ச்சி ஏற்பட்டு, லூயியின் காலம் ஃபிரெஞ்சு இலக்கியத்தில் பொற்காலமாகக் கருதப் படுகிறது. ஃபிரெஞ்சு நாடக இலக்கியத்துறையில் புகழ்பெற்ற மூன்று ஆசிரியர்கள் 'கார்னில்' (Pierre Corneille), 'ஜீன் ரெஸின்' (Jean Racine), 'மாலியர்' (Moliere)--லூயியினால் ஆதரிக்கப்பட்டவர்கள். இவர்களைத் தவிர நகைச்சுவை மிகுந்த பல நினைவுக் குறிப்புகள் (Memoirs) எழுதிய 'செவின் அம்மையாரும் (Madame de Sevigne). 'செயிண்ட் சைமனும்' (St. Simon), வேடிக்கைக் கதைகள் பல எழுதிய 'லா ஃபோண்டைன்' (La Fontaine), 'ஃபெனலன் (Fenalon) என்ற ஆசிரியர்களும், 'பாஸே' (Bossuet) என்ற வரலாற்றறிஞரும், 'டெகார்தே' (Descartes), 'பாஸ்கல்' (Pascal) போன்ற தத்துவ அறிஞர்களும் இவர் காலத்தில் வாழ்ந்து ஃபிரெஞ்சு இலக்கியத்திற்கு மகத்தான பணி ஆற்றியவர்களாவர். இலக்கிய வளர்ச்சிக்கு ஆக்கம் அளிக்கும் நோக்கத்துடன் ரிசெல்யூவினால் நிறுவப்பட்ட 'ஆராய்ச்சிக் கழகம்' (The French Academy) இப்பொழுது அரசின் உதவியுடன் இலக்கியத்துறையில் அரிய பணிகளை ஆற்றியது. இதே போல 'ஓவிய, சிற்பக்கலைக் கழகம்' (The Academy of Painting and Sculpture) ஒன்றும் நிறுவப் பட்டது. 1666-ல் கால்பாட் 'விஞ்ஞானக் கழகம்' ஒன்றையும் (Academy of Sciences) நிறுவினர். பாரிஸ் நகரில் 'வானநிலை ஆராய்ச்சிக் கூடம்' ஒன்றும் (Royal Obersvatory) நூல் நிலையம் ஒன்றும் அமைக்கப்பட்டன.

ஐரோப்பாவின் தலைசிறந்த மன்னர் என்ற தம் புகழுக்கும், பெருமைக்கும் ஏற்ற வகையில், ஆடம்பரம் மிக்க வாழ்க்கை வாழ வேண்டுமென்று லூயி விரும்பினர். லூயியின் இந்த உணர்வின் சின்னம்தான் அவர் வெர்ஸாய் நகரில் எழுப்பிய மாபெரும் அரண்மனை. பாரிஸ் நகரிலிருந்து பன்னிரண்டு மைலுக்கு அப்பாலுள்ள இந்த வெர்ஸாய் அரண்மனை மாபெரும் மன்னரான லூயிக்கு ஏற்ற மாபெரும் மாளிகையாக அமைந்திருந்தது. இது தவிர 'ஸெயிண்ட் ஜெர்மெயின்', 'ஸெயிண்ட் கிளவ்ட்' (St. Germain, St. Cloud) என்ற இரண்டு மாளிகைகளையும் இவர் கட்டினர். தலைநகரான பாரிஸ் நகரைவிட்டு, வெர்ஸாயில்தான்

அரசரும், அரச குடும்பத்தினரும் தங்கினர். அரசனின் அரண்மனை தவிர நூற்றுக்கணக்கான மாளிகைகள் இங்குக் கட்டப்பட்டன. நாட்டின் அமைச்சர்கள், அரசின் உயர் அதிகாரிகள், பிரபுக்கள் ஆகிய எல்லோரும் அவர்கள் குடும்பங்களுடன் இங்கு வாழ்ந்தார்கள். அரண்மனையில் விலைமதிக்க முடியாத தங்க, வெள்ளிச் சாமான்கள், வண்ணத்திரைகள், ஓவியங்கள், சிற்பங்கள், பார்ப்பவர்களின் கண்களைப் பறிக்கும் அழகுடன் விளங்கின. 'Hall of Mirrors' என்ற கண்ணாடி மாளிகை ஒன்றும் அங்கு எழுப்பப்பட்டது. எழில்மிகு பூங்காக்கள், பசும் புல்வெளிகள், ஊற்றுகள், ஓடைகள், தோட்டங்கள் யாவும் அழகிற்கு அழகு செய்யும் வகையில் அமைந்திருந்தன. இத்தகைய ஒரு கனவு உலகத்தை நிர்மாணிப்பதற்குக் காரணமாக இருந்தவர்கள் 'மன்சார்ட்' '(Mansart) என்ற கட்டடக் கலைஞர். 'கிரார்டன்' (Girardon) என்ற சிற்பக்கலைஞர், 'லி புருன்' (Le Brun) என்ற ஓவியர் போன்றவர்கள். 'லல்லி' (Lully) என்பவர் அரச சபையின் இசைப் புலவராகப் பணியாற்றினர். சமையற்கலை கூட ஒரு நுண் கலையாகப் போற்றி வளர்க்கப்பட்டது. சமையற் கலையில் தேர்ச்சி பெற்ற 'வாடெல்' (Vatel) என்பவர் அரசர் அரண்மனையில் பணியாற்றியவர். இவ்வாறு கலை வல்லுநர்கள் பலர் அரசருடைய ஆதரவையும் உதவியையும் பெற்றனர்.

## ஃபிரான்சின் வாலாய், பூர்போன் அரச வம்சங்கள்

பிலிப் IV
(கி.பி. 1328-1364)
ஜான்
(கி.பி. 1350-1364)

சார்லஸ் V
(கி.பி. 1364-1380)

பர்கண்டி கோமகன்
பிலிப் (The Bold)
(கி.பி. 1365-1404)

சார்லஸ் VI
(கி. பி. 1380-1422)

லூயி
(ஆர்லியன்ஸ் கோமகன்)
தி. வாலன்டினு வைகான்டி

சார்லஸ் VII
(கி.பி. 1422-1461)

லூயி
(கி.பி. 1461-1483)

சார்லஸ் VII
(கி.பி. 1483-1598)

சார்லஸ்
(ஆர்லியன்ஸ் கோமகன்)

தி. ஆன். தி. லூயி XII
(கி. பி. 1498-1515)

ஜான்
(அங்கோலிம் கோமகன்)

சார்லஸ்
(அங்கோலிம் கோமகன்)

கிளாட்............தி............ஃபிரான்சிஸ் I
(கி.பி. 1515-1547

மார்கரெட். தி.
ஹென்றி II
(நவாரேயின் அரசர்)

ஹென்றி II
(கி.பி. 1547-1559)

ஜீன். தி.
(போர்பன் அந்தோணி

ஃபிரான்சிஸ் II
(கி.பி. 1559-1560)

சார்லஸ் IX
(கி.பி. 1560-1574)

ஹென்றி III
(கி.பி. 1574-1589)

ஃபிரான்சிஸ்
ஆஞ்சு கோமகன்

மார்கரெட். தி. ஹென்றி IV
(கி.பி. 1589-1610)

லூயி XIII
(கி.பி. 1610-1643)

லூயி XIV
(கி.பி. 1643-1745)

குறிப்பு: 'தி'—திருமணம்

# 11. ரஷ்யாவின் எழுச்சி

## I. மகா பீட்டர், II. மகா காதரின்

வடகிழக்கு ஐரோப்பாவில் அமைந்திருந்த ரஷ்யா ஸ்லாவ் இனத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்த ஒரு நாடாகும். கி. பி. பதினுறும் நூற்றுண்டுவரை ஐரோப்பிய எல்லேக்கும், ஐரோப்பிய கலாசாரத்திற்கும் அப்பாற்பட்ட, ஐரோப்பிய வரலாற்றில் ஒரு பங்கும் பெருத, கலாசார முதிர்ச்சி அடையாத ஒரு நாடாகவே ரஷ்யா கருதப்பட்டது. கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டில் ஜெர்மானிய இனத்தவர்கள் ரஷ்யாமீது படையெடுத்து அங்குப் பல சிறு அரசுகளே ஏற்படுத்தினர். 'ரூரிக்' (Rurik) என்ற தலைவனுல் ஏற்படுத்தப்பட்டதுதான் 'நோவ்கோராட்' (Novgorod) என்னும் அரசு. இதே போல 'மாஸ்கோ' (Moscow), 'கீவ்' (Kiev) என்னும் அரசுகளும் தோன்றின. இவைகளுக்கிடையே அடிக்கடி போட்டியும், போர்களும் நிகழ்ந்து கொண்டிருந்தன. 968-ல் கீவ் அரசைச் சேர்ந்த 'விளாடிமீர்' (Vladimir, the Great என்பவர் கிறிஸ்துவ சமயத்தைத் தழுவினுர். கிழக்கு ரோமானியப் பேரரசரான இரண்டாம் 'பேஸிலின்' (Basil II) 'சகோதரி' 'ஆன்' (Anne) என்பவரை மணந்து கொண்டார். இவர் மூலம் கிரேக்க கிறிஸ்துவ சமயம் ரஷ்யாவில் பரவியது. 'பைஸாண்டியக்' (Byzantine) கலாசாரமும் மெதுவாக ரஷ்யாவில் பரவத் தொடங்கியது. இந்த நிலேயில் பதின்மூன்றும் நூற்றுண்டில் ரஷ்யா மங்கோலியர்களின் படையெடுப்புக்குள்ளாகியது. இரண்டு நூற்றுண்டுகள் ரஷ்யா மங்கோலியர்களுக்கு அடிமைப்பட்டுக் கிடந்தது. ரஷ்யச் சிற்றரசர்களிடமிருந்து கப்பம் வசூலித்து மங்கோலியர்களுக்குச் செலுத்தும் பொறுப்பு மாஸ்கோ சிற்றரசரிடம் இருந்தது. நாளடைவில் மாஸ்கோ அரசின் தலேமையில் விடுதலேப்போர் துவக்கப்பட்டு மங்கோலியர்கள் ஆதிக்கம் ஒழிக்கப்பட்டது.

கி.பி. 1462-ல் ரூரிக் வம்சத்தைச் சேர்ந்த 'மூன்றும் ஐவன்' (Ivan III, Ivan the Great, 1462-1505) மாஸ்கோவின் அரியணே


கி.பி. 18-ம் நூற்றுண்டில்
ரஷ்யாவின் வளர்ச்சி
மகாபீட்டர் வென்ற பகுதிகள்
மகா காதரின் வென்ற பகுதிகள்
பீட்டர் பதவியேற்ற போது ரஷ்யா
கி.பி.1725–1762-ல் கைப்பற்றிய பகுதிகள்
கி.பி. 1800-ல் ரஷ்யாவின் எல்லை
ஸ்வீடன்
பின்லாந்து
கடல்
பால்டிக்
பீட்டர்ஸ்பர்க்
கரேலியா
இங்கிரியா
எஸ்தோனியா
லிவோணியா
மாஸ்கோ
ப்ரஷ்யா
போலந்து
கீவ்
அசோவ்
ஆஸ்திரியா
காஸ்பியன் கடல்
கருங்கடல்
துருக்கிப் பேரரசு
மத்திய தரைக் கடல்


போலந்துப் பிரிவினைகள் கி.பி.1772-1795
பின்லாந்து
ஸ்வீடன்
பால்டிக் கடல்
ரஷ்யா
போமரேனியா
ஹங்கேரி
ஆஸ்திரியா
உக்ரேன்
கருங்கடல்
ஏட்ரியாடிக் கடல்
1772ல் ஆஸ்திரியா பெற்றது
1793ல் ப்ரஷ்யா பெற்றது
1795ல் ஆஸ்திரியா பெற்றது
1793ல் ரஷ்யா பெற்றது

ஏறியபொழுது மாஸ்கோவின் வரலாற்றில் ஒரு முக்கிய கட்டம் தொடங்கியது. மங்கோலிய ஆதிக்கத்தை ஒழித்து, ரஷ்யாவின் பல சிற்றரசுகளைக் கைப்பற்றி ரஷ்யாவை ஒற்றுமைப்படுத்தி, ஒரு வலிமை மிக்க தேசிய முடியாட்சியை அவர் ஏற்படுத்தினர். ஆர்டிக்கடல், ஊரல் மலைகள் வரை தன் ஆதிக்கத்தைப் பரப்பினர். பைஸாண்டியப் பேரரசரான 'பதினொன்றும் கான்ஸடன்டைனின்' (Constantine XI) நெருங்கிய உறவினரான ஓர் இளவரசியை மணந்து கொண்டு கிழக்கு ரோமானியப் பேரரசுடன் நெருங்கிய தொடர்பு கொண்டார். தன்னைக் கிழக்கு ரோமானியப் பேரரசர்களின் வாரிசாகக் கருதிக்கொண்டு, பைஸாண்டியக் கலாசாரத்தையும், பழக்க வழக்கங்களையும் ரஷ்யாவில் புகுத்தினர். 1481-ல் ரஷ்யாமீது படையெடுத்த மங்கோலியர்களைப் போரில் முறியடித்து, அவர்கள் ஆதிக்கத்தை ஒழித்தார். ரஷ்ய நிலப் பிரபுக்களான 'போயர்கள்' (Boyars) அடங்கிய 'டியூமா' (Duma) என்ற சபையின் அதிகாரத்தைக் குறைத்து ஒரு நல்ல நிர்வாகத்தை உருவாக்கினர். இவருக்குப்பின் ரஷ்யாவை ஆண்ட மற்றோர் அரசர் 'நான்காம் ஐவன்' (Ivan IV, Ivan the Terrible, 1533–1584). இவரும் ஒரு வலிமை மிக்க முடியாட்சியை ரஷ்யாவில் ஏற்படுத்தும் நோக்கம் கொண்டவர். நிலப் பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்க பிரபுக்கள் அல்லாதவர்களை அரசாங்கத்தின் உயர் பதவியில் அமர்த்தி, இந்த அதிகாரிகளைக் கொண்ட ஒரு பிரபுக்கள் வர்க்கத்தை நிலப் பிரபுக்களுக்குப் போட்டியாகத் தோற்றுவித்தார். நிலப் பிரபுக்களுக்குச் சொந்தமான நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. பாமரமக்களையும், நடுத்தர வகுப்பினரையும் இவர் பெரிதும் ஆதரித்தார். மேற்கு ஐரோப்பாவுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. குறிப்பாக இங்கிலாந்துடன் ரஷ்யா வியாபாரத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டது. இவர் காலத்தில் ரஷ்யர்கள் ஊரல்மலையைக் கடந்து சைபீரியாவுடன் தொடர்பு கொண்டனர். இவர்தான் முதன்முதலாக 'ஸார்' (Czar)[1] என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்ட ரஷ்ய அரசர். ரோமானியப் பேரரசின் சின்னமான இரண்டு தலைகள் கொண்ட கழுகுச் சின்னத்தை இவர் ரஷ்ய அரசின் சின்னமாக ஏற்றுக்கொண்டார்.

1584-ல் நான்காம் ஐவன் இறக்கவே, ரூரிக் வம்சம் அழிந்து விட்டது. வலிமைமிக்க அரசர்கள் இல்லாத காரணத்தினல் ரஷ்யா உள்நாட்டுப் போர்களுக்கும், புறத்தார் படையெடுப்பு

[1] ரோமானியப் பேரரசர்கள் சூட்டிக் கொண்ட 'சீசர்' (Cæsar) என்ற பட்டத்தின் திரிபுதான் 'ஸார்' என்னும் சொல். இந்தப் பட்டம் ரஷ்ய அரசர்களின் அளவு கடந்த செல்வாக்கையும், அவர்கள் வலிமையையும் உணர்த்துகின்றது.

களுக்கும் ஆளாகியது. ரஷ்யாவின் அரியணைக்குப் பலர் போட்டியிட்டனர். போலந்து, ஸ்வீடன், துருக்கி போன்ற நாடுகள் ரஷ்ய விவகாரத்தில் தலையிட ஆரம்பித்தன. இவ்வாறு ரஷ்யா பல தொல்லைகளுக்குள்ளாக்கப்பட்ட இந்தக் காலத்தில் (The Time of Troubles) ரஷ்யாவை இந்தத் தொல்லைகளிலிருந்து விடுவித்து, குழப்பத்தை ஒழித்து அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்ட 1613-ல் ரஷ்ய மக்கள் ரஷ்யாவின் அரசராக நிலப் பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்த 'மைக்கேல் ரோமனுவ்' (Michael Romanov) என்பவரைத் தேர்ந்தெடுத்தார்கள் (1613—1645). இவரும், இவருடைய சந்ததியார்களும் ரஷ்யாவை ஏறக்குறைய முன்னூறு ஆண்டுகள் ஆண்டார்கள். 1917 ரஷ்யப் புரட்சி வரை, ரஷ்யாவை ஆண்ட எல்லா ஸார்களும் இந்த ரோமனுவ் வம்சத்தைச் சேர்ந்தவர்கள். மைக்கேல் ரோமனுவ் பட்டமெய்தியவுடன் நாட்டில் குழப்பத்தையும், அமைதியின்மையையும் ஒழித்து, மக்களுக்குப் பாதுகாப்பையும் நல்ல நிர்வாகத்தையும் அளித்தார். அன்னியர்களுடைய ஊடுருவலை எதிர்த்து அவர்களை நாட்டிலிருந்து வெளியேற்றினர். ஸ்வீடன் கைப்பற்றியிருந்த 'நோவ்கோராட்' (Novgorad) என்ற நகரம் மீட்கப்பட்டது. போலந்தின் தலையீடு ஒழிக்கப்பட்டு, 'ஸ்மாலென்ஸ்க்' (Smolensk), 'கீவ்' (Keiv), 'கிழக்கு ஊக்ரெயின்' (Eastern Ukraine) ஆகிய பகுதிகளை அது ரஷ்யாவிற்குக் கொடுக்க ஒப்புக் கொண்டது. ரஷ்ய திருச்சபையின்மீது அரசரின் ஆதிக்கம் ஏற்படுத்தப்பட்டது. மைக்கேலின் மகன் 'ஸார் அலெக்ஸி' (Alexis, 1645–1676) என்பவரின் ஆட்சியில் ரஷ்யா அறிவுத்துறையில் பின்தங்கியிருந்த நிலையை ஒழிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஐரோப்பிய அரசுகளுடன் மேலும் நெருங்கிய தொடர்பு கொள்ள அலெக்ஸி முயற்சிகள் மேற்கொண்டார். இவ்வாருக மைக்கேல், அலெக்ஸி ஆகியவர்களுடைய ஆட்சி ரஷ்யாவின் மாமன்னர் பீட்டரின் ஆட்சிக்கு முன்னோடியாக அமைந்தது என்று கூறலாம்.

அலெக்ஸிக்குப் பிறகு அவருடைய மகன் 'தியோடார்' (Theodore, 1676–1682) அரியணை ஏறி 1682-ல் வாரிசின்றி இறந்தார். அவருடைய தம்பிகளான ஐவன், பீட்டர் இருவரும் 'இணை அரசர்களாக' நியமிக்கப்பட்டனர் (Joint Rulers). ஐவன் ஒரு நோயாளி. எனவே, நடைமுறையில் பீட்டரே அரசுப் பொறுப்புகள் யாவையும் ஏற்றிருந்தார். பீட்டர் பத்து வயது சிறுவரானதால் 1689 வரை பீட்டருடைய சகோதரி 'சோபியா' (Sophia) காப்பாளராக இருந்து அரச காரியங்களைக் கவனித்தார். 1689-ல் சோபியாவைக் காப்பாளர் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, பீட்டர் தாமே நேரடியாக அரசுப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.

# I. மாமன்னர் பீட்டரின் ஆட்சி (1689-1725)

**பீட்டர் அரியணை ஏறியபொழுது ரஷ்யாவின் நிலை**

பீட்டர் அரியணை ஏறியபொழுது ரஷ்யா ஒரு பின்தங்கிய நாடாக இருந்தது. இனம், சமயம் ஆகியவற்றின் அடிப்படையில் மட்டுமே இவர்கள் ஐரோப்பாவுடன் தொடர்பு கொண்டிருந்தனர். ஏனைய வகைகளில் அவர்கள் ஓர் ஆசிய மக்களாகவே கருதப்பட்டனர். கான்ஸ்டாண்டி நோபிளுடன், மங்கோலியர் போன்ற ஆசிய மக்களுடனும் தொடர்பு கொண்டிருந்ததால் ரஷ்ய வாழ்க்கையில் கிழக்கத்திய அம்சங்கள் மேலோங்கியிருந்தன. கீழை நாடுகளின் பழக்க வழக்கங்கள், நடையுடை பாவனைகள் ரஷ்யாவில் வேரூன்றியிருந்தன. மேலும், இவர்கள் தங்கள் ஆதிக்கத்தைப் பரப்பச் செய்த முயற்சிகளெல்லாம் கிழக்குத் திசையில் தான்; மேற்கு நோக்கி அவர்கள் தங்கள் ஆதிக்கத்தைப் பரப்பத் தடைகள் பல இருந்தன. போலந்து, ஸ்வீடன், துருக்கி போன்ற நாடுகள் பால்டிக், கருங்கடற் பகுதிகளில் ரஷ்யாவின் செல்வாக்கு வளருவதற்குத் தடையாக இருந்தன. துறைமுகங்களும், கடற் கரைப் பகுதிகளும் பெற்றிராத ரஷ்யா மேற்கத்திய நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளுவது சாத்தியமாகவில்லை. மேலும், தொழில், வியாபாரம் ஆகியவற்றைவிட விவசாயத்தில் ரஷ்ய மக்கள் அதிகம் ஈடுபட்டிருந்ததால் வெளிநாடுகளுடன் தொழில், வர்த்தகத் தொடர்பு மிகவும் குறைந்த அளவிலேயே இருந்தது. இவ்வாறு ஐரோப்பாவிலிருந்து பிரிக்கப்பட்டு, தனியாக நின்ற ரஷ்யா மேற்கத்திய கலாசாரத்தின் செல்வாக்கிற்குட்படாமல் இருந்ததில் வியப்பு ஒன்றுமில்லை. இதே காரணத்தினால்தான் ஐரோப்பிய எதேச்சாதிகார முடியாட்சியினின்றும் மாறுபட்ட ஒரு வரம்பு கடந்த முடியாட்சி ரஷ்யாவில் நிலவிவந்தது.[1] இருப்பினும் அரசரின் அதிகாரத்தை வரம்புக்குட்படுத்தும் வகையில் நிலப் பிரபுக்களைக் கொண்ட (Boyars) ஓர் அவையும், ரஷ்ய திருச்சபையின் தலைமைக் குருவும் (Patriarch of the Russian Church), 'ஸ்ட்ரெல்சி' (Streltsi) என்ற அரசரின் மெய்க்காப்பாளர் படையும் செயல்பட்டு வந்தன. இவை அரசனின் எதேச்சாதி

[1] "The country's prolonged isolation accounts also for the existence of a government so peculiar and indigenous that although of the absolute type it was looked upon by European visitors as having little or no resemblance to absolute governments with which they were familiar. A curious mixture of Byzantine autocrat and Mongolian Khan the Tsar was the product of a tradition very different from that which had produced Louis XIV of France." A History of Europe from the Reformation to the Present Day—Ferdinand Schevill, page 306.

காரம் வளர்வதற்குப் பெருந்தடையாக இருந்தன. பொருளாதார, கலாசாரத் துறைகளில் பின்தங்கியிருந்த ரஷ்யாவில், ஏழ்மையும், அறியாமையும், மூட நம்பிக்கைகளும் மலிந்திருந்தன.

இந்த நிலையில் பீட்டர் ரஷ்யாவின் அரியணை ஏறினார். தமையனாரான தியோடரின் கண்காணிப்பில் இவர் இளமைப் பருவம் கழிந்தது. கல்வி, ஒழுக்கம் ஆகிய எவையுமே இவருக்குக் கற்றுத்தரப்படவில்லை. அடிக்கடி அரண்மனையை விட்டு வெளியே சென்று, கிராமங்களிலும், சேரிகளிலும் வாழும் மக்களுடன் வாழ்ந்து பாமரமக்களின் நிலைமையையும், நாட்டின் பிரச்சினைகளையும் பற்றி அவரால் புரிந்துகொள்ள முடிந்தது. அதே சமயத்தில் தலைநகரில் வெளிநாட்டவர்கள் வாழ்ந்த பகுதிகளுக்கும் சென்று, மேற்கு ஐரோப்பிய மக்களின் முன்னேற்றத்தைப் பற்றி நேரடியாக அறிந்துகொள்ள முடிந்தது. ஜெர்மன், டச்சு மொழிகளைப் பயின்ற இவர், விஞ்ஞானம், கணிதம் முதலிய துறைகளிலும் மிக்க ஈடுபாடு காட்டினார். புதுப்புது இயந்திரங்களைக் கண்டு பிடித்தல், கப்பல் கட்டுதல், போன்றவை இவருடைய பொழுதுபோக்குகளாகும்.

பீட்டரின் குறிக்கோள்கள்

1. ரஷ்யாவில் ஐரோப்பிய கலாசாரம் பரவுவதற்குத் தடையாக இருக்கும் சக்திகளைத் தகர்த்தெறிந்து, ரஷ்யாவை ஐரோப்பிய மயமாக்கி ஒரு நவீன நாடாக ஆக்க வேண்டுமென்பது அவருடைய முதல் குறிக்கோளாகும். 2. மேற்கத்திய நாடுகளுடன் தொடர்புகொள்ள பால்டிக், கருங்கடற் பகுதிகளில் ரஷ்யாவின் ஆதிக்கத்தை ஏற்படுத்துதல் மற்றொரு குறிக்கோள். 3. அரசரின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்திய பழைமையின் சின்னங்களாக விளங்கிய நிலப் பிரபுக்கள். திருச்சபை, ஸ்ட்ரெல்சி என்னும் மெய்க்காப்பாளர் படை ஆகியவற்றின் அதிகாரத்தை ஒடுக்கி அரசரின் அதிகாரத்தை வலுப்படுத்துதல் இவருடைய மற்றொரு குறிக்கோளாகும்.

தொடக்கமுதலே மேற்கத்திய கலை, விஞ்ஞானம், ஆட்சிமுறை, படைமுறை ஆகியவற்றில் இவருக்கு மிக்க ஈடுபாடும், அவற்றைத் தம் நாட்டிலும் புகுத்த வேண்டுமென்ற ஆர்வமும் உண்டு. 1697-98-ல் முதல் முறையும், 1716-17-ல் இரண்டாவது முறையும் இவர் மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றார். இங்கிலாந்து, ஃபிரான்ஸ், ஹாலந்து, ஆஸ்திரியா, ஜெர்மனி முதலிய நாடுகளுக்குச் சென்று கப்பல் கட்டும் தொழில், தொழில் நுட்பத்துறை, படைத்துறை, தொழில் வியாபாரத்துறை ஆகியவற்றில் ஐரோப்பிய நாடுகளின் சாதனைகளை நேரில் கண்ட

றிந்தார். ரஷ்யக் கடற்படை அதிகாரி பீட்டர் கேலோவிச் என்று தன்னைக் கூறிக்கொண்டு பல இடங்களையும் சுற்றிப் பார்த்தார். இங்கிலாந்து, ஹாலந்து நாடுகளில் ஒரு தொழிலாளியைப்போல தாமே கப்பல் கட்டும் கூடங்களில் வேலை செய்தார். தொழிற் சாலைகள், கப்பல் கட்டும் இடங்கள், மருத்துவமனைகள், கலைக் கூடங்கள் முதலிய இடங்களைப் பார்வையிட்டுத் திரும்பும்பொழுது பல நாட்டுச் சட்டப் புத்தகங்கள், இயந்திரங்கள், கட்டடக் கலைஞர்கள், மாலுமிகள், தொழில் நிபுணர்கள் முதலான வர்களைத் தன்னுடன் ரஷ்யாவிற்கு அழைத்து வந்தார். இவர்கள்தான் புதிய ரஷ்யாவை உருவாக்கிய சிற்பிகள் என்று கூறலாம். மேற்கு ஐரோப்பிய மக்களிடம் காணப்பட்ட விஞ் ஞான அறிவு, முற்போக்கு எண்ணங்கள், கட்டுப்பாடு, சுகாதார வாழ்வு ஆகியவற்றைத் தன் நாட்டு மக்களின் அறியாமை, மூடப் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றோடு ஒப்பிட்டுப் பார்த்து, மேற்கத்திய மக்களைப்போல ரஷ்ய மக்கள் திருந்தினாலன்றி நாடு முன்னேற முடியாது என்பதை உணர்ந்தார். ரஷ்யாவில் ஐரோப் பியக் கருத்துகளைப் புகுத்தி ஒரு நவீன நாடாக ஆக்கவேண்டு மென்ற ஆர்வம் மட்டுமன்றி, நினைத்த காரியத்தை நிறைவேற்றும் மன உறுதியும் இவர் பெற்றிருந்தார்.

''தற்கால மக்களால் புரிந்துகொள்ள முடியாத ஒரு விசித் திரமான மனிதர் பீட்டர். ஒரு சமயம் கொடுமைகளுக்கஞ்சாத கொலைகாரராகவும், மற்றொரு சமயம் வன்முறைகள், ஒழுக்கமற்ற செயல்களில் ஈடுபடும் மனிதத் தன்மையற்ற ஓர் அரக்கராகவும், மற்றொரு சமயம் இயற்கை ஈன்ற ஓர் உயர்ந்த மனிதராகவும் காட்சியளிக்கிறார். முரண்பட்ட பல குண இயல்புகளைக்கொண்ட ஒரு மனிதர் பீட்டர்''[1] என்று 'ஷிவெல்' என்னும் ஆசிரியர் கூறுகின்றார். பீட்டரைப்போல விசித்திரமான வேறொருவரை நாம் நம் வரலாற்றில் காணுவது அரிது. கொடூரச் செயல்கள் புரிவது ஈடு இணையற்று விளங்கிய இவர் 'நான்காம் ஐவனின்' (Ivan, the Terrible) உண்மையான வாரிசாக விளங்கினார். தன் மெய்க்காப்பாளர் படையைச் சேர்ந்தவர்கள் தனக்கெதிராகப் புரட்சி செய்த குற்றத்திற்காக அவர்களை ஈவு இரக்கமின்றிச் சித்திரவதை செய்தார். இவ்வாறு மனிதத் தன்மையற்ற முறை

[1] "Peter is a difficult person for a modern man to understand. At one time he seems to be no better than a common murderer, again he strikes us as an inhuman monster in the grip of revolting violence and sensualities; on a third occasion we are prepared to hail him as one of nature's noblemen. Thus strangely compounded, his life was full of the most dramatic contradictions." A History of Europe from the Reformation to the present day—**Ferdinand Schevill, page 307.**

யில் நடந்துகொண்ட இதே மன்னர் விஞ்ஞான வளர்ச்சியிலும் தொழில் முன்னேற்றத்திலும், ரஷ்யாவில் மேற்கத்திய நாகரி கத்தைப் புகுத்துவதிலும் மிக்க ஆர்வம் காட்டினர். அவருடைய சில செயல்கள் ஹூணர்களின் தலைவர் அடில்லாவையும், மற்றும் சில செயல்கள் பதினன்காம் லூயி, கால்பர்ட் ஆகியவர்களையும் நமக்கு நினைவுபடுத்தும் வகையில் அமைந்திருக்கின்றன" என்று கிராண்ட் என்னும் ஆசிரியர் கூறுகின்றார்[2].

### இவருடைய சாதனைகள்

இவர் ஆட்சியின் முதல் சாதனை 1696-ல் இவர் துருக்கியுடன் செய்த போரும் அதன் விளைவாக 'அசோவ்' (Azov) என்ற கருங் கடல் துறைமுகப்பட்டினத்தைக் கைப்பற்றியதும் ஆகும். துருக்கியர்களுடன் போர் செய்து வெற்றி பெறுவது அவ்வளவு எளிதன்று என்பதையும், ஐரோப்பிய நாடுகளின் உதவி தேவை என்பதையும் உணர்ந்த பீட்டர், 1697-ல் இந்த உதவியைப் பெறும் சாத்தியக் கூறுகளை ஆராய்ந்தறிய ஐரோப்பிய நாடுகளுக்கு ஒரு தூதுக் குழுவுடன் சென்றார். இந்த முயற்சியில் எதிர்பார்த்த அளவு வெற்றி கிட்டவில்லை. எனினும், வேறு பல வகைகளில் இந்தச் சுற்றுப்பயணம் பல நற்பயன்களை அளித்தது.

### பீட்டர் மேற்கொண்ட சீர்திருத்தங்கள்

அரசரின் அதிகாரம் வலுப்படுதல்: பதினன்காம் லூயியின் ஆட்சி முறையைக் கண்ட பீட்டர் தன் நாட்டிற்கு இதுபோன்ற ஒரு ஆட்சி முறைதான் உடனடித்தேவை என்பதை உணர்ந்தார். அரசர்மீது இருந்த கட்டுப்பாடுகளைத் தகர்த்தெறியும் நோக்கத் துடன் சில சீர்திருத்தங்களைப் பீட்டர் மேற்கொண்டார். இதன் விளைவாக ரஷ்யாவில் வரம்பு கடந்த முடியாட்சி அமைக்கப் பட்டது. அரசனுடைய அதிகாரத்திற்கும் ஊறு விளைவிக்கும் வகையில் 'போயர்கள்' (Boyars) என்ற நிலப்பிரபுக்களின்

[2] "History presents us with no stranger character than his· He was capable of worse than bestial cruelty and showed himself a true successor of Ivan the Terrible, when he tortured his rebellious bodyguards to death by hundreds and permitted the cruel murder of his own son. But this ferocious tyrant was passionately interested in science and in industry and anxious above all things to introduce the civilisation of Europe into his own semi-barbarous land. There is a part of his career which recalls the worst side of Atilla the Hun but there is a part too which suggests resemblance to Louis XIV and to Colbert."—Europe the story of the Last Five Centuries—A. J Grant, page 623-624.

அதிகாரம் வளர்ந்திருந்தது. அரசாங்கத்தில் எல்லா உயர்பதவி களையும் இவர்களே வகித்து வந்தனர். இவர்கள் கொட்டத்தை அடக்கினாலொழிய அரசரின் அதிகாரம் வலுப்பெறாது என்பதை உணர்ந்த பீட்டர் இவர்கள் செல்வாக்கை ஒழிக்க ஆயிரக் கணக்கான செல்வந்தர்களுக்குப் பிரபுக்கள் பட்டத்தை அளித்து, ஒரு புதிய பிரபுக்கள் வர்க்கத்தை உருவாக்கினார். இந்தப் புதிய பிரபுக்கள் அரசனுக்குக் கட்டுப்பட்டு அரசரின் உண்மை ஊழியர் களாக விளங்கினார்கள். இவர்களுக்கு நிலமும், சிறப்புரிமை களும், அரசாங்கத்தில் உயர்பதவிகளும் வழங்கப்பட்டன. முன்பு நிர்வாகத்தில் மிக்க செல்வாக்கு பெற்றிருந்த நிலப்பிரபுக்கள் அடங்கிய 'டியூமா' (Duma) என்னும் சபை கலைக்கப்பட்டு அரசருக்கு அன்றாட நிர்வாகத்தில் உதவி புரிய ஓர் ஆலோசனைக் குழு' (Advisory Council) அமைக்கப்பட்டது. இதன் உறுப் பினர்கள் அரசரால் நியமிக்கப்பட்டனர். பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்த இளைஞர்களைக் கொண்ட 'ஸ்ட்ரெல்சி' Streltsi) என்னும் மெய்க்காப்பாளர் படை அரசியல் விவகாரங் களில் அடிக்கடி தலையிட்டு அரசரின் அதிகாரம் வளர்வதற்குத் தடையாக இருந்தது. பீட்டர் வெளிநாட்டுச் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்தபொழுது இம் மெய்க்காப்பாளர் படை அரசனுக்கு எதிராகப் புரட்சி செய்த செய்தியைக் கேள்விப்பட்ட அரசர், இதை ஒடுக்க நாடு திரும்பினார். தன் ஆதிக்கத்தை எதிர்க்கும் எவரும் தப்பமுடியாது என்பதை உணர்த்தும் வகையில் ஆயிரக்கணக்கில் புரட்சிக்காரர்களை வெட்டி வீழ்த்தி, கலகத்தை நசுக்கினார். இவ்வாறு மெய்க்காப்பாளர் படையும் கலைக்கப்பட்டது.

அரசருடைய அதிகாரம் வளர்வதற்குத் தடையாக இருந்த மற்றொரு நிறுவனம் ரஷ்ய திருச்சபை. இதன் தலைமைக் குரு (Patriarch) மக்களிடையே மிக்க செல்வாக்கு பெற்றிருந்ததோடு மட்டுமின்றி ரஷ்யாவின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை யாகவும் விளங்கினார். பீட்டரின் முற்போக்குச் சீர்திருத்தங்கள் வெற்றிபெற வேண்டுமானால், பிற்போக்குச் சக்தியான திருச் சபையின் செல்வாக்கு ஒழிக்கப்பட வேண்டும் என்பதை பீட்டர் உணர்ந்தார். எனவே, திருச்சபை மன்னரின் ஆதிக்கத்திற்குட் படுத்தப்பட்டு மன்னரின் கைப்பொம்மையாக மாறியது. தலைமைக் குருவின் செல்வாக்கை ஒழிக்கும் நோக்கத்துடன் திருச் சபை அலுவல்களைக் கவனிக்க (Holy Synod) என்ற ஒரு குழுவை நிறுவினார். இக்குழுவின் அனுமதியின்றித் தலைமை குரு ஒன்றும் செய்யக்கூடாது என்று ஆணையிட்டார். கிஸ்துவ மடாலயங் களின் தேவைக்கு அதிகமான வருவாய், பறிமுதல் செய்யப்பட்டு

கல்வி வளர்ச்சிக்கும், அங்கமிழந்த போர் வீரர்களின் நலனிற்காகவும் பயன்படுத்தப்பட்டது. இவ்வாறு போயர்கள், மெய்க்காப்பாளர்படை, தலைமைக்குரு ஆகியவர்களின் செல்வாக்கை ஒடுக்கியதன் விளைவாக நாட்டில் அரசரின் அதிகாரம் மேலோங்கி நின்றது.

நிர்வாகச் சீரமைப்பு: நாட்டின் நிர்வாக அமைப்பின் மையமாக அரசர் விளங்கினார். இவருக்கு உதவியாக ஓர் ஆலோசனைக் குழு நிறுவப்பட்டது. நிர்வாகம் செவ்வனே நடைபெற அரசாங்கம் பத்துத் துறைகளாகப் பிரிக்கப்பட்டு (Collegia) வெளிநாட்டு விவகாரங்கள், கடற்படை, நிதி, சட்டம், தொழில்கள், வாணிபம் போன்றவற்றை இத்துறைகள் கவனித்து வந்தன. ஒவ்வொரு துறையும் ஒரு தனி அதிகாரியின் கண்காணிப்பில் இயங்கி வந்தது. நாடு எட்டு மாநிலங்களாகப் (gubernii) பிரிக்கப்பட்டு (மாஸ்கோ, செயிண்ட் பீட்டர்ஸ்பர்க், ஸ்மாலென்ஸ்க், ஆர்க்கேஞ்சல், அசோவ், கீவ், காசான், சைபீரியா), ஒவ்வொரு மாநிலத்திற்கும் படைத் தலைவர்கள் கவர்னர்களாக நியமிக்கப்பட்டனர். அரசு ஊழியர்கள் நேர்மையுடன் நடந்துகொள்ள வேண்டுமென்று விரும்பினார். இலஞ்சம், அரசின் பணத்தைக் கையாளுதல் போன்ற குற்றங்கள் புரிந்த அரசு ஊழியர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். ஐரோப்பிய முறையை ஒட்டி, ஒவ்வொரு நகரத்தையும் நிர்வகிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் கொண்ட நகர மன்றங்கள் நிறுவப்பட்டன. இவற்றைக் கண்காணிக்கத் தனி மேலதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். கிராமங்களில் தொன்று தொட்டு வழக்கிலிருந்த 'மீர்கள்' ((Mirs) என்ற பஞ்சாயத்துகளின் ஆட்சிமுறை தொடரப்பட்டது. இந்த நிர்வாகச் சீர்திருத்தங்களைச் செயல்படுத்துவதில் ஜெர்மானியத் தத்துவ அறிஞரான 'லிப்னிட்ஸ்' (Libnitz) இவருக்குப் பேருதவியாக இருந்தார்.

புதிய படை நிறுவப்படுதல்: அரசருடைய அதிகாரத்தை நிலைநாட்டவும், அயல்நாட்டு விவகாரங்களில் வெற்றிகரமாகச் செயல்படவும் ஒரு சிறந்த வலிமைமிக்க படை தேவை என்பதை உணர்ந்த பீட்டர் மெய்க்காப்பாளர் படையைக் கலைத்துவிட்டு, அதற்குப் பதிலாக நிரந்தரமான 'நிலைப் படை' (Standing Army) ஒன்றை நிறுவினார். இந்தப் படையின் வலிமையைப் பெருக்கும் பணியில் தன் முழுக்கவனத்தையும் செலுத்தினார். இரண்டு லட்சம் ரஷ்யப் போர் வீரர்களைக்கொண்ட ஒரு தரைப் படை நிறுவப்பட்டு, அது வெளிநாட்டுப் படைத் துறை வல்லுநர்களால் பயிற்றுவிக்கப்பட்டது. 'பாட்ரிக் கார்டன்' (Patrick Gordon),

'புரூஸ்' (Bruce) என்னும் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த படைத்துறை நிபுணர்கள் படை நிறுவுவதற்கு உதவிபுரிந்தனர். ஐரோப்பிய முறையில் இப்படைக்குப் பயிற்சியும், போர்க் கருவிகளும் அளிக்கப்பட்டன. இதேபோல ஒரு கடற்படையும் அமைக்கப்பட்டது. இந்தத் துறையில் 'லிஃபோர்ட்' (Lefort) என்ற ஜெனிவா நகரைச் சேர்ந்த கடற் தளபதி இவருக்குப் பேருதவியாக இருந்தார். தன்னுடைய எதேச்சாதிகார ஆட்சியை ஏற்படுத்துவதற்கு இவர் கையாண்ட முறைகளுள் இந்தப் படையை அமைத்தது முக்கியமானதாகும்[1].

சமூகச் சீர்திருத்தங்கள்—ரஷ்யாவை ஐரோப்பிய மயமாக்குதல் :

ரஷ்யாவின் சமூக அமைப்பில் புரட்சிகரமான பல மாறுதல்களை உண்டாக்கினார். பழைய நிலப் பிரபுக்களுக்குப் பதிலாக தனக்கு உண்மையாகப் பணி ஆற்றிய பலரைப் பிரபுக்களாக்கி ஒரு புதிய பிரபுக்கள் வர்க்கத்தை உருவாக்கினார். ஆனால், ரஷ்யாவின் பாமர மக்கள், குறிப்பாக, குடியானவர்கள், நிலப் பிரபுக்களின் ஆதிக்கத்திற்குள்ளாக்கப்பட்டு அடிமை வாழ்வு வாழ்ந்தனர். பீட்டரின் சமூகச் சீர்திருத்தங்களினால் இந்த ஏழைக் குடியானவர்களின் நிலைமையில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. அடுத்து, ரஷ்யாவை ஐரோப்பியமயமாக்கும் பணியை மேற்கொண்டார். பழமையிலும், சம்பிரதாயத்திலும் ஊறி, அறியாமை, மூட நம்பிக்கைகளில் ஆழ்ந்து கிடந்த ரஷ்ய மக்களிடமிருந்து இந்த முயற்சிகளுக்கு பலத்த எதிர்ப்பு இருந்தது. ஆனால், பீட்டர் இந்த எதிர்ப்பை ஒழித்து மேற்கத்திய நாகரிகத்தை ரஷ்யாவில் புகுத்தத் தீர்மானித்தார். ரஷ்யர்களுடைய பழக்க வழக்கங்கள், வாழ்க்கை முறை, உணவு, உடை எல்லாவற்றிலும் ஐரோப்பிய பாணி புகுத்தப்பட்டது. ஆண்கள் தாடி, மீசை வளர்க்கும் பழக்கம் பழமையின் சின்னமாகக் கருதப்பட்டு, அப்பழக்கத்தை ஒழித்தார். நாட்டின் முக்கிய பிரபுக்களை அழைத்துத் தாமே அவர்களுடைய தாடி, மீசையை வெட்டியெறிந்தார் என்று கூறப்படுகிறது. தாடி, மீசை வளர்ப்பதைத் தடைசெய்து அவர் விடுத்த ஆணையை மீறி தாடி, மீசை வளர்ப்பவர்கள்மீது கடுமையான வரிகள் விதிக்கப்பட்டன. பாதம் வரையில் அணியப்பட்டுவந்த நீண்ட அங்கி அணிவது தடைசெய்யப்பட்டு, ஆண் பெண்கள் எல்லோரும் ஐரோப்பியப் பாணியில் உடைகள் அணிய வேண்டுமென்று ஆணையிட்டார். ஐரோப்பிய

[1] "Peter's replacement of the independent, turbulent Streltsi with a loyal and orderly standing army was one important step in the direction of autocracy", Modern Europe to 1870, —C.J.H. Hayes, page 308.

நடனங்கள், மற்ற கேளிக்கைகள் ரஷ்யாவில் புகுத்தப்பட்டன. புகையிலை உபயோகிக்கும் ஐரோப்பியப் பழக்கம் ரஷ்யாவில் புகுத் தப்பட்டது. ஆண்களுடன் பெண்கள் சமமாகப் பழகவேண்டும் என்றும், அரசரவையில் நடக்கும் விருந்துகள் விழாக்கள், மற்ற கேளிக்கைகளில் பெண்களும் பங்குகொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தினர். மண்டியிட்டு வணக்கம் தெரிவிக்கும் முறையை ஒழித்து, ஐரோப்பிய முறையில் வணக்கம் தெரிவிக்கும் பழக் கத்தைப் புகுத்தினர். ஜனவரி முதல் தேதி புது ஆண்டு தொடங்கும் ஐரோப்பியக் காலண்டர் முறை, ரஷ்யாவில் பின் பற்றப்பட வேண்டுமென்று ஆணையிட்டார். ஐரோப்பியக் கல்வி முறை ரஷ்யாவில் புகுத்தப்பட்டது. விஞ்ஞானம், பொறியியல், கணிதம், தத்துவம் போன்ற பாடங்களை ஐரோப்பிய முறையில் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தார். ஜெர்மன், ஃபிரெஞ்சு மொழிகள் கற்க வசதிகள் செய்து தரப்பட்டன. ஏராளமான பள்ளிகளும், தொழிற்கூடங்களும் நிறுவப்பட்டன. மேற்கு நாடு களிலிருந்து குடியானவர்கள், பொறியியல் வல்லுநர்கள், கப்பல் கட்டும் தொழிலில் தேர்ச்சி பெற்றவர்கள் முதலியோர் ரஷ்யா விற்கு அழைக்கப்பட்டனர். ரஷ்ய இளைஞர்கள் பலர் வெவ்வேறு துறைகளில் பயிற்சி பெற ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்பப்பட் டனர். கப்பல்கட்டும் துறையில் பயிற்சி பெற வெனிஸ், ஹாலந்து போன்ற இடங்களுக்கும், தொழில்களில் பயிற்சி பெற இங்கிலாந் திற்கும், படைத் துறையில் பயிற்சி பெற ஃபிரான்ஸ், ஆஸ்திரியா ஆகிய நாடுகளுக்கும், மருத்துவத் துறையில் பயிற்சி பெற ஜெர்ம னிக்கும் இளைஞர்கள் அனுப்பப்பட்டனர். விஞ்ஞானக் கழகம் ஒன்று நிறுவப்பட்டது. ரஷ்யாவில் முதன்முறையாக நூல்நிலை யங்கள், நாடக-நடன அரங்குகள், கலைக்கூடங்கள், பொருட் காட்சிசாலைகள் முதலியன அமைக்கப்பட்டன. ஜெசூட்டுகள், யூதர்கள் தவிர மற்ற எல்லாச் சமயத்தினருக்கும் மத சுதந்திரம் அளிக்கப்பட்டது. ஆனல், இந்த மாற்றங்களின் பயனைச் சமுதயா யத்தின் மேல்தளத்தில் இருந்த மக்களிடையே மட்டும்தான் நாம் காண முடிகின்றது. இவை பாமர மக்களின் நிலையை எந்த விதத் திலும் பாதிக்கவில்லை.

பொருளாதாரத் துறை: விவசாய வளர்ச்சியில் பீட்டர் அக்கரை காட்டினர்; புதிய முறைகளும், புதிய உத்திகளும் கையாளப்பட்டன. திராட்சைக் கொடி, புகையிலை ஆகியவை பயிர்செய்ய ஆக்கம் அளிக்கப்பட்டது. நல்ல தரமான கால் நடைகள் வளர்ப்பதில் மிக்க ஆர்வம் காட்டினர். தொழில் வியாபார வளர்ச்சி ஊக்குவிக்கப்பட்டது. தனியார் துறையில் பல தொழில்கள் தொடங்கப்பட்டன. ஐரோப்பிய நாடுகளுடன்

நெருங்கிய வர்த்தகத் தொடர்பு ஏற்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. பல வியாபாரக் கம்பெனிகள் நிறுவப்பட்டன. கப்பல் கட்டும் கூடங்கள், துணி, இரும்பு, எஃகு ஆலைகள் முதலியன நிறுவப்பட்டன. ஜெர்மன் நாட்டில் அமுலிலிருந்த 'கில்ட் முறை'யை (Guild System) ரஷ்யாவில் புகுத்த நினைத்தார். படைத் துறையிலும், போர்களிலும் இவர் அதிகக் கவனம் செலுத்தியதால் பொருளாதாரத் திட்டங்களை வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியவில்லை.

பீட்டரின் வெளிநாட்டுக் கொள்கை

திருச்சபையின் ஆதிக்கத்தை ஒடுக்கியது, புரட்சிகரமான மாறுதல்களைப் புகுத்தி ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்கியது. ரஷ்யர்களின் பழக்க வழக்கங்களை ஐரோப்பிய மயமாக்கியது, வலிமை பொருந்திய நாடாக ரஷ்யாவை ஆக்கியது ஆகிய இந்தச் சாதனைகள் தவிர, ஆக்ரமிப்புத் திட்டங்கள் பலவற்றையும் பீட்டர் உருவாக்கினர். ஐரோப்பிய நாடுகளுடன் ரஷ்யாவின் வர்த்தக, கலாசாரத் தொடர்பு வலுப்பெறவும், நீடித்து இருக்கவும் பால்டிக், கருங்கடற்பகுதிகளில் ரஷ்யாவின் ஆதிக்கம் ஏற்படுத்தப்படவேண்டும் என்று இவர் விரும்பினர். ரஷ்யா பெற்றிருந்த ஒரே துறைமுகமான வெண் கடற்கரையில் அமைந்துள்ள 'ஆர்கேஞ்சல்' (Archangel) ஆண்டின் பெரும்பகுதி பனியினல் உறைந்து, கப்பல் போக்குவரத்திற்குப் பயனற்றதாக இருந்தது. ரஷ்யாவுக்குத் துறைமுகங்கள் இல்லாத குறையைப் போக்க துருக்கி, ஸ்வீடன் ஆகிய நாடுகளுடன் போர் செய்து கடற்கரைப் பகுதிகளைப் பெற வேண்டுமென்பது இவருடைய திட்டம். எனவே, துருக்கி, ஸ்வீடன் ஆகிய நாடுகளுடன் போர்செய்ய ஒரு தக்க வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். வெளிநாட்டு விவகாரங்களில் இவருக்கு ஆலோசனை கூறி பேருதவி புரிந்தவர் 'ஆஸ்டர்மான்' (Ostermann) என்னும் ஜெர்மன் அரசியல் தந்திர நிபுணர் ஆவார்.

1696-ல் ரஷ்யாவுடன் போர் செய்து அசோவ் துறைமுகத்தைக் கைப்பற்றினர் என்பதை முன்பே குறிப்பிட்டோம். 1697-ல் ஸ்வீடன் அரசர் பதினேரும் சார்லஸ் இறந்து, பன்னிரண்டாம் சார்லஸ் என்ற பதினைந்து வயது இளைஞர் ஸ்வீடனின் அரியணை ஏறியபொழுது, ஸ்வீடனுடன் போர்தொடுக்க இவருக்கு ஒரு வாய்ப்பு கிட்டியது. சாக்ஸனியின் தேர்வாளரும் (Elector of Saxony) போலந்து அரசருமான 'இரண்டாம் அகஸ்டசுடன்' (Augustus II) பீட்டர் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார். இதன்படி லிவோனியா, எஸ்தோனியா ஆகிய ஸ்வீடனுக்குச்

சொந்தமான பகுதிகளைப் போலந்து எடுத்துக்கொள்ள வேண்டு மென்றும், 'இங்கிரியா' (Ingria) 'கரேலியா' (Karelia) ஆகிய பகுதிகளை ரஷ்யா எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. பிராண்டன்பர்க், மேற்குப் போமரேனியா வையும், டென்மார்க், ஹால்ஸ்டினையும் பெற்றுக் கொண்டு, ஸ்வீடனுக்கு எதிராகப் போர் புரிய வேண்டுமென்றும் ஏற்பாடா யிற்று. பிராண்டன்பர்க் இந்த ஒப்பந்தத்திலிருந்து கடைசியில் விலகிக்கொண்டதால், மற்ற மூன்று நாடுகளும் 1699-ல் ஸ்வீடன் மீது போர் தொடுக்கத் தயாராயின. ஆனால், இந்தத் திட்டம் அவ்வளவு எளிதாக நிறைவேறவில்லை. ஏனெனில், இளைஞராக இருந்த போதிலும் பன்னிரண்டாம் சார்லஸ் திறமைமிக்க ஓர் அரசர். ரஷ்யாவுடன் மற்ற அரசுகள் ஒன்று சேராவண்ணம் தடுக்க டென்மார்க்மீது படையெடுத்தார். அவருடைய படைகள் கோபன்ஹேகன் நகர் வரை முன்னேறின. போரில் தோற்ற டென்மார்க் அரசர் ரஷ்யாவுடன் செய்து கொண்டிருந்த ஒப்பந் தத்திலிருந்து விலகிக் கொண்டார். அடுத்து படையெடுத்து வந்த ரஷ்யர்களைத் தடுத்து நிறுத்த எஸ்தோனியாவில் நுழைந்து 'நார்வா' (Narva) என்னுமிடத்தில் நடந்த போரில் ரஷ்யப் படைகளை முறியடித்து ஒரு மாபெரும் வெற்றியைப் பெற்றார். அடுத்து போலந்து படையெடுக்கப்பட்டு வார்சா நகரம் கைப்பற்றப்பட்டது. போலந்து அரசர் அகஸ்டஸைப் பதவியி லிருந்து நீக்கி 'ஸ்டானிஸ்லாஸ்' (Stanislaus) என்பவரை அரச ராகப் பதவியில் அமர்த்தினர் (1704).

சார்லஸ் போலந்துடன் போரில் ஈடுபட்டிருந்த சமயத்தில், பீட்டர் பால்டிக் பகுதியில் ஸ்வீடனுக்குச் சொந்தமான பல பகுதிகளைக் கைப்பற்றினர். 1708-ல் போலந்துப் போரை முடித்துக் கொண்டு சார்லஸ் ரஷ்யாவின்மீது படையெடுத்தார். மாஸ்கோவைக் கைப்பற்ற இவர் செய்த முயற்சி வெற்றி பெற வில்லை. கடுமையான ரஷ்யக் குளிரையும், பனியையும் தாங்க முடியாத சார்லஸின் போர் வீரர்கள் ஆயிரக்கணக்கில் இறந்தனர். 1709-ல் 'புல்டாவா' (Poltava) என்னுமிடத்தில் நடந்த போரில் சார்லஸின் படைகள் தோற்கடிக்கப்பட்டு, சார்லஸ் போர்க்களத்திலிருந்து தப்பித் துருக்கிக்கு ஓடிவிட்டார். துருக்கியர்களை ரஷ்யாவுக்கு எதிராகத் தூண்டிப் போரிடச்செய்ய இவர் செய்த முயற்சி வெற்றி பெறவில்லை. துருக்கியர்கள் தன்னுடன் போர் செய்யாமல் இருப்பதற்கு, பீட்டர் துருக்கிக்கு அசோவ் துறைமுகத்தைத் திருப்பித் தரவேண்டியதாயிற்று. ஸ்வீடனுடன் போர் தொடர்ந்து நடந்தது. மீண்டும் ரஷ்யா வுடன் போலந்து, டென்மார்க், பிரஷ்யா, இங்கிலாந்து ஆகிய

நாடுகள் சேர்ந்துகொண்டு ஸ்வீடனுக்கு எதிராகப் போரைத் தொடர்ந்து நடத்தின. இந்தப் போரின் இடையில் 1718-ல் சார்லஸ் இறந்தார். சார்லஸ் உயிருடன் இருந்தவரை சமாதானம் ஏற்படுவதற்கான வாய்ப்புகளே இல்லை. இப்பொழுது இவர் இறந்தவுடன், நீண்ட போரினால் களைப்படைந்து வலிமை இழந்திருந்த ஸ்வீடன் மக்கள் போரை நிறுத்திக்கொள்ள ஆர்வமாக இருந்தனர். எனவே, 1721-ல் 'நைஸ்டாட் உடன்படிக்கை' (Treaty of Nystad) ஏற்பட்டு, இப்போர் முடிவடைந்தது. இதன்படி ஸ்வீடனிடமிருந்து 'கரேலியா' (Karelia), 'இங்கிரியா' (Ingria), 'எஸ்தோனியா' (Estonia), 'லிவோனியா' (Livonia) பின்லாந்தின் ஒரு சிறுபகுதி ஆகியவற்றை ரஷ்யா பெற்றது. இப்பகுதியில்தான், பீட்டர் 'செயின்ட் பீட்டர்ஸ்பர்க்' (St. Petersburg) என்ற அழகான நகரத்தை (பின்னர் இது பெட்ரோ கிராட் என்றும் லெனின் கிராட் என்றும் அழைக்கப்பட்டது) நிர்மாணித்தார். பீட்டரின் தன்னம்பிக்கைக்கும், தளராத முயற்சிக்கும் ஒரு நினைவுச் சின்னமாக இந்த நகரம் விளங்கியது. ஹானோவருக்கு 'பிரெமன்' (Bremen), 'வெர்டன்' (Verden)'ஆகிய பகுதிகளும், பிரஷ்யாவிற்குப் போமரேனியாவின் பெரும்பகுதியும் கிடைத்தது. அகஸ்டஸ் போலந்தின் அரசராக ஏற்றுக் கொள்ளப்பட்டார். இங்கிலாந்து, டென்மார்க் ஆகிய நாடுகள் ஸ்வீடனிடமிருந்து சில வியாபாரச் சலுகைகள் பெற்றன இந்த உடன்படிக்கையின் விளைவாக ஸ்வீடனின் செல்வாக்கு குலைந்து, ரஷ்யாவின் செல்வாக்கு பெருகியது. மேலை நாடுகளுடன் தொடர்புகொள்ள ரஷ்யா தேவையான வசதிகளைப் பெற்றது. (Peter gained his long sought "Window to the west")

**மதிப்பீடு**

தேசத்தின் தந்தை என்று (Father of the Fatherland) மக்களால் போற்றப்பட்ட பீட்டர் 1721-ல் பேரரசர் என்று பட்டம் சூட்டிக் கொண்டார். 1725-ல் அவர் இறந்தபொழுது ரஷ்யா கட்டுக்கோப்பும், ஒற்றுமையும், சிறந்த படை வலிமையும் பெற்ற சிறந்த நாடாக விளங்கியது. ஐரோப்பியமயமாக்கப்பட்ட ரஷ்யா சர்வதேச அரசியலில் முக்கிய பங்கு ஏற்கத் தயாராக இருந்தது. ரஷ்யாவை இந்த நிலைக்குக் கொணர்ந்த பீட்டரை வரலாற்றறிஞர்கள் பல்வேறு வகையில் மதிப்பிடுகிறார்கள். ஒரு கொலைகாரர் என்றும், அஞ்சாது கொடுமைகளை இழைக்கும் அரக்க குணம் படைத்தவர் என்றும் அவரைச் சிலர்

[1] ரஷ்யாவை ஐரோப்பிய மயமாக்கும் கொள்கையை ஆதரிக்கவில்லை என்பதாலும், அதைத் தொடர்ந்து செயல்படுத்துவதில் தன் விருப்பப்படி நடக்கவில்லை என்பதாலும், பட்டத்து இளவரசரான தன் மகன் அலெக்ஸியை இவர் கொல்வித்தார் என்பது இங்கு நோக்கத்தக்கது.

கருதுகின்றனர்.[1] சிலர் அவரைத் தேசத்தின் மாபெருந் தலைவர் என்று போற்றுகின்றனர். இந்த மதிப்பீடுகள் யாவுமே அவருக்குப் பொருந்தும். எல்லாவற்றிற்கும் மேலாக, தன் நாட்டின் நலனிற்காக அயராது உழைக்கும் தன்மையும், விடாமுயற்சியும், அளவுகடந்த மன உறுதியும் பெற்றிருந்த மேதை பீட்டர், ஓர் இலட்சிய வீரர் என்பதை மறுக்க முடியாது. ஒரு நாட்டின் பெருமை, சிறுமை, மக்களின் முரண்பட்ட குண இயல்புகள் ஆகியவற்றின் உருவமாகப் பீட்டர் விளங்குகிறார். நவீன ரஷ்யாவை உருவாக்கியவர் என்பதுதான் அவர் ரஷ்ய வரலாற்றில் பெற்றிருக்கும் சிறப்பிடம் ஆகும்.

## II. இரண்டாம் காதரின் (Catharine II, 1762-1796)

பீட்டருக்குப் பிறகு முறையே முதலாம் காதரின் (1725-1727), இரண்டாம் பீட்டர் (1727-1730), ஆன் அரசி (1730-1740), ஆறும் ஐவன் (1740-41), எலிஸபெத் (1741-1762). மூன்றும் பீட்டர் (1762) ஆகியோர் ரஷ்யாவை ஆண்டனர். இதற்குப் பிறகு இரண்டாம் காதரின் ரஷ்யாவின் அரியணை ஏறினார். இவர் ஆட்சியில் மீண்டும் ரஷ்யாவின் புகழ் ஓங்கியது. பீட்டரின் ஆட்சி முடிவிற்கும் (1725) காதரின் ஆட்சித் தொடக்கத்திற்கும் (1762) இடைப்பட்ட இந்த முப்பத்தேழு ஆண்டுக் காலத்தில் ரஷ்யாவின் நிலை சுழலில் சிக்கித் தவிக்கும் சுக்கானற்ற ஒரு கப்பலின் நிலையை ஒத்திருந்தது. இந்த நிலையிலிருந்து ரஷ்யாவை மீட்டு, மீண்டும் நாட்டை ஓர் உன்னத நிலைக்குக் கொண்டுவந்த காரணத்தினால் காதரின் அரசி 'மகா காதரின்' (Catharine the Great) என்று ரஷ்ய வரலாற்றில் போற்றப்படுகிறார்.

1762-ல் ரஷ்யாவின் அரியணை ஏறிய மூன்றும் பீட்டர் மிகக் குறுகிய காலம்தான் ரஷ்யாவை ஆண்டார். மனநோயால் பீடிக்கப்பட்டிருந்த இவர் நாட்டை ஆளும் திறமை பெற்றிருக்கவில்லை. ஜெர்மனியில் பிறந்த இவருக்குப் பிரஷ்யாவின் இரண்டாம் ஃபிரடரிக் வில்லியத்திடம் மிக்க ஈடுபாடு உண்டு. எனவே, பிரஷ்யாவிற்கு எதிராகப் போர் செய்வதை நிறுத்தி, பிரஷ்யாவை ஆதரித்து ஆஸ்திரியாவுடன் போரில் ஈடுபட்டார். இதை ரஷ்ய மக்கள் விரும்பவில்லை. மெய்க்காப்பாளர் படை இவருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து, சிறையிலடைத்தது. சில நாட்களுக்குப் பிறகு இவர் நோய்வாய்ப்பட்டு இறந்ததாக அரசாங்க அறிக்கை வெளியிடப்பட்டது. ஆனால், உண்மையில் மனைவி காதரினால் இவர் கொல்லப்பட்டார் என்று வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். இவர் இறந்தவுடன் இவர் மனைவி காதரின்

இரண்டாம் காதரின் என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டு, ரஷ்யாவின் அரியணை ஏறினர். பிறப்பால் ஜெர்மன் அரச குடும்பத்தைச் சேர்ந்த இவர் இளமையிலேயே ரஷ்யாவிற்கு அழைத்து வரப்பட்டு, மகா ஃபிரெடரிக்கின் உதவியினுல் ரஷ்யாவின் அரியணைக்கு வாரிசாக விளங்கிய மூன்ரும் பீட்டரை மணந்து கொண்டார். ரஷ்யாவிற்கு வந்தநாள் முதல் ரஷ்ய மக்களின் ஆதரவையும், நல்லெண்ணத்தையும் பெற பல வகைகளிலும் முயன்ருர். ரஷ்ய மொழியைக் கற்ருர். ரஷ்யக் கிறிஸ்துவ சமயத்தைப் பின்பற்றினர். தன்னுடைய ஜெர்மன் உறவினர்களை அவமதித்து, ரஷ்யர்களுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு, அரசின் முக்கிய பதவிகளில் ரஷ்யர்களை அமர்த்தினர். 1762-ல் இவர் கணவர் மூன்ரும் பீட்டர் அரியணையேறிய பொழுது, மக்கள் அரசரைவிட அவர் மனைவி காதரினைப் பெரிதும் விரும்பிப் போற்றினர். நோயாளி என்ற காரணத்தினுலும், திறமையற்றவர் என்ற காரணத்தினுலும், அவர் சில மாதங்களே பதவியிலிருந்தார் என்பதையும், மனைவி காதரின் தூண்டுதலின் பேரில் சிறைப்படுத்தப்பட்டு, பின்னர் கொல்லவும் பட்டார் என்பதையும் முன்பு குறிப்பிட்டோம்.

1762-ல் அரசியாகப் பதவியேற்ற இரண்டாம் காதரின் முப்பத்தினன்கு ஆண்டு ஆட்சியில், இவர் அதிகாரத்தை எவரும் எதிர்க்கத் துணியவில்லை. மனச்சாட்சிக்குச் சிறிதும் அஞ்சாமல் செயல்படும் துணிவும், அறநெறி ஒழுக்கங்களைச் சிறிதும் மதியாமல் நடக்கும் தன்மையும் பெற்ற இவர் தன்னுடைய குறிக்கோளை அடைய எந்த முறைகளையும் பயன்படுத்தத் தயங்கவில்லை. தன்னுடைய உள்நாட்டு, அயல்நாட்டுக் கொள்கைகளைப் பீட்டரின் கொள்கைகளின் அடிப்படையில் அமைத்துக்கொண்ட இவருடைய ஆட்சியில் பீட்டரின் பணிகள் முற்றுப்பெற்றன என்று கூறலாம்.

**உள்நாட்டுக் கொள்கை**

பிறப்பால் ஐரோப்பாவைச் சேர்ந்த இவருக்கு, மேலைய நாகரிகத்தில் ஈடுபாடு இருந்ததில் வியப்பில்லை. பதினெட்டாம் நூற்ருண்டில் ஐரோப்பாவில் பரவிக் கொண்டிருந்த அறிவு வளர்ச்சி இயக்கத்தின் 'முற்போக்குக் கருத்துகளில்' (Enlightenment) மிக்க ஈடுபாடு காட்டினர். தன் எதேச்சாதிகாரத்தை ஏற்படுத்தும் குறிக்கோள் கொண்ட இவர் எல்லோரும் தன்னை மக்கள் நலம் பேணும் ஒரு வல்லரசாகக் (Enlightened despot) கருத வேண்டும் என்று விரும்பினர். ஃபிரெஞ்சு அரசியல் அறிஞர்களான 'வால்டேர்', 'திதரோ' (Voltaire, Diderot) போன்றவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட இவர்

ஃபிரெஞ்சு மொழி, கலாசாரம், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை ரஷ்யாவில் புகுத்த முயன்றார். சம்பிரதாயக் கருத்துக்களினால் கட்டுண்டு கிடந்த ரஷ்யாவை முற்போக்குக் கொள்கைகள் மூலம் விடுவித்து ஐரோப்பியமயமாக்க இவர் செய்த முயற்சி ஓரளவு வெற்றி பெற்றது. அரச அவையைச் சேர்ந்தவர்கள், பிரபுக்கள் ஆகிய சமுதாயத்தின் மேல்தளத்தைச் சேர்ந்த மக்களிடையே மட்டும் முற்போக்குக் கருத்துக்கள் பரவினவேயன்றி, பாமர மக்களை அவை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை. இவருடைய சீர்திருத்தங்கள் மக்கள் நலனைக் கருதி மேற்கொள்ளப்பட்டவை என்று கூறுவதுதான் பொருந்தும். பீட்டரின் ஆட்சியைப் போலவே இவர் ஆட்சியிலும் அதிகாரம் முழுவதும் அரசியின் கையில் குவிக்கப்பட்டிருந்தது. நாட்டின் நிர்வாகப் பிரிவுகளான 'மாநிலங்கள்' (Governments), 'மாவட்டங்கள்' (Districts) திருத்தியமைக்கப்பட்டு, கவர்னர், உதவி கவர்னர் போன்ற அதிகாரிகள் இவற்றை ஆள நியமிக்கப்பட்டனர். நீதி நிர்வாகத் துறையிலும் இவர் சில மாறுதல்களைச் செய்தார். நாட்டில் நிலவிவந்த பல்வேறு வகையான சட்டங்களின் தொகுப்பைத் தயாரிக்க ஒரு குழுவை நியமித்து, எந்த அடிப்படையில் இந்தச் சட்டங்களின் தொகுப்பு தயாரிக்கப்பட வேண்டும் என்று ஆணைகள் விடுத்தார். திருச்சபையைத் தன் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவரும் நோக்கத்துடன், திருச்சபையின் நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன; இந் நிலங்களை உழுத குடியானவர்களும் அரசு உடைமைகளாக ஆக்கப்பட்டனர். இவருடைய ஆட்சியை ஆதரித்த பிரபுக்களுக்கு நிர்வாகத் துறையிலும், படைத் துறையிலும் உயர்பதவிகளைக் கொடுத்தார். உண்மையாக ஊழியம் செய்த பிரபுக்களுக்கு நிலத்தையும் அதை உழுவதற்குக் குடியானவர்களையும் ஆதரித்தார் பிரபுக்கள் வரி செலுத்துவதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்தனர். இவ்வாறு காதரின் ஆட்சியில் பிரபுக்கள் சிறப்புரிமைகள் பெற்ற ஒரு தனி வகுப்பினராக இருந்த போதிலும், அவர்கள் அரசியல் துறையில் எந்தவித முக்கியத்துவமும் பெற்றிருக்கவில்லை. 'நில அடிமை முறையை' (Serfdom) ஒழிக்க வேண்டுமென்ற ஆர்வம் கொண்டிருந்த காதரின், அரசின் நிலங்களில் பணிசெய்து வந்த குடியானவர்களின் நிலைமையை முன்னேற்ற முயற்சிகள் செய்தார். ஆனால், பிரபுக்களின் எதிர்ப்பு காரணமாக, பிரபுக்கள் நிலத்தை உழுது கொண்டிருந்த ஆயிரக்கணக்கான குடியானவர்களின் நிலைமையில் எந்தவித மாற்றமும் இவரால் செய்ய முடியவில்லை. அந்த நூற்றாண்டின் அறிவு வளர்ச்சி, விஞ்ஞான வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்த காதரின், ரஷ்யாவில் பல பள்ளிகளையும், ஆராய்ச்சிக் கூடங்களையும் நிறுவினார். ரஷ்ய இலக்கிய வளர்ச்சிக்கு

ஆக்கம் அளித்தார். 'கெரஸ்கோவ்' (Keraskoff), 'விஷின்' (Visin), 'டெர்ஷாவின்' (Derzhavin) போன்ற ரஷ்யக் கவிஞர்கள் இவரால் போற்றி ஆதரிக்கப்பட்டனர்.

### வெளிநாட்டுக் கொள்கை

வெளிநாட்டு விவகாரங்களில் இவர் பெற்ற வெற்றி இவருக்கு அழியாப் புகழைத் தேடித் தந்தது. இதன் அடிப்படையில்தான் இவர் 'மகா காதரின்' என்று அழைக்கப்படும் தகுதி பெறுகின்றார். ரஷ்யா ஐரோப்பாவை நோக்கி முன்னேறுவதற்குத் தடையாக இருந்த ஸ்வீடன், போலந்து, துருக்கி ஆகிய மூன்று நாடுகளில் ஸ்வீடனின் ஆதிக்கம் ஏற்கனவே பீட்டரால் ஒழிக்கப்பட்டு 'நைஸ்டாட் உடன்படிக்கை' (Treaty of Nystad) யின்படி பால்டிக் மாநிலங்களை ஸ்வீடன் ரஷ்யாவுக்குக் கொடுக்க ஒப்புக்கொண்டது என்பதை முன்பு கண்டோம். எனவே, எஞ்சியிருந்த போலந்து, துருக்கி ஆகிய நாடுகளின் ஆதிக்கத்தை ஒடுக்கும் பணியைக் காதரின் இப்பொழுது மேற்கொண்டார். போலந்தும், துருக்கியும் பரந்த அரசுகளாக இருந்த போதிலும், ரஷ்யாவை எதிர்க்கக் கூடிய வலிமையும், ஆற்றலும் பெற்றிருக்கவில்லை.

### போலந்து

காதரின் அரியணை ஏறியபொழுது போலந்து ஒரு பரிதாபகரமான நிலையிலிருந்தது. அரசனுடைய அதிகாரங்களைப் பிரபுக்கள் கைப்பற்றித் தேசியப் பாராளுமன்றம் வலியிழந்து காணப்பட்டது. இந்தப் பாராளுமன்றத்தில் பிரபுக்கள் மட்டும்தான் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஒவ்வொரு உறுப்பினரும் 'liberum veto' என்ற வெட்டாதிகாரம் பெற்றிருந்தனர். இதன்படி ஒரே ஒரு உறுப்பினர் தன்னுடைய வெட்டாதிகாரத்தின்மூலம் பாராளுமன்றம் சட்டம் இயற்றுவதையோ, தீர்மானங்கள் நிறைவேற்றுவதையோ தடைசெய்ய முடியும். இதனால் மத்திய அரசாங்கம் செயலற்று இருந்தது. பிரபுக்களிடையே போட்டி, பூசல்கள் மலிந்து நாடு குழப்ப நிலையிலிருந்தது. இந்தச் சூழ்நிலை அண்டையிலிருந்த ரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய வல்லரசுகள் போலந்து விவகாரங்களில் தலையிடச் சாதகமாக அமைந்தது. இந்த வல்லரசுகளின் தலையீட்டின் விளைவாகப் போலந்து அவைகளிடையே பங்கிடப்பட்டு ஐரோப்பாப் படத்திலிருந்தே (Map) அகற்றப்பட்டது.

போலந்துக்குச் சொந்தமானபகுதிகளை அபகரிக்கும் நோக்கத்துடன் காதரின் ஒரு திட்டம் வகுத்து, அதைச் செயல்படுத்த பிரஷ்யாவின் மன்னரான 'மகா ஃபிரடெரிக்கின்' (Frederick II, The Great) உதவியை நாடினார். போலந்து 'சாக்ஸனியின்'(Saxony)

அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களால் ஆளப்பட்டு வந்தது. 1763-ல் சாக்ஸனியின் தேர்வாளரும், போலந்து அரசருமான 'மூன்றும் அகஸ்டஸ்' (Augustus III, 1734-1763) இறந்தார். இது போலந்து விவகாரத்தில் வல்லரசுகள் தலையீட்டிற்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்தியது. சாக்ஸனி அரச குடும்பத்தைச் சேர்ந்த எவரையும் போலந்து அரசராக ஏற்றுக்கொள்ள மறுக்கு மாறு போலந்துப் பிரபுக்களைக் காதரின் தூண்டினார். அது மட்டு மின்றித் தன் அரச அவையைச் சேர்ந்த, தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான 'ஸ்டானிஸ்லாஸ்' (Stanislaus Poniatousky) என்பவரைப் போலந்து அரசராகத் தேர்ந்தெடுக்கும்படிச் செய்தார். இவர் தான் 1764-ல் 'இரண்டாம் ஸ்டானிஸ்லாஸ்' (Stanislaus II) என்ற பட்டத்துடன் போலந்து அரியணை ஏறினார். இவ்வாறு போலந்தில் ரஷ்யாவின் செல்வாக்கு வளரத் தொடங்கியது. போலந்து வலிமையற்ற, குழப்பநிலையில் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதுதான் காதரினின் நோக்கம். தங்களை வலுப் படுத்திக் கொள்ளவும், ஒரு புது அரசியலமைப்பை நிறுவவும் போலந்து மக்களால் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் வன்முறைகள் மூலம் முறியடிக்கப்பட்டன. பிரபுக்களிடையேயும், கத்தோலிக்க பிராடஸ்டென்டுகளுக்கிடையேயும் நடந்து கொண் டிருந்த பூசல்களை ரஷ்யா, பிரஷ்யா ஆகிய நாடுகள் ஊக்குவித்தன அந்நியர்களுடைய தலையீட்டை எதிர்த்துப் போலந்தின் கத்தோலிக்கர்கள் ஒரு கிளர்ச்சி செய்தனர். காதரின் ரஷ்யப் படையைக் கொண்டு இக்கிளர்ச்சியை ஒடுக்கினார். இறுதியில் போலந்து பிரபுக்களுடன் ரஷ்யாவும், பிரஷ்யாவும் ஓர் உடன்பாட்டைச் செய்து கொண்டன (1768). இதன்படி தங்களுடைய வலிமை யின்மைக்கும், குழப்பங்களுக்கும் காரணமான போலந்தின் அரசியல் அமைப்பை அரசியின் சம்மதமின்றி மாற்றுவதில்லை என்று போலந்து மக்கள் உறுதி அளித்தனர்.

### போலந்துப் பிரிவினைகள் (Partitions of Poland)

முதல் பிரிவினை 1772 : பதினெட்டாம் நூற்றுண்டில் வலிமை குன்றி, நாடுபிடிக்கும் வெறிகொண்ட வல்லரசுகளால் சூழப்பட்ட போலந்து, விரைவிலேயே சுதந்திர நாடு என்ற நிலையை இழந்து வல்லரசுகளின் ஆதிக்கப் பசிக்கு இரையாகும் என்பது எல்லோரா லும் எதிர்பார்க்கப்பட்ட ஒரு நிகழ்ச்சியாகும். காதரின் அப்பொழுது துருக்கியுடன் ஒரு போரில் ஈடுபட்டிருந்த போதிலும் போலந்தைக் கைப்பற்றும் திட்டத்தை மறந்துவிடவில்லை. இந்த நோக்கத்துடன் 1772-ல் போலந்தின் முதல் பிரிவினைத் திட்டம் வகுக்கப்பட்டது. துருக்கியுடன் நடத்திக் கொண்டிருந்த போரில்

ரஷ்யா பெற்ற பல வெற்றிகளைக் கண்டு ஆஸ்திரியா பொறுமையும் அச்சமும் கொண்டது. எனவே, மரியா தெரிசா 1771-ல் துருக்கியோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு அதற்கு உதவி செய்தார். இதனால் ரஷ்யாவுக்கும், ஆஸ்திரியாவுக்கும் போர் ஏற்படக்கூடிய சூழ்நிலை உருவாகியது. இதைத் தவிர்க்க பிரஷ்யாவின் இரண்டாம் ஃபிரடெரிக் போலந்துப் பிரிவினைத் திட்டத்தை வகுத்தார். காதரின் உடனே இத்திட்டத்தை ஏற்றுக் கொண்டார். முதலில் இத்திட்டத்தை ஒப்புக்கொள்ளத் தயங்கிய மரியா தெரிசா இறுதியில் இத்திட்டத்தில் ஒத்துழைக்கச் சம்மதித்தார். ஐரோப்பிய வரலாற்றில் போலந்தின் முதல் பிரிவினை என்றழைக்கப்படும் இந்த ஏற்பாட்டின்படி 'டியூனு' (Duna), 'நீபர்' (Dnieper) ஆறுகளுக்குக் கிழக்கில் அமைந்த 'பைலோ-ரஷ்யா' (Byelo Russia), ஊக்ரேயின் மாநிலத்தின் பெரும்பகுதி (Most of the Ukraine) ஆகியவற்றைப் போலந்திடமிருந்து ரஷ்யா பெற்றது. 'டான்சிக்' (Danzig), 'தார்ன்' (Thorn) நகரங்கள் நீங்கலாக மேற்குப் பிரஷ்யா முழுவதும் பிரஷ்யாவுக்குக் கிடைத்தது. கிழக்குப் பிரஷ்யாவையும், பிராண்டன்பர்கையும் இணைக்க இது உதவியது. 'கிராக்கோவ்' (Cracow) பட்டினம் நீங்கலாக 'காலிஷியா' (Galicia) என்னும் பகுதி ஆஸ்திரியாவுக்குக் கொடுக்கப்பட்டது. மரியா தெரிசா இந்தத் திட்டத்தைத் தான் வெறுப்பதாக மீண்டும் மீண்டும் கூறிக் கொண்டேயிருந்தாலும், "கொடுத்தவற்றையெல்லாம் பெற்றுக் கொண்டேயிருந்தார்" என்று மகா ஃபிரடெரிக் இவரைப் பற்றி ஏளனமாகக் குறிப்பிடுகின்றார். இதன் விளைவாக, போலந்து தன் மக்கட் தொகையில் மூன்றில் ஒரு பகுதியையும், செல்வத்தில் பாதியையும் இழந்தது.

**இரண்டாவது பிரிவினை 1793:** முதலாவது பிரிவினையால் பெரிதும் பாதிக்கப்பட்ட போலந்து மக்கள், தங்கள் நிலையைச் சீர்படுத்தி அமைத்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்து, அரசியலமைப்பில் பல மாறுதல்களைச் செய்யும் முயற்சியை மேற்கொண்டனர். ஆனால், வல்லரசுகள் இம் முயற்சிகள் வெற்றி பெறுவண்ணம் தடுத்தன. 1768-ல் போலந்து மக்கள் செய்துகொண்ட ஒப்பந்தத்திற்கு முரண்பட்டது இந்த முயற்சி என்று ரஷ்யாவும், பிரஷ்யாவும் வாதாடின. 1793-ல் ரஷ்யா போலந்தின் கிழக்கு, தென்கிழக்குப் பகுதிகளையும், பிரஷ்யா 'போசனையும்' (Posen) 'வார்சா' (Warsaw) வரை மேற்குப் போலந்தையும் எடுத்துக்கொண்டன. இந்தப் பங்கீட்டில் ஆஸ்திரியா சேரவில்லை.

மூன்ருவது பிரிவினை 1975 : இந்த அநீதியையும் அந்நியத் தலையீட்டையும் எதிர்த்துப் போலந்து மக்கள் 'கோஸியுஸ்கோ' (Kosciusko) என்பவரின் தலைமையில் ஒரு தேசிய விடுதலைப் போரைத் தொடங்கினர். இந்த நெருக்கடியான நேரத்தில்கூட போலந்துப் பிரபுக்கள், இவருடன் ஒத்துழைக்க முன்வரவில்லை. ரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய நாடுகளின் படைகள் போலந்தில் புகுந்து இந்த விடுதலை இயக்கத்தை நசுக்கின. கோஸியூஸ்கோ போரில் தோற்கடிக்கப்பட்டு, சிறைப்பிடிக்கப் பட்டார். இந்த விடுதலை வீரரின் வீழ்ச்சியுடன், போலந்தின் விடுதலை இயக்கமும் வீழ்ச்சியடைந்தது என்று கூறலாம். 1795-ல் மூன்ருவது முறையாகப் போலந்துப் பிரிவினை செய்யப்பட்டது போலந்தின் எஞ்சியிருந்த பகுதிகள் யாவும் இந்த மூன்று நாடு களிடையே பகிர்ந்து கொள்ளப்பட்டன. ஐரோப்பாப் படத்தி லிருந்து போலந்து அகற்றப்பட்டது. நூற்று இருபத்தி மூன்று ஆண்டுகள் கழித்த பின்புதான் போலந்து மீண்டும் ஒரு சுதந்திர நாடாக விளங்கும் வாய்ப்பு பெற்றது. இந்தப் பிரிவினையின்படி 'விஸ்துலா' (Vistula) நதிப் பள்ளத்தாக்கின் மேல்பகுதி ஆஸ்திரி யாவுக்கும், கீழ்ப்பகுதி (வார்சா நகரம் உள்பட) பிரஷ்யாவுக்கும் போலந்தில் எஞ்சியிருந்த பகுதியான லிதுவேனியா முழுவதும் ரஷ்யாவுக்கும் கிடைத்தன.

இவ்வாறு பைலோ ரஷ்யா, உக்ரேன், லிதுவேனியா ஆகிய பகுதிகளைப் போலந்திடமிருந்து பெற்றதால் ரஷ்யாவினுடைய எல்லை, பிரஷ்ய ஆஸ்திரிய எல்லைகளுக்கு அடுத்து இருந்தது. இதனுல், ரஷ்யா நிலவியல் ரீதியாக ஐரோப்பிய நாடுகளில் ஒன்ருகக் கருதப்படுவதற்கான தகுதியைப் பெற்றது.

காதரினும் துருக்கியும்

அந்நியர்கள் தலையீட்டை எதிர்த்துப் போலந்து நாட்டுக் கத்தோலிக்கர்கள் புரட்சி செய்தனர் என்று முன்பு கூறினேம். புரட்சி ஒடுக்கப்பட்டு, புரட்சிக்காரர்களை விரட்டிச் செல்லும் பொழுது, தெற்கு எல்லையில் ரஷ்யப் படைகள் துருக்கிக்குச் சொந்தமான பகுதிகளில் நுழைய நேரிட்டது. இது இரு நாடுகளுக்கிடையே போர் மூள வழிகோலியது. மேலும் ரஷ்யாவின் அயல்நாட்டுக் கொள்கை துருக்கியின் மனதில் ஓர் அச்சத்தை ஏற்படுத்தியது. போலந்து அண்மையில் ஏற்பட்ட நிலை தனக்கும் எற்படக்கூடும் என்று துருக்கி அஞ்சியது. மேலும், வல்லரசுச் சமநிலையை நிலைநாட்டும் நோக்கத்துடனும், போலந்தின் உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்கத்துடனும்,

ஃபிரான்ஸ் துருக்கியை ரஷ்யாவுக்கு எதிராகப் போரிடும்படித் தூண்டியது.

1768லிருந்து 1774 வரை நடந்த இந்தப் போரில் ரஷ்யா பல வெற்றிகளைப் பெற்றது. அப்பொழுது துருக்கி ஒரு திறமை யற்ற, ஊழல் மலிந்த ஆட்சியின் கீழ் இருந்தது. ஒரு காலத்தில் ஐரோப்பாவே கண்டு அஞ்சிய ஒரு பெரும் படையைப் பெற்றி ருந்த துருக்கி, படை அமைப்பு, போர் முறைகள், படைத் தளவாடங்கள், படைத் தலைவர்கள் ஆகியவற்றில் இப்பொழுது மிகவும் பின்தங்கிய நிலையிலிருந்தது. எனவே, துருக்கியின் படைகள் இப்போரில் எளிதில் தோற்கடிக்கப்பட்டன. பீட்டரி னால் துருக்கிக்கு மீண்டும் அளிக்கப்பட்ட அசோவ் நகரம் ரஷ்யர் களால் கைப்பற்றப்பட்டது. மால்டேவியா, வாலேஷியா ஆகிய பகுதிகளும், புகாரெஸ்ட் நகரமும் பிடிபட்டன. டான்யூப் ஆற்றைக் கடந்து பால்கன் தீபகற்பத்தில் ரஷ்யப்படைகள் நுழைய முயற்சித்தன. ஆசியா மைனரில் நடந்த ஒரு கடற்போரிலும் துருக்கியர்கள் தோற்கடிக்கப்பட்டனர். மேலும், தொடர்ந்து போரை நடத்துவது பயனற்றது என்பதை உணர்ந்த துருக்கி ரஷ்யாவுடன் 1774-ல் 'குசுக்கைனர்ஜி' (Kuchuk Kainarji) உடன் படிக்கையைச் செய்து கொண்டது. இதன்படி 1. துருக்கி அசோவ் துறைமுகத்தையும் அதை அடுத்த பகுதியையும் ரஷ்யா வுக்குக் கொடுக்க ஒப்புக்கொண்டது. 2. கருங்கடலுக்கு வட பகுதியிலுள்ள பிரதேசங்களின்மீது தனக்கிருக்கும் ஆதிக்கத்தைத் துருக்கி விட்டுக்கொடுக்க இசைந்தது. 3. வாலேஷியா, மால்டேவியா, கிரீஸ் ஆகிய பகுதிகளைத் துருக்கியே வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டது. ஆனால், அப்பகுதி மக்களுக்கு நல்லதொரு ஆட்சியை அமைப்பதாகத் துருக்கி உறுதி அளித்தது. 4. வியாபாரத்தின் பொருட்டுப் 'பாஸ்பரஸ்' (Bosphorus), 'டார்டனல்ஸ்' (Dardanelles) போன்ற துருக்கியின் கடற்பகுதி களில் ரஷ்யக் கப்பல்கள் நுழைவது அனுமதிக்கப்பட்டது. 5. கான்ஸ்டாண்டி நோபிள் நகரிலுள்ள சில கிறிஸ்துவ ஆலயங் களைப் பாதுகாக்கும் உரிமையும், துருக்கியர் ஆளுகையில் இருக்கும் கிறிஸ்துவர்களின் சார்பில் பேசும் உரிமையும் ரஷ்யாவுக்கு அளிக்கப்பட்டன.

**விளைவுகள்**

1. பீட்டரின் காலத்தில் ஏற்பட்ட நைஸ்டாட் உடன் படிக்கையின் விளைவாகப் பால்டிக் பிரதேசத்தில் ஸ்வீடனின் ஆதிக்கம் குன்றி, ரஷ்யாவின் ஆதிக்கம் தொடங்கியதுபோல காதரின் காலத்தில் இந்த உடன்படிக்கையின் விளைவாகக் கிழக்கு ஐரோப்பாவில் துருக்கியின் வீழ்ச்சி தொடங்கி ரஷ்யாவின்

ஆதிக்கம் வளர ஆரம்பித்தது. 2. தெற்கு ஐரோப்பாவில் ரஷ்யா ஓர் இயற்கை எல்லையைப் பெற்றது. கருங்கடற் பிரதேசத்தில் ரஷ்யா ஒரு முக்கிய அரசாக விளங்கியது. பாஸ்பரஸ், டார்டனல்ஸ் வழியாக ரஷ்ய வியாபாரக் கப்பல்கள் மத்தியதரைக் கடற்பகுதியில் தடையின்றிச் செல்ல வாய்ப்பு ஏற்பட்டது. இவ்வாறு ஐரோப்பாவுடன் தொடர்பு கொள்ள ரஷ்யாவுக்கு இரண்டாவது வழி கிடைத்தது. (Second 'Window to the West') 3. துருக்கியப் பேரரசில் வாழும் கிறிஸ்துவர்களை யும், கிறிஸ்துவ ஆலயங்களையும் பாதுகாக்கும் உரிமையை ரஷ்யா பெற்றதால், பிற்காலத்தில் துருக்கியப் பேரரசின் விவகாரங்களில் அடிக்கடி தலையிட இதை ஒரு காரணமாக ரஷ்யா பயன்படுத்திக் கொண்டது.

அடுத்து, காதரின் கருங்கடலுக்கு வடக்கிலுள்ள 'கிரிமியா' என்ற பகுதியின்மீது தன் ஆதிக்கத்தை ஏற்படுத்தும் பணியை மேற்கொண்டார். கிரிமியா ரஷ்யாவுடன் சேரவேண்டுமென்றும், அதை எதிர்த்தும் இரண்டு கட்சிகள் இருந்தன. இவைகளுக் கிடையே இருந்த கருத்து வேற்றுமைகளைப் பயன்படுத்திக் கொண்டு காதரின் 1784-ல் ரஷ்யப் படைகளை அனுப்பிக் கிரிமியாவை ரஷ்யாவுடன் இணைத்துக் கொண்டார். கிரிமியாவில் 'செவஸ்டாபோல்' (Sevastapol) என்னுமிடத்தில் ரஷ்யக் கப்பற் படைத்தளம் ஒன்று அமைக்கப்பட்டது.

இதைக் கண்டு ஆத்திரமுற்ற துருக்கி 1787-ல் ரஷ்யாவுடன் மீண்டும் ஒரு போரைத் தொடங்கியது. 1792 வரை நடந்த இப் போரிலும் ரஷ்யா மகத்தான வெற்றி பெற்றது. இறுதியில் துருக்கி 1792-ல் 'ஜெஸி' (Jassy) உடன்படிக்கையின் மூலம் போரை முடித்துக் கொண்டது. இதன்படி கிரிமியா ரஷ்யாவின் ஆதிக்கத்திற்குட்பட்ட பகுதி என்பதைத் துருக்கி ஏற்றுக் கொண்டது. கருங்கடலுக்கும், காஸ்பியன் கடலுக்குமிடையி லுள்ள காகஸஸ் பகுதியையும் ரஷ்யா பெற்றது. இவ்வாறு ரஷ் யாவின் எல்லை மேற்கே 'நீஸ்டர்' ஆறு வரை (Dniester) விரிவ டைந்தது. கான்ஸ்டாண்டிநோபிள் நகரையும் ரஷ்யாவின் ஆதிக்கத்திற்குட்படுத்த வேண்டுமென்பது காதரின் திட்டம். ஆனால், அந்தக் கனவு நிறைவேறுவதற்கு முன்பே 1796-ல் காதரின் இறந்துவிட்டார்.

மதிப்பீடு: ரஷ்யாவை ஓர் ஐரோப்பிய நாடாக ஆக்கியது பீட்டரின் சாதனை என்றால், அதை ஓர் உன்னத நிலைக்குக்

கொண்டுவந்து, புகழ் ஏணியின் உச்சியில் வைத்தது காதரின் சாதனை என்று கூறலாம். ஐரோப்பிய அரசு முறையில் ரஷ்யா ஒரு முக்கிய பங்கை ஏற்கும் நிலையை உருவாக்கியவர் காதரின் என்பதை எவரும் மறுக்க முடியாது. கருங்கடற் பகுதியில் முக்கியமான துறைமுகங்களைப் பெற்றதும், மேற்குத் திசையில் ரஷ்யாவின் எல்லையை ஐரோப்பாக் கண்டத்தின் மையப் பகுதி வரை விரிவடையச் செய்ததும் இவருடைய மகத்தான சாதனைகளாகும். ஆனால், ரஷ்யாவின் இந்தப் பெரும் வளர்ச்சி ஸ்விடன், போலந்து, துருக்கி போன்ற நாடுகளின் வளர்ச்சியை மிகவும் பாதித்தது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

## ரோமனேவ் வம்சம் (சார் மன்னர்கள்)




குறிப்பு :—'தி' – திருமணம்

## 12. ஸ்வீடனின் எழுச்சியும், வீழ்ச்சியும்

பால்டிக் கடலை ஒட்டிய பகுதிகள் செழிப்பற்றவையாகவும், அங்கு அமைந்திருந்த துறைமுகங்கள் ஆண்டின் பெரும் பகுதி பனிக்கட்டியால் மூடப்பட்டிருந்ததாலும் அந்நாடுகள் ஐரோப்பிய வரலாற்றில் மத்தியதரைக்கடல் நாடுகளைப்போல ஒரு முக்கிய பங்கை ஏற்க முடியவில்லை. ஐரோப்பிய வரலாற்றின் இடைக் காலத்தில் பால்டிக் பகுதியில் தோன்றிய டென்மார்க், நார்வே, ஸ்வீடன் ஆகிய நாடுகளிடையே இனம், சமூக அமைப்பு ஆகிய துறைகளில் பல ஒற்றுமைகள் இருந்தன. 1397-ல் 'கால்மார் இக்கியம்' (Union of Calmar) என்ற ஓர் ஏற்பாட்டின்படி இந்த மூன்று அரசுகளும் ஒன்றாக இணைக்கப்பட்டு டென்மார்க் அரசி மார்கரெட்டின் ஆட்சிக்குட்படுத்தப்பட்டன. ஆனால், இந்த இக்கியம் வெகு நாட்கள் நீடிக்கவில்லை. பதினாறும் நூற்றாண்டில் ஸ்வீடனில் தேசிய உணர்வு தலை தூக்கியது. ஸ்வீடன் மக்கள் டென்மார்க்கின் ஆட்சியை வெறுத்தனர். அந்நிய ஆட்சியை ஒழிக்கும் நோக்கத்துடன் பல கிளர்ச்சிகள் ஏற்பட்டன. இந்தக் கிளர்ச்சிகளை எல்லாம் ஒடுக்கி 'இரண்டாம் கிறிஸ்டியன்' (Christain II) என்ற டென்மார்க் அரசர் மீண்டும் ஸ்வீடன்மீது டென்மார்க்கின் ஆதிக்கத்தை ஏற்படுத்தினார். கிறிஸ்டியனின் அடக்குமுறையையும், அவர் கத்தோலிக்க சமயத்தை ஸ்வீடன் மீது திணிக்கச் செய்த முயற்சியையும் வெறுத்த ஸ்வீடன் மக்கள் மீண்டும் கிளர்ச்சிகள் செய்தனர். டென்மார்க்கின் ஆதிக்கத்தை எதிர்த்து நடந்த கிளர்ச்சிகளுக்குத் தலைமை தாங்கிய 'வாசா' (Vasa) என்ற பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்த 'குஸ்தாவஸ்' (Gustavus vasa) 1523-ல் ஸ்வீடனின் மன்னராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். இவ்வாறு அந்த ஆண்டில் டென்மார்க்கின் ஆட்சியி லிருந்து ஸ்வீடன் விடுதலை பெற்றது. ஐரோப்பிய வரலாற்றில் புகழ் பெற்ற பல அரச குடும்பங்களில் ஒன்றான வாசா அரச குடும் பத்தின் ஆட்சி தொடங்கியது.

## குஸ்தாவஸ் வாசா (Gustavus Vasa, 1523-1560)

ஸ்வீடன் நாட்டின் வரலாறு என்பது அந்நாட்டு மன்னர்களின் வரலாறு ஆகும். ஏனெனில், ஸ்வீடன் நாட்டின் எழுச்சிக்கும், அதன் புகழுக்கும் காரணமானவர்கள் வாசா குடும்பத்தைச் சேர்ந்த அரசர்கள்தாம். அவர்களுடைய ஆற்றலும் சாதனை களும்தான் ஸ்வீடனை ஓர் உன்னத நிலைக்குக் கொண்டு வந்தன. பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் இந்த அரசர்கள் ஐரோப்பிய விவகாரங்களில் ஒரு முக்கிய பங்கேற்று, ஸ்வீடனின் புகழ் மேலும் வளரத் தொடங்கியது. குஸ்தாவஸ் வாசா அரியணையேறியதும் நாட்டில் ஒழுங்கையும், அமைதியையும் நிலை நாட்டி, பாராளுமன்றத்தின் அதிகாரத்தைக் குறைத்தும், பிரபுக் களின் செல்வாக்கை ஒடுக்கியும் தம்முடைய வல்லாட்சியை நிறுவினார். அப்பொழுது ஐரோப்பாவில் லூதரின் பிராடஸ் டெண்டு சமயம் வேகமாகப் பரவிக் கொண்டுவந்தது. வாசாவி னுடைய ஆட்சியில் ஸ்வீடனிலும் பிராடஸ்டெண்டு சமயம் பரவியது. டென்மார்க்கின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற வேண்டுமென்ற கொள்கையின் அடிப்படையில் தேசிய வாதிகள் வாசாவை ஸ்வீடனின் அரசராகத் தேர்ந்தெடுத்தார்கள். ஆனால், ஒரு சிறுபான்மைக் கட்சியினர் மட்டும் 'உப்ஸலாவின் ஆர்ச் பிஷப்பின்' தலைமையில் (Archbishop of Upsala) ஸ்வீடன் டென்மார்க்குடன் இணைந்திருக்க வேண்டும் என்று விரும்பினர். ஸ்வீடனின் தேசியத்திற்கு விரோதியான இந்த ஆர்ச்பிஷப்பைப் பதவியிலிருந்து நீக்கும்படி வாசா போப்பை வேண்டிக் கொண்டார். போப் மறுத்ததால், வாசா போப்புடன் தொடர்பை அறுத்துக் கொண்டு, ஸ்வீடனில் லூதரின் சமயம் புகுத்தப்பட்டது. திருச்சபையின் சொத்துகள் பறிமுதல் செய்யப் பட்டு, அரசினால் எடுத்துக் கொள்ளப்பட்டன. 1531-ல் பிராடஸ் டெண்டு ஒருவர் உப்ஸலாவின் ஆர்ச் பிஷப்பாக நியமிக்கப் பட்டார். இவ்வாறு குஸ்தாவஸ் வாசாவின் ஆட்சியில் ஸ்வீடன் வலிமை பொருந்திய ஒரு நாடாக விளங்கினாலும், அண்டை நாடான ரஷ்யா தன் ஆதிக்கத்தை மேற்கே பரப்ப முயற்சித்தால், ஸ்வீடன் பாதிக்கப்படும் என்ற ஒரு நிலை ஸ்வீடன் மக்களிடையே அச்சத்தை ஏற்படுத்தியது.

1560-ல் வாசா இறந்தவுடன் ஏறக்குறைய ஐம்பது ஆண்டு களுக்கு ஸ்வீடனில் மீண்டும் குழப்பம் நிலவியது. இவருக்குப்பின் பட்டத்திற்கு வந்த 'பதினான்காம் எரிக்' (Eric XIV, 1560-68) என் பவரின் ஆட்சியில் எஸ்தோனியா கைப்பற்றப்பட்டு, பால்டிக் கடலின் கிழக்குக் கரைப் பகுதியில் ஸ்வீடனின் ஆதிக்கம் ஏற்படுத்

தப்பட்டது. இவர் ஆட்சியிலும் பிராடஸ்டென்டு சமயம் போற்றி வளர்க்கப்பட்டது. இவருடைய வலிமையின்மைக் காரணத்தினால் பிரபுக்கள் ஆதிக்கம் மீண்டும் வளர ஆரம்பித்தது. இவருக்குப் பின் பட்டமெய்திய மூன்றும் ஜான் (John III, 1568–1592) போலந்து இளவரசி ஒருவரை மணந்து கொண்டு ஸ்வீடனில் கத்தோலிக்க சமயத்தைப் புகுத்த முயன்றார். மக்கள் இதை எதிர்த்தனர். இவருக்குப் பிறகு அரியணை ஏறிய இவர் மகன் 'சிஜிஸ்மண்ட்' (Sigismund, 1592–99) ஒரு தீவிர கத்தோலிக்கவாதி ஆவார். இவர் ஸ்வீடன் அரசராகப் பதவி ஏற்பதற்கு முன்பே போலந்து அரசராக 1587-ல் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் கத்தோலிக்கரானதாலும், தன் கவனம் முழுவதையும் போலந்து மீதே செலுத்தியதாலும் ஸ்வீடன் மக்கள் இவரை விரும்பவில்லை. பெயரளவில்தான் அரசராக இருந்தார். இவருடைய சிறிய தகப்பனார் சார்லஸ் என்பவர் உண்மையில் ஸ்வீடனை ஆண்டு வந்தார். 1598-ல் போலந்திலிருந்து ஒரு படையுடன் வந்து அதிகாரத்தைக் கைப்பற்ற சிஜிஸ்மண்ட் செய்த முயற்சி தோல்வியுற்றது. 1599-ல் இவர் பாராளுமன்றத்தினால் பதவியிலிருந்து நீக்கப்பட்டு சார்லஸ் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 'ஒன்பதாம் சார்லஸ்' (Charles IX) என்ற பட்டத்துடன் 1604-ல் முடிசூட்டிக் கொண்ட இவர் 1611 வரை ஆண்டார். இவர் ஒரு தீவிர பிராடஸ்டென்டுவாதி ஆவார். இவரது முயற்சியின் விளைவாகப் பிராடஸ்டென்டு சமயம் ஸ்வீடனில் வேரூன்றியது.

## குஸ்தாவஸ் அடால்பஸ்
## (Gustavus Adolphus, 1611-1632)

இந்த நிலையில்தான் இவரது மகன் 'குஸ்தாவஸ் அடால்பஸ்' (Gustavus II, Adolphus) ஸ்வீடனின் அரியணை ஏறினார். இவர் ஆட்சியில் ஸ்வீடன் ஓர் உன்னத நிலையை அடைந்தது. அரசியல், போர்த் துறைகளில் நல்ல திறமை பெற்ற அரசர் இவர். குறைந்த செல்வ வளமும், மக்கட் தொகையும் கொண்ட ஸ்வீடன், போலந்து, டென்மார்க், ரஷ்யா போன்ற நாடுகளால் சூழப்பட்டு வளர்ச்சிக்கான வாய்ப்புகள் இல்லாமல் இருந்தது. இந்த நிலையிலிருந்த ஸ்வீடனை ஐரோப்பிய அரசியலில் முன்னணிக்குக் கொண்டு வந்த பெருமை இவரையே சாரும்.

ஆக்ரமிப்புக் கொள்கையைக் கடைப்பிடித்தால்தான் ஸ்வீடன் முன்னேற முடியும் என்பதை உணர்ந்த இவர் ஆக்ரமிப்புப் போர்களில் ஈடுபட்டார். இவருடைய நோக்கம் பால்டிக் கடற்கரைப் பகுதி முழுவதையும் ஸ்வீடனின் ஆதிக்கத்திற்குட்

படுத்தி, பால்டிக் கடலை ஸ்வீடனின் ஓர் ஏரியாக ஆக்கவேண்டும் என்பது. போர்கள் புரிந்து நாடு பிடிக்கவேண்டுமென்பது மட்டும் இவர் குறிக்கோள் அன்று. ஸ்வீடனின் சுதந்தரத்தையும், ஸ்வீடனின் பிராடஸ்டெண்டு சமயத்தையும் அந்நியர்களிட மிருந்து பாதுகாக்க, அவசியமானுல் போரில் ஈடுபட அவர் தயாராக இருந்தார். இவர் அரியணை ஏறிய உடனேயே டென்மார்க்குடன் ஒரு போர் புரியவேண்டியிருந்தது. ஏனெனில், டென்மார்க் அரசர் 'நான்காம் கிறிஸ்டியன்' (Christian IV) ஸ்வீடனுக்குச் சொந்தமான 'கால்மார்', 'எல்ஸ்ஸ்பர்க்' (Calmar and Elfsburg) என்ற இரண்டு இடங்களைக் கைப்பற்றினுர். அவற்றை மீட்கும் நோக்கத்துடன் 1611-ல் தொடங்கப்பட்ட போர் 1613-ல் வெற்றிகரமாக முடிவடைந்து, இவ்விரு இடங் களையும் ஸ்வீடன் மீண்டும் பெற்றது. 1614 முதல் 1617 வரை ரஷ்யாவுடன் போர் புரிந்து 'ஸ்டோல்போவா உடன்படிக்கையின் படி, (Treaty of Stolbova) ரஷ்யாவிடமிருந்து, 'இங்கிரியா', 'கரேலியா' (Ingria and Karelia) ஆகிய பகுதிகளை பெற்ருர். ஸ்வீடனின் ஆதிக்கத்திற்குட்பட்ட லிவோனியா என்னும் பகுதியைப் போலந்து தாக்கியதால் 1625-ல் இவர் போலந்துடன் போர் புரிந்தார். 1629 வரை நடந்த இப்போரின் விளைவாக லிவோனியா, ஸ்வீடனின் ஆதிக்கத்திற்குட்பட்டது என்பது உறுதிப்படுத்தப்பட்டது. மேலும், பிரஷ்யாவில் சில பகுதிகளைப் போலந்திடமிருந்து ஸ்வீடன் பெற்றது. இந்தப் போர்களின் முக்கி யத்துவம் என்னவெனில், ஸ்வீடனின் புகழும், பெருமையும் வளர்ந்ததோடு மட்டுமன்றி, ஸ்வீடனின் படைகள் போர்த் துறையில் சிறந்த பயிற்சி பெற இவை ஒரு நல்ல வாய்ப்புகள் அளித்தன.

### குஸ்தாவசும் முப்பதாண்டுப் போரும்

பால்டிக் பிரதேசத்தில் ஸ்வீடனின் ஆதிக்கத்தை நிலைநாட்ட இப்போர்கள் மட்டும் போதாது. பேரரசின் விவகாரங்களில் தலையிட வேண்டுமென்பதை உணர்ந்த குஸ்தாவஸ் ஒரு நல்ல வாய்ப்புக்காகக் காத்திருந்தார். இந்த வாய்ப்பு இவருக்கு 1630-ல் கிடைத்தது. ஐரோப்பாவில் முப்பதாண்டுப் போர் நடந்துகொண்டிருந்த காலம் அது. ஜெர்மனியில் பிராடஸ் டெண்டு வட மாநிலங்களை வாலன்ஸ்டின் என்னும் பேரரசின் தளபதி கைப்பற்றி நாடு. நகர்ப்புறங்களையெல்லாம் சூறையாடிக் கொண்டிருந்தார். ஜெர்மனியில் பிராடஸ்டெண்டு சமயம் ஒழிக்கப்பட்டுவிடும் என்ற ஒரு சூழ்நிலை உருவாகிக் கொண் டிருந்தது. மேலும், வாலன்ஸ்டின் டென்மார்க்மீது பெற்ற வெற்றிகள் பால்டிக் பிரதேசத்தில் ஹாப்ஸ்பர்க் ஆதிக்கம் வளரு

வதற்கு உதவி செய்தது. இது ஸ்வீடனின் சுதந்திரத்திற்கும், பால்டிக் பகுதியில் ஸ்வீடனின் செல்வாக்கு வளருவதற்கும் தடையாக இருக்கும் என்பதை உணர்ந்த குஸ்தாவஸ், ஹாப்ஸ்பர்குகளின் ஆதிக்கம் வளர்வதைத் தடுக்க முப்பதாண்டுப் போரில் தலையிட்டார்.[1] ஹாப்ஸ்பர்குகளின் ஆதிக்கம் எப்படியாவது ஒழிக்கப்பட வேண்டும் என்று விரும்பிய ஃபிரான்சின் அமைச்சர் கார்டினல் ரிசெல்யூவும் இப்போரில் ஈடுபடும்படிக் குஸ்தாவஸை ஊக்குவித்தார். இந்தப் போரை நடத்தப் பண உதவியும், படை உதவியும் செய்வதாக ரிசெல்யூ ஒப்புக்கொண்டார்.

1630-ல் குஸ்தாவஸின் படைகள் பாமரேனியா மாநிலத்தில் இறங்கின. பிராடண்டன்பர்க், சாக்ஸனி, மற்ற ஜெர்மானியப் பிராடஸ்டெண்டு அரசுகள் இவருக்கு உதவி செய்ய முன்வந்தன. 1631-ல் 'பிரெட்டன்பெல்ட்' (Breittenfeld) என்ற இடத்தில் நடந்த சண்டையில் பேரரசரின் தளபதி 'டில்லி' (Tilly) முறியடிக்கப்பட்டார். 1632-ல் குஸ்தாவஸ் கத்தோலிக்க மாநிலமான பவேரியாவில் நுழைந்தார். 'லெஷ்' (Lech) என்ற இடத்தில் நடந்த போரில் டில்லி கொல்லப்பட்டார். இந்த நெருக்கடியான நிலையில் பதவியிலிருந்து விலக்கப்பட்ட வாலன்ஸ்டின் மீண்டும் அழைக்கப்பட்டுப் போர்த் தலைமை அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அடுத்து 1632-ல் 'லூட்சென்' (Lutzen) என்ற இடத்தில் நடந்த போரில் வாலன்ஸ்டினின் படைகள் தோற்கடிக்கப்பட்டன. ஆனால், ஸ்வீடன் மன்னர் குஸ்தாவஸ் இப்போரில் உயிரிழந்தார். இப்போரின் இறுதியில் கையெழுத்திடப்பட்ட வெஸ்ட்பேலியா உடன்படிக்கை பால்டிக், வட கடற் பகுதிகளில் ஸ்வீடனின் செல்வாக்கு வளர வழிவகை செய்தது.

இந்தப் போர்ச் சாதனைகளைத் தவிர குஸ்தாவஸ் அடால்பஸ் பல நற்பணிகளையும் புரிந்தார். ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகள் குழப்பத்தில் ஆழ்ந்திருந்த ஸ்வீடனை அந்நிலையிலிருந்து மீட்டு ஒரு வலிமைமிக்க முடியாட்சியை ஏற்படுத்தியது. இவருடைய ஒரு சாதனையாகும். ஸ்வீடனின் இயற்கை வளத்தை அபிவிருத்தி செய்ய முயற்சிகளை மேற்கொண்ட முதல் அரசர் குஸ்தாவஸ். நாட்டின் நிதிநிலைமையைச் சீர்படுத்தினார். டச்சு மக்களின் உதவியுடன் ஸ்வீடனில் பல புதுத் தொழில்கள் தொடங்கப்பட்டன. கண்ணாடி, காகிதம், சர்க்கரை உற்பத்தி செய்ய தொழிற்சாலைகள் துவக்கப்பட்டன. இரும்பு, செம்பு, கந்தகம் போன்ற பொருள்கள்

[1] இந்தப் போரில் ஸ்வீடன் தலையிட்டது பற்றியும், போர் நிகழ்ச்சிகள் பற்றியும் "முப்பதாண்டுப் போர்" என்னும் தலைப்பின் கீழ் மேலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

ஏற்றுமதி செய்யப்பட்டன. 1629-ல் கப்பல் கட்டும் தொழிலை மேற்கொள்ள ஒரு கம்பெனி ஏற்படுத்தப்பட்டது. ஆப்பிரிக்கா, ஆசியா, தென் அமெரிக்கா ஆகிய பகுதிகளுடன் வியாபாரம் செய்ய ஒரு வியாபாரக் கம்பெனி நிறுவப்பட்டது (South Sea Company). இந்த நற்பணிகளையெல்லாம் புரிந்த 'வட ஐரோப்பாவின் சிங்கம்' என்று அழைக்கப்பட்ட குஸ்தாவஸ் (Lion of the North) 1632-ல் இறந்தது ஸ்வீடனுக்கு ஒரு பேரிழப்பாகும்.

## கிறிஸ்டியானா (1632-54)

குஸ்தாவஸுக்குப் பிறகு அவர் மகள் கிறிஸ்டியானா அரியணை ஏறினார். இவர் சிறிய பெண் என்ற காரணத்தினால் குஸ்தாவஸ் ஆட்சியில் அமைச்சராகப் பணியாற்றிய 'ஆக்செல் ஆக்சென் ஷியர்னா, (Axel Oxenstierna) என்பவர் காப்பாளராக நியமிக்கப் பட்டு 1644 வரை நிர்வாகத்தை அவரே கவனித்து வந்தார். குஸ்தாவஸ் இறந்தபிறகு தொடர்ந்து முப்பதாண்டுப் போரில் ஸ்வீடனை ஈடுபடுத்தித் தன் புகழையும், செல்வாக்கையும் பெருக்கிக் கொண்டார். 1644-ல் கிறிஸ்டியானா அரசுப் பொறுப்பைத் தானே ஏற்று முப்பதாண்டுப் போரிலிருந்து ஸ்வீடன் விலகக் காரணமாக இருந்தார். இவர் ஆட்சியில்தான் வெஸ்ட்பேலியா சமாதானம் கையெழுத்தாயிற்று. மேற்குப் பாமரேனியாவையும், பிரெமென், வெர்டன் ஆகிய பிஷப்ரிக்குகளையும் ஸ்வீடன் பெற்றது. பால்டிக் பிரதேசத்தில் தன் ஆதிக்கம் ஏற்பட வேண்டுமென்ற ஸ்வீடனின் குறிக்கோள் நிறைவேறியது. ஸ்வீடனின் புகழ் உச்சநிலையை அடைந்தது. மேலும், இவர் ஆட்சியில் 1642-45-ல் டென்மார்க்குடன் நடந்த போரின் விளைவாக 'ஹேலந்து' மாநிலமும் (Halland) ஸ்வீடனுக்குக் கிடைத்தது. ஆண்களைப் போல போர்த் திறமை பெற்ற இவர், கலை, அறிவு இயக்கங்களைப் போற்றி வளர்த்தார். 1654-ல் கத்தோலிக்க சமயத்தைத் தழுவிய இவர், பிராடஸ்டெண்டு நாடான ஸ்வீடனை, கத்தோலிக்கர் ஒருவர் ஆளுவது இயலாது என்பதை உணர்ந்து தன் அத்தை மகனான சார்லஸ் குஸ்தாவஸிடம் அரசை ஒப்புவித்துவிட்டு, பதவியிலிருந்து விலகிக் கொண்டார்.

இவர்தான் பத்தாம் சார்லஸ் (Charles X, 1654–1660) என்ற பட்டத்துடன் 1654-ல் முடிசூட்டிக் கொண்டார். அரியணை ஏறியவுடன் போலந்துடன் ஒரு போர்புரிய நேரிட்டது. திறமைமிக்க போர் வீரரான சார்லஸ் போலந்துமீது படையெடுத்து டான்சிக் நகரை முற்றுகையிட்டார். பிராண்டன்பர்கின் தேர்வாளர் 'ஃபிரெடரிக் வில்லியம்' (Fredrick William, the Great Elector) போலந்துடனும், டென்மார்க்குடனும் சேர்ந்து கொண்டு

ஸ்வீடனுக்கு எதிராக ஒரு முக்கூட்டு அணியை உருவாக்க முயற்சித்தார். உடனே சார்லஸ் டான்சிக் முற்றுகையைக் கைவிட்டு, ஃபிரெடரிக் வில்லியத்தின் ஆட்சிக்குட்பட்டிருந்த கிழக்குப் பாமரேனியாமீது தாக்குதல் தொடங்கினர். இதன் விளைவாக 'கோனிக்ஸ்பர்க் உடன்படிக்கை' (Treaty of Konigsberg) ஏற்பட்டு, கிழக்குப் பாமரேனியாமீது ஸ்வீடனின் ஆதிக்கத்தை ஃபிரெடரிக் வில்லியம் ஏற்றுக்கொண்டார்.

போலந்துடன் போர் தொடரப்பட்டது. 1656-ல் வார்சா என்னுமிடத்தில் நடந்த சண்டையில் போலந்து அரசர் 'ஜான் காசிமீர்' (John Casimir) தோற்கடிக்கப்பட்டார். இதற்கிடையே ரஷ்யாவும், டென்மார்க்கும் ஸ்வீடன்மீது போர் தொடுத்தன. டென்மார்க்கைப் பல போர்களில் தோற்கடித்துப் போரை வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருக்கும்பொழுது 1660-ல் சார்லஸ் திடீரென இறக்கவே போலந்துடன் 'ஒலிவா உடன்படிக்கையும்' (Treaty of Oliva) டென்மார்க்குடன் 'கோபன்ஹேகன் உடன்படிக்கையும்' (Treaty of Copenhagen), ரஷ்யாவுடன் 'கார்டிஸ் உடன்படிக்கையும்' (Treaty of Kardis) செய்து கொள்ளப்பட்டுப் போர்கள் முடிவடைந்தன.

## பதினோரும் சார்லஸ் (Charles XI, 1660-1697)

குழந்தையாக இருக்கும் பொழுதே பட்டமெய்தியதால் அரசுப் பொறுப்புகளை முக்கிய பிரபுக்களைக் கொண்ட ஒரு காப்பாளர் கவுன்சில் ஏற்றது. அரசருக்குச் சொந்தமான நிலங்களை இவர்கள் கவர்ந்து கொண்டு தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டனர். பதினான்காம் லூயியிடமிருந்து இலஞ்சம் பெற்றுக் கொண்டு அவருடன் ஸ்வீடன் நட்புறவு கொள்ள வழி வகை செய்தார்கள். 1672-ல் பதினோரும் சார்லஸ் ஆட்சிப் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொண்டு, லூயிக்கு ஆதரவாக டச்சுப் போரில் ஈடுபட்டார். 1675-ல் பிராண்டன்பர்க் தேர்வாளர் ஃபிரெடரிக் வில்லியத்திஞல் தோற்கடிக்கப்பட்டார். மேலும், ஸ்வீடனுக்குச் சொந்தமான மேற்குப் பாமரேனியாவையும் ஃபிரெடரிக் கைப்பற்றினர். ஆனால், 1967-ல் கையெழுத்தான, 'ஸெயின்ட் ஜெர்மையின் உடன்படிக்கை'யின் படி (Treaty of St. Germain) மேற்குப் பாமரேனியாவை ஸ்வீடன் மீண்டும் பெற்றது. 1679க்குப் பிறகு 1697-ல் இவர் ஆட்சி முடியும் வரை இவர் வேறு எந்தப் போரிலும் ஈடுபடவில்லை. இந்த அமைதிக் காலத்தில் அரசரின் அதிகாரத்தை மீண்டும் நிலைநாட்டும் பணியிலும், நாட்டின் செழிப்பை வளர்க்கும் பணியிலும், ஈடுபட்டார். பிரபுக்கள் கவர்ந்து கொண்டிருந்த அரசருடைய

நிலங்கள் மீட்கப்பட்டு, பிரபுக்களின் செல்வாக்கு ஒடுக்கப்பட்டது. அரசருடைய எதேச்சாதிகாரம் ஏற்படுத்தப்பட்டு, நிதித்துறையில் பிரபுக்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சிறப்புரிமைகளும், சலுகைகளும் ரத்து செய்யப்பட்டன. நிர்வாகத்திலிருந்த ஊழல்கள் நீக்கப்பட்டு நேர்மையான ஆட்சி ஏற்படுத்தப்பட்டது.

## பன்னிரண்டாம் சார்லஸ் (Charles XII, 1697-1718)

1697-ல் பதினொரும் சார்லஸ் இறக்கவே அவருடைய மகன் பன்னிரண்டாம் சார்லஸ் அரியணை ஏறினர். அப்பொழுது அவருக்கு வயது பதினைந்து. அரசர் ஓர் இளைஞர் என்ற காரணத்தினால் ஸ்வீடனை எளிதில் தோற்கடித்து, தாம் இழந்த நாடுகளை மீண்டும் பெற்றுவிடலாம் என்று மற்ற பால்டிக் பிரதேச நாடுகள் திட்டமிட்டன. 1699-ல் போலந்து, டென்மார்க், ரஷ்யா ஆகிய நாடுகள் ஸ்வீடனுக்கு எதிராக ஒரு கூட்டணியை அமைத்தன. கூட்டணி நாடுகள் தாக்குதலைத் தொடங்குவதற்கு முன்பே, இவருடைய படைகள் டென்மார்க்கில் புகுந்தன. இதைச் சற்றும் எதிர்பாராத டென்மார்க் அரசர் நான்காம் ஃபிரெடரிக், சார்லஸும் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு கூட்டணியிலிருந்து விலகினர். அப்பொழுது ரஷ்யாவின் மன்னர் பீட்டர் நார்வா நகரை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தார். 1700-ல் சார்லஸ் தம் படையுடன் நார்வா நோக்கி விரைந்தார். ரஷ்யப் படைகள் பல போர்களில் தோற்கடிக்கப்பட்டன. தம் படையை விட பல மடங்குகள் பெரிதான ரஷ்யப் படைகளைப் போர் தந்திர முறைகளைக் கையாண்டு இவர் தோற்கடித்தது ஒரு மாபெரும் சாதனையாகக் கருதப்படுகிறது.[1] அடுத்து இவர் படைகள் தெற்கு நோக்கிச் சென்று போலந்தினுள் நுழைந்தன. போலந்தை அப்பொழுது ஆண்டு கொண்டிருந்த சாக்ஸனி குடும்பத்தைச் சேர்ந்த அகஸ்டஸைப் பதவியிலிருந்து நீக்க வேண்டும் என்பது சார்லஸின் நோக்கம். 1702-ல் அகஸ்டஸின் படைகள் 'கிளிசோ' (Klissow) சண்டையில் முறியடிக்கப்பட்டு வார்சா பிடிபட்டது. பிறகு 'போசென்' (Posen), 'கிராகோ' (Cracow) நகரங்களும் பிடிபட்டன. 1704-ல் போலந்தின் 'டயட் சபை' (Diet) கூட்டப்பட்டு, அகஸ்டஸ் பதவியிலிருந்து விலக்கப்பட்டு சார்லஸினுல் நியமிக்கப்பட்ட 'ஸ்டானிஸ்லாஸ்' (Stanislaus) போலந்து அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

[1] "The battle of Narva brought Charles sudden fame, because throughout Europe the victory was acclaimed as one of strategy and science against brute strength." Europe in the seventeenth Century—David Ogg, page 458.

இவ்வாறு சார்லஸ் போலந்து விவகாரங்களில் ஈடுபட்டிருக்கையில், பீட்டர் தன் படை வலிமையைப் பெருக்கிக் கொண்டு இங்கிரியா, கரேலியா ஆகிய பகுதிகளைக் கவர்ந்து கொண்டார். சார்லஸ் ரஷ்யாமீது படையெடுக்கும் திட்டம் ஒன்றை வகுத்து, மாஸ்கோ நோக்கிப் புறப்பட்டார். 1708-1709-ல் ஸ்வீடனின் படைகள் பனியினாலும், குளிரினாலும் சொல்லொணாத் துயரங்களுக்கு ஆளாயின. இறுதியில் 1709-ல் 'பில்டாவா' (Pultava) என்ற இடத்தில் நடந்த சண்டையில் ஸ்வீடனின் படைகள் படுதோல்வி அடைந்தன. ஏராளமானவர்கள் கொல்லப்பட்டனர் எஞ்சியிருந்தவர்கள் சிறைப்பிடிக்கப்பட்டனர். சார்லஸ் போர்க்களத்திலிருந்து தப்பித் துருக்கிக்கு ஓடினார் எஸ்தோனியா, லிவோனியா ஆகிய பகுதிகள் பீட்டரால் கைப்பற்றப்பட்டன. பால்டிக் பிரதேசத்தில் ஸ்வீடனின் ஆதிக்கம் மறைந்தது. அதன் வீழ்ச்சி தொடங்கியது. தம் நாட்டிற்குத் திரும்பிச் செல்ல வழியில்லாமல் 1713 வரை சார்லஸ் துருக்கியிலேயே வாழ்ந்தார். 1710-ல் துருக்கியை ரஷ்யாவுக்கு எதிராகப் போர்புரியும்படித் தூண்டினார். அப்போரின் இறுதியில் 1713-ல் கையெழுத்தான உடன்படிக்கையின்படி சார்லஸ் ஸ்வீடனுக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டார்.

இவர் ஸ்வீடன் திரும்பிச் சென்றபொழுது நாடு மிகவும் மோசமான நிலையிலிருந்தது. ஸ்வீடன் பின்லாந்தை இழந்து, டென்மார்க், ரஷ்யா, போலந்து ஆகிய நாடுகளுடன் மற்றொரு போரில் ஈடுபட்டிருந்தது. நாட்டில் நிதி நெருக்கடி ஏற்பட்டுக் கருவூலம் காலியாக இருந்தது. இந்த நிலையில் சார்லஸ் நாடு திரும்பிப் போரைத் தொடர்ந்து நடத்த மக்களின் ஒத்துழைப்பை வேண்டினார். பழைய விரோதிகளான ரஷ்யா, போலந்து, டென்மார்க் தவிர, இப்பொழுது பிரஷ்யாவும், ஹானோவரும், சாக்ஸனியும் ஸ்வீடன்மீது போர் தொடுத்தன. 1715-ல் ஸ்ட்ராஸ்லண்டு என்னுமிடம் முற்றுகையிடப்பட்டது. அதைக் காப்பாற்ற சார்லஸ் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. 1718-ல் டென்மார்க்குக்கு எதிராக நார்வேயில் நடத்திக் கொண்டிருந்த போரில், ஃபிரெட்ரிக்ஸ்டென்' (Fredriksten) என்ற நகரை முற்றுகையிட்டுக் கொண்டிருக்கும்பொழுது சார்லஸ் கொல்லப்பட்டார்.

ஸ்வீடனின் வீழ்ச்சிக்குச் சார்லஸும் அவருடைய குண இயல்புகளின் குறைபாடுகளும் காரணம் என்பதை எவரும் மறுக்க முடியாது. மேலும், அளவு கடந்த அதிகாரத்தை அனுபவமற்ற, இளைஞரான அரசரிடம் ஒப்படைத்து, அவர் அந்த அதிகாரத்

தைப் பயன்படுத்தும் தகுதியற்ற நிலையில்கூட செயலிற்றுக் கிடந்த ஸ்வீடனின் ஆட்சிமுறையும் ஓரளவிற்கு இந்த வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தது என்று கூறலாம். எனினும் ஸ்வீடன் மக்களின் அன்புக்குப் பாத்திரமான அரசர்களுள் முன்னணியில் இருப்பவர்கள் குஸ்தாவஸ் அடால்பஸும், பன்னிரண்டாம் சார்லஸும் ஆவர்.[1]

இவருக்குப் பிறகு இவருடைய தங்கை 'உல்ரிகா' (Ulrica, 1718-1720) ஸ்வீடனின் அரியணை ஏறினார். இவர் போர் புரிந்து கொண்டிருந்த நாடுகளுடன் உடன்படிக்கைகள் செய்து கொண்டு போரை முடித்தார். ஹானோவருடன் 1719-1720-ல் 'ஸ்டாக் ஹோம் உடன்படிக்கைகள் (Treaties of Stockholm) கையெழுத் தாயின. 'பிரெமன்' (Bremen), 'வெர்டன்' (Verdun) ஆகிய நகரங்களை ஹானோவரும், 'ஸ்டெட்டின்' (Stettin) நகரைப் பிரஷ்யாவும் பெற்றன. ஸ்வீடனுக்கும், டென்மார்க்குக்குமிடையே 1720-ல் 'ஃபிரெடரிக்ஸ்பர்க்' (Fredricksborg) உடன்படிக்கை ஏற்பட்டு, 'ஷெலெஸ்விக்' (Schelswig) தவிர மற்ற சில வென்ற பகுதிகளை டென்மார்க் ஸ்வீடனுக்குத் திருப்பித் தந்தது. ரஷ்யாவுடன் செய்துகொள்ளப்பட்ட 'நைஸ்டாட் உடன்படிக்கை'யின் படி (Treaty of Nystad-1721) எஸ்தோனியா, லிவோனியா, இங்கிரியா, கரேலியா, பின்லாந்தின் ஒரு பகுதி ஆகியவற்றை ஸ்வீடனிடமிருந்து ரஷ்யா பெற்றது. இதற்குப் பிறகு ஸ்வீடனின் அரசியலமைப்பு மாற்றியமைக்கப்பட்டு, அதிகாரங்கள் யாவும் நாட்டின் 'டயட் சபை'யிடம் (Diet) ஒப்படைக்கப்பட்டன. டயட் கூட்டம் நடக்கும் பொழுது ஐம்பது பிரபுக்கள், இருபத்தைந்து மத குருமார்கள், இருபத்தைந்து மக்கள் பிரதிநிதிகள் கொண்ட ஒரு குழு ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. டயட் கூட்டம் இல்லாத பொழுது இந்த அதிகாரம் இருபத்திநான்கு உறுப்பினர்கள் கொண்ட செனட் சபையிடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்வாறாக ஸ்வீடனில் மன்னரின் அதிகாரம் குறைக்கப்பட்டது.

[1] If the history of Sweden is really the history of her kings then for this downfall posterity must attribute a great share of the blame to Charles XII or rather to the system of Government which conferred unlimited power on an untried youth and refused to modify those powers when the youth had given clear evidence of insanity. But of Sweden it may be said that no nation has ever been so quick to condone faults in her kings and it is characteristic of the epic strain in Scandinavian character that chief place in the affections of the Swedish people is shared by Gustavus Adolphus and Charles XII" Europe in the 17th Century—David ogg, page 472·

இந்தப் புது அரசியலமைப்பின்கீழ், 'ஹார்ன் பிரபு' (Count of Horn) என்பவர் மிக்க செல்வாக்கு பெற்று விளங்கினார். போர்களைத் தவிர்த்து நாட்டில் அமைதியை நிலைநாட்ட வேண்டும் என்று விரும்பிய இவருக்கு எதிராக 'டெஸின் பிரபு' (Count of Tessin) என்பவரின் தலைமையில் மற்றொரு கட்சி தோன்றியது. இக்கட்சி ஃபிரான்சுடன் நெருங்கிய நட்புறவு வைத்துக் கொள்ள விரும்பியது. இறுதியில், 1738-ல் ஃபிரான்சின் தலையீட்டின் விளைவாக ஹார்ன் பிரபுவின் அதிகாரம் ஒழிக்கப் பட்டு டெசின் பிரபுவின் கைகளுக்கு அதிகாரம் மாறிற்று. இவருடைய ஆட்சியில் ஃபிரான்சுடன் நெருங்கிய தொடர்பு வளர்க்கப்பட்டு ஸ்வீடன் மீண்டும் போர்களில் ஆழ்த்தப்பட்டது. இந்த இரண்டு பிரபுக்கள் கட்சிகளும் 'The Caps and the Hats' என அழைக்கப்பட்டன. போட்டியும், பொறாமையும் வளர்ந்து நாட்டில் குழப்பம் நிலவியது. டெசின் பிரபுவின் கட்சியினர் 1738 லிருந்து 1765 வரை பதவியிலிருந்தனர். ஏழாண்டுப் போரில் ஃபிரான்சுக்கு ஆதரவாக இவர்கள் ஈடுபட்டு ஸ்வீடனுக்குப் பல இன்னல்கள் ஏற்பட்டதன் விளைவாக இவர்கள் பதவியிலிருந்து விலக நேர்ந்தது. ஹார்ன் பிரபுவின் கட்சியினர் மீண்டும் பதவியைக் கைப்பற்றி 1769-ல் அதை இழந்தனர். இவ்வாறாக, 1771 வரை குழப்பத்தில் சிக்கித் தவித்த ஸ்வீடன் நாட்டை, அந்நிலையிலிருந்து மீட்டு மீண்டும் அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டி ஒரு வலிமை பொருந்திய ஆட்சியை மூன்றாம் குஸ்தாவஸ் என்ற அரசர் ஏற்படுத்தினார். படைகளின் உதவியைக் கொண்டு பிரபுக்களின் செல்வாக்கை ஒடுக்கி, டயட் சபையை அச்சுறுத்தி எல்லா அதிகாரங்களையும் பெற்றார், ஒரு புது அரசியலமைப்பு உருவாக்கப் பட்டது. நிதி நிலைமையை செப்பனிட்டு, நிதி, நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தி, படைத் துறையைச் சீர்படுத்தி நாட்டை ஒரு நல்ல நிலைக்குக் கொண்டுவர முயற்சிகள் மேற்கொண்டார். இவருடைய இந்த நல்ல திட்டங்களை டயட் சபை எதிர்த்தது. இவர் ரஷ்யாவுடன் 1788-ல் ஒரு போரை மேற்கொண்டார். 1790-ல் இந்தப் போரில் வெற்றி பெற்றதன் விளைவாக ரஷ்யாவின் அரசி காதரின் இவருடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை ஸ்வீடனுக்கு அளிப்பதாக ஒப்புக் கொண்டார். இவர் ஸ்வீடனை ஆண்டு கொண்டிருந்தபொழுதுதான் ஃபிரெஞ்சுப் புரட்சி தோன்றியது. இவர் அப்புரட்சியை வெறுத்தார். வல்லரசுகளின் ஒத்துழைப்புடன் புரட்சியை ஒடுக்குவதற்கு அவர் மேற்கொண்ட முயற்சிகள் வெற்றி பெறவில்லை.

## ஸ்வீடனின் வாசா அரசவம்சம்



# 13. பிரஷ்யாவின் எழுச்சியும், வளர்ச்சியும்

பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் ஃபிரான்ஸ், ஸ்பெயின் ஆகிய நாடுகளைப் போல, ஜெர்மனி ஒரு தேசிய நாடாக விளங்கவில்லை. முந்நூறுக்கும் மேற்பட்ட சிறு அரசுகளைத் தன்னுட்கொண்ட, ஒற்றுமையற்ற அரசுகளின் தொகுப்பாக ஜெர்மனி விளங்கியது. அரசியல் ரீதியில் இந்த நாட்டை ஜெர்மனி என்று அழைப்பதற்கு மாறாக ஜெர்மனிகள் என்று அழைப்பதுதான் பொருந்தும். வெஸ்ட்பேலியா உடன்படிக்கையோடு (1648) ஆஸ்திய ஹாப்ஸ்பர்குகளின் ஆதிக்கம் ஐரோப்பாவில் முடிவடைந்து, பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை ஃபிரான்ஸ், ஸ்வீடன் ஆகிய நாடுகளின் ஆதிக்கம் மேலோங்கியிருந்தது. ஆனால் ஊட்ரெக்ட் உடன்படிக்கையும் (1713), நைஸ்டாட் உடன்படிக்கையும் (1721) இவ்விரு நாடுகளின் ஆதிக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிரஷ்யாவும், ரஷ்யாவும் முன்னணிக்கு வந்தன. பிரஷ்யாவின் எழுச்சிக்குக் காரணமாக இருந்தது, அதை ஆண்ட 'ஹோகன் சாலர்ன்' (Hohen Zollern) வம்சம் ஆகும், இந்த வம்சத்தின் ஆட்சியில் பிரஷ்யா ஐரோப்பாவிலேயே தலைசிறந்த படை வலிமை பெற்ற ஒரு நாடாக விளங்கியது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஜெர்மனி ஐக்கியமடைந்ததும் இந்த வம்சத்து அரசர்களின் முயற்சியினால்தான்.

நவீன கால வரலாற்றில் ஜெர்மனியின் அரசுகளுள் ஒன்றாகத் திகழ்ந்த பிரஷ்யாவின் கடந்த கால வரலாற்றைக் கூர்ந்து நோக்கினால், இடைக் காலத்திலேயே இதன் வரலாறு தொடங்கு கிறது என்பது புலனாகும். புனித ரோமானியப் பேரரசின் ஒரு பகுதியாக விளங்கிய பிராண்டன்பர்க் என்னும் தேர்வாளர் அரசிலிருந்து தான் (Electorate of Brandenburg) தற்காலப் பிரெஷ்யா உருவாகியது. கிழக்கிலிருந்து ஸ்லாவ் இன மக்களின் தாக்குதல்களிலிருந்து அப்பொழுதைய ஜெர்மனியைப் (புனித ரோமானியப்


கி.பி.1795 வரை பிரஷ்யாவின் வளர்ச்சி
கி.பி. 1415–1740 ல் சேர்க்கப்பட்டவை
கி.பி. 1740–1786 ல் பிரடெரிக் II கைப்பற்றியது.
பிராண்டன்பர்க் கி.பி. 1415 ல்
கி.பி. 1786–1797 ல் பிரடெரிக் வில்லியம் II கைப்பற்றியது.
பால்டிக் கடல்
டென்மார்க்
சாக்ஸனி
போஹிமியா
ஆஸ்திரியா
கிளீவ்ஸ்
ராவன்ஸ்பர்க்

பேரரசு) பாதுகாக்கப் பத்தாம் நூற்றுண்டில் கிழக்கு எல்லைப் புறத்தில் பிராண்டன்பர்க் அரசு அமைக்கப்பட்டது இந்த எல்லைப் புற அரசின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றவர் பேரரசரால் நியமிக்கப் பட்ட 'மார்க்ரேவ்' (Margrave) என்னும் அதிகாரி. இன்றைய பெர்லின் நகரை மையமாகக் கொண்டு, கிழக்கிலும், மேற்கிலும் சுமார் நூறு மைல்கள் விரிந்து கிடந்தது பிராண்டன்பர்க் என்னும் பிரதேசம்.

பிராண்டன்பர்கின் வளர்ச்சிக்கும், புகழுக்கும் காரணமாக இருந்தது 'ஹோகன் சாலர்ன்' (Hohen Zollern) வம்சம் ஆகும். பத்தாம் நூற்றுண்டில் ஸ்விட்சர்லாந்திற்கு வடக்கே 'சாலர்ன்' (Zollern) என்ற குன்றுப் பகுதியை முதன்முதல் ஆண்டு கொண் டிருந்த இந்தக் குடும்பத்தினர், பன்னிரண்டாம் நூற்றுண்டில் திருமண உறவு மூலம் நூரம்பர்க் நகரத்திலும் செல்வாக்கு பெற்றனர். பதினைன்காம் நூற்றுண்டு வரை பிராண்டன்பர்கின் தலைமைப் பதவிக்கு அடிக்கடி போட்டிகளும் அதன் விளைவாகப் போர்களும் ஏற்பட்டு அது குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. 1415-ல் இந்தக் குழப்ப நிலையிலிருந்து பிராண்டன்பர்கை மீட்க பேரரசர் சிஜிஸ்மண்ட் (Sigismund) நூரம்பர்க் நகரைச் சேர்ந்த ஹோகன் சாலர்ன் வம்சத்து ஃபிரெடரிக் என்பவரிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தார். பேரரசரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை அவருக்கு அளிக்கப்பட்டு அவர் 'தேர்வாளர்' (Elector) என்ற பட்டம் பெற்றுர். பிராண்டன்பர்க் ஒரு தேர்வாளர் அரசாக (Electorate) ஆகியது. இது பிராண்டன்பர்கின் வளர்ச்சியில் ஒரு முக்கியமான கட்டமாகும். இவ்வாறு பிராண்டன்பர்கை ஆளத் தொடங்கிய இந்த வம்சம் ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகள் தொடர்ந்து செல்வாக்கு பெற்றிருந்தது. ஹோகன் சாலர்ன் வம்சத்து ஆட்சியின் கீழ், பிராண்டன்பர்கின் வளர்ச்சியினுடைய தொடர்ச்சிதான் இன்றைய ஜெர்மனியின் வரலாறு என்று கூறிஞல் அது மிகையாகாது. பிராண்டன்பர்கின் முதல் தேர் வாளரான ஹோகன் :சாலர்ன் வம்சத்து முதலாம் ஃபிரெடரிக் நாட்டைக் குழப்பத்திலாழ்த்திய போர் வீரர்களின் (Knights) பிடியிலிருந்து விடுவித்து ஒழுங்கையும், அமைதியையும் நிலை நாட்டினர். இவருக்குப் பிறகு ஆட்சி புரிந்த இரண்டாம் ஃபிரெடரிக்கும் இந்தப் பணியைத் தொடர்ந்து மேற்கொண்டார். பதினும் நூற்றுண்டில் தோன்றிய சமயச் சீர்திருத்த இயக்கம் பிராண்டன்பர்கின் வளர்ச்சிக்கு உதவியது. இதன் தேர்வாளர்கள் லூதரின் சமயத்தை ஏற்றுக்கொண்டு, கத்தோலிக்க திருச் சபையின் சொத்துகளைச் கவர்ந்துகொண்டு தங்களை வலுப்படுத்திக் கொண்டனர். பதினேழாம் நூற்றுண்டின் தொடக்கத்தில்

பிராண்டன்பர்கின் வளர்ச்சி தொடங்கியது என்று கூறலாம். ஆனால், எந்த ஒரு தேர்வாளரின் திட்டமிட்ட முயற்சியின் விளைவாக இந்த வளர்ச்சி ஏற்படவில்லை. அதிர்ஷ்ட வசமாக அப்பொழுது நடந்த இரண்டு எதிர்பாராத நிகழ்ச்சிகள் பிராண்டன்பர்கின் வளர்ச்சிக்கு வழிவகுத்தன. முப்பதாண்டுப் போர் தொடங்குவதற்குமுன் பிராண்டன்பர்கை ஆண்டு கொண்டிருந்த 'ஜான் சிஜிஸ்மண்ட்' (John Sigismund) என்ற தேர்வாளர் 'கிளீவ்' (Cleves) அரசின் கோமகனின் சகோதரியை மணந்திருந்தார். 1609-ல் கிளீவ் கோமகன் வாரிசின்றி இறக்கவே, தன் மனைவி மூலம் சிஜிஸ்மண்டு, கிளீவ்மீது உரிமை கொண்டாடி அப்பகுதியைப் பிராண்டன்பர்குடன் இணைத்தார். அதே போல 1618-ல் போலந்தின் ஆட்சிக்குட்பட்டிருந்த கிழக்குப் பிரஷ்ய அரசை (Duchy of East Prussia) ஆண்டு கொண்டிருந்த இவருடைய உறவினர் ஒருவர் வாரிசின்றி இறக்கவே, அப்பகுதியும் இவருக்குக் கிடைத்தது. இவ்வாறாக, பதினேழாம் நூற்றாண்டில் பிராண்டன்பர்க் தேர்வாளர், கிளீவ் என்னும் பகுதியை 'டியூக்' (Duke) என்ற பட்டத்துடனும், பிராண்டன்பர்கை 'எலெக்டர்' (Elector) என்ற பட்டத்துடனும் பேரரசரின் ஆதிக்கத்திற்குட்பட்டும், கிழக்குப் பிரஷ்யாவை 'கிராண்ட் மாஸ்டர்' (Grand Master) என்ற பட்டத்துடனும் போலந்து மன்னரின் ஆதிக்கத்திற்குட்பட்டும் ஆண்டு கொண்டிருந்தார்.

## மகா எலெக்டர் ஃபிரெடரிக் வில்லியம் (The Great Elector Fredrick William, 1640-1688)

ஃபிரெடரிக் வில்லியத்தின் ஆட்சியைப்பற்றி ஆராய்வதற்கு முன்பு பிரஷ்யாவின் தோற்றத்தைப்பற்றி அறிந்து கொள்ளுவது பயனுடையதாகும். 'விஸ்துலா' (Vistula) நதி முகத்துவாரத்திற்குக் கிழக்கே பால்டிக் கடற்கரை ஓரமாக அமைந்திருந்த பகுதி இடைக்காலத்தில் பிரஷ்யா என்று அழைக்கப்பட்டது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் டியூடானிக் இனத்தைச் சேர்ந்த சமயப் பணியில் ஈடுபட்டிருந்த துறவிகள் பிரஷ்யாவைக் கைப்பற்றிக் கிறிஸ்துவ சமயத்தைப் பரப்பினர். டியூடானிக் இனத்தவர்களின் தலைவர் 'Grand Master of the Knights' என்றழைக்கப்பட்டு பிரஷ்யாமீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தார். ஆனால், அண்டையில் வலிமைமிக்க போலந்து நாடு அமைந்திருந்ததால், பிரஷ்யாவின் வளர்ச்சி தடைப்பட்டது. அடிக்கடி இவ்விரு நாடுகளுக்கும் இடையே போர்கள் நிகழ்ந்தன. இறுதியில் 1466-ல் இவர்கள் போலந்தினால் தோற்கடிக்கப்பட்டு, பிரஷ்யா இரண்டாகப் பிரிக்கப்பட்டது. மேற்குப் பிரஷ்யாவைப் போலந்து எடுத்துக்

கொண்டது. கிழக்குப் பிரஷ்யாவை டியூடானிக் இனத்தலைவர்கள் போலந்தின் ஆதிக்கத்தின்கீழ் ஆட்சிபுரிய அனுமதிக்கப்பட்டனர். 1525-ல் போலந்தின் அரசர் முதலாம் சிஜிஸ்மண்ட் (Sigismund I) ஹோகன் சாலர்ன் குடும்பத்தைச் சேர்ந்த ஆல்பர்ட் என்பவருக்குக் கிழக்குப் பிரஷ்ய அரசைக் கொடுத்தார். 1618-ல் அவருடைய சந்ததி அற்றுப் போனதால், கிழக்குப் பிரஷ்யா பிராண்டன்பர்கை ஆண்டு கொண்டிருந்த ஹோகன் சாலர்ன் குடும்பத்து 'ஜான் சிஜிஸ்மண்ட்' (John Sigismund) என்பவருக்குக் கிடைத்தது. இவ்வாறு கிழக்குப் பிரஷ்யா பிராண்டன்பர்குடன் இணைக்கப் பட்டது.

1618-ல் தொடங்கிய முப்பதாண்டுப் போர் பிராண்டன் பர்கையும் பாதித்தது. அப்பொழுது தேர்வாளராக ஆண்டு கொண்டிருந்த ஜார்ஜ் வில்லியம் (1619-1640) திறமையற்றவர் என்ற காரணத்தினுல், பிராடஸ்டெண்டு கத்தோலிக்கப் படை களின் தாக்குதலுக்குள்ளாகிய பிராண்டன்பர்க் பல இன்னல்களை அனுபவித்தது. இந்தக் குழப்பமான சூழ்நிலையில் 1646-ல் இவர் மகன் ஃபிரெடரிக் வில்லியம் பிராண்டன்பர்க் தேர்வாளராகப் பதவி ஏற்ருர். 'மகா எலெக்டர்' (Great Elector) என்று வரலாற்றில் அழைக்கப்படும் இவர் படைத்துறையிலும், அரச தந்திரத்திலும், நிர்வாகத் துறையிலும் மிக்க ஆற்றல் பெற்றவர். படை வலிமையின் அடிப்படையில் கட்டுப்பாடுகள் அற்ற ஒரு பலமான மத்திய அரசாங்கத்தை அமைக்க வேண்டுமென்பதும், ஆக்கிரமிப்புப் போர்களின் மூலம் நாடுகளைப் பிடித்துத் தன் நாட்டின் எல்லைகளை விரிவாக்க வேண்டுமென்பதும் இவருடைய குறிக்கோள்களாகும்.

வெளிநாட்டுக் கொள்கை

அரியணை ஏறியவுடன் 1641-ல் ஸ்வீடனுடன் ஓர் உடன் படிக்கை செய்துகொண்டு பிராண்டன்பர்க் ஸ்வீடனின் படை யெடுப்புக்குள்ளாவதைத் தடுத்தார். முப்பதாண்டுப் போரில் ஈடுபட்டு, வெஸ்ட்பேலியா சமாதானத்தின்படி 'கிழக்குப் பாமரேனியா' (East Pomerania), ஹால்பர்ஸ்டாட்' (Halberstadt), 'மின்டன்' (Minden), 'கேமின்' (Camin), 'மாக்டிபர்க்' (Magdeburg) ஆகிய பகுதிகளைப் பிராண்டன்பர்க் பெற்றது. இவ்வாறு ஒரு பரந்த அரசை ஃபிரெடரிக் வில்லியம் பெற்றிருந் தாலும் அது ஒற்றுமையற்றுச் சிதறுண்டு கிடந்தது. அடுத்து 1655-ல் ஸ்வீடனுக்கும் போலந்துக்குமிடையே ஏற்பட்ட போரில் ஃபிரெடரிக் வில்லியம் ஸ்வீடனுக்கு உதவி செய்தார். வார்சாப் போரில் ஸ்வீடனின் வெற்றிக்கு உதவினுர். 1656-ல் முடிவான ஓர் உடன்படிக்கையின்படி கிழக்குப் பிரஷ்யாமீது

ஸ்வீடன் தன் உரிமைகளை விட்டுக்கொடுக்க ஒப்புக் கொண்டது. 1660-ல் ஸ்வீடன், போலந்து, பிராண்டன்பர்க் ஆகிய நாடு களிடையே ஏற்பட்ட 'ஒலிவா உடன்படிக்கையின்'படி (Treaty of Oliva) கிழக்குப் பிரஷ்யாமீது பிராண்டன்பர்க்கின் ஆதிக்கம் போலந்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவ்வாறு கிழக்குப் பிரஷ்யா பிராண்டன்பர்க்கின் ஆட்சிக்குட்பட்ட ஒரு பகுதியாக மாறியது. 1672-78-ல் நடந்த டச்சுப் போரில் டச்சுக் குடியரசுக்கு ஆதரவாக ஃபிரான்சின் பதினான்காம் லூயியுடன் போரில் ஈடுபட்டார். ஃபிரன்சுக்கு ஆதராவகப் போர் புரிந்த ஸ்வீடனின் படைகளை 1675-ல் ஃ'பெஹர்பெலின்' (Fehrbellin) என்ற போரில் முறியடித்தார். இந்த வெற்றிதான் இவருக்கு 'மகா எலெக்டர்' (Great Elector) என்ற பட்டத்தைப் பெற்றுத் தந்தது. இதற்குப் பிறகு ஸ்வீடனுக்குச் சொந்தமான பாமரேனியா என்னும் பகுதியை இவர் கைப்பற்றினாலும், இந்தப் போரின் இறுதியில் ஏற்பட்ட நிம்வேஜன் உடன்படிக்கை யின்படி பாமரேனியாவை மீண்டும் ஸ்வீடனுக்கே கொடுக்க வேண்டியதாயிற்று.

உள்நாட்டுக் கொள்கை : உள்நாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரையில் தன் அதிகாரத்தை வலுப்படுத்திக்கொண்டு ஒரு வரம்பு கடந்த முடியாட்சியை நிறுவ வேண்டுமென்பதுதான் அவர் குறிக்கோள். இவருடைய அரசின் மையத்தில் பிராண்டன் பர்க்—பாமரேனியா என்ற பகுதியும், கிழக்கில் பிரஷ்யாவும், மேற்கில் கிளீவ் என்ற பகுதியும் அமைந்திருந்தன. இந்த ஒவ்வொரு அரசிற்கும் தனியாக 'டயட்' (Diet) என்னும் பிரதிநிதித்துவ சபை ஒன்று இருந்தது. வரிவசூல் செய்வது, வரவு செலவுத் திட்டங்களை வகுப்பது போன்ற அதிகாரங்களை இச் சபைகள் பெற்றிருந்தன. தன் நாட்டிற்கு நிலையான படை ஒன்றை (Standing army) நிறுவத் தேவையான பண உதவி கோரி இந்த டயட் சபைகளை அணுகியபொழுது, அவை பணம் தர மறுத்தன. எனவே, நாடு முன்னேற வேண்டுமானால், தன் திட்டங்களுக்கு இருக்கும் எதிர்ப்பு ஒழிக்கப்பட வேண்டும் என்று உணர்ந்த ஃபிரெடரிக் வில்லியம், பிரதிநிதித்துவ சபைகளை நசுக்கி எல்லா அதிகாரங்களையும் தானே மேற்கொண்டார். தன் வல்லாட்சிக்கு ஆதரவாக ஒரு வலிமைமிக்க தேசியப் படையை நிறுவினார். இவ்வாறு பதினெட்டாம் நூற்றாண்டில் பிரஷ்யா ஒரு படைவலிமை மிக்க நாடாகத் திகழ்வதற்கு வழி வகுக்கப் பட்டது, ஒரு கப்பற்படையும் இவரால் நிறுவப்பட்டது. நிர்வாகத்தில் அரசருக்கு உதவிபுரிய அரசரால் நியமிக்கப்பட்ட ஒரு கவுன்சில் அமைக்கப்பட்டது. நாடு முழுவதும் ஒரே மாதிரி

யான ஆட்சி முறையின் கீழ்க்கொண்டு வரப்பட்டது. அரசனின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அதிகாரிகள் நாட்டின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றனர். இந்த அதிகாரிகள் பிற்காலத்தில் பிரஷ்யாவைத் திறமையுடன் ஆட்சி செய்த அதிகார வர்க்கத்தின் முன்னோடிகளாக அமைந்தனர். பிரபுக்களுடைய அரசியல் செல்வாக்கு ஒடுக்கப்பட்டாலும், சமுதாயத்தில் அவர்கள் ஒரு முக்கிய பிரிவினராகத் திகழ்ந்தனர். இவ்வாறு மூன்று தனித்தனிப் பகுதிகளாக இயங்கிக் கொண்டிருந்த பிராண்டன்பர்க் அரசு, ஃபிரெடரிக் வில்லியத்தின் தலைமையில் ஒன்றுக்கப்பட்டது.

நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் இவர் மிக்க ஈடுபாடு காட்டினார். முப்பதாண்டுப் போரினால் நாட்டின் பொருளாதாரம் வெகுவாகப் பாதிக்கப்பட்டது. பெர்லின் நகரம் ஒரு பாலைவனமாகக் காட்சியளித்தது. விவசாய, தொழில், வியாபார வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்தார். சதுப்பு நிலங்கள பயிர்த் தொழிலுக்கு ஏற்றதாக ஆக்கப்பட்டன. பிராண்டன்பர்கின் தொழில் வளர்ச்சிக்கு இவர் பெரிதும் உதவினார். வெளிநாடுகளிலிருந்து தொழில் துறை வல்லுநர்கள் அழைக்கப்பட்டு கம்பள நெசவு, கண்ணாடி செய்தல் போன்ற தொழில்கள் துவக்கப்பட்டன. பதினான்காம் லூயி நாண்டிஸ் ஆணையை ரத்து செய்ததன் விளைவாக ஹ்யூகோனாக்கள் (ஃபிரெஞ்சு பிராடஸ்டென்டுகள்) பலர் ஃபிரான்சை விட்டு வெளியேறினர். இவர்கள் தொழில், வியாபாரத் துறைகளில் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள். 1685-ல் 'பாட்ஸ்டாம் ஆணைகளின்' மூலம் (Edict of Postsdam) ஃபிரெடரிக் இவர்களை ஃபிரான்சிற்கு வரவேற்று, இவர்கள் உதவியுடன் பல தொழில்கள் தொடங்கப்பட்டன. தொழில் வியாபாரத் துறைகளில் பிராண்டன்பர்க் மக்கள் புது அறிவைப் பெற்றனர். இவர் பட்டத்திற்கு வந்தபொழுது 8000 மக்கள் தொகை கொண்டதாக இருந்த பெர்லின் நகரம் இவருடைய ஆட்சியின் இறுதியில் 20,000 மக்கட்தொகைகொண்ட, ஒரு செல்வம் மலிந்த நகரமாகத் திகழ்ந்தது. நாட்டின்போக்குவரத்து வசதிகளைப் பெருக்கும் நோக்கத்துடன் பல சாலைகளும், கால்வாய்களும் வெட்டப்பட்டன. 'ஓடர்' (Oder) ஆற்றையும், 'எல்ப்' (Elbe) ஆற்றையும் இணைக்கும் ஃபிரெடரிக் வில்லியம் கால்வாய் இவரால் வெட்டப்பட்டதாகும். இவர் கடைப்பிடித்த சமயப் பொறைக் கொள்கை இவருடைய பெருமைக்கு ஒரு முக்கிய காரணமாகும். பிராடஸ்டென்டு சமயத்தின் பல்வேறு பிரிவினர்களுக்கு மட்டுமன்றி, கத்தோலிக்க, யூத சமயத்தவர்களுக்கும் மதச் சுதந்திரம் அளிக்கப்பட்டது.

ஹோகன் சாலர்களின் எழுச்சியில் ஃபிரெடரிக் வில்லியத்திற்குப் பெரும் பங்கு உண்டு. தனித் தனியாகச் சிதறிக் கிடந்த பகுதிகளை ஒன்று சேர்த்து ஓர் அரசாக்கி, நிலமானிய முறை அடிப்படையில் அமைந்திருந்த ஒழுங்கற்ற படைகளைக் கலைத்து ஒரு நிலையான தேசியப் படையை நிறுவி, நாடு முழுவதற்கும் ஒரே சீரான நிர்வாக அமைப்பை ஏற்படுத்தி, ஐரோப்பாவின் பின்தங்கிய நாடுகளில் ஒன்ருக இருந்த நாட்டை முன்னணிக்குக் கொண்டுவந்தது இவருடைய மகத்தான சாதனைகளாகும் என்று 'ஹேய்ஸ்-கோல்' என்ற வரலாற்றறிஞர்கள் கருதுகிருர்கள்.

## பிரஷ்யாவின் முதலாம் ஃபிரெடரிக் (Fredrick I, 1688-1713)

'மகா எலெக்டர்' ஃபிரெடரிக் வில்லியத்திற்குப் பிறகு அவர் மகன் மூன்ரும் ஃபிரெடரிக் பிராண்டன்பர்க் தேர்வாளராகப் பதவி ஏற்ருர். தன் தந்தையைப் போல போர்த் திறமையும், நிர்வாகத் திறமையும் பெற்றிராவிட்டாலும், இவர் ஆட்சி ஒரு விதத்தில் சிறப்புற்று விளங்கியது. ஏனெனில், இவர்தான் முதன் முதலாக 'அரசர்' என்ற பட்டத்தைப் பெற்றவர். பிராண்டன்பர்கை ஆண்டவர்கள் எல்லோரும் கோமகன், தேர்வாளர் என்று அழைக்கப்பட்டனரேயன்றி, அரசர் என்று அழைக்கப்படவில்லை. இவருக்கு இது ஒரு பெருங்குறையாக இருந்தது. எனவே, எப்படியாவது 'அரசர்' பட்டத்தைப் பெற வேண்டுமென்பது இவருடைய குறிக்கோள், அப்பொழுது நடந்து கொண்டிருந்த ஸ்பானிய வாரிசுரிமைப் போரில் ஃபிரான்சுக்கு எதிராகப்பேரரசர் லியோபால்ட் மூன்ரும் ஃபிரெடரிக்கின் உதவியை நாடினுர். உதவிசெய்ய ஒப்புக்கொண்டு அதற்கு ஈடாகத் தனக்கு 'அரசர்' பட்டம் அளிக்கப்பட வேண்டும் என்று கோரினுர். 1701-ல் கிழக்குப் பிரஷ்யாவின் அரசராக இவரைப் பேரரசர் ஏற்றுக் கொண்டார். இவ்வாறு மூன்ரும் ஃபிரெடரிக் 1701-ல் பிரஷ்ய மன்னர் முதலாம் ஃபிரெடரிக் என்று முடிசூட்டிக் கொண்டார்[2].

[1] "In the rise of the Hohen Zollerns, the Great Elector prayed a steller role, not so much for any accessions of territory as for his work of organisation. He made a state out of what had been a collection of family holdings, a national army out of what had been feudal levies, a centralised administration out of those who had been local officials, and a progressive country out of what had been one of the more backward areas of Europe," —History of Europe since 1500 C J·H. Hayes and C,W. Cole, page 187.

2. தொடக்கததில் ஹோகன் சாலர்ன் மன்னர்கள் தங்களை King in Prussia என்று அழைத்துக் கொண்டனா. ஏனெனில, கிழககுப் பிரஷ்யாவை மட்டும்தான் இவர்கள ஆண்டனர்' மேற்குப் பிரஷ்யா போலந்தின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது, ஆனல, முதலாம் ஃபிரெடரிக வில்லியம் காலம முதல் (1713—1740) இவர்கள் Kings of Prussia என்று அழைக்கப்பட்டனர், 1772.ல்தான் மேற்குப் பிரஷ்யா போலந்திடமிருந்து கைப்பற்றப்பட்டது,

1713-ல் முடிவான ஊட்ரெக்ட்உடன்படிக்கையின்படி ஐரோப்பிய அரசுகள் யாவும் இந்த ஏற்பாட்டை ஒப்புக்கொண்டன. நாளடைவில் பிரஷ்யா என்பது, பிராண்டன்பர்க்—பிரஷ்யா இவ்விரு அரசுகளையும் குறிப்பதாக அமைந்தது. இவர் ஸ்வீடனுக்கும், ரஷ்யாவுக்கும் நடந்துகொண்டிருந்த போரிலும் கலந்து கொண்டார். ஆடம்பரத்தை விரும்பிய இவர் தன் அரசவையைப் பதினான்காம் லூயியின் வெர்ஸாய் அரசவைப் பாணியில் அமைக்க முயன்றார். அறிவு வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டார். 1694-ல் ஒரு பல்கலைக் கழகத்தையும், பெர்லின் நகரில் ஒரு கலை, விஞ்ஞானக் கழகத்தையும் நிறுவினார்.

## முதலாம் ஃபிரெடரிக் வில்லியம் (Fredrick William I, 1713-1740)

பதினெட்டாம் நூற்றாண்டில் பிரஷ்யாவின் புகழ் வெகு வேகமாக வளரத் தொடங்கியது. ஜெர்மனியின் தலைமையை பிரஷ்யா, ஆஸ்திரியாவுடன் பங்கிட்டுக் கொள்ளும் அளவிற்கு அதன் செல்வாக்கு வளர்ந்தது. முதலாம் ஃபிரெடரிக்கின் மகனான இவர் தகப்பனைப் போலல்லாமல், பாட்டனான மகா எலக்டரைப் போல பொது அறிவும், அயராது உழைக்கும் தன்மையும் பெற்றவர். ஆனால் 'மகா எலெக்டர்' பெற்றிருந்த அறிவுக் கூர்மையும், ஐரோப்பிய அரசியலில் முதிர்ந்த அனுபவமும் இவர் பெற்றிருக்கவில்லை. வளரும் பிரஷ்யாவின் வளமான வருங் காலத்திற்கு வலிமைமிக்க ஒரு படையும், செம்மையான நிர்வாகமும் இன்றியமையாத தேவைகள் என்று கருதிய ஃபிரெடரிக் வில்லியம் இத்துறைகளில் தன் கவனத்தைச் செலுத்தினார். வரம்பு கடந்த முடியாட்சி முறையை பிரஷ்யாவில் அமைத்து, சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம், பிரஷ்யாவின் படை வலிமையைப் பெருக்கி மற்ற நாடுகள் பிரஷ்யாவைக் கண்டு அஞ்சும் நிலைக்கு உயர்த்த வேண்டும் என்பது இவர் நோக்கம். எனவே, இவர் ஆட்சியில் நிதித்துறையில் சிக்கனம், படைத் துறையில் வலிமையைப் பெருக்குதல், தெய்வீக உரிமைக் கொள்கை அடிப்படையில் பலம் பொருந்திய முடியாட்சியை அமைத்தல் ஆகியவை ஹோகன் சாலர்ன்ஆட்சியின் இயல்புகளாக அமைந்தன.

பட்டத்திற்கு வந்தவுடன் பல துறைகளிலும் சிக்கனத்தைக் கடைப்பிடித்து, ஏராளமான பொருளைச் சேர்த்தார், 38,000

[1] "Under Fredrick William I financial economy, military might and divine right monarchy became the characteristics of Hohen Zollern rule in Prussia" C.J.H. Hayes—Modern Europe to 1870, page 294.

வீரர்களைக் கொண்ட பிரஷ்யப் படையை 80,000 கொண்ட ஒரு படையாக ஆக்கினார். ஃபிரான்ஸ், ஆஸ்திரியா போன்ற நாடுகள் பெற்றிருந்த அளவு படை பலத்தைப் பிரஷ்யா பெற்றது. போர்த் திறமை, கட்டுப்பாடு இவற்றைப் பொறுத்தவரை பிரஷ்யப் படைகள் ஈடு இணையற்று விளங்கின. கட்டாய இராணுவச் சேவை முறையைக் கடைப்பிடித்து (Conscription) பிரபுக்கள், குடியானவர்கள் எல்லோரும் படைத்துறையில் பணியேற்க வேண்டுமென்று ஆணையிட்டார். போர்த் துறையில் தேர்ச்சியும், தகுதியும் பெற்றவர்கள் மட்டுமே படைத்தலைவர்களாக நியமிக்கப் பட்டனர். சிபாரிசு, செல்வாக்கு, செல்வம் இவற்றின் அடிப் படையில் படைத் தலைவர்கள் நியமிக்கப்படுவதை இவர் வெறுத்தார். போர் வீரர்களுக்குக் கடுமையான பயிற்சி அளிக்கப் பட்டது. நவீன போர்க் கருவிகளும், போர் முறைகளும் புகுத்தப் பட்டன. பிற்காலத்தில் பிரஷ்யா படைத்துறையில் அழியாப் புகழ் பெறுவதற்குக் காரணமாக இருந்தவர் முதலாம் ஃபிரெடரிக் வில்லியம் ஆவார்[1].

நிர்வாகத்தைப் பொறுத்தவரை மகா எலெக்டரால் உருவாக்கப்பட்ட நிர்வாக முறையை மேலும் வலுப்படுத்த இவர் முயற்சிகள் மேற்கொண்டார். இத்துறையில் அவர் குறிக்கோள் ''அதிகாரக் குவிப்பு'' ஆகும். 'டயட்' (Diet) சபைக்குப் பதிலாக மகா எலெக்டரால் நிறுவப்பட்டிருந்த 'Council of State' என்னும் அவை தொடர்ந்து நிர்வாகப் பணிகளைக் கவனித்தது. ஆனால், நிர்வாகக் காரியங்களை கவனிப்பதற்கென்று நிதி, அயல் நாட்டு விவகாரங்கள், போர், நிதித்துறைகளின் அமைச்சர்கள் கொண்ட ஒரு சிறுகுழு அமைக்கப்பட்டது. சிவில் நிர்வாகத்தைச் செவ்வனே நடத்துவதற்காக 'General Directory' என்ற ஒரு குழுவை அமைத்தார். இதுதான் பிற்காலத்தில் பிரஷ்யாவின் புகழ் பெற்ற சிவில் சர்விஸாக வளர்ந்தது. இந்த முறையினால் ஓரளவிற்கு நிர்வாகத்தில் தாமதம் ஏற்பட்டாலும் (Red Tape) நாட்டில் ஒரு திறமையான நிர்வாக முறை ஏற்பட இது பெரிதும் உதவியது. நிர்வாகத்தில் கண்டிப்பையும், நேர்மையையும் விரும்பிய இவர், இலஞ்சம், கையாடல் போன்ற குற்றங்களைக் கடுமையாகத் தண்டித்தார். அயராத உழைப்பில் நம்பிக்கை கொண்ட இவர் நகர வீதிகளில் கையில் பிரம்புடன் சுற்றிவந்து வேலையில்லாமல் சோம்பித் திரிபவர்களை வேலைக்கு விரட்டுவார்.

பொருளாதாரத் துறையில் இவர் ஃபிரான்சைப் பின் பற்றினார். வெளிநாட்டுச் சாமான்கள் பிரஷ்யாவில் இறக்குமதி

[1] It is this king who may be regarded as the father of what came to be called Prussian militorism.

செய்யப்படுவதைத் தடுத்தார். நெசவுத் தொழில் போன்ற தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டு அவை அரசின் கண்காணிப்பில் இயங்கி வந்தன. தனியார் துறையிலும் பல தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டன. இந்தத் தொழில்களுக்குக் காப்பு அளிக்கப் பட்டது. மற்ற ஜெர்மன் அரசுகளிலிருந்தும் வெளிநாடுகளி லிருந்தும் பலர் பிரஷ்யாவில் வந்து குடியேறும்படி வரவேற்கப் பட்டனர். அவர்களுக்கு நிலங்களும் வரிச் சலுகைகளும் அளிக்கப் பட்டன. இம்முறைகளினாலும், சிக்கனத்தைக் கடைப்பிடித்த தாலும் நாட்டின் வருவாய் பெருகியது. வருவாயின் பெரும்பகுதி படைத் துறைக்கும், ஒரு சிறுபகுதி மட்டும் கல்வி, பொருளா தாரம் மற்ற அமைதிக் காலப் பணிகளுக்காகவும் செலவிடப் பட்டது.

இவரிடம் வேடிக்கையான சில குண இயல்புகள் காணப் பட்டன. ஒரு குடும்பத் தலைவனைப் போல் ஒவ்வொருவர் மீதும், ஒவ்வொரு பொருள்மீதும் அவர் கவனம் இருந்தது. தன்னுடைய அரசை அவர் ஒரு வகுப்பறை போலவும் குடிமக்களைத் தம் மாணவர்கள் போலவும் கருதித் தவறு செய்தவர்களைத் தாமே பிரம்பு கொண்டு அடிப்பார்.[1] சோம்பித் திரிபவர்களைக் கண்டால் அவருக்கு வெறுப்பு. உடனே அவர்களைப் பிடித்து ஏதாவது வேலையைக் கொடுப்பார் அல்லது படையில் சேர்த்து விடுவார். எனவே, இவர் 'சார்ஜன்ட் மன்னர்'' (Sarjeant King) என்று மக்களால் அழைக்கப்பட்டனர். நல்ல உயரமான ஆட்களைப் பிடித்துப் படையில் சேர்ப்பதில் அவருக்குத் தனி ஆர்வம் இருந்தது. ஆறு அடிக்குமேல் உயரமுள்ள வீரர்களைக் கொண்ட ஒரு தனிப்படையை (Potsdam Guard of Giants) நிறுவினார். இவருக்குக் கல்வி, கலை, இலக்கியம், தத்துவம் ஆகிய துறைகளில் சிறிதும் ஈடுபாடு கிடையாது.

வெளிநாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரை இவர் அதிக சாதனைகள் புரியவில்லை. ரஷ்யாவுக்கும் ஸ்வீடனுக்கும் நடந்த போரில் தலையிட்டு அதன் விளைவாகப் பாமரேனியாவின் ஒரு பகுதியை ஸ்வீடனிடமிருந்து பெற்றார். இது தவிர வேறெந்தப் போரிலும் இவர் ஈடுபடவில்லை.

## மாமன்னர் இரண்டாம் ஃபிரெடரிக்
## (Frederick II The Great, 1740–1786)

### அறிவுவளர்ச்சி (Enlightenment)

மாமன்னர் ஃபிரெடரிக்கின் ஆட்சியைப்பற்றி ஆராய்வதற்கு முன்பு, பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஐரோப்பாவில்

[1] Modern Europe to 1870, C.J.H. Hayes, page 296.

குறிப்பாக ஃபிரான்ஸ் போன்ற நாடுகளில் தோன்றி வேகமாகப் பரவிக்கொண்டிருந்த அறிவு வளர்ச்சியைப் பற்றி (Enlightenment) இங்குச் சிறிது ஆராய்வது பொருந்தும் ஏனெனில், பிரஷ்யாவின் இரண்டாம் ஃபிரெடரிக் இந்த அறிவு வளர்ச்சிக் கருத்துகளினால் பெரிதும் ஈர்க்கப்பட்டு அவற்றின் அடிப்படையில் தம் கொள்கைகளையும், செயல்களையும் அமைத்துக் கொண்டார்.

பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவெங்கும் தேசிய அரசுகள் ஏற்பட்டு வரம்பு கடந்த முடியாட்சி முறை வளர்ந்தது. அரசர்கள் எதேச்சாதிகாரத்தைப் பெற்றிருந்தாலும் மக்களுடைய நலனிற்காகத்தான் அரசாங்கம் இருக்கின்றது என்ற கருத்தை ஏற்றுக்கொண்டு மக்களுக்கு நன்மை பயக்கும் பொருளாதார, சமூக, நிர்வாகச் சீர்திருத்தங்களை ஆர்வத்துடன் செயல் படுத்தினர். குடியானவர்களும், தொழிலாளர்களும் சமூக அமைப்பில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருந்தனர். மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், வியாபாரிகள், பேங்கர்கள், தொழிலதிபர்கள் போன்ற பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்களைக் கொண்ட ஒரு நடுத்தர வகுப்பு உருவாகிக் கொண்டிருந்தது. பொருளாதார வாழ்க்கையில் பணம் முக்கிய இடத்தைப் பெற்றது. முதலாளித்துவ முறை ஐரோப்பாவில் வளர்ச்சி பெற்றது.

இயற்கையைப் புரிந்து கொள்ளுவதிலும், இயற்கையைக் கட்டுப்படுத்துவதிலும் நியூட்டன் போன்ற விஞ்ஞானிகள் முயற்சிகள் பல செய்து வெற்றி கண்டனர். விஞ்ஞான அறிவு வளர்ந்ததன் விளைவாக மனிதன் புறஉலக வாழ்க்கையைப்பற்றி அறிந்து கொள்ள முயன்றான். சமயக் கோட்பாடுகளும், சமய நம்பிக்கைகளும் திறனாய்வு நோக்கோடு அணுகப்பட்டு சமயத்தின் பெயரால் இழைக்கப்பட்ட அநீதிகள் கண்டிக்கப்பட்டன. பகுத்தறிவுக்கு ஒவ்வாத கருத்துகள் மறுக்கப்பட்டன. முற்போக்குக் கொள்கைகளுக்கும், புதுமைக் கருத்துகளுக்கும் பாசறையாக விளங்கியது ஃபிரான்ஸ். புதுமைக் கருத்துகளையும், பகுத்தறிவு வாதத்தையும் பரப்பிய சிந்தனையாளர்கள் ஃபிரான்சில் பலர் தோன்றினர். 'Philosophes' என்று அழைக்கப்பட்ட இவர்களுள் முதன்மையானவர் வால்டேர் ஆவார். இயற்கையின் நியதிகளிலும், சட்ட திட்டங்களிலும் தலையிடாமல் இயற்கையோடு ஒன்றிய வாழ்க்கைதான் இன்பம் மிகுந்தது. மனித வாழ்க்கைக்குப் பகுத்தறிவுதான் வழிகாட்டி. பகுத்தறிவுக்கு ஒவ்வாத சட்ட திட்டங்கள், அமைப்புகள் ஆகியவற்றைத் தகர்த்தெறிந்து பகுத்தறிவின் உதவியோடு இயற்கையை அறிந்து

கொண்டு இயற்கையுடன் ஒன்றிய வாழ்க்கையை மனிதன் அமைத்துக் கொண்டால் மனித சமுதாயம் வேகமாக முன்னேற முடியும். மனிதர்கள் எல்லோரும் பிறப்பால் சமம்; அவர்களுக்கு இயற்கை அளித்திருக்கும் உரிமைகள் எல்லோராலும் மதிக்கப் படவேண்டும் போன்ற கருத்துகளை 'லாக் (Locke), 'ரூசோ' (Rousseau) போன்ற சிந்தனையாளர்கள் வலியுறுத்தினர். ரூசோ போன்ற அறிஞர்கள் வரம்புக்குட்பட்ட முடியாட்சியை விட மக்களாட்சி சிறந்தது; மக்கள் தங்களைத் தாங்களே ஆளும் உரிமை பெற்றவர்கள்; சமூகத்தில் மக்கள்தான் அதிகாரத்தின் பிறப்பிடம் போன்ற முற்போக்குக் கருத்துகளை மக்களிடையே பரப்பினர். பொருளாதாரத் துறையிலும் பதினெட்டாம் நூற்றாண்டில் பல புதுமைக் கருத்துகள் தோன்றின. மக்களின் பொது நலத்திற்காகப் பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் தலையீடு தேவை என்பதை முன்பு அறிஞர்கள் ஒப்புக்கொண்டிருந்தனர். ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டில் ஃபிரான்சில் 'Physiocrats' என்றழைக்கப்பட்ட பொருளாதாரத் தத்துவ அறிஞர்கள் தோன்றி அரசின் தலையீட்டை எதிர்த்துத் தலையிடாமைக் கோட்பாட்டை (Laissez Faire) ஆதரித்தனர். இவர்களுள் முக்கியமானவர்கள் 'க்வெஸ்னே' (Quesnay), 'ஆடம் ஸ்மித்' (Adam Smith) போன்றவர்கள் ஆவர்.

பதினெட்டாம் நூற்றாண்டு அறிவு வளர்ச்சி இயக்கத்தில், மனிதாபிமான உணர்ச்சி முக்கிய இடத்தைப் பெற்றது. குற்றவாளிகளை மனிதத் தன்மையற்ற முறையில் நடத்துவது, சித்திரவதை, அடிமை வியாபாரம் போன்ற பழக்கங்களை ஒழிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. கலைத் துறையில் பண்டைய கிரேக்க-ரோமானியக் கலைப் பாணி ஐரோப்பாவின் மக்களின் மனதைக் கவர்ந்தது. இந்த நூற்றாண்டுக் கலைப் படைப்புகள் யாவும் கிரேக்க—ரோமானியக் கலை வடிவங்களை ஒத்திருந்தன. 1751-1765-ல் ஃபிரான்சில் சிந்தனையாளர்கள் பலரது முயற்சிகளின் விளைவாக வெளியிடப்பட்ட 'கலைக் களஞ்சியம்' (Encylopaedia) பதினெட்டாம் நூற்றாண்டில் மக்களின் எண்ணங்களையும் செயல்களையும் பெருமளவு பாதித்தது. பதினெட்டாம் நூற்றாண்டு அறிவு வளர்ச்சி, பகுத்தறிவு ஆகியவற்றின் சின்னமாகக் கருதப்படும். இந்தக் கலைக்களஞ்சியத்தில் வால்டேர், ரூசோ, க்வெஸ்னே, டி அலம்பர்ட் போன்றவர்கள் கட்டுரைகள் எழுதினர்கள். 'டெனிஸ் திதரோ' (Denis Didarot) என்பவர் இந்தக் கலைக்களஞ்சியத்தின் ஆசிரியர். இதுபோன்ற பழுத்த சிந்தனையாளர்களால் போற்றி வளர்க்கப்பட்ட அறிவு வளர்ச்சி, மரபுவழி வந்திருக்கும் சமூக, அரசியல் அமைப்புகளைப் பகுத்தறிவுக்கும்,

விஞ்ஞான அறிவுக்கும் ஏற்ற வகையில் திருத்தி அமைக்கவேண்டும் என்ற நோக்கம் கொண்டது. சமுதாயத்தில் எல்லாத் தளத்திலும் இருக்கும் மக்களுக்கு, குறிப்பாக, ஏழை எளியவர்கள், ஒடுக்கப் பட்டவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற குறிக்கோளைக் கொண்டதாக இருந்ததால் இந்த இயக்கத்தில் மனிதாபிமான உணர்ச்சி மேலோங்கியிருந்தது. இந்த அறிவு வளர்ச்சியின் செல்வாக்கிற்குட்பட்டு அப்பொழுது ஐரோப்பாவை ஆண்ட இல மன்னர்கள் முற்போக்குத் திட்டங்களைச் செயல்படுத்துவதிலும், புதுமைக் கருத்துகளைப் புகுத்துவதிலும் பேரார்வம் காட்டி னார்கள்.

முதலாம் ஃபிரெடரிக் வில்லியத்தின் மகன் மகா ஃபிரெடரிக் என்று அழைக்கப்படும் இரண்டாம் ஃபிரெடரிக் 1740-ல் பிரஷ் யாவின் அரியணை ஏறினர். பிள்ளைப் பருவம் முதலே இவருக்கும் தந்தைக்கும் இடையே பல கருத்து வேறுபாடுகள் இருந்தன. தந்தையோ கல்வி அறிவில்லாத முரட்டுக் குணம் படைத்தவர். எளிமையை விரும்பியவர். மகனே நாகரிக வாழ்க்கையில் மூழ்கி ஃபிரெஞ்சு இலக்கியம், ஃபிரெஞ்சுக் கலை ஆகியவற்றில் நாட்டம் கொண்டிருந்தார். இளம் வயதிலிருந்தே இசை, கவிதை, நாட்டி யம் ஆகியவற்றில் அளவு கடந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அரச காரியங்கள், நிர்வாகம் ஆகியவற்றில் இவர் அக்கரை கொள்ள வில்லை. எனவே, தந்தைக்கும் மகனுக்குமிடையே கருத்து வேறு பாடுகள் தோன்றித் தந்தையின் கட்டுப்பாட்டை வெறுத்த ஃபிரெடரிக் தப்பி ஓட முயன்றார். ஆனல், தந்தையினல் சிறைப்பிடிக்கப்பட்டு, கசையடி போன்ற பல தண்டனைகளுக் குள்ளாக்கப்பட்டார். இறுதியில் தந்தையின் ஆணைக்குக் கீழ்ப் படிந்து அரச காரியங்களில் ஈடுபட ஆரம்பித்தார். படைத்துறை, நிர்வாகத் துறைகளில் நல்ல பயிற்சியும் பெற்றார். இளமைக் கனவுகளையும், இலட்சியங்களையும் மறந்து படை வலிமையைப் பெருக்கிப் பிரஷ்யாவை விரிவுபடுத்த வேண்டும் என்பது அவர் குறிக்கோளாக அமைந்தது.

உள்நாட்டுக் கொள்கை

இவர் காலத்தில் வல்லாட்சி முறை உச்சநிலையை அடைந்தது, அதிகாரம் முழுவதும் அரசரின் கையில் குவிந்து கிடந்தது. மன்னரின் எதேச்சாதிகார ஆட்சி ஏற்படச் சாதகமான சூழ்நிலை இவர் ஆட்சியில் நிலவியது. இவர் இராணுவத்தின் உதவியைப் பெற்றார். மக்களிடையே இருந்த வேறுபாடுகள் அவர்கள் அரச னுக்கு எதிராக ஒன்றுபடுவதற்குத் தடையாக இருந்தன. இதே போல, சமய வேறுபாடுகளும், சமயக் குருமார்கள் ஒன்றுபட்டு அரசரை எதிர்க்கத் தடையாக இருந்தன. நாட்டின் மூன்றில் ஒரு பங்கு நிலம் அரசருக்குச் சொந்தமாக இருந்ததால், இந்தச்

செல்வத்தின் அடிப்படையில் அரசர் எதேச்சாதிகார ஆட்சியை ஏற்படுத்த முடிந்தது. எதேச்சாதிகார ஆட்சியானாலும் இவர் ஆட்சி, பொறுப்பற்ற ஆட்சியாக இல்லாமல் மக்கள் நலன் பேணும் வல்லரசாக விளங்கியது (Enlightened Despotism). பதினான்காம் லூயி போன்ற வல்லரசர்கள் தங்கள் சொந்த நலன்களும், நாட்டின் நலன்களும் ஒன்றெனக் கருதினர். ஆனால், ஃபிரெடரிக் தன்னை மக்களின் முதல் ஊழியராகக் கருதிக்கொண்டார். 'மக்களுக்காக அரசனேயன்றி அரசனுக்காக மக்கள் அல்லர்' என்று அவர் ஓரிடத்தில் குறிப்பிடுகின்றார். மக்கள் பணியிலேயே தம் நேரம் முழுவதையும் செலவிட்டார். அரசர் மட்டுமன்றி, அரசின் ஊழியர்கள் ஒவ்வொருவரும் நாட்டு நலனையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டார்கள். திறமை பெற்றவர்களையும், அரசிற்கு உண்மையாக நடப்பவர்களையுமே அமைச்சர்களாக நியமித்தார். அரசாங்க அலுவலர்களின் வேலையை மிக்க விழிப்புடன் கண்காணித்து வந்தார்.

மக்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதில் மிக்க கவனம் செலுத்தினார். விவசாய வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்தார். சதுப்பு நிலங்களும், தரிசு நிலங்களும் சீர்படுத்தப்பட்டு விளை நிலங்களாக ஆக்கப்பட்டன. வெளிநாடுகளிலிருந்து ஆயிரக்கணக்கான குடியானவர்கள் பிரஷ்யாவில் குடியமர்த்தப்பட்டு அவர்களுக்கு நிலமும், பொருளும் வழங்கப் பட்டன. புதிய விவசாய முறைகளைப் பின்பற்றுமாறு மக்கள் வற்புறுத்தப்பட்டனர். நில அடிமை முறையை (Serfdom) இவர் ஒழிக்கவில்லையாயினும் குடியானவர்களைப் பிரபுக்களின் கடும்பிடியினின்றும் விடுவித்தார். விவசாய உற்பத்தி பெருகியது. நாட்டில் விளைந்த தானியங்கள் அரசாங்கக் கிடங்குகளில் சேமிக்கப்பட்டு, விளைச்சல் இல்லாத காலங்களில் மக்களுக்கு அளிக்கப்பட்டது. கால்நடை அபிவிருத்தியாலும், பழ வகைகள் பயிர் செய்வதிலும் அக்கறை காட்டினார். பிரஷ்யாவின் தொழில் வளத்தைப் பெருக்க பல முயற்சிகள் மேற்கொண்டார். காப்புக் கொள்கைமூலம் உள்நாட்டு தொழில் வளர்ச்சிக்கு ஊக்குவிக்கப்பட்டது. பட்டு, வெல்வெட், லினன் போன்ற புதுத் தொழில்கள் துவக்கப்பட்டன. பெர்லினில் பீங்கான் தொழிற்சாலை ஒன்றை நிறுவினார். இரும்பு, காரீயச் சுரங்கங்கள் வெட்டப்பட்டன. வர்த்தகத்தைப் பெருக்குவதற்காகச் சாலைகளையும், கால்வாய்களையும் அமைத்தார். பெர்லின் அரசாங்க வங்கி ஒன்று (State Bank of Berlin) துவக்கப்பட்டது. வெளிநாடுகளுடன் வர்த்தகத்தைப் பெருக்குவதற்கு அயல்நாட்டு வர்த்தகக் கழகம் ஒன்று (Overseas Trading Corporation) நிறுவப்பட்டது. நல்ல பயிற்சி பெற்ற ஃபிரெஞ்சு வரி வசூல் அதிகாரிகளின் உதவிகொண்டு

வரிவசூல் முறை செப்பனிடப்பட்டது. உப்பு, புகையிலை உற்பத்தி அரசின் ஏகபோக உரிமையாக இருந்தது. முத்திரைக் காகிதங்களின் மீது வரி நான்கு மடங்காக உயர்த்தப்பட்டது. மாமிசம், பீர் போன்ற மது வகைகள் மீது வரி அதிகரிக்கப் பட்டது.

இந்தச் சீர்திருத்தங்களின் விளைவாக நாட்டின் வருவாய் பெருகியது. நீதித் துறையையும் இவர் சீர்படுத்தி அமைத்தார். முறைகேடாக நடந்துகொண்ட நீதித் துறை அதிகாரிகள் பதவியிலிருந்து விலக்கப்பட்டனர். காலத்துக்கு ஒவ்வாத சட்டங்களைத் திருத்தி, தற்காலத்துப் போக்குடன் ஒத்திருக்கும் வகையில் அவற்றை மாற்றியமைத்தார். இப்பணி சட்டத் துறையில் தேர்ச்சிபெற்ற நிபுணர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. சட்டங்கள் தெளிவாகவும் எல்லோருக்கும் விளங்கும் வகையிலும் எழுதப் பட்டன. கசையடி போன்ற கடுமையான தண்டனைகள் ஒழிக்கப் பட்டன. விசாரணையின்போது சித்திரவதை செய்யும் வழக்கம் ஒழிக்கப்பட்டது. சமயத் துறையில் பொறையுடைமைக் கொள்கையைக் கடைப்பிடித்து மாற்றுச் சமயத்தினருக்கு சமயச் சுதந்திரமும், வழிபாட்டு உரிமையும் அளித்தார். இவர் பிராடஸ்டென்டு சமயத்தவராயினும் கத்தோலிக்கர்கள் பலரைத் தன் நாட்டிற்கு அழைத்தார். குறிப்பாக, பிரஷ்யாவில் கல்வித் தரத்தை உயர்த்த வேண்டுமென்ற நோக்கத்துடன் ஜெசூட்டுகளை வரவேற்றார். தன் தந்தையைப் போலவே படைத் துறையில் அதிக ஈடுபாடு கொண்டிருந்தார். நல்ல பயிற்சியும், சிறந்த போர்க் கருவிகளும், ஆற்றல் மிக்க தளபதிகளும் பெற்றிருந்த பிரஷ்யப் படை ஐரோப்பாவிலேயே தலைசிறந்த ஒரு படையாக இருந்தது மட்டுமின்றி மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாகவும் விளங்கியது.

பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் பரவிக்கொண்டிருந்த அறிவு வளர்ச்சியின் (Enlightenment) செல்வாக்குக்குட் பட்டார் ஃபிரெடரிக். அறிவு வளர்ச்சியும், மனிதாபிமான உணர்ச்சியும் பெற்றவர்களுள் தன்னை ஒருவராகக் கருதிக்கொள்ளுவதில் ஃபிரெடரிக் பெருமைப்பட்டார். அறிவு வளர்ச்சியின் இருப்பிடமாக விளங்கியது ஃபிரான்ஸ். அந்நாட்டு அறிஞர்களோடு தொடர்பு கொண்டார். குறிப்பாக, ஃபிரெஞ்சு இலக்கிய மேதையும் பகுத்தறிவுவாதியுமான 'வால்டேரை'த் (Voltaire) தம் அவையில் வைத்துப் போற்றினார். இலக்கியத் துறையில் ஃபிரெடரிக் மிக்க ஆர்வம் கொண்டவர். ஃபிரெஞ்சு மொழியில் கவிதைகளும், கட்டுரைகளும், வரலாற்று நூல்களும் எழுதியுள்ளார். ஆனால், அவருக்கு ஜெர்மன் மொழிமீதும், ஜெர்மன்

இலக்கியத்தின்மீதும் ஒரு வெறுப்புணர்ச்சி ஏற்பட்டது. இதனுல் ஜெர்மன் மக்கள் இவரை விரும்பவில்லை. அதே சமயத்தில் பிரஷ்யாவில் தன் படை வலிமை மூலம் பல புது இடங்களைப் பிடித்து பிரஷ்யாவின் எல்லைகளை விரிவுபடுத்தி பிரஷ்யர்களின் அன்பையும், ஆதரவையும் பெற்றுர். எனவே, இவர் ''ஒரு கெட்ட ஜெர்மானியர்; ஆனுல் நல்ல பிரஷ்யர் (A bad German, but a good Prussian) என்று அழைக்கப்படுகிறுர்.[1]

இவருடைய ஆட்சி வல்லாட்சியாக இருப்பினும் நாட்டு நலனிற்கும். மக்கள் நல்வாழ்க்கைக்கும் ஒத்தவகையில் தன் ஆட்சியை அமைத்துக் கொண்டதாலும், அறிவு வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்ததாலும், அறிவு வளர்ச்சி இயக்கத்தின் அடிப்படையில் முற்போக்குக் கொள்கைகளை ஆதரித்துச் செயல்படுத்தியதாலும், சமயப் பொறையைக் கடைப்பிடித்ததாலும் இவரை நாம் மக்கள் நலம் பேணும் ஒரு வல்லரசர் (Enlightened Despot) என்று கருதலாம்.

### அயல்நாட்டுக் கொள்கை

மாமன்னர் என்று அழைக்கப்படுவதற்கு ஃபிரெடரிக்குடைய போர்ச் சாதனைகள் ஒரு முக்கிய காரணமாகும். போர்கள் புரிந்து பெரும் புகழை அடைய வேண்டும். புதுநாடுகளைப் பிடித்துப் பிரஷ்யாவின் எல்லையை விரிவுபடுத்த வேண்டுமென்ற ஆசைகள் இவருக்கு உண்டு என்பதை முன்பு கூறியுள்ளோம். இந்த நோக்கத்துடன் பட்டமெய்திய உடனேயே 1740-ல் ஆஸ்திரியப் பேரரசுடன் ஒரு போரில் ஈடுபட்டார்.

### ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர் (War of the Austrian Succession, 1740—1748)

புனித ரோமானியப் பேரரசரும் ஆஸ்திரியாவின் அரசருமான ஹாப்ஸ்பர்க் வம்சத்து ஆறும் சார்லசுக்கு (Charles VII, 1711-1740) ஆண் வாரிசு இல்லை. அவருடைய ஒரே பெண் மரியா தெரிசா எல்லா வகைகளிலும் பட்டம் பெறத் தகுதியுள்ளவராகக் கருதப்பட்டார். ஆகவே, தமக்குப் பிறகு அவரே ஆஸ்திரியப் பேரரசை ஆளவேண்டும் என்று சார்லஸ் விரும்பினுர். எனவே, தாம் இறப்பதற்கு முன்பே 'பேரரசரின் கட்டளை' (Pragmatic Sanction) என்று அழைக்கப்படும் ஓர் ஆணையைப் பிறப்பித்து அதன் மூலம் தனக்குப் பிறகு தனது மகள் மரியா தெரிசா

[1] A History of Europe — H.A.L. Fisher, page 749:

ஆஸ்திரிய அரசியாவார் என்று அறிவித்திருந்தார். இக்கட்டளைக்கு அவரது ஆளுகைக்குட்பட்டிருந்த நாடுகளின் அங்கீகாரத்தையும், மற்ற ஐரோப்பிய அரசுகளின் ஒப்புதலையும் பெற்றிருந்தார். இந்த ஏற்பாட்டை ஏற்றுக் கொண்ட அரசர்களில் இரண்டாம் ஃபிரெடரிக்கின் தந்தையும் ஒருவர் ஆவார். வாரிசுரிமைப் பிரச்சினையைச் சிக்கலின்றித் தீர்த்துவிட்ட மனநிறைவோடு 1740-ல் ஆறும் சார்லஸ் இறந்தார்.

1740-ல் மரியா தெரிஸா ஆஸ்திரிய அரியணை ஏறியவுடன், இந்த ஏற்பாட்டை ஏற்றுக் கொண்ட பவேரியா, ஸ்பெயின், சார்டினியா. சாக்ஸனிபோன்ற அரசுகளே ஆஸ்திரியப் பேரரசின் சில பகுதிகள் தங்களுக்குச் சேர வேண்டுமென்று உரிமை கொண்டாட ஆரம்பித்தன. ஆனால், இவற்றையெல்லாம் முந்திக் கொண்டு பிரஷ்யாவின் இரண்டாம் ஃபிரெடரிக் ஆஸ்திரியாவின் ஒரு பகுதியான 'சைலீஷியா' (Silesia) மீது உரிமை கொண்டாடி தன் படைகளுடன் அப்பகுதியில் புகுந்து வன்முறையில் அதைக் கைப்பற்றிக் கொண்டார். இவ்வாறு எதிர்பாராத தாக்குதலுக்குள்ளாகிய மரியா தெரிஸா மற்ற ஐரோப்பிய நாடுகளின் உதவிகோரி வேண்டுகோள் விடுத்தார். ஆஸ்திரியாவின் ஆதிக்கத்தை ஒடுக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்ட ஃபிரான்ஸ் இப்போரில் ஆஸ்திரியாவுக்கு எதிராகப் பிரஷ்யாவுக்கு உதவிசெய்ய முன்வந்தது. ஃபிரான்சின் பெரும் எதிரியான இங்கிலாந்து குடியேற்ற வியாபாரப் போட்டி காரணமாக ஃபிரான்சுக்கு எதிராக ஆஸ்திரியாவின் பக்கம் சேர்ந்து கொண்டது. வடஅமெரிக்காவிலும், இந்தியாவிலும், ஃபிரான்சுக்கும் இங்கிலாந்திற்குமிடையே காலனி ஆதிக்கத்திற்காகப் போர் நடந்தது. மேலும், ஹாலந்தும் ரஷ்யாவும் ஆஸ்திரியாவுக்கு உதவ முன்வந்தன. ஸ்பெயின், ஊட்ரெக்ட் உடன்படிக்கையின்படி இத்தாலியில் ஆஸ்திரியாவுக்கு விட்டுக்கொடுத்த பகுதிகளையெல்லாம் மீட்கும் நோக்கத்துடன் ஆஸ்திரியாவுக்கு எதிராகப் பிரஷ்யாவுடன் சேர்ந்து கொண்டது. இப்போர் ஐரோப்பா, ஆசியா, அமெரிக்கா ஆகிய இடங்களில் நடந்தது. ஃபிரெடரிக் சைலிஷியாவைக் கைப்பற்றியதை முன்னர் குறிப்பிட்டோம். பிரஷ்யத் துருப்புக்களைச் சைலீஷியாவிலிருந்து வெளியேற்ற மரியா தெரிசா செய்த முயற்சி பலனளிக்கவில்லை. இறுதியில், 1745-ல் முடிவான 'டிரெஸ்டன்' (Dresden) உடன்பாட்டின்படி மரியா தெரிசா பிரஷ்யாவுக்குச் சைலீஷியாவைக் கொடுத்துவிட ஒப்புக்கொண்டார். உடனே ஃபிரெடரிக் போரிலிருந்து விலகிக் கொண்டார். அதன் பிறகு ஃபிரெஞ்சு, பவேரியப் படைகளுக்கு எதிராக ஆஸ்திரியா பல வெற்றிகளைப் பெற்றது. பவேரியா கைப்பற்றப்பட்டது.

ஃபிரஞ்சுத் துருப்புகள் ஜெர்மனியிலிருந்து விரட்டப்பட்டன. இத்தாலியிலும் ஆஸ்திரிய சேனைகள் வெற்றி வாகை சூடின. ஃபிரெஞ்சுப் படைகள் ஆஸ்திரியாவுக்குச் சொந்தமான நெதர் லாந்தைத் தாக்கின. 'ஃபாண்டிநுய்' (Fontenoy)என்ற இடத்தில் நடந்த போரில் வெற்றி பெற்று நெதர்லாந்தை ஃபிரெஞ்சுப் படைகள் கைப்பற்றின. இந்தியாவில் நடந்த போரில் ஃபிரெஞ்சுக் காரர்கள் சென்னையையும், அமெரிக்காவில் நடந்த போரில் ஆங்கிலேயர்கள் லூயிபர்க்கையும் கைப்பற்றினார்கள். போரினால் சோர்வடைந்த இருதரப்பினரும் இறுதில் 1748-ல் 'எக்ஸ்-லா சாபேல்' (Treaty of Aix-la-Chapelle) என்ற உடன்படிக்கை செய்துகொண்டு போரை முடித்துக்கொண்டன. ஃபிரான்சும் இங்கிலாந்தும் போரின்பொழுது தாங்கள் கைப்பற்றிய இடங் களைத் திருப்பிக் கொடுக்க ஒப்புக்கொண்டனர். சைலீஷியாவைப் பிரஷ்யாவுடன் இணைத்துக்கொள்ள ஃபிரெடரிக் அனுமதிக்கப் பட்டார். மரியா தெரிசாவின் கணவர் முதலாம் ஃபிரான்சிஸ் புனித ரோமானியப் பேரரசராக ஏற்றுக் கொள்ளப்பட்டார்.

ஏழாண்டுப் போர் (Seven Years War, 1756–1763)

சைலீஷியாவை விட்டுக்கொடுக்க மரியாதெரிசாவுக்கு மனம் ஒப்பவில்லை. அந்தப் போரில் தனக்கு நடந்த அவமானத்தையும் அவரால் மறக்க முடியவில்லை. எப்படியாவது பிரஷ்யாமீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள நல்லதொரு வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். இங்கிலாந்திற்கும், ஃபிரான்சுக்குமிடையே நடந்துகொண்டிருந்த காலனி ஆதிக்கப் போட்டிக்கும் இன்னும் ஓர் இறுதியான முடிவு ஏற்படவில்லை. எனவே, எல்லா நாடுகளும் மீண்டும் ஒரு போரை எதிர்பார்த்துத் தங்களை ஆயத்தம் செய்து கொண்டிருந்தன. ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் புதுப்புது நண்பர்களைப் பெறும் முயற்சிகளில் ஈடுபட்டிருந்தன. 1746-ல் மரியாதெரிசா ரஷிய அரசி எலிசபெத்தின் உதவியைப் பெற்றார். மரியாதெரிசாவின் அமைச்சர் 'கௌனிட்ஸ்' (Kaunitz) ஃபிரான்சின் நட்பைப் பெற முயற்சிகள் மேற்கொண்டார். பதினெட்டாம் நூற்றாண்டில் ஃபிரான்சுக்கும் ஆஸ்திரியாவுக்கும் இடையே நட்புறவு ஏற்படுவது என்பது எண்ணிப் பார்க்கக்கூட முடியாத ஒரு நிகழ்ச்சியாகும். ஏனெனில், இவை இரண்டும் நீண்ட நெடுங்காலமாகப் பகை உணர்ச்சியிலேயே வளர்ந்து வந்த நாடுகளாகும். ஆனால், அண்மையில் நடந்த சைலீஷியப் போருக் குப் பிறகு தன்னுடைய உண்மையான எதிரி பிரஷ்யா, ஃபிரான்ஸ் அல்ல என்பதை ஆஸ்திரியா உணர ஆரம்பித்தது. இந்தச் சூழ்நிலையில் இங்கிலாந்திற்கும், ஃபிரான்சிற்கும்

குடியேற்ற, வர்த்தக ஆதிக்கப் போட்டி தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. இவ்விரு நாடுகளும் மற்ற ஐரோப்பிய நாடுகளின் உதவியைக் கோரின. பிரஷ்யா இங்கிலாந்திற்கு உதவி செய்ய முன்வந்தது. அதே சமயத்தில் ஃபிரான்ஸ் ஆஸ்திரியாவின் உதவியைப் பெற்றது. ஃபிரான்சும் ஆஸ்திரியாவும் நட்புறவை ஏற்படுத்திக் கொள்வதை ஃபிரெஞ்சு மன்னர் பதினைந்தாம் லூயி முதலில் எதிர்த்த போதிலும் அவருடைய மனைவி 'மாடம் பாம்படூர்' (Madame de Pombadour) பிரஷ்ய நட்புறவை வெறுத்ததால், அவருடைய செல்வாக்கில் ஃபிரெஞ்சு அரசாங்கம் ஆஸ்திரியாவுடன் சேர ஒப்புக் கொண்டது. மரியாதெரிசாவின் மகள் மேரி 'அண்ட்வானெட்' என்பவரை (Marie Antoinette) ஃபிரான்சின் பதினாறும் லூயி மணந்துகொள்ள வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இவ்வாறு முந்திய போரில் ஆஸ்திரியாவை ஆதரித்த இங்கிலாந்து இப்பொழுது பிரஷ்யாவையும், முன்பு பிரஷ்யாவை ஆதரித்த ஃபிரான்ஸ் இப்பொழுது ஆஸ்திரியாவையும் ஆதரிக்கும் ஒரு நிலையைக் காண்கிறோம். இவ்வாறு ஆஸ்திரிய வாரிசுரிமைப் போருக்குப் பிறகு ஐரோப்பிய அரசுகளிடையே நட்புறவில் ஏற்பட்ட மாறுதல் 'அரச தந்திரப் புரட்சி' (Diplomatic Revolution) என்று அழைக்கப்படுகிறது. இவ்வாறு ஜெர்மானிய ஆதிக்கத்திற்கு ஆஸ்திரியாவுக்கும், பிரஷ்யாவுக்கும் இடையே ஏற்பட்ட போட்டிக்கும், கடல் ஆதிக்கத்திற்கும், இங்கிலாந்துக்கும் ஃபிரான்சிற்குமிடையே ஏற்பட்ட போட்டிக்கும் முடிவு காணும் பொருட்டு இந்த ஏழாண்டுப் போர் நிகழ்ந்தது.

முன் நடந்த போரைவிட இது ஐரோப்பிய வரலாற்றில் புகழ் வாய்ந்தது. குறிப்பாக, குடியேற்ற ஆதிக்கத்திற்காக இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்குமிடையே நடந்துகொண்டிருந்த போட்டி இங்கிலாந்துக்குச் சாதகமாக முடிந்தது. இப்போர் ஐரோப்பாவில் மட்டுமன்றி அமெரிக்காவிலும், இந்தியாவிலும் நடந்தது. 1756-ல் ஃபிரெடரிக் சாக்சனிமீது படையெடுத்தார். பிறகு ஆஸ்திரியாவுக்குச் சொந்தமான பொஹிமியாவைத் தாக்கினார். 'பிராக்' நகரம் (Prague) முற்றுகையிடப்பட்டது. ஆனால், ஆஸ்திரியப் படைகள் பிரஷ்யப் படைகளை முறியடித்தன. முற்றுகை கைவிடப்பட்டது. பகைவர்களின் படைகள் பல திசைகளிலிருந்தும் பிரஷ்யாமீது தாக்குதல் தொடுத்தன. ஒப்பற்ற போர்த்திறமை பெற்றிருந்த பிரெடரிக் தனித் தனியாகப் பகைவர்களைச் சந்தித்து வெற்றி கண்டார். மேற்கிலிருந்து தாக்கிய ஃபிரெஞ்சுப் படைகளை 'ரோஸ்பாக்' (Rossbach 1757), என்னும் போரிலும் தெற்கிலிருந்து தாக்கிய ஆஸ்திரியாவை 'லூதென்' (Leuthen) போரிலும், கிழக்கிலிருந்து தாக்கிய

ரஷ்யப் படைகளை 'ஜான்டார்ஃப்' (Jondorf) என்ற இடத்தில் நடந்த போரிலும் முரியடித்தார். இங்கிலாந்து பிரஷ்யாவுக்கு ஏராளமான பொருளுதவியும் படை உதவியும்செய்து ஃபிரெஞ்சுக் காரர்கள் கவனம் முழுவதும் ஐரோப்பாவிலேயே நிலைத்திருக்கும் படி செய்தது. எனவேதான், ஃபிரான்ஸ், அமெரிக்காவிலும் இந்தியாவிலும் இருந்த ஃபிரெஞ்சுக்காரர்களுக்குத் தேவையான உதவி அளிக்க முடியவில்லை. இதனுல்தான், இந்தியாவிலும் அமெரிக்காவிலும் ஆங்கிலேயர்கள் குறிப்பிடத்தக்க வெற்றிகள் பல பெற்றுத் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்த முடிந்தது.

இங்கிலாந்தின் உதவி கிடைத்தும், பிரஷ்யாவின் நிலைமை மோசமாக இருந்தது. ஏராளமான பிரஷ்யப் படைகள் போரில் அழிந்துவிட்டன. இங்கிலாந்தின் பணஉதவி இருந்தும், படையில் சேர ஆட்கள் கிடைக்கவில்லை. ஃபிரெடரிக் பல முறைகளையும் கையாண்டு படை வீரர்களைச் சேர்த்தார். எதிரிகள் படை களிலிருந்து படை வீரர்கள் ஆசை காட்டி அழைக்கப்பட்டனர். போர்க் கைதிகள் விடுதலை செய்யப்பட்டுப் படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஏறக்குறைய ஐந்து ஆண்டுகள் ஃபிரெடரிக் தற்காப்புப் போரில் ஈடுபட்டார். ஃபிரெஞ்சுப் படைகள் ஜெர்மனியிலிருந்து வெளியேற்றப்பட்டாலும் நிலைமை இன்னும் அபாயகரமாகவே இருந்தது. 1759-ல் 'குணர்ஸ்டார்ஃப்' (Kunersdorf) என்ற இடத்தில் நடந்த போரில் பிரஷ்யா ரஷ்யப் படைகளால் தோற்கடிக்கப்பட்டது. 1761-ல் பிரஷ்யாவின் பெரும்பகுதி அந்நியர்கள் கையில் சிக்கியது. அதே ஆண்டு இங்கிலாந்தில் 'வில்லியம் பிட்' (William Pitt) அமைச்சர் பதவியிலிருந்து விலகினுர். அவருக்குப்பின் பதவியேற்றவர்கள் தொடர்ந்து ஐரோப்பியப் போரில் இங்கிலாந்தை ஆழ்த்த விரும்பவில்லை. இந்தச் சமயத்தில் அதிர்ஷ்டவசமாக நடந்த ஒரு நிகழ்ச்சி ஃபிரெடரிக்குக்குப் பேருதவியாக அமைந்தது. 1762-ல் இவரைத் தன் பகைவராகக் கருதிய ரஷ்ய அரசி எலிஸபெத் இறக்கவே, மூன்றும் பீட்டர் ரஷ்ய அரியணை ஏறினுர். இவர் ஃபிரெடரிக்கிடம் மிக்க ஈடுபாடு கொண்டார். எனவே, அவருக்கு எதிராகப் போர் புரிவதை நிறுத்திக்கொண்டதோடு மட்டுமன்றி அவருடைய நட்புறவையும் நாடினுர். இவருக்குப் பிறகு பட்டத்திற்கு வந்த ரஷ்ய அரசி இரண்டாம் காதரினும் இப்போரில் நடுநிலைமை வகித்தார், இப்போரை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு இங்கிலாந்தும், பிரான்சும் குடியேற்ற ஆதிக்கப்போரை நடத்தின. அமெரிக்கா, இந்தியா ஆகிய இடங் களில் நடந்த போர்களில் இங்கிலாந்து இறுதி வெற்றி பெற்று ஃபிரான்சின் ஆதிக்கம் ஒழிக்கப்பட்டது. போரினுல் சோர்

வடைந்த எல்லா நாடுகளும் போரை நிறுத்திக் கொள்ள விரும்பின. 1763-ல் இங்கிலாந்துக்கும், ஃபிரான்சுக்குமிடையே 'பாரிஸ் உடன்படிக்கை'யும் (Peace of Paris), ஆஸ்திரியா வுக்கும், பிரஷ்யாவுக்குமிடையே 'ஹ்யூபர்ட்ஸ்பர்க் உடன் படிக்கை'யும் (Peace of Hubertsburg) கையெழுத்தாகி போர் முடிவடைந்தது. இந்த உடன்படிக்கையின்படி சைலீஷியா மீது தன் உரிமைகளை விட்டுக்கொடுக்க மரியாதெரிஸா இசைந்தார். இவ்வளவு ஆண்டுப் போர் செய்தும்கூட சைலீஷியாவை அவரால் பெற முடியவில்லை. செல்வம் மிகுந்த சைலீஷியாப் பகுதி பிரஷ்யாவுடன் இணைக்கப்பட்டதால் பிரஷ்யாவின் வலிமையும் புகழும் பெருகியது. ஆஸ்திரியாவின் செல்வாக்குக் குறையத் தொடங்கியது. பாரிஸ் உடன்படிக்கையின்படி இங்கிலாந்து ஃபிரான்சிடமிருந்து கனடா, செனிகல், மைனர்க்கா, சில மேற் கிந்தியத் தீவுகள் ஆகியவற்றைப் பெற்றது.

### போலந்துப் பிரிவினை 1772

ஏழாண்டுப் போர் முடிந்த பிறகு இருபத்தி மூன்று ஆண்டுகள் ஃபிரெடரிக் பிரஷ்யாவை ஆண்டார். ஆனால், இந்தக் காலப் பகுதியில் எந்தப் போரிலும் ஈடுபடவில்லை. அரச தந்திரத்தின் மூலமாகப் போலந்தின் ஒரு பகுதி இவருக்குக் கிடைத்தது. துருக்கிக்கும், ரஷ்யாவுக்கும் இடையே நடந்து கொண்டிருந்த போரில், ரஷ்யா பெற்ற பல வெற்றிகளைக் கண்டு பொறாமையும், அச்சமும் கொண்ட ஆஸ்திரியா 1771-ல் துருக்கியோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டது. இதனால் ரஷ்யாவுக்கும் ஆஸ்திரியாவுக்கும் போர் மூளக்கூடிய ஒரு சூழ்நிலை உருவாகியது. இதைத் தவிர்க்கும் பொருட்டு ஃபிரெடரிக் போலந்துப் பிரிவினைத் திட்டம் வகுத்தார். ரஷ்ய அரசி காதரின் உடனே இத்திட் டத்தை 'ஏற்றுக்கொண்டார். முதலில் தயங்கிய மரியாதெரிசா இறுதியில் இத்திட்டத்தில் ஒத்துழைக்கச் சம்மதித்தார். இதன் படி போலந்துக்குச் சொந்தமான சில பகுதிகளை இம்மூன்று நாடுகளும் தங்களுக்குள் பகிர்ந்துகொள்ள ஒப்புக்கொண்டன. இதன்படி 'டான்சிக்' (Danzig) 'தார்ன்' (Thorn) நகரங்கள் நீங்கலாக மேற்குப் பிரஷ்யா முழுவதும் ஃபிரெடரிக்குக்குக் கிடைத்தது. கிழக்குப் பிரஷ்ாவையும் பிராண்டன்பர்கையும் இணைப்பதற்கு இந்நிலப்பகுதி உதவியது.[1]

இத்தகைய சாதனைகள் புரிந்த இரண்டாம் ஃபிரெடரிக்கின் ஆட்சி 1786-ல் முடிவுற்றது. இவர் ஆட்சியின் இறுதியில் பிரஷ்யா இருமடங்காக விரிவடைந்தது மட்டுமன்றி ஐரோப்பாவின் ஒரு

[1] போலந்துப் பிரிவினை பற்றி மேலும் விளக்கமாக ரஷ்யாவில் இரண்டாம் காதரின் ஆட்சி என்னும் தலைப்பின் கீழ்க்காண்க

வல்லரசு என்று கருதப்படும் நிலையை அடைந்தது. ஃபிரடெரிக்கின் ஆட்சி முறையையும், படை முறையையும் பல ஜெர்மன் சிற்றரசர்கள் பின்பற்றத் தொடங்கினர்கள். இவர்கள் ஃபிரெடரிக்கைத் தங்கள் தலைவராக ஏற்றுக் கொண்டார்கள்.

**மதிப்பீடு**

படைத் தலைவர் என்ற முறையில் திட்டங்களை விரைவில் வகுத்து அவற்றைத் தாமதமின்றிச் செயல்படுத்தும் ஆற்றலும், படைகளை மின்னல் வேகத்தில் அழைத்துச் செல்லும் திறமையும், போர்க்களத்தில் வீரத்துடன் போர்புரியும் தன்மையும் இவர் பெற்றிருந்தார். எனவேதான், நெப்போலியன் இவரைப்பற்றிக் கூறும்பொழுது 'பிரஷ்யாவைக் காப்பாற்றியது பிரஷ்யப் படைகள் அன்று; ஃபிரெடரிக்தான்' என்று கூறுகிறர்.[1] எண்ணங்களில் தெளிவும், அறிவுக் கூர்மையும் பெற்ற இவர் கடுமையான உழைப்பிற்குத் தயங்கமாட்டார். தன்னலமும், நல்லொழுக்க நெறிகளுக்குப் புறம்பாக நடக்கும் தன்மையும் கொண்ட இவர் மனிதாபிமான உணர்ச்சிகளைச் சிறிதும் மதியாமல் நடக்கக் கூடியவர். வால்டேரின் சீடராக இருப்பினும் 'ஏழாண்டுப் போரின் வரலாறு' போன்ற நூல்களை எழுதியிருப்பினும் இசை, கவிதை, தத்துவம் ஆகியவற்றில் மிக்க ஈடுபாடு இருந்த போதிலும் இவரை ஒரு சிந்தனையாளர் என்று கருதுவதைவிட ஒரு 'செயல் வீரர்' (Man of action) என்று கருதுவதுதான் பொருந்தும்.

[1] Notes on European History, Vol. III—William Edwards, page 252.

## ஹோகன் சாலர்ன்கள்

(பிராண்டன்பர்க் தேர்வாளர்களும் பிரஷ்ய அரசர்களும்)




குறிப்பு: 'தி'—திருமணம்

# 14. ஆஸ்திரியா—கி.பி. 1740 - 1790

## I. மரியா தெரிசா, II. இரண்டாம் ஜோசப்

### மரியா தெரிசா (Maria Theresa, 1740-1780)

1740-ல் ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்க் அரசர் ஆறும் சார்லஸ் இறக்கவே, 'பேரரசர் கட்டளை' (Pragmatic Sanction) என்ற ஏற்பாட்டின்படி அவர் மகள் மரியா தெரிசா ஆஸ்திரியாவின் அரியணையேறினார் என்பதை முன்பு குறிப்பிட்டுள்ளோம். இவருடைய ஆட்சியில் ஆஸ்திரியாவின் புகழ் மேலும் வளர்ந்தது. உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்களில் இவருக்கு உறுதுணையாக இருந்தவர் அமைச்சர் 'கௌனிட்ஸ்' (Kaunitz) என்பவர். பதினெட்டாம் நூற்றாண்டில் ஆஸ்திரியப் பேரரசு ஒற்றுமையற்றுப் பல சிறுசிறு பகுதிகளாகச் சிதறிக் கிடந்தது. இங்கிலாந்து, ஃபிரான்சைப்போல ஆஸ்திரியா ஒரு தேசிய அரசாகத் திகழவில்லை. ஏனெனில், ஆஸ்திரியப் பேரரசில் ஜெர்மன், 'ஸ்லோவாக்' (Slovak), 'செக்' (Czech), 'மாக்யார்' (Magyar) போன்ற பல்வேறு இனத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்து கொண்டிருந்தனர். ஆஸ்திரியப் பேரரசின் பல்வேறு பகுதிகளிலும் அந்தந்தப் பகுதிகளின் மரபுகள், பழக்க வழக்கங்களோடு ஒத்த பல்வேறு நிர்வாக முறைகள் அமலிலிருந்தன. அரியணை ஏறியது முதல் மரியா தெரிசாவின் நோக்கம் சிதறுண்டு கிடக்கும் இவ்வரசுகளை ஒன்று படுத்தி ஆஸ்திரியாவை ஒரு வலிமை பொருந்திய நாடாக ஆக்க வேண்டுமென்பது. மேலும், ஆஸ்திரியாவில் தன் எதேச்சாதிகார ஆட்சியை நிறுவ வேண்டுமென்பது இவர் நோக்கம். பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் பரவிக்கொண்டிருந்த அறிவு வளர்ச்சி இயக்கத்தில் (Enlightenment) இவர் மிக்க ஈடுபாடு கொண்டவராயினும், ஹாப்ஸ்பர்க் ஆட்சியின் மரபுகளும், இவருடைய தீவிர கத்தோலிக்க சமயப்பற்றும் இவர் முற்போக்குக் கொள்கைகளைச் செயல்படுத்துவதற்குத் தடையாக இருந்தன. மேலும், தன்னுடைய ஆதிக்கம் பிரபுக்களின்

ஆதரவின்றி நிலைக்காது என்று கருதியதால் பிரபுக்களின் நலனுக்குப் புறம்பான எதையும் இவர் செய்யத் துணியவில்லை. எனவே, இவர் ஆட்சியில் தீவிர முற்போக்குத் திட்டங்கள் ஒன்றும் மேற்கொள்ளப்படவில்லை. இவருடன் இணைந்து அரசு பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்த தீவிர முற்போக்குவாதியான இவருடைய மகன் இரண்டாம் ஜோசப் கூட இவர் உயிருட னிருக்கும் வரையில் எந்த முற்போக்குச் சீர்திருத்தங்களையும் செயல்படுத்த முடியவில்லை.

அதிகாரம் முழுவதையும் தன் கையிலேயே குவித்து வைத்துக் கொள்ளும் நோக்கத்துடன் ஆஸ்திரியப் பேரரசின் மாநிலங்களில் இயங்கி வந்த 'டயட்' (Diet) சபைகள் கலைக்கப்பட்டன. நீதி, நிர்வாகத் துறையில் சில சீர்திருத்தங்களை மேற்கொண்டார். 1753-ல் வியன்னு நகரில் நீதிமன்றம் ஒன்றை அமைத்தார். சட்டத் தொகுப்பு ஒன்றைத் தயார் செய்ய அறிஞர் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. நாட்டின் படைகள், மாநிலச் சட்டசபை களினுல் நிறுவப்பட்டு அவற்றின் கண்காணிப்பில் இயங்கிக் கொண் டிருந்த இந்த முறை ஒழிக்கப்பட்டது. மத்திய அரசாங்கமே படை நிறுவும் பொறுப்பையும் படைகளைக் கண்காணிக்கும் பொறுப்பையும் ஏற்றது. நல்ல குடிமக்களை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் நாட்டின் கல்வி முறை திருத்தியமைக்கப் பட்டது. நில அடிமை முறையை ஒழிக்க வேண்டுமென்று மரியா தெரிசா விரும்பினுலும் பிரபுக்களின் எதிர்ப்புக் காரணமாக இத்திட்டத்தை அவரால் செயல்படுத்த முடியவில்லை. விவசா யத்தை ஊக்குவிக்க விவசாயக் கழகம் ஒன்றை நிறுவினர். சாலைகள், கால்வாய்கள் முதலியவை அமைத்துப் போக்குவரத்து வசதிகளைப் பெருக்கினர்.

இவர் ஆட்சியில் பிரஷ்யாவுக்கும் ஆஸ்திரியாவுக்குமிடையே நடந்த ஆஸ்திரிய வாரிசுப்போர், ஏழாண்டுப் போர் ஆகியவைகள் பற்றி முன்பே கூறியுள்ளோம்.

## இரண்டாம் ஜோசப்

கலைக் களஞ்சியத்தில் சிந்தனையாளர்களால் வருணிக்கப்பட்ட மக்கள் நலன் பேணும் வல்லரசர்களின் குண இயல்புகள் எல்லா வற்றையும் ஒருங்கே பெற்றவர் ஆஸ்திரியாவின் இரண்டாம் ஜோசப். இவர் அரியணை ஏறியது ஆஸ்திரிய வரலாற்றில் ஒரு சிறப்பு நிகழ்ச்சியாகும். அறிவு வளர்ச்சியின் உருவகம் என்று அவரைக் கருதலாம். புதுமையில் அளவுகடந்த மோகமும் பற்றும் கொண்டவர். ஹாப்ஸ்பர்குகள் கூட புதுமைப்பித்தர்களாக

மாறியது நம்ப முடியாத ஒரு நிகழ்ச்சியாகும்! பகுத்தறிவு, முற்போக்குச் சீர்திருத்தங்கள் ஆகியவற்றில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட இவர் 1765-ல் புனித ரோமானியப் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். ஆனால், ஹாப்ஸ்பர்க் அரசைப் பொறுத்தவரை 1780 வரை இவரால் சுதந்திரமாகச் செயல்பட முடியவில்லை. ஏனெனில், அவர் தாயார் மரியாதெரிசா ஆஸ்திரியாவின் அரசியாகப் பதவியிலிருந்தார். 1780-ல் அவர் தாய் இறந்த பிறகுதான் அவரால் சுதந்திரமாகச் செயல்பட முடிந்தது. 1780 லிருந்து 1790 வரை இந்தப் பத்து ஆண்டுகளில் இவர் தன் முற்போக்குச் சீர்திருத்தத் திட்டங்கள் அனைத்தையும் செயல் படுத்தும் பணியில் முனைந்தார். பேரரசராக இருக்கும்பொழுதே முற்போக்குச் சீர்திருத்தங்களைச் செயல்படுத்த இவர் மேற் கொண்ட முயற்சிகள் பழைமையில் பற்றுக் கொண்டிருந்த மரியா தெரிசா, அமைச்சர் கௌனிட்ஸ் ஆகியவர்களின் எதிர்ப்பினால் தோல்வியுற்றன. படைத் துறையில் சில மாற்றங்களையும், நில அடிமைகளின் நிலையில் சில மாற்றங்களையும் மட்டும்தான் இவரால் செய்ய முடிந்தது. மத விஷயங்களில் இவருடைய பரந்த மனப்பான்மையும், முற்போக்குக் கொள்கைகளும் அன்னைக்கும், இவருக்குமிடையே தீவிரக் கருத்து வேறுபாடுகள் ஏற்படக் காரணமாக இருந்தன. ஐரோப்பாவில் அப்பொழுது நிலவிய முற்போக்குக் கருத்துகளால் ஈர்க்கப்பட்ட ஜோசப்பிற்குப் பகுத்தறிவுதான் வழிகாட்டியாகும். முற்போக்குச் சிந்தனையாளர்களின் (Philosophers) புதுமைக் கருத்துகளைக் கற்றறிந்தார். சம்பிரதாயம், சிறப்புரிமைகள் ஆகியவற்றின் அடிப்படையில் இயங்கி வந்த நிறுவனங்கள், சட்டங்கள், பழக்க வழக்கங்களை அடியோடு ஒழித்துப் பகுத்தறிவுக்கு ஒத்த அமைப்புகளை நிறுவ வேண்டுமென்று எண்ணினார். பிரஷ்யாவின் ஃபிரெடரிக்கிடம் மிக்க ஈடுபாடு கொண்ட இவர், அவருடைய ஆட்சிமுறையின் அடிப்படையில் தன் ஆட்சிமுறையையும் அமைக்க விரும்பினார்.

## உள்நாட்டுக் கொள்கை

உள்நாட்டு விவகாரங்களைப் பொறுத்தவரை பல்வேறு இனங்கள், சமயங்கள், மொழிகள் ஆகியவற்றைச் சார்ந்த மக்களைக்கொண்ட ஆஸ்திரிய ஒருமைப்பாட்டினை ஏற்படுத்திச் சிதறிக் கிடந்த அரசுகளை ஒன்றுபடுத்தி ஒரு வலிமைமிக்க அரசை ஏற்படுத்த வேண்டுமென்பது அவருடைய முதல் குறிக்கோளாகும். நாடு முழுவதற்கும் ஒரே மாதிரியான சட்டம், நீதி நிர்வாகம், சமூக அமைப்பு ஆகியவற்றை அமைக்கவேண்டும் என்பது அவருடைய மற்றொரு நோக்கமாகும். சமயக் குருமார்களும், பிரபுக்களும் பெற்றிருந்த சிறப்புரிமைகளைப் பறித்துச் சமுதாயத்

திலிருந்த ஏற்றத்தாழ்வுகளை அகற்ற வேண்டுமென்ற சீரிய நோக்கமும் அவருக்கு உண்டு. நாட்டின் நிர்வாக அமைப்பின் மையமாக அரசன் விளங்கவேண்டும். அரசனின் அதிகாரம் மேலோங்கியிருக்கும் வகையில் ஆட்சிமுறை அமைக்கப்பட வேண்டும் என்பது அவருடைய மற்றொரு குறிக்கோளாகும். கத்தோலிக்க சமயத்தில் மலிந்து கிடந்த ஊழல்களையும், மூட நம்பிக்கைகளையும் களைந்து, திருச்சபை அரசின் ஆதிக்கத்திற்குட் படுத்த வேண்டுமென்பது இவருடைய கொள்கை.[1]

இவருடைய ஆட்சியில் ஆஸ்திரியப் பேரரசு ஐந்து பகுதிகளை உட்கொண்டதாக இருந்தது.

1. வியன்னாவும் அதைச் சுற்றி அமைந்திருந்த பகுதிகளும் ஆஸ்திரியா என்று அழைக்கப்பட்டன. ஜெர்மானியர் வசித்த இந்தப் பகுதியில் கத்தோலிக்க சமயம் செல்வாக்குப் பெற்றிருந்தது. 2. ஹங்கேரி என்ற மற்றொரு பகுதியில் 'மாக்யர்' (Magyar) இனத்தைச் சேர்ந்தவர்கள் வாழ்ந்தனர். தேசிய உணர்வுமிக்க நிலப் பிரபுக்களின் செல்வாக்கு இப்பகுதியில் மேலோங்கியிருந்தது. 3. பொஹிமியா, மொரேவியா பகுதிகளில் 'செக்' (Czech) இனத்தவர் வாழ்ந்தனர். இவர்களில் பெரும்பான்மையோர் பிராடஸ்டென்டுகள். 4. இத்தாலியின் பல்வேறு மாநிலங்களைக்கொண்ட மற்றொரு பகுதியில் வாழ்ந்தவர்கள் அனைவரும் கத்தோலிக்கர்களாயினும் மொழி, பண்பாடு, இனம் ஆகியவற்றில் ஆஸ்திரியர்களிடமிருந்து வேறுபட்டவர்கள். 5. ஊட்ரெக்ட் உடன்படிக்கையின்படி கிடைத்த ஆஸ்திரிய நெதர்லாந்து (பெல்ஜியம்) சமயம் தவிர மற்றெல்லா வகையிலும் ஆஸ்திரியாவிலிருந்து வேறுபட்டு இருந்தது. இவ்வளவு பரந்த ஒரு பேரரசாக இருந்தும் இந்த வேறுபாடுகள் காரணமாக இது வலிமையும் புகழும் பெற்று விளங்கவில்லை. இந்த நிலையை மாற்ற வேண்டுமென்பது ஜோசப்பின் விருப்பம்.

பேரரசின் பல பகுதிகளில் இயங்கிக்கொண்டிருந்த பிரதிநிதித்துவ மன்றங்கள் கலைக்கப்பட்டு, நாடு முழுவதும் அரசனின் நேரடி ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. நாடு பதின்மூன்று மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு அவை ஒவ்வொன்றும் ஓர்

[1] Joseph desired 'to consolidate all his dominions into one homogeneous whole; to abolish all privileges and exclusive rights; to obliterate the boundaries of nations and substitute for them a mere administrative division of his whole empire; to merge all nationalities...and establish a uniform code of Justice; to raise the mass of the community to legal equality with their former masters; to constitute a uniform level of democratic simplicity under his own absolute sway'. Notes on European History Vol. III William Edwards, page 264.

இராணுவத் தளபதியின் பொறுப்பில் விடப்பட்டன. அரசருக்குத் தேவையான வரிகளை வழங்குவதற்கு மட்டுமே சட்டசபைகள் கூட்டப்பட்டன. ஒவ்வொரு மாநிலமும் பல வட்டங்களாகப் (Circles) பிரிக்கப்பட்டு வட்ட அதிகாரி (Circle Captain) அரசருடைய ஆணைகளைச் செயல்படுத்தினர். மத்திய அரசு அரசியல், பொருளாதார, நீதிமுறை, இராணுவம் ஆகிய நான்கு நிர்வாகத் துறைகளாகப் பிரிக்கப்பட்டது. நெதர்லாந்து நகரங்களின் உரிமைகளும் சாசனங்களும் பறிக்கப்பட்டு, நெதர்லாந்து ஆட்சிமுறை மற்ற மாநிலங்களின் ஆட்சிமுறையை ஒத்து அமைக்கப்பட்டது. இவ்வாறு நாடு முழுவதும் ஒரேமாதிரியான ஆட்சிமுறையின் கீழ்க் கொண்டுவரப் பட்டது.

நாட்டில் ஒற்றுமை உணர்ச்சியை வளர்க்கும் நோக்கத்துடன் ஜெர்மன் மொழி மட்டுமே ஆட்சிமொழியாக அறிவிக்கப்பட்டது. (இதுவரையில் ஜெர்மன் மொழியுடன் லத்தீன் மொழியும் மாக்யர்களின் மொழியும் ஆட்சிமொழியாக இருந்தன)

நீதி நிர்வாக முறையில் ஜோசப் சில மாறுதல்களைப் புகுத்தினர். வியன்னாவில் ஒரு தலைமை நீதிமன்றமும், மாவட்டங்களில் கீழ் நீதிமன்றங்களும் கொண்ட ஒரு நீதி நிர்வாக அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. நேர்மையும், திறமையும் வாய்ந்தவர்கள் மட்டுமே நீதிபதிகளாக நியமிக்கப்பட்டனர். எல்லா நீதி மன்றங்களிலும் ஒரே மாதிரியான சட்டமும் வழக்குமுறையும் பின்பற்றப் பட்டன. இதற்காக ஒரு புதிய சட்டத் தொகுப்பு உருவாக்கப் பட்டது. வழக்குகள் நடத்த அரசிற்குச் செலுத்த வேண்டிய கட்டணங்களைக் குறைத்ததன் மூலமும், தேவையற்ற சம்பிரதாயங்கள், நிர்வாகச் செயல்முறைகளை நீக்கியதன் மூலமும் செலவு அதிகமில்லாமலும் எளிதாகவும் மக்களுக்கு நீதி கிடைக்கும்படி செய்தார். கசையடி, சித்திரவதை போன்ற கடுமையான தண்டனைகள் ஒழிக்கப்பட்டன; மரண தண்டனை வழங்குவது குறைக்கப் பட்டது. இவ்வளவு ஒரு பரந்த பேரரசைக் கட்டிக் காக்கப் பெரும்படை தேவைப்பட்டது. ஆஸ்திரியாவின் படைகள் பிரஷ்யப் படைமுறையின் அடிப்படையில் மாற்றியமைக்கப் பட்டன. குடியானவர்கள் வலுக்கட்டாயமாக இராணுவத்தில் சேர்க்கப்பட்டனர். படை நிர்வாகத் துறை சீர்படுத்தப்பட்டது. இராணுவப் பயிற்சிக் கல்லூரிகள் துவக்கப்பட்டன. பீரங்கிப் படை ஒன்று நிறுவப்பட்டது.

நிதி நிர்வாகமும் சீர்திருத்தி அமைக்கப்பட்டது, வரி விதிப்பு முறையில் மாற்றங்கள் செய்யப்பட்டன. இதுவரையில் அளிக்கப் பட்டுவந்த வரிச் சலுகைகள், வரி விலக்குகள், மற்றச் சிறப்புரிமை

கள் யாவும் நீக்கப்பட்டு எல்லோரும் வரி செலுத்தவேண்டுமென்று ஆணையிட்டார். பிரபுக்கள், குருமார்கள், பொதுமக்கள் என்ற எந்த வேறுபாடுமின்றி எல்லோர் நிலத்தின்மீதும் பதின்மூன்று சதவிகித நிலவரி விதிக்கப்பட்டது. இந்த வரி விகிதத்தை நிர்ணயம் செய்வதற்காக நிலங்கள் மீண்டும் அளக்கப்பட்டு நிலம் பற்றிய விவரங்கள் அடங்கிய ஒரு பதிவேடு தயார் செய்யப் பட்டது. இதுபோன்ற ஜோசப்பின் சீர்திருத்தங்களைப் பிரபுக் களும், குடியானவர்களும் எதிர்த்தார்கள். வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள்மீது கடுமையான வரிகள் விதிக்கப்பட்டன. இவர் பின்பற்றிய வரிக் கொள்கையின் விளைவாக அரசாங்கத்தின் வருவாய் அதிகரித்தது. சிக்கனமாகச் செலவுகளைச் செய்தார்.

பொருளாதாரத் துறையில் ஃபிரான்சின் அமைச்சர் கால்பர்ட்டின் கொள்கைகளைப் பின்பற்றினார். ஆஸ்திரியாவின் தொழில் வளர்ச்சிக்காகக் காப்பு வரிக் கொள்கையைப் பின் பற்றினார். தொழிற்சாலைகள் நிறுவுவதற்கும் இயந்திரங்கள் வாங்குவதற்கும் அரசு பொருளுதவி அளித்தது. தொழில், வியாபார வளர்ச்சிக்கு ஆக்கம் அளிக்கப்பட்டது. உள்நாட்டுச் சுங்கவரியைத் தவிர்த்தும், சாலைகள், கால்வாய்கள் அமைத்தும், துறைமுக வசதிகளைப் பெருக்கியும், உள்நாட்டு வியாபாரத்தை வளர்த்தார். மத்தியதரைக்கடல் பகுதியில் ஆஸ்திரியாவின் வர்த்தகத்தைப் பெருக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ரஷ்யா, துருக்கி போன்ற நாடுகளுடன் வியாபார ஒப்பந்தங்கள் செய்துகொள்ளப்பட்டன. தடையில்லா வாணிபம் நடைபெறு வதற்கு இடையூறாக இருந்த வியாபாரச் சங்கங்களின் உரிமை களைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் சில சட்டங்கள் பிறப்பிக் கப்பட்டன.

குடியானவர்களின் நிலையை உயர்த்தப் பல நடவடிக்கைகள் மேற்கொண்டார். அவற்றுள் முதன்மையானது இவர் நில அடிமை முறையை (Serfdom) ஒழித்தது ஆகும். 1781-ல் இதற்கான சட்டம் ஒன்று இயற்றப்பட்டது. குடியானவர்கள், நிலப்பிரபுக்களின் அடிமைகளாக இருந்த நிலைமாறி, அவர்கள் நிலம் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். குடியானவர்கள் நிலப்பிரபுக்களுக்கு ஊழியம் செய்யும் வழக்கத்தை ஒழித்தார். தங்கள் நிலங்களை விற்கவோ, திருமணம் செய்துகொள்ளவோ நிலப்பிரபுக்களின் அனுமதி தேவையில்லை என்று அறிவித்தார். நூல்கள், செய்தித்தாள்கள் மீதிருந்த தடைகளை அகற்றிப் பத்திரிகைத் தணிக்கை முறையை நீக்கி மக்கள் தங்கள் எண்ணங்

களையும் கருத்துக்களையும் சுதந்திரமாக வெளியிட உதவிசெய்தார். இவர் மேற்கொண்ட புரட்சிகரமான சீர்திருத்தங்களில் இதுவும் நிலஅடிமை முறையை ஒழித்ததும் இன்றியமையாதவையாகும்.

அறிஞர்கள் பலர் போற்றி ஆதரிக்கப்பட்டனர். கல்வித் துறையில் பல சீரிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. எல்லோரும் ஆரம்பக்கல்வி பெறுவதற்கு வசதிகள் செய்து தரப்பட்டன. மாவட்டங்கள், நகரங்கள், கிராமங்கள் ஆகிய பகுதிகளுக்கேற்ற முறையில் மூன்று வகையான ஆரம்பப் பள்ளிகள் துவக்கப்பட்டன, நாட்டின் மாநிலம் ஒவ்வொன்றிலும் ஒரு பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. கலைக் கழகங்களும், நூல் நிலையங் களும் நிறுவப்பட்டன.

கிறிஸ்தவத் திருச்சபையைத் தன் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வரும் நோக்கத்துடன் சில ஆணைகளைப் பிறப்பித்தார். அரசருடைய அனுமதியின்றிப் போப்பின் எந்த ஆணையையும் நாட்டில் செயல்படுத்தக் கூடாது. பிஷப்புகள் அரசராலேயே நியமிக்கப்படவேண்டும். ஆஸ்திரிய நீதிமன்றங்களிலிருந்து போப்பிற்கு முறையீடு செய்யும் பழக்கம் ஒழிக்கப்பட்டது. மடாலயங்கள் அழிக்கப்பட்டு திருச்சபையின் சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. மடாலயங்கள் தொழிற் கூடங்களா கவும் பணிமனைகளாகவும் மாற்றப்பட்டன. அரசாங்கப் பள்ளி களிலேயே துறவிகள் பயிற்சிபெறவேண்டும் என்று ஆணையிட்டார். திருச்சபையின் சொத்துகளைக் கொண்டு கல்விக் கூடங்களும், மருத்துவ மனைகளும் கட்டப்பட்டன. கோவில்களிலிருந்து சிலைகளும், படங்களும் அகற்றப்பட்டன. நாட்டின் வளர்ச்சிக்குச் சமயத்துறையில் பொறையுடைமைக் கொள்கையின் அவசியத்தை உணர்ந்த ஜோசப் 1781-ல் 'சமயப்பொறை ஆணை' ஒன்றைப் பிறப்பித்தார் (Edict of Toleration). கத்தோலிக்க சமயம் அரசின் சமயமாக ஏற்றுக்கொள்ளப்பட்டாலும் மக்களுக்குச் சமயச் சுதந்திரம் அளிக்கப்பட்டது, எல்லா மதத்தினருக்கும் சம உரிமைகள் வழங்கப்பட்டன. யூதர்கள் உள்பட எல்லோருக்கும் வழிபாட்டு உரிமை, சொத்துகள் வைத்துக்கொள்ள உரிமை, அரசாங்க வேலைகளிலும், கல்வி நிலையங்களிலும் சேர உரிமை ஆகியவை அளிக்கப்பட்டன. சமயத் துறையில் இவ்வளவு பரந்த நோக்கோடு சமயப்பொறைக் கொள்கையை இந்த அளவிற்குச் செயல்படுத்திய ஐரோப்பிய அரசர் எவருமே இல்லை என்று கூறலாம்.

இவர் உள்நாட்டுத் துறையில் மேற்கொண்ட இந்தச் சீர்திருத்தப் பணிகள், பிரபுக்கள், மதகுருமார்கள், மூட நம்பிக்

கையில் ஆழ்ந்திருந்த கத்தோலிக்கர்கள் போன்றவர்களின் ஆத்திரத்தை மூட்டின. எனவே, இவர்கள் அரசனுக்கெதிராகப் பல சதிச் செயல்கள் புரிய ஆரம்பித்தனர்.

**அயல்நாட்டுக் கொள்கை**

போலந்தின் முதல் பிரிவினையில் (1772) இவர் முக்கிய பங்கேற்ருர். இவருடைய தாய் மரியா தெரிசா இந்தப் பங்கீட்டுத் திட்டத்திற்கு இணங்கவில்லை. ஜோசப் ரஷ்யாவுடன் பிரஷ்யா வுடனும் சேர்ந்துகொண்டு இந்தத் திட்டத்தைச் செயல்படுத்த ஆஸ்திரியாவின் சம்மதத்தைத் தெரிவித்தார். இதன் விளைவாக ஆஸ்திரியாவுக்குக் காலிஷியா என்ற பகுதி கிடைத்தது. 1775-ல் துருக்கியின் பலவீனத்தைப் பயன்படுத்திக்கொண்டு புகோவினு என்ற பகுதியைத் துருக்கியிடமிருந்து பெற்ருர். அடுத்து இவர் பவேரியா அரசைப் பெற விரும்பினுர். பவேரியத் தேர்வாளர் மூன்ரும் மாக்ஸிமிலியன் வாரிசின்றி இறக்கவே. 1778-ல் ஜோசப் அதன்மீது உரிமை கொண்டாடினுர். இதைப் பிரஷ்யாவின் ஃபிரெடரிக் எதிர்த்தார். ஆஸ்திரிய எல்லையில் பிரஷ்யப் படைகள் குவிக்கப்பட்டன. 1778-ல் பிரஷ்யப் படைகள் பொஹிமியாவில் புகுந்தன. 1779 வரை போர் நடந்தது. பிரஷ்யர்களுக்குப் போதுமான உணவுப் பொருட்கள் இல்லை. படைகளுக்கு உணவுப் பொருள்களைப் பெற பிரஷ்யர்கள் செய்த முயற்சியின் காரணமாக இப்போர் ‘உருளைக்கிழங்குப் போர்’ (Potato war) என்று அழைக்கப்படுகிறது. இதற்குப் பிறகும்கூட ஜோசப் பவேரி யாவைப் பெறும் எண்ணத்தைக் கைவிடவில்லை. தூரத்திலிருக்கும் நெதர்லாந்தைப் (பெல்ஜியம்) பவேரியத் தேர்வாளருக்குக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக அருகிலிருக்கும் பவேரியாவைப் பெற ஜோசப் ஒரு திட்டம் தயாரித்தார். ஆனல், பிரஷ்யாவின் தீவிர எதிர்ப்புக் காரணமாக இத்திட்டம் கைவிடப்பட்டது.

1780-ல் இவர் தாய் இறந்தபிறகு சுதந்தரமாகச் செயல்படும் வாய்ப்பைப் பெற்ற ஜோசப் தன் கவனத்தை அழிவுறும் நிலையிலிருந்த துருக்கியப் பேரரசின் பக்கம் திருப்பினுர். அப்பொழுது ரஷ்யாவை ஆண்டுகொண்டிருந்த இரண்டாம் காதரினும் துருக்கியர் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு துருக்கியப் பேரரசின் சில பகுதிகளைப் பெற விரும்பினுர். எனவே, இவ்விரு அரசுகளும் துருக்கிக்கு எதிராகச் சேர்ந்துகொண்டதில் வியப்பொன்றுமில்லை. 1781-ல் ஜோசப், காதரினுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு துருக்கிக்குச் சொந்தமான சிரிமியாவின்மீது அவர் கொண்டாடிய உரிமையை ஆதரித்தார். 1787-ல் ரஷ்யாவுக்கும் துருக்கிக்குமிடையே நடந்த போரில்

ரஷ்யாவுக்கு ஆதரவாகப் போரில் ஈடுபட்டார். இப்போரில் இவர் கலந்து கொண்டது ஒரு பெரிய தவறாகும். ஏனெனில், இவர் துருக்கியுடன் போர் செய்துகொண்டிருந்தபொழுது நெதர் லாந்து மக்கள் இவருடைய சீர்திருத்தங்களை எதிர்த்துக் கிளர்ச்சிகள் செய்தனர். ஹங்கேரியின் பிரபுக்களும் ஜோசப்பின் தீவிர சீர்திருத்தத் திட்டங்களை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். இப்போரின் விளைவாக வியாபாரம் தடைப்பட்டு, விலைவாசிகள் உயர்ந்து நாட்டின் நிதிநிலைமை மிகமோசமாகியதால் ஜோசப்பின் ஆட்சிக்கு நாட்டின் பல பகுதியிலிருந்தும் எதிர்ப்பு உருவாகியது. மேலும், ஆஸ்திரியாவின் இந்த இக்கட்டான நிலையைப் புரிந்து கொண்டு பிரஷ்யா, நெதர்லாந்திலும், ஹங்கேரியிலும் புரட்சிக் காரர்களை ஊக்குவித்தது. ஜோசப் இரண்டு முனைகளிலும் போர் புரிய வேண்டிய நிலை ஏற்பட்டது. ரஷ்யாவிடமிருந்து எதிர் பார்த்த உதவியும் கிடைக்கவில்லை. நாடெங்கும் கிளர்ச்சிகள் உருவாகி இவர் கவனத்தைக் கவர்ந்ததால் துருக்கியுடன் போரை நடத்த முடியவில்லை. இவ்வாறு இவருடைய வெளிநாட்டுக் கொள்கை தோல்வியிலேயே முடிந்தது.

நெதர்லாந்து மக்கள் விவகாரங்களில் தலையிட்டதால், ஜோசப்பை எதிர்த்து அவர்கள் கிளர்ச்சிகள் செய்தார்கள் (1787-89). ஹங்கேரியில் 'மாக்யர்கள்' (Magyars) தங்கள் உரிமைகள் பறிக்கப்பட்டதை எதிர்த்துக் கிளர்ச்சிகளில் ஈடுபட்டனர். பிரபுக் களும் மதகுருமார்களும் தங்கள் சிறப்புரிமைகள் ஒழிக்கப் பட்டதால் ஜோசப்பை வெறுத்தனர். மற்றச் சமயத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சம உரிமைகள் அளித்ததாலும், போப்பின் ஆதிக்கத்தை ஒழித்ததாலும், திருச்சபையின் நிலங்களைப்பறிமுதல் செய்ததாலும் கத்தோலிக்கர்களின் வெறுப்புக்குள்ளானார். குடியானவர்கள் இராணுவப்பணி செய்ய வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டதால் அவர்களும் ஜோசப்பை வெறுத்தார்கள். இவ்வாறு உள்நாட்டுக் கொள்கையிலும் இவர் கண்டது தோல்வியும் ஏமாற்றமுமே ஆகும். தன் வாழ்க்கையின் குறிக் கோள்களில் எதிலும் வெற்றியடையவில்லை என்ற ஏமாற்ற உணர்ச்சி இவரை மிகவும் வாட்டியது. இந்த நிலையில் 1790-ல் இவர் இறந்தார். இறப்பதற்குமுன் தன் பத்து ஆண்டு ஆட்சியில் செயல்படுத்திய சீர்திருத்தங்களையெல்லாம் ரத்து செய்து ஓர் ஆணையை விடுத்தார். 'என்னுடைய இவ்வளவு தொல்லை களுக்குப் பிறகு சிலரைத்தான் மகிழ்வித்திருக்கிறேன், பலர் நன்றி கெட்டவர்களாக மாறிவிட்டார்கள்' என்று மனம் வெதும்பி அவர் தம் தோல்வியை ஒப்புக்கொள்கிறார்.

'நல்ல எண்ணங்கள் கொண்டிருந்தும் எதிலுமே வெற்றி யடையாத ஒரு மனிதர் இங்கு உறங்குகின்றார்' (Here lies a man, who, with the best intentions, never succeeded in any thing) என்ற வாசகம் அவருடைய கல்லறையின்மீது பொறிக்கப் பட வேண்டுமென்று அவர் விரும்பினார்.

இவருடைய திட்டங்கள் தோல்வியடைந்ததற்குப் பல காரணங்கள் உண்டு. மக்களுடைய நலனைக் கருதித் தன் திட்டங்கள் யாவும் மேற்கொள்ளப்பட்டதால், மக்களுடைய ஒத்துழைப்பை ஜோசப் எதிர்பார்த்தார். இது போன்ற திட்டங்களுக்கு எதிர்ப்பே இருக்க முடியாது என்று கருதினார். ஆனால், மக்கள் அவருடைய சீரிய கருத்துகளைச் சரிவர புரிந்து கொள்ளவில்லை. அந்தக் காலத்துச் சமுதாயத்திற்கும் மக்கள் எண்ணங்களுக்கும் ஏற்ற வகையில் இவர் திட்டங்கள் அமையவில்லை. இவருடைய புரட்சிகரமான முற்போக்குத் திட்டங்களைப் புரிந்துகொள்ளும் தகுதி அக்காலத்து மக்கள் பெற்றிருக்கவில்லை. எனவே, பலத்த எதிர்ப்பு தோன்றியது. இவருடைய சீரிய சமயப் பொறைக் கொள்கையைக் கத்தோலிக்கர்கள் எதிர்த்தனர். நில அடிமைகளுக்குச் சுதந்தரம் வழங்கிச் சிறப்புரிமைகள், சலுகைகளை ஒழித்ததால் நிலப் பிரபுக்கள் இவரை வெறுத்தனர். கட்டாய இராணுவப் பணித் திட்டத்தைக் குடியானவர்கள் எதிர்த்தனர். மேலும், இவர் திட்டங்களைச் செயல்படுத்த அமர்த்தப்பட்ட அதிகாரிகள் இவரைப் போலவே நல்லவர்களாகவும், திட்டங்களை நிறைவேற்றுவதில் ஆர்வமும், அக்கறையும் கொண்டவர்களாகவும் இருக்கவில்லை. அடுத்துத் தன்னுடைய குறுகியகால ஆட்சியில் இவர் பல சாதனைகளை ஒரே சமயத்தில் புரிய வேண்டுமென்று விரும்பிப் பல திட்டங்களை மேற்கொண்டு ஒன்றையும் சரிவரச் செயல்படுத்த முடியாமல் தோல்வி கண்டார். உள்நாட்டு விவகாரங்களில் பல சீர்திருத்தத் திட்டங்களை மேற்கொண்டு, அதே சமயத்தில் வெளிநாட்டு விவகாரங்களிலும் பல போர்த் திட்டங்களை நிறைவேற்ற முயன்றது இவர் செய்த ஒரு தவறு என்று கருதப்படுகிறது. தம் சக்திக்கும் மீறிய திட்டங்களை மேற்கொண்டதால் இவருக்கு எதிர்பார்த்த அளவு வெற்றி கிட்டவில்லை.[1] மேலும் ஜோசப் நாட்டின் சூழ்நிலையையும் மக்களின் எண்ணங்களையும் புரிந்துகொள்ளாமல் தன் திட்டங்களை

[1] 'It has been pointed out that Joseph attempted too much in too short a time; it may be added that he was ill advised in trying to forward ambitious schemes of foreign policy at the same time as plans for internal reform' 'A Textbook of Modern European History, 643-1848 G.W. Southgate, page125.

நிறைவேற்றுவதில் பொறுமையை இழந்து மக்களிடம் கடுமையாக நடந்து கொண்டார் என்று எட்வர்ட்ஸ் என்னும் ஆசிரியர் கூறுகின்றார்.[1]

இவர் கடைப்பிடித்த சமயக் கொள்கை நாட்டின் நலனிற்கு உகந்ததாக அமையவில்லை. நாட்டை ஒற்றுமைப்படுத்த வேண்டு மென்ற குறிக்கோள் கொண்ட ஜோசப் நாட்டின் ஒற்றுமையை வளர்க்க உதவிய ஒரே நிறுவனமான கத்தோலிக்க திருச்சபை யைப் பகைத்துக் கொண்டது அவர் செய்த மாபெரும் தவருகும். ஏனெனில், ஆஸ்திரியப் பேரரசில் வாழ்ந்தவர்கள் பெரும்பாலோர் கத்தோலிக்கர்கள். கத்தோலிக்க சமயத்தின் அடிப்படையில் பல்வேறு இனத்தைச் சேர்ந்த மக்களை ஒன்றுபடுத்தியிருக்க முடியும். ஆனல், கத்தோலிக்க சமயத்தினரின் நல்லெண்ணத் தையும், ஒத்துழைப்பையும் பெறுவதற்கு மாருக அவர்களுடைய வெறுப்பைத்தான் இவர் பெற்ருர். இவர் தன்னுடைய மற்ற முற்போக்குச் சீர்திருத்தத் திட்டங்களை கத்தோலிக்கர்கள் ஒத் துழைப்புடன் வெற்றிகரமாகச் செயல்படுத்தியிருக்க முடியும். ஆனல், அந்த வாய்ப்பை இழந்துவிட்டார். எவ்வளவு நன்மை பயக்கக்கூடிய முற்போக்குத் திட்டங்களாக இருந்தாலும் மக்களின் விருப்பத்திற்கு மாருகவும், அவர்களின் ஒத்துழைப்பும் இன்றி அவற்றை ஓர் அரசன் தனித்து நின்று செயல்படுத்த முடியாது என்ற உண்மையை ஜோசப்பின் வாழ்க்கை நமக்குத் தெளிவாகப் புலப்படுத்துகிறது. நெதர்லாந்தைப் பொறுத்தவரை இவர் கடைப்பிடித்த கொள்கை, இவர் வரலாற்றின் படிப்பினை யைப் புரிந்துகொள்ளவில்லை என்பதைத்தான் காட்டுகிறது. ஏனெனில், அந்தப் பகுதி மக்கள் பரம்பரையாகச் சில சிறப்புரிமை களையும் சலுகைகளையும் அனுபவித்து வந்தவர்கள். அவற்றில் எவரும் தலையிடுவதை அம்மக்கள் விரும்பவில்லை என்பது நெதர் லாந்தின் கடந்தகால வரலாறு நமக்கு அறிவுறுத்தும் ஓர் உண்மை யாகும். இந்த வரலாற்று உண்மையை ஜோசப் ஏற்க மறுத்தார்.

மேற்கூறிய காரணங்களினுல் இவர் திட்டங்கள் தோல்வி யடைந்தாலும், இவருடைய சீர்திருத்தப் பணிகள் முற்றிலும் பயனற்றுப் போயின என்று கருதுவது தவருகும். நில அடிமை

[1] 'Joseph's schemes sometimes failed partly because he did not make due allowance for existing conditions ; partly because they were often in advance of the age : partly because his agents proved unable to carry out his benevolent intentions ; some times owing to his own rashness and impatience.' Notes on European History, Vol. III William, Edwards, page 278.

நடவடிக்கைகளும், பொருளாதாரத் துறையில் விவசாய, தொழில் வர்த்தக வளர்ச்சிக்கு இவர் ஆக்கம் அளிக்க மேற் கொண்ட நடவடிக்கைகளும் நல்ல பயனை அளித்தன. தம் சீர்திருத்தத் திட்டங்களின் மூலம் ஜோசப் வருங்காலத்துச் சீர்திருத்தவாதிகளின் இலட்சியங்களையும், அவர்கள் பின்பற்ற வேண்டிய பாதையையும் வகுத்துக் கொடுத்தார் என்று கூறுவது சாலப் பொருந்தும்.

# 15. ஃபிரான்ஸ் - கி.பி. 1715-1789

## I, பதினைந்தாம் லூயி II. பதினாறாம் லூயி

### I. பதினைந்தாம் லூயி (Louis XV, 1715-1774)

பதினான்காம் லூயிக்குப் பிறகு பட்டமெய்திய பதினைந்தாம் லூயிக்கு, அரியணை ஏறியபொழுது வயது ஐந்து. எனவே, முதல் எட்டு ஆண்டுகள் (1723 வரை) அவருடைய மாமனை 'ஆர்லியன்ஸ் கோமகன் பிலிப்' (Philip, Duke of Orleans) காப்பாளராகப் (Regent) பதவியேற்று ஆட்சியை நடத்தி வந்தார். அடுத்த இருபது ஆண்டுகள் (1743 வரை) 'கார்டினல் ஃப்ளூரி' (Cardinal Fleury) என்ற அமைச்சரிடம் ஆட்சியை ஒப்படைத்துவிட்டு லூயி சுகபோகங்களிலும், களியாட்டங்களிலும் தன் நேரத்தைச் செலவழித்தார்.

ஆர்லியன்ஸ் கோமகன் ஆட்சி : பதினான்காம் லூயியின் ஆடம்பரச் செலவுகளும், ஐரோப்பிய போர்களும், நாட்டில் நிதி நெருக்கடியை ஏற்படுத்தின. பொருளாதார நிதித்துறையைச் செப்பனிட்டு அமைக்க வேண்டியது உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டிய நடவடிக்கையாகும். பிலிப் இந்தப் பிரச்சினையின்மீது தன் கவனத்தைச் செலுத்தினார். பதினான்காம் லூயி தான் எழுதி வைத்திருந்த உயிலில் பதினைந்தாம் லூயி தனக்குப் பிறகு பட்டத்துக்கு வரவேண்டுமென்றும், ஆர்லியன்ஸ் கோமகன் காப்பாளராகப் பொறுப்பை ஏற்க வேண்டுமென்றும், ஆனால், அதிகாரம் முழுவதும் பதினைந்து உறுப்பினர்கள் கொண்ட ஒரு 'காப்பாளர் குழுவிடம்' (Regency Council) ஒப்படைக்கப்பட வேண்டுமென்றும் கூறியிருந்தார். ஆனால், ஆர்லியன்ஸ் கோமகன் இதைப் பொருட்படுத்தாது அதிகாரம் முழுவதையும் தன் கையிலேயே வைத்துக்கொண்டார். இவருடைய ஆட்சியில் பதினான்காம் லூயியின் கொள்கைகள் கைவிடப்பட்டு நிர்வாக முறையில் பல மாற்றங்கள் செய்யப்பட்டன. பதினான்காம் லூயி

காலத்தில் அரசின் ஒவ்வொரு துறையும் ஓர் அமைச்சரின் பொறுப்பில் இயங்கி வந்தது. அமைச்சர்களுக்குப் பதிலாக ஒவ்வொரு துறையும் பத்து உறுப்பினர்கள் கொண்ட ஒருகுழுவின் பொறுப்பில் விடப்பட்டது. அயல்நாட்டு விஷயங்கள், நிதி போர், கடற்படை, வர்த்தகம், உள்நாட்டு விவகாரங்கள், சமயம் ஆகிய துறைகளை நிர்வகிக்க இதுபோல ஏழு குழுக்கள் அமைக்கப் பட்டன. ஆனால், 1718-ல் இந்த முறை கைவிடப்பட்டு மீண்டும் அமைச்சர்களே நியமிக்கப்பட்டனர். இதற்குக் காரணம் இக்குழுக்களின் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்ட பிரபுக்களுக்கு நிர்வாகத்தில் அக்கறை கிடையாது.

'பார்லிமெண்டு' (Parlement) என்றழைக்கப்படும் நீதிமன்றம் பதினான்காம் லூயி காலத்தில் ஆட்சியில் அதிகாரங்களை இழந் திருந்தது. ஆர்லியன்ஸ் கோமகன் ஆட்சியில் இந்த அதிகாரங்கள் மீட்கப்பட்டன.

சமயத்துறையில் பொறையுடைமைக் கொள்கையை இவர் பின்பற்ற விரும்பினார். பதினான்காம் லூயியினால் ஒடுக்கப்பட்ட 'ஜேன்சனிசம்' (Jansenism) என்ற சமயப் பிரிவினர்களுக்கு இவர் ஆதரவு அளித்தார். சிறையிடப்பட்ட ஜேன்சனிஸ்டுகள் விடுதலை செய்யப்பட்டனர். உயர் பதவிகள் அவர்களுக்கு அளிக்கப் பட்டன.

இவர் காப்பாளராகப் பொறுப்பு ஏற்றபொழுது ஃபிரான்சின் நிதிநிலை மிக மோசமாக இருந்தது. நாட்டின் கடன் சுமை வளர்ந்து கொண்டேயிருந்தது. செலவுக்கேற்ற வருவாய் கிடையாது. சில கடன்களைத் திருப்பித் தர மறுத்ததன் மூலமும், கடன்களுக்காகக் கொடுக்க வேண்டிய வட்டி விகிதத்தைக் குறைத்ததன் மூலமும், செலவினங்களைக் குறைத்ததன் மூலமும் ஓரளவு பணம் மிச்சப்படுத்த முடிந்தது. எனினும், அரசவையின் ஆடம்பரச் செலவுகள் குறைக்கப்படாததனால் நிதி நிலைமையில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்படவில்லை. நிதி நிலைமையைச் சீர்படுத்த ஜான் லா' (John Law) என்னும் ஸ்காட்லாந்துக்காரர் ஆர்லியன்ஸ் கோமகனிடம் இரண்டு திட்டங்களைச் சமர்ப்பித்தார். இங்கிலாந்தைப் போல ஃபிரான்சிலும் ஒரு தேசிய வங்கியை நிறுவி அதன் மூலம் காகித நாணயத்தை அச்சிட்டு வெளியிட வேண்டுமென்பது ஒரு திட்டம். இதன் மூலம் நாட்டின் வியாபாரத்தை ஊக்குவிக்க முடியும் என்று இவர் கருதினார். அரசின் கட்டுப்பாட்டிற்குட்பட்ட வர்த்தகக் கம்பெனி ஒன்றை நிறுவி, ஃபிரான்சின் வியாபாரம் முழுவதும் ஏகபோக உரிமையாக அதனிடம் ஒப்படைக்க வேண்டும் என்பது அவருடைய

இரண்டாவதுத் திட்டம். 1716-ல் லாவினல் நிறுவப்பட்ட வங்கி (The Banque Generale) நல்ல முறையில் செழித்து வளர்ந்ததால் 1718-ல் அதுவே மத்திய அரசாங்க வங்கியாக மாற்றப்பட்டது. 1717-ல் வியாபாரக் கம்பெனி ஒன்று (The Missisipi Company) துவக்கப்பட்டு, ஃபிரான்சின் வெளிநாட்டு வியாபாரம் முழுவதையும் அது கைப்பற்றியது. புகையிலே வியாபாரத்தில் ஈடுபட்டு மிகக் குறுகிய காலத்தில் ஏராளமான இலாபம் சம்பாதித்தது. கடனை அடைப்பதற்கு அரசிற்கே ஏராளமான பணம் கொடுத்து உதவும் நிலையை இக்கம்பெனி அடைந்தது. 1720-ல் லாவின் தலைமையில் பாங்கின் நிர்வாகமும், கம்பெனியின் நிர்வாகமும் ஒன்ருக இணைக்கப்பட்டன. இவர் அரச பதவிகளை ஏற்க இவருடைய பிராடஸ்டென்டு சமயம் தடையாக இருந்ததால், அச்சமயத்திலிருந்து விலகிக் கத்தோலிக்கராக மாறினர். நிதித் துறையின் தலைமை அதிகாரியாக (Controller General of the Finances) நியமிக்கப்பட்டார். இந்தக் கம்பெனி வெற்றிகரமாக இயங்கியதால் இதன் பங்குகளுக்குக் கிராக்கி ஏற்பட்டு, அவற்றை வாங்க மக்கள் போட்டியிட்டனர். பங்குகளின் விலை உயரும் என்று எதிர்பார்த்து அவற்றைக் குறைந்த விலைக்கு வாங்கி அதிக விலைக்கு விற்கும் நோக்கத்துடன் பலர் ஏராளமான பங்குகளை வாங்கினர். ஆனல், திடீரென்று பங்குகளின் விலை சரிந்து பலர் நஷ்டமடைந்தனர். பங்குகள் வாங்குவோரின்றிக் கம்பெனியே கவிழ்ந்துவிட்டது. அதே சமயத்தில் தங்களிடம் இருந்த காகித நோட்டுகளை மாற்றிக் கொள்ள எல்லோரும் வங்கியின் மீது படையெடுத்தனர், எல்லாவற்றையும் உடனடியாக மாற்றிக் கொடுக்க இயலாத வங்கியும் கவிழ்ந்தது. லா நாட்டைவிட்டே ஓடிவிட்டார். நிதி வர்த்தகத் துறைகளை அரசின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவர முயன்றது உண்மையிலேயே ஒரு சோஷலிசத் திட்டமாகும். ஆனல், அரசனின் எதேச்சாதிகார ஆட்சியை வலுப்படுத்தும் என்ற காரணத்தினல் பார்லிமெண்டு இத்திட்டத்தை எதிர்த்தது. காகித நாணயம் நாட்டின் செல்வம் ஆகாது. அது செல்வத்தை மாற்றிக்கொள்ள உதவும் ஒரு சாதனம்தான் என்ற உண்மையை லா உணராதது அவருடைய பெருந்தவருகும்.

ஆர்லியன்ஸ் கோமகன் ஆட்சியில் அயல்நாட்டு விவகாரங்கள் 'டுபாய்' (Dubois) என்ற அமைச்சரால் கவனிக்கப்பட்டன. பதினைந்தாம் லூயிக்குப் பிறகு யார் பட்டத்துக்கு வருவது என்பது பற்றி, ஆர்லியன்ஸ் கோமகனுக்கும், ஸ்பெயின் அரசர் ஐந்தாம் பிலிப்புக்குமிடையே போட்டி ஏற்பட்டது. ஐந்தாம் பிலிப் பட்டத்துக்கு வருவதைத் தடுக்கும் நோக்கத்துடன் ஆர்லியன்ஸ் பிரபு ஹாலந்துடனும் இங்கிலாந்துடனும் ஓர் ஒப்பந்தம் செய்து

கொண்டு முக்கூட்டணி ஒன்றை நிறுவினர். ஆனால், ஐந்தாம் பிலிப் ஃபிரான்சின் அரசராவதை ஆதரித்த ஃபிரான்சு மக்கள் இந்த ஒப்பந்தத்தை வெறுத்தனர். 1723-ல் லூயி ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்குரிய வயதை அடைந்து விட்டதாக அறிவிக் கப்பட்டு, 'காப்பாளர் ஆட்சி' (Regency) முடிவடைந்தது. ஆர்லி யன்ஸ் பிரபுவின் ஆதிக்கம் முடிவடைந்து லூயியின் நேரடி ஆட்சி தொடங்கினலும், அரசர் சிறுவர் என்ற காரணத்தினல் 'பூர்போன் கோமகன்' (Duke of Bourbon) முதலமைச்சராகப் பதவியேற்று அரச காரியங்களைக் கவனித்தார். இவர் பிரபுக்கள், பொதுமக்கள் என்ற வேறுபாடின்றி எல்லோரிடமிருந்தும் இரண்டு சதவிகித வருமான வரி வசூலித்தார். ஆனல், பிரபுக்களும், குரு மார்களும் இதை எதிர்த்ததால் இது பின்னர் கைவிடப்பட்டது. 'கார்டினல் ஃப்ளூரி' (Cardinal Fleury) என்பவருக்கு அரசரிடம் மிக்க செல்வாக்கு இருந்தது. பூர்போன் கோமகன் இதைக்கண்டு பொருமை அடைந்தார். இருவருக்கும் ஏற்பட்ட போட்டியில் ஃப்ளூரி அரசரின் ஆதரவைப் பெற்று, பூர்போன் கோமகனைப் பதவியிலிருந்து விலக்கித் தாமே முதலமைச்சரானர்.

### கார்டினல் ஃப்ளூரி (Cardinal Fleury, 1726–1743)

நாட்டில் போரைத் தவிர்த்து, அமைதியை நிலைநாட்டி, சுபிட் சத்தை ஏற்படுத்த வேண்டுமென்பது இவருடைய நோக்கம். இவர் ஆட்சியில் ஃபிரான்சின் வர்த்தகம் பெரும் வளர்ச்சி அடைந்தது. இங்கிலாந்தின் முதல் அமைச்சர் வால்போலைப்போல இவரும் ஃபிரான்சின் நிதி நிலைமையைச் சீர்படுத்தப் பல முயற்சிகளை மேற் கொண்டார். நிதி நெருக்கடி ஏற்பட அடிப்படைக் காரணங் களான அரசவையின் ஆடம்பரச் செலவுகள், பிரபுக்கள், மத குருமார்களின் சிறப்புரிமைகள் ஆகியவற்றை நீக்க எந்தவித முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை. சிக்கனத்தைக் கையாண்டு, பல்வேறு நிர்வாகத் துறைகளில் முன்னேற்றத்திற்கு இவர் வழி வகை செய்த போதிலும், படைத் துறை, கப்பற்படை ஆகிய வற்றின் வளர்ச்சியில் இவர் போதுமான அக்கரை காட்டவில்லை.

ஸ்பெயினுக்கு எதிராக இங்கிலாந்துடன் நட்புறவு வளர்க்கும் இவரது அயல்நாட்டுக் கொள்கைக்கு எதிர்ப்பு கிளம்பியது. இங்கி லாந்திற்கும் ஃபிரான்சிற்குமிடையே வர்த்தக, குடியேற்ற ஆதிக்கப் போட்டி இருந்ததால் இவ்விரு நாடுகளும் நட்புறவோடு வாழ முடியாது என்பதை இவர் உணரவில்லை. இதை உணர்ந் திருந்தால் ஸ்பெயினுடன் நெருங்கிய நட்புறவை ஏற்படுத்திக் கொண்டு இங்கிலாந்தின் குடியேற்ற ஆதிக்கத்தை ஒழித்திருக்கக்

கூடும். அவர் பதவிக் காலத்தில் பொதுவாக அமைதிக் கொள்கை கடைப்பிடிக்கப்பட்ட போதிலும் ஃபிரான்ஸ் ஒரு போரில் ஈடுபட வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இப்போர் 'போலந்து வாரிசு உரிமைப் போர்' (War of Polish Succession) ஆகும். போலந்தின் அரியணைக்குச் சாக்ஸனியின் தேர்வாளர் 'ஃபிரெடரிக் அகஸ்டஸ்' (Frederick Augustus) போலந்தைச் சேர்ந்த 'ஸ்டானிஸ்லாஸ்' (Stanislaus) என்பவரும் போட்டியிட்டனர். போலந்துப் பிரச்சினையில் ஐரோப்பிய அரசுகள் தலையிட்டன. ஸ்டானிஸ்லாஸின் மகளை ஃபிரான்சின் அரசர் பதினைந்தாம் லூயி மணந்திருந்ததால் லூயி அவரை ஆதரித்தார். ஸ்பெயினும் சார்டினியாவும் ஃபிரான்சுடன் சேர்ந்து கொண்டன. ஆஸ்திரியாவும் ரஷ்யாவும் ஃபிரெடரிக் அகஸ்டஸை ஆதரித்தன. பின்னர் நடந்த போரில் ஃபிரான்ஸ் இத்தாலியில் சில வெற்றிகளைப் பெற்றது. இறுதியில், 1938-ல் முடிவான வியன்னு உடன்படிக்கையின்படி ஃபிரான்சுக்கு 'லொரெயின்' (Lorraine) என்னும் பகுதி கிடைத்தது.[1]

பதினைந்தாம் லூயியின் நேரடி ஆட்சி

இதற்குப் பிறகு ஃப்ளுரி பதவியிலிருந்து விலகிக் கொள்ளவே 1743லிருந்து லூயியின் நேரடி ஆட்சி தொடங்கியது. இவர் நேரடியாக ஆட்சிப் பொறுப்பை ஏற்றபொழுதுதான் ஐரோப்பாவில் ஆஸ்திரிய வாரிசுரிமைப் போரும், ஏழாண்டுப் போரும் நிகழ்ந்தன. இதுவரையில் ஐரோப்பிய அரசியலில் முன்னணியிலிருந்த ஃபிரான்ஸ் இப்பொழுது தன் செல்வாக்கை இழந்திருந்தது. இவ்விரு போர்களிலும் முக்கிய பங்கேற்ற ஃபிரான்ஸ் இறுதியில் தோற்கடிக்கப்பட்டுத் தன் புகழையும், பெருமையையும் இழந்து நின்றது.[2] இதற்குக் காரணம் ஆற்றல் மிக்க, மாபெருந் தலைவர்களான 'வில்லியம் பிட்', 'சாதம் பிரபு' (William Pitt, Earl of Chatham), மகா ஃபிரெடரிக் ஆகியவர்களுடன் ஃபிரான்ஸ் போட்டியிட வேண்டியிருந்தது என்பது மட்டுமன்று, ஃபிரான்சின் அரசரின் திறமையின்மையும் ஆகும். ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகள் ஆட்சிப் பொறுப்பை மற்றவர்களிடம் ஒப்புவித்து விட்டுச் சுகபோக வாழ்க்கையில் ஈடுபட்டிருந்ததால் லூயியால்

[1] ஆனால், ஃபிரான்ஸ் இதை உடனடியாகப் பெறவில்லை. இந்த உடன்படிக்கையின்படி ஸ்டானிஸ்லாஸ் போலந்து அரசராக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அவர் ஆயுள்வரை லொரெயின் மாநிலத்தை ஆள வேண்டுமென்றும், அவர் இறந்தபிறகு அது ஃபிரான்சுடன் இணைக்கப்படவேண்டுமென்று இந்த உடன்படிக்கை கூறியது. 1766-ல் ஸ்டானிஸ்லாஸ் இறக்கவே லொரெயின் ஃபிரான்சுடன் இணைக்கப்பட்டது. ஃபிரான்ஸ் தன்னுடைய கிழக்கு எல்லையை வலுப்படுத்திக்கொள்ள இது உதவியது.

[2] இரண்டாம் ஃபிரெடரிக் மன்னரின் ஆட்சி என்ற தலைப்பின்கீழ் இப்போர்களைப்பற்றி விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

இப்பொழுது திறமையுடன் செயல்பட முடியவில்லை. இன்ப வாழ்க்கையிலேயே அவர் நாட்டம் சென்றது. நாட்டைப் பற்றியும், நாட்டின் பிரச்னைகள் பற்றியும் அவர் கவலைப்படவே இல்லை. அரச காரியங்களில் தம் அமைச்சர்கள், அதிகாரிகளின் ஆலோசனைப்படி நடப்பதை விடுத்து ஆசைநாயகிகளான 'மாடம் பாம்படூர்' (Madame de Pompadour), 'மாடம் து பாரி' (Madame du Barri) போன்றவர்களின் விருப்பத்திற்கிணங்க அவர்களின் கைப்பாவையாக விளங்கினார். உள்நாட்டு, அயல்நாட்டு விவகாரங்கள் யாவற்றையும் இவர்களே நிர்வகித்து வந்தனர். ஆஸ்திரிய வாரிசு உரிமைப் போருக்கும், ஏழாண்டுப் போருக்குமிடையே ஐரோப்பிய அரசியல் உறவு முறைகளில் ஏற்பட்ட மாறுதல்களின் விளைவாக (அரச தந்திரப் புரட்சி-Diplomatic Revolution) ஃபிரான்ஸ் பிரஷ்யாவின் நட்பை விடுத்து, ஆஸ்திரியாவுடன் சேர்ந்து கொண்டது மாடம் பாம்படூரின் செல்வாக்கினால்தான் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. ஏழாண்டுப் போரில் ஃபிரான்ஸ் தோல்வியுற்றதும், இந்தியாவிலும் அமெரிக்காவிலும் குடியேற்ற ஆதிக்கத்தை இழந்ததும் அந்தப்புரத்து இராணிகள் அரச விவகாரங்களில் தலையிட்டதனால்தான்.

உள்நாட்டு விவகாரங்களிலும் லூயி பொறுப்பற்ற முறையில் நடந்துகொண்டார். நாட்டின் நிதி நிலை மேன்மேலும் மோசமாகிக்கொண்டே வந்தபொழுது சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதை விடுத்து ஆடம்பரச் செலவுகளைச் செய்தார். 'பாரிஸ் நகர பார்லிமெண்டு' (The Parlement of Paris) மன்னனின் எதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்துக் குரல் எழுப்பியது. இந்த நீதிமன்றத்தின் உறுப்பினர்கள் சிறையிலடைக்கப்பட்டு இம் மன்றம் ஒடுக்கப்பட்டது. மக்கள் மீது மேலும் ஏராளமான வரிகள் விதிக்கப்பட்டன. பிரபுக்களும், மத குருமார்களும் சிறப்புரிமைகள் பெற்றுப் பாமர மக்களைச் சுரண்டித் தம் செல்வத்தைப் பெருக்கிக் கொண்டனர். நாட்டின் கடன்சுமை அதிகரித்தது. நிதி நிலை மோசமாகிக் கொண்டே வந்தது. இவருடைய திறமையின்மையினாலும், ஒழுக்கங்கெட்ட வாழ்க்கையினாலும் மக்களுக்கு மன்னரிடமிருந்த மதிப்பும், மரியாதையும் குலைந்தன. மக்கள் சிந்திக்கத் தொடங்கி விட்டனர். மன்னரின் ஆட்சியின் சீர்கேடுகளும், குறைபாடுகளும் சுட்டிக்காட்டப்பட்டுக் கண்டனத்திற்குள்ளாயின. ஆனால், அரசரோ இதைப் பொருட்படுத்தவில்லை. வருங் காலத்தைப்பற்றி அவர் கவலைப்படவே இல்லை. தன்னுடைய ஆட்சிக்குப் பிறகு ஃபிரான்சின் வீழ்ச்சி ஏற்படப் போகின்றது என்பதை ஓரளவு உணர்ந்திருந்த லூயி "எனக்குப் பிறகு பேரழிவு ஏற்படப் போகின்றது" (After me the deluge) என்று அடிக்கடி கூறுவார்.

பதினாறும் லூயியின் ஆட்சியில் நிகழ்ந்த புரட்சி இக்கூற்றை மெய்ப்பித்து விட்டது. இவ்வாறு மக்களுக்கு ஆட்சியின்மீது வெறுப்பு ஏற்பட்டு புரட்சிக்குச் சாதகமான சூழ்நிலை உருவாகிக் கொண்டிருந்த நிலையில் 1774-ல் பதினைந்தாம் லூயி இறந்தார். அவர் பேரரான பதினாறும் லூயி ஃபிரான்சின் அரியணை ஏறினார்.

## II. பதினாறும் லூயி (Louis XVI, 1774-1792)

தன் பாட்டனுடையதைப் போலல்லாமல் இவரது வாழ்க்கை நல்லொழுக்க நெறிகளின் அடிப்படையில் ஒரு தூய வாழ்க்கையாக அமைந்திருந்தது. மக்களின் நலனில் அக்கரை கொண்டிருந்த இவர் சிக்கனத்தைக் கடைப்பிடித்து நாட்டின் நிதிப்பிரச்சினைக்கு ஒரு தீர்வு காண விழைந்தார். இவருடைய நல்லெண்ணங்களைப் பற்றி எவருக்கும் ஐயப்பாடு இருக்கமுடியாது. இருப்பினும் இவர் ஆட்சி தோல்வியிலேயே முடிந்தது. ஏனெனில், வல்லாட்சி முறையைத் திறமையுடன் செயல்படுத்தத் தேவையான குண இயல்புகள் இவர் பெற்றிருக்கவில்லை. அந்தக் காலத்து வல்லரசர்களுக்கு மிகவும் தேவைப்பட்ட திறமை, விடாமுயற்சி, மன உறுதி, தன்னம்பிக்கை, விரைவில் முடிவுகளை எடுக்கும் துணிச்சல் போன்ற நற்பண்புகள் இவரிடம் காணப்படவில்லை. அரசியல் நிர்வாக விஷயங்களைவிட, வேட்டையாடுதல் போன்ற விளையாட்டுகளில்தான் இவருக்கு அதிக ஈடுபாடு இருந்தது. மேலும், இவருடைய மனைவியான ஆஸ்திரிய இளவரசி 'மேரி அண்ட்வானெட்' (Marie Antoinette) அரசியல் விவகாரங்களில் அதிகம் தலையிட்டார். ஆஸ்திரியாவைச் சேர்ந்தவராதலால் மக்கள் இவரை அந்நியர் என்று வெறுத்தனர். அரசியல் அனுபவம் இல்லாத இவர் ஃபிரெஞ்சு மக்களின் எண்ணங்களையும் விருப்பங்களையும் சரிவர புரிந்து கொள்ளவில்லை. எனவே, அரசியலில் இவர் தலையீட்டை மக்கள் விரும்பவில்லை. ஆட்சியில் நடந்த தவறுகளுக்கெல்லாம் இவர்தான் பொறுப்பு என்று மக்கள் கருதினர்.

உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டிய பிரச்சினை நாட்டின் நிதிப்பிரச்சினையாகும். நாட்டின் செலவினங்களும், கடன் சுமையும் அதிகமாகிக் கொண்டே வந்தன ; வருவாய் அதற்கேற்றவாறு பெருகவில்லை. வருவாய் பெருக பிரபுக்கள், மத குருமார்கள் போன்றவர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் சிறப்புரிமைகள், வரி விலக்குகள் யாவும் ஒழிக்கப்படவேண்டும். லூயியின் ஆட்சியில் பணிபுரிந்த 'தர்கோ' (Turgot, 1774-76), 'நெக்கர்' 'Necker 1776-81), 'கலோன்' (Calonne, 1783-87) போன்ற நிதி அமைச்சர்கள் எல்லோரும், பிரபுக்கள், மதகுருமார்கள் ஆகியவர்

களையும் வரி செலுத்தும்படிச் செய்தால்தான் நிதி நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும் என்று திட்டவட்டமாகத் தெரிவித்து விட்டனர். செல்வாக்குமிக்க பிரபுக்களும், மத குருமார்களும், அரசியும் இதற்கு இணங்கவில்லை. அவர்களுடைய கைப் பாவையாக விளங்கிய அரசரும் இதை ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஒருவர்பின் ஒருவராக இவ்வமைச்சர்கள் பதவியிலிருந்து விலக்கப் பட்டனர். இரண்டாவது முறையாக நிதி அமைச்சர் பதவியை 1788-ல் ஏற்ற நெக்கர் கட்டுக்கு மீறிவிட்ட நிதி நிலைமையைச் சமாளிக்க ஸ்டேட்ஸ் ஜெனரலைக் கூட்டுவது தவிர வேறுவழி இல்லை என்று கூறவே, அரசரும் இதற்கு ஒப்புக்கொண்டார். இதுதான் ஃபிரான்சில் புரட்சியின் துவக்கம் ஆகும்.

பதினைந்தாம் லூயி, பதினாறும் லூயி காலங்களில் ஃபிரான்சின் அரசியல், சமூக, பொருளாதார நிலை புரட்சிக்குச் சாதகமான ஒரு சூழ்நிலையை உருவாக்கியது. ஆட்சி முறையில் பல சீர்கேடு களும், ஊழல்களும் மலிந்திருந்தன. அரசர் வரம்பு கடந்த அதிகாரத்தைப் பெற்றிருந்தார். ஆனால், அது பொதுமக்களின் நலனுக்காகப் பயன்படுத்தப் படவில்லை. அரசரின் தன்னலத்திற் காகவும், பிரபுக்கள் போன்ற ஒரு குறிப்பிட்ட பிரிவினரின் நலனுக்காகவும் ஆட்சிமுறை இயங்கியது. நிர்வாகத்தில் சாதாரண மக்களுக்கு ஒரு பங்கும் இல்லை. இங்கிலாந்து போன்ற நாடுகளில் குடிமக்கள் அனுபவித்து வந்த தனி மனிதன் சுதந்தரம் ஃபிரென்சு மக்கள் பெற்றிருக்கவில்லை. நிலமானியமுறை அடிப் படையில் அமைந்திருந்த ஃபிரென்சு சமூகம் சமயக் குருமார்கள், பிரபுக்கள், பொதுமக்கள் என்ற மூன்று வகுப்பினரைக் கொண் டதாக இருந்தது. முதலிரண்டு வகுப்பினரும் சிறப்புரிமைகளும், வரிவிலக்கும் பெற்றிருந்தனர். சிறுபான்மையினராக இருந்தும் அரசியல் பொருளாதாரத் துறைகளில் பல சலுகைகளும், உரிமை களும் பெற்றிருந்ததால் நாட்டில் அவர்கள் செல்வாக்கு மேலோங்கியிருந்தது. 'பூர்ஷ்வா' (Bourgeoisie) என்றழைக்கப் பட்ட நடுத்தர வகுப்பினரும், சமுதாயத்தின் அடித்தளத்திலிருந்த குடியானவர்கள், தொழிலாளர்கள் போன்றவர்களும் சமூகத்தில் ஒடுக்கப்பட்டு உரிமைகள் ஏதுமின்றி ஏழைகளாக அடிமை வாழ்வு வாழ்ந்தனர். நிலவரி, தலைவரி, உப்புவரி போன்ற வரிகள் ஏழைகளிடமிருந்து மட்டுமே வசூலிக்கப்பட்டன. சாலைகள் அமைத்தல், பாலம் கட்டுதல் போன்ற பொதுப்பணிகளில் ஆண்டு தோறும் சில குறிப்பிட்ட நாட்கள் ஏழைகள் இலவசப் பணி புரியக் கட்டாயப் படுத்தப்பட்டனர். அவரவர் வரி செலுத்தும் திறனுக்கு ஏற்றவாறு வரிகள் விதிக்கப்படவில்லை. குடியான வர்கள் மீதே வரிச்சுமை அதிகமாக விழுந்தது. வரி வசூல்

முறையிலும் பல குறைபாடுகள் இருந்தன. வரி வசூல் செய்யும் அதிகாரத்தை அரசாங்கத்திடமிருந்து பெற்ற குத்தகைதாரர்கள் கொள்ளை இலாபம் சம்பாதித்தனர். வரி வசூலின் பொழுது மக்களுக்குப் பல கொடுமைகளை இழைத்தார்கள். செலவு முறையில் சிக்கனம் கையாளப்படவில்லை. அரசாங்கத்தின் கடன் சுமை அதிகரித்தது. இவ்வளவு சிக்கல்கள் நிறைந்த நிதிமுறை புரட்சி ஏற்பட ஒரு முக்கிய காரணமாக அமைந்ததில் வியப் பொன்றுமில்லை.

பொதுவாக நோக்குமிடத்துப் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஃபிரான்சில் குடியானவர்கள் போன்றோரின் நிலை மற்ற நாடுகளில் இருந்தது போல அவ்வளவு மோசமாக இல்லை என்றாலும், தாங்கள் உரிமைகளின்றி, ஏழைகளாக, ஒடுக்கப் பட்டவர்களாக, அடிமைகளாக வாழ்வதை நன்றாக உணர்ந்திருந் தார்கள். இந்த உணர்வுதான் அவர்களைத் தட்டி எழுப்பிப் புரட்சியில் ஈடுபடச் செய்தது. இந்த உணர்வை அவர்களிடையே ஏற்படுத்தக் காரணமாக இருந்தவர்கள் அப்பொழுது ஃபிரான்சில் தோன்றிய முற்போக்குக் கருத்துக்களைக் கொண்ட சிந்தனை யாளர்கள் Philosophe என்றழைக்கப்பட்ட இந்தத் தத்துவ அறிஞர்கள் பல புதிய கருத்துகளை மக்களிடையே பரப்பிப் புரட்சி விரைவில் தோன்றக் காரணமாக இருந்தனர். அப்பொழுது நிலவிவந்த காலத்திற்கு ஒவ்வாத அரசியல், சமுதாய அமைப் பையும், திருச்சபை அமைப்பையும் மாற்றியமைக்க வேண்டும் என்ற கருத்தும், மனிதாபிமான உணர்ச்சியும் இவர்களால் பொதுவாக வலியுறுத்தப்பட்ட கருத்துகளாகும். இவர்களின் முயற்சியின் விளைவாக ஆட்சிமுறை, சமூக அமைப்பு, திருச்சபை ஆகியவற்றில் காணப்பட்ட ஊழல்களைக் கண்டிக்கும் துணிவை ஃபிரெஞ்சு மக்கள் பெற்றனர்.

இவ்வாறு மக்களின் சிந்தனைகளையும் செயல்களையும் பெருமளவு பாதித்த இந்தப் பேரறிஞர்களுள் முக்கியமானவர்கள் 'வால்டேர்' (Voltaire, 1694-1778), 'மான்டெஸ்க்யூ' (Montesquieu, (1689-1755), 'ரூஸோ' (Rousseau, 1712-1778) போன்றவர்களும், 'Encyclopaedists' என்றழைக்கப்படும் கலைக்களஞ்சிய அறிஞர்களும் ஆவர். கட்டுரைகள், கவிதைகள், நாடகங்கள், வரலாற்று நூல்கள் மூலமாக வால்டேர் தம் புரட்சிக் கருத்துகளை மக்களிடையே பரப்பினார். கருத்துகளைச் சுருக்கமாகவும், அதே சமயத்தில் ஆணித்தரமாகவும் நகைச்சுவையுடன் கலந்து கொடுக்கும் ஆற்றல் பெற்றவர். இவர் கருத்துகள் யாவும் பகுத்தறிவின் அடிப்படையில் உருவாகியவை. மூட நம்பிக்

கைகள், சமயவெறி, திருச்சபையின் ஊழல்கள், சமுதாயத்தின் ஏற்றத் தாழ்வுகள் ஆகியவற்றைக் கண்டித்தார், மக்களாட்சி முறையை இவர் விரும்பவில்லை. ஃபிரான்சுக்கு வரம்புக்குட்பட்ட முடியாட்சி முறைதான் உகந்தது என்று கருதினார். மான்டெஸ்க்யூ வினுடைய கருத்துகள் அவர் எழுதிய (The Spirit of laws) என்ற நூலில் பொதிந்து கிடக்கின்றன. இவர் பல்வேறு நாடுகளின் அரசியல் அமைப்புகளை ஆராய்ந்து, இங்கிலாந்தின் அரசிய லமைப்புதான் சிறந்தது என்று கருதினார். ஃபிரான்சின் வரம்பு கடந்த முடியாட்சி முறைக்குப் பதிலாக இங்கிலாந்தின் வரம்புக் குட்பட்ட முடியாட்சி முறையைப் புகுத்தவேண்டும் என்று கூறினார். இங்கிலாந்தின் அரசியலமைப்பில் செயல்பட்டுவந்த 'அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை' (Doctrine of Separation of Power) ஆதரித்து, அது ஃபிரான்சிலும் பின்பற்றப்பட வேண்டு மென்று வலியுறுத்தினார். புரட்சியின் அடிப்படைத் தத்துவத்தை அளித்தவர் ரூஸோ என்னும் அறிஞராவார். அவருடைய கருத்துகளைச் 'சமூக ஒப்பந்தம்' (Social contract) என்னும் அவர் நூலில் காணலாம். புரட்சிக்காரர்களின் வேதமாகக் கருதப் படும் இந்நூலில் தெய்வீக உரிமைக் கொள்கையை உடைத் தெறிந்து, அரசாங்கத்தை ஆக்குவதும் அழிப்பதும் மக்களின் உரிமை என்ற கருத்தைத் தெரிவித்தார். சமுதாயத்தில் ஊழல்கள் பல மலிந்திருப்பதால் சமுதாயத்தையே இடித்துவிட வேண்டுமென்று கூறினார். சமுதாயத்தின் சீர்கேட்டிற்கு நாகரிக வளர்ச்சிதான் காரணம். எனவே, மனிதன் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த இயற்கையோடியைந்த வாழ்வுக்கு மீண்டும் செல்லவேண்டும் (Back to the State of Nature). அங்கு தான் மனிதன் நீதியையும், அமைதியையும், மகிழ்ச்சியையும் பெற முடியும் என்று எழுதினார். தனது கடமையைச் செய்யத் தவறிய அரசனைப் பதவியிலிருந்து அகற்றும் உரிமை மக்களுக்கு உண்டு என்றும், மக்கள் விருப்பமே சட்டமாக்கப்பட வேண்டுமென்றும், மக்களாட்சியில்தான் சுதந்தரமும் சமத்துவமும் பெறமுடியும் என்றும், 'இறைமை' (Sovereignty) மக்களிடத்திலேயே பொதிந்து கிடக்கின்றது என்றும் இவர் தன் நூலில் எழுதினார்.

1751 முதல் 1765 வரை வெளியிடப்பட்ட இருபத்தெட்டு பாகங்களைக் கொண்ட கலைக்களஞ்சியத்தில் (Encyclopaedia) 'திதரோ' (Diderot), 'தி அலம்பர்ட்' ((D'Alembert), 'வால்டேர்' (Voltaire), 'ரூஸோ' (Rousseau), 'தர்கோ' (Turgot), 'மிராபோ' (Mirabeau) போன்ற அறிஞர்கள் கட்டுரைகள் எழுதினர்கள். பகுத்தறிவுதான் இவர்களின் வழிகாட்டி. பகுத்தறிவுக்கு ஒவ்வாத சம்பிரதாயக் கருத்துகள், மூட நம்பிக்கைகள் ஆகிய

வற்றைக் கண்டித்தனர். 'க்வெஸ்னே' (Quesnay) போன்ற பொருளாதாரத் தத்துவ அறிஞர்கள் (Physiocrats) ஃபிரான்சின் பொருளாதாரத் துறையில் மலிந்து கிடந்த சீர்கேடுகளைக் கண்டித்து, மக்களின் பொருளாதார வாழ்க்கையில் அரசின் தலையீடு கூடாது என்று தலையிடாமைக் கொள்கையை (Laissezfaire) ஆதரித்தனர்.

இவ்வாறு இந்தச் சிந்தனையாளர்கள் தங்கள் கருத்துகள் மூலமாக மக்களின் எண்ணங்களை மாற்றி ஓர் அறிவுப் புரட்சியை உருவாக்கினர். இந்த அறிவுப்புரட்சி அரசியல் புரட்சிக்கு வழி கோலியது.

வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த நிகழ்ச்சி அடுத்து வரும் பக்கங்களில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

# 16. பிரெஞ்சுப் புரட்சி

1789-ல் ஃபிரான்சில் புரட்சி வெடித்ததிலிருந்து ஐரோப்பிய வரலாறே ஒரு குறிப்பிட்ட நாட்டின், ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியின் ஒரு குறிப்பிட்ட மனிதனின் வரலாற்றுடன் ஒன்றிவிடுகின்றது. அந்த நாடு ஃபிரான்ஸ்; அந்த நிகழ்ச்சி பிரெஞ்சுப் புரட்சி; அந்த மனிதன் நெப்போலியன். பதினைந்தாம் லூயி, பதினாறும் லூயி மன்னர்கள் ஆட்சியில் ஃபிரான்சின் அரசியல் பொருளாதார சமூக நிலை படிப்படியாகச் சீர்குலைந்து, 1789-ல் கட்டுக்கடங்காத நிலைமை உருவாகி புரட்சி தோன்றியது. ஃபிரான்சின் கோனாட்சிக்கும், சமூக அரசியல் அமைப்புகளுக்கும் பெருங்கேடு விளைவித்த இப்புரட்சிப் ஃபிரான்சை நீண்ட போரில் ஆழ்த்தியது.

ஃபிரான்சின் சமூக பொருளாதாரநிலைமைமட்டும் மோசமாக இருந்தது என்று நாம் இதன் மூலம் முடிவு செய்வது தவறு. செல்வம்மிக்க பிரபுக்களினாலும், அரசரினாலும் ஃபிரான்சில்மட்டும் குடியானவர்கள் சுரண்டப்பட்டார்கள் என்றோ, அங்கு மட்டும் தாங்க முடியாத வரிச்சுமையினாலும், ஏழ்மையினாலும் அவர்கள் அவதிப்பட்டார்கள் என்றோ கருதுவதும் பொருந்தாது. ஐரோப்பா முழுவதிலுமே குடியானவர்கள் நிலை ஏறத்தாழ இது போலத்தான் இருந்தது. கூர்ந்து நோக்கினால் ஃபிரான்சில் அவர்களின் நிலைமை மற்ற ஐரோப்பிய நாடுகளில் இருந்ததைவிட பன்மடங்கு மேலாகத்தான் இருந்தது. நில அடிமை (Serfdom) முறை அங்கு ஒழிக்கப்பட்டிருந்தது. இருப்பினும்புரட்சி ஃபிரான்சில் ஏன் தோன்ற வேண்டும்? இதற்கான காரணங்களை நாம் ஆராய வேண்டும். 18ஆம் நூற்றாண்டில் ஃபிரான்ஸ் அறிவுத் துறையிலும் கலாசாரத்திலும் ஐரோப்பாவிற்கு வழிகாட்டியாக விளங்கியது. பிரெஞ்சு மொழி, பிரெஞ்சு இலக்கியம், கலை, பழக்க வழக்கங்கள் அரசு முறை ஆகிய யாவுமே ஐரோப்பிய நாடுகளின் முன்மாதிரியாக கருதப்பட்ட காலம் அது. எனவே ஃபிரான்சின் கலாசாரத் தலைமை அங்கு புரட்சிக் கருத்துக்கள் தோன்றுவதற்குக் காரண

மாக அமைந்தது. பழமையை ஒழித்து புதுமைக் கருத்துக்களையும், புரட்சிக் கோட்பாட்டையும் மக்களிடையே பரப்பி வந்த சிந்தனை யாளர்கள், அரசியல் தத்துவ ஞானிகள், எழுத்தாளர்கள் பலர் ஃபிரான்ஸ்நாட்டில்தோன்றினர். இவர்களால் வலியுறுத்தப்பட்ட கருத்துக்களும் கோட்பாடுகளும் மக்களிடையே புரட்சி உணர்வை ஏற்படுத்தி செயலற்றுச் சோர்ந்து கிடந்த ஐரோப்பிய மக்களி டையே ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தின. மேலும் பிரெஞ்சுப் புரட்சியைத் தொடங்கி அதன் தலைமையை ஏற்று நடத்திய பூர்ஷ்வா (Bourguois) என்னும் நடுத்தர வகுப்பினர் பிரெஞ்சு சமூகத்தில் பெரும்பான்மையினராக மட்டுமல்லாமல் முன்னேற்றக் கருத்துக்களைக் கொண்டவர்களாகவும், சமூகத்தில் நிலவி வந்த ஏற்றத்தாழ்வுகளையும், தங்களுக்கு இழைக்கப்பட்டிருக்கும் அநீதி களையும் நன்கு உணர்ந்தவர்களாவும், அறிவு கூர்மை மிக்கவர்க ளாகவும் இருந்தார்கள். ஐரோப்பாவில் வேறு எந்த நாட்டிலும் நடுத்தர வகுப்பினர் இந்த அளவிற்கு செல்வாக்கும் வலிமையும் பெற்றிருக்கவில்லை. எனவே புரட்சியில் குடியானவர்கள், தொழி லாளர்கள் ஆகியவர்களின் தலைமையை ஏற்கும் பொறுப்பை இவர்கள் ஏற்றுக் கொண்டனர். சமூக, பொருளாதார ரீதியில் பிரெஞ்சுக் குடியானவர்களை மற்ற ஐரோப்பிய நாட்டுக் குடியான வர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, பிரெஞ்சுக் குடியான வர்களின் நிலை பன்மடங்கு மேலாகவே இருந்தது. நில அடிமை முறை பிரான்சில் அநேகமாக ஒழிக்கப்பட்டு விட்டது. பிரெஞ்சுக் குடியானவன் பெற்றிருந்த சுதந்திரமும் அவனுடைய பொருளா தார முன்னேற்றமும், அவனது பொது அறிவும், அவனை சமூக, பொருளாதார அநீதிகளை எதிர்க்கும்படித் தூண்டின; தன்னு டைய உரிமைகளை அடித்துக் கேட்கும் துணிவையும் அளித்தன.

ஃபிரான்சில் புரட்சி தோன்றுவதற்கு மற்றொரு முக்கிய காரணம் அந்நாட்டை ஆண்ட மன்னர்களின் திறமையின்மை யாகும். பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவின் மற்ற நாடுகளை ஆண்டு கொண்டிருந்த மகா பிரெடரிக், மகா பீட்டர், இரண்டாம் ஜோசப் போன்ற மன்னர்கள் அந்த நூற்றாண்டின் பகுத்தறிவு, சீர்திருத்தக் கருத்துக்களின் செல்வாக்கிற்குட்பட்டு தங்கள் நாட்டு மக்களின் நலனிற்காகவும், முன்னேற்றத்திற்காக வும் பல சீரிய திட்டங்களைச் செயல்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டி ருந்தார்கள். ஆனால் ஃபிரான்சின் மன்னர்களோ நாட்டின் நலனிலோ, மக்களின் நல்வாழ்விலோ சிறிதும் அக்கறையின்றி, தன்னலத்திற்காக கொடுங்கோல் ஆட்சி புரிந்து கொண்டிருந்தனர் நாட்டின் பிரச்சினைகளைப் புரிந்து கொள்ளாமல், மக்களின் தேவை களை உணர்ந்து கொள்ளாமல், மன்னர்கள் தங்கள் பொறுப்புகளைப்

புறக்கணித்ததால் புரட்சி தவிர்க்க முடியாத ஒன்றாகி விட்டது. எனவே ஃபிரான்சில் புரட்சி ஏற்படுவதற்கு அந்நாட்டு மன்னர்கள் தான் கணிசமான அளவிற்கு பொறுப்பேற்க வேண்டும் என்ற கருத்தில் ஓரளவு உண்மையிருக்கின்றது.

மேலே கூறப்பட்ட காரணங்களைவிட முக்கியமான காரணம் ஃபிரான்சின் மோசமான நிதிநிலைமையாகும். 18ஆம் நூற்றாண்டில் ஃபிரான்சிலிருந்த நிதிநிலைமை போல மோசமான நிலை வேறெந்த ஐரோப்பிய நாட்டிலும் இருக்கவில்லை. அனாவசியப் போர்கள், ஆடம்பரச் செலவுகள், தவறான வரிக்கொள்கைகள் காரணமாக பிரான்சில் நிதி நெருக்கடி உருவாகியது. அமெரிக்க சுதந்திரப் ஃபோரில் பிரான்ஸ் பங்கு கொண்டதால் அதன் நிதிநிலைமை மோசமாகியது. பருவம் பொய்த்ததால் விவசாய உற்பத்தி வெகுவாகக் குறைந்து உணவு நெருக்கடியும் தோன்றியது. இந்த சூழ்நிலையில் மக்கள் புரட்சி செய்ததில் வியப்பொன்றுமில்லை. அறிவு வளர்ச்சி, முற்போக்கு கருத்துக்களால் பாதிக்கப்பட்ட ஐரோப்பிய நாடுகளில் ஃபிரான்ஸ் முன்னணியில் நின்றது. ஃபிரான்சின் அரசியலமைப்பு சீர்குலைந்து, மக்களின் நம்பிக்கையை யிழந்து இருந்த நிலையில், புதுமைக் கருத்துக்களின் செல்வாக்கிற்குட்பட்டிருந்த மக்கள் ஒரு புதிய, செம்மையான சமுதாய அரசியலமைப்பை விரும்பி அதை உருவாக்குவதற்கான முயற்சிகளை மேற்கொண்டது புரட்சியின் தொடக்கமாக அமைந்தது. மேலும் பல வரலாற்றுக் காரணங்களினாலும், ஐரோப்பாவின் மற்ற நாடுகளை விட ஃபிரான்ஸ்தான் இங்கிலாந்து, அமெரிக்கா நாடுகளில் ஏற்பட்ட புரட்சிகளினால் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது.

பிரெஞ்சுப் புரட்சியின் தன்மை (Nature of the French Revolution)

இந்நிகழ்ச்சியை பிரெஞ்சுப் புரட்சி என்று அழைப்பதற்குப் பதிலாக, ஃபிரான்சில் 1789ஆம்ஆண்டு ஜூலை 14ஆம் தேதி புரட்சி தொடங்கிய பல ஆண்டுகளுக்கு முன்பே ஐரோப்பாவெங்கும் பரவிக் கொண்டிருந்த ஒரு பெரும் புரட்சி இயக்கத்தின் ஒரு கட்டம் என்று கருதுவதே பொருத்தமுடையதாகும். (The French Phase of a Great Revolution) இங்கிலாந்தில் 1649-ல் முதலாம் சார்லஸ் மன்னன் கொல்லப்பட்டது, 1688-ல் இரண்டாம் ஜேம்ஸ் பதவியிலிருந்து விலக்கப்பட்டது, 1775-ல் அமெரிக்கக் குடியேற்றங்களின் புரட்சி, 1783-87-ல் ஐக்கிய நெதர்லாந்தின் புரட்சி, 1789-ல் ஏற்பட்ட பிரெஞ்சுப் புரட்சி ஆகிய நிகழ்ச்சிகள் யாவற்றையும் இப்பெரும் புரட்சி இயக்கத்தின் பல்வேறு கட்டங்களாகக் கருதலாம். 1792-ல் பெல்ஜியத்திலும், 1795-ல் நெதர்லாந்திலும், 1796-ல் இத்தாலியிலும், 1798-ல் ஸ்விட்சர்லாந்தி

லும் நடந்தபுரட்சிக்கும் ஃபிரான்ஸ் நாட்டிலேயே 1830, 1848-ல் நடந்த புரட்சிகளும் இந்த பெரும் புரட்சி இயக்கத்தின் தொடர்ச்சி என்றே கூறவேண்டும். எனவே எல்லோரும் நினைப்பது போல அது 1799ஆம் ஆண்டிலோ 1815ஆம் ஆண்டிலோ முற்றுப்பெற்ற ஒரு நிகழ்ச்சி அல்ல. மேற்கத்திய உலகை குறிப்பாக அட்லாண்டிக் நாடுகளைப் பாதித்த ஒரு பெரும் புரட்சி இயக்கத்தின் ஒரு கூறு தான் 1789-ல் நடந்த பிரெஞ்சுப் புரட்சி.

இது ஒரு நடுத்தர வகுப்பினர் புரட்சி. இதை உருவாக்கியவர்கள் ஃபிரான்ஸ் நாட்டின் செல்வாக்கு மிக்க 'பூர்ஷ்வா' என்னும் நடுத்தர வகுப்பினர். உளுத்துப்போன நிலமானிய சமுதாயத்தையும், சிறப்புரிமைகளையும், அதிகார வர்க்க வல்லாட்சி முறையையும் தகர்த்தெறியும் நோக்கத்துடன் தொடங்கப்பட்டது இப் புரட்சி. சமத்துவம் என்னும் கோட்பாட்டின் அடிப்படையில் எழுந்ததுதான் இந்த இயக்கம். இது சிறப்புரிமைகளை எதிர்த்துத் தான் போராடியதேயன்றி சொத்துரிமையை எதிர்த்து அல்ல என்பதை நோக்கும் பொழுது இதன் நடுத்தர வகுப்புத்தன்மையை நாம் எளிதில் உணர்ந்து கொள்ளலாம். இப்புரட்சியில் பெரும் பங்கேற்றவர்கள் பூர்ஷ்வா பிரிவைச் சேர்ந்த பிரெஞ்சுக் குடியானவர்கள் ஆவர்.

இப்புரட்சியை ஒரு சமுதாயப் புரட்சி (Social Revolution) என்று கருதலாம். ஏனெனில் இப்புரட்சியின் முதன்மையான நோக்கம் சமுதாயத்தை மாற்றியமைப்பதாகும். அரசியலமைப்பை மாற்றியமைப்பது அல்ல; புரட்சிக்கு முன்பு இருந்த சமுதாயத்தில் சிறப்புரிமைகளும் ஏற்றத்தாழ்வுகளும் மலிந்து கிடந்தன. அரசாங்கத்தின் முக்கிய பதவிகள் பிரபுக்களின் ஏக போக உரிமையாக இருந்தது. வரிகள் செலுத்துவதிலிருந்து அவர்கள் விலக்கு அளிக்கப்பட்டிருந்தனர். நிலமானியக் கட்டணங்கள் (Feudal dues) வசூலிக்கும் உரிமையையும் அவர்கள் பெற்றிருந்தனர். சமய குருமார்கள், பல சலுகைகளைப் பெற்றிருந்தனர்; திருச்சபை பல வரிகளை வசூலித்தது. சமூகத்தில் காணப்பட்ட இன்ன பிற சீர்கேடுகளை ஒழிக்கும் நோக்கத்துடன் துவக்கப்பட்டதுதான் பிரெஞ்சுப் புரட்சி. எந்தவித புரட்சிகரமான அரசியல் மாற்றங்களும் செய்வது இப்புரட்சியின் குறிக்கோள் அல்ல என்பதை தொடக்கத்தில் பதினாறாம் லூயிக்கும் பொதுவாக கோனாட்சி முறைக்கும் புரட்சிக்காரர்கள் அளித்த ஆதரவிலிருந்து நன்றாக நாம் புரிந்து கொள்ளலாம். சமத்துவத்தின் அடிப்படையில் புரட்சிக்காரர்களால் வலியுறுத்தப்பட்ட வாதங்களை பதினாறாம் லூயி புரிந்துகொண்டு, உடனடியாக மக்கள் விரும்பிய

மாற்றங்களைச் செயல்படுத்த முற்பட்டிருந்தால், புரட்சியின் வருந்தத்தக்க சில பிற்கால நிகழ்ச்சிகளைத் தவிர்த்திருக்கலாம்.

சமத்துவக் கோட்பாட்டை நடைமுறையில் அமுல்படுத்துவது தான் இப்புரட்சியின் குறிக்கோளாகும். சமுதாயத்தில் நிலவி வந்த எல்லா வகையான ஏற்றத்தாழ்வுகளும், சிறப்புரிமைகளும் தகர்த்தெறியப்பட்டன. குடி மக்களிடையே பிறப்பு, சமயம், செல்வம் முதலியவற்றின் அடிப்படையில் நிலவி வந்த வேறுபாடு கள் யாவும் ஒழிக்கப்பட்டன. எனவே சமத்துவம், (Equality) என்னும் கோட்பாடு இப்புரட்சியின் உயிர் நாடியாக விளங்கியது.

### பிரெஞ்சுப் புரட்சியின் காரணங்கள்

வரலாற்று நிகழ்ச்சிகளின் அடிப்படையில் ஆராய்ந்து பார்க்கும்பொழுது, பொதுவாக புரட்சிக்கு அடிப்படைக் காரண மாக இருப்பது மக்களிடையே காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் தான் என்பது நன்கு விளங்கும். ஒரு சமூகத்தின் பழைய அமைப் புகளை உயர் வகுப்பைச் சார்ந்தவர்கள் தொடர்ந்து ஏற்றுக் கொள்ள இயலாது. கீழ் வகுப்பைச் சேர்ந்தவர்கள் அவற்றைத் தொடர்ந்து ஏற்றுக்கொள்ள முடியாது என்ற நிலை உருவாகும் பொழுதுதான் புரட்சி தோன்றுகிறது என்று லெனின் கூறுகிறார். (Revolution occurs when the upper classes cannot and the lower classes will not continue the old system). வரலாற்றாசிரியர் டாயின்பீ புரட்சியை "புதுக்குப்பியில் இருக்கும் பழைய மது விற்கு" ஒப்பிடுகிறார். (Old wine in the new bottle) புளித்துப் பொங்கும் பழைய மதுவின் வலிமையைத் தாங்கமுடியாமல் மதுக் குப்பி வெடித்து விடுவதுபோல புதிய சூழ்நிலைக்கும் தேவைக்கும் ஏற்ப மாற்றிக்கொள்ள முடியாத ஒரு அமைப்பு இறுதியில் அழிந்து விடுகின்றது. இந்த நிகழ் முறைதான் புரட்சி என்று அழைக்கப் படுகிறது. பிரெஞ்சுப் புரட்சிக்கும் இந்த அடிப்படைக் காரணங்கள் இருந்தன. அவற்றைச் சிறிது விரிவாக இங்கு ஆராய லாம். இவற்றை சமூக, அரசியல், பொருளாதார அறிவாற்றல் சார்ந்த காரணங்கள் என்னும் தலைப்புக்களில் விளக்குவோம்.

### சமூகப் பிரிவுகள்

ஒழுங்கற்றது, அநீதியானது என்று நவீன காலத்தில் கருதப் பட்ட பழக்க வழக்கங்கள், பிரிவுகளைக் கொண்டதாக இருந்தது பிரெஞ்சு சமூகம். இவற்றை சீர்திருத்தி அமைக்க வேண்டிய அவசியத்தை அன்றைய அரசாங்கம் உணரத் தவறியதால் புரட்சி ஏற்படுவதற்கான சூழ்நிலை உருவாகியது. பிரெஞ்சு சமூகத்தின் இரண்டு முக்கிய குறைபாடுகள் சிறப்புரிமை, ஏற்றத்தாழ்வுகள்

ஆகும். பிரெஞ்சுப்புரட்சி, வல்லாட்சி முறையை எதிர்த்து நடந்த புரட்சி என்று கூறுவதைவிட, ஏற்றத்தாழ்வுகளை எதிர்த்து நடந்த ஒன்று என்று கூறுவது மிகப் பொருத்தமாக இருக்கும் என்று மாட்லின் என்னும் ஆசிரியர் கூறுகின்றார். பிரெஞ்சு சமூகம் சமய குருமார்கள், பிரபுக்கள், பொதுமக்கள் என்ற மூன்று பிரிவுகளைக் (Three Estates) கொண்டிருந்தது. இந்த மூன்று பிரிவினர்களுக்கிடையே வேறுபாடுகளும், ஏற்றதாழ்வுகளும் இருந்தன. முதலிரண்டு பிரிவினர்கள் சிறப்புரிமைகள் பல பெற்றிருந்தனர். மூன்றாவது பிரிவினர்களுக்கு எல்லா உரிமைகளும் மறுக்கப்பட்டன.

ஃபிரான்சின் நிலத்தில் ஐந்தில் மூன்றுபங்கை திருச்சபை பெற்றிருந்தது. இதைத் தவிர நில வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை 'டைத்' (Tithe) என்னும் வரியாக மக்களிடமிருந்து வசூலித்தது. அரசுக்கு செலுத்தவேண்டிய வரிகளிலிருந்து திருச்சபைக்கு விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. இவ்வாறு திருச்சபை 'அரசிற்குள் ஒரு அரசாக' (a state within a state) விளங்கியது. இடைக் காலத்திலிருந்து அனுபவித்து வந்த சிறப்புரிமைகளை சமய குரு மார்கள் தொடர்ந்து அனுபவித்து வந்தார்கள். இவர்களிடையே மேல் நிலை சமய குருமார்கள் (Higher Clergy), கீழ்நிலை சமய குரு மார்கள் (Lower Clergy) என்ற இரு பிரிவுகள் இருந்தன. மேல் நிலையைச் சேர்ந்தவர்கள் அநேகமாக பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். திருச்சபையின் உயர் பதவிகள் யாவும் இவர்களே பெற்றிருந்தனர். சமய குருமார்கள் வரி கொடுப்பதினின்று விலக்கு அளிக்கப்பட்டிருந்தனர். மேல் நிலையைச் சேர்ந்தவர்கள் சிற்றின்பங்களில் திளைத்து ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள். கீழ்நிலையைச் சேர்ந்தவர்கள் ஏழ்மையால் அல்லற்பட்டுக் கொண்டிருந்தனர். எனவே பெரும் பான்மையினரான இவர்களை சிறுபான்மையினரான உயர் குரு மார்களை வெறுத்தனர். தங்கள் கடமைகளை மறந்து சிற்றின்ப வாழ்க்கையில் ஈடுபட்டு செல்வச் செருக்குடன் இருந்ததால் உயர் குருமார்கள் மக்கள் மதிப்பையிழந்து ஏழை குருமார்களின் வெறுப்பிற்கும், கோபத்திற்கும் ஆளானார்கள். சமூகம் தங்களுக்கு இழைத்திருக்கும் அநீதியை உணர்ந்திருந்த ஏழைக் குருமார்கள் அநீதியை ஒழித்து ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்கும் முயற்சியை வரவேற்றார்கள். அதற்கு தங்களுடைய ஒத்துழைப்பையும் உதவியையும் அளிக்க தயாராக இருந்தார்கள்.

சமூகத்தின் இரண்டாவது பிரிவைச் சேர்ந்த பிரபுக்கள் பாமரமக்களுடன் எந்தவித தொடர்பும் இல்லாமல், பல சிறப்

புரிமைகளைப் பெற்று ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தனர். இவர்கள் அனுபவித்து வந்த சிறப்புரிமைகள் நிலமானிய முறை நிலவி வந்த இடைக்காலத்தைச் சேர்ந்தவை. நிலமானிய முறை ஒழிக்கப்பட்டபோதிலும், இவர்களுடைய சிறப்புரிமைகள் ஒழிக்கப்படவில்லை. ரிசெல்யூ, மாஸரின் போன்ற அமைச்சர்கள் பிரபுக்களின் அரசியல் அதிகாரத்தை ஒடுக்கினார்களேயன்றி, இவர்களின் சிறப்புரிமைகளைப் பறிக்கவில்லை. நாட்டின் விளைநிலத்தில் ஐந்தில் ஒரு பங்கு இவர்களுக்குச் சொந்தமாக இருந்தது. இவர்கள் அரசிற்கு எந்தவித வரியையும் செலுத்தவில்லை. இவர்களில் பலர் அரச குடும்பத்துடன் வெர்சாய் அரண்மனையிலேயே வாழ்ந்து வந்தனர். தங்கள் நிலங்களைக் குத்தகைக்கு விட்டு பெருந்தொகையை குத்தகைதாரர்களிடமிருந்து பெற்றனர். வேட்டையாடுதல், சூதாட்டம் போன்ற பொழுதுபோக்குகளில் ஈடுபட்டு பாமரமக்களின் நிலையைப்பற்றி சிறிதும் கவலைப்படாமல் இருந்தனர். அரசின் உயர்பதவிகள் யாவும் இவர்களின் ஏகபோக உரிமையாக இருந்தது. காலப்போக்கில் பிரபுக்களுக்கும் பாமர மக்களுக்கும் இடையே இருந்துவந்த ஏற்றதாழ்வுகள் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே வந்து இணைக்க முடியாத ஒரு இடைவெளி இவ்விரு வகுப்பினரையும் பிரித்தது.

மூன்றாவது பிரிவைச்சேர்ந்த பாமரமக்கள் சமூகத்தின் அடித்தளத்தில் இருந்தனர். 1789-ல் இருபத்தைந்து மில்லியன் மக்கள் தொகை கொண்ட ஃபிரான்சில் ஏறத்தாழ 24·5 மில்லியன் மக்கள் இந்த மூன்றாவது பிரிவைச் சேர்ந்தவர்கள் ஆவர். இப்பிரிவைச் சேர்ந்த ஒரு பகுதியினர்தான் 'பூர்ஷ்வா' என்றழைக்கப்பட்ட நடுத்தர வகுப்பினர், வியாபாரிகள், தொழிலதிபர்கள், வழக்கறிஞர்கள் போன்றவர்களைக் கொண்ட இவ் வகுப்பினர்தான் புரட்சியின் தலைமையை ஏற்றனர். நாட்டுப்புறத்தில் வசித்த ஏழைக் குடியானவர்கள், நகரத்துத் தொழிலாளர்கள் ஆகியோர் இவ்வகுப்பைச் சேர்ந்த மற்றொரு பகுதியினர். இவ்வாறு பாமர மக்கள் இரண்டாகப் பிளவுபட்டிருந்தாலும் அவர்கள் பொதுவாக அனுபவித்து வந்த இன்னல்கள், அவர்கள் மீது மற்ற வகுப்பினர்களால் இழைக்கப்பட்ட அநீதி, அவர்களுடைய ஏழ்மை நிர்வாகத்திலிருந்து அவர்கள் ஒதுக்கப்பட்டது, இவையாவும் அவர்களிடையே ஒரு ஒற்றுமையுணர்ச்சியை ஏற்படுத்தியது. பிரெஞ்சுப் புரட்சி ஏற்பட்டது ஏன் என்பதைப் புரிந்துகொள்ள, இந்த பாமர மக்களின் நிலையை சற்று விரிவாக ஆராய்வது இன்றியமையாததாகும்.

இவ்வகுப்பின் கீழ்மட்டத்தில் இருந்த குடியானவர்கள் தொழிலாளர்கள் போன்றோர் நிலை மிகவும் மோசமாக இருந்தது.

நாட்டின் வரிகள் யாவும் இவர்கள்தான் செலுத்தினர். அரசனுக்கும், பிரபுக்களுக்கும், திருச்சபைக்கும் இவர்கள் வரிசெலுத்த வேண்டியிருந்தது. 'பிரபுக்கள் போரிட சமயக்குருமார்கள் வழிபாடு செய்ய, பாமரமக்கள் வரி கொடுக்க' (The nobles fight, the clergy pray, and the people pay) என்ற கூற்று ஃபிரான்சைப் பொறுத்தவரையில் நூற்றுக்கு நூறு உண்மையாக இருந்தது. Taille என்ற நிலவரியையும், Capitation என்ற தலைவரியையும் Gabelle என்ற உப்பு வரியையும் வருமான வரியையும், பாமர மக்கள் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டியிருந்தது. குறிப்பாக நிலவரி மக்களைப் பல இன்னல்களுக்குள்ளாக்கியது. ஒவ்வொரு குடியானவனின் பொருளாதார நிலையைப் பொருத்து இவ் வரி அரசின் அதிகாரிகளால் தங்கள் இச்சைப்படி நிர்ணயிக்கப்பட்டது. ஏழு வயதிற்குட்பட்ட ஒவ்வொருவரும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட அளவு உப்பு வாங்க வேண்டும் என்று கட்டாயப் படுத்தப்பட்டனர். இதை மீறியவர்கள் தண்டனைக்குள்ளாக்கப் பட்டனர். உப்பு வியாபார உரிமை ஒரு கம்பெனிக்கு ஏகபோக உரிமையாகக் கொடுக்கப்பட்டிருந்தது. இக்கம்பெனி கொள்ளை லாபம் அடித்தது. மது, தங்கம், வெள்ளி, இரும்பு, கண்ணாடி, காகிதம் போன்ற பொருள்கள் மீது பல வரிகள் விதிக்கப்பட்டன. இவை தவிர ஆண்டுதோறும் சில வாரங்கள் சாலைகள் அமைத்தல், பாலம் கட்டுதல் போன்ற பொதுப் பணிகளில் இலவசமாக வேலை செய்யவேண்டும் என்று பொதுமக்கள் வற்புறுத்தப்பட்டனர். இந்தக் கட்டாய வேலை (Corvee) எனப்பட்டது. மேலும் திருமணமாகாத குடியானவர்கள் கட்டாய இராணுவப் பணிக்கு அழைக்கப்பட்டனர். இராணுவ சேவையிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக இளம் வயதிலேயே திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் குடியானவர்களிடையே தோன்றியது. அரசாங்கத்திற்குச் செலுத்திய இந்த வரிகள் தவிர திருச்சபைக்கு 'டைத்' (Tithe) என்னும் வரியையும், பிரபுக்களுக்கு பல நிலமானியக் கட்டணங்களையும் மக்கள் செலுத்திவந்தனர். குடியானவர்கள் தங்கள் நிலப்பிரபுக்கள் பெற்றிருந்த இயந்திர சாதனங்களைப் பயன்படுத்திக்கொள்ள கட்டணங்கள் செலுத்தவேண்டும். பிரபுக்களின் நிலத்தில் வாரத்தில் மூன்று நாட்களாவது இலவசப் பணி செய்ய வேண்டும் அல்லது அதற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தவேண்டும். தன்னுடைய தகப்பனாரிடமிருந்து சொத்துரிமைகளைப் பெறும்பொழுது பிரபுவுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்க வேண்டும். மேற்கூறியவற்றிலிருந்து பொதுமக்கள் வரிச்சுமையினால் எத்தனை அல்லலுற்றனர் என்பதை எளிதில் புரிந்துகொள்ளலாம்.

ஃபிரான்சின் நடுத்தர வகுப்பினர் மற்ற ஐரோப்பிய நாட்டு பூர்ஷ்வாக்களைவிட செல்வத்திலும், கல்வி அறிவிலும் மேம்பட்டு விளங்கினர். நாட்டின் தொழில் துறையும், வியாபாரமும் அவர்கள் கையில் இருந்தது. புகையிலை, மது, காப்பி, தேயிலை போன்ற பொருள்களில் வெளிநாட்டு வியாபாரத்தின் மூலம் ஏராளமாக செல்வம் ஈட்டிய இவ்வகுப்பினர் செல்வ நிலையில் பிரபுக்களை ஒத்திருந்தனர். இருப்பினும் அவர்களுக்கு எந்த விதமான சிறப்புரிமைகளும் அளிக்கப்படவில்லை. நாட்டின் வரிச் சுமை இவர்கள் மீதுதான் விழுந்தது. நாட்டின் நிர்வாகத்தில் இவர்களுக்குப் பங்கு இல்லை. பிரபுக்களைவிட கல்வி அறிவு பெற்றிருந்ததால் சமூக பொருளாதார ஏற்றதாழ்வுகளையும் அநீதிகளையும் இவர்களால் எளிதில் உணர முடிந்தது. பிரபுக்களின் சிறப்புரிமைகளைத் தாக்கியதோடு மட்டுமல்லாமல், ஏழைக் குடியானவர்களின் குறைகளில் இருந்த நியாயத்தையும் இவர்கள் உணர்ந்தனர். சீர்திருத்தம் கோரி கிளர்ச்சிகளில் ஈடுபட்டனர். சமூகத்தின் மூன்ருவது பிரிவான பாமர மக்களிடையே செயலாற்றல் படைத்த இந் நடுத்தர வகுப்பினர் மிக்க செல்வாக்கு பெற்றிருந்தனர். இவ் வகுப்பினர்கள்தான் புரட்சியின் தலைமையை ஏற்றவர்கள் ஆவார். லஃபாயத் (Lafayette), மிராபோ (Mirabeau) போன்ற பிரபுக்கள் சீயே (Sieyes), தாலிராண்ட் (Talleyrand) போன்ற சமய குருமார்கள் தவிர புரட்சியின் மற்ற தலைவர்கள் எல்லோருமே இவ் வகுப்பைச் சேர்ந்தவர்கள்தான் என்பதை இங்கு நோக்க வேண்டும்.

### பொருளாதாரச் சீர்கேடுகள்

பதினேழாம் நூற்ருண்டில் ரிசெல்யூ, கால்பர்ட் போன்ற அமைச்சர்களின் முயற்சியால் ஃபிரான்சின் பொருளாதார, விவசாய வளர்ச்சி ஏற்பட்டிருந்தாலும் விவசாயம் இன்னும் பின் தங்கிய நிலையிலேயே இருந்தது. நிர்வாகத்தின் தேவையற்ற தலையீட்டினுல் தொழில் வளர்ச்சி தடைப்பட்டது. உள்நாட்டு காப்புவரிகள் பல விதிக்கப்பட்டதால் நாட்டின் ஒரு பகுதியிலிருந்து மற்ருெரு பகுதிக்கும் பொருள்கள் அனுப்பப்படுதல் தடைப்பட்டு வியாபாரத்தில் தேக்க நிலை ஏற்பட்டது. பிரெஞ்சு அரசாங்கத்தின் தவருன நிதிக் கொள்கையினுல் நிதிப் பற்ருக்குறை ஆண்டுதோறும் ஏற்பட்டது. பதினன்காம் லூயியின் ஊதாரித்தனமும், பதினைந்தாம் லூயியின் போர்களும் நாட்டின் நிதிநிலைமையை மேலும் மோசமாக்கின. நிலைமையைச் சமாளிக்க அரசாங்கம் பெருந்தொகையைக் கடன் வாங்கியது. நாட்டின் வருமானத்தில் கணிசமான பகுதி இந்த கடனுக்கு வட்டி செலுத்துவதற்குத் தேவைப்பட்டது. இந்த சிக்கல்களிலிருந்து மீளுவ

தற்கு ஒரே வழி வரிவிதிப்புக் கொள்கையை மாற்றியமைப்ப தாகும்; அதாவது பிரபுக்கள் மீதும், சமய குருமார்கள் மீதும் வரிவிதிப்பதாகும். ஆனால், நிர்வாகம் அதற்குத் தயாராக இல்லை. அந்தச் சமயத்தில் ஃபிரான்சில் பணவீக்கம் ஏற்பட்டு, அதன் விளைவாக விலைவாசிகள் வெகுவாக உயர்ந்தன. விலைவாசிகள் உயர்வு பாமரமக்களைப் பெரிதும் பாதித்தது. இந்நிலையில் 1788ல் பருவம் பொய்த்ததால் உணவுப் பொருள்கள் விளைச்சல் குறைந்து, உணவு நெருக்கடி ஏற்பட்டு, உணவு கோரி மக்கள் கிளர்ச்சிகளில் ஈடுபடத் தொடங்கினர்.

அரசியல் அநீதிகள்

பதினெட்டாம் நூற்றாண்டில் ஃபிரான்சில் பூர்போன் முடியாட்சி தெய்வீக உரிமைக் கொள்கையின் அடிப்படையில் இயங்கிக் கொண்டிருந்தது. அதிகாரம் முழுவதும் அரசன் கையில் குவிக்கப்பட்டு, அரசரின் எதேச்சாதிகாரம் பதினான்காம் லூயியின் ஆட்சியில் உச்சநிலையை அடைந்தது. மன்னனின் அதிகாரம் கொள்கையளவில் வரம்பற்றதாகவும், நடைமுறையில் பொறுப் பற்றதாகவும் இருந்தது. சட்டம் இயற்றுதல், வரிவிதித்தல், நீதி வழங்குதல், மாநிலங்களை ஆளும் 'இண்டன்டெண்டுகள்' போன்ற அதிகாரிகளை நியமித்தல் இன்னபிற அதிகாரங்கள் யாவும் மன்னன் கையிலேயே இருந்தன. அதிகாரக் குவிப்பினால் நிர்வா கத்தில் தாமதமும் திறமையின்மையும் மலிந்தன. பூர்போன் ஆட்சி பிரதிநிதித்வக் கோட்பாட்டிற்கு ஒரு சிறிதும் மதிப்பு அளிக்கவில்லை. பூர்போன் மன்னர்கள் பிரதிநிதித்வ சபைகளை ஒழிக்கும் பணியில் தீவிரமாக ஈடுபட்டனர். பிரதிநிதித்வ சபைகள் ஆதிக்கம் அளிக்கப்படாததால் மக்களின் குறைகளை ஆட்சியாளர்களுக்கு எடுத்துக்கூற இங்கிலாந்தின் பாராளுமன்றம் போன்ற எந்த ஒரு அமைப்பும் இல்லாத ஒரு நிலை ஏற்பட்டது. சமூகத்தின் மூன்று பிரிவினர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட 'ஸ்டேட் ஜெனரல்' என்னும் பாராளுமன்றம் ஃபிரான்சில் இருந்தது. ஆனால் 1614க்குப் பிறகு அது கூட்டப்படவே இல்லை. அப்படி கூட்டப்பட்டிருந்தாலும் அரசனின் விருப்பத்திற்கு எதிராக அது ஒன்றையும் சாதித்திருக்க முடியாது. ஏனெனில் அம்மன்றத்தில் வோட்டெடுக்கும் முறை அவ்வாறு இருந்தது. அம்மன்றத்தில் சமய குருமார்கள், பிரபுக்கள், பாமர மக்கள் ஆகிய மூன்று பிரிவினர்களின் பிரதிநிதிகளும் இருந்தனர். இந்த மூன்று பிரிவினரும் தனித்தனியாகக் கூடி பிரச்சினைகளை வாதித்து முடிவெடுத்தனர். இதனால் பாமரமக்களால் கொணரப்பட்ட எந்த பிரச்சினையும் மற்ற இரு பிரிவினரின் ஓட்டுகளால் தோற்கடிக் கப்பட்டது. நாட்டின் பாராளுமன்றத்தினால் இயற்றப்பட்ட

சட்டங்களுக்குப் பதிலாக அரசனால் பிறப்பிக்கப்பட்ட ஆணைகளின் மூலம் ஆட்சி நடந்தது. அரசனின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தக் கூடிய ஒரு பிரதிநிதித்துவ சபை இல்லாததால் அரசரின் ஆட்சி கொடுங்கோலாட்சியாக விளங்கியது.' இங்கிலாந்து மக்கள் அனுபவித்து வந்த தனியார் சுதந்திரம் (Individual liberty) ஃபிரான்சில் கிடையாது. தனக்குப் பிடிக்காத எவரையும், அரசன் எந்தவிதக் காரணமும் கூறாமல், விசாரணை ஏதும் இல்லாமல் (Letters de Cachet) என்ற சிறப்பு ஆணைகள் மூலம் கைது செய்ய முடியும். பொதுக்கூட்டங்கள் நடத்துதல், சங்கங்கள் அமைத்தல் போன்ற உரிமைகள் பிரெஞ்சு மக்களுக்கு மறுக்கப்பட்டன. மேலும் அரசியல் அடிப்படையில் ஃபிரான்ஸ் ஒற்றுமையின்றி இருந்தது. நாட்டின் பல்வேறு பாகங்களில் பலவகையான சட்டங்களும், பல வகையான வரி முறைகளும் செயல்பட்டு வந்ததனால் நிர்வாகத் துறையில் குழப்பம் மேலோங்கியிருந்தது. இந்தச் சூழ்நிலையில்தான் அரசனாகப் பொறுப்பேற்பதற்குத் தேவையான தகுதிகள் இல்லாத பதினாறும் லூயி ஃபிரான்சின் அரியணையேறினார். இவருடைய குணப் பண்புகளில் காணப்பட்ட குறைபாடுகள் புரட்சி ஏற்படுவதற்குப் பெரிதும் துணை புரிந்தன. பதினைந்தாம் லூயி, பதினாறும் லூயி போன்ற பிரெஞ்சு மன்னர்களின் அயல் நாட்டுக் கொள்கை மக்களிடையே அதிருப்தியை விளைவித்தது. பதினைந்தாம் லூயியின் ஆட்சியில் ஃபிரான்ஸ் ஏழாண்டுப்போரில் தோற்கடிக்கப்பட்டு, இந்தியா, அமெரிக்கக் குடியேற்றங்களை இழந்தாலும், பதினாறும் லூயியின் ஆட்சியில் கடந்தகால அனுபவத்தினால், எந்த படிப்பினையும் பெறாத பிரெஞ்சு அரசாங்கம் அமெரிக்க சுதந்திரப்போரில் ஃபிரான்சை ஈடுபடுத்தி பிரெஞ்சு மக்களை தொல்லைகளுக்குள்ளாக்கியதாலும் மன்னர்கள் ஆட்சியை பிரெஞ்சு மக்கள் அறவே வெறுத்தனர்.

### அறிவு வளர்ச்சியும், சிந்தனையாளர்கள் பங்கும்

பதினெட்டாம் நூற்றாண்டு ஐரோப்பிய வரலாற்றில் பகுத்தறிவுக் காலமாகக் (Age of Reason) கருதப்படுகிறது. இந்நூற்றாண்டில் ஃபிரான்ஸ் அறிவு வளர்ச்சி இயக்கத்தின் (Enlightenment)

[1] பிரான்சின் பார்லிமெண்டுகள் (Parlements) என்றழைக்கப்பட்ட நீதி மன்றங்கள் செயல்பட்டு வந்தன. இவை வெறும் நீதிமன்றங்களாக மட்டுமின்றி அரசனால் பிறப்பிக்கப்பட்ட ஆணைகளை ஏற்கவோ, மறுக்கவோ அதிகாரத்தையும் பெற்றிருந்தன. பல சமயங்களில் இவ்வதிகாரத்தைப் பயன்படுத்தி அரசனின் பல ஆணைகளை ஏற்க இம்மன்றங்கள் மறுத்துள்ளன. இவை பழைமை வாதக் கொள்கைகளையும் பிற்போக்கு சக்திகளையும் ஆதரிக்கும் அமைப்புகளாக இருந்தனவேயன்றி முற்போக்கு கொள்கைகளை ஆதரிக்கவில்லை. இம்மன்றங்களுள் Parlement of Paris குறிப்பிடத்தக்கது.

பிறப்பிடமாக விளங்கியது.[1] ஐயுறவு வாதம் (Scepticism) பகுத்தறிவு வாதம் (Rationalism) இயற்கைச் சமயம் (Deism) மனிதாபிமானம் (Humanism) ஆகியவை இவ்வியக்கத்தின் சிறப்புப் பண்புகளாகும். இந்த அறிவு வளர்ச்சியின் செல்வாக்கிற்குட்பட்ட சிந்தனையாளர்களும் தத்துவ ஞானிகளும் பகுத்தறிவின் அடிப்படையில் அப்பொழுது நிலவி வந்த அரசியல், சமூக சமய அமைப்புகளை ஆராய்ந்து விமர்சிக்கத் தொடங்கினர். அவற்றில் மலிந்து கிடந்த குறைபாடுகளைச் சுட்டிக்காட்டி அவற்றை அறவே அகற்ற வேண்டியதின் அவசியத்தையும், ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க வேண்டியதின் அவசியத்தையும் வலியுறுத்தினர். பரந்த நோக்கமும், மனிதாபிமான உணர்ச்சியும் கொண்ட இந்த சிந்தனையாளர்கள் போர்களை வெறுத்தனர். 'சட்டத்தின் ஆட்சி' (Rule of Law), 'தடையிலா வாணிபம்', 'பொறையுடைமை' போன்ற முற்போக்குக் கருத்துகளை ஆதரித்தனர். 'சொத்துரிமை', 'வல்லாட்சி முறை' ஆகியவற்றில் நியாயமில்லை என்று வாதாடி சுதந்திரம், சமத்துவம் போன்ற கோட்பாடுகளை ஆதரித்தனர். சித்திரவதை செய்தல் (Torture) அடிமை முறை (Slavery) போன்ற சமூகத்தில் நிலவி வந்த கொடுமைகளைத் தீவிரமாக எதிர்த்த அவர்கள் சமயத்தையும் அதில் மலிந்து கிடந்த ஊழல்களையும், திருச்சபையின் தவறான போக்கையும் கண்டிக்கத்தவறவில்லை. சமுதாயத்தின் மீதும் அரசின் மீதும் சமயம் மிக்க செல்வாக்கைப் பெற்றிருந்தது. எனவே சமயத்தின் மீதும், திருச்சபையின் மீதும் மக்கள் வைத்திருந்த நம்பிக்கையைத் தளர்த்துவதின்மூலம் அநீதி மேலோங்கியிருந்த சமூக, அரசியலமைப்புகளின் அடித்தளத்தையே பலவீனப்படுத்த இயலும் என்று அவர்கள் எண்ணினர். இந்த அறிஞர்களிடம் மனிதாபிமான உணர்ச்சி மேலோங்கியிருந்தது. அரசினாலும், திருச்சபையினாலும் கொடுமைக்குள்ளாக்கப்பட்ட பாமரமக்களின் நிலையை உயர்த்த வேண்டும். அவர்களின் கண்ணீரைத் துடைக்க வேண்டும் போன்ற உயர்ந்த முற்போக்குக் கருத்துக்கள் இவர்களால் வலியுறுத்தப்பட்டன. இவ்வாறு பழைய மரபுகள், அமைப்புகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைக் கண்டித்ததின் மூலம் மக்கள் மனதில் புரட்சி உணர்வை ஏற்படுத்தி புரட்சி

[1] ஆங்கிலத்தில் (Enlightenment) என்று குறிப்பிடப்படும் சொல்லிற்கு 'அறிவு வளர்ச்சி இயக்கம்' என்பதைவிட சமுதாயத்தில் மக்களுடைய கருத்துக்கள், எண்ணங்களில் தோன்றிய ஒரு புதிய போக்கு (a trend) என்று பொருள் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். இதுபற்றிய கருத்துகள் இந்நூலின் 'பிரஷ்யாவின் எழுச்சியும் வளர்ச்சியும் என்ற அத்தியாயத்தில் மாமன்னன் ஃபிரெடரிக் என்ற தலைப்பில் மேலும் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

தோன்றுவதற்குச் சாதகமான சூழ்நிலையை உருவாக்கினர். எனவே மக்கள் எண்ணங்களை புரட்சிப்பாதையில் செலுத்தியதின் மூலம் இவர்கள் புரட்சிக்கு முன்னோடிகளாக விளங்கினர். இவர்களுடைய எழுத்துக்களும், பேச்சுக்களும் மக்களின் எண்ணங்களை வெகுவாகப் பாதித்தது, அவர்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தின. தாங்கள் அநீதிக்கு ஆளானவர்கள், கொடுமைப் படுத்தப்படுபவர்கள் என்ற ஒரு உணர்வை பிரெஞ்சு மக்களிடையே ஏற்படுத்தி இதற்கு ஒரு முடிவு கட்டவேண்டும் என்று ஒரு உறுதியை அவர்களுக்கு அளித்தது, இந்த விழிப்புணர்ச்சிதான் என்றால் அது மிகையாகாது. இக்கண்ணோக்கில் ஆராயும்பொழுது புரட்சி தோன்றுவதற்கு சிந்தனையாளர்கள் இன்றியமையாத ஒரு காரணமாக இருந்தார்கள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இந்த அறிஞர்களும், சிந்தனையாளர்களும் புரட்சிக்கு எத்துணை காரணமாக இருந்தனர் என்பது பற்றி வரலாற்றறிஞர்களிடையே கருத்துவேறுபாடு உள்ளது. அரசியல், சமூக, பொருளாதாரக் காரணங்கள்தான் புரட்சியைத் தோற்றுவித்தன. சிந்தனையாளர்களின் கோட்பாடுகளும் கருத்துக்களும் அதற்குப் பொறுப்பல்ல என்று சிலர் வாதிக்கின்றனர். தத்துவஞானிகள் எவரும்—அவர்களுள் மிகவும் தீவிரக் கருத்துக்களைக்கொண்ட ரூஸோகூட—வெளிப்படையாக புரட்சி செய்யும்படி மக்களைத் தூண்டவில்லை. நையாண்டி செய்வதின் மூலமும், நகைச்சுவை மூலமும், திறனாய்வதின் மூலமும், ஒப்புமை மூலமும், மறைமுகக்குறிப்புகள் மூலமும், விஞ்ஞான ரீதியில் விளக்கங்கள் மூலமும், நேரடியான வசைமொழி மூலமும் அவர்கள் பிரெஞ்சு நிறுவனங்களின் சீரழிந்த நிலையை மக்களுக்கு சுட்டிக்காட்டினர். ஃபிரான்சின் பழைய அமைப்புகளின் (Ancien regime) அடிப்படை ஆதாரமாக விளங்கிய மரபுகளையும், மக்கள் நம்பிக்கைகளையும் கடுமையாகத் தாக்கி தகர்த்தெறிந்ததின் மூலம் அந்த அமைப்புகள் ஒழிக்கப்படுவதற்கு இவர்கள் காரணமாக இருந்தார்கள் என்று கூறுவது பொருத்தமுடையதாகும். இவர்களின்றி ஃபிரான்சில் புரட்சி ஏற்பட்டிருக்காது என்று கூறுவதைவிட இவர்களால் புரட்சி துரிதப்படுத்தப் பட்டது என்று கூறலாம். தங்கள் குறைகளை மக்கள் உணரும்படி செய்து, அதற்கான காரணங்களையும் விளக்கி அவர்கள் கோரிக்கைகளையும் இந்த அறிஞர்கள் உருவாக்கிக் கொடுத்தனர். மக்களின் அவலநிலையைச் சுட்டிக்காட்டி, அதற்கான காரணங்களை மக்களுக்கு உணர்த்தி, மக்கள் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டனர். கவர்ச்சி மிக்க கோஷங்கள், அடுக்குமொழி அறிக்கைகள், பொருட் செறிவு மிகுந்த சொற்றொடர்கள் போன்ற புரட்சியின் கருவிகளை இவர்கள்தான் மக்களுக்கு உருவாக்கிக் கொடுத்தார்கள், இருப்பினும் இவர்களுடைய கருத்துக்கள் சமூகத்தின் ஒரு பகுதியைத்

தான், அதாவது அறிவுவளர்ச்சி, கல்வியல் மேம்பாடடைந்திருந்த ஒரு குறிப்பிட்ட பகுதியினரைத்தான், (Intellectuals and educated) பாதித்தது என்பதையும், பாமரமக்கள் இவர்கள் கருத்துக்களின் செல்வாக்கிற்குட்படவில்லை என்பதையும் நாம் இங்கு மறந்து விடக்கூடாது. இருப்பினும் புரட்சியில் பாமரமக்களை வழிநடத்திச் சென்ற தலைவர்களை உருவாக்கியவர்கள் இந்தச் சிந்தனையாளர்கள் தான் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

பிரெஞ்சுப் புரட்சிக்கு முன்னோடியாக இருந்த இந்த அறிவுப் புரட்சியை உருவாக்கியவர்களில் ஒருவர் மாண்டெஸ்க்யூ என்பவர் (1689-1755) ஆவார். பிரபுக்குடும்பத்தில் பிறந்த இவர் வழக்கறிஞர் தொழிலை நடத்திவந்தார். பன்னாட்டு அரசியலமைப்புகளை அலசி ஆராய்ந்த இவர் இங்கிலாந்தின் அரசியலமைப்புதான் மிகச் சிறந்தது என்ற கருத்துடையவர். பிரெஞ்சுப் பிரபுக்கள் அனுபவித்து வந்த சிறப்புரிமைகளையும் அரசவையில் மலிந்து கிடந்த ஊழல்களையும் இவர் மக்களுக்குச் சுட்டிக்காட்டினார். Spirit of Laws என்ற நூலில் இங்கிலாந்தில் காணப்படுவது போன்ற வரம்புக்குட்பட்ட முடியாட்சிதான் (Limited Monarchy) நாட்டின் நலனுக்கு உகந்தது என்றும், ஃபிரான்சில் இயங்கிவந்த வரம்புகடந்த முடியாட்சி முறை (Absolute Monarchy) ஏற்றது அல்ல என்றும் வாதிட்டார். இங்கிலாந்து அரசியலமைப்பின் சிறப்பியல்பு அதிகாரப்பிரிவினைக் கோட்பாடு (Doctrine of Separation of powers) என்பது அவர் கருத்து. சட்டமியற்றும் துறை, நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகிய மூன்றும் தனித்தனியாக சுதந்திரமாக இயங்குவதால்தான் இங்கிலாந்தின் தனியார் சுதந்திரம் பாதுகாக்கப்படுகின்றதுஎன்றும், ஃபிரான்சில்இக்கோட்பாடு கடைப்பிடிக்கப்படாததால் மன்னனின் எதேச்சாதிகாரம் வளர்ந்து விட்டது என்றும் இவர் கருதினார். எனவே ஃபிரான்சிலும் இம் முறையைப் பின்பற்றவேண்டியதின் அவசியத்தைத் தன் எழுத்துக்கள் மூலம் இவர் வலியுறுத்தினர்.

பதினெட்டாம் நூற்றாண்டு அறிவு உலகத்தின் தலைசிறந்த மனிதர் வால்டேர் (Voltaire) என்பவர் (1694-1778) ஆவார். கட்டுரைகள், கவிதைகள், நாவல்கள், வரலாறு முதலியவற்றை எழுதி, இலக்கியத் துறையில் சிறந்துவிளங்கிய இவர் ஒரு பெரிய சிந்தனையாளராகவும் தத்துவ ஞானியாகவும் வளர்ந்தார்.[1] நியூடன், லாக் போன்ற அறிஞர்களின் கோட்பாடுகளில் ஊறித்

[1] 'பதினான்காம் லூயியின் காலம்' ((Age of Louis XIV) என்ற வரலாற்று நூலும், தத்துவ அகராதி (Philosophical Dictionary) என்ற நூலும் இவர் நூல்களுள் குறிப்பிடத்தக்கவை'

தினைத்த இவர் தன் காலத்து சமூக, அரசியல், சமய அமைப்புகளை திறனாய்வு நோக்குடன் அலசி ஆராய்ந்து அவற்றில் காணப்பட்ட ஊழல்களையும், சீர்கேடுகளையும், அநீதிகளையும் வன்மையாகக் கண்டித்தார். பழைய அமைப்பின் (ancien regime) தூண்களாக விளங்கிய எல்லா நிறுவனங்களையும் அவர் கடுமையாகத் தாக்கினார். அவற்றுள் அவருடைய கடுமையான பேனா முனைத்தாக்குதலுக்கு இலக்கான நிறுவனம் கத்தோலிக்க சமயமும், திருச்சபையும் ஆகும். மனிதனின் சிந்திக்கும் ஆற்றலுக்கு ஒரு தடையாகவும், வெறி உணர்ச்சி, மூடநம்பிக்கைகளுக்கு ஒரு புகலிடமாகவும் திருச்சபை விளங்குகிறது என்பது அவர் கருத்து. மனிதனின் சிந்தனைகள் வளரவேண்டுமென்றால் திருச்சபையின் ஆதிக்கம் ஒழிக்கப்படவேண்டும் என்று அவர் அறைகூவல் விடுத்தார். பழைய மரபுகளை கண்மூடித்தனமாக ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று கூறிய இவர் எதையுமே பகுத்தறிவின் அடிப்படையில் ஆராய வேண்டுமென்றும், பகுத்தறிவுக்கு ஒவ்வாத கருத்துக்களையும் அமைப்புகளையும் தகர்த்தெறிய வேண்டுமென்றும் வாதிட்டார். சமயம், சமூகம், அரசாங்கம் இவற்றின்மீது வால்டேருடைய தாக்குதல்கள் பகுத்தறிவு வாதத்தின் அடிப்படையில் அமைந்திருந்தால் ஏராளமான இளைஞர்கள் இவருடைய கருத்துக்களினால் ஈர்க்கப்பட்டார்கள்.

பதினெட்டாம் நூற்றாண்டு பிரெஞ்சு அறிஞர்களுள் தீவிர வாதியாக விளங்கியவர் ரூசோ (Rousseau) என்பவர் (1712-1778) ஆவார். நேரில்கண்டும், சொந்த அனுபவத்தின் மூலமும் ஃபிரான்சில் ஏழை மக்களின் இன்னல்களை நன்குணர்ந்தார். மனிதனிடம் தன்னல உணர்ச்சி மேலோங்கியிருப்பதற்கு விஞ்ஞான வளர்ச்சியும் கல்வியறிவும்தான் காரணங்களாகும். சமுதாயத்தின் சீர்கேடுகள், நாகரீக வளர்ச்சியின் நேரடி விளைவுகளாகும். ஆகவே மனிதன் ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த இயற்கையோடு இயைந்த வாழ்வுக்கு மீண்டும் செல்லவேண்டும். (Back to the State of Nature). அங்குதான் அவன் நீதியையும் அமைதியையும் மகிழ்ச்சியையும் பெறமுடியும் என்று கூறினார். ''மக்களிடையே ஏற்றத்தாழ்வுகள் எவ்வாறு தோன்றின ?'' (What is the origin of Inequality ?) என்ற கட்டுரையில் தற்பெருமையும், பேராசையும் மனிதனை மாசுபடுத்திவிட்டன என்பதையும், வலிமை மிக்கவர்கள் நிலம், சொத்து ஆகியவற்றைக் கைப்பற்றி வலியற்றவர்களைத் தங்கள் ஆதிக்கத்திற்குள்ளாக்கிக் கொண்டுவிட்டனர் என்ற கருத்தையும் தெளிவாக விளக்கியுள்ளார். புரட்சிக்காரர்களின் வேதமாகக் கருதப்படும் அவருடைய ''சமூக ஒப்பந்தம்'' (Social contract) என்னும் நூலில்தான் புரட்சிக்குத் தத்துவ அடிப்

படைப்பை அளித்த அவருடைய முக்கிய கருத்துக்கள் காணப்படு கின்றன. லாக் (Locke) போன்ற அறிஞர்களின் கருத்துக்களைத் தழுவிய பல விரிவான ஆராய்ச்சிகள் நடத்திய ரூஸோ, அரசு, அரசாங்கம் சட்டம் ஆகியயாவும் மக்களிடையே ஒரு ஒப்பந்தத் தின் விளைவாகத் தோன்றியவை என்ற கருத்தை வெளியிட்டார். அரசாங்கத்தை ஆக்குவதும் அழிப்பதும் மக்கள் விருப்பமே, கடமையிலிருந்து வழுவிய ஒரு அரசனை பதவியிலிருந்து நீக்கும் உரிமை மக்களுக்கு உண்டு என்ற கருத்தை வலியுறுத்தியதின் மூலம் இறைமை மக்களிடம்தான் பொதிந்து கிடக்கின்றது என்று அவர் கூறினார். கொடுங்கோல் ஆட்சியைப் புரட்சி மூலம் அகற்றும் உரிமை மக்களுக்கு உண்டு என்ற கருத்தை அவர் தன் னுடைய 'சமூக ஒப்பந்தம்' என்னும் நூலின் தொடக்கத்தில் உள்ள ''மனிதன் பிறக்கும்பொழுது சுதந்திரமாகப் பிறக்கின்றான்; ஆனால் எங்கும் அவன் கட்டுண்டு கிடக்கின்றான்'' என்ற வாக்கியத் தின் மூலம் தெளிவாகப் புலப்படுத்துகிறார். (Man is born free; but everywhere he is in chains......It is necessary for man to throw of these chains") பொருட்செறிவு மிக்க இந்த வாக்கியம் தான் மக்களைப் புரட்சி செய்யத் தூண்டியது என்றால் அது மிகையாகாது.

இந்த நூற்றாண்டின் பல்துறைப் புலமை வாய்ந்த மற்றொரு அறிஞர் டெனிஸ் தீதரோ (Denis Diderot) என்பவர் ஆவார். பல ஆராய்ச்சியாளர்கள் கொண்ட ஒரு குழுவின் உடனுழைப் புடன் 1751-1772 ஆண்டுகளுக்கிடையே கலைக்களஞ்சியம் ஒன்றை (Encyclopaedia) இவர் வெளியிட்டார். தி அலம்பர்ட் (D'Alembert) வால்டேர், ரூஸோ, தர்கோ (Turgot) மிராபோ (Mirabeau) போன்ற அறிஞர்கள் இக்கலைக்களஞ்சியத்தில் கட்டுரைகள் எழுதினார்கள். இந்த வல்லுநர்கள் அந்தக் காலத்தில் நிலவிய சமூக, சமய, அரசியல் கருத்துக்களையும், நிறுவனங்களை யும் திறனாய்வு செய்து தங்கள் கருத்துக்களை வெளியிட்டனர். இவர்கள் பொருளாதாரத் துறையையும் விட்டு வைக்கவில்லை. கேனே (Quesney) என்ற அறிஞரின் தலைமையில் physiocrats என்ற ழைக்கப்பட்ட பொருளாதாரத் தத்துவ அறிஞர்கள் ஃபிரான்சில் நிலவிய Mercantilism என்ற பொருளாதாரக் கோட்பாட்டையும் வர்த்தக, தொழிற்துறைகளில் அரசாங்கத்தின் தலையீட்டையும் வன்மையாகக் கண்டித்தனர். அரசின் தலையீடு இல்லாத தடையிலா வாணிப, தொழிற் கொள்கையை (Laissez faire) இவர்கள் ஆதரித்தார்கள்.

'Philosophe' என்று பொதுவாக அழைக்கப்பட்ட மேலே குறிப்பிடப்பட்டுள்ள சிந்தனையாளர்களும் தத்துவ ஞானிகளும் அவர்களுடைய கருத்துக்களும், மக்களின் எண்ணங்களை மாற்றி ஓர் அறிவுப் புரட்சியை உருவாக்கினர். இந்த அறிவுப் புரட்சி பிரெஞ்சுப் புரட்சிக்கு வழி கோலியது.

நிதிப்பற்றுக் குறையும் உணவு நெருக்கடியும்

பதினாறும் லூயி பட்டமெய்தியது முதல் ஃபிரான்சில் பரவலாக விவாதிக்கப்பட்ட ஒரு பிரச்சினை ஃபிரான்சின் நிதிநிலைமையாகும். அவர் ஆட்சியின் ஆடம்பரச் செலவுகள், போர்கள் காரணமாக நிதிநிலைமை மேலும் மோசமாகியது. இதற்கு அரசரின் மனைவி மேரி அண்ட்வானெட் ஓரளவிற்குக் காரணமாவார். ஆடம்பரச் செலவுகளின் ஒரு உருவகமாக அவர் காட்சி தந்தார். எனவேதான் பாரிஸ் மக்கள் அவரை 'பற்றுக்குறை அம்மையார்' (Madame Deficit) என்று செல்லப் பெயரிட்டு அழைத்தனர். அரசாங்கத்தின் வருவாயைவிட செலவினங்கள் அதிகமாக இருந்தன. எனவே ஆண்டுதோறும் பற்றுக்குறையைச் சரிக்கட்ட அரசாங்கம் பெருந் தொகை கடன் வாங்க வேண்டியிருந்தது. லூயியின் ஆட்சியில் பத்து ஆண்டுகளில் (1776-1786) 500 கோடி ரூபாய் கடன் வாங்கப்பட்டதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. அரசாங்கத்தின் வருவாயில் பாதிக்குமேல் இந்த தேசியக் கடன்களின் மீதான வட்டி செலுத்துவதற்கே தேவைப்பட்டது. நாட்டை இந்த நெருக்கடியிலிருந்து காப்பாற்ற நிர்வாகச் சீர்திருத்தமும், வரி விதிப்பு முறையில் மாற்றமும் உடனடியாகத் தேவைப்பட்டன. ஆனால் தங்கள் சிறப்புரிமைகளை விட்டுக்கொடுக்க மனமில்லாத பிரபுக்கள் இதற்கு ஒரு முட்டுக்கட்டையாக இருந்தனர்.

தன் ஆட்சியின் தொடக்கத்தில் பதினாறும் லூயி சில விரும்பத் தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டார். அவற்றுள் ஒன்று தர்கோ (Turgot) என்பவரை நிதி அமைச்சராக நியமித்தது ஆகும். (physiocrats) என்றழைக்கப்பட்ட பொருளாதாரத் தத்துவ அறிஞர்களின் கொள்கைகளைப் பின்பற்றிய இவர் தலையிடாமைக் கொள்கையை ஆதரித்தார். நிதித்துறையில் வல்லுநராக விளங்கிய இவர் பாமர மக்களின் நலனில் அக்கறை காட்டினார். பிரபுக்களின் சிறப்புரிமைகளை எதிர்த்தார். பற்றுக் குறையை ஒழித்து, தேசியக் கடனை அடைத்து ஃபிரான்சின் நிதிச் சிக்கல்களைத் தீர்க்க ஒரேவழி பிரபுக்கள்மீதும் சமய குருமார்கள் மீதும் வரிவிதிப்பதின்மூலம்தான் என்பதை இவர் வலியுறுத்தினார். இக்கருத்திற்கிணங்க நிர்வாகத்திலும், நிதித்துறையிலும் பல புரட்சிகரமான மாறுதல்களை இவர் செய்ய முயன்றார். இவற்றுள் குறிப்பிடத்தக்கது 1776-ல் இவர் பிரபுக்களின் சிறப்புரிமைகளை

ஒழிக்க மேற்கொண்ட நடவடிக்கைகள் ஆகும். ஆனால் இறுதியில் இவருடைய முயற்சிகள் யாவும் தோல்வியுற்றன. தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதில் கண்ணுங்கருத்துமாக இருந்த செல்வந்தர்களும் பிரபுக்களும் ஒன்று சேர்ந்து தர்கோவின் திட்டங்களை முறியடித்தனர். அது மட்டுமின்றி பல சொந்தக் காரணங்களுக்காக தர்கோவை வெறுத்த அரசியாரின் உதவி கொண்டு அவரைப் பதவியினின்று விலக்கச் சதி செய்தனர். தன் மனைவி, பிரபுக்கள் ஆகியோரின் விருப்பத்திற்கு மாறாகச் செயல் படத் துணிவற்ற பதினாறும் லூயி 1776-ல் அவரை அமைச்சர் பதவியிலிருந்து விலக்கினார். புரட்சியின்றி ஃபிரான்சை சீர்திருத்த வேண்டுமென்று விரும்பிய தர்கோவின் வீழ்ச்சி புரட்சியைத் தவிர்க்க முடியாத ஒன்றாக்கி விட்டது. தர்கோவிற்குப் பிறகு நெக்கர் (Necker) என்ற ஜெனீவா நகரத்தில் பாங்குத் தொழிலில் ஈடுபட்டிருந்த ஒரு நிதித்துறை வல்லுநர் நிதியமைச்சராக நியமிக் கப்பட்டார். முதலில் அவர் சிக்கனத்தைக் கடைபிடித்து நிதி நிலைமையைச் சமாளிக்க முயன்றார்.

அரசவையின் செலவினங்களையும், அரச குடும்பத்தின் ஊதா ரித்தனமான செலவுகளையும் குறைத்தார். தர்கோவைப் போலவே அவரும் ஃபிரான்சின் நிதிப்பிரச்சினை தீர்க்கப்பட வேண்டுமானால் சிறப்புரிமைகளைப் பெற்ற சமய குருமார்களும் பிரபுக்களும் வரி விதிக்கப்பட வேண்டும் என்பதை உணர்ந்தார். 1781-ல் அவர் வெளியிட்ட நாட்டின் நிதி நிலைமை பற்றிய ஒரு அறிக்கையில் அரச குடும்பம், அரசவைகளுக்காகச் செய்யப்படும் செலவுகள் பற்றி முதல் முறையாக பல விவரங்களை வெளியிட்டார். அரச னுடைய செலவினங்கள் பற்றிய இரகசியங்கள் அம்பலப்படுத்தப் படுவதை அரசரும் பிரபுக்களும் விரும்பவில்லை. எனவே 1781-ல் அவர் தம் பதவி விலக நேரிட்டது. நெக்கரைத் தொடர்ந்து கலோன் (Calonne) என்பவர் 1781–ல் நிதி அமைச்சராகப் பதவி யேற்றார். தொடக்கத்தில் அளவுக்கு மீறி செலவினங்களைப் பெருக்கியதால் அரசாங்கம் மேலும் மேலும் கடன் வாங்க நேரிட் டது. அரசாங்கத்தின் நிதிப்பற்றாக் குறை அதிகரித்தது. நிதி நிலைமையில் உருவாகிக் கொண்டிருந்த நெருக்கடியை உணர்ந்த கலோன் 1786–ல் அரசனிடம் நிலைமையை விளக்கி மேற்கொண்டு அரசாங்கம் எடுக்க வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக் கூறினார். அரசனுடைய நிலங்கள் உள்பட எல்லா நிலங்கள் மீதும் வரிவிதிக்கப்பட வேண்டும் எந்தப் பிரிவினருக்கும் வரி விலக்கு அளிக்கக் கூடாது. பொதுப் பணிகளில் கட்டாயப் பணி முறை (Corvee) ஒழிக்கப்பட வேண்டும். நிலவரி விகிதமும் உடன டியாகக் குறைக்கப்பட வேண்டும் போன்றவை இவரால் பரிந்து

ரைக்கப்பட்ட சீர்திருத்தங்களாகும். இவற்றை அங்கீகரிக்க முக்கியஸ்தர்கள் அவை ஒன்றைக் கூட்டுமாறு கலோன் அரசரை வேண்டினர். 1787-ல் கூடிய நாட்டின் முக்கியஸ்தர்கள் கொண்ட அவை கலோனின் பரிந்துரைகள் தங்கள் சிறப்புரிமைகளைப் பாதிக்கும் என்று அஞ்சி, அமைச்சரைப் பதவியிலிருந்து விலக்கும்படி அரசரை வற்புறுத்தியது. 1787-ல் கலோன் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பிரையன் (Brienne) நிதி அமைச்சராகப் பதவி ஏற்று, முக்கியஸ்தர்கள் அவையின் மனப்போக்கைப் புரிந்து கொண்டு, ஃபிரான்சின் சிக்கலான நிதிப் பிரச்சினையைத் தீர்க்க பாராளுமன்றம்தான் கூட்டப்பட வேண்டும் என்று கருதினர். மேலும் தனக்கு முன் பதவி வகித்த நிதி அமைச்சர்களின் நிதிச் சீர்திருத்தங்களைச் செயல்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டார். வரிக் கொள்கையில் மாற்றம் எதையும் விரும்பாத, சிறப்புரிமைகளுக்கு ஒரு அரணாக விளங்கிய பாரிஸ் நகர பார்லிமெண்டு மன்றம் (Parlement of Paris) பிரையனின் சீர்திருத்தங்களை ஏற்க மறுத்தது வரி விதிப்புக் கொள்கையில் எவ்வித மாற்றமும் செய்ய நாட்டின் பாராளுமன்றத்திற்குத்தான் (States General) அதிகாரம் உள்ளது. எனவே பாராளுமன்றம் உடனடியாகக் கூட்டப்பட வேண்டும் என்று பாரிஸ் பார்லிமெண்டு வற்புறுத்தியது. பதினாறும் லூயி முதலில் இந்த வேண்டுகோளுக்கு இணங்கவில்லையாயினும் இறுதியில் பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது 1789ஆம் ஆண்டு மே மாதம் முதல்தேதி (States General) என்னும் பாராளுமன்றம் கூடியது. பிரையன் பதவியிலிருந்து விலக்கப்பட்டு மீண்டும் நெக்கர் நிதி அமைச்சராக நியமிக்கப் பட்டார். 1789-ல் ஃபிரான்சில் பாராளுமன்றம் கூட்டப்பட்ட இந்த நிகழ்ச்சி புரட்சி தோன்றுவதற்கு அறிகுறி என்று கருதலாம்.

புரட்சி தோன்றுவதற்கு இயற்கையும் உறுதுணையாக இருந்தது. 1788ஆம் ஆண்டில் பருவம் பொய்த்ததில் விளைச்சல் குறைந்து, ஒரு பயங்கர உணவு நெருக்கடி உருவாகிக் கொண்டிருந்தது. குளிரினாலும் பசியினாலும் மக்கள் அவதிப்பட்டனர். இவ்வாறு புரட்சி தோன்றுவதற்குச் சாதகமான ஒரு சூழ்நிலையை இயற்கை உருவாக்கிக் கொடுத்தது.

அமெரிக்க சுதந்திரப் போர்

1776-ல் அமெரிக்கக் குடியேற்றங்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போர்க்கொடியை உயர்த்தின. அமெரிக்காவின் இந்த விடுதலைப் போரில் ஃபிரான்ஸ் அமெரிக்கக் குடியேற்றங்களுக்கு உதவி செய்தது. லபாயத் (Lafayette) என்பவரின் தலைமையில் ஒரு பிரெஞ்சுப் படை இப்போரில் பங்கேற்றது. இறுதி

யில் அமெரிக்க குடியேற்றங்கள் போரில் வெற்றிபெற்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு ஒரு முடிவு ஏற்பட்டது. இப்போரில் பங்கு கொண்டு நாடு திரும்பிய லபாயத்தும், அவரது வீரர்களும், அமெரிக்காவின் வீரப் போராட்டத்தைப் பற்றி பிரெஞ்சு மக்களுக்கு எடுத்துரைத்தனர். அதேபோல தங்கள் அரசரின் எதேச்சாதிகாரத்தை எதிர்த்துத் தாங்களும் போர் புரிய வேண்டும். அதை ஒழிக்க வேண்டும் என்ற ஆர்வம் மக்கள் மனதில் தோன்றியது. இது புரட்சிக்கு வழிவகுத்தது.

புரட்சிக்கு பூர்போன் மன்னர்களின் பொறுப்பு

ஃபிரான்சில் இயங்கிவந்த வரம்புகடந்த முடியாட்சி முறை பதினான்காம் லூயி காலத்தில் முழுமைபெற்று, ஃபிரான்சின் புகழ் உச்ச நிலையை அடைந்தது. ஆனால் அம் மன்னருடைய ஆட்சியின் இறுதி ஆண்டுகள் ஃபிரான்சின் வீழ்ச்சியின் தொடக்கம் என்று கூறலாம். ஃபிரான்சைப் பல போர்களில் ஆழ்த்தியதின் மூலம் ஃபிரான்சின் நிதி நெருக்கடிக்கு பதினான்காம் லூயி பெரும் அளவு காரணமாக இருந்தார். ஃபிரான்சின் நிலையைச் சீர்படுத்தும் பணி அவருடைய வாரிசான பதினைந்தாம் லூயியிடம் ஒப்படைக்கப்பட்டது. இப்பெரும் பொறுப்பை ஏற்றுக்கொள்ள பதினைந்தாம் லூயிக்கு எள்ளளவும் தகுதியில்லை. சிற்றின்பப்பிரியரான பதினைந்தாம் லூயி அரச காரியங்களில் அக்கரை காட்டவில்லை. தன் மனைவி, பாம்படூர் அம்மையாரின் (Madame Pompadour) செல்வாக்கிற்குட்பட்டு அயல் நாட்டுக்கொள்கையில் பல தவறுகளைச்செய்து ஃபிரான்சிற்கு இழுக்கைத் தேடித்தந்தார். ஐரோப்பிய வரலாற்றில் பதினெட்டாம் நூற்றாண்டு பகுத்தறிவுக் காலமாகவும், மக்கள் நலன் பேணும் வல்லரசர்கள் காலமாகவும் கருதப்படுகிறது. மாமன்னர் ஃபிரெடரிக் போன்ற வல்லரசர்கள் முற்போக்குக் கருத்துக்களால் ஈர்க்கப்பட்டு தங்கள் நாட்டில் பல முற்போக்குச் சீர்திருத்தங்களை செயல்படுத்தி வந்த காலம் அது. ஆனால் இம்முற்போக்குக் கொள்கைகள் பதினைந்தாம் லூயியின் எண்ணங்களையோ, செயல்களையோ எவ்வகையிலும் பாதிக்கவில்லை. பல துறைகளிலும் சீர்திருத்தம் மிகவும் தேவைப்பட்ட ஃபிரான்சில் சீர்திருத்த முயற்சிகள் எவையும் மேற்கொள்ளப்படவில்லை. பழைய எதேச்சாதிகார ஆட்சியும், சமூக பொருளாதார ஏற்றதாழ்வுகளும், பிரபுக்களின் சிறப்புரிமைகளும் எவ்வித மாறுதலுமின்றி தொடர்ந்து ஃபிரான்சில் காணப்பட்டன. வரம்பு கடந்த முடியாட்சி முறையை விரும்பிய பதினைந்தாம் லூயி பிரதிநிதித்துவ சபைகளை நசுக்குவதில் ஆர்வம்காட்டினார். எனவே மக்கள் தங்கள் குறைகளை சட்ட வரம்பிற்குட்பட்ட முறையில் எடுத்துக்கூறுவதற்கான வாய்ப்புக்கள் இல்லாமல் போயிற்று.

ஆனால் திறமையற்றதாலும், கடுமையாக உழைக்கும் இயல்பு இல்லாததாலும் ஆட்சிப் பொறுப்பு முழுவதும் பிரபுக்களிடம் ஒப்படைக்கப்பட்டது. பெயரளவில் பதினைந்தாம் லூயி அரசராக இருப்பினும், நடைமுறையில் அதிகாரம் முழுவதும் பிரபுக்கள் கையில் சிக்கியது. எனவே இவ்வாட்சி உயர்குடி மக்களின் நல னுக்காக, உயர்குடி மக்களால் நடத்தப்பட்ட ஆட்சியாக விளங்கி யது. சிந்தனையாளர்களின் கருத்துக்களால் பெரிதும் பாதிக்கப் பட்ட ஃபிரான்சின் நடுத்தர வகுப்பினர் பதினைந்தாம் லூயியின் ஆட்சிமுறையை வெறுக்கத் தொடங்கினர். உடனடியாக சீர் திருத்தங்கள் கோரினர். நாட்டைச் சீர்படுத்துவதற்கான நட வடிக்கைகளை மேற்கொள்ளுவதை விடுத்து பதினைந்தாம் லூயி, அடக்குமுறை மூலம் எதிர்ப்பை ஒடுக்கிவிடலாம் என்று மனப்பால் குடித்தார். வரப்போகும் ஆபத்தை உணர்ந்திருந்த போதிலும் ('எனக்குப் பிறகு பேரழிவு', 'After me the Deluge' என்று அவர் அடிக்கடி கூறுவார்) அந்த ஆபத்தைத் தவிர்க்க அவர் எந்த முயற்சியும் மேற்கொள்ளவில்லை. மேலும் ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர், ஏழாண்டுப்போர் ஆகிய போர்களில் தோல்விகண்டு, இந்திய அமெரிக்கக் குடியேற்றங்களை ஃபிரான்ஸ் இழந்தது மட்டு மின்றி, இப்போர்கள் ஃபிரான்சிற்கு பெருத்த பொருள் நஷ்டத்தை யும் ஏற்படுத்தி, நிதிநெருக்கடி உருவாவதற்குக் காரணமாக இருந்தன. பதினாறும் லூயி அரியணை ஏறியபொழுது மோசமாக இருந்த ஃபிரான்சின் நிதிநிலை அவர் ஆட்சியில் மேலும் மோசமாகி யது. அவரும் ஆடம்பரச் செலவுகள் மூலமும், ஃபிரான்சை அமெரிக்க விடுதலைப்போரில் ஆழ்த்தியதின் மூலமும் நிதிநெருக்கடி மேலும் மோசமாவதற்குக் காரணமாக இருந்தார். இவர் ஆட்சி யில் கருவூலம் காலியாகியது. கடன்சுமை அதிகரித்தது. சலன புத்தி படைத்த இவர், நாட்டின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான மனத்துணிவு இல்லாதவர். பிரபுக்களின் சிறப்புரிமைகளைப் பறித் தல், ஏற்றத்தாழ்வுகளை அகற்றல் போன்ற நாட்டின் தலையாய பிரச்சினைகளுக்கு உடனடியான தீர்வைக் காணத்தவறியதால் புரட்சி தோன்ற வாய்ப்பு ஏற்பட்டது. தர்கோ, கலோன், பிரையின் போன்ற நிதியமைச்சர்களைப் பதவியிலிருந்து விலக்கிய தின் மூலம் உண்மையிலேயே, பதினாறும் லூயி நாட்டின் பிரச்சினைகள் சுமூகமாகத் தீர்க்கப்படுவதற்கு ஒரு முட்டுக்கட்டை யாக இருந்தார். 1789-ல் பிரெஞ்சுப் பாராளுமன்றம் (States-General) கூட்டப்பட்ட பிறகும் கூட புரட்சியைத் தவிர்ப்பதற் கான வாய்ப்புகள் இருந்தன. ஏனெனில் ஸ்டேட்ஸ் ஜெனரல் சிறப்புரிமைகளையும் நாட்டில் மலிந்துகிடந்த சீர்கேடுகளையும் அகற்றவேண்டுமென்று விரும்பியதேயன்றி, முடியாட்சியை ஒழிக்க வேண்டும் என்பது அதனுடைய நோக்கமல்ல; ஸ்டேட்ஸ் ஜெனர

லுடன் ஒத்துழைத்து நாட்டின் பிரச்சினைகளுக்கு பதினாறும் லூயி ஒரு தீர்வு காணுவார் என்று மக்கள் எதிர்பார்த்தனர். ஆனால் அதற்குமாறாக பதினாறும் லூயி பாராளுமன்றத்தையே கலைக்க முயன்றார். மக்கள் அரசன்மீது நம்பிக்கை இழந்தனர். புரட்சி தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது.

## புரட்சியின் போக்கு 1789-1799

முதல்கட்டம் (1789-1799)

1789 மே மாதம் 5-ம் தேதி ஃபிரான்சின் பாராளுமன்றம் ஏறத்தாழ 175 ஆண்டு இடைவெளிக்குப் பிறகு கூட்டப்பட்டது முதல், அக்டோபர் 7-ம் தேதி அரசன் வர்சாய் நகரிலிருந்து பாரிசுக்குக் கட்டாயமாக வரவழைக்கப்பட்டது வரை நடந்த நிகழ்ச்சிகளை புரட்சியின் முதல் கட்டம் என்று கொள்ளலாம். 308 சமய குருமார்களின் பிரதிநிதிகளையும் 285 பிரபுக்கள் பிரதி நிதிகளையும் 621 பாமர மக்களின் பிரதிநிதிகளையும் ஆகமொத்தம் 1214 உறுப்பினர்களைக்கொண்ட ஸ்டேட்ஸ் ஜெனரல் கூடியவுடன் ஒரு சிக்கல் எழுந்தது. மூன்றாவது பிரிவைச் சேர்ந்த பாமர மக்கள் பிரதிநிதிகள், மூன்று பிரிவினரும் சேர்ந்து அமர்ந்துதான் வாக்கெடுப்பு நடத்தவேண்டுமென்று வாதிட்டனர். இவர்கள் பெரும்பான்மை பலம் பெற்றிருந்ததால் இம் முறையில் வாக் கெடுப்பு நடத்துதல் தங்களுக்குச் சாதகமாக இருக்குமென்று எண்ணினார். இதற்குமாறாக முதலிரண்டு பிரிவுகளைச் சேர்ந்த சமய குருமார்களும், பிரபுக்களும் தனித்தனியாக பிரிவு வாரியாக (Accordings to orders or Estates) வாக்கெடுப்பு எடுக்கவேண்டும் என்று கோரினர். இதே முறைதான் ஃபிரான்சில் இதுவரை பின் பற்றப்பட்டு வந்தது. இந்த வாக்கெடுப்பு முறை தங்களுக்குச் சாதகமாக இருக்குமென்று முதலிரண்டு பிரிவினரும் எண்ணினர். பிரபுக்களுடன் சேர்ந்துகொண்டு, அரசரும், மூன்று பிரிவினர் களிடம் தங்கள் தங்கள் மன்றத்திற்குச் சென்று மன்ற நடவடிக்கை களை கவனிக்குமாறு ஆணையிட்டார். முதலிரண்டு பிரிவினர் இந்த ஆணைக்குக் கீழ்படிந்து தங்கள் மன்றங்களுக்குச் சென்றனர். ஆனால் மூன்றும் பிரிவினர் மட்டும் (Third Estate) மற்ற இரு பிரி வினரும் தங்களுடன் வந்து அமர்ந்து மன்ற நடவடிக்கைகளை கவனிக்கும் வரையில் தாங்கள் கலைந்து செல்லப்போவதில்லை என்று உறுதிபூண்டு, தொடர்ந்து கூடிக்கொண்டேயிருந்தனர். ஐந்து வாரங்கள் கழித்து பொதுமக்கள் மன்றம் சில குருமார் களையும், பிரபுக்களையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டு தன்னை தேசிய மன்றம் (National Assembly) என்று அறிவித்துக்கொண்

டது. (June 17, 1789) மன்னர் இதைக்கலைக்கும் நோக்கத்துடன் அவர்கள் கூடிய மண்டபத்தைப் பூட்டி போர் வீரர்களை காவலுக்கு வைத்தார். இதைக் கண்ட பொதுமக்கள் பிரதிநிதிகள் அருகாமையிலிருந்த டென்னிஸ் மைதானத்தில் கூடி, புதியதொரு அரசியலமைப்பை இயற்றி முடிக்கும்வரையில் கலைந்துபோவதில்லை என்று சபதம் செய்து கொண்டன, (Tennis Court Oath).

இதை அடுத்து பாராளுமன்றக் கூட்டம் ஒன்றை மன்னர் ஏற்பாடு செய்தார். மூன்று எஸ்டேட்டுகளின் உறுப்பினர்களை யும் அழைத்து பழைய வழக்கப்படி தனித்தனி மன்றங்களாகக்கூடி வகுப்பு வாரியாக (According to Estates or orders) வாக்கெடுப்பில் கலந்து கொள்ளும்படி ஆணையிட்டார். முதலிரண்டு பிரிவினர் இந்த ஆணைக்குக் கீழ்ப்படிந்து மண்டபத்தைவிட்டு வெளியேறினர். ஆனால் பொதுமக்கள் பிரதிநிதிகள் வெளியே செல்ல மறுத்தனர். அவர்களுள் ஒருவரான மிராபோ என்பவர் 'மக்களின் விருப்பத் திற்கிணங்க அவர்கள் அங்கு இருந்ததால், துப்பாக்கி முனையைத் தவிர வேறு எந்த சக்தியும் அவர்களை அங்கிருந்து வெளியேற்ற முடியாது" என்று கூறினர். அம் மன்ற உறுப்பினர்களின் மன நிலையை உணர்ந்த மன்னர் முதலிரண்டு எஸ்டேட்டுகளையும், பொது மக்கள் பிரதிநிதிகளுடன் தேசிய மன்றத்தில் வந்து உட் காரும்படி ஆணையிட்டார். சலன புத்தி படைத்த அரசரின் மனம் உடனே மாறிவிட்டது. பொதுமக்கள் மன்றத்தின் எதிர்ப்பைச் சமாளிக்க பலாத்கார முறைகளை மேற்கொண்டார். பாரீஸ் நகரம் எப்பொழுதுமே புரட்சிக் கருத்துக்களுக்குப் பிறப்பிடமாக விளங்கிவந்தது. பாரீஸ் மக்களை அச்சுறுத்திப் பணியவைக்கும் நோக்கத்துடன் ஒரு பெரும் படையை அரசர் அங்கு அனுப்பினர். பொது மக்களால் விரும்பப்பட்ட பொது மக்கள் நலனுக்காகப் பல சீரிய திட்டங்களை வகுத்துக் கொடுத்த நெக்கர் என்னும் அமைச்சரை அரசர் பதவியிலிருந்து விலக்கினர். மன்னருடைய இந்தச் செயல் கண்ட மக்கள் மன்னனின் நோக்கங்களை சந்தே கித்தனர். பட்டினியால் வாடிய குடியானவர்கள், ஏழைத் தொழிலாளிகள், சினங்கொண்ட நடுத்தர வகுப்பினர், ஆகி யோரைக்கொண்ட பாரீஸ் நகர மக்கள் பாரீஸ் நகரத்திலிருந்த பாஸ்டில் (Bastille) கோட்டையை ஜூலை மாதம் 14-ம் தேதி தாக்கிக் கைப்பற்றினர். பாஸ்டில் வீழ்ச்சி புரட்சி இயக்கத்தின் ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். பிரெஞ்சு மன்னரின் எதேச்சாதிகார ஆட்சியின் ஒரு சின்னமாக விளங்கிய இக் கோட்டை வீழ்ச்சி அடைந்தது, எதேச்சதிகார ஆட்சியின் வீழ்ச்சிக்கே ஒரு அறிகுறி யாக விளங்கியது என்பதுதான் இதன் முக்கியத்துவம். இதைத் தொடர்ந்து பாரீஸ் நகரத்தில் பழைய அரசாங்க அமைப்புகள்

ஒழிக்கப்பட்டு, நிர்வாகப்பொறுப்பு (Paris Commune) என்னும் ஒரு அமைப்பிடம் ஒப்படைக்கப்பட்டது. பாரீஸ் நகரம் தனக் கென்று ஒரு தேசியப் படையை (National Guard) அமைத்துக் கொண்டது. இதேபோல ஃபிரான்சின் மற்ற நகரங்களிலும் நிகழ்ந்தன, அரசனுடைய அதிகாரத்தை நாடே ஏற்க மறுத்து விட்டது என்ற உண்மையைத்தான் இந்த நிகழ்ச்சிகள் நமக்கு உணர்த்துகின்றன.

இந் நிலையில் பாரீஸ் நகர மக்கள் உணவுப் பஞ்சம் காரண மாகப் பட்டினியால் வாடிக்கொண்டிருந்தனர். ஆனால் அரசரோ, பிரபுக்களுடன் வெர்சாய் நகரத்தில் அரண்மனையில் விருந்திலும் கேளிக்கைகளிலும் பொழுதைக்கழித்துக் கொண்டிருந்தார். ஆத்திரமுற்ற பெண்கள் படை ஒன்று அக்டோபர் 5.ம் தேதி வெர்சாய் நகருக்குச் சென்று அரசனையும், அரசியையும் பாரீஸ் நகரத்திற்கு அழைத்துவந்து பழைய டியூலரி (Tuileries) மாளிகை யில் இருக்கச் செய்தது. இவ்வாறு மன்னன் பாரீஸ் மக்களின் கைதியானன். நாளுக்கு நாள் கும்பலின் வன்முறைச் செயல்கள் பெருகிக்கொண்டே வந்தன. நிர்வாகம் சீர்குலைந்தது. நாடே கும்பல் ஆதிக்கத்தில் சிக்கித்தவித்தது.

பாரிஸ் இதுபோல ஒரு கொந்தளிப்பில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்த பொழுது அரசியலமைப்பு சபை என்று அழைத்துக் கொண்ட தேசிய மன்றம் சில சீர்திருத்தங்களைச் செய்தது. சமய குருமார்கள், பிரபுக்கள் அனுபவித்து வந்த சிறப்புரிமைகள் ரத்து செய்யப்பட்டன. நில அடிமை முறை ஒழிக்கப்பட்டது. பிரபுக்கள், பாமர மக்கள் என்ற வேறுபாடின்றி எல்லோர் மீதும் வரி விதிக்கட்டது. சமூக ஏற்றத்தாழ்வுகள் யாவும் ஒழிக்கப் பட்டன. பிரபுக்களுக்குச் செலுத்திவந்த படைமானியக் கட்ட ணங்கள் (Fuedal dues) யாவும் ரத்து செய்யப்பட்டன.

இந்த அரசியலமைப்பு மன்றம் நாட்டிற்கு ஒரு புதிய அரசிய லமைப்பை உருவாக்கிக் கொடுத்தது. 'மக்களின் இறைமை' (Sovereignty of the people) 'அதிகாரப் பிரிவினை' ஆகியவற்றின் அடிப்படையில் அமைக்கப்பெற்ற வரம்புக்குட்பட்ட முடியாட்சி முறையை ஏற்றுக்கொள்ளத் தீர்மானித்தது. சட்டமியற்றும் அதிகாரம் ஒரே அவையைக் கொண்ட சட்டசபை ஒன்றிடம் ஒப்படைக்கப்பட்டது. வரிகள் கட்டிய குடிமக்கள் மட்டுமே தேர்தலில் வாக்களிக்கத் தகுதி உடையவர்கள் என்று கூறியது. அரசனுக்கு ஆலோசனை கூற அமைச்சர்கள் நியமிக்கப்பட வேண்டும். ஆனால் அவர்கள் சட்ட சபையின் உறுப்பினர்களாக

இருக்கக்கூடாது என்று அது தீர்மானித்தது. மேலும் இந்த அரசியலமைப்பு சபையின் உறுப்பினர்கள் யாரும் சட்டசபைத் தேர்தலில் போட்டியிடக் கூடாது என்று தடை செய்தது. இந்த புதிய அரசியலமைப்பை உருவாக்கும் பணியில் மிராபோ, லபாயத் போன்ற தலைவர்கள் பெரும் பங்கேற்றனர்.

இந்த அரசியலமைப்புச் சபை, நிர்வாகத்தில் பல முக்கிய மாறுதல்களைச் செய்தது. அரசனால் நியமிக்கப்பட்ட இன்டன் டெண்டுகள், கவர்னர்கள், பார்லிமெண்டுகள் போன்ற அமைப்பு கள் ஒழிக்கப்பட்டு அதிகாரம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட குழுக்களிடம் ஒப்படைக்கப்பட்டது. நிர்வாகம் செம்மையாக நடைபெறும் பொருட்டு நாடு டிபார்ட்மெண்ட்டுகள் (Departments) காண்டன்கள் (Cantons) கம்யூன்கள் (Commune) என்ற பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. நீதிபதிகள்கூட மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திருச்சபையின் அதிகாரங்களையும், சிறப்புரிமைகளையும் பறிக்கும் நடவடிக்கைகள் அடுத்து மேற்கொள்ளப்பட்டன. புதிய திருச்சபைச் சட்டம் (Civil constitution of the clergy) ஒன்று இயற்றப்பட்டது. இதன்படி திருச்சபை அரசின் கட்டுப்பாட்டிற் குட்படுத்தப்பட்டது. அதன் நிலங்கள் பறிமுதல் செய்யப் பட்டன. திருச்சபை குருமார்கள், மக்களால் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். அவர்கள் அரசாங்கத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். அவர்களுடைய சம்பளம் அரசாங்கத்தாரால் கொடுக்கப்படும். எல்லா சமய குருமார்களும் இந்த புதிய ஏற்பாட்டை ஏற்றுக்கொண்டு அதன்படி நடப்பதாக உறுதி மொழி அளிக்கவேண்டும். இந்த ஏற்பாட்டை போப் ஏற்றுக் கொள்ள மறுத்தார். எனவே கத்தோலிக்கத் திருச்சபைக்கும் புரட்சி வாதிகளுக்குமிடையே தீராத பகைமை ஏற்பட்டது.

இந்த மன்றம் ஆற்றிய பணிகளில் முக்கியமானது மனித உரிமை அறிக்கை ஒன்றை (Declaration of the rights of man) தயாரித்து வெளியிட்டதாகும். பிறப்பில் மக்கள் எல்லோரும் சமம் என்ற கருத்தை வலியுறுத்திய இந்த அறிக்கை தனி மனித னின் உரிமைகள் எவை என்பதைக் கூறியது. தனி மனிதனின் உரிமைகள் எவை என்பதைக் கூறியது. தனி மனிதன் சுதந்திரம், சொத்துரிமை, பேச்சுரிமை, சட்டத்திற்குப் புறம்பாக சிறையிடப் படா உரிமை போன்றவற்றை இது வலியுறுத்தியது. புரட்சி வாதிகளின் கொள்கை, குறிக்கோள் என்ன என்பதைத் திட்ட வட்டமாக விளக்கும் வகையில் இது அமைந்திருந்தது. மக்க

ளுடைய உரிமைகளைப் பற்றி அது கூறியதேயன்றி அவர்களின் கடமைகளை அது சுட்டிக் காட்டவில்லை. மேலும் உரிமைகள் பற்றிய அதன் விளக்கங்கள் பொதுப்படையாகவும், தெளிவற்ற முறையிலும் இருந்தன. நடுத்தர வகுப்பினர்களால் இன்றியமை யாததாகக் கருதப்பட்ட உரிமைகள் மட்டுமே அதில் கூறப்பட்டி ருந்தன. அந்த அறிக்கையில் முற்போக்குக் கொள்கைகளோ, சமதர்மக் கொள்கைகளோ இடம்பெறவில்லை. ஆனால் அவ்வறிக் கையில் காணப்பட்ட புரட்சிகரமான கருத்து என்னவெனில் கொடுங்கோல் ஆட்சியை எதிர்க்க மக்களுக்கு உரிமை உண்டு என்ற கருத்தாகும், மேலும் அந்த அறிக்கை ஃபிரான்ஸ் நாட்டிற்கு மட்டுமல்லாமல், மனித சமுதாயத்தின் நலனிற்காகவே வரையப் பட்ட ஒன்றாகும்.

அரசியலமைப்பு மன்றத்தின் பணி 1791-ல் முடிவுற்றது. அதனுல் உருவாக்கப்பெற்ற புதிய அரசியலமைப்பில் பல குறை பாடுகள் காணப்பட்டன. அரசனை நிர்வாகத் துறையின் தலைவ னுக ஆக்கியபோதிலும், அரசனுக்குப் போதுமான அதிகாரங்கள் வழங்கப்படவில்லை. சட்டசபை உறுப்பினர்கள் தாங்கள் அரசனை ஆளவேண்டும் என்று விரும்பினர்களேயன்றி அரசன் மூலமாக நாட்டை ஆளவேண்டுமென்று நினைக்கவில்லை. அதிகாரப் பிரிவினைக் கொள்கையின் பெயரால் அமைச்சர்களுக்கு சட்டமன் றத்தில் இடமளிக்காதது ஒரு பெரும் தவருகும். தேர்தல் நாளில் வோட்டுரிமை சொத்து பெற்றிருந்த ஒரு சிலருக்கே அளிக்கப்பட்டி ருந்ததால், மனித உரிமை அறிக்கையில் கூறப்பட்டிருந்த சமத்து வக்கொள்கை காற்றில் பறக்கவிடப்பட்டது. இரண்டு மன்றங்கள் கொண்ட சட்டசபை ஒன்றை அமைக்காதது இதன் மற்ருெரு குறைபாடாகும். இந்த மன்றம் சீர்திருத்தி அமைத்த ஸ்தல ஆட்சிமுறை மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்கு ஊறு விளைவிக்கும் வகையில் அமைந்திருந்தது. நீதிபதிகள் தேர்ந் தெடுக்கப்பட்டதால் அவர்கள் தயவு தாட்சண்யமின்றி தங்கள் பணிகளைச் செய்ய முடியவில்லை. திருச்சபை பற்றிய ஏற்பாடு போப், கத்தோலிக்கச் சமயத்தினர் ஆகியவர்களின் ஆதரவை இழக்கச் செய்தது. எனவே அரசியலமைப்புச் சபை பழைய ஏற்பாட்டை அழிக்கும் பணியில் வெற்றி பெற்றதேயன்றி, அதற்குப் பதிலாக ஒரு புதிய அமைப்பை உருவாக்கும் பணியில் அது தோல்வியடைந்தது.

வரம்புக்குட்பட்ட முடியாட்சி முறையை உருவாக்கிய இந்த அரசியலமைப்பை அரசர் அறவே வெறுத்தார். எனவே 1791 ஜூன் மாதம் தன் மனைவி மக்களுடன் பாரிஸிலிருந்து

தப்பித்து ஓட முயற்சி செய்தார். ஆனால் ஃபிரான்சின் எல்லையைத் தாண்டிச் செல்வதற்கு முன்பே வாரன்னெஸ் (Varennes) என்ற இடத்தில் அவர் மக்களால் நிறுத்தப்பட்டு மீண்டும் பாரிஸ் நகருக்கு அழைத்துவரப்பட்டார். இதனால் அரசனுடைய செல்வாக்கு அடியோடு குலைந்தது. அரசரைப் பற்றி மக்கள் மனதில் ஐயப்பாடுகள் தோன்ற ஆரம்பித்தன. எனவே அவர் பதவியிலிருந்து விலக்கி வைக்கப்பட்டார். ரோபஸ்பியர், டான்டன் போன்ற தீவிரவாதிகள் தோன்றி ஃபிரான்சில் முடியாட்சியை ஒழித்து குடியாட்சியை நிறுவ வேண்டும் என்று விரும்பினர். ஆனால் முடியாட்சியை ஆதரித்தவர்கள் இன்னும் பெரும்பான்மையினராக இருந்ததால் தேசிய மன்றம் பதினாறாம் லூயியை மறுபடியும் மன்னராக ஏற்றுக்கொண்டது.

இரண்டாவது கட்டம் 1791-92) : 1791-ல் ஒரு புதிய அரசியலமைப்பை உருவாக்கும் பணி முடிந்தவுடன் அரசியலமைப்பு மன்றம் கலைந்தது. புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றம் அக்டோபர் முதல் நாள் கூடியது. அரசியலமைப்பு மன்றத்தின் உறுப்பினர் எவரும் சட்டமன்றத் தேர்தலுக்கு நிற்கக் கூடாது என்று அம்மன்றம் தீர்மானித்திருந்ததால் புதிய சட்ட மன்றத்தில் அரசியல் அனுபவமில்லாத பல இளைஞர்கள் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர். 745 உறுப்பினர்களைக் கொண்ட இம்மன்றத்தில் 1791-ம் ஆண்டு அரசியலமைப்பை ஆதரித்த வலதுசாரியினர் ஜிராண்டிஸ்டுகள் (Girondists) என்ற இடதுசாரி குடியரசுக் கட்சியினர், ஜாகோபின்கள் (Jacobins) என்ற தீவிர இடதுசாரிக் குடியரசுக் கட்சியினர், மிதவாதிகள் ஆகிய நான்கு கட்சியினர் இருந்தனர். லூயியையும், முடியாட்சி முறையையும் ஒழித்துவிடவேண்டுமென்று திட்டமிட்ட குடியரசுக் கட்சியினர் மற்றவர்களை அச்சுறுத்தியும், மிரட்டியும் தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டனர்.

புதிய சட்ட மன்றம் பல சிக்கலான பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. புரட்சியின் தொடக்கத்தில் நாட்டை விட்டு ஓடிச் சென்ற பிரபுக்கள் (Emigres) பலர் ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற நாடுகளின் உதவியைப் பெற்று புரட்சிக்கெதிராக சதி செய்தனர். இந்த பிரபுக்கள் பிரச்சினையைத் தீர்க்க சட்டமன்றம் 36 சட்டத்தை நிறைவேற்றியது. 1792 ஜனவரி முதல் தேதிக்குள் அவர்கள் நாடு திரும்ப வேண்டும். இல்லையேல் அவர்கள் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டு, அவர்கள் தூக்கிலிடப்படுவார்கள் என்று அக்கூட்டம் கூறியது. அடுத்த புதிய திருச்

சபைச் சட்டத்தை ஏற்க மறுக்கும் சமய குருமார்களும் இதுபோல தண்டிக்கப்படுவார்கள் என்று மற்றொரு சட்டம் நிறைவேற்றப் பட்டது. ஆனால் இவ்விரண்டு சட்டங்களுக்கும் தன் ஒப்புதலைக் கொடுக்க மன்னர் மறுத்துவிட்டார். ஓடிச்சென்ற பிரபுக்களின் தலைவராக இருந்த லூயியின் தம்பி ஆர்டாய் பிரபுவும் (Count of Artois), அரசி மேரி அண்ட்வானெட்டின் (Marie Antoinette) அண்ணன் ஆஸ்திரியப் பேரரசன் இரண்டாம் லியோ பால்டும் புரட்சியையொடுக்கி, ஃபிரான்சில் மீண்டும் எதேச்சாதிகார முடியாட்சியை நிறுவும் நோக்கத்துடன் ஒரு படை திரட்டினர். இவர்களுக்கும் லூயி மன்னருக்கும் இரகசியக் கடிதத் தொடர்பு இருந்தது. சட்ட மன்றத்துடன் ஒத்துழைக்காமல் புரட்சிக்கு எதிராக செயல்பட்டுக் கொண்டிருந்த லூயியின்மீது மக்களுக்கு எழுந்த சந்தேகம் இதன்மூலம் மேலும் வலுப்பட்டது. ஆத்திரங் கொண்ட பாரிஸ் மக்கள் டியூலரி அரண்மனையைத் தாக்கி அரசனையும் அரசியையும் மரியாதையற்ற முறையில் நடத்தி அவமானப் படுத்தினர்.

அந்நியத் தலையீடு : அரசி மேரி அண்ட்வானெட்டின் வேண்டுகோளுக்கிணங்க ஆஸ்திரியப் பேரரசர் இரண்டாம் லியோபால்டும் பிரஷ்ய மன்னர் இரண்டாம் ஃபிரெடரிக் வில்லியமும் 1791, ஆகஸ்ட் மாதத்தில் பில்னிட்ஸ் பிரகடனம் (Declaration of Pilnitz) என்ற ஒரு அறிக்கையை வெளியிட்டனர். அரசனும் அரசியும் மரியாதையாக நடத்தப்படாவிட்டால் ஃபிரான்ஸ்மீது தாங்கள் படையெடுக்க நேரிடும் என்று அந்த அறிக்கை எச்சரிக்கை விடுத்தது. 1792 ஏப்ரல் மாதத்தில் இவ்விரு நாடுகளுக்கும் ஃபிரான்ஸ்மீது போர் தொடுத்தன. பிரன்ஸ்விக் பிரபு தலைமையில் இவ்விரு நாட்டுப் படைகள் ஃபிரான்சில் நுழைந்தன. சட்ட மன்றம் இச்சவாலை ஏற்கத் தயாராக இருந்தது. சட்ட மன்றத்தில் குடியரசுக் கட்சியினர் இப்போரில் ஈடுபட ஆர்வம் காட்டினர். உடனே சட்டமன்றம் ஆஸ்திரியாமீது போர்தொடுக்க ஒரு ஆணை பிறப்பித்தது. இவ்வாறு இதுவரை அமைதியாக நடந்து கொண்டிருந்த புரட்சியில் வன்முறை புகுத்தப்பட்டது. தொடர்ந்து இருபத்திமூன்று ஆண்டுகள் நடந்த பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள் என்று ஐரோப்பிய வரலாற்றில் அழைக்கப்படும் போர்களின் தொடக்கம்தான் இந்தப் போர். தொடக்கத்தில் போர் ஃபிரான்சிற்கு பாதகமாக அமைந்தது. பிரெஞ்சுப் படைகளின் தோல்விக்கு அரசனும், அரசியும் நாட்டிலேயே இருந்த அந்நியர்களின் கையாட்களும்தான் காரணம் என்றும் அவர்களை முதலில் ஒழிக்க வேண்டுமென்றும் தீவிரவாதிகளின் தலைவர் டான்டன் கூறினர். இதைத்தொடர்ந்து பாரிஸ் நகரமக்கள் அரசனின் அரண்மனை

யைத் தாக்கி, அரசனைச் சிறைப்படுத்தி அவரைப் பதவியிலிருந்து விலக்கிவைத்தனர். புரட்சியைத் தொடங்கிய நடுத்தர மக்களின் செல்வாக்கு மறைந்து தீவிரவாதிகள் கையில் புரட்சியின் தலைமை சிக்கியது. பாரிஸ் நகரத்தில் நடுத்தர மக்களின் தலைமையில் இயங்கிக்கொண்டிருந்த 'கம்யூன்' (Commune) என்னும் அமைப்பு கலைக்கப்பட்டு புரட்சிக் கம்யூன் (Revolutionary Commune) என்ற ஒரு புது அமைப்பு தீவிரவாதிகளாக ஜாகோபின்களின் தலைமையில் நிறுவப்பட்டது. பாரிஸ் நகரத்தில் சட்டம், ஒழுங்கு, அமைதி எல்லாம் மறைந்து வன்முறையும் குழப்பமும் மேலோங்குவதற்குக் காரணமாக இருந்தது இந்த புதிய அமைப்புதான் நாட்டின் சட்டமன்றத்தில் ஜிராண்டிஸ்டுகள் ஆதிக்கமும் பாரிஸ் நகர கம்யூனில் ஜாகோபின்களின் ஆதிக்கமும் மேலோங்கியிருந்தது. நாட்டின் சட்டமன்றம் பாரிஸ் நகர கம்யூனுக்கு அடங்கி நடக்க வேண்டிய ஒரு நிலை உருவாகியது. கம்யூனில் செல்வாக்கு பெற்றிருந்த ஜாகோபின்கள் தங்களால் துரோகிகள் என்று கருதப்பட்ட அனைவரையும் கண்டுபிடித்துத் தண்டிக்கும் பணியை மேற்கொண்டு, அரசனின் ஆதரவாளர்கள் என்று சந்தேகிக்கப்பட்ட, புரட்சியின் விரோதிகள் என்று கருதப்பட்ட ஆயிரக்கணக்கான மக்களைக் கொன்றுகுவித்தனர். இந்த வெறிச் செயல்தான் 'செப்டம்பர் படுகொலை' என்று குறிப்பிடப்படுகிறது. (September Massacres). ஜிராண்டிஸ்டுகள் இதுபோன்ற அக்கிரமச் செயல்களை வெறுத்தனர். எனவே இந்நிகழ்ச்சி ஜிராண்டிஸ்டுகளுக்கும் ஜாகோபின்களுக்குமிடையே இருந்த வேற்றுமை, பகை உணர்ச்சியை மேலும் அதிகப்படுத்தியது. துரோகிகள் என்று கருதப்பட்டவர்கள் இவ்வாறு ஒடுக்கப்பட்ட பிறகு, புதிதாக நிறுவப்பட்ட புரட்சிப் படை ஒன்று அந்நியர்களை எதிர்க்கப் புறப்பட்டது. செப்டம்பர் பத்தாம் நாள் இப்படை ஃபிரான்சின் வட கிழக்கில் வால்மி (Valmy) என்ற இடத்தில் நடந்த போரில் ஃபிரான்ஸ்விக் பிரபுவின் படைகளின் மீது ஒரு மாபெரும் வெற்றியைப் பெற்றது. அந்நியப் படைகள் ஃபிரான்சிலிருந்து விரட்டப்பட்டன.

1791-ல் இயற்றப்பட்ட அரசியலமைப்பு பயனற்றது என்பதையும், அதனால் நாட்டின் பல்வேறு சிக்கலான பிரச்சினைகளைத் தீர்க்க முடியவில்லை என்பதையும் மேற்கூறிய நிகழ்ச்சிகள் தெளிவாகப் புலப்படுத்தின. எனவே ஒரு புதிய அரசியலமைப்பு உடனடியாகத்தேவை என்பதை உணர்ந்த புரட்சிக்காரர்கள் அதை உருவாக்குவதற்கு ஒரு தேசிய கன்வென்ஷன் (National Convention) கூட்டப்படவேண்டுமென்று முடிவுசெய்தனர்.

மூன்றாவது கட்டம் 1792–1795

1792, செப்டம்பர் 20-ம் நாள் கூடிய இந்த கன்வென்ஷனில் தீவிரவாதிகள் பெரும்பான்மை பலம்பெற்றிருந்தனர். ஃபிரான்சை அந்நியர்கள் படையெடுப்பிலிருந்து காப்பாற்றுவது, உள் நாட்டுக் குழப்பங்களுக்கு ஒரு முடிவுகட்டி நாட்டிற்கு ஒரு புதிய அரசிய லமைப்பை ஏற்படுத்துவது, அரசனின் தலைவிதியை நிர்ணயம் செய்வது ஆகியவை இக் கன்வென்ஷன் உடனடியாக கவனிக்க வேண்டிய பணிகளாகும். இச் சபையில் மூன்று கட்சியினர் இருந்தனர். ஜிராண்டிஸ்கள் அல்லது ஜிராண்டிஸ்டுகள் (Girandius) ஃபிரான்சின் வட மேற்கு ஜிராண்டி மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் பெருவாரியாக இருந்ததால் இக்கட்சி இப்பெயர் பெற்றது. நடுத்தர வகுப்பினர்கள் ஆதிக்கம் மேலோங்கியிருந்த இக்கட்சி யினர் குடியரசுக் கோட்பாட்டை ஆதரித்த மிதவாதிகள் ஆவர். இவர்களுக்கு ஃபிரான்சின் மாநிலங்களில் நல்ல செல்வாக்கு இருந் தது. ஆனால் பாரிஸ் நகரத்தில் இவர்களுக்குச் செல்வாக்கு இல்லை. ஒரு தலைவனுக்கு வேண்டிய எல்லாப் பண்புகளும் ஒருங்கே அமைந்த பிரிஸ்ஸாட் (Brissot), பண்பட்ட மேடைப் பேச்சாளர் வெர்னியாட் (Vergniaud), அறிஞரும் தத்துவ ஞானியுமான கண்டார்செட் (Condorcet) இஸ்னார்ட் (Isnard) போன்றவர்கள் இக் கட்சியிலிருந்தனர். ஜாகோபின்கள் (Jacobins) மலைப்பகுதி வாழ் மக்களைக்கொண்ட இக் கட்சி இவர்களுடைய (Jacobin clubs) என்னும் சங்கங்களை ஒட்டி இப்பெயர் பெற்றது. செம்மையான கட்சி அமைப்பு பெற்றிருந்த இக் கட்சியில் தீவிரவாதிகள் ஆதிக் கம் மேலோங்கியிருந்தது. தொழிலாளர்கள் ஆதரவைப் பெரு மளவிற்குப் பெற்றிருந்த இக் கட்சிக்கு பாரிஸ் நகரில் நல்ல செல் வாக்கு இருந்தது. நாவன்மை படைத்த மேடைப் பேச்சாளர்கள் பலரைப் பெற்றிருந்த இக் கட்சியின் முக்கிய தலைவர்கள் டான் டனும் (Danton) ரோபஸ்பியரும் ஆவார் (Robespicrre) (Marais) என்றழைக்கப்பட்ட நடுநிலையாளர்கள் மற்றொரு கட்சியினர் ஆவர். சீயே (Sieyes) என்பவர் இதன் முக்கிய தலைவர். தங்களுக் கென்று திட்டவட்டமான கொள்கை வகுத்துக்கொள்ளாத இக் கட்சியினர் இறுதியில் பாரிஸ் கும்பலின் வற்புறுத்தலுக்கும், அச் சுறுத்தலுக்கும் கீழ்ப்படிந்து ஜாகோபின்களுடன் சேர்ந்து கொண்டனர்.

கன்வென்ஷன் ஆற்றிய முதல் பணி ஃபிரான்சின் முடியாட்சியை ஒழித்து குடியரசை நிறுவியதாகும் பதினாறும் லூயி சட்டசபை யினால் தற்காலிகமாக பதவியிலிருந்து விலக்கப்பட்டார் என்பதை முன்பு கூறியுள்ளோம். நாட்டிற்கு எதிராக அந்நிய அரசுகளுட னும், நாட்டைவிட்டு ஓடிச்சென்ற பிரபுக்களுடனும் சதிசெய்தார்

என்றும், புதிய திருச்சபைச் சட்டத்தை ஏற்றுக்கொள்ள மறுத்த சமய குருமார்களுக்கு ஆதரவும் ஆக்கமும் அளித்தார் என்றும் கன்வென்ஷன் லூயிமீது குற்றம் சாட்டியது. 1792, டிசம்பரில் லூயி விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டு, குற்றவாளி என்று நிரூபிக்கப்பட்டு, 1793 ஜனவரி மாதம் 21-ம் நாள் சிரச்சேதம் செய்யப்பட்டார். இதைக் கண்டு நாட்டின் பல்வேறு பகுதிகளி லும் மக்கள் சீற்றங்கொண்டு கொதித்தெழுந்தனர். லா வெண்டி (La Vendee) என்ற இடத்தில் குடியானவர்கள் முடியாட்சி மீட்க் கப்படவேண்டுமென்று கோரி கிளர்ச்சி செய்தனர். லயான்ஸ் (Lyons) மார்சையில்ஸ் (Marsailles) போன்ற நகரங்களிலும் இத் தகைய கிளர்ச்சிகள் தோன்றின. ஆனால் ரோபஸ் பியரின் தலைமை யில் அதிகாரத்தைக் கைப்பற்றிய ஜாகோபின்கள் கிளர்ச்சிக்காரர் களை ஈவு இரக்கமின்றித் தண்டித்தனர். பாரிஸ் நகரக் கும்பலின் இச்செயல் ஐரோப்பிய அரசுகளைப் பெரும் அதிர்ச்சிக்குள்ளாக்கி யது. புரட்சியை எப்படியாவது ஒடுக்கிவிட வேண்டுமென்று ஐரோப்பிய அரசுகள் தீர்மானித்தன. இதுவரையில் புரட்சியை ஆதரித்து வந்த இங்கிலாந்து கூட இதனால் புரட்சியை எதிர்க்க முடிவுசெய்தது.

தங்களை எதிர்த்தவர்களையும் கிளர்ச்சிக்காரர்களையும் ஒடுக்கு வதற்காக ரோபஸ்பியர் பயங்கரமான அடக்குமுறையைக் கையாண்டார். 'படுகள ஆட்சி' (Reign of Terror) என்றழைக் கப்படும் இவருடைய கொடுங்கோலாட்சி 1793 ஜூன் மாதம் முதல் 1794 ஜூலை மாதம் வரை நீடித்தது. இவ்வாட்சியில் நிர் வாகப் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ள பொதுப் பாதுகாப்புக் கமிட்டி (Committee of Public Safety) என்ற ஒரு அமைப்பு ஏற் படுத்தப்பட்டது. இதுவே அந்நியர்கள் படையெடுப்பைத் தடுக்க தற்காப்பு நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும். இக் கமிட்டிக்கு உதவி செய்ய பொதுமக்கள் நலக் குழு (Committee of General Security) ஒன்றும், புரட்சி நீதி மன்றம் (Revolutionary Tribunal) ஒன்றும் நிறுவப்பட்டன. அமைதியைப் பாதுகாத்து, ஒழுங்கை நிலைநாட்ட வேண்டியது முதல் குழுவின் பொறுப்பு. குடியரசின் விரோதிகள் என்று சந்தேகிக்கப்பட்டவர்களை விசாரிப் பதும், தண்டிப்பதும் இரண்டாவது குழுவின் பொறுப்பு இத் தகையவர்களைக் கைது செய்யவும், விசாரிக்கவும் அதிகாரம் வழங்கும் சட்டம் ஒன்று (Law of Suspects) கன்வென்ஷனினால் பிறப்பிக்கப்பட்டது. அரசி மேரி அண்ட்வானெட் உள்பட ஆயிரக்கணக்கானவர்கள் சிறையிடப்பட்டு மரணதண்டனைக்குள் ளானார்கள். புரட்சி எதிர்ப்பு இயக்கத்தை ஒடுக்கியதும், மத்திய அரசின் அதிகாரத்தை நாடு முழுவதும் நிலைநாட்டியதும், படை

யெடுத்துவந்த அந்நியர்களை முறியடித்து விரட்டியதும் ஜாகோபின் ஆட்சியின் சாதனைகளாகும். மேற்கூறிய சாதனைகள் தவிர கன்வென்ஷன் மேலும் சில பணிகளை ஆற்றியது. செல்வந்தர்கள் அனுபவித்து வந்த சிறப்புரிமைகள் ஒழிக்கப்பட்டன. நாட்டை விட்டு ஓடிச்சென்ற புரபுக்களின் நிலங்கள் நிலமற்ற ஏழைகளிடையே பகிர்ந்து கொடுக்கப்பட்டது. தேசிய கல்வித் திட்டம் ஒன்று உருவாக்கப்பட்டது. ஒரு புதிய சட்டத் தொகுப்பு தயார் செய்யப்பட்டது. மெட்ரிக் அளவுமுறை புகுத்தப்பட்டது. பழைய காலண்டர் முறைக்குப் பதிலாக ஒரு புதிய காலண்டர் பின்பற்றப்பட்டது.[1] மாதங்களுக்கெல்லாம் பழைய பெயர்கள் அகற்றப்பட்டு இயற்கைப் பருவ காலங்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டன (தெர்மிடோர் (Termidor) புருமேர் (Brumairre) பிரெய்ரியால் (Prairial). தீவிரவாதிகளின் கையில் சிக்கிய கன்வென்ஷன் கத்தோலிக்க சமயத்தையும் விட்டுவைக்கவில்லை. கிறிஸ்துவ சமயம் ஒடுக்கப்பட்டு தேவாலயங்களெல்லாம் மூடப்பட்டன. கிறிஸ்துவ சமயத்திற்குப் பதிலாக 'பகுத்தறிவு வழிபாடு' (Worship of Reason) என்ற புதிய சமயம் புகுத்தப்பட்டது.

கத்தோலிக்க சமயத்தை எதிர்த்து மேற்கூறிய நடவடிக்கை எடுக்கக் காரணமாக இருந்தவர்கள் ஜாகோபின்களைவிடத் தீவிர வாதிகளாக இருந்த ஹெர்பர்டிஸ்டுகள் (Herbertists) என்பவர்கள் இவர்களுடைய போக்கை ரோபஸ்பியர் விரும்பவில்லை. அதே சமயத்தில் டான்டன் போன்றவர்களின் மிதவாதப் போக்கையும் அவர் விரும்பவில்லை. எனவே கன்வென்ஷனில் கோஷ்டிப் பூசல்கள் ஏற்பட்டு, ஒன்றை மற்றொன்று அழிக்கும் முயற்சியில் ஈடுபட்டு இறுதியில் எல்லா கோஷ்டிகளும் ஒழிந்தன. டான்டனும் ரோபஸ்பியரும் ஒன்று சேர்ந்து அதிதீவிரவாதிகளான ஹெர்பர்டிஸ்டுகளை முதலில் ஒழித்தனர். அடுத்து டான்டனும் அவருடைய கூட்டாளிகளும் ஒழிக்கப்பட்டனர். ரோபஸ்பியரின் கொடுங்கோலாட்சியின் அடாச் செயல்களை வெறுத்த டான்டன் அதன் கொடுமையைத் தணிக்க வேண்டியதின் அவசியத்தை எடுத்துக் கூறினார். ரோபஸ்பியர் அவரைப் பிற்போக்காளர் என்று குற்றஞ்சாட்டி அவரையும் அவருடைய கூட்டாளிகள் பலரையும் தூக்கு மேடைக்கு அனுப்பினார். டான்டனின் மறைவிற்குப் பிறகு எதிர்ப்பு ஏதுமின்றி ரோபஸ்பியர் ஃபிரான்சின் முடிசூடா மன்ன

[1] பன்னிரண்டு மாதங்கள் கொண்ட ஒரு ஆண்டு. மூன்று வாரங்கள் கொண்ட ஒரு மாதம், பத்து நாட்கள் கொண்ட ஒரு வாரம் என்ற அடிப்படையில் இக் காலண்டர் இயங்கியது:

ராக விளங்கினர் (ஏப்ரல் 1974 முதல், ஜுலை 1794 வரை) அவருடைய கொடுங்கோலாட்சி உச்சநிலையை அடைந்தது.[2] ரூஸோவின் கருத்துக்களில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட ரோபஸ்பியர் இப்பொழுது ஃபிரான்சில் 'நற்பண்பின்' ஆட்சியை (Reign of virtue) நிறுவ விரும்பினர். பகுத்தறிவு வழிபாட்டிற்குப் பதிலாக 'ஒப்புயர்வற்ற சக்தி' வழிபாட்டைப் புகுத்தினர் (Worship of the Supreme Being). நேர்மையின் அடிப்படையில் ஒரு புதிய சமுதாய அமைப்பை நிறுவ நினைத்தார். ஆனால் இவையெல்லாம் நடைமுறைக்கு ஒவ்வாத ஏட்டளவு சித்தாந்தங்களாக மட்டும் இருந்தன. இவர் ஆட்சியில் சிரச்சேதத்திற்குள்ளானவர்கள் பட்டியல் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தது. கன்வென்ஷனின் உறுப்பினர்கள்கூட புரட்சி நீதிமன்றத்தின் அதிகார எல்லைக்கு அப்பாற்பட்டவர்கள் அல்ல என்ற அவருடைய ஆணை கன்வென்ஷன் உறுப்பினர்களையே திகைக்க வைத்தது. ரோபஸ்பியரும் அவருடைய சகாக்களும் மக்கள் ஆதரவை இழக்கத் தொடங்கினர். அவர்களுடை எதிரிகளில் சிலர் திட்டமிட்டு 1794 ஜுலை மாதத்தில் ரோபஸ்பியரையும் அவர் கூட்டாளிகளையும் சிறைப்படுத்தினர். பிறகு அவர்கள் விசாரணைக்குள்ளாக்கப்பட்டு சிரச்சேதம் செய்யப்பட்டனர். இந்த நிகழ்ச்சி (Thermidorian Reaction) என்று குறிப்பிடப்பிடுகிறது. எந்த கில்லோடின் கருவி ஆயிரக்கணக்கான மக்களின் உயிரைக் குடிக்க ரோபஸ்பியரினல் பயன்படுத்தப்பட்டதோ அதே கருவிக்கு இப்பொழுது ரோபஸ்பியர் இறையானர். ''தினை விதைத்தவன் தினை அறுப்பான், வினை விதைத்தவன் வினை அறுப்பான்'' என்பதற்கேற்ப ரோபஸ்பியரின் வாழ்க்கை முடிவு அமைந்தது. அவருடைய மறைவு அவருடைய கொடுங்கோலாட்சிக்குச் சாவு மணி அடித்தது. ஜாகோபின் சங்கங்கள் யாவும் மூடப்பட்டன. புரட்சி நிகழ்ச்சிகளில் இதுவரை மேலாண்மை பெற்றிருந்த பாரிஸ் கம்யூன் கலைக்கப்பட்டது.

பிரெஞ்சுப் புரட்சி வரலாற்றில் ஒரு சிறப்பிடத்தைப் பெறும் இந்தப் படுகள ஆட்சியைப்பற்றிய (Reign of Terror) ஒரு மதிப்பீடு இங்கு பொருத்தமுடையதாகும். 1793-ல் ஃபிரான்ஸ் எதிர் நோக்கிய சிக்கலான பிரச்சினைகளைத் தீர்க்க ஒரு 'அவசரகால வல்லாட்சி' (Emergency Despotism) தேவைப்பட்டது. இந்த தேவையைப் பூர்த்தி செய்யத் தோன்றியதுதான் இந்த ஆட்சி

[2] இந்த நான்கு மாதங்களில் பாரிஸ் நகரில் மட்டும் 1376 பேர்கள் கொல்லப்பட்டார்கள் என்று கணக்கிடப்பட்டுள்ளது. புரட்சிக் காலத்தில் தண்டிக்கப்பட்டவர்கள் எல்லோரும் சிரச்சேதத்திற்குள்ளானர்கள்; கில்லோடின் (Guillotine) என்ற கருவி இதற்குப் பயன்படுத்தப் பட்டது; Dr. Guillotine என்ற ஒருவரால் கண்டுபிடிக்கப்பட்டதால் அது அப்பெயர் பெற்றது!

உள்நாட்டுக் குழப்பங்களையும் அன்னியர்கள் படையெடுப்பையும், புரட்சி எதிர்ப்பு இயக்கத்தையும் சமாளித்து புரட்சியையும் ஃபிரான்சின் ஒற்றுமையையும் நிலைநாட்டியது. இவ்வாட்சியின் சாதனைகளாகும். 1793ல் ஜனவரியிலிருந்து 1794 மார்ச்சு மாதம் வரை இந்த ஆட்சியின் அவசியத்தைப் பற்றி மாறுபட்ட கருத்துக்கள் இருக்க முடியாது. ஏனெனில் இந்த மாதங்களில்தான் கன்வென்ஷன் நிரந்தரமான பயன் தரக்கூடிய பல நல்ல சீர்திருத்தங்களைச் செயல்படுத்தியது. ஆனால், 1794 மார்ச்சு மாதத்திற்குப் பிறகு இவ்வாட்சியைத் தொடர வேண்டியதின் அவசியம் என்ன? எந்த குறிக்கோளுக்காக இவ்வாட்சி நிறுவப்பட்டதோ, அது நிறைவேறிவிட்ட பிறகு இது தொடர்வதில் எந்த நியாயமுமில்லை. ஒரு தனிப்பட்ட மனிதனின் விருப்பு வெறுப்பிற்கிணங்க இது தொடரப்பட்டது. நெருக்கடி மிகுந்த காலத்தில் இதுபோன்ற ஒரு அசாதாரணமான ஆட்சியின் அவசியத்தை மறுக்க முடியாது என்பது ஒருபுறமிருக்க, அவ்வாட்சியின் அத்துமீறிய செயல்களை யாரும் சரி என்று கூறமுடியாது. குற்றமற்றவர்களான பல்லாயிரக்கணக்கானவர்களை படுகொலை செய்தது மனிதத் தன்மையற்ற செயல் இவ்வாட்சியின் மன்னிக்க முடியாத குற்றமாகும்.

ரோபஸ் பியரின் வெறியாட்டத்திற்கு மிதவாதிகள் ஒரு முடிவு கட்டினர் என்பதை முன்பு கூறியுள்ளோம். நடுத்தர வகுப்பைச் சேர்ந்த மிதவாதிகள் செல்வாக்கு இப்பொழுது மேலோங்கியிருந்தது. பொதுப் பாதுகாப்புக்குழு, புரட்சி நீதி மன்றம் போன்ற அமைப்புகளின் அதிகாரங்கள் வெகுவாகக் குறைக்கப்பட்டு கன்வென்ஷனின் அதிகாரம் நிலைநாட்டப்பட்டது. மிதவாதிகளை எதிர்த்து தீவிரவாதிகள் செய்த கிளர்ச்சிகள் ஒடுக்கப்பட்டன. பாரிஸ் கம்யூனின் அதிகாரங்கள் பரிக்கப்பட்டு அது கன்வென்ஷனின் கட்டுப்பாட்டிற்குள்ளாக்கப்பட்டது. நாட்டிற்கு ஒரு புதிய அரசியலமைப்பை உருவாக்குவதுதான் கன்வென்ஷனின் முக்கிய பணியாகும். தீவிரவாதிகளின் ஆட்சியில் ஒரு படிப்பினையைப்பெற்ற சிலர் மீண்டும் முடியாட்சியை நிறுவ வேண்டுமென்று விரும்பினர். ஆனால், கன்வென்ஷன் இதற்கு ஆதரவு தரவில்லை. அதே சமயத்தில் ஜாகோபின்கள் போன்ற தீவிரவாதிகளுடைய ஆட்சியமைப்பையும் அது ஏற்கவில்லை. 1791-ல் அரசியலமைப்பு பூர்போன்கள் சார்புடையதாக இருந்ததால் அது பயனற்றது. 1793-ல் அரசியலமைப்பு ஜாகோபின்கள் சார்புடையதாக இருந்ததால் அதுவும் ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்று. எனவே இந்த இரண்டு நிலைகளுக்குமிடையே அமையக்கூடிய ஒரு அரசியலமைப்புதான் நாட்டின் உடனடித் தேவை என்பதை உணர்ந்த கன்வென்ஷன் அதை உருவாக்கும் பணியில் முனைந்தது.

நான்காவது கட்டம் 1795-1799

Thermidorian Reaction என்ற வலதுசாரிகளின் எதிர் நடவடிக்கையின் விளைவாக தேசிய கன்வென்ஷன் இடதுசாரி தீவிரவாதிகளின் பிடியிலிருந்து விடுபட்டது. நடுத்தர வகுப்பினர் செல்வாக்கு மேலோங்கியிருந்த இந்த கன்வென்ஷன் உருவாக்கிய புது அரசியலமைப்பு 'டைரக்டரி' (Directory) என்று வழங்கப் பட்டது. இந்த அரசியலமைப்பின் முக்கிய அம்சங்களை நோக்கினால் அது மிதவாதக் கொள்கையின் அடிப்படையில் எழுந்த ஒன்று என்பது நன்கு புலனாகும். இது வயது வந்த ஆடவர் ஓட்டுரிமை முறையை ஒழித்து சொத்து வரி செலுத்தும் குடிமக்கள்தான் வாக்குரிமை பெற்றவர்கள் என்று கூறியது. சட்டமன்ற உறுப் பினர்கள் நேரடியாக மக்களால் தேர்ந்தெடுக்கப்படவில்லை. (Council of 500, Council of Ancients) என்ற இரு அவைகளைக் கொண்ட சட்டமன்றம் ஒன்றை இது ஏற்படுத்தியது. ஆட்சிப் பொறுப்பு 'டைரக்டர்கள்' என்று ஐவர் அடங்கிய ஒரு குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. இவர்கள் ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை சட்டமன்றத்தினால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். 1795-ல் அதிகாரப் பொறுப்பை ஏற்ற டைரக்டரி உள்நாட்டுக் குழப் பங்களை அடக்கவும், பிற்போக்குச் சக்திகளை முறியடிக்கவும், தீவிர வாதிகளின் செல்வாக்கை ஒடுக்கவும் பல முயற்சிகளை மேற் கொண்டது. புதிய சட்டமன்றத்தில் மூன்றில் இரண்டு இடங் களுக்கு கன்வென்ஷன் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்ற கன்வென்ஷன் பிறப்பித்த ஆணை மக்களிடையே அதிருப்தியை ஏற்படுத்தியது. இதை எதிர்த்து பாரிஸ் நகரில் கிளர்ச்சிகள் நடந்தன. ஆனால், படை உதவியுடன் இக்கிளர்ச் சிகள் ஒடுக்கப்பட்டன. இப்பணியைச் செவ்வனே செய்து முடிப் பதற்குக் காரணமாக இருந்தவர் அப்பொழுது படைத் துறையில் பணியாற்றிக் கொண்டிருந்த நெப்போலியன் போனபார்டே ஆவார். இது தவிர டைரக்டரி அரசாங்கத்திற்கு மற்றொரு தொல்லையும் ஏற்பட்டது. ஜாகோபின் கட்சியில் எஞ்சியிருந்த சிலரும், சோஷலிசவாதிகளும் தொழிலாளர் நலன் புறக்கணிக்கப் பட்டது என்று குற்றஞ்சாட்டி, ஏழ்மை ஒழிக்கப்பட வேண்டும், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளுக்கு முடிவுகட்ட வேண்டும், வயது வந்தோர் வாக்குரிமை வேண்டும் போன்ற சீர்திருத்தங்கள் கோரி ஆர்ப்பாட்டங்கள் செய்தார்கள். இவற்றையெல்லாம் வெற்றிகரமாகச் சமாளித்த டைரக்டரி நாட்டின் நிதிநிலையைச் சீர்படுத்தும் பணியில் தோல்வி கண்டது. டைரக்டர்கள் ஆட்சி ஊதாரித்தனமான செலவுகளைச் செய்தது. இலஞ்ச ஊழல்கள் மலிந்திருந்த இவர்கள் ஆட்சி அரசியலமைப்பு விதிகளுக்குப்

புறம்பாகச் செயல்படத் தொடங்கியது. டைரக்டர்கள் தங்கள் நலன் கருதி சட்டமன்றத் தேர்தல்களில் தலையிட ஆரம்பித்தனர். சட்டமன்றத்தில் தங்கள் ஆதரவாளர்களை அமர்த்தும் பொருட்டு தேர்தல்களையே கேலிக் கூத்தாக ஆக்கினர். டைரக்டரியின் இந்த குறைபாடுகள் அதன் வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தன.

மக்களிடையே அதிருப்தி நிலவியிருந்த இந்த நிலையில்கூட டைரக்டர்கள் தமது போர்த் திட்டங்களைக் கைவிடவில்லை. 1795-ல் முதல் ஐரோப்பியக் கூட்டணியிலிருந்த பிரஷ்யா, ஃபிரான்சிடம் தோல்வியடைந்து பாசல் உடன்படிக்கையைச் செய்து கொண்டது. (Treaty of Basel) எஞ்சியிருந்த ஆஸ்திரியாவும், இங்கிலாந்தும், சார்டினியாவும் தொடர்ந்து போரிட்டுக் கொண்டிருந்தன. இப்போரை நடத்தும் பொறுப்பை டைரக்டரி ஏற்றுக் கொண்டது. ஆஸ்திரியா மீது இருமுனைத் தாக்குதல் ஒன்று திட்டமிடப்பட்டது. அதன்படி பிரெஞ்சுப் படை ஒன்று ரைன் ஆற்றைக் கடந்து தெற்கு ஜெர்மனி வழியாக வியன்னாவைத் தாக்கவேண்டும். மற்றொரு படை ஆஸ்திரியாவின் கவனத்தைத் திருப்புவதற்காக ஆஸ்திரியாவுடன் வட இத்தாலியில் போரிட வேண்டும். இந்த இரண்டாவது திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பு நெப்போலியன் போன பார்டேயிடம் ஒப்படைக்கப் பட்டது. ஆல்ப்ஸ் மலைகளைக் கடந்து நெப்போலியனின் படைகள் வட இத்தாலியில் புகுந்து பல வியக்கத்தக்க சாதனைகளைப் புரிந்தன. சார்டினியப் படைகள் முதலில் முறியடிக்கப்பட்டு சார்டினியா போரிலிருந்து விலகியது. அடுத்து 1797-ல் லோடி (Lodi) அர்க்கோலா (Arcola) ரிவோலி (Rivoli) என்ற சண்டைகளில் ஆஸ்திரியா படுதோல்வியடைந்து கேம்போ ஃபோர்மியோ (Treaty of Campo Formio) உடன்படிக்கை செய்துக் கொண்டது. வெற்றி வாகை சூடி ஃபிரான்சிற்குத் திரும்பிவந்த நெப்போலியனை மக்கள் வீர வணக்கம் செலுத்தி வரவேற்றனர். நெப்போலியன் செல்வாக்கு வளர ஆரம்பித்தது. இதைக்கண்டு அஞ்சிய டைரக்டர்கள், அவர் நாட்டிலிருப்பது டைரக்டரி அரசாங்கத்திற்கே ஆபத்து என்பதை உணர்ந்து அவரை நாட்டைவிட்டு வெளியேற்ற தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். முதல் கூட்டணியின் மற்ற நாடுகளெல்லாம் தோற்ற பிறகும்கூட இங்கிலாந்து தொடர்ந்து போரை நடத்திக்கொண்டிருந்தது. 1798-ல் இங்கிலாந்துக்கு எதிராக நெப்போலியனை எகிப்தின் மீது படையெடுக்கும்படி டைரக்டர்கள் ஏவினர். இந்தக் கட்டளையை ஏற்று எகிப்துப் படையெடுப்பை மேற்கொணடு அங்கு பிரமிட்டுகள் போரில் வெற்றி பெற்றாலும் (Battle of the Pyramids), இறுதியில் இங்கிலாந்தின் கடல் வலிமை காரணமாக அவர் அபுகர்பே

போரில் (Battle of Abukirbay or the Battle of the Nile) தோற்ருர். தாய்நாட்டுடன் தொடர்புகள் துண்டிக்கப்பட்டதாலும், அடுத்து வெற்றி வாய்ப்புகள் இல்லாததாலும் போரைக் கைவிட்டு நாடு திரும்பினுர். இவர் எகிப்திலிருந்த பொழுதே டைரக்டரி அரசாங்கம் மக்கள் ஆதரவை இழந்தது. அதற்கு எதிராகப் பல கிளர்ச்சிகள் தோன்றின. இந் நிலையைப் பயன் படுத்திக்கொண்டு நெப்போலியன் 1799-ல் பாராஸ் (Barras) அப்பி சீயே (Abbe Sieyes) என்ற இரண்டு டைரக்டர்கள் உதவியுடனும், படை வீரர்கள் உதவியுடனும் டைரக்டரி அரசாங்கத்தைப் பலாத்கார முறையில் கவிழ்த்துவிட்டு பதவியைக் கைப் பற்றினுர். இதுதான் 1799ம் ஆண்டு நவம்பர் மாதம் 18ம் நாள் இராணுவப் புரட்சி (Coup d'etat of 18th Brumairre) என்றழைக்கப்படுகிறது. ஃபிரான்சுக்கு ஒரு புதிய அரசியலமைப்பு உருவாக்கப் பட்டது. இப்புது அமைப்பு கான்சல்கள் ஆட்சி (Consulate) எனப்பட்டது. நெப்போலியன் கான்சலாகப் பதவி ஏற்ருர். இது முதல் ஃபிரான்ஸ் நாட்டின் வரலாறு நெப்போலியன் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. பிரெஞ்சுப் புரட்சி முடிவடைந்து ஐரோப்பிய வரலாற்றில் நெப்போலியன் சகாப்தம் தொடங்குகிறது.

## புரட்சியின் விளைவுகள்

இப்புரட்சி ஃபிரான்ஸ் நாட்டு வரலாற்றை மட்டும் பாதித்த ஒரு நிகழ்ச்சியாக இல்லாமல் ஐரோப்பிய வரலாற்றை, ஏன், உலக வரலாற்றையே பாதித்த ஒரு மாபெரும் நிகழ்ச்சியாக விளங்குகிறது. ஏனெனில் உலகத்தின் பல்வேறு பகுதிகளில் பிற்காலத்தில் தோன்றிய புரட்சிகளுக்கெல்லாம் இது முன்னேடியாக விளங்கியது. ஃபிரான்சில் பூர்போன் மன்னர்கள் ஆட்சி ஒழிக்கப் பட்டது இதன் உடனடி விளைவாகும். முடியாட்சி முறையிலிருந்து, குடியாட்சி முறையாக மாறி, இறுதியில் ஃபிரான்ஸ் ஒரு தனி மனிதனின் வல்லாட்சி முறையை ஏற்றுக்கொண்டு ஒரு பேரரசாக உருப்பெற்றது. சுதந்திரத்தின் சின்னமாக விளங்கிய மூவர்ணக் கொடிக்குப் பதிலாக, பேரரசின் பெருமையின் சின்னமாக விளங்கிய கழுகுச் சின்னத்தை ஃபிரான்ஸ் ஏற்றுக்கொண்டது.

படை மானிய முறையும், பிரபுக்களும், சமய குருமார்களும் அனுபவித்து வந்த சிறப்புரிமைகளும், சமூக :ஏற்றத் தாழ்வுகளும்

[1] ஃபிரான்சு அரசியல் அவருக்கு அளித்த அசாதாரணமான வாய்ப்புகளும் அவருடைய சில குண இயல்புகளும்தான் அவர் வாழ்க்கையில் தொடர்ந்து வெற்றி பெற்றதற்குக் காரணமாகும் என்று ஹேய்ஸ் என்னும் வரலாற்றறிஞர் கருதுகின்ருர். Modern Europe to 1870-(1963 Ed.)-C. J. H. Hayes. p. 534.

பிரான்சிலிருந்து மறைந்தன. ஊழல்கள் மலிந்து கிடந்த திருச்சபை அமைப்பு வெட்டி வீழ்த்தப்பட்டு அது அரசின் கட்டுப்பாட்டிற்குள்ளாக்கப்பட்டது. நாடு முழுவதும் ஒரே மாதிரியான நிர்வாக முறையும் சட்டதிட்டங்களும் செயல்படுத்தப்பட்டன. சமூகத்தில் வகுப்பு வேறுபாடுகள் ஏதுமின்றி எல்லோர் மீதும் வரிகள் விதிக்கப்பட்டன. பேச்சுரிமை, சமய உரிமை போன்ற பல உரிமைகளை மக்கள் பெற்றனர். நிலப் பிரபுத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார சமூக அமைப்பு மறைந்து தொழிலையும் மூலதனத்தையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு புது பொருளாதார சமூக அமைப்பு தோன்றியது. புரட்சி வெறுத்து ஒதுக்கிய பழைய அமைப்புகளை மீட்பது இயலாது என்ற நிலை உருவாகியது. அவை அநீதியானவை, காலத்திற்கு ஒவ்வாதவை என்ற எண்ணம் மக்கள் மனதில் ஆழ்ந்து பதிந்து விட்டதால், 1815-ல் ஐரோப்பிய வல்லரசுகள் மாநாடுகள் மூலமும், கூட்டணிகள் மூலமும் அந்தப் பழைய அமைப்புகளை மீட்கச் செய்த முயற்சி படுதோல்வி அடைந்தது என்பது இங்கு நோக்கற்பாலது.

சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற புரட்சியின் தாரக மந்திரங்களாக விளங்கிய கோட்பாடுகள் ஃபிரான்ஸ் நாட்டில் மட்டுமின்றி உலகத்தின் மற்ற நாடுகளிலும் மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டன. பிற்காலத்தில் பல உலக நாடுகளில் மக்களாட்சி முறை தோன்றவும், தேசியம் வளரவும் அந்நியர் ஆட்சி ஒழிக்கப்படவும் இக் கோட்பாடுகள் தூண்டுகோலாக விளங்கின என்றால் அது மிகையாகாது. இப்புரட்சியின் எதிரொலியை ஜெர்மனி, இத்தாலி, ஆஸ்திரியா, ஹங்கேரி, போலந்து, ஆஸ்திரிய நெதர்லாந்து ஸ்விட்சர்லாந்து போன்ற நாடுகளிலும் நாம் காண்கின்றோம்.

ஜனநாயகம், சமயப்பொறை, அடிமை முறை ஒழிப்பு தொழிலாளர் நலன் போன்ற மனிதாபிமானக் கருத்துக்கள் தோன்றுவதற்கு இப்புரட்சி வழிவகுத்தது.

ஜெர்மனி இங்கிலாந்து போன்ற நாடுகளின் அரசியல் தத்துவ ஞானிகளும், கவிஞர்களும், பிரெஞ்சுப் புரட்சிக் கருத்துக்களின் செல்வாக்கிற்குள்ளானார்கள். காண்ட் (Kant), கிதே (Goethe), ஹம்போல்ட் (Humboldt) போன்ற ஜெர்மன் எழுத்தாளர்களும், வர்ட்ஸ்வொர்த் (Wordsworth), கோல்ரிட்ஜ் (Coleridge) போன்ற ஆங்கிலக் கவிஞர்களும், தாமஸ் பெயின் (Thomas Paine) என்ற அமெரிக்க அறிஞரும் இந்தப் புரட்சி சகாப்தத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

# 17. பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள் (1789 - 1802)

### (ஆமியன் உடன்படிக்கைவரை)

புரட்சியின் தத்துவத்தை இங்கிலாந்து தவிர மற்ற எல்லா ஐரோப்பிய நாடுகளும் வெறுத்தன. ஃபிரான்சில் காணப்பட்ட வரம்புகடந்த முடியாட்சி, சிறப்புரிமைகள், மக்களின் வரிச்சுமை ஆகிய குறைபாடுகள் யாவும் தங்கள் நாட்டிலும் இருப்பதால், புரட்சிக் கருத்துக்கள் தங்கள் நாடுகளிலும் பரவி புரட்சியைத் தங்கள் நாடுகளிலும் தோற்றுவிக்கக்கூடும் என்று அவை அஞ்சின. புரட்சிக் கருத்துக்களை நசுக்கி புரட்சியை ஒடுக்குவது தங்கள் நலனுக்கு உகந்தது என்று ஐரோப்பிய நாடுகள் உணர்ந்தன. எனவே வாய்ப்புகிடைக்கும்பொழுது ஃபிரான்சின் விவகாரங்களில் தலையிட்டு புரட்சியை ஒடுக்கக் காத்துக்கொண்டிருந்தன.

இவ்வாறு புரட்சியில் அந்நியர் தலையீட்டிற்கும், அதனால் விளைந்த போர்களுக்கும் முக்கிய காரணமாக இருந்தவர்கள். ஃபிரான்ஸைவிட்டு ஓடிப்போன பிரபுக்கள் (Emigres), புரட்சியின் பொழுது சொத்துக்களைப் பறிமுதல் செய்தல், கொலை, கொள்ளை போன்ற கொடுமைகள் இழைக்கப்பட்டதால் பல பிரபுக்கள் நாட்டைவிட்டு வெளியேறினார்கள். அவர்கள் ஃபிரான்சின் கிழக்கு எல்லையில் காப்லென்ஸ் (Coblentz) என்ற இடத்தில் இருந்து கொண்டு புரட்சிக்கு எதிராகப்பிரசாரம் செய்து ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற நாடுகளை ஃபிரான்சுக்கு எதிராகப் போரில் ஈடுபடும்படிச் செய்தனர். மேலும் பதினாறும் லூயி மன்னரும், அரசி மேரி அண்டாய்னெட்டும் மக்களால் அவமதிக்கப்பட்டு பாரிஸில் கைதிகள்போல் வாழ்ந்தார்கள். அரசர் ஓடிச்சென்ற பிரபுக்களிடம் பரிவுகாட்டினார். அரசியார் தன் சகோதரரான ஆஸ்த்திரியப் பேரரசர் இரண்டாம் லியோபால்டை ஃபிரான்சில் முடியாட்சியைக்காக்கும் பொருட்டு தலையிடுமாறு வேண்டினார். இதற்கிணங்க பேரரசர் லியோபால்டும், பிரஷ்ய மன்னர் இரண்

டாம் ஃபிரெடரிக் வில்லியமும் பில்னிட்ஸ் அறிக்கை மூலம் (Declaration of Pilnitz 1791) பிரெஞ்சு மக்களுக்கு எச்சரிக்கை விடுத்தனர். அரசனும், அரசியும் மரியாதையுடன் நடத்தப்பட வேண்டுமென்றும் இல்லையெனில் ஃபிரான்சின் மீது படையெடுக்க நேரிடும் என்றும் இவ்விரு நாடுகளும் எச்சரிக்கை விடுத்தன. அந்நியர் தலையீட்டை விரும்பாத பிரெஞ்சு மக்கள் இந்த அறிக்கையைக் கண்டு ஆத்திரமுற்றனர். இது தவிர அப்பொழுது ஃபிரான்சில் பதவியிலிருந்த ஜிராண்டின் அமைச்சர்கள் போர் தொடுப்பதில் மிக்க ஆர்வம் காட்டினார்கள், தங்கள் நாட்டு வரம்பு கடந்த முடியாட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யும்படி ஐரோப்பிய நாடுகளுக்கு தேசிய கன்வென்ஷன் அறைகூவல் விடுத்தன. இது ஐரோப்பிய அரசர்களிடையே அச்சத்தை விளைவித்தது. குறிப்பாக ஆஸ்திரியாவும், பிரஷ்யாவும் 1792-ல் ஃபிரான்சின் மீது போர் தொடுத்தன. பிரஷ்யாவின் படைத்தலைவர் பிரன்ஸ்விக் பிரபு பிரெஞ்சு மக்களுக்கு விடுத்த எச்சரிக்கை எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை, புரட்சிவாதிகளின் கோபத்தை அது மேலும் கிளறியது, டான்டன் புதிய படை ஒன்றை நிறுவி போருக்கு ஆயத்தமானான். பிரான்ஸ்விக் பிரபுவின் படைகள் தடுத்து நிறுத்தப்பட்டு வால்மி என்ற இடத்தில் நடந்த போரில் (Battle of Valmy) அவை முறியடிக்கப்பட்டன. ஆஸ்திரிய நெதர்லந்தும், இத்தாலியில் சேவாய், நைஸ் பகுதிகளும் ஃபிரான்சினால் கைப்பற்றப்பட்டன.

### முதல் ஐரோப்பியக் கூட்டணி (1793.97)

இந்த நிலையில்தான் ஆஸ்திரியா, பிரஷ்யாவுடன் இங்கிலாந்தும் சேர்ந்துகொண்டு ஃபிரான்சுக்கு எதிராக முதல் கூட்டணி நிறுவப்பட்டது. இம் மூன்று நாடுகளைத்தவிர ஹாலந்து, ஸ்பெயின், சார்புனியா ஆகிய நாடுகளும் இக்கூட்டணியில் சேர்ந்தன. பிரெஞ்சுப் படைகள் ஹாலந்து மீது படையெடுத்து நீர்விண்டன் (Neerwinden) போரில் ஆஸ்திரியப் படைகளால் தோற்கடிக்கப்பட்டன. ஆஸ்திரியா, நெதர்லாந்தை ஃபிரான்சிடமிருந்து மீட்டது. ஜாகோபின்கள் ஆதிக்கத்தில் இயங்கிக்கொண்டிருந்த கன்வென்ஷன் ஒரு பெரும் படையைத் திரட்டியது. 1794-ல் பாரிஸ் நகரை நோக்கி முன்னேறி வந்த ஆஸ்திரியப் படைகள் தடுத்து நிறுத்தப்பட்டு, அந்நகரம் காப்பாற்றப்பட்டது. 1795-ல் பிரெஞ்சுப் படைகள் ஹாலந்தில் புகுந்து அந்நாட்டைக் கைப்பற்றின. பிரஷ்யப் படைகள் தோற்கடிக்கப்பட்டு அந்நாடு ஃபிரான்சுடன் பாசல் உடன்படிக்கையைச் செய்துகொண்டது. (Treaty of Basel) ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா ஆகிய நாடுகள் போலந்துப் பிரிவினையில் ஈடுபட்டிருந்ததாலும், இங்கிலாந்து,

பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய நாடுகளுக்கிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றியதாலும், கூட்டணி நாடுகள் போரில் அடுத்து அடுத்துத் தோல்விகளேயே கண்டன. பிரஷ்யாவைத் தொடர்ந்து ஹாலந்து, ஸ்பெயின் ஆகிய நாடுகளும் ஃபிரான்சுடன் சமாதானம் செய்து கொண்டன. கூட்டணியில் எஞ்சியிருந்த ஆஸ்திரியா, இங்கிலாந்து, சார்புனியா நாடுகள் மட்டும் போரைத் தொடர்ந்து நடத்தின.

இந்த சூழ்நிலையில்தான் ஃபிரான்சில் டைரக்டரி அரசாங்கம் பதவி ஏற்றது. இந்தப் புதிய அரசாங்கம் போரைத் தொடர்ந்து நடத்துவதில் ஆர்வங்காட்டியது. நெப்போலியன், கார்னுட் ஆகிய படைத்தலைவர்கள் ஆஸ்திரியா மீது இரு முனைத்தாக்குதல் மேற்கொள்ள ஒரு திட்டம் தீட்டினர். பிரெஞ்சுப் படையின் ஒரு பகுதி ரைன் ஆற்றைக்கடந்து, தெற்கு ஜெர்மனி வழியாக ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னுவைத் தாக்க வேண்டியது என்றும், மற்றொரு படை வட இத்தாலியில் ஆஸ்திரியப் பகுதிகளைத் தாக்கவேண்டியது என்றும் முடிவு செய்யப்பட்டது. இந்த இத்தாலியப் படையெடுப்பிற்கு நெப்போலியன் படைத் தலைவராக நியமிக்கப்பட்டார். 1796-ல் ஒரு பெரும் பிரெஞ்சுப் படையுடன் நெப்போலியன் புயல் வேகத்தில் ஆல்ப்ஸ் மலைகளைக் கடந்து வியக்கத்தக்க சாதனை புரிந்தார். சார்டினியப் படைகளையும், ஆஸ்திரியப் படைகளையும் முறியடித்து சேவாய், நீஸ் ஆகிய பகுதிகளைக் கைப்பற்றினுர். சார்டினியா நெப்போலியனுக்குப் பணிந்தது. அடுத்து மிலான் நகரைக் கைப்பற்றி பெஸ்சீரா (Pescheira) என்ற இடத்தில் நடந்த சண்டையில் ஆஸ்திரியப் படைகளை முறியடித்தார். போப்பின் அரசு கைப்பற்றப்பட்டது. மறுபடியும் ஆல்ப்ஸ் மலைகளைக் கடந்து வியன்னுவை நோக்கி நெப்போலியன் படைகள் முன்னேறின. லோடி, அர்கோலா, ரிவோலி ஆகிய போர்களில் நெப்போலியன் தொடர்ந்து வெற்றி மேல் வெற்றி பெற்று ஆஸ்திரியாவை அடிபணிய வைத்தார். 1797-ல் ஆஸ்திரியா கேம்போ ஃபோர்மியோ உடன்படிக்கை செய்துகொண்டது. (Treaty of Campo Formio). இதன்படி ஆஸ்திரியா - நெதர்லாந்து பகுதியை ஃபிரான்சுக்குக் கொடுக்க ஆஸ்திரியா ஒப்புக்கொண்டது. இதற்கு ஈடாக வெனிஷியா ஆஸ்திரியாவுக்குக் கொடுக்கப்பட்டது. ஃபிரான்சின் எல்லை ரைன் ஆறு என்பது ஆஸ்திரியாவால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. லொம்பார்டி, (Lombardy), ஃபெராரா (Ferrara) போலோனு (Bologna) மொதினு (Modena) ஆகிய இத்தாலியப் பகுதிகள் சிசால்பைன் குடியரசு (Cisalpine Republic) என்ற அரசாக நிறுவப்பட்டன. வட இத்தாலியில் ஃபிரான்ஸ் செய்த இந்த ஏற்பாட்டை ஆஸ்திரியா ஏற்றுக்கொண்டது. இதேபோல ஜினேவா லெகூரியக் குடியரசாகவும் (Ligurian Republic) ஹாலந்து படாவியக் குடியரசாகவும்

(Batavian Republic) போப்பின் அரசுகள் ரோமானியக் குடியரசாகவும் (Roman Republic) ஸ்விட்சர்லாந்து ஹெல்விடிக் குடியரசாகவும் (Helvetic Republic) நேபிள்ஸ் சிசிலி அரசுகள் பார்த்தினோபியக் குடியரசாகவும் (Parthenopean Republic) நிறுவப்பட்டன. பெயரளவில் அவை குடியரசாக விளங்கினவே யன்றி, உண்மையில் ஃபிரான்சின் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்டன. இவ்வாறு இப்போரின் விளைவாக இத்தாலி நெப்போலியனின் ஆதிக்கத்திற்குட் படுத்தப்பட்டது.

முதல் கூட்டணியின் மற்ற நாடுகள் போரை முடித்துக் கொண்ட போதிலும் இங்கிலாந்து போரைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தது. ஹாலந்து, ஸ்பெயின் ஆகிய நாடுகளின் உதவியை ஃபிரான்ஸ் பெற்றதால் அந்நாடுகளின் கடற்படையை இங்கிலாந்துக்கு எதிராகப் பயன்படுத்த முடிந்தது. ஆனல் இந்த மூன்று நாடுகளின் கடற்படையும் இணைந்து செயல் படுவதற்கு முன்பே இங்கிலாந்து ஸெயிண்ட் வின்ஸெண்ட் போரில் (Battle of St. Vincent) ஸ்பானியக் கப்பற்படையையும், கேம்பர்டௌன் போரில் (Battle of Camperdown) டச்சுக் கப்பற்படைகளையும் தோற்கடித்தது. இங்கிலாந்தின் காலனிகளும், அவற்றுடன் கொண்டிருந்த வியாபாரமும், வியாபாரத்தின் மூலமாகப்பெற்ற ஏராளமான செல்வமும்தான் அந்நாட்டின் அரசியல் ஆதிக்கத்திற்குக் காரணம் என்பதை உணர்ந்த நெப்போலியன், இங்கிலாந்தின் செல்வாக்கை ஒடுக்கும் நோக்கத்துடன் இங்கிலாந்திற்கும், இந்தியா போன்ற காலனிகளுக்குமிடையே உள்ள தொடர்பைத் துண்டித்துவிட வேண்டுமென்று திட்டமிட்டார். இதை நிறைவேற்றும் பொருட்டு 1798-ல் எகிப்து மீது படையெடுத்தார். இத்தாலியப் படையெடுப்பிலிருந்து வெற்றிவாகை சூடித் திரும்பிய நெப்போலியனின் செல்வாக்கு வளர்ந்துகொண்டேயிருந்தது. டைரக்டரி அரசாங்கம் இதைக்கண்டு அஞ்சியது. நெப்போலியன் ஃபிரான்ஸிலேயே இருந்தால் டைரக்டரி அரசாங்கத்தை ஒழித்துவிட்டு பதவியைக் கைப்பற்ற முயற்சிக்கக்கூடும் என்று சந்தேகித்த டைரக்டர்கள் அவருடைய எகிப்துப் படையெடுப்புத் திட்டத்தை உடனடியாக ஏற்றுக்கொண்டு, அவரிடமே அப்படையெடுப்புப் பொறுப்பை ஒப்படைத்தார்கள்.

நெப்போலியன் ஒரு பெரிய கடற்படையுடனும், காலாட் படையுடனும் டூலானிலிருந்து புறப்பட்டு எகிப்து நோக்கிச் சென்ருர். இங்கிலாந்தின் படைகள் நெல்சன் தலைமையில் அவரைத் தொடர்ந்து சென்றன. முதலில் 1798-ல் பிரமிட்டுகள் சண்டையில் (Battle of the Pyramids) நெப்போலியன் மாமலூக் சுல்தான்

களைத் தோற்கடித்தார். ஆனால் அடுத்து நடந்த கடற்போரில் அபுகர்பே என்ற சண்டையில் (Battle of Abukir Bay or the battle of the nile) நெப்போலியன் படைகள் தோற்றன. தாய் நாட்டுடன் தொடர்பு துண்டிக்கப்பட்டதாலும், மேலும் எகிப்தில் வெற்றிவாய்ப்புகள் இல்லாததாலும், நெப்போலியன் ஏமாற்றத்துடன் நாடு திரும்பினார். இவ்வெற்றி மத்தியதரைக் கடலில் இங்கிலாந்தின் ஆதிக்கத்தை ஏற்படுத்த உதவியது.

இரண்டாவது ஐரோப்பியக் கூட்டணி (1798-1802)

நெப்போலியன் எகிப்துப் படையெடுப்பில் ஈடுபட்டிருந்த பொழுது இங்கிலாந்தின் முயற்சியின் விளைவாக இரண்டாவது கூட்டணி நிறுவப்பட்டது. தங்களுடைய எல்லையில் ஃபிரான்சின் செல்வாக்கு வளருவதையும், ஃபிரான்சின் ஆதிக்கத்திற்குட்பட்ட குடியரசுகள் நிறுவப்பட்டதையும் ஐரோப்பிய அரசுகள் அறவே வெறுத்தன. பிரெஞ்சுப் புரட்சிக் கருத்துக்கள் தங்கள் நாடுகளிலும் பரவக்கூடும் என்று அவை அஞ்சின. எனவே பிரிட்டனின் தலைமையில் மீண்டும் ஆஸ்திரியா, ரஷ்யா, துருக்கி ஆகிய நாடுகள் ஃபிரான்சுக்கு எதிராக ஒரு கூட்டணி அமைத்தன.

ஆஸ்திரிய ரஷ்யப் படைகள் வட இத்தாலி மீது படையெடுத்ததன் விளைவாக ரோம், நேபிள்ஸ் நகரங்களை ஃபிரான்ஸ் இழந்தது. டைரக்டரி அரசாங்கத்தைக் கவிழ்த்துவிட்டு, கான்சலாகப் பதவி யேற்ற நெப்போலியன், கடந்த இத்தாலியப் போரில் ஃபிரான்சுக்கு ஏற்பட்ட இழுக்கைப் போக்கும் நோக்கத்துடன் 1800-ல் மீண்டும் இத்தாலியப் படையெடுப்பை மேற்கொண்டார். அதற்குமுன் தன் அரச தந்திரத்தினால் ரஷ்யாவை இரண்டாவது கூட்டணியிலிருந்து விலகும்படி செய்தார். பனி, குளிர் போன்ற இயற்கையினால் ஏற்பட்ட தொல்லைகளையும், இடையூறுகளையும் சற்றும் பொருட்படுத்தாமல் ஆல்ப்ஸ் மலைகளைக் கடந்து அவருடைய படைகள் போ ஆற்றுப் பள்ளத்தாக்கில் இறங்கின. மாரங்கோ (Marengo) என்ற இடத்தில் நடந்த போரில் ஆஸ்திரியப் படைகள் படுதோல்வி அடைந்தன (1800). இந்த வெற்றியைத் தொடர்ந்து மோரே (Moreau) என்ற தளபதியின் தலைமையில் மற்றொரு பிரெஞ்சுப் படை தெற்கு ஜெர்மனியில் புகுந்து ஆஸ்திரியர்களை ஹோஹன்லிண்டன் (Hohenlinden) போரில் தோற்கடித்தன. இந்த இரண்டு தோல்விகளும் ஆஸ்திரியாவை சமாதானம் செய்துகொள்ளத்தூண்டின. 1801-ல் லூனவில் (Luneville) உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. 1797-ல் செய்துகொள்ளப்பட்ட கேம்போ ஃபோர்மியோ உடன்படிக்கையை இது அப்படியே உறுதிப்படுத்தியது. மீண்டும்

இங்கிலாந்து மட்டும் போரில் தனித்துவிடப்பட்டது. வெளிநாடுகளிலிருந்து ஃபிரான்சிற்கு எந்த உதவியும் கிடைக்காமல் செய்ய வேண்டுமென்பதற்காக நடுநிலை நாடுகளின் கப்பல்களைச் சோதனை செய்யும் உரிமையை இங்கிலாந்து கோரியது. இதை எதிர்த்து ரஷ்யா, ஸ்வீடன், பிரஷ்யா, டென்மார்க் ஆகிய நாடுகள் 'வடக்கு நாடுகள் கூட்டு' (Northern League) என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு போருக்கு ஆயத்தமாயின. பார்கர், நெல்சன் ஆகிய இரு கடற் தளபதிகள் இப் பணிக்கு எதிராகப் போர் புரிந்து, டென்மார்க்கின் கடற்படையை கோபன்ஹேகன் போரில் தோற்கடித்தனர். இந்த அணி உடைக்கப்பட்டது. இரு நாடுகளும் சமாதானத்தை விரும்பின. குறிப்பாக நீண்ட நாட்கள் போர் செய்து வந்த இங்கிலாந்திற்கு ஓய்வு மிகவும் தேவைப்பட்டது. 1802-ல் ஆமியன் உடன்படிக்கை (Treaty of Amiens) கையெழுத்தாயிற்று. இதன்படி டிரினிடாட் (Trinidad) இலங்கை (Ceylon) தவிர இங்கிலாந்து ஃபிரான்சிடமிருந்து கைப்பற்றிய எல்லா பிரதேசங்களையும் திருப்பிக்கொடுக்க சம்மதித்தது. இரு நாடுகளும் எகிப்திலிருந்து வெளியேற ஒப்புக்கொண்டன. நேப்பிள்ஸ், போப்பின் அரசு ஆகியவற்றிலிருந்து ஃபிரான்ஸ் வெளியேற சம்மதித்தது. இந்த உடன்படிக்கை இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்குமிடையே இருந்த பிரச்சினைகளுக்கு ஒரு தீர்வுகாணவில்லை. எனவே இதை ஒரு தற்காலிகப் போர் நிறுத்த ஒப்பந்தம் என்று கருதுவதுதான் பொருத்தமுடையதாகும். ஏனெனில் அடுத்த ஆண்டிலேயே இந்த உடன்படிக்கை முறிந்து மீண்டும் இவ்விரு நாடுகளுக்கிடையே போர் மூண்டது. இப் போரைப் பற்றி 'நெப்போலியனின் போர்கள்' என்ற அடுத்த அத்தியாயத்தில் விரிவாக ஆராயலாம்.

# 18. நெப்போலியன்

## நெப்போலியனின் போர்கள்
## (Napoleonic Wars) 1803–1815

நெப்போலியனது போர்கள் என்ற இந்த தலைப்பை ஆராய்வதற்கு முன், இதுவரையில் நடந்த பிரெஞ்சுப் புரட்சிப் போர்களுக்கும் (அவற்றிலும் நெப்போலியன் பங்கு கொண்டார் என்பதை நாம் இங்கு நினைவில் கொள்ளவேண்டும்) இந்தப் போர்களுக்கும் ஒரு இன்றியமையாத வேறுபாடு உள்ளது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள் புரட்சியின் தத்துவங்களைப் பல நாடுகளில் புகுத்தி, எதேச்சாதிகார ஆட்சி, சமூகக் கொடுமைகள், பொருளாதாரச் சுரண்டல்கள் போன்ற அநீதிகளுக்கு உள்ளாக்கப்பட்டிருந்த மக்களுக்கு இவற்றிலிருந்து விடுதலை கிடைக்கும் என்ற ஒரு நம்பிக்கையை ஏற்படுத்தியிருந்தன. எனவே பிரெஞ்சுப் படைகள் சென்றவிடமெல்லாம் இந்த நம்பிக்கையின் சின்னமாக வரவேற்கப்பட்டனர். ஆனால், நெப்போலியனின் போர்கள் அத்தன்மையைப் பெற்றிருக்கவில்லை. அவை, வல்லரசன் ஒருவனால் தன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளும் பொருட்டும், தன் புகழை வளர்த்துக்கொள்ளும் பொருட்டும் மேற்கொள்ளப்பட்ட போர்கள் ஆகும். எனவே இப்போர்களை மக்கள் ஆர்வத்துடன் வரவேற்பதற்கு மாறாக நாளடைவில் அவற்றை வெறுக்கத் தொடங்கினர். இப்போர்கள் மூலம் தன் ஆதிக்கத்தை நிலைநாட்ட விரும்பிய நெப்போலியனின் ஆதிக்க வெறி ஐரோப்பிய நாடுகளிடையே தேசிய உணர்வைத் தூண்டிவிட்டு, இறுதியில் அவருடைய வீழ்ச்சிக்கே காரணமாக அமைந்தது. பிரெஞ்சுப் புரட்சிப் போர்களின் விளைவாக ஐரோப்பிய நாடுகள் ஒன்றன்பின் ஒன்றாக கொடுங்கோலாட்சியிலிருந்து விடுபட்டன. ஆனால், நெப்போலியனின் போரின் விளைவாக ஐரோப்பிய நாடுகள் நெப்போலியனின் இரும்புப் பிடியில் சிக்கிக்கொண்டன. மேலும் இவருடைய சில போர்கள்

ஆக்கிரமிப்பு நோக்கத்துடன் மேற்கொள்ளப்பட்டவை. அலெக் ஸாண்டர், சீஸர், சார்லமேன், போன்ற வரலாற்று வெற்றி வீரர் களைப் போல தானும் ஐரோப்பாவைத் தன் காலடியில் கொண்டு வரவேண்டுமென்ற எண்ணம் நெப்போலியனின் மனதில் தோன்றி யது. நெப்போலியன் தான் வென்ற நாடுகளிலெல்லாம் மக்களின் எண்ணங்களுக்கோ, உரிமைகளுக்கோ மதிப்பு அளிக்கவில்லை. தன்னுடைய திட்டங்கள் நிறைவேற்றப்படுவதில் புரட்சிக் கொள்கைகள் தடையாக இருக்குமேயானல், புரட்சிக் கொள்கை களையே விட்டுக் கொடுப்பதற்கு அவர் தயங்கியதில்லை. எனவே புரட்சித் தத்துவத்தில் அவருக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருந்த தென்றோ, பற்றுறுதி இருந்ததென்றோ கருதுவது பொருத்த முடையதாகாது. இந்நிலையில், 'நான்தான் புரட்சி' ('I am the Revolution') 'புரட்சியின் குழந்தை' (Child of the Revolution) என்றெல்லாம் நெப்போலியன் தன்னை அழைத்துக் கொண்டது எந்த அளவிற்குப் பொருந்தும் என்பது சிந்திக்க வேண்டிய ஒன்ருகும். 1802 வரையில் அவர் புரிந்த போர்கள் டைரக்டரி அரசாங்கத்தால் தொடங்கப்பட்ட போர்களின் தொடர்ச்சி என்று கூறலாம். ஆனல், 1803-ல் இங்கிலாந்துடன் மீண்டும் தொடரப்பட்ட போருக்கு இவரே காரணம். இப்போரின் முக்கிய காரணங்கள்: ஃபிரான்சுப் புரட்சிக் கருத்துக்களை வெறுத்த இங்கிலாந்து மக்கள், புரட்சி அண்டை நாடுகளில் பரவுவதற்கு நெப்போலியன்தான் காரணம், என்று கருதினர். குடியேற்ற ஆதிக்கத்துறையிலும், வர்த்தகத்துறையிலும் இவ்விரு நாடுகளுக்கு மிடையே ஏற்பட்ட போட்டி, பகைமை உணர்ச்சியை வளர்த்தது. இத்தாலியில் நெப்போலியனின் ஆதிக்க வளர்ச்சியைக் கண்டு ஆங்கிலேயர் அஞ்சினர். எகிப்திலும் அதுபோல ஒரு நிலை உருவாகக்கூடும் என்று ஐயமுற்றனர். இது தவிர ஆமியன் உடன் படிக்கையில் ஏற்றுக்கொள்ளப்பட்ட நிபந்தனைகளை நிறைவேற்று வதில் இரு நாடுகளும் அக்கரை காட்டவில்லை. உதாரணமாக இங்கிலாந்து மால்டா தீவிலிருந்து வெளியேற மறுத்துவிட்டது. ஃபிரான்ஸ் இத்தாலிய விவகாரங்களில் தலையிட்டது. எனவே 1803-ல் மீண்டும் போர் மூண்டது.

1803-ல் ஃபிரான்ஸ் பிரஷ்யாவிற்குச் சொந்தமான ஹானேபர் அரசின்மீது படையெடுத்து அதைக் கைப்பற்றியது. ஸ்பெயினி னுடைய கடற்படை உதவியைப் பெற்று இங்கிலாந்து மீது படை யெடுக்கும் திட்டம் ஒன்றை நெப்போலியன் தயாரித்தார். இங்கிலாந்தினுடைய கப்பல்கள் இங்கிலீஷ் கால்வாயைக் கண் காணித்து வந்தன. நெல்சனுடைய கடற்படையை இங்கிலீஷ் கால்வாயிலிருந்து வெளியேற்ற நெப்போலியன் கையாண்ட

தந்திரம் பலிக்கவில்லை. இங்கிலீஷ் கடற்படை விழிப்புடன் இங்கிலீஷ் கால்வாயைக் கண்காணித்து வந்ததால் திட்டமிட்டபடி நெப்போலியன் படையெடுப்பு நடைபெறவில்லை. பிரெஞ்சுப் படையெடுப்பைத் தடுத்ததோடு மட்டுமின்றி நெல்சன் 1805-ல் டிரபால்கர் என்ற இடத்தில் நடந்த கடற்போரில் (Battle of Trabalgar) பிரெஞ்சுக் கப்பற்படை ஒன்றை படுநாசத்திற்குள்ளாக்கினார். இங்கிலாந்தின் முதலமைச்சர் வில்லியம் பிட் நெப்போலியனுடைய கவனத்தைத் திருப்பும் நோக்கத்துடன் ஆஸ்திரியா, ரஷ்யா, ஸ்வீடன், ஆகிய நாடுகளைக்கொண்ட மூன்றாவது ஐரோப்பியக் கூட்டணியை அமைத்தார் (1805). இக் கூட்டணியில் பிரஷ்யா முதலில் சேராவிட்டாலும், பிறகு ஃபிரான்சுக்கு எதிராகப் போரிட்டது.

## மூன்றாவது கூட்டணியுடன் போர்

இப்போரிலும் நெப்போலியன் வியக்கத்தக்க பல வெற்றிகளைப் பெற்றார். மூன்றாவது கூட்டணியை உடைக்க வேண்டுமென்பது அவர் நோக்கம். 1805-ல் மாக் (Mack) என்ற படைத் தலைவரின் கீழ் போரிட்ட ஆஸ்திரியப் படைகளை உல்ம் (Ulm) போரில் முறியடித்தார். 50,000 ஆஸ்திரியப் போர் வீரர்கள் சிறைப்பிடிக்கப்பட்டனர். வெற்றி பெற்ற பிரெஞ்சுப் படைகள் வியன்னா நகரை நோக்கி வேகமாக முன்னேறின. வியன்னா கைப் பற்றப்பட்டது. 1805-ல் ஆஸ்டர் லிட்ஸ் (Auster Litz) போரில் ஆஸ்திரிய ரஷ்யப் படைகள் முறியடிக்கப்பட்டன. இந்த இரு வெற்றிகளின் உடனடி விளைவு ஆஸ்திரியா கூட்டணியிலிருந்து விலகிக்கொண்டு, போரை நிறுத்திக்கொண்டதாகும். ஆஸ்திரியா, ஃபிரான்சுடன் பிரெஸ்பர்க் உடன்படிக்கையைச் செய்துகொண்டது. இதன்மூலம் வட இத்தாலியில் ஆஸ்திரிய ஆதிக்கம் மறைந்தது. இதே சமயத்தில் ஐரோப்பாவில் தன் ஆதிக்கத்தை உறுதிப் படுத்தும் நோக்கத்துடன் நெப்போலியன் ஐரோப்பாவில் பல சார்பு நாடுகளை உருவாக்கி, அவற்றைத் தன் உறவினர்களுக்கும், நண்பர்களுக்குமிடையே பகிர்ந்தளித்தார். நேபிள்ஸ் அரசுக்கு அவர் மூத்த சகோதரர் ஜோசப் அரசராக்கப்பட்டார். இளைய சகோதரர் ஹாலந்து அரசரானார்; இதுபோல பல ஐரோப்பிய சிற்றரசுகள் இவர் உறவினர்களிடம் ஒப்புவிக்கப்பட்டன. புனித ரோமானியப் பேரரசின் உறுப்பினர்கள் பதினாறு அரசுகளை இணைத்து ரைன் கூட்டரசு (Confederation of the Rhine) என்ற ஒரு புது அமைப்பை உருவாக்கி அதைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக்கொண்டார். ரைன் கூட்டரசின் தோற்றம் புனித ரோமானியப் பேரரசின் மறைவை உலகிற்குப் பறை சாற்றியது.

ஜெர்மனி மீது ஃபிரான்சின் ஆதிக்கம் முழுமையாக ஏற்படுத்தப் பட்டது. இதை பிரஷ்யா விரும்பவில்லை. பிரஷ்யாவில் செல்வாக்கு பெற்றிருந்த போர் வெறியர்கள் கட்சி ஃபிரான்சுடன் போர்செய்ய அரசரைத் தூண்டியது. எனவே 1806-ல் பிரஷ்யா ரஷ்யாவுடன் ஒரு உடன்பாடு செய்துகொண்டு ஃபிரான்சுக்கு எதிராக மூன்றாவது கூட்டணியில் சேர்ந்தது. இதையறிந்த நெப்போலியன் மின்னல் வேகத்தில் தன் படைகளைப் பிரஷ்யா மீது செலுத்தி, ரஷ்யப் படைகளின் உதவி கிட்டுவதற்கு முன்பே, பிரஷ்யப் படைகளை ஜேனு, ஆர்ஸ்டாட் என்ற சண்டைகளில் (Battles of Jena and Auerstadt 1806) முறியடித்தார். பெர்லின் நகரம் கைப்பற்றப்பட்டது. ஜேனுப் போர் பிரஷ்யாவிற்கு ஒரு படுதோல்வி மட்டுமல்லாமல், படைத்துறையில் பிரஷ்யா பெற்றிருந்த புகழுக்கே ஒரு இழுக்காக அமைந்தது. இந்த வெற்றிக்குப் பிறகு நெப்போலியன் தன் கவனத்தை ரஷ்யாவின் மீது திருப்பினார். ரஷ்யப் படைகளை 1807-ல் ஃப்ரீட்லண்டுப் போரில் (Battle of Friedland) தோற்கடித்து ரஷ்யாவை அடிபணிய வைத்தார். இதன் விளைவாக டில்சிட் உடன்படிக்கை (Treaty of Tilsit) கையெழுத்தாகியது. இதன்படி ஐரோப்பாவில் நெப்போலியனால் உருவாக்கப்பட்ட அரசியல் ஏற்பாடுகளை ரஷ்யா ஒப்புக் கொண்டது. ஃபிரான்சும் ரஷ்யாவும் ஒரு இரகசிய தற்காப்பு உடன்படிக்கை செய்துகொண்டன. ரஷ்யாவுக்கும் துருக்கிக்குமிடையே இருந்த சச்சரவுகளைத் தீர்க்க ஃபிரான்ஸ் உதவ வேண்டுமென்றும், இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்குமிடையே இருந்த சச்சரவுகளைத் தீர்க்க ரஷ்யா உதவ வேண்டுமென்றும் இருதரப்பினராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்த உடன்படிக்கை பிரஷ்யாவுக்குச் சொந்தமான சில பகுதிகள் தொடர்பான சில முடிவுகளையும் எடுத்தது. எல்ப் ஆற்றிற்கு மேற்குப் பகுதியிலிருக்கும் இடங்களை பிரஷ்யா ஃபிரான்சுக்குக் கொடுக்க சம்மதித்தது. இப் பகுதிகள்தான் வெஸ்ட் பேலியா அரசாக அமைக்கப்பட்டது. போலந்திடமிருந்து பிரஷ்யா பெற்ற பகுதிகள் யாவும் Grand Duchy of Warsaw என்ற அரசாக நிறுவப்பட்டு, நெப்போலியனின் கூட்டாளியான ஸாக்ஸனி கோமகனிடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்விரு அரசுகளும் கூட்டரசின் உறுப்பினர்களாக ஆக்கப்பட்டன. பிரஷ்யா ஒரு போர் நஷ்ட ஈட்டுத் தொகையை ஃபிரான்சுக்குக் கொடுக்க வேண்டும். இந்தத் தொகை செலுத்தப்படும்வரை ஃபிரான்சுப்படை ஒன்று பிரஷ்யாவில் இருக்கும். பிரஷ்யாவின் படைபலம் 42,000 ஆக குறைக்கப்பட்டது. டில்சிட் சமாதானம் வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு நிகழ்ச்சியாகும். மூன்றாவது கூட்டணி உடைக்கப்பட்டு, ஐரோப்பாக் கண்டம் முழுவதும் நெப்போலியனுடைய காலடியில் கொண்டுவரப்பட்டது. ஆஸ்

திரியாவும், பிரஷ்யாவும் ஒடுக்கப்பட்டு, ரஷ்ய மன்னர் நெப்போலியன் நட்பை நாடினுர். ஐரோப்பிய வல்லரசு சமநிலே தகர்த்தெறியப்பட்டது. நெப்போலியனுடைய புகழ் உச்சநிலையை அடைந்தது. இருப்பினும் நெப்போலியனுடைய தொல்லேகள் முற்றிலும் மறைந்துவிடவில்லே. இங்கிலாந்துடனும், ஸ்வீடனுடனும் இன்னும் போர் முடிக்கப்படவில்லே. இங்கிலாந்தின் கடல் வலிமை நெப்போலியனுக்கு ஒரு பெரிய சவாலாக அமைந்தது. ரஷ்யாவுடன் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கை இவ்விரு நாடுகளிடையே நிரந்தர நட்புறவை வளர்க்க உதவவில்லே. எனவே இச்சமாதானம் நெப்போலியனே புகழ் ஏணியின் உச்சிக்கு கொண்டுசென்ருலும், அது அவனுடைய வீழ்ச்சியின் தொடக்கமாகவும் அமைந்து அவனது வாழ்க்கையில் ஒரு திருப்பு முனேயாகக் காணப்படுகின்றது.

## நெப்போலியனின் கண்டத்திட்டம் tContinental System)-(1805-1812)

நெப்போலியனுக்கு இன்னும் அடிபணியாமல் போரிட்டுக் கொண்டிருந்த நாடு இங்கிலாந்து கடற்படை வலிமை பெற்றிருந்த இங்கிலாந்தின் கடல் ஆதிக்கத்தினுல் ஃபிரான்சின் திட்டங்கள் தோல்வியுற்றன. இங்கிலாந்தின் கொட்டத்தை அடக்க ஃபிரான்சிற்குக் கடலாதிக்கம் தேவை. ஆனுல் ஃபிரான்ஸ் நிலப்படை வலிமை பெற்றிருந்தது. இதனுல் என்ன பயன்? ஒரு திமிங்கிலத்தை ஒரு சிங்கம் தாக்குவது இயலாதது. எனவே இங்கிலாந்தை அடிப்பணியச் செய்ப நெப்போலியனின் மூளேயில் ஒரு புதிய திட்டம் உருவாகியது. அதுதான் இங்கிலாந்தின் மீது ஒரு பொருளாதாரத்தாக்குதலே மேற்கொள்வது ஆகும். ஃபிரான்சிற்கு கடல் வலிமை இல்லாதவரை கடலின் பாதுகாப்பு பெற்ற இங்கிலாந்தைத் தாக்குவது இயலாது என்பதை உணர்ந்த நெப்போலியன் இங்கிலாந்தை ஒடுக்க ஒரேவழி அதன் செல்வத்தைச் சீர்குலேப்பதின் மூலம்தான் என்று எண்ணினுர். இங்கிலாந்து சீரும், சிறப்புமிக்கு, செல்வ வளம் கொழிக்கும் ஒரு நாடாக விளங்கியதற்கு அந்நாட்டின் அயல் நாட்டு வாணிகம்தான் காரணம். பல குடியேற்றங்களேப் பெற்றிருந்த இங்கிலாந்து வியாபாரம் மூலமாக ஏராளமான பொருளே ஈட்டியது. மேலும் குடியேற்றங்களிலிருந்து மூலப்பொருள்களேப் பெற்று மக்களுக்குத் தேவைப்பட்ட பலவகைப் பொருள்களே பிரிட்டிஷ் தொழிற்சாலேகள் உற்பத்தி செய்து, வெளி நாடுகளுக்கு அனுப்பி கொள்ளே இலாபம் சம்பாதித்தது. எனவே இங்கிலாந்தின் இந்த வர்த்தக தொழில் துறை வளர்ச்சியை ஒழித்துவிட்டால், நாட்டின் பொருளாதார வளம்குன்றி, ஏழ்மை மலிந்து இங்கிலாந்தின் அரசியல் ஆதிக்கமும்

மறைந்துவிடும் என்பது நெப்போலியனின் எண்ணம். இந்த பொருளாதார வளர்ச்சியைக் குலைப்பதற்காக மேற்கொள்ளப் பட்டதுதான் கண்டத் திட்டம். ஐரோப்பிய நாடுகள் ஃபிரான் சுடன் கொண்டிருந்த வர்த்தகத் தொடர்பைத் துண்டிப்பதுதான் இதன் நோக்கம்.

இந்த திட்டத்தைச் செயல் படுத்துவதற்காக 1806-ல் நெப் போலியன் பெர்லின் ஆணைகளை வெளியிட்டார். (Berlin decrees) இதன்படி இங்கிலாந்து பொருளாதார முற்றுகைக்குள்ளாக்கப் பட்டது. எந்த நாடும் இங்கிலாந்துடனும், அதன் குடியேற்றங் களுடனும் வியாபாரம் செய்வது தடை செய்யப்பட்டது. ஐரோப்பியத் துறைமுகங்களில் இங்கிலாந்து கப்பல்களை அனு மதிக்கக்கூடாது என்று இந்த ஆணை கூறியது. இதற்கு பதிலளிக் கும் வகையில் இங்கிலாந்து ஒரு எதிர் ஆணையைப் பிறப்பித்தது. (Orders in Council), ஃபிரான்சுடனோ, அதன் கூட்டாளிகளுடனோ, வர்த்தகத்தில் ஈடுபட்டிருக்கும் கப்பல்கள் ஃபிரான்ஸ் செல்லு வதற்கு முன்பு இங்கிலாந்து துறைமுகங்களுக்கு வந்து இங்கிலாந்து அரசாங்கத்தினிடமிருந்து அனுமதி பெற்ற பிறகுதான் ஃபிரான் சிற்குச் செல்லவேண்டும் என்று இந்த ஆணைகள் கூறின. மிலான் ஆணைகள் (Milan decrees 1807), ஃபோன்டெயின்புரோ ஆணைகள் (Fontainebleau Decrees 1810) மூலமாக நெப்போலியன் இத்திட் டத்தை மேலும் தீவிரமாகச் செயல்படுத்தினார். தொடக்கத்தில் இத்திட்டம் அவருக்கு வெற்றியைத் தேடித்தந்தது. ஐரோப்பாக் கண்டத்தின் பெரும் பகுதி இவர் ஆதிக்கத்தில் இருந்ததால் இத் திட்டத்தைச் செயல்படுத்துவது சாத்தியமாயிற்று; நடுநிலை நாடுகளான டென்மார்க், ஸ்வீடன் கூட அவருடைய ஆணைகளுக் குக் கீழ்படிந்தன. ரஷ்யாவும் இத்திட்டத்தை செயல்படுத்த ஒப்புக்கொண்டது. இங்கிலாந்தும் தன் எதிர் நடவடிக்கையை தீவிரமாகச் செயல் படுத்தியது. இத்திட்டத்தினால் இங்கிலாந் திற்கு பல இன்னல்கள் விளைந்தன என்பது ஒருபுறமிருக்க, ஃபிரான் சிற்கும் இதைவிட இருமடங்கு தொல்லைகள் ஏற்பட்டன. தங் களுக்குத் தேவைப்பட்ட பொருள்கள் எளிதில் கிடைக்காததால் ஃபிரான்ஸ் மக்களே இத்திட்டத்தை கைவிடத்தயாராக இருந் தனர், இத்திட்டத்தினால் இங்கிலாந்து நாட்டுப்பொருள்கள் ஐரோப் பிய சந்தைகளுக்கு அனுப்பப்படுவது தடைப்பட்டு, இங்கிலாந்தின் வியாபாரம் பெரிதும் பாதிக்கப்பட்டது. வெளிநாடுகளிலிருந்து எதிர்நோக்கியிருந்த சில பொருள்களை ஃபிரான்ஸ் பெறமுடியாத தால் ஃபிரான்சு மக்கள் அல்லலுற்றனர், டென்மார்க் போன்ற நடு நிலை நாடுகளுடன் இங்கிலாந்து போரில் ஈடுபடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஐரோப்பாவெங்கும் மக்களுக்குத் தேவைப்பட்ட

பொருளின் விலையும், குறிப்பாக உணவுப் பொருள்களின் விலையும், ஏறியது உணவுப் பொருள் பற்றுக்குறை ஏற்பட்டு மக்கள் அவதிப் பட்டார்கள். இங்கிலாந்து நாட்டுப் பொருள்களை உபயோகித்துப் பழக்கப்பட்ட ஃபிரான்சு மக்கள் அவையில்லாமல் தங்கள் அன்றாட வாழ்க்கை நடத்த முடியாமல் கள்ளக்கடத்தல் மூலம் அப் பொருள்களைப் பெற்றனர். இவ்வாருக நெப்போலியனுடைய நாட்டிலேயே நெப்போலியனின் திட்டத்தின் வெற்றிவாய்ப்புகள் குறைந்துகொண்டே வந்தன. நடைமுறையில் இந்த திட்டத் தைத் தொடர்ந்து அமுல் படுத்துவதில் பல இடையூறுகள் இருந்த தஞல் ஐரோப்பிய அரசுகள் ஒன்றன்பின் ஒன்ருக இத்திட்டத்தைக் கைவிடத் தொடங்கின. போர்சுகல் இதற்கு வழிகாட்டியாக அமைந்தது. அந்நாட்டைத் தொடர்ந்து ஸ்பெயினும், ரஷ்யாவும் இத்திட்டத்தை அமுல்படுத்த மறுத்தன. எனவே இத்திட்டம் தோற்றது.[1] இதன் உடனடி விளைவு ஸ்பெயின் போர்சுகல் நாடு களுடன் ஃபிரான்ஸ் ஒரு போரில் ஈடுபடவேண்டியதாயிற்று. இப் போர்தான் தீபகற்பப் போர் ஆகும். கண்டத் திட்டம் ஏன் வெற்றிபெறவில்லை? இதுபோன்ற ஒரு திட்டம் வெற்றிபெறு வதற்கு கடல் வலிமை இன்றியமையாதது. இந்த இன்றியமையாத தேவையை ஃபிரான்ஸ் பெற்றிருக்கவில்லை. எனவே ஐரோப்பாவை யும் இங்கிலாந்தையும் வாணிகத் தடைக்குள்ளாக்குவது அவ்வளவு எளிதான காரியமன்று. ஆனல் இங்கிலாந்து கடல் ஆதிக்கம் பெற்றிருந்ததால் அதன் எதிர் நடவடிக்கை வெற்றிகரமாக அமைந்தது. இரண்டாவதாக எல்லா ஐரோப்பிய நாடுகளின் இதயபூர்வமான ஒத்துழைப்பையும் நெப்போலியன் பெறமுடிய வில்லை. மூன்ருவதாக இந்தத் தடைகளையும் மீறி இங்கிலாந்து நாட்டுப் பொருள்கள் கள்ளக்கடத்தல்மூலம் ஐரோப்பிய நாடு களுக்கு கொண்டுவரப்பட்டன. இதை நெப்போலியன் தடுக்க முடியவில்லை. நான்காவதாக துருக்கிப் பேரரசு நெப்போலிய னின் முற்றுகைக் குட்படாததால், இங்கிலாந்து நாட்டுப் பொருள் கள் துருக்கி மூலமாக ஐரோப்பாவெங்கும் வந்து குவிந்தன. ஐந்தாவதாக இத்திட்டத்தினல் பிரெஞ்சு மக்களுக்கு ஏற்பட்ட இன்னல்கள் அவர்கள் இத்திட்டத்தை வெறுக்கும்படி செய்தது. ஆருவதாக போப் இத்திட்டத்தைச் செயல்படுத்த மறுத்ததால் நெப்போலியன் அவரைப் பதவியிலிருந்து விலக்கி சிறைப்படுத்தி ஞர். இதனல் நெப்போலியன் கத்தோலிக்கர்களின் தீராப் பகையைச் சம்பாதித்துக்கொண்டார். இவ்வாருக கண்டத் திட்டத்தின் தோல்வி நெப்போலியனின் வீழ்ச்சிக்கே ஒரு காரண மாக அமைந்தது.

[1] "When stripped of all its political trappings. the continental system of Napolean was the most mistaken and disastrous of fiscal inventions"

தீபகற்பப் போர் (Peninsular war) 1808-1814 காரணங்கள்

1. போர்சுகல் கண்டத் திட்டத்தை அமுல்படுத்த மறுத்தது. நெப்போலியனின் திட்டத்தை முறியடிக்கப் போர்சுகல் இங்கிலாந்தின் உதவியை நாடியது. (2) கண்டத் திட்டம் வெற்றிகரமாக செயல்படுத்தப்பட்டு எதிர்பார்த்தபலன் கிடைக்கவேண்டுமானல் ஸ்பெயினும், போர்சுகலும் ஃபிரான்சின் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட வேண்டும். (3) எனவே நெப்போலியன் போர்சுகல் மீது படையெடுத்து லிஸ்பன் நகரத்தைக் கைப்பற்றினர். நெப்போலியனின் நோக்கம் போர்சுகலைக் கைப்பற்றுவது மட்டுமல்ல, தங்கள் நாட்டையும் இந்த நிலைக்குள்ளாக்க வேண்டுமென்பது தான் நெப்போலியன் திட்டம் என்பதை உணர்ந்த ஸ்பானிய மக்கள் இளவரசர் ஃபர்டினண்டின் தலைமையில் நெப்போலியனை எதிர்க்கத் துணிந்தனர். நெப்போலியன் நான்காம் சார்லசைப் பதவியிலிருந்து விலக்கி, இளவரசர் ஃபர்டினண்டைச் சிறைப்படுத்தி தன் மூத்த சகோதரர் ஜோசப் போன பார்டேயை ஸ்பெயினின் அரியணையில் அமர்த்தினர். தேசிய உணர்வால் உந்தப்பட்ட ஸ்பானிய மக்கள், இந்த அநீதியை எதிர்த்துக் கொதித்தெழுந்தனர். ஃபிரான்சின் ஆதிக்கத்தை எதிர்த்து ஒரு தேசிய எதிர்ப்பு உருவாகியது. சமய குருமார்களும், பிரபுக்களும் பாமர மக்களும் வேறுபாடு ஏதுமின்றி அந்நிய ஆதிக்கத்தை ஒழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டனர். இந்த மக்கள் போராட்டத்தை எதிர்த்து நிற்க முடியாமல் பிரெஞ்சுத் துருப்புக்கள் பல இடங்களில் பின்வாங்க நேரிட்டது. இந்நிலையில், இங்கிலாந்து, ஸ்பெயினிற்கும், போர்ச்சுக்களுக்கும் ஆதரவாக போரில் தலையிட முடிவு செய்தது. சர் ஆர்தர் வெல்லஸ்லி (வெலிங்டன் பிரபு) ஒரு பெரிய ஆங்கிலப் படையுடன் ஸ்பெயினில் வந்து இறங்கினர்.

போர் தொடங்கியது. ஸ்பானிய மக்கள் தங்கள் உரிமைகளையும் உடமைகளையும் காக்கும் பொருட்டு கொரில்லா முறையில் வீராவேசத்துடன் போரிட்டனர். பிரெஞ்சுப் படைகள் தங்களுக்குத் தேவையான பொருள்களைப் பெற முடியாவண்ணம் தொடர்புகள் துண்டிக்கப்பட்டன. வெல்லஸ்லியின் படைகள் பிரெஞ்சுப் படைகளை விமியரோப்போரில் (Battle of Vimiero-1808) முறியடித்தன. இந்தத் தோல்வியை அடுத்து நெப்போலியன் தானே படைத்தலைமையை ஏற்று ஸ்பெயினில் நுழைந்தார். மாட்ரிட் நகரம் பிடிபட்டது. 1809-ல் பிரெஞ்சுப் படைகளும் ஆங்கிலேயப் படைகளும் மீண்டும் டலவேரா (Talavera) என்ற போர்க்களத்தில் சந்தித்தன. வெல்லஸ்லியின் படைகள் வெற்றி பெற்றன. வெல்லஸ்லியை ஸ்பானிய தீபகற்பத்திலிருந்து விரட்டும்

பொறுப்பை, தன் படைத் தலைவர்களுள் மிகச் சிறந்தவரான மாசினு (Massene) என்பவரிடம் நெப்போலியன் ஒப்படைத்தார். நிலைமையைப் புரிந்துகொண்ட வெல்லஸ்லி போர்சுகலில் டாரஸ் வெட்ராஸ் (Torresvedras) என்ற இடத்தில் தற்காப்பு அரண்களை அமைத்து, அவ்வரண்களின் பின்னிருந்தே தற்காப்புப் போர் நடத்தினர். 1810-11ல் இந்த அரண்களைத் தகர்க்க பிரெஞ்சுப் படைகள் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. இறுதியில் பிரெஞ்சுப் படைகள் ஆங்கிலேயப் படைகளால் விரட்டப்பட்டு ஸ்பெயினில் நுழைந்தன. இப்போருக்கிடையில் 1812-ல் நெப்போலியன் ரஷ்யா மீதும் போர் தொடுத்ததால் ஸ்பானிய போர் முனையிலிருந்து பிரெஞ்சுப் படைகள் ரஷ்யப் படையெடுப் பிற்காகத் திருப்பி அழைக்கப்பட்டன. இதனல் ஸ்பெயினில் ஃபிரான்சின் நிலைமை பலவீனமடைந்தது. 1812-ல் நடந்த சலமாங்கா (Battle of Salamanca) போரில் வெல்லிங்டன் பிரபு மீண்டும் ஒரு பெரு வெற்றியைப் பெற்றார். ஜோசப் போன பார்டே மாட்ரிட் நகரிலிருந்து தப்பி ஓட்டம் பிடித்தார். பிரெஞ்சுப் படைகள் மாட்ரிட் நகரைக் கைப்பற்றின. பிரெஞ்சுப் படைகள் தங்கள் தாய்நாட்டுடன் கொண்டிருந்த தொடர்பு துண்டிக்கப்பட்டது. 1813-ல் விட்டோரியா என்ற இடத்தில் நடந்த சண்டையில் மீண்டும் பிரெஞ்சுப் படைகள் படுதோல்வியடைந்தன. (Battle of Vittoria) பிரெஞ்சுப் படைகள் தாய்நாடு நோக்கி ஓட்டம் பிடித்தன. ஸ்பெயின் ஃபிரான்சின் பிடியிலிருந்து விடுபட்டது. வெல்லஸ்லி பிரபு ஃபிரான்சின்மீது படையெடுக்க ஆயத்தமானார். இவ்வாறு தீபகற்பப் போர் நெப்போலியனின் படுதோல்வியில் முடிந்தது. இப் போரினல் ஃபிரான்சின் செல்வ வளம் கரைந்து, நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்பட்டது. யாராலும் வெல்ல முடியாத பெரும் வீரர் என்ற நெப்போலியனின் பெருமை பொய்ப்பிக்கப்பட்டது. இதன் விளைவாக ஃபிரான்சின்மீது இங்கிலாந்தின் படையெடுப்பு திட்ட மிடப்பட்டது.

### நெப்போலியனின் ரஷ்யப் படையெடுப்பு (1812)

டில்சிட் உடன்படிக்கைக்குப் பிறகு நெப்போலியனுக்கும் ரஷ்ய மன்னருக்குமிடையே நிலவி வந்த நட்புறவு மறையத் தொடங்கியது. ஐரோப்பாவை இவ்விரு நாடுகளும் பங்கிட்டுக் கொள்ள வேண்டும் என்ற ஆசை வார்த்தைகள் பேசி, நெப்போலியன் ரஷ்ய மன்னருடைய உதவியைப் பெற்றார். ஆனல் உண்மையில் நடந்தது என்னவெனில் ஐரோப்பா முழுவதையும் ஃபிரான்ஸ் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டது. அதுமட்டு

மின்றி ஸ்வீடன், துருக்கி போன்ற நாடுகளுக்கெதிராக ரஷ்யா வின் திட்டங்களுக்கு நெப்போலியன் எந்தவித ஆதரவும் அளிக்க வில்லை. Grand Duchy of Warsaw என்ற அரசை உருவாக்கியதின் மூலம் ரஷ்யாவின் பரம்பரை எதிரியான போலந்துக்கு நெப்போலியன் புத்துயிர் அளித்ததை ரஷ்யா விரும்பவில்லை, ஃபிரான்சின் செல்வாக்கு போலந்தில் வளருவதையும் ரஷ்ய மன்னர் விரும்பவில்லை. ரஷ்ய மன்னரின் அவநம்பிக்கையையும், அச்சத்தையும் போக்கி மீண்டும் நட்புறவை வளர்க்கும் நோக்கத் துடன் 1808-ல் நெப்போலியன் ரஷ்ய மன்னர் அலெக்சாந்தரை எர்ஃபர்ட் (Eurfurt) என்ற இடத்தில் சந்தித்துப் பேசினர். ஆனல் இச்சந்திப்பு எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை. அலெக்சாந்தரின் சகோதரியின் கணவரான ஒல்டன்பர்க் பிரபுவை (Duke of Oldenburg) பதவியிலிருந்து விலக்கி, ஒல்டன்பர்க் அரசை நெப்போலியன் கைப்பற்றியது கசப்புணர்ச்சியை மேலும் வளர்த் தது. இவற்றிற்கெல்லாம் மேலாக கண்டத் திட்டத்தைச் செயல் படுத்த ரஷ்யா மறுத்ததால் நெப்போலியன் ஆத்திரமடைந்தார்.

பிரஷ்யா, ஆஸ்திரியா, இத்தாலி ஆகிய நாடுகளின் படை உதவியோடு 1812ஆம் ஆண்டு ஜுன் மாதம் ஒரு மாபெரும் படையுடன் நெப்போலியனின் ரஷ்யப் படையெடுப்பு தொடங் கியது. ஸ்வீடன், துருக்கி ஆகிய நாடுகளுடன் சமாதானம் செய்து கொண்டு ரஷ்யா போருக்குத் தன்னை ஆயத்தம் செய்து கொண்டது. நேருக்குநேர் பிரெஞ்சுப் படைகளுடன் மோதுவ தில் உள்ள ஆபத்தை நன்கு உணர்ந்த ரஷ்யர்கள் பிரெஞ்சுப் படைகளை நேருக்கு நேர் சந்திக்காமல், வழியிலிருந்த கிராமங்களை யும் பயிர்களையும் அழித்துக் கொண்டே பின்வாங்கிச் சென்றனர். எதிர்ப்பு ஏதுமின்றி பிரெஞ்சுப் படைகள் வெகு வேகமாக முன் னேறிக் கொண்டே வந்தன. ஒரே ஒரு முறை பொரோடினோ (Borodino) என்ற இடத்தில் எதிர்த்து நின்ற ரஷ்யப் படைகள் தோல்வியடைந்தன. நெப்போலியன் மாஸ்கோ நகரை அடைந் தார். பிரெஞ்சுப் படைகளை ரஷ்யாவின் எல்லைப்புறத்திலிருந்து வெகுதூரம் உட்பகுதியில் இழுத்துவிட வேண்டும் என்பதும், நெருங்கி வந்து கொண்டிருக்கும் பனிக்காலத்தில் பிரெஞ்சுப் படைகளை ரஷ்யாவில் சிக்கவைக்க வேண்டுமென்பதும் ரஷ்யர்கள் திட்டம்.' அத்திட்டம் நிறைவேறியது. நெப்போலியன் ரஷ்யர் களிடம் ஏமாந்தார். பிரெஞ்சுப் படைகள் மாஸ்கோவில் நுழைந்த பொழுது மாஸ்கோ நகரம் வெறிச்சோடியிருந்தது. ரஷ்ய தேசியவாதிகள் அந்நகரைத் தீயிட்டுக் கொளுத்தி, உணவுப் பொருள்களை நாசம் செய்திருந்தனர். பசியாலும், கடுங்குளிரா லும், பனிப்புயலாலும் பிரெஞ்சுப் போர்வீரர்கள் எல்லையற்ற


நெப்போலியன்
காலத்து ஐரோப்பா
நெப்போலியனின் நேரடி ஆதிக்கத்திற்குட் பட்ட பகுதிகள்
சார்பு நாடுகள்
நெப்போலியனின் நேச நாடுகள்
ரஷ்யப் பேரரசு
பிரான்ஸ் பேரரசு
துருக்கியப் பேரரசு

துன்பங்களுக்காளானார்கள். வேறு வழியின்றி நெப்போலியன் ரஷ்யாவிலிருந்து பின்வாங்க நேரிட்டது. பின்வாங்கிக் கொண்டிருந்த படைகள் மீது ரஷ்ய கொரில்லா வீரர்கள் தாக்குதல் நடத்தி தொல்லைகள் கொடுத்தார்கள். ஐந்து லட்சத்திற்கும் மேலான போர்வீரர்கள் உயிரிழந்தனர். 1812 டிசம்பரில் நெப்போலியன் ரஷ்யாவிலிருந்து தப்பி ஃபிரான்ஸ் வந்தடைந்தார். நெப்போலியன் தோல்வியைக் கேட்டறிந்த இங்கிலாந்து, ஆஸ்திரியா, பிரஷ்யா. ரஷ்யா ஆகிய நாடுகள் 1813-ல் நான்காவது கூட்டணியை அமைத்தன.

## நான்காவது கூட்டணியும், நெப்யோலியனின் வீழ்ச்சியும் (1813–1815)

நெப்போலியன் ரஷ்யாவில் அடைந்த தோல்வி அவருடைய புகழ் மங்குவதற்குக் காரணமாக இருந்தது. ஐரோப்பிய நாடுகள் அவர் ஆதிக்கத்தை எதிர்க்கத் தொடங்கின. தேசிய உணர்ச்சி மேலீட்டினால் ஜெர்மன் மக்கள் நெப்போலியன் ஆட்சியை எதிர்த்தனர். பிரஷ்ய அரசர் மூன்றும் ஃபிரெடரிக் வில்லியம் ரஷ்யாவுடன் உடன்பாடு செய்து கொண்டார். இவ்விரு நாடுகளும் நெப்போலியனை எதிர்த்துப் போராடத் தீர்மானித்தன. இங்கிலாந்தும், ஆஸ்திரியாவும் இந்நாடுகளுடன் சேர்ந்து கொண்டன. நான்காவது கூட்டணி இவ்வாறு உருவாயிற்று. இந்த நெருக்கடியான நிலையிலும் மனந்தளராத நெப்போலியன் ஆஸ்திரியாவில் புகுந்து ஆஸ்திரியப் படைகளை டிரெஸ்டன் (Dresden) போரில் தோற்கடித்தார். இதுதான் அவருடைய கடைசி வெற்றி. ஆனால் கூட்டணி நாடுகள் 1813-ல் நடந்த மூன்று நாள் போரில்— லீப்சிக் போர் (Battle of Leipzig or The Battle of the Nations October 16 - 19)—நெப்போலியனை முறியடித்தன. தோல்வியடைந்த நெப்போலியன் பாரிஸ் நோக்கி ஓட்டம் பிடித்தார். இத்தோல்வி அவருடைய பேரரசின் சிதைவுக்கு வழி வகுத்தது. ரைன் கூட்டரசு, வெஸ்ட்பேலிய அரசு, ஹாலந்து, டென்மார்க், இத்தாலி ஆகிய எல்லா நாடுகளும் நெப்போலியனின் ஆதிக்கத்தை எதிர்த்துக் கிளர்ச்சிகள் செய்தன.

அடுத்து, கூட்டணி நாடுகள் யாவும் ஃபிரான்சின் மீது நாலா பக்கங்களிலிருந்தும் படையெடுப்பை மேற்கொண்டன. இந்தப் படையெடுப்பிற்கு முன்பு, நெப்போலியன் சில நிபந்தனைகளுக்குட்பட்டால் அவருடன் சமாதானம் செய்துகொள்ளத் தயார் என்று கூட்டணி நாடுகள் அறிவித்தன. ஆனால் நெய்போலியன் இந் நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ள மறுத்தார். போர் தொடர்ந்தது. கூட்டணிப் படைகள் பாரிஸ் நகரை நோக்கி முன்னேறின.

நெப்போலியன் செயலிழந்தார். பாரிஸ் நகரம் சரணடைந்தது. (மார்ச், 1814) செனட் சபை நெப்போலியனைப் பதவியிலிருந்து விலக்கியது. அவர் எல்பா தீவிற்கு நாடு கடத்தப்பட்டார். ஃபிரான்சுடன் கூட்டணி நாடுகள் முதல் பாரிஸ் சமாதானத்தைச் செய்து கொண்டன. ஃபிரான்சில் மீண்டும் முடியாட்சி நிறுவப் பட்டு பதினாறும் லூயியின் தம்பி பதினெட்டாம் லூயி அரியணையி லமர்த்தப் பட்டார், நெப்போலியனால் சின்னாபின்னமாக்கப் பட்ட ஐரோப்பாவின் அரசியலமைப்பைத் திருத்தி அமைப்பது தான் ஐரோப்பிய அரசியல் தலைவர்களின் தலையாய கடமையாக இருந்தது. அதை நிறைவேற்றுவதற்காக 1815ஆம் ஆண்டில் ஐரோப்பிய வல்லரசுகளின் ஒரு மாநாடு வியன்னாவில் கூடியது.

ஐரோப்பிய வல்லரசுகள் வியன்னாவில் ஐரோப்பாவின் தலை விதியை நிர்ணயிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த பொழுது நெப்போலியன் எல்பாத் தீவிலிருந்து தப்பித்துமீண்டும் ஃபிரான்ஸ் வந்தடைந்தார். பிரெஞ்சு மக்களாலும், போர்வீரர்களாலும் ஆர்வத்துடன் வரவேற்கப்பட்ட அவர் மீண்டும் ஐரோப்பாவைத் தன் ஆதிக்கத்திற்குட்படுத்த முடியும் என்று நம்பினார். இவர் வரவைப் பற்றிக் கேள்விப்பட்ட பதினெட்டாம் லூயி இங்கிலாந் திற்கு ஓட்டம் பிடித்தார். ஃபிரான்ஸ் மீண்டும் நெப்போலியனை மன்னராக ஏற்றுக்கொண்டது. 1815, மார்ச்சு மாதம் இருப தாம் நாள் அவர் மன்னராக மீண்டும் பதவியேற்றது முதல், அதே ஆண்டு ஜுன் மாதம் பதினெட்டாம் நாள் அவர் வாடர்லூ போரில் தோல்வியடைந்து சிறைப் பிடிக்கப்படும் வரை இடைப் பட்ட காலப்பகுதி நெப்போலியன் வரலாற்றில் 'நெப்போலிய னின் நூறு நாட்கள்' (The Hundred Days) என்று அழைக்கப்படு கிறது. நெப்போலியன் ஃபிரான்சிற்குத் திரும்பியதைக் கேள்விப் பட்ட ஐரோப்பிய வல்லரசுத் தலைவர்கள் ஐரோப்பாவை இந்தப் பேராபத்திலிருந்து காப்பாற்ற வேண்டியதின் அவசியத்தை உணர்ந்தனர். தங்களுக்குள் இருந்த கருத்து வேறுபாடுகளை யெல்லாம் மறந்து அவர்களுடைய படைகள் ஃபிரான்ஸ் நோக்கிப் புறப்பட்டன. நெப்போலியன் மீண்டும் ஐரோப்பாவை வெல்லும் எண்ணத்துடன் அவசரமாக ஒரு படையைத் திரட்டிக் கொண்டு பெல்ஜியத்தில் நுழைந்தார். வெல்லிங்டன் பிரபுவின் தலைமையில் ஒரு ஆங்கிலப் படையும், புளூச்சரின் (Bleucher) தலைமையில் ஒரு பிரஷ்யப் படையும் பெல்ஜியத்தில் நுழைந்து பிரஸ்ஸல்ஸ் நகருக் கருகே வாடர்லூ (Waterloo) என்ற இடத்தில் 1815 ஜுன் மாதம் 18ஆம் நாள் நடந்த போரில் நெப்போலியனைத் தோற்கடித்தன. இந்நிகழ்ச்சி ஐரோப்பிய வரலாற்றில் ஒரு சகாப்தம் முடிவடைந்து மற்றொரு புதிய சகாப்தம் தொடங்கியதின் அறிகுறி என்று கருத

லாம். நெப்போலியன் ஆங்கிலப் படைகளால் சிறைப்பிடிக்கப் பட்டு செயிண்ட் ஹெலினு தீவிற்கு அனுப்பப் பட்டார். 1821 வரை கைதியாக வாழ்ந்து கொண்டிருந்த நெப்போலியனின் வாழ்க்கை அந்த ஆண்டுடன் முடிவடைந்தது. நெப்போலியன் தோல்வி அடைந்து அவருடைய பேரரசு அழிக்கப்பட்ட போதி லும், அவரால் ஐரோப்பா முழுவதும் பரப்பப்பட்ட புரட்சிக் கருத்துக்கள் அமரத்துவம் பெற்றன. அவர் பேரரசோடு அவை அழிந்து விடவில்லை. பத்தொன்பதாம் நூற்றுண்டில் அவை ஐரோப்பாவின் பொதுச் சொத்தாகக் கருதப்பட்டன.

நெப்போலியனின வீழ்ச்சிக்குக் காரணங்கள்

'புரட்சியின் குழந்தை' (Child of the Revolution) 'காலத்தை வென்றவர்' (Man of Destiny) என்றெல்லாம் வருணிக்கப்படும் மாவீரர் நெப்போலியன் அதிசயிக்கத் தக்க முறையில் ஃபிரான்சில் எழுச்சி பெற்று 1799 முதல் 1815 வரை ஐரோப்பிய வரலாற்று அரங்கை முழுதும் ஆக்ரமித்துக் கொண்ட ஒரு கதாநாயகனுக நமக்கு காட்சியளிக்கிறுர். எனவேதான் இக்காலப்பகுதி ஐரோப் பிய வரலாற்றில் ''நெப்போலியன் சகாப்தம்'' என்றழைக்கப்படு கிறது. 1807-ல் ரஷ்யாவுக்கும் ஃபிரான்சுக்குமிடையே ஏற்பட்ட டில்சிட் சமாதானம் நெப்போலியன் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. அந்த நிகழ்ச்சி அவருடைய வீழ்ச்சியின் தொடக்கத்தைக் குறிக்கிறது என்று சில வரலாற்றறிஞர் கருதுவர்.

நெப்போலியனின் பேரரசிலேயே அதன் வீழ்ச்சியின் வித்துக் கள் காணப்பட்டன. அவர் தன் பேரரசை நிறுவுவதற்குக் கையாண்ட முறைகள் சட்டத்திற்கும், நல்லொழுக்க நெறிமுறை களுக்கும் அப்பாற்பட்டிருந்தன, ஆளுங் குடும்பங்களின் நலனைப் பற்றிச் சிறிதும் கவலைப் படாமல் வன்முறையில் அவர் பல அரசு களைக் கைப்பற்றினுர். அவர் பகைத்துக் கொள்ளாத ஐரோப்பிய நாடுகள் மிகக் குறைவு. எனவே இவருக்கெதிராக ஒரு பலம் பொருந்திய ஐரோப்பியக் கூட்டணி உருவாகியது. எனவே அவர் உருவாக்கிய பேரரசை அவரே அழிக்கக் காரணமாக இருந்தார் என்று கூறுவது பொருத்தமுடையதாகும். மேலும் அவருடைய பேரரசு பல முரண்பாடுகளை தன்னுட் கொண்டிருந் தது. எடுத்துக்காட்டாக நெப்போலியன் மக்களுக்கு சமத்துவம் சுதந்திரம், (Liberty), எதேச்சாதிகார ஆட்சியிலிருந்து விடுதலை போன்றவற்றை அளிப்பதாக உறுதி கூறினுர். ஆனுல் அவர் நடைமுறையில் இக் கருத்துக்களுக்கு நேர்மாறுன முறையில் செயல்பட்டார்.

ஒன்றன்பின் ஒன்றுகத் தொடர்ந்து பல போர்களில் ஈடுபட்ட தால் நெப்போலியன் பேரிழப்பிற்கு ஆளானுர். தீபகற்பப் போரிலும், ரஷ்யப் படையெடுப்பிலும் நெப்போலியனுக்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது. பயிற்சி மிக்க படைகள் அழிந்து போயின. இதனுல் நெப்போலியனுடைய படை வலிமை சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. தொடக்கத்தில் பிரெஞ்சுப் படை வீரர்களிடையே இருந்த ஆர்வமும், போர் ஆற்றலும் பிறகு காணப்படவில்லே. மேலும் நெப்போலியன் தன் படை களைத் தன்னுடைய எதேச்சாதிகாரத்தை ஏற்படுத்த ஒரு கருவி யாகப் பயன்படுத்திக் கொண்டதால் ஐரோப்பிய மக்கள் அவரு டைய படைகளை வெறுக்கத் தொடங்கினர். இதனுல் தேசியம் வளர்ந்து பல கிளர்ச்சிகள் தோன்றின. இவருடைய படையில் ஜெர்மானியர், இத்தாலியர், போலந்துக்காரர் போன்ற பல்வேறு நாட்டைச் சேர்ந்தவர்களும் இருந்ததால் அவர்களுக்குப் ஃபிரான்சின் வெற்றியில் அக்கரை இல்லே. மேலும் இவர் ஆட்சியின் கடைசிக் கட்டத்தில் இவருடைய போர்த் திறமையும் குன்றி விட்டதால் தோல்வி தவிர்க்க முடியாத ஒன்ருகி விட்டது என்று சிலர் கருதுவர். போர்க்களத்தில் தயக்கம், போர்முறை களில் தவறுகள், படைகளை நடத்திச் செல்வதில் வேகக் குறைவு ஆகியவை பிற்காலத்தில் காணப்பட்ட குறைபாடுகளாகும்.

இவருடைய ஸ்பானிய ரஷ்யப் படையெடுப்புகளும், கண்டத் திட்டமும் இவர் செய்த மாபெருந் தவறுகளாகும். இப்போர்கள் மற்ற நாடுகளில் தேசிய உணர்வைத் தூண்டிவிட்டு நெப்போலிய னுக்கு மாபெரும் எதிர்ப்பை உருவாக்கின. தான் படையெடுத் துச்சென்ற நாடுகளிளெல்லாம் சட்டப்படி அரியணையிலிருந்த அரசர்களை அகற்றி, தன் உறவினர்களையும் நண்பர்களையும் பதவி யிலமர்த்தி கொடுங்கோலாட்சியை ஏற்படுத்தியதால் தேசிய உணர்வு மேலோங்கி மக்கள் நெப்போலியனை எதிர்த்துப் போராடத் துணிந்தனர்.

அளவுக்கு மீறிய தன்னம்பிக்கை, தான் என்ற செருக்கு ஆகியவையும் இவர் தோல்விக்குக் காரணங்களாகும். தானே தனித்து நின்று எதையும் சாதித்துவிட முடியும் என்ற நம்பிக் கையில் எல்லா நாடுகளையும் இவர் பகைத்துக் கொண்டார். அரச தந்திரத்தில் தேர்ச்சியும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை யும் இவரிடம் இல்லே, எனவே தான் இறுதிக் கட்டத்தில் கூட கூட்டாளி நாடுகள் இவருடன் சமரசம் செய்துகொள்ள விரும்பிய பொழுது, அவ்வேண்டுகோளைப் புறக்கணித்து தன் வீழ்ச்சிக்குத் தானே வழிவகுத்துக் கொண்டார்.

கடைசியாக இவருடைய வீழ்ச்சிக்கு முக்கிய காரணமாக இருந்தது இங்கிலாந்தும் அந்நாடு மேற்கொண்ட முயற்சிகளும் ஆகும். இங்கிலாந்தின் கடல் வலிமையை இறுதிவரை இவரால் ஒடுக்க முடியவில்லை. இங்கிலாந்தின் பொருளாதார, செல்வ வளம் அதன் கடல் வலிமையை நிலைநாட்டிக் கொள்ள உதவியது மட்டுமல்லாமல், பல்வேறு முனைகளில் போரை நடத்தவும், ஃபிரான்சுக்கு எதிராக பல நாடுகளுக்குத் தொடர்ந்து படையுதவி, பண உதவி செய்யவும் பயன்பட்டது.

## நெப்போலியன் ஆட்சியும், அவருடைய நிர்வாகச் சீர்திருத்தங்களும்

ஜினேவா அரசிற்குச் சொந்தமானதும், அண்மையில் ஃபிரான்சிடம் ஒப்படைக்கப்பட்டதுமான கார்சிகா தீவில் 1769ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் நாள் சார்லஸ் போனபார்டே என்பவருக்கு நான்காவது குழந்தையாய் பிறந்தவர் நெப்போலியன். இளமைப் பருவத்திலிருந்தே தன் தாய் நாடான கார்சிகாவை ஃபிரான்சின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்க வேண்டுமென்ற எண்ணம் இவர் மனதில் வேரூன்றி யிருந்தது. எனவே ஒரு போர்வீரராகப் பணிபுரிய வேண்டுமென்பது அவர் அவா. முதலில் பிரெஞ்சு இராணுவப் பள்ளி ஒன்றில் சேர்ந்து பயிற்சி பெற்று பிறகு பிரையன் நகரத்திலுள்ள இராணுவக் கல்லூரியிலும், பாரிஸ் நகரத்து இராணுவப் பயிற்சிப் பள்ளியிலும் பயின்று, 1785-ல் பயிற்சி முற்றுப் பெற்று பிரெஞ்சுப் படையில் பீரங்கித் துறையில் பணியேற்றார், 1788—1791 ஆண்டுகளுக்கிடையே இருமுறை இவர் இராணுவப் பணியிலிருந்து விடுமுறை பெற்று தன் தாய்நாடு சென்று அந்நாட்டு விடுதலை இயக்கத்தில் பங்கு கொண்டார். 1971-ல் மீண்டும் பிரெஞ்சு இராணுவத்தில் பணியேற்ற இவர், பிரெஞ்சுப் புரட்சி நிகழ்ச்சிகளில் மிக்க ஈடுபாடு காட்டினார். ரோபஸ்பியரின் கருத்துக்களால் பெரிதும் கவரப்பட்ட இவர் ஜாகோபின் இயக்கத்தின் ஆதரவாளராக விளங்கினார். 1794-ல் ரோபஸ்பியரின் வீழ்ச்சிக்குப் பிறகு, அவருடன் கொண்டிருந்த நெருங்கிய தொடர்பு காரணமாக பிரெஞ்சு அரசாங்கம் இவரைக் கைது செய்தது. விரைவிலேயே விடுதலையடைந்த நெப்போலியனுக்குத் தன் திறமையைக் காட்ட நல்லதொரு வாய்ப்பு கிட்டியது. தேசிய கன்வென்ஷனுக்கு எதிராக முடியாட்சி ஆதரவாளர்கள் செய்த கிளர்ச்சியை ஒடுக்கும் பணி நெப்போலியனிடம் ஒப்படைக்கப்பட்டது. இப்பணியை வெற்றிகரமாகச் செய்து முடித்த நெப்போலியனுக்கு இன்னும் பல வாய்ப்புகள் காத்துக் கொண்டிருந்தன. இவருடைய படைத்துறை ஆற்றலைக் கண்ட டைரக்டரி அரசாங்கம் இவரை ஆஸ்திரி

யாவுக்கு எதிராகப் போரிட இத்தாலிக்கு அனுப்பியது (1796-97) இப்போரில் வெற்றி வாகைசூடித் திரும்பிய நெப்போலியனை பிரெஞ்சு மக்கள் வீர வணக்கம் செலுத்தி வரவேற்றனர். 1798-99-ல் இங்கிலாந்தை எதிர்த்துப் போரிட ஒரு பெரும் படையுடன் எகிப்திற்கு அனுப்பப்பட்ட நெப்போலியன் 1799-ல் ஃபிரான்சிற்குத் திரும்பி, மக்கள் ஆதரவை இழந்திருந்த டைரக்டரி அரசாங்கத்தை ஒரு இராணுவப் புரட்சி மூலம் கவிழ்த்துவிட்டு பதவியைக் கைப்பற்றினர். Constitution of the year VIII என்றழைக்கப்பட்ட புதிய அரசியலமைப்பின்படி ஃபிரான்சின் கான்சல்கள் ஆட்சி ஏற்படுத்தப் பட்டது. இந்த கான்சுலேட் (Consulate) ஆட்சி முறையின் நடுநாயகமாக விளங்கியவர் முதல் கான்சல் பதவியை வகித்த நெப்போலியன் ஆவார். 1799-ல் பத்து ஆண்டுகளுக்குக் கான்சலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நெப்போலியன் 1802-ல் தன் ஆயுள் முழுவதும் கான்சலாகப் பதவி வகிக்கும் அதிகாரத்தை மக்களிடமிருந்து பெற்றார். இதுவரை ஃபிரான்ஸ் பெயரளவிலாவது ஒரு குடியரசாகத் திகழ்ந்து வந்தது. 1804-ல் நெப்போலியன் விருப்பத்திற்கிணங்க பிரெஞ்சுக் குடியரசு பிரெஞ்சுப் பேரரசாக அறிவிக்கப்பட்டு, நெப்போலியன் ஃபிரான்ஸ் நாட்டின் பேரரசராக முடிசூட்டப்பட்டார். முதல் பேரரசு என்று பிரெஞ்சு வரலாற்றில் அழைக்கப்பட்ட இது, இதற்கு முன்பிருந்த பூர்போன் அரசிலிருந்து வேறுபட்டிருந்தது. திறமையுடன் செயல்பட்டதோடு மட்டுமின்றி மக்களின் ஆதரவின் அடிப்படையில் இவ்வரசு அமைந்திருந்தது.

கான்சலாகப் பதவி ஏற்றவுடன் நிர்வாகத் துறையில் இவர் ஆற்றிய பணிகள் மகத்தானவை. இவர் படைத்துறை வெற்றிகள் நிலைத்து நிற்காவிடினும் இவர் நிர்வாகத் துறையில் ஆற்றிய சாதனைகள் கருங்கல் அடித்தளத்தின் மீது அமைக்கப்பட்ட கட்டிடம் போல அழியாத்தன்மை பெற்று இவருடைய புகழைப் பறைசாற்றிக்கொண்டு நீண்ட நெடுங்காலம் நிலைத்து நின்றன.[1] அந்த நிர்வாகப் பணிகளைப் பற்றி இங்கு சற்று விரிவாக ஆராயலாம். புரட்சி தோன்றிய நாளிலிருந்து ஃபிரான்சின் நிர்வாக அமைப்பு சீர்குலைந்து நாடே குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது இக் குழப்ப நிலையிலிருந்து ஃபிரான்ஸை மீட்டு ஒரு செம்மையான நிர்வாகத்தை அமைப்பது நெப்போலியனின் உடனடிப் பணியாக இருந்தது. இப் பணியை 1709-1804 காலப் பகுதியில் நெப்போலியன் செய்து முடித்தார். அதிகாரத்தை ஒரு முனைப்

[1] "If the conquests of Napoleon were ephemeral his civilian work in France was built upon granite"

படுத்தி வலுப்படுத்துதல், புரட்சியின் தீவிரவாதிகளால் கொடுமைக்குள்ளாக்கப்பட்ட முடியாட்சியின் ஆதரவாளர்களுடனும், பிரபுக்களுடனும், திருச்சபையுடனும் சமரசம் செய்து கொள்ளுதல் ஆகியவை இவருடைய நிர்வாகப் பணியின் அடிப்படை நோக்கங்களாகும்.

### ஸ்தல நிர்வாகம்

கான்சல் ஆட்சி என்றழைக்கப்பட்ட நெப்போலியன் ஆட்சியில் அதிகாரம் முழுவதும் முதல் கான்சல் கையில் குவிக்கப்பட்டிருந்தது. மத்திய அரசைப் பொருத்தவரை சட்டமியற்றும் அதிகாரம், நீதி, நிர்வாகத்துறை அதிகாரங்கள் யாவும் முதல் கான்சலே பெற்றிருந்தார். ஸ்தல ஆட்சி முறையைப் பொருத்த வரை தன் அதிகாரத்தை நிலைநாட்டவும், ஸ்தல ஆட்சி முறை செவ்வனே இயங்கவும் நெப்போலியன் சில சீர்திருத்தங்களை மேற்கொண்டார். டிபார்டுமெண்ட்கள் (Departments), கம்யூன்கள் (Communes) போன்ற பகுதிகளை நிர்வகிக்கும் பொறுப்பு தேர்ந்தெடுக்கப்பட்ட கவுன்சில்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. தன்னுடைய வல்லாட்சியை ஏற்படுத்தும் நோக்கத்துடன் நெப்போலியன் அந்த அதிகாரத்தை பிரிபெக்டுகள் (Prefects), துணைபிரிபெக்டுகள் (Sub-Prefects), மேயர்கள் போன்ற தன்னால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளிடம் கொடுத்தார். மாநிலங்களின் போலீஸ் நிர்வாகம் முதல் கான்சலின் அதிகார வரம்பிற்குட்படுத்தப்பட்டது. 1791ஆம் ஆண்டு அரசியலமைப்பு புகுத்திய நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படும் முறை ஒழிக்கப்பட்டு, நீதிபதிகள் நெப்போலியனால் நியமிக்கப்பட்டனர். இந்தப் புதிய முறையில் நிர்வாகமும், அமைதிப் பராமரிப்பும் செவ்வனே நடைபெற்றன. திறமை உடையவர் எவரும் அரசுப் பணிக்கு வரலாம் என்ற அடிப்படையில் எந்தவித வேறுபாடுமின்றி திறமை வாய்ந்தவர்கள் அரசுப் பணிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### நிதி

பூர்போன் அரசாங்கமும், டைரக்டரி அரசாங்கமும் பல இன்னல்களுக்குள்ளானது, அவற்றின் தவறான நிதிக் கொள்கைதான் என்பதை உணர்ந்த நெப்போலியன் நிதி நிர்வாகத்தில் மிக விழிப்புடன் செயல்பட்டார். நிதி நெருக்கடி ஏற்படாமலிருக்க பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அரசாங்கத்திற்கு வரி செலுத்துவது பொதுமக்களுடைய கடமை என்பதை உணர்த்தி, பல ஆண்டுகளாக வசூல் செய்யப்படாமல் இருந்த வரிகள் வசூலிக்கப்பட்டன. மது, புகையிலை, உப்பு முதலிய

பொருள்கள்மீது மறைமுக வரிகள் விதிக்கப்பட்டன. அரசாங்கச் செலவுகளில் சிக்கனம் கடைப் பிடிக்கப்பட்டது. நிர்வாகத்தில் இலஞ்ச ஊழல், திறமையின்மை போன்ற குறைபாடுகள் அகற்றப் பட்டன. அரசாங்கக் கணக்குகள் தணிக்கைக்குள்ளாக்கப் பட்டன. வரிவசூல் அதிகாரிகள் நடவடிக்கைகள் நன்கு கண்காணிக்கப்பட்டன. மேற்கூறிய நடவடிக்கைகளின் விளைவாக நாட்டின் நிதிநிலை சீரடைந்தது. 1800-ல் பிரெஞ்சு மத்திய வங்கி (Bank of France) ஒன்று நிறுவப்பட்டது. கடன் கழிவு நிதி (Sinking Fund) ஒன்றையும் நெப்போலியன் ஏற்படுத்தினார். மேலும் ஓயாத போர்களினால் நாட்டின் நிதி நிலைமை பாதிக்கப் படாமல் இருப்பதற்காக, தோல்வியுற்ற நாடுகளிடமிருந்து வசூலிக்கப்பட்ட போர் இழப்பீட்டுத் தொகைகளை ஒரு தனி நிதி யாகச் சேமித்து வைத்து, போர்ச் செலவுகளுக்கு அந்நிதி பயன் படுத்தப்பட்டது.

### பிரபுக்களுடன் சமரசம்

புரட்சியின் பொழுது ஏராளமான பிரபுக்கள் அந்நிய நாட்டிற்கு ஓடி விட்டனர் என்பதை முன்பு பார்த்தோம். நெப்போலியன் அவர்களை மீண்டும் ஃபிரான்சிற்கு வருமாறு அழைத்தார். அவர்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட சொத்துகளும் நிலங்களும் அவர்களுக்குத் திருப்பித் தரப்படும் என்று உறுதி அளித்தார். அரசாங்கப் பணிகளுக்கு அவர்களும் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்று அறிவித்தார். இவற்றின் மூலம் தன்னுடைய ஆட்சிக்கு பிரபுக்களின் ஆதரவையும் பெற முயற்சித்தார்.

### போப்புடன் சமரசம் (Concordat 1801)

புரட்சிக் காலத்தில் பிறப்பிக்கப்பட்ட புதிய திருச்சபைச் சட்டம் அரசாங்கத்திற்கும், திருச்சபைக்குமிடையே நிலவி வந்த நட்புறவை முறித்தது. பிரெஞ்சு மக்களில் பெரும்பான் மையோர் கத்தோலிக்கர்கள். அவர்களுடைய ஆதரவு நெப்போ லியனுக்குத் தேவைப் பட்டது. எனவே நெப்போலியன் திருச் சபையுடன் நட்புறவை மீட்க விழைந்தார். போப் ஏழாம் பயஸுடன் (Pius VII) 1801-ல் Concordat என்னும் ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது. புரட்சியின் பொழுது திருச்சபையின் சொத்துக்கள் அரசினால் பறிமுதல் செய்யப்பட்டதையும், மடால யங்கள் ஒழிக்கப்பட்டதையும் போப் ஒப்புக்கொண்டார். 1794-ல் நிறுத்தி வைக்கப்பட்ட சம்பள பாக்கியை சமய குருமார்களுக்குக் கொடுக்க நெப்போலியனின் அரசு ஒப்புக்கொண்டது. முதல்

கான்சலினால் தேர்ந்தெடுக்கப்படும் பிஷப்புகளை போப் பதவியில் அமர்த்த வேண்டும். கீழ்நிலை சமய அதிகாரிகளை பிஷப்புகளே நியமிக்கலாம். திருச்சபை அதிகாரிகளின் சம்பளங்கள் அரசினால் கொடுக்கப்படும். தேவாலயங்கள் மீண்டும் திறக்கப்பட்டு வழிபாடு தடையின்றி நடக்க வழிவகை செய்யப்பட்டது. இவ்வாறு போப்புடன் செய்துகொள்ளப்பட்ட சமரசம் ஏறத்தாழ நூறு ஆண்டுகள் அமுலிலிருந்தது.

நீதித்துறை, சட்டம்

நீதித்துறையில் நியாயமும் நேர்மையும் மறைந்து, நீதி வழங்கப்படுவதில் பல குறைபாடுகள் இருந்தன. புரட்சிக் காலத்தில் நீதிபதிகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதால் நீதிபதிகள் சுதந்திரமாகவும், பாரபட்சமின்றியும் செயல்பட முடியவில்லை. மேலும் நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஒன்றுக்கொன்று முரணான பல்வேறு சட்டங்கள் நிலவி வந்ததால் நீதி வழங்குவதில் குழப்பங்கள் மலிந்திருந்தன. இவற்றையெல்லாம் சீர்படுத்த நெப்போலியன் ஒரு குழுவை அமைத்து அதன் உதவியுடன் நீதித்துறையைச் செப்பனிட்டு அமைத்தார். நாட்டின் நீதி நிர்வாக முறையில் இருந்த குழப்பங்கள் ஒழிக்கப்பட்டு, நாடு முழுவதும் ஒரே சீரான நீதி நிர்வாக முறை புகுத்தப்பட்டது. சட்ட நிபுணர் குழு ஒன்றின் உதவியோடு நாடு முழுவதிற்கும் ஒரேமாதிரியான சட்டங்களை உருவாக்கும் பணியை மேற்கொண்டார். இதன் விளைவாக 1804ஆம் ஆண்டில் உருவானதுதான் நெப்போலியன் சட்டத் தொகுப்பு (Code Napoleon) என்பதாகும். சிவில், கிரிமினல், வர்த்தகச் சட்டங்கள் யாவும் ஒன்றாகத் தொகுக்கப்பட்டன. சமத்துவம், தனிமனிதர் சுதந்திரம், பொறையுடைமை போன்ற புரட்சிக் கருத்துக்களைப் பேணி வளர்க்கும் நோக்கத்துடன் இச்சட்டத் தொகுப்பு உருவாக்கப் பட்டது. ஃபிரான்சில் மட்டுமல்லாமல், ஐரோப்பாவின் பல்வேறு நாடுகளிலும் இது பிற்காலத்தில் பின்பற்றப் பட்டது என்பதிலிருந்து இதன் புகழ் நன்கு விளங்கும்[1]. இச் சாதனையின் அடிப்படையில்தான்

[1] இச்சட்டத் தொகுப்பைப் பற்றி நெப்போலியனே பின்வருமாறு கூறியுள்ளார். "என்னுடைய பெருமைக்கு உண்மையான காரணம், நான் வென்ற நாற்பது போர்கள் அல்ல. ஏனெனில் வாடர்லூ தோல்வி அந்த எல்லா வெற்றிகளின் நினைவையும் அழித்துவிடும். ஆனால் அழிக்க முடியாத என்றும் நிலைத்திருக்கக் கூடிய ஒன்று என்னுடைய சிவில சட்டத் தொகுப்பு" "My real glory is not the forty battles I won, for waterloo's defeat will destroy the memories of as many victories.........what nothing will destroy, what will live for ever is my civil code." இதைப் பற்றி வரலாற்றாசிரியர் ஒருவர், "More than any other influence, the civil code spread through Europe the fame of the institutions of New France Here was the Pitle and Kernel of the revolutionary philosophy in a shape made practical for the use of men. Here was a usage. Here was liberty combined within order. Not since the Institutes of Justinian has any compendium of Law been so widely copied" என்று கூறுகிறார்.

நெப்போலியன் இரண்டாம் ஜஸ்டினியன் (Second Justinian) என்று அழைக்கப்படுகிறார்.[1]

## கல்வி

நாட்டு மக்களின் எண்ணங்களையும், பண்பையும் சரியான முறையில் உருவாக்குவதற்கு செம்மையான ஒரு கல்வித் திட்டம் தேவை என்பதை உணர்ந்த நெப்போலியன் பல சீரிய கல்விப் பணிகளை மேற்கொண்டார். கல்வித் துறையில் அவர் குறிக்கோள் கல்வியை அரசின் கட்டுப்பாட்டிற்குட்படுத்துவதாகும். பிரிபெக்ட் துணைபிரிபெக்ட் ஆகிய அதிகாரிகளின் கண்காணிப்பில் ஒவ்வொரு கம்யூனிலும் ஆரம்பப் பள்ளிகள் திறக்கப் பட்டன. உயர்நிலைப் பள்ளிகள் (Lycees), இலக்கணப் பள்ளிகள், தொழிற்கூடங்கள், இராணுவப் பள்ளிகள் ஆகியவை அரசாங்கத்தினாலேயே நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் துவக்கப் பட்டன. பல்கலைக் கழகம் ஒன்றும் ஃபிரான்சில் நிறுவப்பட்டது. சமயத் தத்துவம், சட்டம், மருத்துவம், இலக்கியம், விஞ்ஞானம் போன்ற பாடங்கள் இங்கு கற்பிக்கப்பட்டன. நாட்டின் கல்வி முறை இப் பல்கலைக் கழகத்தின் மேற்பார்வையில் இயங்கியது. அரசாங்கப் பள்ளிகள் தவிர ஏராளமான தனியார் பள்ளிகளும் தொடங்கப் பட்டன. ஆனால் பெண்கள் கல்வியில் நெப்போலியன் அக்கரை காட்டவில்லை. தடை ஏதுமின்றி அறிவு வளர்ச்சி ஏற்பட உதவும் வகையில் அவ்வுடைய திட்டங்கள் அமையவில்லை. பண்டைய கிரேக்க நாட்டு ஸ்பார்டா நகர அரசைப் போல (Spartan City State) நாட்டைப் பாதுகாக்கும் போர்வீரர்களை உருவாக்கும் இராணுவ வாடை வீசும் ஒரு கல்வித் திட்டம் இவரால் உருவாக்கப் பட்டது.

## பொதுப் பணிகள்

மக்களின் நலனில் அக்கரை கொண்ட நெப்போலியன் நெடுஞ் சாலைகள், கால்வாய்கள், பாலங்கள் போன்ற போக்குவரவு சாதனங்கள் பலவற்றை அமைத்தார். இருநூற்று முப்பதுக்கும் மேற்பட்ட சாலைகள் இவர் ஆட்சிக் காலத்தில் அமைக்கப்பட்டதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. துறைமுக வசதிகள் விரிவுபடுத்தப்பட்டன. விவசாயத்திற்குப் பயன்படாது என்று கருதப்பட்ட சதுப்பு நிலங்கள் விவசாயத்திற்கு ஏற்றதாக ஆக்கப்பட்டன. அரசுக்குச் சொந்தமான அரண்மனைகள் புதுப்பிக்கப்பட்டு, பாரிஸ் நகரம் பூங்காக்கள், மாளிகைகள், மண்டபங்கள், செயற்கை ஊற்றுகள் போன்றவற்றால் அழகுபடுத்தப் பட்டது. தான் படை

[1] ஜஸ்டினியன் என்பவர் ரோமானிய சட்டத் தொகுப்பை உருவாக்கிய ரோமானியப் பேரரசர்.

யெடுத்துச் சென்ற நாடுகளிலிருந்து சூறையாடிக் கொண்டு வந்த கலைச்செல்வங்களை வைத்துக் காப்பதற்கென்று ஒரு கலைக்கூடம் நிறுவப்பட்டது.

### புதிய விருதுகள்

இச் சீர்திருத்தங்களுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல Legion of Honour என்றும் ஒரு புதிய அமைப்பை ஏற்படுத்தி, நாட்டின் பல்வேறு துறைகளில் சிறப்பாகப் பணி ஆற்றியவர்களுக்கு, பிறப்பு, அந்தஸ்து, சமயம் ஆகிய எந்தவித வேறுபாடுமின்றி, அரசாங்கம் விருதுகளை வழங்கியது. இவ்விருதுகளைப் பெறுவது ஒரு பெருமையாகக் கருதப் பட்டது. குறிப்பிட்ட துறைகளில் ஆற்றப்பட்ட தொண்டுகளைப் பாராட்டும் வகையில் இவ்விருதுகள் அமைந்திருந்தன.

### இவர் ஆட்சியைப் பற்றிய மதிப்பீடு

தன் நிர்வாகச் சீர்திருத்தங்களின் மூலம் நெப்போலியன், புரட்சியினால் விடுவிக்கப்பட்ட அராஜகச் சக்திகளை ஒடுக்கி, நாட்டையும் அரசாங்கத்தையும் வலுப்படுத்தக் கூடிய சக்திகளைக் கட்டிக் காத்தார். நாட்டில் ஸ்திரத் தன்மையையும், ஒழுங்கையும் நிலைநாட்டுவதுதான் உடனடியான பணி என்பதை உணர்ந்த நெப்போலியன் அதைச் செய்து முடிக்க வரம்பு கடந்த அதிகாரம் தேவை என்பதையும் உணர்ந்தார். எனவேதான் மக்களுக்கு சுதந்திரம் என்பது தேவையில்லாத ஒன்று என்று கருதினார். "பிரெஞ்சு மக்களுக்குத் தேவையானது சமத்துவமேயன்றி சுதந்திரம் அல்ல" என்று அவரே ஒரு முறை கூறியுள்ளார்.[1] அதிகாரத்தைத் தன் கையில் குவித்துக் கொண்டதன் மூலமும், தேர்தலுக்குப் பதிலாக நியமனம் மூலமும், கல்வியை அரசின் கட்டுப்பாட்டிற்குள்ளாக்கியதின் மூலமும், பத்திரிகைகளை கடுமையான தணிக்கைக்குள்ளாக்கியதின் மூலமும் வல்லாட்சி ஒன்றை நிறுவி புரட்சியின் உயிர்நாடியாக விளங்கிய 'சுதந்திரத்தை' மக்களுக்கு வழங்க மறுத்து ஃபிரான்சை புரட்சிக்கு முன்பு இருந்த நிலைக்கு அழைத்துச் சென்றார்[2] இந்த அடிப்படையில் நோக்கும் பொழுது "புரட்சியை அழித்து விட்டேன்" (I have destroyed the

[1] "What the French people want is equality, not liberty" (Nepoleon) — Modern Europe to 1870 — C. J. H. Hayes (1963 Edn.) P. 537.

[2] "In essence it was a revival and perfecting of the system of Intendants instituted by cordinal richelien and utilised by Louis XIV. And it was backed up by an efficient police force, a loyal army and a rigid press censorship." Ibid P. 537.

Revolution") என்ற அவருடைய கூற்றில் ஓரளவு உண்மை இருக்கிறது. 1799-ல் அவர் வன்முறை மூலம் டைரக்டரி அரசாங்கத்தைக் கவிழ்த்துவிட்டு, பதவியைக் கைப்பற்றிய நிகழ்ச்சி புரட்சி செத்து விட்டது என்பதை அறிவிப்பதாக இருந்தது. அதே சமயத்தில் புரட்சியின் மற்ற இரண்டு அடிப்படைக் கருத்துக்களான 'சமத்துவம்', 'சகோதரத்துவம்' (Equality and Fraternity) ஆகியவற்றை நிலைநாட்ட அவர் முயற்சிகள் மேற்கொள்ளத் தவரவில்லை. இவ்விரு கோட்பாடுகள் அவருடைய நிர்வாகச் சீரமைப் புப்பணியின் உயிர்நாடியாக விளங்கின என்பதை நாம் இங்கு மறந்துவிடக் கூடாது. எனவே "நானே புரட்சி" (I am the Revolution) என்ற அவருடைய கூற்றிலும் உண்மை இருக்கிறது. உண்மையில் அவர் புரிந்த சாதனை என்னவெனில் புரட்சிக் கருத்துக்களையும், ஃபிரான்சின் மரபு வழிவந்த சம்பிரதாயக் கருத்துக்களையும் இணைத்து ஒரு புதிய அமைப்பை நாட்டிற்கு உருவாக்கிக் கொடுத்ததேயாகும். நிலமானிய முறையை ஒழித்ததின் மூலமும் சிறப்புரிமைகளை ஒழித்து, தொண்டு புரிவதற்கும், நிர்வாகத்தில் பங்கு பெறுவதற்கும் திறமைதான் தேவை என்ற கருத்தை ஏற்றுக்கொண்டதன் மூலமும் இவர் புரட்சிக் கருத்துக்களைப் ஃபிரான்சில் வலுப்பெறச் செய்தார்.

# 19. பதினேழு, பதினெட்டாம் நூற்றுண்டு கலாசாரம்

பதினாறும் நூற்றுண்டிலும், பதினேழாம் நூற்றுண்டின் முற் பகுதியிலும் மேற்கு ஐரோப்பாவின் அறிவாற்றல் துறைச் சாதனைகள் சமயச் சார்புடையதாக அமைந்திருந்தன. ஆனுல் பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் அறிவாற்றல் துறை ஈடுபாடுகள் (Intellectual Interests) சமயத்திலிருந்து விஞ்ஞானத் திற்கு மாற்றம் பெற்றன. பதினெட்டாம் நூற்றுண்டு முழுவதும் இப்போக்கு மேலோங்கியிருப்பதைக் காண்கிருேம். விஞ்ஞான தத்துவத் துறைகளில் ஒரு புது போக்கு காணப்பட்டாலும், இலக்கிய கலைத்துறைகளில் கிரேக்க ரோமானிய மரபுகளின் செல் வாக்குத் தொடர்ந்து காணப்பட்டது, எனவே இந் நூற்றுண்டு களின் இலக்கிய கலைப் படைப்புகள் ஒரு வகையில் மறுமலர்ச்சிப் படைப்புகளின் தொடர்ச்சியே என்று கூறுவது பொருத்தமுடைய தாகும். இலக்கிய கலைத்துறைகளில் காணப்பட்ட இந்த போக்கு தான் பொதுவாக பரோக் பாணி (Baroque style) என்றழைக்கப் படுகிறது. குறிப்பாக, இந்தச் சொல் அந்த நூற்றுண்டுகளின் கட்டிடக் கலைப்பாணியைக் குறிக்கும் ஒரு சொல்லானுலும், இலக்கிய கலை உலகில் அன்று காணப்பட்ட பொதுவான போக்கை சுட்டிக்காட்ட இச் சொல் பயன்படுத்தப்படுகின்றது. 'பரோக்' கட்டிடக் கலை (Baroque architecture) தோன்றியது போல, இந்தக் காலம் 'பரோக்' இலக்கியமும் தோன்றிய (Baroque literature) காலமாகும். உலகத்தின் பல்வேறு முரண் பட்ட சக்திகளுக்கிடையே நடக்கும் போராட்டங்களில் ஏற்படும் சோர்வு, அலுப்பு, பதட்ட உணர்ச்சிகளையும், இப்போராட்டங் களையும் அவற்றின் விளைவுகளையும் கட்டுப்படுத்தி ஒரு அமைதி நிலையை உருவாக்கும் மனித சமுதாயத்தின் முயற்சியையும் இந்த

பரோக் பாணி சுட்டிக் காட்டுகிறது.[1] இப்பாணியில் சொற்களும், ஒலிகளும், வண்ணங்களும் உருவங்களும் மிக விரிவான, நுட்பமான முறையில் பயன் படுத்தப்பட்டன. வெவ்வேறு அரசாங்கங்கள், படைகள், அரசியல் சமய கோஷ்டிகளுக்கிடையே நடந்த போராட்டங்கள் மட்டும் பதினேழாம் நூற்றாண்டு நெருக்கடிகளை உருவாக்கவில்லை என்ற உண்மையையும், எப்பொழுதும் நிலைத்திருப்பதும் எங்கும் வியாபித்திருப்பதுமான பரம்பொருளுடன் தன் தொடர்பை இழந்து வருகின்றான் என்ற மனிதனின் அச்ச உணர்வையும், மனித உள்ளத்திலேயே நடைபெறும் ஒரு அகப் போராட்டத்தையும் பிரதிபலிக்கும் வகையில் பரோக் பாணி அமைந்திருந்தது. பரோக் எழுத்தாளர்களும், பரோக் ஓவியர்களும், சிற்பிகளும் தங்கள் படைப்புகளில் இவ்வுணர்ச்சிகளைத் திறம்படக் காட்டியிருந்தனர். இவ்வாறாக கிரேக்க, ரோமானியப் பாணியில் ஈடுபாடு கொண்டிருந்த போதிலும், பதினேழாம் நூற்றாண்டுக் கலைஞர்கள், குறிப்பாக இங்கிலாந்திலும் ஃபிரான்சிலும், கட்டடக் கலை, இலக்கியத் துறைகளில் தங்களுடைய தனிச் சிறப்புப் பண்புகளைக் காட்டும் வகையில் பல படைப்புகளை உருவாக்கும் அறிவாற்றல் பெற்றிருந்தனர்.[2] இந்த பரோக் பாணியில் உருவான சில கலை, இலக்கியப் படைப்புகளைப் பற்றி இங்குச் சிறிது ஆராயலாம்.

**கட்டட சிற்பக் கலைகள்**

பதினேழாம் நூற்றாண்டில் பரோக் பாணியின் பிறப்பிடமாக விளங்கியது இத்தாலி. திருச்சபைக் கலைப் பாணியாக இத்தாலியில் தொடங்கிய இது, ஐரோப்பிய நாடுகள் முழுவதும் விரைவில் பரவியது. குறிப்பாக அந் நூற்றாண்டின் கட்டடக் கலையில் பின்பற்றப்பட்ட ஒரு புதிய பாணிதான் பரோக் என்றழைக்கப் பட்டது. பண்டைய கிரேக்க ரோமானிய கட்டடக் கலை மரபு

[1] 'The baroque style conveys feelings of strain and tension, of conflicts between opposing forces and of great human effort to contain all these strains and conflicts in some kind of dynamic equilibrium.' *European Civilization since the middle ages*—Edward R. Tannenbaum. (Second Edition) p. 163.

[2] 'During the whole age men prided themselves on their appreciation of the classical art of Augustan Rome. Yet they had so much of self confidence in their own intellectual powers, and had specially in England and France, evolved such a characteristic form of society, that while paying sincere lip service to the classical ideals, they, evolved examples f town architecture, of eassay and of movel which were entirely original and of great beauty"—The New Cambridge Modern History—Vol. VII (1713-1763), p. 66.

களைத் தழுவி உருவாகிய இக் கலை அணி அலங்காரத்திற்கு (Art of decoration) முக்கியத்துவம் அளித்தது. இக் கலைப் பாணிப் படைப்புகளில் வியப்பூட்டக்கூடிய ஓர் உயிர்த் துடிப்பு இருப்பதை நாம் காணலாம். பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் பரோக் பாணியில் அமைந்த முதல் மாதா கோயில் ரோம் நகரில் ஜெஸுட்டுகளால் எழுப்பப்பட்டது. அடுத்த சில ஆண்டுகளில் இப் பாணியில் மேலும் சில கட்டடங்கள் ரோம் நகரில் கட்டப் பட்டன. தொடர்ந்து பல போப்புகளின் ஆதரவில் வாழ்ந்த கியான் லோரென்சோ பெர்னினி (Gian Lorenzo Bernini 1598-1680) என்பவர்தான் இத்தாலியில் இப்பாணியைப் போற்றி வளர்த்தவர். ரோம் நகரில் புனித பீட்டர் ஆலயத்திற்கு எதிரில் கட்டப்பட்ட சதுக்கமும் (Square), தூண்கள் வரிசையும் (Colonnade), கருவறைக்கு மேலுள்ள மேற்கட்டுமானமும் இவரால் உருவாக்கப்பட்டவையாகும். ஜெஸுட் கட்டடங் களுக்கு இப்பாணி பின்பற்றப்பட்டதால் இதை ஜெஸுட் பாணி என்றும் சிலர் அழைப்பர். தேவாலயங்கள் கட்டுவதில் மட்டு மின்றி அரண்மனைகள், கலையரங்குகள் போன்ற இதர கட்ட டங்கள் கட்டுவதற்கும் இப்பாணி பின்பற்றப்பட்டது. இப் பாணியில் கட்டப்பட்ட கோயில்களில் விசாலமான நடுக்கூடமும் (naves) இருமருங்கிலும் தொழுகை இடங்களும் (chapels), குறுகிய பிரகாரங்களும் (aisles) அமைக்கப்பட்டிருந்தன. அலங்கார வேலைப்பாடுகளமைந்த குவி மாடங்கள் (Ornamented domes) இப் பாணியின் சிறப்பு அம்சமாகும். பரோக் பாணி அரண்மனைகளில் பிரதான நுழைவாயில், வாயிற் கதவுகள், படிக்கட்டு வழிகள் ஆகியவைகளுக்குச் சிறப்பு இடம் அளிக்கப்பட்டன. அரண் மனையின் உட்பகுதிகளைச் சரிகை வேலைப்பாடு செய்த துணி வகைகள், திரைச்சீலைகள் கொண்டு அழகு செய்யும் முறை கையாளப்பட்டது. மேரி டி மெடிசி (Marie de' Medici) அரசியா ருக்குக் கட்டப்பட்ட அரண்மனையும், கார்டினல் மாசரினின் அரண்மனையும், நூல் நிலையமும், வெர்ஸாய் நகர அரண்மனையும் ஃபிரான்சில் இப்பாணியில் கட்டப்பட்ட சில கட்டடங்களாகும். ஆனால் ஃபிரான்சில் பரோக் பாணி இத்தாலிய பாணியிலிருந்து சிறிது வேறுபட்டு வளர்ச்சி அடைந்தது. இத்தாலிய கலைப் படைப்புகளைப் போலல்லாமல், பிரெஞ்சுப் படைப்புகள் கட்டுப் பாட்டுடன் கூடிய ஒரு பொலிவுடன் விளங்குவதைக் காண்கிறோம். (Restrained Elegance), ஸ்பெயின், ஜெர்மனி, நெதர்லாந்து, போலந்து போன்ற நாடுகளிலும் பரோக் பாணி கையாளப் பட்டது. நெதர்லந்திலும், வடக்கு ஜெர்மனியிலும் பிரெஞ்சு பரோக் மரபுகள் பின்பற்றப்பட்டன. பாட்ஸ்டாம் நகரத்தில் கட்டப்பட்ட மாமன்னர் ஃபிரெடரிக்கின் அரண்மனை இப்

பாணியில் அமைக்கப்பட்டதாகும். ரஷ்யாவில்கூட இப்பாணி புகுந்து, அவர்களுடைய பைசாண்டிய கட்டடக் கலை மரபுகள் மாறுதல்களுக்குள்ளாயின. உதாரணமாக பீட்டர்ஸ்பர்க் நகரம் பரோக் பாணி அணி அலங்காரங்களிஞல் எழில்படுத்தப்பட்டது. இங்கிலாந்தில் கிரேக்க ரோமானிய கட்டடக் கலை மரபு பரோக் பாணியின் தழுவலாக அமைந்தது. 1619-ல் ஒயிட் ஹால் (White Hall) அரண்மனையில் முதலாம் ஜேம்ஸ் மன்னருக்காக இனிகோ ஜோன்ஸ் (Inigo Jones) என்பவரால் கட்டப்பட்ட பெரு விருந்து மண்டபம் இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இதே பாணியில் ஆங்கிலிக கிறிஸ்துவக் கோயில்கள் பல ஸர் கிரிஸ்டாபர் ரென் (Sir Christopher Wren) என்பவரால் கட்டப்பட்டன. பதினெட்டாம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் பல ஐரோப்பிய கட்டடக் கலைஞர்கள் பரோக் கலை மரபில், பிரெஞ்சுக்காரர்களால் புகுத்தப்பட்ட மாற்றங்களை வெறுத்தனர். பிரெஞ்சு பரோக் பாணி தூய கிரேக்க ரோமானியக் கலை மரபுகளிலிருந்து விலகிச் சென்றுகொண்டே இருந்தது. ஐரோப்பியக் கலைஞர்கள் பலர் இதை விரும்பவில்லை. எனவே அவர்கள் கிரேக்க ரோமானியக் கலை மரபுகளை அப்படியே பின்பற்ற விரும்பினர்.

## ஓவியம்

இத்துறையிலும் மேலே கூறப்பட்டுள்ள அதே போக்கு—அதாவது கிரேக்க ரோமானியக் கலை மரபுகளை வியந்து பாராட்டு வதும் அதே சமயத்தில் காலத்திற்கு ஒத்த, இயற்கையான படைப்பினை உருவாக்கும் போக்கு—காணப்படுகிறது. பரோக் பாணியின் தனிப் பண்புகளான கட்டு மீறிய தன்மையும், உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் தன்மையும் (Barogue Violence and Emotion) ஓவியத்தில் காணப்படுகின்றன. எல்கிரேகோ (El Greco 1548-1614), பீட்டர் பால் ரூபென் (Peter Paul Reuben 1577-1640) ஆகிய இருவரும் பரோக் ஓவியப் பாணியின் தலை சிறந்த பிரதிநிதிகளாவர். பெல்ஜிய நெதர்லந்தைச் சேர்ந்த ரூபெனின் ஓவியக் கூடத்திலிருந்து 2200க்கும் மேற்பட்ட ஓவியங்கள் வெளிவந்தன. இதன் மூலம் அவர் ஏராளமான பொருளீட்டினர். ஓவியத்தில் பரோக் பாணியைப் பற்றிய மற்ற சில ஓவியர்கள் வெலாஸ்குவே (Velasquez), வான்டைக் (Vandyke), முரில்லோ (Murillo) போன்ருேர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் யாவரும் பதினேழாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்கள். இதே போல பதினெட்டாம் நூற்றுண்டில் உருவப்படங்களைத் தீட்டும் கலை இங்கிலாந்து ஃபிரான்ஸ் நாடுகளில் பெரிதும் வளர்ச்சியடைந்தது. இக்கலையில் தேர்ந்தவர்கள் ரெயினுல்ட்ஸ்

(Reynolds), கெயின்ஸ்பரோ (Gains Borough), ரோம்னி (Romney), ரேபர்ன் (Raeburn), போன்ருேர் ஆவர். பரோக் பாணி கட்டடக் கலையின் சிறப்பியல்புகள் யாவும் அநேகமாக ஓவியக் கலையிலும் காணப்பட்டன. இவர்களைத் தவிர கிரேக்க ரோமானியக் கலை மரபுகளின் செல்வாக்கிற்குட்படாமல் ஓவியக் கலையை வளர்த்த சில ஓவியர்களும் பதினேழு பதினெட்டாம் நூற்றூண்டுகளில் வாழ்ந்தார்கள். அவர்கள் உள்ளது உள்ள படியே சித்திரிக்கும் ஆற்றல் பெற்றவர்கள். புகைப்படம் பிரித்துக் காட்டுவதுபோல அப்படியே தத்ரூபமாகப் பாமர மக்களின் வாழ்க்கையை இவர்கள் ஓவியத்தில் சித்திரித்தார்கள். இந்த ஓவியர்களில் ஃபிரான்ஸ் ஹால்ஸ் (Frans Halls), டேவிட் டெனியர்ஸ் (David Teniers), ரெம்பிராண்ட் (Rembrandt) ஆகியோர் தலைசிறந்தவர் ஆவர். ரெம்பிராண்ட் என்னும் ஓவியர் மக்களின் பொழுதுபோக்குகள், இயற்கைக் காட்சிகள், பழைய ஏற்பாட்டிலிருந்து (Old Testament) சில நிகழ்ச்சிகள் ஆகியவற்றை ஓவியங்களில் சித்திரித்துக் காட்டியுள்ளார். ஸ்பெயின் மன்னர் மூன்ரும் சார்லஸின் அவை ஓவியராக இருந்த ஃபிரான்சிஸ்கோ கோயா (Francisco Goya) என்பவரும் குறிப்பிடத்தக்க பரோக் ஓவியர். அதே போல இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்றூண்டில் வாழ்ந்த வில்லியம் ஹோகார்த் (William Hogarth) என்னும் ஓவியர் சமூக, அரசியல் அமைப்புகளில் மலிந்து கிடந்த ஊழல் களைத் திறனும் அந்நூற்றூண்டின் போக்கைத் தன் ஓவியங்களில் சித்திரித்துக் காட்டுகிருர். இயற்கை எழிலைச் சித்திரித்துக் காட்டு வதில் வல்லுநராக விளங்கியவர் பதினெட்டாம் நூற்றூண்டில் இங்கிலாந்தில் வாழ்ந்த ஓவியர் ரிச்சர்ட் வில்சன் (Richard Wilson) என்பவர். அவர் இங்கிலாந்தின் இயற்கை எழில்—அதன் ஆறுகள், மரம், செடி கொடிகள், வயல்கள்—வண்ண ஓவியங் களில் வரைந்து காட்டுகிருர்.

இசை

பதினேழாம் நூற்றூண்டு பரோக் பாணி இசைத் துறையிலும் செல்வாக்குப் பெற்றிருந்தது. இத்துறையில் பரோக் பாணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டு இசை நாடகக் கலையாகும் (Opera). இசையையும் நாடகத்தையும் இணைத்து மனித உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளை அப்படியே சித்திரித்துக் காட்டும் நோக்கத்துடன் உருவாக்கப்பட்டதுதான் இசை நாடகக் கலை. பரோக் பாணியில் இதை முதல் முதல் உருவாக்கியவர் கிளாடியோ மாண்டிவெர்டி (Clandio Monte Verde 1567-1643). என்பவர் பதினேழாம் நூற்றூண்டில் ஃபிரான்சிலும் இத்தாலியிலும் இசை நாடகக் கலை மக்கள் மனத்தை மிகவும் கவர்ந்தது. இத்தாலியிலும், ஜெர்மனி

யிலும் பரோக் பாணி இசைக் கலைக்கு ஆக்கமளிக்கப்பட்டது. தற்கால ஐரோப்பிய இசையின் (Solo, Oratorio, Cantata, Sonata, Concerto போன்ற) பல்வேறு இசை வடிவங்களைப் பதினேழாம் நூற்றுண்டு இத்தாலிய இசை வல்லுநர்கள் உருவாக்கினுர்கள். ஆர்கேஞ்சலோ கோரெல்லி (Archangolo Corelli), அலெக்சாந்தரோ ஸ்கார்லட்டி (Aleksandaro Scarlatti), அன்டோனியோ விவால்டி (Antonio Vivaldi) ஆகியோர் இத்தாலியின் புகழ்பெற்ற இசைவல்லுநர்கள். ஜெர்மனியில் பரோக் இசைப் பாணி கிறிஸ்துவ ஆலய இசையில் புகுத்தப்பட்டது. ஜோஹன் செபாஸ்டியன் பாஷ் (Johan Sabastian Basch), ஜார்ஜ் ஃபிரெடரிக் ஹாண்டல் (George Frederick Handel) ஆகிய இருவரும் ஜெர்மானிய பரோக் இசைப் பாணியை உச்ச நிலைக்குக் கொணர்ந்தனர். இசை நாடகக் கலை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியவர் மோசார்ட் (Mozart) என்னும் இசை வல்லுநர்.

## இலக்கியம்

பதினேழு பதினெட்டாம் நூற்றுண்டு இலக்கியத்தில் கிரேக்க ரோமானிய இலக்கிய மரபு மேலோங்கியிருந்தது. ஆனுல் இந்த மரபு 'பரோக்' உருவம் பெற்றது. கருத்தாழமற்ற, ஆனுல் உருவகங்களுடன் ஆரவாரமிக்க நடையில் எழுதப்பட்ட இலக்கியப் படைப்புகள் இத்தாலி, ஜெர்மனி, ஸ்பெயின் நாடுகளில் உருவாக்கப்பட்டன. ஆனுல் ஃபிரான்சிலும் இங்கிலாந்திலும்தான் பரோக் இலக்கியம் பெரும் அளவில் வளர்ந்தது. ஃபிரான்சின் மன்னர் பதினுன்காம் லூயியின் காலத்தில் பரோக் இலக்கிய வளர்ச்சி உச்ச கட்டத்தை அடைந்தது. கார்னில் (Corneille), மாலியர் (Moliere), ரெஸைன் (Racine), மாடம் டி செவின் (Madame de Sevigne), லா ஃபாண்டெயின் (La Fontaine) போன்ற இலக்கிய மேதைகள் இக்காலத்தில் வாழ்ந்தனர். இங்கிலாந்தில் இந்தப் பாணி இலக்கியத்தை வளர்த்தவர் ஜான் மில்டன் (John Milton) ஆவார். முடிமீட்சி கால இலக்கியம் (Restoration Literature) ஜான் மில்டனின் செல்வாக்கிற்குட்பட்டது. ஜான் டிரைடன் (John Dryden) அலெக்ஸாண்டர் போப் (Alexander Pope) ஆகியோர் இங்கிலாந்தின் தலை சிறந்த கவிஞர்கள். பதினுறு, பதினேழாம் நூற்றுண்டுகளில் இங்கிலாந்தில் கவிதைகள் வளர்ந்தது போல, பதினெட்டாம் நூற்றுண்டில் உரைநடை வளர்ச்சி பெற்றது. தத்துவ மேதை ஜான் லாக் (John Locke), வரலாற்றறிஞர்கள் எட்வர்ட் கிப்பன் (Edward Gibbon), டேவிட் ஹ்யூம் (David Hume) சொற் களஞ்சிய ஆசிரியர் சாமுவேல் ஜான்சன் (Samuel Johnson), பொருளாதார

நிபுணர் ஆடம் ஸ்மித் (Adam Smith) ஆகியோர் இங்கிலாந்தின் தலைசிறந்த உரைநடை ஆசிரியர்கள் ஆவர். உரைநடை இலக்கியத்தில் நாவல்கள் தோன்றிய காலம் இந்தப் பதினெட்டாம் நூற்றாண்டுதான்.

விஞ்ஞானம்

நவீன கால விஞ்ஞான அறிவு வளர்ச்சி பதினேழாம் நூற்றாண்டில் தொடங்கியது என்று கூறலாம். இதற்கு வித்திட்டவர் பதினைந்து பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த கோபர்னிகஸ் (Copernicus) என்பவர். வில்லியம் ஹார்வி (William Harvey) மருத்துவத் துறையிலும் ராபர்ட் பாயில் (Robert Boyle) வேதியல் துறையிலும் பல சோதனைகள் நடத்திப் புதிய உண்மைகளைக் கண்டு பிடித்தார். இத்தாலி நாட்டைச் சேர்ந்த கலீலியோ (Galileo) பௌதிக இயல், வான சாஸ்திரத் துறைகளில் பல புரட்சிகரமான கருத்துகளை வெளியிட்டார். தொலைநோக்கி ஒன்றை உருவாக்கி அதன் மூலம் கோளங்களின் இயக்கத்தைக் கூர்ந்து ஆராய்ந்து சூரியனைச் சுற்றித்தான் பூமி உள்பட மற்ற எல்லாக் கோளங்களும் சுழல்கின்றன என்ற கோபர்னிகஸின் கருத்தை உறுதிப்படுத்தினார். கோளங்கள் இயக்கம் பற்றிய நியதிகளை ஆராய்ந்து அவற்றை முதல் முதல் தெளிவாக விளக்கியவர் ஜெர்மன் நாட்டு விஞ்ஞானி கெப்ளர் (Kepler) என்பவர் ஆவார். பூமி முதலிய எல்லாக் கோளங்களும் சூரியனைச் சுற்றி நீள்வட்டப் பாதையில் (Elliptical Orbit) சுழல்கின்றன என்ற உண்மையை இவர் கண்டுபிடித்தார். டெகார்த்தே (Descartes) என்ற பிரெஞ்சு அறிஞர் பௌதிகம், கணிதம் ஆகிய இரு துறைகளிலும் பல புதிய கருத்துகளை வெளியிட்டார். பல புதிய ஆராய்ச்சி உத்திகள் அவரால் கண்டுபிடிக்கப்பட்டன. இங்கிலாந்தின் தலைசிறந்த விஞ்ஞான அறிஞரான ஸர் ஐஸக் நியூடன் (Sir Isaac Newton) பௌதிக இயலில் பல ஆராய்ச்சிகள் புரிந்து அதன் வளர்ச்சிக்கு வழி வகுத்தார். 'பிரின்சிபியா' ('Principia 'or' The Mathematical Principles of Natural Philosoply') என்ற அவரது நூலில் உலகில் எல்லா வஸ்துக்களின் இயக்கமும் புவி ஈர்ப்புச் சக்தியினால் (Gravitation) ஒழுங்கு படுத்தப்படுகின்றன என்ற உண்மையை வெளியிட்டார்.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், இலக்கிய கலைத்துறைகளில் தோன்றிய ஒரு புதிய போக்கைப்பற்றி இங்குக் குறிப்பிடுவது பொருத்தமுடையதாகும். இந்தப் போக்கு ஐரோப்பிய வரலாற்றில் 'புத்துணர்வு இயக்கம்' (Romanticism) என்று அழைக்கப் படுகிறது. பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகள் பகுத்தறிவு கால

மாகக் கருதப்பட்டு மனிதன் பகுத்தறிவு இயந்திரமாக இயங்கிக் கொண்டிருந்தான். பகுத்தறிவுடன் மனிதனின் உள்ளத்தில் இன்பம், துன்பம், கோபம் போன்ற பல்வேறு உணர்ச்சிகளும் புதைந்து கிடக்கின்றன. ஆனால் பதினாறு பதினேழாம் நூற்றாண்டு களில் பகுத்தறிவுக்கு அளவு கடந்த முக்கியத்துவம் கொடுக்கப் பட்டு மனிதனுடைய உணர்வுகளும், கற்பனையும் பின்னுக்குத் தள்ளப்பட்டன. இந்த ஒரு போக்கை எதிர்த்தும், உணர்ச்சி களுக்கும் கற்பனைகளுக்கும் உரிய இடத்தைக் கொடுத்தும் காணு மிடமெல்லாம் நீக்கமற நிறைந்திருக்கும் இயற்கைக்கு முக்கியத் துவம் அளித்தும் தோன்றிய இயக்கம்தான் 'Romanticism' என்னும் 'புத்துணர்வு' இயக்கம் ஆகும். 'Classicism' என்னும் மறுமலர்ச்சிக் காலப் போக்குகளை அப்படியே ஏற்றுக்கொள்ளா விட்டாலும், இவ்வியக்கம் மறுமலர்ச்சிக் காலப் பண்புகள் சில வற்றைத் தன்னுட் கொண்டிருந்தது. இப்புத்துணர்வின் செல் வாக்கிற்குட்பட்ட ரூஸோ (Rousseau) போன்ற அறிஞர்கள் இயற் கைக்கு முக்கியத்துவம் அளித்தனர். பகுத்தறிவு தந்த துன்ப மயமான செயற்கை வாழ்க்கையை விடுத்து மனிதன் இயற்கையோ டியைந்த இன்பமான வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்ற கருத்தையும், அடிப்படையில் மனிதன் நற்பண்புகளும் நேர்மையும் உடையவன் என்ற கருத்தையும் வலியுறுத்தினர்.

புத்துணர்வு இலக்கியத்தையும், கலையையும் இங்குச் சிறிது விரிவாக ஆராயலாம். மறுமலர்ச்சி இலக்கியம் பண்டைய கிரேக்க ரோமானிய இலக்கிய மரபின் அடிப்படையில் உருவாக்கப் பட்டது. மறுமலர்ச்சி இலக்கியத்திலும் கலையிலும் வாழ்க்கை நிகழ்ச்சிகள் நடந்தது நடந்தபடியே கற்பனை, ஒப்பனை ஏதுமின்றி அப்படியே சித்திரிக்கப்பட்டன. புத்துணர்வு கால இலக்கிய கலைப்படைப்புகள் உணர்ச்சிக்கும், கற்பனைக்கும் முக்கியத்து வத்தை அளித்தன. அதே சமயத்தில் மறுமலர்ச்சிக்கால மரபுகளை முற்றும் புறக்கணிக்காமல் அவற்றுடன் இணைந்து உருவாகியவை புத்துணர்வு காலப் படைப்புகள். இவை இயற்கையின் எழிலையும், மனிதனையும், மனிதனின் வாழ்க்கையையும் கருப்பொருள் களாகக் கொண்டிருந்தன. மனிதனின் ஆசாபாசங்கள், விருப்பு வெறுப்புகள், இன்ப துன்பங்கள் யாவற்றையும் பிரதிபலிக்கும் வகையில் இவ்விலக்கியப் படைப்புகள் அமைந்திருந்தன. புத் துணர்வு இலக்கியம் பகுத்தறிவு வழிபாட்டிற்குப் பதிலாக இயற்கை வழிபாட்டைத் தோற்றுவித்தது. இதன் பிறப்பிடம் இங்கிலாந்து ஆகும். இயற்கை அள்ளி வீசும் தெவிட்டாத அழகை—வண்ண வண்ணப் பூக்கள், செடி கொடிகள், பொங்கும் கடல், பனிமலை, தெள்ளிய நீரோடை, இசைபாடும் குயில்

தோகை விரித்தாடும் மயில்—கவிஞர்கள் தாமும் அனுபவித்து கவிதைகள் மூலம் தாங்கள் பெற்ற இன்பத்தை வையகமெல்லாம் பெருக வைத்தார்கள். ஸ்காட்லந்துக் கவிஞர் ராபர்ட் பர்ன்ஸ் (Robert Burns-1759-1796) வர்ட்ஸ் வொர்த் (Words Worth-1770-1850), கோல்ரிட்ஜ் (Coleridge-1772-1874), பைரன் (Byron-1788-1824), ஷெல்லி (Shelly-1795-1821), கீட்ஸ் (Keats-1792-1822) போன்ற ஆங்கிலக் கவிஞர்களும் புறத்தோற்றத்தில் எளிமையும், ஆனால், உள்ளே தத்துவம் பொதிந்து கிடக்கும் கவிதைகளை இயற்றினர். இவர்களுடைய கவிதைகள் பாமர மக்களுக்காக இயற்றப்பட்டவை. எனவே அவர்கள் புரிந்துகொள்ளும் வகையில் எளிய நடையிலும், அவர்கள் சுவைத்து அனுபவிக்கக் கூடிய வாழ்க்கையின் அன்றாட நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டவையாகவும் அவர்களுடைய கவிதைகள் அமைந் திருந்தன.[1] மேற்கூறியவர்களைத் தவிர வால்டர் ஸ்காட் (Walter Scott), ஜேன் ஆஸ்டின் (Jane Austen), சார்லஸ் டிக்கன்ஸ் (Charles Dickens) போன்ற நாவலாசிரியர்களும், ஹாஸ்லிட் (Hazlitt), சார்லஸ் லாம்ப் (Charles Lamb) போன்ற கட்டுரை ஆசிரியர் களும் இங்கிலாந்தின் தலைசிறந்த புத்துணர்வு இலக்கியக் கர்த் தாக்கள் ஆவர். அலெக்ஸாந்தர் டூமாஸ் (Alexander Dumas), விக்டர் ஹ்யூகோ (Victor Hugo), பால்ஸாக் (Balzac) ஆகியோர் ஃபிரான்சின் புத்துணர்வு எழுத்தாளர்கள் ஆவர். விக்டர் ஹ்யூகோவின் தலைசிறந்த இலக்கியப் படைப்பு 'ஏழைபடும் பாடு' (Les Miserables) என்னும் நூலாகும். அதில் சமுதாயத்தில் ஏழை மக்கள் படும் இன்னல்களை அவர் சிறந்த முறையில் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். டூமாஸின் 'Court of Monte cristo' இவ்வகையைச் சேர்ந்த மற்றொரு நூலாகும். இலக்கியத் துறையின் இப்புதுப் போக்கை ஜெர்மனியில் ஷில்லர் (Schiller) கீதே (Goethe) போன்றவர்களின் நூல்களில் காணலாம். இத்தாலியைச் சேர்ந்த லியோபார்டி (Leopardi), மான்சோனி (Manzoni), ரஷ்யாவின் புஷ்கின் (Pushkin), அமெரிக்க எழுத் தாளர் எட்கர் அலன் போ (Edgar Allan Poe) ஆகியோரும் புத்துணர்வு எழுத்தாளர் பட்டியலில் இடம் பெறுபவர்கள்.

இலக்கியத்தைப் போலவே கலையிலும் உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. மக்களுடைய இயற்கையான

[1] வர்ட்ஸ் வொர்த், கோல்ரிட்ஜ் இருவரும் இணைந்து எழுதிய 'Lyrical Ballads' என்னும் கவிதை நூலும், ஷெல்லியின் 'Ode to a Nightingale', 'Ode to a Grecian urn' போன்ற கவிதைகளும் புத்துணர்வு இலக்கியத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.

எளிமையான அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகள் கலைப்படைப்புகளின் கருப்பொருளாய் விளங்கின. இயற்கையின் எழிலைச் சித்திரிக்கும் வண்ண ஓவியங்கள் இக்கலையில் முக்கிய இடத்தைப் பெற்றன. ஜான் கான்ஸ்டேபிள் (John Constable), டர்னர் (J.M.W. Turner) ஆகியோர் இங்கிலாந்தின் தலைசிறந்த ஓவியர்கள். கெரிகால்ட் (Gericault), டெலாகிராயிக்ஸ் (Delacroix) போன்ற ஃபிரான்ஸ் நாட்டு ஓவியர்கள் பிரஞ்சு இலக்கியங்களிலிருந்தும், பிரெஞ்சுப் புரட்சி போன்ற வரலாற்று நிகழ்ச்சிகளிலிருந்தும் காட்சிகளை ஓவியமாகப் புனைந்தனர். லண்டனிலுள்ள புனிதர் பாலின் தேவாலயம், பாராளுமன்ற, நீதிமன்றக் கட்டடங்கள் ஆகியவை நவீன கோதிக் பாணியில் (Gothic) எழுந்த கட்டடங்களாகும். பெர்லினிலுள்ள கிதே, ஷில்லர், பிஸ்மார்க் ஆகியோரின் நினைவுச் சின்னங்களில் காணப்படும் சிற்பங்களும், பிரெஞ்சு சிற்பி ரோடின் உருவாக்கிய சிற்பங்களும் புத்துணர்வு சிற்பக் கலைக்கு எடுத்துக் காட்டுகளாகும். இசைக் கலையில் எளிமை, இனிமை, உணர்ச்சி ஆகியவைகள் இடம் பெற்றன. நாட்டுப்புறப் பாடல்களுக்குப் புத்துயிர் அளிக்கப்பட்டது. இசைப் படைப்புகள் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி உருவம் பெற்றன. இசை மேதை பீத்தோவன் (Beethoven) பியானோ இசையில் கைதேர்ந்தவர். அவரது ஒன்பது வாத்தியக் குழு இசைக் கொத்துகள் (Symphonies) உலகப் புகழ் பெற்றவை.

புத்துணர்வுத் தத்துவம் (Romanticism in Philosophy) அரசாங்கத்தின் அடக்கு முறையையும், அளவுக்கு மீறிய அதிகாரத்தையும் கண்டித்துத் தனி மனிதன் சுதந்திரக் கோட்பாட்டையும், தேசிய ஒருமைப்பாட்டு உணர்வையும் வலியுறுத்தியது. புத்துணர்வு தத்துவத்தின் பிறப்பிடமாக விளங்கியது ஜெர்மனி. காண்ட் (Kant), ஹெகல் (Hegel) ஆகியோர் ஜெர்மனியின் தலைசிறந்த தத்துவ அறிஞர்கள். ஹெகலினுடைய தத்துவக் கோட்பாடுகள் மார்க்ஸின் கருத்துகளைப் பெரிதும் பாதித்தன.

இவ்வாறு புத்துணர்வு இயக்கம் அறிவையும், உணர்வையும் இணைத்து மனிதனின் வாழ்க்கை முழுமை பெறவும், பயனுடையதாக அமையவும் உதவி செய்தது.

# மேற்கோள் நூற்பட்டியல்

# (BIBLIOGRAPHY)

1. **Edwards William,** 'Notes on European History'. Vols I, II, & III (1926 Edition).

2. **H. A. L. Fisher,** 'A History of Europe' (1942).

3. **A. J. Grant,** 'Europe — The Story of the Last Five Centuries' (1953).

4. **C. J. H. Hayes,** 'Modern Europe to 1870' (1968).

5. **C. J. H. Hayes & Cole, C. W.,** 'History of Europe since 1500' (1956).

6. **Ogg David,** 'Europe in the Seventeenth Century' (1925).

7. **G. W. Southgate,** 'A Text Book of Modern European History, 1453-1661' (1963).

8. **G. W. Southgate,** 'A Text Book of Modern European History, 1643-1848' (1960).

9. **Ferdinand Schevill,** 'A History of Europe from the Reformation to the present day' (1951).

10. **Cambridge Modern History,** Vols. I to IX.

11. **European Civilization Since the Middle Ages,** (Second Edition)—Edward R. Tanneu baum.

12. இரா. ஆலாலசுந்தரம், ஐரோப்பிய வரலாறு.

# கலைச்சொற்கள்

## A

Absolute Monarchy — வரம்பு கடந்த முடியாட்சி
Act of Appeals — முறையீட்டுச் சட்டம்
Act of Supermacy — மேலாதிக்கச் சட்டம்
Act of Uniformity — ஒரு-வழிபாட்டுச் சட்டம்
Academy — ஆராய்ச்சிக் கழகம்
Age of Reason — பகுத்தறிவுக் காலம்
Aisles — பிரகாரங்கள்
Ancien Regime — பழைய அமைப்பு
Annates — முதலாண்டு வருமானம்
Armada, Spanish — ஸ்பானியக் கப்பற்படை
Austrian Succession, War of — ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர்
Autocracy — தனி வல்லாட்சி
Armistice — தற்காலிகப் போர் நிறுத்த ஒப்பந்தம்
Architecture — கட்டடக்கலை

## B

Balance of Power — வல்லரசு சமநிலை
Babylonian Captivity — போப்புகளின் பாபிலோனியச் சிறைவாசம்
Baptism — பெயரிடுதல்
Banqueting Hall — பெருவிருந்து மண்டபம்
Benefit of the Clergy — சமய குருமார்களின் சிறப்புரிமைகள்
Book of Common Prayer — பொது வழிபாட்டு நூல்
Bourgeois — நடுத்தர வகுப்பினர்
Bureaucracy — அதிகார வர்க்கம்

## C

Capitalism — முதலாளித்துவம்
Capitatian — தலைவரி
Chapels — தொழுகை இடங்கள்

Civil Constitution of the Clergy — புதிய திருச்சபைச் சட்டம்
Clergy — சமய குருமார்கள்
Code Napolean — நெப்போலியன் சட்டத் தொகுப்பு
Committee of Public Safety — பொதுப் பாதுகாப்புக் கமிட்டி
Committee of General Security — பொதுமக்கள் நலக்குழு
Conservative — பழமைவாதி
Centralisation — அதிகாரக் குவிப்பு
Con-substantiation — புனிதப் பொருள் மாறுக் கொள்கை
Contituent Assembly — அரசியலமைப்பு மன்றம்
Continental System — கண்டத் திட்டம்
Corvee — கட்டாயப் பணி
Code Louis — லூயியின் சட்டத் தொகுப்பு
Counter Reformation — கத்தோலிக்க மதச் சீர்திருத்த இயக்கம்
Critical Outlook — திறனாய்வு நோக்கு
Crusades — சிலுவைப் போர்கள்
Craft Guild — தொழிற் குழு
Conscription — கட்டாய இராணுவ சேவை
Cujus Regio Ejus Religio — அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி
Christendom — கிறிஸ்துவ உலகம்
Circumnavigation — கப்பலில் உலகைச் சுற்றுதல்
Classical Learning — பண்டைய கிரேக்க இலத்தீனக் கல்வி

## D

Dark Age — இருண்ட காலம்
Declaration of Pilnitz — பில்னிட்ஸ் அறிக்கை
Declaration of the Rights of Man — மனித உரிமைகள் அறிக்கை
Deism — இயற்கைச் சமயம்
Despotism — வல்லாட்சி
Defender of the Faith — சமயக் காவலர்
Divorce — மணவிலக்கு
Diplomacy — அரச தந்திரம்

| | | |
|---|---|---|
| Diplomatic Revolution | — | அரச தந்திரப் புரட்சி |
| Declaration of Independency | — | விடுதலை அறிக்கை |
| Dependency | — | சார்பு நாடு |
| Duke | — | கோமகன் |
| Dual Leadership of the Pope and Emperor | — | போப்—பேரரசரின் இணைந்த தலைமை |
| Democracy | — | ஜனநாயகம், மக்களாட்சி |
| Docrine of Separation of Power | — | அதிகாரப் பிரிவினைப் கோட்பாடு |
| Dones | — | குவிமாடங்கள் |
| Domination | — | ஆதிக்கம் |
| Domestic Policy | — | உள்நாட்டுக் கொள்கை |
| Deductive Method | — | உய்த்துணரும் முறை |

E

| | | |
|---|---|---|
| Edict of Worms | — | ஓர்ம்ஸ் ஆணை |
| Edict of Nantes | — | நான்டிஸ் ஆணை |
| Edict of Toleration | — | சமயப்பொறை ஆணை |
| Edict of Restitution | — | திருப்பித்தரு ஆணை |
| Elector | — | தேர்வாளர் |
| Electorate | — | தேர்வாளர் அரசு |
| Emigres | — | நாட்டைவிட்டு ஓடிச்சென்ற பிரபுக்கள் |
| Enlightenment | — | அறிவு வளர்ச்சி இயக்கம் |
| Enlightened Despot | — | மக்கள் நலம் பேணும் வல்லரசர் |
| Encyclopaedia | — | அறிவுக் களஞ்சியம் |
| Epitaph | — | கல்லறை வாசகம் |
| European Coalition | — | ஐரோப்பியக் கூட்டணி |
| Ex-Communication | — | மதவிலக்கு |

F

| | | |
|---|---|---|
| Feudalism | — | நிலமானிய முறை, படைமானிய முறை |
| Feudal dues | — | நிலமானியக் கட்டணங்கள் |
| Free Trade | — | தடையிலா வாணிபம் |

G

| | | |
|---|---|---|
| Gabelle | — | உப்பு வரி |

Geo-centric — பிரபஞ்சத்தின் மையம் பூமி என்னும் கருத்து
Great Schism — பெரும் பிளவு
Geneology — குடிவழி
Grand Alliance — பேரணி

H

Heresy — சமயத் துரோகம்
Heresic — சமயத் துரோகி
Higher Clergy — மேல்நிலை சமய குருமார்கள்
Holy Roman Empire — புனித ரோமப் பேரரசு
Holy League — புனிதக் கூட்டு
Humanism — மனிதாபிமான இயக்கம்
Humanists — மனிதாபிமானவாதிகள்

I

Individual Liberty — தனிமனிதன் சுதந்திரம்
Inductive Method — தொகுப்பு வழிமுறை
Indulgence — பாவமன்னிப்புச் சீட்டு
Isolation — தனிப்படுத்துதல்

J

Jesuits — இயேசு சங்கத்தார்

L

Laws of Morality — அறநெறிக் கோட்பாடுகள்
Laissez faire — தலையிடாமை
Liberty, Equality, Fraternity — சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்
Limited Monarchy — வரம்புக்குட்பட்ட முடியரசு
Local Government — தல ஆட்சி முறை

M

Man of Action — செயல்வீரர்
Mariner's Compass — மாலுமிகள் திசைகாட்டும் கருவி
Merchants Guild — வணிகக் குழு, வணிகர் சங்கம்
Mercenaries — கூலிப் படைகள்
Massacre of St. Bartholomew's Day — பார்த்தலோமியோ நாட்குறி படுகொலை

Monastery — மடாலயம்
Monopoly — ஏகபோக உரிமை
Middle class — நடுத்தர வகுப்பினர்
Mediaeval Europe — இடைக்கால ஐரோப்பா
Moderates — மிதவாதிகள்
Modern Europe — தற்கால ஐரோப்பா, நவீனகால ஐரோப்பா

N

Nation State — தேசிய அரசு
National Monarchy — தேசிய முடியரசு
Nationalism — தேசியம்
National Assembly — தேசிய மன்றம்
Nave — நடுக்கூடம்
New Learning — புது அறிவு
New Testament — புதிய ஏற்பாடு
New Model Army — புதுமாதிரிப் படை

O

Old Testament — பழைய ஏற்பாடு
Oligarchic Republic — பிரபுத்துவ ஜனநாயக ஆட்சி முறை
Opera — இசை, நாடகம்
Outlaw — சமூகத்திலிருந்து விலக்கப் பட்டவர்
Overseas Trading Corporation — அயல்நாட்டு வர்த்தகக் கழகம்

P

Painting — ஓவியக்கலை
Partition — பிரிவினை, பங்கீடு
Partition Treaties — பங்கீட்டு ஒப்பந்தங்கள்
Papal Bull — போப்பின் ஆணை
Patriarch — ரஷியத் திருச்சபையின் தலைமைக் குரு
Persecution — புறச் சமயங்களை ஒடுக்குதல்
Penetration — ஊடுருவல்
Philosopher — முற்போக்குச் சிந்தனையாளர் (ஃபிரான்ஸ்)

Philology — மொழி நூல்
Peninsular War — தீபகற்பப் போர்
Predestination, doctrine of — முன்விதிப்புக் கொள்கை
Privileges — சிறப்புரிமைகள்
Protection — காப்புக் கொள்கை
Protector — காப்பாளர்
Pragmatic Sanction — பேரரசரின் தனிக் கட்டளை

**R**

Radicals — தீவிரவாதிகள்
Reign of Terror — படுகள ஆட்சி
Reign of Virtue — நற்பண்பு ஆட்சி
Religion Toleration — சமயப் பொறை
Renaissance — மறுமலர்ச்சி
Representative Assemblies — பிரதிநிதித்வ சபைகள்
Representive Principle — பிரதிநிதித்துவ அரசியல் கொள்கை
Reformation — சமயச் சீர்திருத்தம்
Restoration — முடிமீட்சி
Revolutionary Tribunal — புரட்சி நீதி மன்றம்
Royal Succession Act — அரசு வாரிசுரிமைச் சட்டம்
Republic — குடியரசு
Responsible Government — பொறுப்பாட்சி
Romanticism — புத்துணர்வு இயக்கம்
Rule of Law — சட்டத்தின் ஆட்சி

**S**

Salvation — வீட்டுப்பேறு
Saints — பரிசுத்தவான்கள், அருட்தொண்டர்கள்
Sacrament — புனிதச் சடங்கு
Schoolmen — (இடைக்கால) சமய அறிஞர்
Scholastics — அறிஞர் குழாம்
Secular — உலகியல் சார்பான
Scepticism — ஐயுறவு வாதம்
September Massacres — செப்டம்பர் படுகொலை
Seven Sacraments — ஏழு புனிதச் சடங்குகள்
Separation of Power — அதிகாரப் பிரிவினை
Serf — நில அடிமை
Social Contract — சமூக ஒப்பந்தம்

| | | |
|---|---|---|
| Spices | — | நறுமணப் பொருள்கள் |
| Spice Islands | — | நறுமணத் தீவுகள் |
| Simony | — | திருச்சபைப் பதவி விற்பனை |
| Sinking Fund | — | கடன் கழிவு நிதி |
| Society of Jesus | — | இயேசு சபை |
| Sovereignty | — | இறைமை |
| Spanish Fury | — | ஸ்பானியச் சீற்றம் |
| Spanish War of Succession | — | ஸ்பானிய வாரிசுரிமைப் போர் |
| Standing Army | — | நிலைப்படை |
| Streltsi | — | ரஷ்ய மெய்க்காப்பாளர் படை |
| Star Chamber | — | விண்மீன் நீதிமன்றம், நட்சத்திர நீதிமன்றம் |
| States General | — | ஃபிரெஞ்சுப் பாராளுமன்றம் |
| Statute of Six Articles | — | ஆறு கட்டளைச் சட்டம் |
| Succession | — | வாரிசுரிமை |
| Sculpture | — | சிற்பக்கலை |

T

| | | |
|---|---|---|
| Taille | — | நிலவரி (ஃபிரான்ஸ்) |
| Theme | — | கருப்பொருள் |
| Telescope | — | தொலைநோக்கி |
| Theology | — | சமயச் சித்தாந்தம் |
| Toleration | — | பொறையுடைமை (சமயம்) |
| Tran-substantiation | — | புனிதப் பொருள் மாறும் கொள்கை |

V

| | | |
|---|---|---|
| Vernaculars | — | பிரதேசமொழிகள், பிராந்திய மொழிகள் |

W

| | | |
|---|---|---|
| Worship of Reason | — | பகுத்தறிவு வழிபாடு |
| Worship of the Supreme Being | — | ஒப்புயர்வற்ற சக்தி வழிபாடு |